

# தமிழ்நாடு சட்டப் பேரவை

## மாநில சுயாட்சி பற்றிய அரசினர் தனித் தீர்மானத்தின்மீதான விவாதம்

(1974 ஏப்ரல் 16 முதல் 20 வரை)

சட்டப் பேரவைத் துறை
சென்னை-600009.

மாநில சுயாட்சி பற்றிய

அரசினர் தனித்தீர்மானத்தின் மீதான விவாதம்

# DISCUSSION ON THE GOVERNMENT RESOLUTION ON STATE AUTONOMY

# தமிழ்நாடு சட்டப் பேரவை

---

செவ்வாய்க்கிழமை, 1974 ஏப்ரல் 16.

---

சென்னை செயின்ட் ஜார்ஜ் கோட்டையிலுள்ள சட்டப்பேரவை மண்டபத்தில் காலை 9 மணி அளவில் மாண்புமிகு பேரவைத்தலைவர் புலவர் கா. கோவிந்தன் அவர்கள் தலைமையில் பேரவை கூடியது.

பக்கங்கள் 1 முதல் 22 வரை }
பக்கங்கள் 113 முதல் 116 வரை } வேறு அலுவல்கள்

128 - 35 A

### தமிழ்நாடு சட்டப்பேரவை

### செவ்வாய்க்கிழமை, 1974 ஏப்ரல் 16

### அரசினர் தனித் தீர்மானம்.

**மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னர் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ் நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப் பட வேண்டும் என்பது குறித்து.**

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : தலைவரவர்களே, " மாநில சுயாட்சி பற்றியும், இராஜமன்னர் குழுவின் பரிந்துரைகள் பற்றியும் தமிழ்நாடு அரசின் கருத்துரைகளையும், இராஜமன்னர் குழுவின் அறிக்கையையும் இப்பேரவை ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு,

பல்வேறு மொழி, நாகரீகம், பண்பாடு ஆகியவைகளைக் கொண்ட இந்திய நாட்டின் ஒருமைப்பாட்டைப் பேணிக் காக்கவும், பொருளாதார வளர்ச்சியை மேம்படுத்தவும், மக்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட மாநில ஆட்சிகள் தடையின்றிச் செயல் படவும்,

மாநில சுயாட்சி பற்றியும், இராஜமன்னர் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துக்களை மத்திய அரசு ஏற்று—மத்தியில் கூட்டாட்சி, மாநிலங்களில் சுயாட்சி கொண்ட உண்மையான கூட்டாட்சி முறையை உருவாக்கும் அடிப்படையில், இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் உடனடியாகத் திருத்தப்பட வேண்டும் என்று இப்பேரவை முடிவு செய்கிறது." என்ற தீர்மானத்தை @ முன்மொழிகிறேன்.

---

@ 117-125-ம் பக்கங்களில் இத்தீர்மானத்தின் ஆங்கில மொழி பெயர்ப்பும் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் உரையின் ஆங்கில மொழிபெயர்ப்பும் இணைப்பு I and I அ ஆக அச்சிடப் பட்டுள்ளன.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** திருத்தங்கள் கொடுப்பவர்கள் இன்றைக்குள் கொடுத்துவிடுங்கள். இன்றைக்குள் கொடுத்து விட்டால் அந்தத் திருத்தங்களை பின்பு முன்மொழிந்து கொள்ளலாம்.

**திரு. கே. டி. கே. தங்கமணி :** முதலமைச்சர் அவர்கள் தீர்மானத்தை இப்பொழுது முன்மொழிந்திருக்கிறார்கள்.

He has now moved the Resolution. Before he is allowed to speak on it, certain amendments which have been given notice of may be moved. Then, both the Resolution and the amendments will be before the House.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** அந்தத் திருத்தங்கள் என் கைக்கு வரவில்லை. அந்தத் திருத்தங்களைப் பார்த்துவிட்டு அனுமதி தந்த பிறகுதான் சர்குலேட் செய்ய வேண்டும். கொடுப்பவர்கள் இன்றைக்குக் கொடுத்துவிட்டால் நாளைக்கு முன்மொழிந்து கொள்ளலாம். பேசுவதை வேண்டாமென்று சொல்லவில்லை.

**நடைமுறைக் கேள்விகள்.**

**(அ) முதலமைச்சர் முன்மொழிந்துள்ள தனித்தீர்மானத்திற்கு உறுப்பினர்கள் உடனடியாகத் திருத்தங்கள் முன்மொழிவது குறித்து.**

**திரு. க. உரொ. எட்மண்ட் :** ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர், சார். நம்முடைய சட்டமன்ற மரபுகூட, மானியக் கோரிக்கைகள் வரும்போது கூட அமைச்சர்கள் மானியக் கோரிக்கைகளை அவை முன் வைத்தவுடன் வெட்டுத் தீர்மானங்கள் கொடுத்த உறுப்பினர்கள் அவற்றை முன்மொழிகிறார்கள். அதற்குப் பிறகு அமைச்சர்கள் தங்களுடைய கருத்துக்களைச் சொல்லுகிறார்கள்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** மானியக் கோரிக்கைகள் மீதான விவாதம் வேறு. ஆளுநர் அவர்கள் உரைக்கு மறுநாள் திருத்தங்கள் கொடுக்கிறோம். அதே போன்று இதற்கும் திருத்தங்களை நாளைக்கு முன்மொழியலாம்.

THIRU K. T. K. TANGAMANI : Sir, we want your guidance, If the Hon. Chief Minister had moved a Resolution that the Report of the Rajamannar Committee be taken into consideration, that would have been an innocuous Resolution. Now, we find that the Resolution contains recommendations to the Centre. Also it was given to us only last night and so we have no time to move amendments. As the resolution requests the Government of India to take certain steps, Members would like to move part-amendments or substitute amendments. Only some Members have given notice of amendments. . .

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** நீங்கள் கொடுத்திருக்கும் திருத்தங்களை எல்லாம் இன்னும் சரியாகப் பார்க்கவில்லை. ரோனியோ ஆகவில்லை. முறையாக இருக்கிறதா என்று பார்த்து விட்டு சர்குலேட் பண்ண வேண்டும்.

THIRU K. T. K. TANGAMANI : Sir, in the Rules it is only stated—

'The Speaker may refuse to put an amendment which is, in his opinion, frivolous.

So, am I to take it that you are directing that these amendments will be taken up tomorrow?

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** அடியோடு இது வேண்டாம் என்று சொல்லப்படுகிற அளவுக்கு ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறார்கள். கொடுத்திருக்கக்கூடிய திருத்தங்கள் எல்லாம் ஏற்றுக் கொள்ளக் கூடிய அளவில் இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். அதைப் பார்த்த பிறகு திருத்தத்தை முன்மொழியலாம்.

**மாண்புமிகு டாக்டர் இரா. நெடுஞ்செழியன் :** திருத்தங்கள் கொடுக்கிறவர்கள் நாளைக் காலை வரை கொடுக்கலாம். அதுவரை திருத்தங்களை ஏற்றுக்கொள்ளலாம். மாண்புமிகு உறுப்பினர் திரு. கே. டி. கே. அவர்கள் கூறுவது போல் இப்போதும் கொடுக்கலாம்.

DR. H. V. HANDE : Sir, on a point of order. It is not like the ordinary Resolutions. Suddenly we have been supplied with a copy of the printed speech of the Hon. Chief Minister. It is

like the Governor's Address. Normally one day is allowed for moving amendments to the Governor's Address. Then the Motion of Thanks is also circulated. . .

நேற்றுதான் ரெசல்யூஷன் வந்திருக்கிறது. வந்தவுடனே காலையில் திருத்தங்கள் கொடுத்தாகிவிட்டது.

We have already given them.

சைக்ளோஸ்டைல் பண்ணுவதற்கு முன்பு சரியாக இருக்கிறதா என்று தாங்கள் இப்போதே பார்த்து விட்டால் நாங்கள் மூவ் பண்ணுகிறோம்.

மாண்புமிகு பேரவைத் தலைவர் : எனக்கு அதிலே ஒன்றும் ஆட்சேபனை இல்லை.

THIRU K. M. SUBRAMANIAM : Sir, other Members also would like to give notice of amendments.

மாண்புமிகு பேரவைத் தலைவர் : கொடுக்காதவர்கள் நாளைக் காலையிலும் கொடுக்கலாம்.

### 6. அரசினர் தனித் தீர்மானம்—தொடர்ச்சி.

மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ் நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப் படவேண்டும் என்பது குறித்து—தொடர்ச்சி.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : மாண்புமிகு பேரவைத் தலைவர் அவர்களே, இந்திய நாட்டு வரலாற்றில் குறிப்பிடத்தக்க ஒரு இடத்தைப் பெறப்போகும் சிறப்புமிக்க தீர்மானத்தை நமது தமிழ்நாடு சட்டப் பேரவையில் முன்மொழிகிற பேறு பெற் றமைக்குப் பெருமகிழ்ச்சி அடைகிறேன். சிந்தனைச் செல்வம் மிகுதி யாகப் பெற்றுள்ள இந்த அவையின் மாண்புமிகு உறுப்பினர்கள், இந்தத் தீர்மானத்தின் நல்ல நோக்கத்தை ஆய்ந்து தெளிந்து தங்கள் பேராதரவை நல்கிட வேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன். இந்தியாவின் வலிவும் பொலிவும் கெடாமலிருக்கவும், ஒருமைப்பாட்டுக்கு ஒரு துளி தீங்கும் நேராமல் இருக்கவும் தன் பங்கு எப்போதும் உண்டு என்ற சூளுரை மேற்கொண்டு

அதனைச் செயல் வடிவிலும் பலமுறை நிரூபித்துக் காட்டியுள்ளது, இன்றைய ஆளுங்கட்சியான தி. மு. கழகம் என்பதை அனைவரும் அறிவர்.

1962-ம் ஆண்டில் பிரிவினைக் கோரிக்கையைக் கைவிட்டதும், சீன ஆக்ரமிப்பின்போது அந்த எதிரிகளை நோக்கிப் போர் முழக்கம் செய்த பாடி விடுகளில் ஒன்றாக இருந்ததும், பாகிஸ்தான் போக்கு முறியடிக்கப்பட இந்தியாவில் உள்ள எல்லா மாநிலங்களையும் முந்திக்கொண்டு ஆறு கோடி ரூபாய்க்கு மேல் தமிழகத்தின் சார்பில் போர் நிதி வழங்கியதோடு, போர் முனையில் நிற்கும் உணர்வுடன் வெற்றிக்கான வீரப் பணிகளைப் புரிந்ததும்—இன்றைய ஆளுங்கட்சியான தி. மு. கழகத்தின் நாட்டுப் பற்றுக்குச் சான்றுகளாகும்.

தேவையற்ற ஐயப்பாட்டுப் பின்னணியினூடே இந்தத் தீர்மானத்தின் நோக்கம் பற்றி சிந்தித்திட வேண்டாம் என்பதற்கே இவைகளைக் குறிப்பிட்டேன்.

இந்திய நாட்டில் கூட்டாட்சி எவ்வாறு அமைய வேண்டும் என்பதை,

அகில இந்திய காங்கிரஸ் கட்சி, 1945-ஆம் ஆண்டு இந்திய மக்கள் முன் வைத்த தேர்தல் பிரகடனத்தில் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறது.

> "இந்தியக் கூட்டாட்சி என்பது, அதன் பல்வேறு பகுதிகளின்—விரும்பி இணையும் ஒன்றியமாக இருக்கவேண்டும். பகுதிகளுக்கு (அதாவது மாநிலங்களுக்கு) அதிகபட்ச சுதந்திரம் அளிப்பதற்காக எல்லோருக்கும் பொதுவான, முக்கிய அதிகாரங்கள் கொண்ட குறைந்த பட்ச அதிகாரத்தைக் கூட்டாட்சி (மத்திய) அரசுக்கும். தேவைப்படும் பகுதிகள் (அதாவது மாநிலங்கள்) விரும்பினால் ஏற்கும் பொதுவான அதிகாரங்கள் கொண்ட பொதுப் பட்டியலும் இருக்கலாம்."

அகில இந்திய காங்கிரஸ் கட்சியின் இந்தத் தேர்தல் பிரகடனத்தைத் தொடர்ந்து, 1947-ஆம் ஆண்டில் அரசியல் நிர்ணய சபையில் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் முன்மொழிந்த

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 16

தீர்மானத்திலும் மத்திய அரசுக்கு என்று ஒதுக்கப்படும் அதிகாரங்களைத் தவிர மற்ற எல்லா அதிகாரங்களும் சுயாட்சி உள்ள மாநிலங்களுக்கே உண்டு என்பது வலியுறுத்தப்பட்டது. அத் தீர்மானத்தின் பகுதியாவது :—

"இப்பொழுது பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள நிலப் பகுதிகளும் இந்திய சமஸ்தானங்களில் உள்ள நிலப் பகுதிகளும், வேறு வெளியில் உள்ள பகுதிகளும் இணைந்து சுதந்திர இந்தியாவாக விளங்கும். அரசியல் நிர்ணய சபை தீர்மானிக்கிறபடியான எல்லைகளைக் கொண்டோ அல்லது இப்பொழுதுள்ள எல்லைகளுடனோ அவை அரசியலமைப்புச் சட்டத்தின்கீழ் தனித்த சுயாட்சியுள்ள பகுதிகளாகச் செயல்படும். எஞ்சிய அதிகாரங்களும் (Residuary Powers) அப்பகுதிகளுக்கே அளிக்கப்படும்."

இந்தத் தீர்மானங்களும், தேர்தல் பிரகடனங்களும் இந்தியத் திருநாட்டின் விடுதலைக்குப் பிறகு மறந்துவிட்ட அல்லது மறைக்கப்பட்டுவிட்ட உண்மைகளாக ஆகிவிட்டன.

அந்த உண்மையை தி. மு. கழகம் எதிர்க்கட்சியாக இருந்த போது மக்கள் மன்றத்திலும், சட்டமன்றத்திலும் பலமுறை வெளிக்கொணர்ந்து, அதற்கேற்ற வகையில் அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டுமென்று வாதிட்டிருக்கிறது. மாநிலங்கள் தன்னுரிமை பெற்றுத் திகழவேண்டும் என்ற கொள்கையை தமிழ்நாட்டில் தமிழரசுக் கழகமும் இடைவிடாது எடுத்துக்கூறி வந்திருக்கிறது.

1967-ஆம் ஆண்டு தி. மு. கழகத் தேர்தல் அறிக்கை பின் வருமாறு அமைந்தது :—

"ஒருமைப்பாடு என்பதை வலியுறுத்தி நடைமுறைக்குக் கொண்டு வரும்போது, அது, ஒரு பகுதியினர் பிறபகுதியினர் மீது ஆதிக்கம் செலுத்துவதாக ஆகிவிடாமல், பாதுகாத்திடும் பொறுப்பை தி. மு. கழகம் மேற்கொள்ள உறுதிகொண்டுள்ளது.

மாநில உரிமைகள் நசுக்கப்படாமல் பாதுகாத்திடவும், பொருளாதார வளம் ஒருசீராக எல்லா மாநிலங்களுக்கும் அமைவதற்கான திட்டம் மேற்கொள்ளப்படவும் தி.மு. கழகம் பொறுப்புடன் பணியாற்ற உறுதிகொண்டிருக்கிறது.

1974 ஏபரல் 16] [டாக்டர் மு. கருணாநிதி]

மாநில உரிமைகளைப் பாதுகாத்திடும் முறையிலும், குறிப்பிடப் படாத எஞ்சிய அதிகாரங்கள் (Residuary powers) மத்திய சர்க்காரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள முறையை மாற்றி அவை மாநிலங்களுக்குத் தரப்பட வேண்டும் என்பதற்காகவும் கழகம் பாடுபடுவதுடன, அந்த நோக்கத்துடன் இந்திய அரசியல் சட்டத்தை திருத்த வேண்டிய அவசியத்தை வலியுறுத்த விரும்புகிறது."

மாநிலங்கள் மத்திய அரசை அண்டி நிற்கும் நிலை களையப்பட வேண்டுமென்ற கருத்தைச் சுட்டிக்காட்டி, அறிஞர் அண்ணா அவர்கள் முதலமைச்சர் பொறுப்பேற்றிருந்தபோது 1967-68-ஆம் ஆண்டு நிதி நிலை அறிக்கையில் கீழ்க்கண்டவாறு சுட்டிக் காட்டினார் :—

" நமது கூட்டாட்சி அமைப்பில் (Federal set up) எத்தகைய வரம்புகளுக்கு உட்பட்டு மாநில அரசுகள் இயங்க வேண்டியுள்ளன என்பதை நாட்டத்திற்கொள்ளுதல் வேண்டும். அரசியலமைப்பில் விதித்துறைகள் மத்திய அரசுக்கு ஊட்டங் கொடுக்கும் முறையிலே அமைந்திருப்பது ஒருபுறமிருக்க, கடந்த பதினைந்து ஆண்டுகளாக திட்டமிட்ட பொருளாதார அமைப்பின் கீழ் எழுந்த நெறிமுறைகளும், வளர்ந்த மரபுகளும் மாநிலங்களை மெலியச் செய்து மத்திய அரசினை மேலும் வலுவூட்டும் போக்கில் அமைந்துள்ளன. அயல்நாட்டு வாணிபம், நாணயச் செலாவணிக் கொள்கை, கடன் கொள்கை, முதலியன குறித்து, அரசியலமைப்பில் வகை செய்துள்ள அதிகாரங்களின்கீழ், நமது பொருளாதாரம் முழுவதையுமே நெறிப்படுத்தும் பொறுப்பு மத்திய அரசிற்கே உரியதாக்கப்பட்டுள்ளது. மேலும், அரசியலமைப்பில் குறிப்பிட்டுக் கூறப்படாத எஞ்சிய வரி விதிப்பு அதிகாரங்கள் (Residuary Powers) உட்பட, நீட்சித்திறன் பெற்ற வருமான இனங்களின்மீது மத்திய அரசிற்குள்ள உரிமை வாய்ப்பின் மூலமும், தேசிய வருமான பெருக்கத்தின் பெருமளவு பங்கினை ஈர்த்துச் செல்லும் நிலையிலே அது உள்ளது. இந்நிலைமை காரணமாக மாநிலங்கள் தங்கள் திட்டங்களையும் கொள்கைகளையும் நிறைவேற்றுவதற்கு மத்திய அரசின் விருப்பக் (Discretionary) கடன்களையும், உதவி மானியங்களையும் எதிர்

நோக்கி நிற்கும் நிலையில் உள்ளன. பொதுக் கடன்கள்மூலம் மாநில அரசுகள் நிதி திரட்டி, தங்கள் நிதி வளத்தைப் பெருக்கிக் கொள்வதிலும், அரசியலமைப்பின் 293-வது பிரிவில் தனக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்கள் மூலம் நேரடியாகவும், ரிசர்வ் பாங்கியின் மூலம் மறைமுகமாகவும், அக்கடன்கள் எந்த நிபந்தனைகளுக்கும் வரையறைகட்கும் உட்பட்டுத் திரட்டப்படலாம் என கட்டுப்படுத்தும் உரிமையுடன் மத்திய அரசு விளங்குகிறது. ஐந்தாண்டுகட்கு ஒரு முறை மாநிலங்களின் நிதித் தேவைகளைப் பற்றி நிதிக்குழுக்களின் வாயிலாக நடுவு நிலையில் நின்று ஆராய வேண்டுமென்கிற ஏற்பாடும், அக்குழுக்களின் ஆய்வு வரம்பு குறித்து விதிக்கப்படும் பல்வேறு வரையறைகள் காரணமாக, மாநிலங்கள் மத்திய அரசினை அண்டி நிற்கும் நிலை பெருமளவில் குறைந்தபாடில்லை."

(முற்பகல் 10.30)

அந்த நிதி நிலை அறிக்கையின் இறுதிப் பகுதியில் அண்ணா அவர்கள்,

"மத்திய-மாநில அரசுகளுக்கிடையே உள்ள தொடர்புகள் பற்றிய மறு சிந்தனை தேவை என்பதனை இப்பேரவை அறியும். இன்றுள்ள உறவு, உள்ளத்துக்கு நிறை தருவதாக அமைய வேண்டும் என்ற நோக்கத்தை அனைவரும் வரவேற்பார்கள் என்பதில் ஐயமில்லை. இதுவரை வரிப்பங்கீடு, அதிகார வரம்பு, திட்ட நிதி ஒதுக்கீடு ஆகியவற்றிலே கிடைத்துள்ள அனுபவம், கசப்பு நிரம்பியதாக இருப்பதை எவரும் மறுத்திட இயலாது ; இந்தக் கசப்பு நீங்கிடவும், கனிவு கிடைத்திடவுமான முறையில் தொடர்புகள் அமைந்திட வழி காண்பது உடனடிப் பிரச்சினையாகிவிட்டிருக்கிறது. இது குறித்து அச்சமோ, ஐயப்பாடோ அல்ல, தெளிவான சிந்தனையே தேவை. ஒருவருக்கொருவர் உள்ள நல்லெண்ணத்தினாலும், ஒருவரையொருவர் நன்கறிவதாலும் தோழமைத் தொடர்பு மகிழ்ச்சியும் பயனும் மிக்கதாக ஆக்கப்பட வேண்டும் என்பதே எனது அவாவாகும்" என்று கூறியுள்ளதும் குறிப்பிடத்தக்கதாகும்.

[1974 ஏப்ரல் 16 [டாக்டர் மு. கருணாநிதி]

அதன் பின்னர், 1969-ஆம் ஆண்டு "ஹோம் ரூல்" ஆங்கில ஏட்டில் அண்ணா அவர்கள் எழுதிய கடைசி கட்டுரையில்—

"அன்புள்ள தம்பி,

நான் பதவியைத் தேடி பைத்தியம் பிடித்து அலைபவனு மல்ல; காகிதத்தில் கூட்டாட்சியாகவும், நடைமுறையில் மத்தியில் அதிகாரக் குவிப்புக் கொண்டதாகவும் இருக் கிற ஒரு அரசியல் சட்டத்தின்கீழ் முதலமைச்சராக இருப்பதற்கு மகிழ்ச்சி கொண்டிருப்பவனுமல்ல. இதற் காக மத்திய அரசிற்கு எரிச்சல் ஏற்படுத்துவதும், டில்லி யோடு சண்டை போடுவதும்தான் எனது நோக்கம் என்று—எனது நண்பர் ஈ.எம்.எஸ்-ஐப்போல் நான் பிரகடனம் செய்ய விரும்பவில்லை. அதனால் யாருக்கும் நன்மையில்லை. உண்மைதான்; சரியான பருவத்தில் ஒரு உறுதி ஏற்பட வேண்டுமென்பதுதான் முக்கியம். ஆனால் கூட்டாட்சி முறையைப்பற்றி மக்களுக்கு விளக்கம் கொடுப்பதை அதற்கு முன்னால் செய்ய வேண்டும். அந்தப் பணியில், அன்புத்தம்பி, உன் னுடைய உற்சாகமான ஒத்துழைப்பும், மனப்பூர்வமான பங்கேற்பும் எனக்குக் கிடைக்குமென்பதில் எனக்கு நிச்சயம் நம்பிக்கை உண்டு."

"பதவியில் இருப்பதன்மூலம், இன்றைய அரசியல் அமைப்புச் சட்டம் கொல்லைப்புறமாகக் கொண்டுவரப் பட்ட ஒரு இரட்டை ஆட்சிதான் என்பதைச் சிந்திக்கக் கூடிய பொதுமக்களின் கவனத்திற்கு தி. மு. க. கொண்டு வர முடியுமானால் அது உண்மையிலேயே அரசியல் உலகிற்குச் செய்யப்படும் குறிப்பிடத்தக்க உதவி யாகும்"

என்று எழுதிய கருத்துக்களின் அடிப்படையிலும் 1967-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 8-ஆம் நாள் புதுடெல்லியில் செய்தி யாளர்கள் கூட்டத்தில், "மாநிலங்களுக்குப் போதுமான அதி காரங்களை வழங்கிவிட்டு; நாட்டின் ஒருமைப்பாட்டையும், ஒற்றுமையையும் பாதுகாப்பதற்கு எவ்வளவு அதிகாரங்கள் தேவையோ அவைகளை மட்டும் மத்திய அரசு வைத்துக்கொண்டால்

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 எப்ரல் 16

போதும்; இப்படி அதிகாரங்களைப் பங்கீடு செய்வதற்கும், அரசியல் சட்டம் செயல்படுவதற்கும், ஒரு உயர் அதிகார ஆணைக்குழு ஒன்றினை அமைக்கவேண்டும்" என்று அவர் தெரிவித்த கருத்துக்கு ஏற்பவும், 1969-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 19-ஆம் நாள் சட்டப்பேரவையில் நான் அறிவித்ததையொட்டி• நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு ஊறு நேராவண்ணம் மாநில சுயாட்சி அடிப்படையில் மத்திய மாநில உறவுகளை ஆராயுமாறு டாக்டர் இராஜமன்னார் தலைமையில் டாக்டர் ஏ. லட்சுமணசாமி முதலியார், திரு. பி. சந்திரா ரெட்டி ஆகியோரைக் கொண்ட குழுவை 1969 செப்டம்பர் 22-ம் நாள் இந்த அரசு அமைத்தது.

அதன் பிறகு 1971-ஆம் ஆண்டு தி. மு. கழகத்தின் தேர்தல் அறிக்கையில்,

"இந்திய அரசியல் முறை 'கூட்டாட்சி முறை' என்று வர்ணிக்கப்பட்டாலும், அந்தத் தராசு மத்திய அரசு பக்கம் அதிக பட்சம் சாய்ந்திருப்பதால்; அதிகாரத் துறையிலும் நிதித் துறையிலும் மாநிலங்கள் செவ்வனே செயல்பட முடியாமல் தடைகள் இருப்பதால்; அதேநேரம் இந்தியா வலுப் பெற்றதாக இருக்க வேண்டுமென்கிற இலட்சியத்திற்கும் ஊறு தேடாமல்; எந்தெந்தத் துறைகளில் வலுவான இந்தியா இயங்குவதற்காக மத்திய அரசு செயல்பட வேண்டுமோ அந்த அதிகாரங்களை மட்டும் மத்திய அரசிடம் கொடுத்துவிட்டு; இதர அதிகாரங்கள் மாநிலங்களுக்கு வழங்கப்படும் வகையில் அரசியல் சட்டத்தைத் திருத்தி; மறு பரிசீலனை செய்யவேண்டும் என்று கருதுகிறோம். இந்த நோக்கத்தோடு நமது அரசு அமைத்த வல்லுநர் குழுவின் அறிக்கை கிடைத்த பிறகு; அந்த அடிப்படையில் அகில இந்திய ரீதியில் மாநில சுயாட்சி இயக்கத்திற்கான ஆதரவு திரட்டும் இயக்கத்தைக் கழகம் மேற்கொள்ளும்.

அரசியல் துறை அதிகாரங்களும், நிதித் துறை அதிகாரங்களும் மாநிலங்களுக்கு மேலும் தேவை என்று கேட்பது; மாநிலங்களில் இருப்போர் அதிக அதிகாரங்களை நுகர வேண்டுமென்கிற ஆசையால் அல்ல; மாநில அரசுகள் மக்களுக்கு நெருங்கிய நிலையில்

இருப்பதால் அந்த அதிகாரங்களை மத்திய அரசிடமிருந்து மேற்கொண்ட பிறகே எதிர்பார்க்கும் விதத்தில் மக்களுக்குத் தொண்டாற்ற முடியும்—என்பதால்தான் மாநில சுயாட்சி கோருகிறோம் என்பதையும் தெளிவாக்க விரும்புகிறோம்".

என்று குறிப்பிட்டிருப்பதை யாரும் மறந்திருக்க இயலாது.

1972-ஆம் ஆண்டு மைசூர் மாநில ஸ்தாபன காங்கிரஸ் கட்சி வெளியிட்ட தேர்தல் அறிக்கையில்,

"Congress will fight in a determined manner for greater autonomy for the State and against all discrimination and step-montherly treatment by the Centre".

[மத்திய அரசு காட்டும் மாற்றாந்தாய் மனப்பான்மை, பாரபட்சம் இவற்றுக்கு எதிராகவும், மாநிலத்திற்கு அதிகமான சுயாட்சி பெறுவதற்காகவும் காங்கிரஸ் கட்சி உறுதியாகப் போராடும்.]

என்று குறிப்பிட்டதையும் இந்த நேரத்தில் நினைவு கூர்வது பொருத்தமுடையதென்று நான் கருதுகின்றேன்.

1971-ஆம் ஆண்டு மே 27-ஆம் நாள் இராஜமன்னார் குழுவின் அறிக்கை வெளிவந்தது. அந்த அறிக்கை இந்திய நாட்டுத் தலைமை அமைச்சர் இந்திரா காந்தி அவர்களுக்கு அனுப்பிவைக்கப்பட்டது.

அந்த அறிக்கையைப் பெற்றுக்கொண்ட தலைமை அமைச்சர் அவர்கள் எனக்கு 1971-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 22-ம் தேதியிட்டு எழுதிய கடிதத்தில்,

"Dear Thiru Karunanidhi,

I have received your letter of the 15th June with which you have sent me a copy of the report of the Centre-State Relations Inquiry Committee. Your Government will probably examine the recommendations of this report. As you know the Administrative Reforms Commission also went into this question and has already submitted a

report which is under our consideration. If the views of your Government on this matter are made available to us, they will also be taken into account. These are important issue and we intend to consult all the Chief Ministers.

With regards,

Yours Sincerely,
(Sd.) INDIRA GANDHI.'

[அன்புள்ள திரு. கருணாநிதி,

நீங்கள் ஜுன் 15-ந் தேதி அனுப்பிய கடிதம் கிடைத்தது. மத்திய மாநில உறவுகள் ஆய்வுக்குழுவின் அறிக்கையின் நகல் ஒன்றை கடிதத்துடன் அனுப்பியுள்ளீர்கள். அறிக்கையின் பரிந்துரைகளை உங்களது அரசாங்கம் ஆய்வு செய்யுமென்று எண்ணுகிறேன். நிர்வாகச் சீரமைப்புக் குழுவும் இப்பிரச்சனை பற்றி ஆய்ந்துள்ளதை நீங்கள் அறிவீர்கள். அக் குழு அளித்துள்ள அறிக்கை எங்களது ஆய்வில் உள்ளது. இது குறித்து உங்கள் அரசின் கருத்துக்களையும் அனுப்பி வைத்தால் அவற்றையும் சேர்த்து ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளுவோம். இவை முக்கியமான பிரச்சினைகள் என்பதால் எல்லா முதலமைச்சர்களுடனும் இது குறித்து கலந்து ஆய்வு செய்ய எண்ணியுள்ளோம்.

தங்களன்புள்ள,
(ஒம்.) இந்திரா காந்தி.]

என்று குறிப்பிட்டிருந்தார்கள்.

1972-ஆம் ஆண்டு, மே திங்கள் 30-ஆம் நாள் டெல்லியில் பிரதமர் தலைமையில் நடைபெற்ற தேசிய வளர்ச்சிக்குழு கூட்டத்தில் நான் பேசும்போது,

"Decentralisation is particularly necessary if a large country like ours is to cope with the problems of a modern economy. It is in this sense that our demand for State autonomy should be understood—as a request for more efficient management of the country's resources, as a means to enable the Centre to be strong in areas of vital national

1974 ஏப்ரல் 16] [டாக்டர் மு. கருணாநிதி]

concern, as a method of enabling the minimum demands of our people to be met in the quickest time and in the most efficient manner ''

[நமது நாடு போன்ற பெரிய நாட்டின் தற்காலப் பொருளாதாரச் சிக்கல்களை சமாளிப்பதெனில் அதிகாரங்கள் பரவலாக இருப்பது அத்தியாவசியமானது. நாங்கள் எழுப்பியுள்ள மாநில சுயாட்சி கோரிக்கையின் நியாயத்தினை இக்கோணத்திலிருந்து காணவேண்டும். நாட்டின் வளங்களை இன்னும் திறமையாக நிர்வகிப்பதற்கான வேண்டுகோளாகவும், நாட்டின் ஆதாரமான காரியங்களில் மத்திய அரசு வலுவுடன் இயங்குவதற்கான சாதனமாகவும், மிகத் திறம்படவும் மிக விரைவிலும் நம் மக்களின் குறைந்தபட்சத் தேவைகள் கிடைப்பதற்கான வழிவகையாகவுமே மாநில சுயாட்சிக் கோரிக்கையைக் கொள்ளவேண்டும்.]

என்ற அளவில் இந்த அரசின் கொள்கையைத் தெளிவாக்கி இருக்கின்றேன்.

டாக்டர் ராஜமன்னார் குழுவின் அறிக்கையை வரிக்கு வரி இந்த அரசு ஏற்றுக்கொள்ளாவிட்டாலும், அரசின் கொள்கை, வெற்றிகரமாகப் படருவதற்கான கொழுகொம்பாகவே அந்த அறிக்கையை நாம் கருதுகின்றோம்.

வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இந்தப் பிரச்சினையில் மிக நிதானமாக முடிவெடுக்க வேண்டுமென்ற கருத்துடன் பல கட்டங்களில் இதுபற்றி ஆராயப்பட்டுள்ளது. ஆளுங்கட்சி சார்பில் அமைக்கப்பட்ட செழியன், மாறன் குழுவினரும் ராஜமன்னார் குழுவின் அறிக்கையை அணுகினர். மத்திய அரசின் நிர்வாகச் சீர்திருத்த ஆணைக்குழுவின் அறிக்கையையும் அரசு பரிசீலித்தது. அதன் தொடர்பான கருத்துக்கள், இந்திய நாட்டு அரசியல் மேதைகளின் அபிப்பிராயங்கள், உலக நாடுகளின் நிலைமைகள் இவைகள் அனைத்தையும் ஆழச் சிந்தித்து ராஜமன்னார் குழு அறிக்கைமீதும்—மாநில சுயாட்சிக் கொள்கை மீதும்—தமிழக அரசின்

கருத்துரைகள் என்ற அறிக்கையை @ இந்த அவையின் முன் வைத்திருப்பதோடு அதனை ஏற்றுக்கொள்ளும் தீர்மானத்தையும் உங்கள் மேலான வழி மொழிதலுக்காக வைத்துள்ளேன்.

அண்மையில் நடைபெற்ற நாடாளுமன்ற உறுப்பினர்களின் உள் துறை பற்றிய கருத்துப் பரிமாற்றக் குழு (Consultative Committee) கூட்டத்தில், நாடாளுமன்ற உறுப்பினர் திரு. தண்டபாணி பேசும் போது "ராஜமன்னார் குழு தந்த அறிக்கையில், மத்திய மாநில அதிகாரங்கள் மறுபரிசீலனை பற்றி நல்ல கருத்துக்கள் இருப்பதாகவும், அதன்மீது மத்திய அரசு எந்தவித நடவடிக்கையையும் எடுக்கவில்லை" என்றும் கூறியதற்கு, மத்திய உள்துறை அமைச்சர் திரு. தீட்சித் அவர்கள் அளித்த பதிலில், ராஜமன்னார் குழு மாநில அரசால் அமைக்கப்பட்ட குழு என்றும், அந்த அறிக்கையின்மீது மாநில அரசு இதுவரை தனது அபிப்பிராயத்தை மத்திய அரசுக்கு அனுப்பவில்லை" என்றும் கூறியிருக்கிறார். ஆகவே, அந்தப் பதிலுக்கு ஏற்பவும், ராஜமன்னார் குழுவின் அறிக்கை பற்றி இந்தப் பேரவையின் கருத்துக்களைப் பெற வேண்டுமென்று மாண்புமிகு உறுப்பினர்கள் விரும்பியதற்கு ஏற்பவும், இந்திய மாநிலங்கள் அனைத்துக்கும் சுயாட்சித் தன்மை கிடைத்திடவும், மத்தியில் உண்மையான கூட்டாட்சி ஒளிவிடவும், இந்தத் தீர்மானத்தை அரசு கொண்டு வந்துள்ளது.

இந்திய நாட்டின் சுதந்திரக் கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருக்கிறது. வான்முகட்டைத் தொடுவது போல் அசைந்தாடும் அந்தக் கொடியின் கம்பீரம் காண, முகில்களைக் கிழித்துக் கொண்டு நமது விழிகள் தாவுகின்றன. வங்கம் தந்த தங்கக் கவி தாகூர் எழுதிய தேசிய கீதம் நமது செவிகளில் குற்றால நீர் வீழ்ச்சியின் சங்கீத ஓசையாக ஒலித்துக்கொண்டிருக்கிறது. அடிமைப்பட்டுக் கிடந்த நாடு, தன்னை விடுவித்துக்கொண்டு தலை நிமிர்ந்து கிளம்பிய வரலாற்று வரிகள், உலகப் புத்தகத்தில் கோடிட்டு வைக்கப்பட்டுள்ளன.

---

@ 125-161 ஆம் பக்கங்களில் இணைப்பு ஆக அச்சிடப்பட்டுள்ளது.

இவ்வறிக்கையின் ஆங்கில மொழிபெயர்ப்பு 162-188 ஆம் பக்கங்களில் இணைப்பு III ஆக அச்சிடப்பட்டுள்ளது.

## மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னர் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

1974 ஏப்ரல் 16] [டாக்டர் மு. கருணாநிதி]

சிறையிலிருந்த நாடு, விடுதலை பெற்று விட்டது. கதவு திறந்தது. பூட்டிய இரும்புக் கூட்டிலேயிருந்து கைதி, புன்னகை மலர வெளியே வருகிறான். தந்தையைக் காணாமல் தவித்துக் கொண்டிருந்த தளிர் நடைச் செல்வம், இளங்கரம் தூக்கி, தாவி யோடுகிறது, அவனைத் தழுவிக்கொள்ள! அவனும் அடக்க முடி யாத மகிழ்ச்சி வெள்ளம் கரை புரள மகனைத் தூக்கி முத்தமிடக் கரங்களை நீட்டுகிறான். கைகள் இயங்க முடியாமல் தவிக்கின்றன. சிறையிலிருந்து தான் விடுபட்டுவிட்டானே; இன்னும் என்ன தடை? தன்னை யார் தடுப்பது? சுற்றும் முற்றும் பார்க்கிறான். அவன் சிறையில் இல்லை; சுதந்திர பூமியில்தான் இருக்கிறான். பிறகு யார், தன் குழந்தையைக் கூடத் தழுவிட முடியாமல் அவனைக் கட்டுப்படுத்துவது? யாருமல்ல: அவன் சிறையி லிருக்கும்போது அவன் கைகள் இரண்டையும் காலையும் சேர்த்து ஒரு விலங்கு மாட்டியிருந்தார்கள். விடுதலை அடைந்த பூரிப்பில், விலங்குகளைக் கழற்ற வேண்டுமென்ற நினைப்புகூட இல்லாமல் அவன் வெளியே வந்துவிட்டான். அவன் சுதந்திர மண்ணில் தான் இருக்கிறான். கை, கால் விலங்கு மட்டும் கழற்றப்பட வில்லை. மனிதன் விடுதலையாகிவிட்டான். கை, கால்கள் மட்டும் கட்டுண்டு கிடக்கத் தேவையில்லையே; இந்தியா, விடுதலை பெற்று விட்டது. அதன் அவயவங்களைப் போன்ற மாநிலங்கள் மட்டும் மத்திய அரசுக்குத் தேவையில்லாத அதிகாரக் குவியல்கள் என்னும் விலங்குகளால் கட்டுண்டு கிடப்பானேன்?

இந்தக் கேள்வியின் நீண்ட நாளைய தாகத்தைத் தீர்க்கும் நெல்லிக்கனியாகத்தான் இன்று இந்த அவையின் முன்னால் இந்தத் தீர்மானத்தை முன்மொழிகின்றேன்.

அரசியல் சட்டம் என்பது திருத்தப்படக் கூடாத ஒன்றல்ல. நமது அரசியல் சட்டம் 30 தடவைகளுக்கு மேல் திருத்தப்பட் டிருக்கிறது.

மாநிலங்களின் மொழிகள் வளரவும், பண்பாட்டுத் தன்மைகள் காக்கப்படவும், மாநிலத்திற்கு மாநிலம் நல்லுறவுகள் வளரவும், மத்திய மாநில உறவுகள் நிலைத்துச் செழிக்கவும், நாட்டின் பொரு ளாதாரம் வளம் பெற்றுத் திகழவும், அரசியல் சட்டத்தில் இந்த

மகத்தான மாறுதலைச் செய்வது எதிர்காலத்தில் இந்தியாவின் வலிமையையும் வளப்பத்தையும் பெருக்குவதற்கு அடித்தளமாக அமையும் என்பதை உணர்ந்து மத்திய அரசினர் செயல்படவேண்டுமென்று கேட்டுக் கொள்கின்றேன். அதற்கு உறுதுணையாக உங்கள் ஒத்துழைப்பு அமையவேண்டுமென்று • விழைகின்றேன். மக்களின் நல்வாழ்வை மையமாகக் கொண்டும், பெற்ற சுதந்திரத்தின் பயனை நாடு அனுபவிக்க. வேண்டுமென்ற ஆர்வத்தை நெஞ்சில் பதித்துக்கொண்டும், இந்திய அரசியல் அரங்கில் தமிழ்நாடு அரசின் சார்பில் நாம் ஏற்றிவைக்கும் இந்தச் சுடர் விளக்கு ஒளிவிட அரசியல் மேதைகள் தூண்டுகோலாக இருக்கவேண்டுமென்றும் பணிவன்புடன் கோருகிறேன். வணக்கம். (ஆரவாரம்).

THIRU K. T. K. TANGAMANI : Sir, I move the following amendment :—

"This House having considered the various recommendations of the Rajamannar Committee and also the views of the Tamil Nadu State Government is of opinion that no Constitutional amendment is necessary in the matter of Centre-State relations."

The amendment was duly seconded.

THIRU A. R. MARIMUTHU : Sir, I move the following amendment :—

"This House having considered the various recommendations of the Rajamannar Committee and also the views of the Tamil Nadu State Government is of opinion that no constitutional amendment is necessary in the matter of Centre-State relations."

The amendment was duly seconded.

THIRU K. P. GOPAL : Sir, I move the following amendment :—

"This House having considered the various recommendations of the Rajamannar Committee and also the views of the Tamil Nadu State Government is of opinion that no constitutional amendment is necessary in the matter of Centre-State relations."

The amendment was duly seconded.

1974 ஏப்ரல் 16]

திரு. பெ. சீனிவாசன் : தலைவரவர்களே, மாண்புமிகு முதலமைச்சர் கொடுத்த தீர்மானத்தில் பாரா 3-ஐ நீக்கிவிட்டு, பாரா 2-ன் இறுதியில் கீழ்க்கண்டதை இணைத்துக்கொள்ளவும் :—

"இந்திய ஒருமைப்பாட்டிலிருந்து மாநிலங்கள் தனித்து பிரிந்து போகாமலும், மத்திய அரசாங்கத்தையே மாநிலங்கள் சார்ந்து இருக்காமலும், மாநில அரசுகளும் மத்திய அரசும் ஒன்றோடு ஒன்று சமநிலையில் இணைந்து செயல்படும் நிலையில் மாநிலங்களுக்கு கூடுதல் அதிகாரங்களை வழங்கும் வகையில் இந்திய அரசியல் சட்டத்தைத் திருத்தவேண்டுமென்று இப்பேரவை முடிவு செய்கிறது".

தீர்மானம் முறையாக வழிமொழியப்பட்டது.

Dr. H. V. HANDE : Sir, I move the following amendment :

Delete para 3 and *add* the following at the end of para 2 :—

"This House however,

(1) calls upon the State Government not to unleash divisive forces and encourage fissiparous tendencies in the name of State autonomy;

(2) urges the State Government to be watchful of and if necessary take action against persons who incessantly threaten division of the country if the demand of State autonomy is not conceded;

(3) cautions the State Government to be vigilant of the tendency among some people of bringing in the example of Pakistan and Bangla Desh to strengthen the demand of State autonomy; and

(4) calls upon the State Government to give an assurance that the State Government will give adequate autonomy to all local bodies (Corporations, Municipalities, Panchayat Unions and Panchayats) especially those run by the Opposition Parties."

The amendment was duly seconded.

**திரு. கோவை செழியன் :** பேரவைத் தலைவரவர்களே, இது முக்கியமான தீர்மானமாக இருக்கிற காரணத்தால், இந்தத் தீர்மானத்தின் மீது பலரும் கருத்துக்களைச் சொல்லவேண்டுமென்று நினைக்கிறார்கள். நிறைய பேசவேண்டுமென்ற உணர்வோடு இருக்கிறார்கள். இதற்காக ஒதுக்கப்பட்டு இருக்கும் 3 நாட்கள் போதாது என்று கருதுவதால் இன்னும் ஒரு நாள் 19-ம் தேதியும் இதற்கான விவாதத்தை வைத்துக்கொள்ளலாம். இதில் எல்லா எதிர்க்கட்சித் தலைவர்களோடும் கலந்து பேசியதில் அவர்கள் அனைவரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே, தாங்களும் அதை ஒப்புக்கொண்டு 19-ம் தேதியும் இந்த விவாதம் வைத்துக் கொள்வதற்கு அனுமதி அளிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** அலுவல் ஆய்வுக் குழுவில் மூன்று நாட்கள் என்றுதான் முடிவு செய்தோம்.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** பிசினஸ் அட்வைசரி கமிட்டியில் 3 நாட்கள் என்றுதான் முடிவு செய்து இருக்கிறீர்கள்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** நான் முடிவு செய்யவில்லை.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** எல்லோரும் சேர்ந்துதான் முடிவு செய்திருக்கிறோம், உங்கள் தலைமையில். இன்னொரு நாளும் நீட்டித்துக் கொள்ளலாம். இதில் மற்ற விஷயங்கள் மாதிரி இல்லாமல் அப்போசிஷன் லீடர்ஸ்க்கு கூடுமானவரையில், அவர்களுடைய வியூ பாயின்ட்ஸ் பூராவையும் சொல்வதற்கு நேரம் ஒதுக்குவது சரி என்று சொல்லிக் கொள்கிறேன். 10 நிமிடம், 20 நிமிடம் போதும் என்றால் பூரா கருத்துக்களையும் சொல்ல முடியாது. எல்லோரும் பூரா கருத்துக்களையும் சொல்வதற்கு அனுசரணையாக ஒரு நாள் நீட்டித்து வைத்துக்கொண்டால் நல்லது. எல்லோரையும் கலந்து பேசியதில் ஒப்புக்கொண்டார்கள்.

**மாண்புமிகு டாக்டர் இரா. நெடுஞ்செழியன் :** இது முக்கியமான தீர்மானம். இதிலே பலர் பேசுவதற்கு விரும்புவார்கள். உண்மை. பல பேர் பேசுவதை விட ஒவ்வொரு கட்சியிலும் ஒரு சிலர் அதிகமான நேரம் எடுத்துக்கொண்டால் முழு கருத்தையும் தெளிவாக எடுத்துச் சொல்ல முடியும். அது மிகவும் பயன்படும். அந்தந்தக்

கட்சியைச் சார்ந்தவர்கள் பேசுபவர்களின் எண்ணிக்கையைப் பெருக்காமல், அவர்கள் பேசும் வாய்ப்பை அதிகரித்துக்கொண்டு பேசுவது நல்லது. 19-ம் தேதி வைத்துக்கொள்வதற்கு ஆட்சேபணை இல்லை. ஆகவே, 4 நாட்கள் விவாதம் வைத்துக் கொள்ளலாம்.

**திரு. கே. எம். சுப்பிரமணியம் :** பாயின்ட் ஆப் ஆர்டர், சார்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** இங்கே விவாதத்திற்கே நேரம் இல்லை. பாயின்ட் ஆப் ஆர்டருக்கு எங்கே நேரம் இருக்கிறது?

THIRU K.M. SUBRAMANIAM : On a point of Order, Sir. Amendments should not be contrary to the resolution. Amendments should be according to the resolution. I would like to have your order whether the amendments moved by Thiru K. T. K. Tangamani and Thiru A. R. Marimuthu can be admitted because they are negations of the resolution. Are those amendments in order? I want your ruling.

THIRU S. KANDAPPAN : I would like to make a submission. I have been closely following the amendments moved by the hon. Members. I am afraid Dr. Hande's amendment is not in order.

**டாக்டர் எச். வி. ஹாண்டே :** ரொம்ப கரெக்டாக இருக்கிறது.

**(ஆ) கோட்டையில் தேசியக் கொடி கிழிந்து பறப்பது குறித்து**

**திரு. கே. டி. கே. தங்கமணி :** நான் நேரடியாக ஒரு விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். நான் எழுப்பும் ஒழுங்குப் பிரச்னை வேறு.

The point I am going to raise is within the cognizance of the Hon. Speaker.

சார், இங்கே கோட்டையிலே நம்முடைய தேசீயக் கொடியானது பறக்கிறது. இன்றைக்கு நான் பார்க்கின்றபோது, அந்தக் கொடி கிழிந்து பறக்கிறது. இது யாருடைய பொறுப்பு? இந்த மாதிரி கோட்டையில் பறப்பது நல்லதல்ல. அதில் நேரடியாக உங்களுக்குப் பொறுப்பு இருக்கிறதோ இல்லையோ, ஒரு கிழிந்த கொடி

[திரு. கே. டி. கே. தங்கமணி] [1974 ஏப்ரல் 16

பறக்கும் அளவுக்கு சென்னை நகரத்தில் கோட்டையில் இருப்பது நல்லதல்ல. யார் பொறுப்பில் இருக்கிறார்களோ அவர்களுக்குக் கூறி அதை முறைப்படுத்தவேண்டும்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** ராணுவத்தின் பொறுப்பில் இருக்கிறது. அதை நான் அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன்.

தீர்மானமும், திருத்தங்களும் விவாதத்திற்கு எடுத்துக்கொள் ளப்படுகின்றன.

அரசினர் தனித் தீர்மானம்—தொடர்ச்சி.

**மாநில சுயாட்சி பற்றியும், இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துக்களை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து—தொடர்ச்சி.**

**திரு. ஆலடி அருணா :** தலைவரவர்களே, மாண்புமிகு முதல மைச்சர் அவர்களால் முன்மொழியப்பட்டு இருக்கின்ற மாநில சுயாட்சித் தீர்மானம், மத்திய—மாநில உறவுகள் பற்றி ராஜமன்னார் குழு அளித்த பரிந்துரை, இவைகள் மீது தமிழக அரசு கொண் டிருக்கும் கருத்து குறித்த மாண்புமிகு முதலமைச்சர் தீர்மானத் திற்கு ஆதரவு தெரிவிக்கின்ற வகையில் என்னுடைய கருத்துக்களை இந்த மேலான மாமன்றத்தின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

இந்த மன்றம் எத்தனையோ வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்ச்சி களைச் சந்தித்து இருக்கிறது என்றாலும், வரலாற்றில் என்றென்றும் அழியாத இடம் பெறத்தக்க அளவுக்குச் சில நிகழ்ச்சிகள் மட்டுமே தமிழக சட்டமன்றம் பெற்று இருக்கிறது. இன்றைய தினம் வரலாற்றுச் சிறப்பு மிக்க நிகழ்ச்சியை இங்கே நாம் நடத்திக் கொண்டிருக்கிறோம்.

தமிழக சட்டமன்றம் எதை விவாதிக்கிறது, மாநில சுயாட்சி பற்றி எத்தகைய கருத்துக்களைச் சொல்கிறது, உறுப்பினர்களும் எத்தகைய விவாதங்களை தருகிறார்கள், எத்தகைய நியாயங்களைச்

குறிப்பிடுகிறார்கள் என்பதை தமிழகத்திலே இருக்கின்ற மக்கள் மட்டுமல்ல, இந்திய துணைக் கண்டத்திலே இருக்கின்ற அத்தனை அரசியல்வாதிகளும் இந்த நான்கு நாட்கள் நடக்கும் விவாதத்தை உன்னிப்பாகக் கவனித்துக்கொண்டிருக்கிறார்கள்.

காரணம், இந்தப் பிரச்சினையின் மூலம் எதிர்கால இந்திய அரசியல் வாழ்வில் ஒரு புதிய திருப்பம் உருவாக இருக்கிறது. எனவே, இந்திய துணைக் கண்டத்திலே இருக்கும் எல்லா அரசியல் வாதிகளும் இந்த விவாதத்தை உன்னிப்பாகக் கவனித்துக்கொண்டிருக்கிறார்கள்.

இந்த மாமன்றத்தில் நான் முன்பு குறிப்பிட்டதுபோல் வரலாற்றுச் சிறப்புமிக்க நிகழ்ச்சி ஒருசிலது மட்டுமே நடந்து இருக்கிறது. பேரறிஞர் அண்ணா அவர்கள் முதலமைச்சராக இருந்த நேரத்தில் இந்தி ஆதிக்கத்தின் கொடும் கரங்களை வீழ்த்துகின்ற வகையில், மும்மொழித் திட்டத்திற்கு மூடுவிழா நடத்துகிற வகையில், இரு மொழிக் கொள்கையைப் புகுத்துகிற வகையில் ஒரு தீர்மானத்தை இந்த மாமன்றத்தில் நிறைவேற்றினார்கள். எனவே, இந்திய அரசாங்கத்தின் கொள்கைக்கு எதிராக திராவிட முன்னேற்றக் கழக அரசு மேற்கொண்ட முதல் நடவடிக்கையாகும் இது.

அதற்குப் பிறகு இன்றைய தினம் 4½ கோடி தமிழ் மக்களுக்காக மட்டுமல்ல, இந்திய துணைக்கண்டத்திலே இருக்கிற எல்லா மாநிலத்து மக்களும் பெருமைப்படும் அளவுக்கு மாநில சுயாட்சிக் கொள்கையை டாக்டர் கலைஞர் அவர்கள் இன்றையதினம் இந்த மன்றத்தில் முன்மொழிந்து இருக்கிறார்கள்.

இந்தக் கொள்கையை நாம் முன்மொழிந்த பின்னால், இதற்கு எந்தத் திசையிலிருந்து எதிர்ப்புகள் வருகின்றன, எந்தத் திசையிலிருந்து கணைகள் தொடுக்கப்படுகின்றன, அதற்கு எதிர்வாதம் எந்த அடிப்படையில் தரப்படுகிறது என்பதை கடந்த 2, 3 ஆண்டுகளாக திராவிட முன்னேற்றக் கழகம் நல்ல முறையில் அறிந்து கொண்டிருக்கிறது.

**மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

[திரு. ஆலடி அருணா] [1974 ஏப்ரல் 16

இந்திய மக்களின் நல்வாழ்வுக்காக உருவாக்கப்பட்ட அரசியல் சட்டம் எப்படிப்பட்ட தன்மையில் படைக்கப்பட்டிருக்கிறது? நம்முடைய மொழிகள் காப்பாற்றப்பட வேண்டும், நம்முடைய பண்பாடு பேணப்படவேண்டும், நம்முடைய கலாசாரம் பாதுகாக்கப்படவேண்டும் என்ற முறையில் வகுக்கப்பட்டு இருக்கிறதா என்றால் நிச்சயமாக இல்லை.

ஒரு பெரிய நிலப்பரப்பைக் கட்டிக் காப்பதற்கு ஒரு நல்ல அரசியல் சட்டத்தை உருவாக்க முனைந்தவர்கள் உண்மையிலேயே கூட்டாட்சி அடிப்படைத் தத்துவத்தை மையமாகக் கொண்டு ஒரு அரசியல் சட்டத்தை உருவாக்கி இருக்கவேண்டும். ஆனால் இந்திய அரசியல் சட்டத்தை உருவாக்கினவர்கள் இந்தியா பெடரல் ஸ்ட்ரக்சர் என்ற முறையில் உருவாக்கவில்லை. கூட்டாட்சி என்ற முறையில் உருவாக்கவில்லை. பின்னர் இந்திய அரசியல் சட்டம் எத்தகைய தன்மை படைத்தது என்று சொன்னால் குவாசி பெடரல் என்று அரசியல் நிபுணர்கள் நமக்குக் கருத்தைச் சொன்னார்கள்.

அந்த அளவுக்கு மக்களுடைய உள்ளங்களைப் புரியாத வகையில், மாநிலங்களுடைய உரிமைகளை மதியாத வகையில். மாநில சுயாட்சியைப் புறக்கணிக்கின்ற வகையில் எப்படி அவர்கள் இந்த சட்டத்தை உருவாக்கினார்கள் என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். இயற்கையிலே காங்கிரஸ்காரர்கள் 1935-ம் வருடம் நிறைவேற்றப்பட்ட சட்டத்தை ஒரு காலனி ஆதிக்கச் சட்டம், ஒரு ஏகாதிபத்திய சட்டம் என்றெல்லாம் விமர்சித்தார்கள்.

ஆனால், எந்த 1935-ம் வருட சட்டத்தை காலனி ஆதிக்கச் சட்டம், மக்களால் ஒத்துக்கொள்ளப்படாத சட்டம், மக்களுக்குத் தேவையில்லாத சட்டம் என்று காங்கிரஸ் நண்பர்கள் விமர்சித்தார்களோ அதே சட்டத்தை மையமாக வைத்துத்தான் இந்திய அரசியல் சட்டத்தை வகுத்தார்கள். இதைத்தான் சிறந்த அரசியல் சட்ட நிபுணர் என்று கருதப்படுகிற திரு. ஐவர் ஜென்னிங்ஸ் அவர்கள் மிகத் தெளிவாகச் சொன்னார்:

1974 ஏப்ரல் 16] [திரு. ஆலடி அருணா]

'The Constitution derives directly from the Government of India Act 1935 from which in fact many of its provisions were copied almost textually,

நான் இதைச் சொல்வதற்குக் காரணம், 1935-ம் வருட சட்டத்தை அப்படியே நகல் எடுத்து, அதை மையமாக வைத்து, அரசியல் சட்டத்தை காங்கிரஸ்காரர்கள் நிறைவேற்றினார்கள். அந்த அளவுக்கு ஏகாதிபத்திய மனப்பான்மையோடு, காலனி ஆதிக்க சிந்தனையோடு மாகாணங்களுடைய உரிமைகளைப் பற்றி துளியும் கவலைப்படாமல் 1935-ம் வருட சட்டத்தை காங்கிரஸ் கட்சி பின்பற்றியதற்கு என்ன காரணம் என்பதை நாம் சிந்திக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

காங்கிரஸ்காரர்கள் உண்மையிலேயே கடந்த காலத்தில் இந்தக் கொள்கையின் மீது நம்பிக்கை வைக்காமல் இருந்தார்களா, அவர்கள் மாநில சுயாட்சியின் பெருமையை உணராமல் இருந்தார்களா, அதனுடைய உரிமைகளைத் தெரியாமல் இருந்தார்களா என்றால், நிச்சயமாக இல்லை, நம்முடைய டாக்டர் கலைஞர் அவர்கள் ஆற்றிய உரையிலே 1945-ம் ஆண்டில் காங்கிரஸ் கட்சி எப்படிப்பட்ட நிலையிலே இருந்தது, அவர்கள் என்ன கொள்கையை வகுத்திருந்தார்கள் என்ற விமர்சனத்தை நம்முடைய மேலான கவனத்திற்குக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

உங்களுக்கு நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். காபினட் கமிஷன் அமைத்த பிறகு, இங்கிலாந்து சர்க்காரால் அமைக்கப்பட்ட பிறகு, மாநில உரிமைகளைப் பற்றியும், இந்திய சுதந்திரத்தின் நிலைமையைப் பற்றியும் ஆராய்வதற்காக அந்தக் குழு வந்தது. அந்தக் குழுவினிடம் காங்கிரஸ் கட்சி எப்படிப்பட்ட கருத்தைப் பரிமாறிக்கொண்டது என்று பார்க்கின்ற நேரத்தில், காங்கிரஸ் கட்சி செயற்குழுவினிடம் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த அபுல் கலாம் ஆசாத் அவர்கள் ஒரு அருமையான கருத்தைச் சொன்னார்கள்.

All over the world, the tendency was for the decentralisation of power. In a country so vast as India and with people, so diverse in language, customs and geographical conditions a unitary Government was obviously most unsuitable. Ultimately, I

came to the conclusion that the Constitut on of India must from the nature of the case, be federal. Further it must be so framed as to ensure autonomy to the provinces in as many subjects as possible. We have to reconcile the claims of the provincial autonomy with national unity.,

என்று அபுல் கலாம் ஆசாத் அவர்கள் இந்திய காங்கிரஸ் செயற் குழுவுக்கு ஆலோசனை சொன்னார்கள்.

1947-ம் ஆண்டில் அரசியல் நிர்ணய அவையிலே பெருமதிப்பிற் குரிய ஜவஹர்லால் நேரு அவர்கள் தீர்மானத்தை முன்மொழிந்த பொழுது அபுல் கலாம் ஆசாத் அவர்கள் கூறிய கருத்தை மையமாக வைத்து இந்தத் தீர்மானத்தை முன்மொழிந்தார்கள். ஆனால் அவர் முன்மொழிந்த தீர்மானம் நிறைவேற்றப்பட்டதா. முன்மொழிந்த தீர்மானத்தின் கருத்து ஒப்புக்கொள்ளப்பட்டதா என்றால், அதுதான் இல்லை. அத்தனை கருத்துக்களும் தூக்கி எறியப்பட்டன, சட்டம் கொண்டு வந்த நேரத்தில்.

காங்கிரஸ்கட்சியின் போக்கு, அதனால் ஏற்பட்ட அரசியல் திருப்பத்தின் காரணமாக இந்தியா—இந்தியா, பாகிஸ்தான் என்று இரு கூறாக பிரிந்தது. அப்படி இரு கூறாகப் பிரிந்தவுடன், இந்தியா இரு கூறாகத் துண்டுபட்ட பிறகு, இந்துக்களெல்லாம் ஒரு தலைமையின் கீழே இருப்பார்கள், பாகிஸ்தானியர்களெல்லாம், இஸ் லாமியர்களெல்லாம் இன்னொரு தலைமையின் கீழே இருப்பார்கள் என்று அரசியல்வாதிகள் கணித்தார்கள்.

ஆனால், அந்தக் கணக்கு எவ்வளவு தவறானது, எவ்வளவு தலை கீழானது என்பதற்கு அண்மையிலே உருவாக்கப்பட்ட சுதந்திர பங்களாதேஷ் நமக்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறது. பாகிஸ் தானியர் ஒரு குடையின் கீழ் வருவார்கள், இந்துக்கள் ஒரு குடை யின் கீழ் வருவார்கள் என்று அப்பொழுது இருந்த அரசியல் வாதி கள் நம்பினார்கள். எனவே, ஒரு காலத்தில் சுயாட்சி பற்றி சொன் னவர்கள், மாநில சுதந்திரத்தைப் பற்றிச் சொன்னவர்கள், அதைப் போல மாநிலங்களுக்கு அதிகாரங்கள் அதிகமாக இருக்கவேண்டும் என்று ஒத்துக்கொண்டவர்கள் அத்தனையையும் குப்பை மேட்டில் தூக்கி எறிந்துவிட்டு, 1935-ம் ஆண்டு சட்டத்தை அப்படியே பின் பற்றினார்கள்.

1974 ஏப்ரல் 16] [திரு. ஆலடி அருணா]

அரசியல் சட்டத்தில் மாநில சுயாட்சியினுடைய கொள்கையெல்லாம் விடுபட்டு, ஒற்றை ஆட்சி அடிப்படையில் அரசியல் சட்டவிதிகள் முன்மொழியப்பட்ட நேரத்தில் பெருமதிப்பிற்குரிய ஹனுமந்தையா அவர்கள் மிக ஏமாற்றத்தோடு அந்த அவையிலே வாதித்தார்கள். அந்தக் கருத்துக்கள் நம்முடைய செவிகளில் ஒலிக்கின்ற அளவுக்கு உயிர்த்தன்மை படைத்தவையாக இருக்கின்றன.

'We were, during the days of freedom struggle wedded to certain principles and, ideologies as taught to us and as propounded to us by Mahatma Gandhi. The first and foremost advice which he gave in his picturesque language was that the constitutional structure of this country ought to be broadbased and pyramidlike. It should be built from the bottom and should taper right up to the top. What has been done is just the reverse. The initiative from the provinces and the States and from the people has been taken away and all power has been concentrated in the Centre. This is exactly the kind of Constitution Mahatma Gandhi did not want and did not envisage'.

என்று மிகத் தெளிவாக ஹனுமந்தையா அவர்கள் சொன்னார்கள்.

இப்படி ஒரு அரசியல் சட்டத்தை காந்தியார் நமக்குச் சொல்லவில்லை, காந்தியார் அவர்கள் பார்க்க விரும்பவில்லை என்று ஹனுமந்தய்யா அவர்கள் அரசியல் நிர்ணய அவையில் மிகத் தெளிவாக வாதிட்டிருக்கிறார்கள்.

இதை நான் சொல்வதற்குக் காரணம் காங்கிரஸ் கட்சி தன்னுடைய அடிப்படைக் கொள்கையிலிருந்து மாறி, வேறு தன்மைக்குச் சென்று விட்டது. அரசியல் சட்டத்தில் மத்திய அரசு பட்டியலில் 97 அதிகாரங்கள், மாநில அரசுக்கு என்று 66 அதிகாரங்கள், கன்கரெண்ட் லிஸ்டு பொது அடிப்படையில் 47 அதிகாரங்கள். இது போக எஞ்சிய அதிகாரங்கள் அத்தனையும் மத்திய சர்க்காருக்குச் சொந்தம்.

உலகில் எந்தக் கூட்டாட்சியிலும், அது கனடாவாக இருந்தாலும் சரி, அமெரிக்காவாக இருந்தாலும் சரி, ஆஸ்திரேலியாவாக இருந்தாலும் சரி, ஸ்விட்ஸர்லாண்டாக இருந்தாலும் சரி,

**மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

[திரு. ஆலடி அருணா] [1974 ஏப்ரல் 16

'ரெஸிடுயரி பவர்ஸ்' எஞ்சிய அதிகாரங்களை மத்திய சர்க்கார் எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால், விசித்திரமிக்க இந்திய அரசியல் சட்டத்தில் அந்த அதிகாரங்களை மத்திய அரசே எடுத்துக் கொண்டிருக்கிறது. கன்கரெண்ட் லிஸ்டு பொது அடிப் படையில் 47 அதிகாரங்களில் மாநிலத்திற்கு எந்த அதிகாரமாவது இருக்கிறதா என்றால், அதுவும் நடைமுறையில் அத்தனையும் மத்திய சர்க்காரே ஆக்கிரமித்துக்கொண்டிருக்கிறது.

மத்திய சர்க்காருக்கு அதிகாரம் இருக்கட்டும், மத்திய சர்க்காருக்கு உரிமைகள் இருக்கட்டும், மத்திய சர்க்காருக்கு நிதி ஆதாரங்கள் இருக்கட்டும், இவைகளெல்லாம் நாம் மறுக்கவில்லை. இந்த உரிமைகள், ஆதாரங்கள், இந்த சுதந்திரம் மத்திய சர்க்காருக்கு எதற்காகத் தேவைப்படுகிறது ? அதைத்தான் நாம் தீவிரமாக சிந்திக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

இன்றைக்கு நாட்டிலிருக்கிற வட மாநிலங்களிலே மக்கள் அரிசி விலை ஏறியிருக்கிறது ஏன் என்று இந்திரா காந்தி அம்மையார் அவர்களைப் பார்த்துக் கேட்கவில்லை. எண்ணெய் விலை ஏறியிருக்கிறதே என்று பிரதமரைப் பார்த்துக் கேட்கவில்லை. நாட்டில் ஒவ்வொரு பொருளின் விலைவாசி ஏற்றத்துக்கும் மாநில சர்க்காரைத்தான் மக்கள் கேட்கிறார்கள்.

எனவே, தொழில் பெருகவேண்டுமே, ஏன் எங்களுக்கு தொழில் இல்லை, ஏன் எங்களுக்கு வேலை வாய்ப்பு தரவில்லை, ஏன் விலைவாசி ஏற்றத்தைக் கட்டுப்படுத்தவில்லை, ஏன் நாட்டில் நல்ல சீர்திருத்த சட்டத்தைக் கொண்டுவரவில்லை என்று யாரும் மத்திய சர்க்காரை நேரடியாகக் கேட்பதில்லை. அத்தனை பேர்களும் மாநில சர்க்காரின் தாழ்வாரத்தில் நின்றுகொண்டு தான் உரிமைக் குரலை எழுப்பிக்கொண்டிருக்கிறார்கள்.

ஆனால், அதிகாரம் அத்தனையும் மத்திய சர்க்காரின் கையில் இருக்கிறது. உங்களுக்குத் தெரியும், இப்பொழுது வடபுலத்தில் சோற்றிற்கு பெரிய சண்டை நடக்கிறது. நான் தவறான கருத்தைக் கூறுவதாக யாரும் கருதமாட்டார்கள் என்று நினைக்கிறேன். ஒரு மாநில அரசு உணவுப் பிரச்னையை சமாளிக்க முடியவில்லை. ஒரு மாநில அரசு கவிழ்ந்துவிட்டது, குஜராத். அடுத்த மாநில

அரசு கவிழ்கின்ற நிலையில் இருக்கிறது. இன்றைக்கு இருக்குமோ, நாளைக்கு இருக்குமோ, மறுநாளைக்கு பிரிவு உபசாரம் கொடுக்கப் போகிறோமோ என்று சொல்லக்கூடிய நிலைமையில் இன்னொரு மாநிலம் இருக்கிறது. மாநில அரசுக் கொள்கையை அந்த மாநில அரசு தீட்டியிருக்கிறதா, மாநில அரசுக் கொள்கையை அந்த மாநில முதல் அமைச்சர் வகுத்திருக்கிறாரா, என்றால் நிச்சயமாக இல்லை.

மத்திய சர்க்கார் கொண்டுவந்திருக்கிற உணவுக் கொள்கை, அதனால் ஏற்பட்ட விபரீத விளைவு இன்றைக்கு வடபுலத்தில் ஒரு ரத்தக் கிளறியாகக் காட்சி அளிக்கின்றது. எனவே, யாருக்கு அதிகாரம் இருக்கவேண்டுமோ, யாருக்கு உரிமை இருக்க வேண்டுமோ, அந்த அதிகாரம், அந்த உரிமை மாநில சர்க்காரிடத்தில் இல்லை. மத்திய சர்க்காரிடத்தில் இருக்கிறது. எனவே, மத்திய சர்க்காருக்கு சில குறிப்பிட்ட அதிகாரங்கள் மட்டுமே போதும், அதற்கு ராணுவம் சம்பந்தப்பட்ட அதிகாரம் இருக்க வேண்டும், வெளி நாட்டு விவகாரம் இருக்கவேண்டும், நாணயச் செலாவணி இருக்கவேண்டும். போக்குவரத்து இருக்கவேண்டும், இவைகளெல்லாம் மட்டுமே மத்திய சர்க்கார் பார்க்கவேண்டும்.

விவசாயமாக இருந்தாலும் சரி, கல்வியாக இருந்தாலும் சரி, சுகாதாரமாக இருந்தாலும் சரி, சட்டம், ஒழுங்குப் பிரச்னையாக இருந்தாலும் சரி, மதமாக இருந்தாலும் சரி, வேறு எல்லாப் பிரச்னைகளிலும் முழு அதிகாரங்களும் மாநிலத்திற்குத் தான் இருக்கவேண்டும். இதைத்தான் மாநில சுயாட்சி என்று சொல்கிறோம். அந்த அதிகாரங்கள் மூலமாகத் தான் ஏழைகளை வாழவைக்க முடியும் என்று சொல்கிறோம்.

ஆனால், இப்படி மாநில சர்க்காருக்கு அதிகாரம் வேண்டும், உரிமைகள் வேண்டும் என்று சொல்கின்ற நேரத்தில், நமது மத்திய சர்க்கார் பலவீனப்படுத்தப்படலாமா, மத்திய சர்க்கார் உறுதியாக இருக்கவேண்டாமா, ஸ்ட்ராங் சென்டிரல் கவர்ன் மெண்ட், மத்திய அரசு பலமாக இருக்க வேண்டாமா என்று கேட்கிறார்கள்.

[திரு. ஆலடி அருணா] [1974 ஏப்ரல் 16

(முற்பகல் 11-00)

மத்திய சர்க்கார் பலமாக இருக்க வேண்டும்; நமக்கு அதிலே இரண்டுபட்ட கருத்து இல்லை. மத்திய சர்க்கார் உறுதியாக இருக்க வேண்டும்; அதிலே நமக்கு மாறுபட்ட கருத்து இல்லை. அந்த பலமும் உறுதியும் இருந்து, அதை யாரிடம் காட்ட வேண்டும்? சீனாக்காரனை வீழ்த்தப் பயன்படுத்த வேண்டும்; பாகிஸ்தானை வீழ்த்தப் பயன்படுத்த வேண்டும். நமது எல்லைகளிலிருந்து எதிரிகளைத் துரத்தி அடிக்கப் பயன்படுத்த வேண்டும். ஆனால் அந்த பலமும் உறுதியும் நம்மை அடிமை யாக்க அல்ல; நம்மை சுரண்ட அல்ல; நம்மை இரண்டாந்தர குடிமகனாக ஆக்குவதற்கு அல்ல. இதை நாம் தெளிவாக உணர்ந்து ஆகவேண்டும். இதை நாம் தெளிவாக வலியுறுத்தி ஆகவேண்டும்.

அரசியல் நிர்ணய சபையில் அனுமந்தையா அவர்கள் தெளிவாகச் சொன்னார்கள்.

> The strength of the Centre, if I understand correctly, consists in having a strong Army, a strong Navy and a strong Air Force and in possession of sufficient money for these purposes. .'

நல்ல ராணுவம் வேண்டும்; நல்ல கடற்படை வேண்டும்; நல்ல விமானப்படை வேண்டும். அதற்கான நிதி ஆதாரங்கள் வேண்டும். இவைகள்தான் மத்திய சர்க்காரை திறமை வாய்ந்த தாக செய்பவை என்று சொன்னார்கள்.

> ' beyond that, if they take too much power and accumulate their legislative lists, what happens is that the initiative that should come from the provinces will not be there and the provinces will be reduced to mere automations experts. I have read on Constitution and one of the accepted tests whether a country enjoys freedom is to see how far the units and local bodies enjoy freedom and autonomy. Different people understand the strength of the Centre in different ways and the Drafting Committee have merely understood that the mere accumulation of files in the Imperial Secretariat makes the strength of the Centre.'

1974 எப்ரல் 16] [திரு. ஆலடி அருணா]

மத்திய சர்க்காரிலே குவிந்து கிடக்கின்ற பைல்கள்தான் அதனுடைய பலத்திற்கு ஆதாரம் என்று எண்ணியிருக்கிறார்கள். அது பலத்திற்கு ஆதாரம் அல்ல. நல்ல படை வேண்டும்; நல்ல கப்பற்படை வேண்டும்; நல்ல விமானப்படை வேண்டும்; நல்ல ராணுவம் வேண்டும்; இவைகள்தான் பலத்திற்கு நல்ல ஆதாரங்கள் என்று அவர்கள் சொன்னார்கள்.

இந்த பலத்தை இன்றைக்கு மத்திய சர்க்கார் பெறுவதற்கு எந்த நிதி ஆதாரத்தைக் கேட்டாலும் நாம் கொடுக்கத் தயாராக இருக்கிறோம்.

டாக்டர் கலைஞர் அவர்கள் தன்னுடைய முன்னுரையில் மிகத் தெளிவாகச் சொன்னார்கள். வேறு எந்த மாநிலமும் கொடுக்காத அளவுக்கு பாகிஸ்தான் படையெடுப்பின்போது 6 கோடி ரூபாயை அள்ளிக் கொடுத்த மாநிலம் இந்தியாவிலேயே நம்முடைய தமிழ்நாடு ஒன்றுதான் என்று சொல்லியிருக்கிறார்கள்.

நான் ஏன் இதைச் சொல்கிறேன் என்றால் மத்திய சர்க்காரை பலகீனப்படுத்த வேண்டும் என்பதற்காக அல்ல; அந்த நோக்கம் நமக்கு இல்லை. மாநில அரசை நம்பி இருக்கிற மக்களை வாழ வைக்கவேண்டும் என்பது நம்முடைய கொள்கை; மாநில அரசை நம்பி இருக்கிற மக்களை வாழ வைக்க வேண்டும் என்பது நம்முடைய திட்டம். அதனால், உண்மையான மாநில சுயாட்சி மட்டுமே அதற்கு மூலாதாரமாக இருப்பதால், மருந்தாக இருக்கின்ற காரணத்தால், அதை இந்த மக்கள் மன்றத்தில் வைத்து அவர்களுடைய ஆதரவைப் பெறுவதற்காக நாம் எல்லா ஏற்பாடுகளையும் செய்துகொண்டிருக்கிறோம்.

மத்திய சர்க்காரிடம் நிதி ஆதாரங்களுக்கான அதிகாரம் இருந்தாலும் சரி, வேறு அதிகாரங்களாக இருந்தாலும் சரி அத்தனையும் குவிந்து கிடக்கின்றன. அவர்கள் நினைத்தால், இந்த சட்டமன்றத்தை வேண்டுமென்றே கலைத்துவிடலாம்; அவர்கள் நினைத்தால், இங்கே இருக்கின்ற அமைச்சர்களுக்குத் தாக்கீது அனுப்பலாம். இப்படி எத்தனையோ அரசியல் தலையீடுகள் செய்யலாம். விக்ரமாதித்தன் கூடு விட்டுக் கூடு பாய்வதைப்போல

[திரு. ஆலடி அருணா] [1974 ஏப்ரல் 16

அவர்கள் நினைத்ததைச் செய்கின்ற அளவுக்கு அதிகாரத்தை வைத்திருக்கிறார்கள். அந்த அளவுக்கு அவர்கள் அதிகாரத்தை வைத்திருக்கிறார்கள்; உரிமையைக் கையில் வைத்திருக்கிறார்கள்.

அப்படிப்பட்ட உரிமையையும், அதிகாரத்தையும் வைத்திருப்பவர்கள் இந்த 23 ஆண்டு காலத்தில் என்ன நியாயம் வழங்கியிருக்கிறார்கள்? ஒழுங்காக நடந்திருக்கிறார்களா? பாரபட்சமற்ற முறையில் நடந்திருக்கிறார்களா? மாற்றான் தாய் மனப்பான்மை அற்ற முறையில் நடந்திருக்கிறார்களா? இல்லையே. முழுக்க முழுக்க யார் மத்தியிலே நிதி அமைச்சராக இருக்கிறார்களோ, அவர்களுடைய மாநிலம் தனியாகக் கவனிக்கப்படுகிறது. யார் பிரதமராக வருகிறார்களோ, அவர்களுடைய மாநிலத்தில் தனிக் கவனம் செலுத்தப்படுகிறது. இந்தக் கொடுமையை நாம் பல சந்தர்ப்பங்களிலே சொல்லி இருக்கிறோம். இங்கே அதற்கு ஒரே ஒரு உதாரணத்தை மட்டும் சொல்ல விரும்புகிறேன்.

1971-லே ஐந்தாண்டுத் திட்டங்களுக்கு நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டது மத்திய சர்க்காரால். இதிலே நாம் ஒன்றைக் கேட்கிறோம்; கேட்கின்ற அளவுக்குத் தரவேண்டுமென்று கேட்கிறோம். இதை நாம் வேண்டுமென்றே கேட்கவில்லை; இங்கே இருக்கின்ற பெரும் நெருக்கடி காரணமாகக் கேட்கிறோம். நாம் கேட்டால் அந்த அளவுக்குக் கிடைப்பதில்லை. ஆனால் வேறு சிலர்—கேட்பவர்கள் கேட்டால் கேட்பதற்கு மேலாகவே கிடைக்கிறது.

1971-ல் நாம் கேட்டது 71 கோடியே 36 லட்சம் ரூபாய். நமக்குக் கிடைத்தது 48 கோடி ரூபாய். மன்னிக்க வேண்டும். ஆந்திர சர்க்கார் கேட்டது 70 கோடியே 36 லட்சம். கிடைத்தது 48 கோடி.

தமிழ் நாடு கேட்டது 67 கோடியே 41 லட்சம்; கிடைத்தது 40 கோடியே 40 லட்சம்.

மேற்கு வங்கம் கேட்டது 60 கோடி; கிடைத்தது 44 கோடியே 20 லட்சம்.

மராட்டியம் கேட்டது—அது சவானுடைய மாநிலம் அல்லவா—38 கோடியே 28 லட்சம்; அவர்களுக்குக் கிடைத்தது 49 கோடியே 10 லட்சம்.

1974 ஏப்ரல் 16] [திரு. ஆலடி அருணா]

இந்திரா காந்தி அம்மையார், அவர்கள் எல்லோருக்கும் தாயாக விளங்குபவர்கள். அவர்கள் யாருக்குமே பாதகம் செய்ய மாட்டார்கள் என்று எல்லோராலும் எண்ணப்படக் கூடியவர்கள். அவர்கள் மாநிலம் கேட்டது சுமார் 80 கோடி; கிடைத்தது உத்தரப்பிரதேசத்திற்கு 105 கோடியே 2 லட்சம்.

மத்தியப்பிரதேசம், பஞ்சாப், ராஜஸ்தான் போன்ற மாநிலங்கள் எல்லாம் கேட்ட அளவுக்குக் கிடைக்கிறது.

எதைக் கேட்கிறார்களோ, அதைக் கொடுக்கிறார்கள். நான் இதைச் சொல்லக் காரணம், அவர்கள் கையிலே இருக்கின்ற அதிகாரத்தை எவ்வளவு தவறாகப் பயன்படுத்துகிறார்கள், எந்த அளவுக்கு சுய நலத்தோடு பயன்படுத்துகிறார்கள் என்பதைச் சுட்டிக்காட்டுவதற்காகத்தான்.

அதிலும் குறிப்பாக, தமிழ்நாடு என்றாலே அவர்களுக்கு புறக் கணிக்க வேண்டும் என்பதிலே தனிக் கவனம் ஏற்படுகிறது. தமிழ் நாடு என்றாலே அலட்சியப்படுத்துகிறார்கள்; தமிழ்நாடு என்றாலே உரிமையை உதாசீனப்படுத்துகிறார்கள். அந்த வகையில்தான் தமிழ்நாட்டைப் பொறுத்தவரையிலே அவர்கள் தனிக் கவனம் செலுத்திவருகிறார்கள்.

ஐந்தாண்டுத் திட்டத்திலே நமக்கு ஒதுக்கியிருக்கிற பணத்தை வைத்தே தமிழ்நாடு எந்த அளவுக்குப் புறக்கணிக்கப்படுகிறது என்பதை நிரூபிக்க முடியும்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் நமக்கு 10.8 சதவீதம் ஒதுக்கினார்கள்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 9 சதவீதம் ஒதுக்கினார்கள்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 7.4 சதவீதம் ஒதுக்கினார்கள்.

ஆனால் 4-வது ஐந்தாண்டுத் திட்டத்தில் 4.7 சதவீதம் தான் ஒதுக்கியிருக்கிறார்கள்.

மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை
மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம்
திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[திரு. ஆலடி அருணா] [1974 ஏப்ரல் 16

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் 10.8 சதவீதம்; ஆனால் 4-வது ஐந்தாண்டுத் திட்டத்தில் 4.7 சதவீதம் என்றால், அந்த உரிமை அவர்களுக்கு இருக்கலாமா? அப்படிப்பட்டவர்கள் இந்த நியாயத்தை நமக்குச் சொல்லத் தகுதி பெற்றிருக்கிறார்களா? நமக்குப் பங்கு கொடுக்கின்ற யோக்கியதை மத்திய சர்க்காருக்கு இருக்கிறதா என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.

இந்த முறையை ஏற்கெனவே பலர் எதிர்த்திருக்கிறார்கள். நம்முடைய மாநிலத்தைத் தவிர மற்றும் பல மாநில முதலமைச்சர்கள் எல்லாம் எதிர்த்திருக்கிறார்கள். காங்கிரஸ் கட்சியின் சார்பிலே வீரேந்திரபட்டீல் அவர்கள் எதிர்த்திருக்கிறார்கள். பிரமானந்த ரெட்டி அவர்கள் எதிரான கருத்துக்களைச் சொல்லியிருக்கிறார்கள். எத்தனை பேர் சொன்னாலும் மத்திய சர்க்கார் தன்னுடைய உடும்புப்பிடியிலிருந்து திருந்த மாட்டேன் என்கிறார்கள்; தன்னுடைய பாதையிலேதான் போய்க் கொண்டிருக்கிறார்கள்; திருத்திக்கொள்ள மாட்டேன் என்கிறார்கள்.

இந்தப் போக்கினால் மாநில அரசை நம்பியிருக்கிற மக்களை வாழவைக்க முடியாது. மாநிலங்களிலே அவர்களுடைய கையாளாகக் கவர்னரை வைத்துக்கொண்டு பல காரியங்களைச் செய்து கொண்டிருக்கிறார்கள். இந்தியாவிலே பல இடங்களில் குழப்பம் வந்து, பல இடங்களிலே கலகம் வந்து, கிட்டத்தட்ட 34 தடவைகள், குடியரசுத் தலைவர் ஆட்சிப் பிரகடனப்படுத்தப்பட்டிருக்கிறது என்றால், அதிலே பாதி மத்திய சர்க்கார் கவர்னர் மூலம் செய்த தவறுகள் மூலமாகவே செய்யப்பட்டிருக்கிறது. அந்த அளவுக்கு அவர்கள் கையிலே அதிகாரத்தை வைத்துக்கொண்டு, மாநிலங்களிலே கவர்னரை வைத்திருக்கிறார்கள்.

இன்னொன்றையும் இங்கே சுட்டிக்காட்ட விரும்புகிறேன். நிதி நிலையைப் பொறுத்த வரையில் மத்திய சர்க்கார் நம்மை வஞ்சிக்கிறது என்று சொன்னேன்; நம்மை ஏமாற்றுகிறது என்று சொன்னேன். அதற்கும் மேலாக பச்சை சதியைச் செய்கிறார்கள் என்பதற்கு ஒன்றை மட்டும் குறிப்பிட விரும்புகிறேன்.

1974 ஏப்ரல் 16] [திரு. ஆலடி அருணா]

மாநில சர்க்காருக்கு இன்கம் டாக்சில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதம் பங்கு கிடைக்கிறது. இதற்கு ஒவ்வொரு ஆண்டு நிதிநிலை அறிக்கையிலும் 10 சதவிகிதம் வெட்டுகிறார்கள். அல்லது 10 சதவிகிதம் ஒட்டுகிறார்கள். இந்த நிலைமை ஐந்தாண்டுக்கு ஒரு முறை வகுக்கப்படுகிறது. இருந்தாலும், எல்லா மாநில அரசுகளுக்கும் வருமான வரியில் சரியான பங்கு வேண்டுமென்று கேட்டிருக்கிறார்கள். மாநில அரசுக்கு இன்கம் டாக்சில் பங்கு உண்டு. அப்படியானால் பங்கு கிடைக்காத அளவுக்கு என்ன செய்வது என்று ஒரு திட்டத்தை வகுத்தார்கள். கம்பெனி வருமானம் ஒரு தனி மனிதனுடைய வருமானமாகக் கணக்கிடப்பட்டு அதிலிருந்து கிடைக்கின்ற வருமான வரியில் மாநிலத்திற்குப் பங்கு கிடைத்துக்கொண்டிருந்தது. இந்தக் கம்பெனிகள் வரியை ஒழித்தால்தான் மாநில அரசுக்குக் கொடுப்பதைக் குறைக்க முடியும் என்று திட்டமிட்டு, கம்பெனிகள் இன்கம்டாக்ஸ் சட்டத்தில் திருத்தம் 1959-60-ல் கொண்டுவந்து, அதை ஒழித்து விட்டு, கார்ப்பரேஷன் டாக்ஸை கொண்டுவந்தார்கள்.

கார்ப்பரேஷன் டாக்ஸைப் பொறுத்த வரையில் மாநிலங்களுக்கு வரிப் பங்கு கிடையாது. 1938-39-ல் கார்ப்பரேஷன் வரி வருமானம் வெறும் 2 கோடி ரூபாய்தான் ஆல் இந்தியா அடிப்படையில். வெறும் 2 கோடி ரூபாய்தான் 1938-39-ல். இப்போது கம்பெனிக்கு விதிக்கப்படுகின்ற இன்கம் டாக்ஸை நீக்கி, கார்ப்பரேஷன் வரியாக மாற்றியதன் மூலம் மத்திய சர்க்காருக்குக் கிடைப்பது 558 கோடி ரூபாய் ஆகும். இதிலே மாநிலங்களுக்கு ஒரு காசு கூட கிடையாது. ஒரு காசு கூட நமக்குக் கொடுக்கக் கூடாது என்று மத்திய சர்க்கார் திட்டமிட்டு செய்த அரசியல் சதி இது என்பதைத்தான் இந்த மன்றத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அது மட்டுமல்ல. இந்த வருமான வரியென்ற பெரிய காராம் பசு, அது அவர்களுடைய தொழுவத்தில் நிற்க வேண்டுமே தவிர, அது நமக்குப் பால் தந்து விடக்கூடாது என்பதற்கு இன்னும் பல சதிகள்.

[திரு. ஆலடி அருணா] [1974 ஏப்ரல் 16

வருமானத்தின் அடிப்படையிலேயுள்ள கிப்ட் டாக்ஸ், வெல்த் டாக்ஸ், எக்ஸ்பென்டிசர் டாக்ஸ், இத்தனையும் அது வருமான வரியை, உயர்த்தினால் நமக்குப் பங்கு கிடைக்கும் என்பதற்காக வெல்த் டாக்ஸ், கிப்ட் டாக்ஸ், எக்ஸ்பென்டிசர் டாக்ஸ் என்று போட்டு நமக்குப் பங்கேயில்லாத அளவுக்கு மத்திய சர்க்கார் செய்திருக்கிறார்கள்.

அது மட்டுமல்ல. இன்னும் இந்த மன்றத்தில் சொல்ல ஆசைப் படுகின்றேன். ரெயில்வே கட்டணத்தின் மீது வரி. இதனால் மாநிலங்களுக்கு 16½ கோடி ரூபாய் ஒரு வருஷத்திற்குக் கிடைத்தது. கட்டணத்திற்கு வரி. கட்டணத்திற்கு வரி போட்டால் தான் மான்யம் மத்திய சர்க்கார் கொடுக்க வேண்டும். கட்டணத்தையே உயர்த்தி விட்டால், இதில் நமக்குப் பங்கு கிடையாதல்லவா ? இதற்குத் திட்டமிட்ட மத்திய அரசு அந்தக் கட்டணத்தின் மீதுள்ள வரியை ரத்து செய்து, கட்டணத்தையே உயர்த்திக் கொண்டது. ஆனால் இதை மாநிலங்கள் எதிர்த்த வுடன், நீ முன்னால் வாங்கியது 16½ கோடி ரூபாய், அதை வாங்கிக் கொள், புதிதாக உயர்த்தியதிலே கேட்காதே என்று சொல்லி விட்டது.

ஆனால், சட்டப்படி நமக்கு சுமார் 40 கோடி ரூபாய் மான்ய மாகக் கொடுக்கவேண்டும். நான் ஏன் இதைச் சொல்லுகிறே னென்றால், இந்த அளவுக்குத் திட்டமிட்டு நம்முடைய நிதி ஆதா ரங்களை மத்திய சர்க்கார் குந்தகப்படுத்தியிருக்கிறது. அதன் வாயில்களை அடைத்திருக்கிறது. இதனை ராஜமன்னர் குழு மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறது

'This is a glaring instance of a power vested in the Union to be exercised for the sole benefit of the States being used to the detriment of the States.'

என்று ராஜமன்னர் குழு மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறது.

நான் இவைகளைச் சொல்லுகின்றது நியாயத்தின் அடிப்படை யில்தான். இவைகளையெல்லாம் சொல்லுகிறபோது இதை முதலமைச்சர்கள் அனுபவித்தவர்கள், ஒவ்வொரு இலாக்கா அமைச்சர்களும் மத்திய சர்க்காருக்கு எடுத்துப் போகும்போது

இதை அனுபவித்து அனுபவித்து, இந்தத் தொல்லைகளை அனுப வித்து அனுபவித்து நம்மால் எதையும் செய்ய முடியவில்லை, எந்த வொரு முன்னேற்றத்தையும் காணவில்லை, நாம் விரும்பிய அளவுக்கு நாட்டில் மறுமலர்ச்சி காண முடியவில்லை என்ற ஏமாற்றத்தின் காரணமாக, நல்வாழ்வு அளிக்க வேண்டுமென்ற உயர்ந்த நோக்கத்தோடு, இதைச் சொன்னார்கள் என்று நான் இந்த மன்றத்தில் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகின்றேன்.

கர்நாடக மாநிலத்தில் முதலமைச்சராகவிருந்த திரு. வீரேந்திர பட்டீல் அவர்கள் எவ்வளவு ஏமாற்றத்திற்கு ஆளாகி யிருந்தால், இப்படிப்பட்ட ஒரு பயங்கரமான கருத்தைச் சொல்லி யிருப்பார் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

'It is feared, at this rate there may be urgent demands for more autonomy by the States and a day might come when different houses and bhavans of the States in Delhi are constrained to assume the character of embassies.'

மாநில அரசுகள் டெல்லியிலிருக்கின்ற கட்டிடங்கள், பவன்களெல் லாம் வெளிநாட்டு தூதுவரகங்கள் ஆகக்கூடிய அளவுக்கு ஒரு அச்சமாகிக் கொண்டிருக்கிறது. இது நாம் பேசியிருந்தால் கொள்கை வெறியின் காரணமாக இந்த வார்த்தையைக் கொட்டி யிருக்கிறோம் என்று எதிரிகள் பதில் சொல்ல முடியும். ஆனால் காங்கிரஸ் கட்சியின் முதலமைச்சர் இப்படிச் சொல்லியிருக்கிறார். இதயத்திலிருந்து வெடித்துக் கிளம்பியிருக்கிறது காட்டு வெள்ளம் போல் கட்டுப்படுத்த முடியாமல் வெளி வந்திருக்கிறது. எவ்வளவு கொடுமைகள் விளைவிக்கப்பட்டிருந்தால், எவ்வளவு அநீதியிழைக் கப்பட்டிருந்தால், இந்த நிலைமையில் ஒரு முதலமைச்சர் சொல்லி யிருப்பார் என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். இவை களுக்கெல்லாம் பரிகாரம் காணும் வகையில்தான் ராஜமன்னர் குழு பல திருத்தங்களைச் சொல்லியிருக்கிறது. சில விதிகளை நீக்கச் சொல்லியிருக்கிறது. சில விதிகளை மாற்றச் சொல்லியிருக் கிறது. சில விதிகளுக்கு புதிய இணைப்புகள் சொல்லியிருக்கிறது. இவைகளை எண்ணிப் பார்த்தால் நிறைய இருக்கிறது. நூற வரைக்கும் ஏறத்தாழ வருகிறது.

[திரு. ஆலடி அருணா] [1974 ஏப்ரல் 16

நான் இதைச் சொல்வதற்குக் காரணம் அரசியல் சட்டத்தில் இவ்வளவு பெரிய திருத்தங்கள் செய்ய வேண்டிய நியாயத்தை இந்த மன்றத்தில் நாம் வைக்கின்றோம். ஏற்கனவே இரண்டு நாளைக்கு முன்னால் அரசியல் சட்டத்தில் 32-வது திருத்தத்தை நாம் இங்கே நிறைவேற்றி வைத்தோம். 32-வது திருத்தத்தை நிறைவேற்றி வைத்திருக்கிறோம். இன்னும் எத்தனையோ திருத்தங்களை வேண்டுமானால் செய்யலாம். அதை விட என்னுடைய தனிப்பட்ட கருத்தைச் சொல்ல வேண்டுமானால், இது தி.மு. கழகத்தைக் கட்டுப்படுத்தாது, நிச்சயமாக அரசாங்கத்தைக் கட்டுப்படுத்தாது. என் சொந்த அபிப்பிராயமாகச் சொல்லு கிறேன். யாரும் இந்த அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டு மென்று கேட்கத் தேவையில்லை. இன்னும் சொல்லப் போனால் இந்த அரசியல் சட்டத்தில் நூற்றுக்கணக்கான திருத்தங்கள் நம் முடைய நியாயத்தின் அடிப்படையில், நம்முடைய கொள்கையின் அடிப்படையில், நம்முடைய லட்சியத்தின் அடிப்படையில், திருத்தங்கள் நிறைவேற்றப்பட்டால், திருத்தங்களே மூலமாக மாறிவிடும். எனவே திருத்தங்கள் மூலச் சட்டமாக மாறி விடும். எதிர்கால அரசியலில் இருப்பவர்கள் அல்லது சட்டக் கல்லூரி மாணவர்கள், "என்ன புத்திசாலிகள் இப்படிப்பட்ட ஒரு சட்டத்தை நிறைவேற்றியிருக்கிறார்கள்" என்று நம்மை எளனம் செய்யக் கூடாது. நம் அரசியல் நுணுக்கத்தை, நம் சட்ட அறிவை அவர்கள் குறைவாக மதிக்கக் கூடாது.

எனவேதான் அத்தகைய கணிப்பிலிருந்து நாம் தப்பித்துக் கொள்வதற்கு இருக்கின்ற ஒரே மார்க்கம் இந்த அரசியல் சட்டத்தை—என் சொந்தக் கருத்தாகச் சொல்கிறேன்—வங்கக் கடலில் தூக்கி எறிவது தவிர, வேறு வழியில்லை (ஆரவாரம்). என்ன இப்படி அரசியல் சட்டத்தை அவமதிப்பதா? அதை சட்டமன்றத்தில் சொல்லுவதா? நமக்கு அதில் உரிமையில்லை என்பதற்காகச் சொல்லவில்லை. அது நமக்கு நியாயங்களை மறுத்திருக்கிறது என்று சொல்லவில்லை. அது நம்மை இரண்டாம் தர குடிமகனாக்கியிருக்கிறது என்று சொல்லவில்லை. பேரறிஞர் அண்ணா அவர்கள் குறிப்பிட்டதுபோல் நம்மை கையேந்த வைக்கின்றது என்பதற்காக மட்டும் சொல்லவில்லை. அதைவிட முக்கியமான கருத்ததைச் சொல்லுகிறேன்.

1974 ஏப்ரல் 16] [திரு. ஆலடி அருணா]

இந்த அரசியல் சட்டம் மக்களால் ஒப்புக் கொள்ளப்படாத சட்டம். அது என்ன நியாயமாகும்? 1946-ல் அமைக்கப்பட்ட அரசியல் நிர்ணய அவை யாரால் அமைக்கப்பட்டது? வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டு அதனடிப்படையில் உருவாக்கப்பட்ட அரசியல் சட்டமா? அந்த அடிப்படையில் உருவாக்கப்பட்ட அரசியல் நிர்ணய அவையா என்று இவைகளை எண்ணிப் பார்க்க வேண்டும்.

முழுக்க முழுக்க பணக்காரர்கள், நில வரி கட்டியவர்கள், வருமான வரி கட்டியவர்கள், இவர்களைக் கொண்டு சுமார் 263 பேர்கள், பெரிய சமஸ்தானதிபதிகள் 70, 80 பேர். எனவே சமஸ்தானதிபதிகள், மிட்டா மிராசுகள் பரம்பரையைச் சேர்ந்தவர்கள், குட்டி குபேரராக இருந்தவர்கள், பெரும் பணக்காரர்கள் இவர்களெல்லாம் சேர்ந்து இந்தச் சட்டத்தை நிறைவேற்றியிருக்கிறார்கள். இது முழுக்க முழுக்க முதலாளித்துவ சட்டம். இது முழுக்க முழுக்க எகாதிபத்தியத்தின் சட்டம், இது முழுக்க முழுக்க சிறுபான்மையினர் சட்டம்.

---

பெருமதிப்பிற்குரிய திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் அந்தச் சட்டத்தை தொடாதீர்கள், அதன் புனிதத்தைக் கெடுக்காதீர்கள் என்று தொழிலாளிக்கு உரிமை கேட்கின்ற பெருமதிப்பிற்குரிய திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் இங்கே ஒரு திருத்தத்தைக் கொடுக்கிறார்கள். ஆனால் அந்தச் சட்டம் எப்படிப் பட்டது என்பதை நான் மட்டும் சொல்லவில்லை. அரசியல் சட்ட நிபுணர்கள் அதைத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள்.

"The Indian Constitution was ratified by an Assembly representing a minority of the population a quarter of whose members were not even elected but claimed their seats by feudal right"

பிரபுத்துவ அடிப்படையில் வரி கட்டி, இன்கம் டாக்ஸ் வரி கட்டி, அவர்கள் மூலம் ஓட்டுப் போட்டு வந்தவர்களால் இயற்றப்பட்ட அந்தச் சட்டத்தை மதிக்க வேண்டுமா? இந்தச் சட்டத்திற்கு இன்னும் மரியாதை கொடுக்க வேண்டுமா? எனவேதான் அந்தச் சட்டம் முழுக்க முழுக்க முதலாளித்துவச் சட்டமாக இருப்பதனால்

[திரு. ஆலடி அருணா] [1974 ஏப்ரல் 16

அதற்கொரு திருத்தம் கொடுப்பதை விட்டு, இன்னொரு புதிய அரசியல் சட்டத்தைக் கொண்டு வருவது சாலப் பொருத்தமாகும். அதை ஒரு பெரிய பிரச்சனை அடிப்படையில் நம் அரசாங்கத்தின் கொள்கை அடிப்படையில், இந்தத் திருத்தங்களையாவது நீங்கள் ஒத்துக் கொள்ளுங்கள் என்று நாம் வற்புறுத்திக் கேட்கிறோம்.

ஆகவே மாநில சுயாட்சி என்று சொன்னால் சிலருக்குக் கோபம். இவர்கள் பிரிவினை வாதிகள், நாட்டைத் துண்டாட இருப்பவர்கள், இவர்கள் பிரிவினை வாதத்திற்கு இப்படிப்பட்ட ஒரு புதிய போர்வை போர்த்துகிறார்கள் என்று சொன்னார்கள். நான் எதிர்க் கட்சி நண்பர்களுக்கு தலைவர் மூலம் மிகத் தெளிவாகச் சொல்லுகி றேன். நீங்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பற்றி, அண்ணாவின் தம்பிகளைப்பற்றி இப்படித்தான் ஒவ்வொரு கட்டத் திலும் தவறாகக் கணக்குப் போடுகிறீர்கள்.

நாங்கள் சுயமரியாதைக் கொள்கை என்று சொன்னோம். மதத்தின் பெயரால் ஆதிக்கமென்று சொன்னோம். உடனே சொன்னீர்கள் இவர்களுக்கு ஓட்டுப் போடாதீர்கள். இவர்கள் வந்தால் கோவிலை இடிப்பார்கள் என்று சொன்னீர்கள். நாங்கள் கோவிலில் குடமுழுக்கு நடத்துவது என்றவுடன், பார்த்தீர்களா, பார்த்தீர்களா, இவர்களுக்குக் கொள்கை கிடையாது, குடமுழுக்கு என்று சொல்லுகிறார்கள் என்றீர்கள்.

அதே அடிப்படையில்தான் தி.மு.க. ஆட்சிக்கு வருமானால் தமிழ் நாட்டிலே இருக்கிற மார்வாடிகள், குஜராத்திகள், வட நாட்டுக்காரர்கள் வேறு வகுப்பார்களெல்லாம் வெளியேற்றப் படுவார்கள் என்று திட்டமிட்ட பொய்யைச் சொல்லி வந்தீர்கள். அவர்களெல்லாம் எவ்வளவு நிம்மதியாக, சுகமாக இந்த ஆட்சியில் வாழ்கிறார்கள் என்பதை நாம் ஆட்சிக்கு வந்த பிறகு காண்கிறோம்.

இப்பொழுது பிரிவினை வாதத்தைத் தூண்டுகிறது என்று சொல்லுகிறீர்கள். பேரறிஞர் அண்ணா அவர்கள் அரசியல் நாணயத்திற்கு எவ்வளவு தன்னிகர் அற்றவர், தலை சிறந்தவர் என்பது உங்களுக்குத் தெரியும். லட்சக்கணக்கான மக்கள்,

1974 ஏப்ரல் 16] [திரு. ஆலடி அருணா]

இளைஞர்கள் சிறைக்குப் போவதற்குத் தயாராக எழுதிக் கொடுத்திருந்தாலும் கூட, திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் அந்த உணர்ச்சிகளுக்கு மதிப்பளித்து விட்டு, அதை விட அரசு பெரிது, அதை விட நாடு பெரிது என்ற அடிப்படையில் 1962-ல் பிரிவினைக் கொள்கையைக் கைவிட்டார்கள். நான் இங்கிருக்கிற—இந்திய தேசீய ஒருமைப்பாட்டின் பேரால் பேசுகின்ற—நண்பர்களைக் கேட்கிறேன். ஒரு பெரிய சக்தி—தமிழ் மக்களுக்கு ஆதாரமாக இருக்கிற சக்தி—ஆசானாக இருக்கிற சக்தி—அறிஞர் அண்ணா அவர்கள் அன்றைக்குப் பிரிவினைக் கொள்கையைக் கைவிட்டுவிட்டேன் என்று சொன்னார்களே—காங்கிரஸ்காரர்கள் யாராவது முன்வந்து பாராட்டினார்களா? அண்ணல் காந்தியார் அவர்கள் உயிரோடு இருந்திருந்தால்—பிரிவினைக் கொள்கையைக் கைவிட்டேன் என்று சொன்ன மாபெரும் தலைவரை—நடந்து வந்தால் காலதாமதம் ஆகும் என்று விமானத்தில் வந்து பாராட்டி, அணைத்துக் கட்டித் தழுவி முத்தமிட்டிருப்பார்.

சுதந்திர பாகிஸ்தான் தனக்குத் தேவையில்லை என்று 1941-இல் ஜின்னா அவர்கள் அறிவித்தவுடன் கடவுளே நாட்டைக் காப்பாற்றினார் என்று பாராட்டினார்கள். தனி பாகிஸ்தான் என்பதன் மூலம் இந்தியா உடைந்துவிடக்கூடாது என்பதற்காக ஜின்னாவைப் பாராட்டினார்கள்.

அப்படி தேசீய ஒருமைப்பாட்டில் காங்கிரஸ்காரர்களுக்கு உண்மையாக நம்பிக்கையிருந்திருந்தால், அண்ணா பிரிவினைக் கொள்கையைக் கைவிட்டேன் என்று சொன்னவுடன்—அடுத்த நிமிஷத்தில் அண்ணாவுக்கு நன்றி செலுத்தியிருக்க வேண்டும்.

அந்த நன்றியை மறந்தவர்கள்—அரசியல் நாகரீகத்தை இழந்தவர்கள்—இன்றைக்குத் தேசீய ஒருமைப்பாட்டின் காரணமாக—பிரபுத்துவ—ஏகாதிபத்திய ஆட்சியைத் தொடர்ந்து செலுத்திக் கொண்டிருக்கலாம் என்று கனவு கண்டு கொண்டிருக்கிறார்கள். தமிழ் மக்கள்—பிற மாநிலங்களில் இருக்கிற மக்கள்—நிச்சயமாக ஏமாளிகளாக இருக்கமாட்டார்கள் என்பதை நான் இந்த நேரத்தில் தெரிவித்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

## மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னர் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[திரு. ஆலடி அருணா] [1974 ஏப்ரல் 16

நம்மையே நம்பியிருக்கிற மக்களுக்கு வாழ்வளிக்க—திறமை மிக்க நமது முதலமைச்சர்—டாக்டர் கலைஞர் அவர்கள் அயராத உழைப்புக்கும்—தீவிர—உடனடி நடவடிக்கைகளுக்கும்—தெளிவான சிந்தனைக்கும் பெயர் பெற்றவர்கள். பேரறிஞர் அண்ணா அவர்கள் மிக்க திறமைசாலி—காமராசர் அவர்கள் தியாகத்திற்குப் பெயர் பெற்றவர்—ராஜாஜி அவர்கள் ராஜதந்திரத்தில் பெயர் பெற்றவர்—ஓ. பி. இராமசாமி ரெட்டியார் அவர்கள் எளிமையின் சின்னமாக விளங்கி—விவசாயிகளின் நன்மையையே கருத்தில் கொண்டவர்—தியாகத்தின் சின்னமாக—எளிமையின் உருவமாக—திறமையின் எடுத்துக்காட்டாக—தெளிவாகத் தீவிர நடவடிக்கைகளுக்கு ஆதாரமாக இருக்கக்கூடிய இவர்கள் எல்லாம் இந்த மாநிலத்தின் முதலமைச்சராக இருந்திருக்கிறார்கள். ஆனாலும்—இவர்களாலும்—இவர்கள் எந்த அளவுக்கு முன்னேற்றமடையச் செய்யவேண்டும் என்று நினைத்தார்களோ அந்த அளவுக்கு இந்த நாட்டை முன்னேற்றம் அடையச் செய்ய முடியவில்லை. நாம் ஆசைப்படுகிற அளவுக்கு முன்னேற முடியவில்லை. காரணம் மத்திய சர்க்காரிடம் அதிகாரங்கள் குவிந்து கிடக்கின்றன—நம்மால் ஒன்றும் செய்ய முடியவில்லை—என்பதை அரசியல் உணர்வோடு மட்டும் சொல்லவில்லை. நியாய உணர்வோடு சொல்கிறேன்.

இந்தச் சந்தர்ப்பத்தில் ஒன்றைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். திராவிட முன்னேற்றக் கழகம் இந்தக் கொள்கையை கட்சிக் கண்ணோட்டத்தோடு பார்க்காமல் நடுநிலைமையோடு—நியாய உணர்வோடு—நீதி உணர்வோடு அணுகுகிற காரணத்தினால் தான் ராஜமன்னர் தலைமையில் இதுபற்றி ஆராய ஒரு குழுவை அமைத்ததே தவிர—கட்சி உணர்வோடு செயல்பட்டிருந்தால்—கட்சியிலேயே பல வழக்கறிஞர்கள் இருக்கிறார்கள்—அவர்களைக் கொண்டே ஒரு குழுவை அமைத்திருக்கலாம்—இன்னும் எத்தனையோ புரட்சிகரமான கருத்துக்களை எல்லாம் கூட எங்கள் கட்சியில் உள்ளவர்கள் தெரிவித்திருப்பார்கள். அதைத் திராவிட முன்னேற்றக் கழகம் விரும்பவில்லை.

1974 ஏப்ரல் 16] [திரு. ஆலடி அருணா]

தேசிய ஒருமைப்பாட்டுக்குக் குந்தகம் இல்லாத கருத்தை—நீதி நடுநிலை தவறாத கருத்தை—மாநிலங்களின் வளர்ச்சிக்கேற்ற நுணுக்கமான கருத்தை—நீதி உள்ளம் படைத்த கருத்தை மக்கள் மத்தியில் வைக்க வேண்டும் என்றே ராஜமன்னர் குழுவை அமைத்தது. நீதி மன்றத்திலே பல காலம் பணிபுரிந்த அவர்கள்—நடுநிலை தவறாத உயர்ந்த பெரியார்கள்—இந்தப் பிரச்சினைகளை அலசி ஆராய்ந்து—அரசியல் சட்டத்தைத் திருத்தியாக வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள்.

எதிர்க்கட்சியில் இருக்கிற அருமை நண்பர்கள் இருக்கிறதை வைத்து ஓட்டினால் போதும் என்ற கருத்தைத் தெரிவித்தார்கள். காங்கிரஸ்காரர்கள் அப்படிச் சொன்னால் ஆச்சரியப்படுவதற்கில்லை. பெருமை மிக்க எனது நல்லெண்ணத்திற்கு உரியவரான திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் அப்படிச் சொல்லியிருப்பதுதான் ஆச்சரியமாக இருக்கிறது. காரணம், அவர்கள் கார்ல் மார்க்ஸ் தத்துவங்களில் நம்பிக்கை உள்ளவர்கள். உலகம் எல்லாம் ருஷ்யாபோல இருக்கவேண்டுமென்பதில் ஆசை உடையவர்கள்.

நான் கடந்த ஆண்டு ருஷ்யா சென்றிருந்தேன். சில நகரங்களை நேரில் பார்வையிட்டேன். தாஷ்கண்டாக இருந்தாலும், லெனின்கிராடாக இருந்தாலும், மாஸ்கோவாக இருந்தாலும், தீவு நகரமாக இருந்தாலும்—நான் பார்த்த நகரங்களில் எல்லாம்—ருஷ்யாவில் உள்ள 15 குடியரசுகளின் கொடிகளும் ஒருசேரப் பறக்கவிட்டிருப்பதைப் பார்த்தேன். க்ரெம்லின் மாளிகைக்கு முன்னால் யு.எஸ்.எஸ்.ஆர். கொடி மட்டுமல்ல—15 குடியரசுகளின் கொடிகளும் பறந்து கொண்டிருக்கின்றன.

இதை ஏன் சொல்கிறேன் என்றால் நம் மாநிலத்திற்குத் தனிக் கொடி வேண்டுமென்று சில ஆண்டுகளுக்கு முன்னால் சொன்னோம். அவ்வளவுதான். சிலர் கொடி தூக்க ஆரம்பித்தார்கள். கம்யூனிஸ்டுக் கட்சி கூடச் சேர்ந்து கொடி தூக்க ஆரம்பித்தது. எந்த சோவியத் பூமியில்—எல்லாக் குடியரசுகளும் மதிக்கப்படு

கின்றனவோ—எல்லா அதிகாரங்களும் மாநிலங்களுக்கு வழங்கப்பட்டு எந்த அளவுக்கு சுயாட்சி மதிக்கப்படுகின்றதோ—அந்த நாட்டின் அரசியல் கொள்கையைப் பின்பற்றுகிற இவர்கள் அந்தத் தத்துவங்களுக்கு இங்கே எதிர்ப்புத் தெரிவித்தார்கள்.

இன்னும் சொல்லப் போனல் சோவியத் அரசியல் சட்டத்தில் 16-வது பிரிவுப்படி ஒவ்வொரு குடியரசும் ஒவ்வொரு அரசியல் சட்டத்தை வைத்துக்கொள்ள உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆர்டிகிள் 16-ல்—

"Each constituent republic shall have its own Constitution, which shall take into account the peculiarities of the republic and be drawn up in full conformity with the Constitution of the U.S.S.R."

என்று அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அதுமட்டுமல்ல. ஆர்டிகிள் 17-ல்

"The right freely to secede from the U.S.S.R. is reserved to each constituent Republic".

என்று சோவியத் குடியரசில் இருந்து பிரிந்து போவதற்கு எந்தக் குடியரசு விரும்பினலும் அந்தக் குடியரசுக்கு அந்த உரிமை உண்டு என்று சொல்லியிருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட ஆட்சியுள்ள நாட்டின் கொள்கையைப் பின்பற்றுகிறவர்கள் இங்கே அரசியல் சட்டத்தைத் திருத்தாதீர்கள் என்று சொல்கிறார்கள் என்றால் அரசியல் காழ்ப்பின் காரணமாகச் சொல்கிறார்களே தவிர வேறல்ல.

எதிர்க்கட்சிக்காரர்களுக்கு எங்கள் மீது கோபம் இருக்கலாம்—எங்கள் மீது வேகம் இருக்கலாம்—எங்கள் மீது கசப்பான உணர்ச்சிகள் இருக்கலாம். அதை அரசியல் ரீதியாகச் சந்தியுங்கள். இந்தியத் துணைக் கண்டத்தில் இருக்கிற மக்களுக்கு—தமிழகத்தில் இருக்கிற 4½ கோடி மக்களின் நல்வாழ்வுக்காக அமைக்க விரும்புகிற நல்ல திட்டத்தை—அரசியல் காழ்ப்புணர்ச்சியோடு அணுகாதீர்கள், அரசியலுக்கு அப்பாற்பட்ட சிந்தனையோடு இதை அணுகுங்கள் என்று கேட்டுக்கொள்கிறேன்.

1974 ஏப்ரல் 16] [திரு. ஆலடி அருணா]

டாக்டர் கலைஞர் அவர்களால் முன்மொழியப்பட்ட இந்த நல்ல தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்படுமானால் பத்து ஆண்டு களில் கிடைக்கக் கூடிய மாநில சுயாட்சி ஐந்து ஆண்டுகளுக்கு முன்னரேயே கிடைக்கக்கூடும். வேறுபட்ட எண்ணங்களால், மாறுபட்ட எண்ணங்களால் இது எதிர்க்கப்படுமானால் பத்து ஆண்டுகளில் கிடைக்கக்கூடிய மாநில சுயாட்சி கிடைப்பதற்கு 15 ஆண்டுகள் நீடிக்கப்பட்டுவிடலாம். நீடிக்கப்பட்டுவிடலாம் என்று சொன்னேனே தவிர—நிந்திக்கப்பட்டுவிடலாம் என்று சொல்லவில்லை—நிச்சயமாக நீங்கள் ஆதரித்தாலும் ஆதரிக்கா விட்டாலும், புகழ்ந்தாலும், இகழ்ந்து கேவலமாகப் பேசினாலும் இதை நிந்தித்துவிட முடியாது—நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை அவர்கள் சொன்னதுபோல—

கத்தியின்றி ரத்தமின்றி யுத்தமொன்று வருகுது.

சத்தியத்தை நம்புகின்ற அத்தனை பேரும் இதில் சேருங்கள்—என்ற கோஷத்தைப் போட்டு, இந்தத் தீர்மானத்தை நான் ஆதரிக்கின்றேன். நன்றி.

* **திரு. பெ. சீனிவாசன் :** பேரவைத் தலைவர் அவர்களே, எனக்கு முன்னால் தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய எனது அருமை நண்பர் திரு. ஆலடி அருணா அவர்கள் ஏதோ மிகப் பெரிய யுத்தத் திற்கு இங்கே அச்சாரம் போடுவது போல யுத்தம் வருகிறது, யுத்தம் வருகிறது என்று பறை சாற்றி அமர்ந்தார்கள்.

இவ்வளவு பெரிய சூடான விவாதத்தைக் கிளப்புவதற்குக் காரணமாக இருப்பது இந்திய நாட்டின் அரசியல் சட்டம் தான். உலகத்திலுள்ள பல மேதைகளாலும் கூட இன்றைக்கு நம்முடைய இந்திய அரசியல் சட்டத்தை ஆராய்ந்து—யூனிடரி கவர்ன் மெண்டா அல்லது பெடரல் கவர்ன்மெண்டா என்று முடிவு கட்ட முடியவில்லை.

எங்களைப்போன்ற சட்டக் கல்லூரி மாணவர்களுக்கு இந்திய அரசியல் சட்டம் நைட்மேர். படிக்கின்றபோது முதல் பக்கத் திற்கும் மூன்றும் பக்கத்திற்கும் முரண்பாடு இருப்பதுபோலத்

தோன்றும். படித்து பரீட்சை எழுதுகிறபோது என்ன இப்படி முன்னுக்குப் பின் முரணாக எழுதுகிறோம்போல இருக்கிறதே என்கிற எண்ணத்தைக் கொடுக்கும்.

அது ஏதோ ஒரு சூழ்நிலையில் 1947-க்கு முன்னால் இருந்த இந்திய சமுதாயத்தின் தீமைகளை எல்லாம் பத்திரமாகப் பாது காக்க வேண்டும் என்கிற அடிப்படையில் தயாரிக்கப்பட்ட அரசியல் சட்டம் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

அரசியல் சட்டத்தை இயற்றிய நிபுணர்கள்—டாக்டர் அம்பேத் கார்—அல்லாடி கிருஷ்ணசாமி போன்ற வழக்கறிஞர்கள் இருந் தார்கள். டாக்டர் அம்பேத்கார் அவர்களே இதைக் கிழித்துத் தூரப் போடுங்கள் என்று சொல்லியிருக்கிறார். இன்னும் கூட— ஆலடி அருணா வங்கக் கடலில் போடச் சொன்னார்—போட்டாலும் திரும்பி வந்துவிடும் என்றோ—டாக்டர் அம்பேத்கார் அதை நெருப்பில் போட்டுப் பொசுக்குங்கள் என்று சொன்னார். சுதந் திரம் வருவதற்கு முன்னால் இந்த நாட்டில் இருந்த மிராசு தாரர்கள், இந்த நாட்டில் இருந்த மன்னர்கள், சாதி வேறுபாடுகள் —மதக் கொடுமைகள் ஆகிய தீமைகள் எல்லாவற்றையும் அப்படியே காப்பாற்றித் தீர வேண்டும் என்ற ராஜதந்திரத்தோடு இயற்றப்பட்டதுதான் நமது அரசியல் சட்டம்.

அரசியல் சட்டத்தின் ஆரம்பமே அதிர்ச்சி தரக்கூடிய வாக்கியமாகத்தான் இருக்கிறது. சின்னஞ்சிறிய நாடுகளில் எல்லாம் கூட—ஒரு நாடு என்றால் அதற்கு ஒரு பெயர் இருக்கும். நமக்கு நம் பெயரிலேயே சந்தேகம். அரசியல் சட்டம் ஆரம் பிக்கப்பட்டபோதே, India that is Bharat இது யூனிட்டரியா பெடரலா—யூனிட்டரியாகவும் எடுத்துக் கொள்ளலாம், பெடர லாகவும் எடுத்துக் கொள்ளலாம்—ஆட்சி மொழி ஒன்றா, இரண்டா? அதுவும் இருக்கலாம், இதுவும் இருக்கலாம். ஆகவே, நமது அரசியல் சட்டமே ரொம்பவும் வேடிக்கையான சட்டம். எல்லோருடைய Political Convenience எவ்வளவு பெரிய அரசியல்வாதியும் அவருடைய நாவன்மைக் கேற்றவாறு அரசியல் சட்டத்தினை வளைக்கக்கூடிய அளவு என்று கூடச் சொல்ல ஆசைப் படுகிறேன்.

1974 ஏப்ரல் 16] [திரு. பெ. சீனிவாசன்]

(முற்பகல் 11.30)

அந்த அளவுக்கு அரசியல் சட்டம் குழப்பம் மிகுந்த அரசியல் சட்டமாக, ஏதோ ஒரு சூழ்நிலையில், பெரிய பெரிய அறிஞர்கள் எல்லாம் சொல்வதைப் போல், பேரறிஞர் அண்ணா அவர்கள் சொன்னதைப்போல், இந்த அரசியல் சட்டம் ஒரு காலக் கட்டத்தில், நாட்டு மக்களுடைய கவனமெல்லாம் அரசியல் சட்டத்தின் மேல் திரும்பாத சூழ்நிலையில், நாடெல்லாம் திருவிழாக் கொண்டிருந்த நேரத்தில், இயற்றப்பட்டது. இந்தச் சட்டத்தைத் திருத்தலாம், அல்லது முழுவதையும் திரும்பப் பெற்று மாற்றலாம். அதிலே எங்கள் கட்சியைப் பொறுத்தவரையில் எந்தவிதமான மாறுபட்ட கருத்தும் இல்லை.

இன்றைக்கு, இங்கே கொடுக்கப்பட்டிருக்கிற இராஜமன்னார் குழு அறிக்கையையும், அதை யொட்டி, நம்முடைய முதலமைச்சர் அவர்கள் தெரிவித்துள்ள தீர்மானத்தைப் பற்றியும் நான் எனது கட்சியின் கருத்துக்களை இங்கே சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இரண்டு, மூன்று நாட்களுக்கு முன்னாலே கோகலே மண்டபத்தில் நடந்த கூட்டத்தில், மணவழகர் மன்ற விழாவில் நம்முடைய மாண்புமிகு அமைச்சர் இராமச்சந்திரன் அவர்கள், இந்த மாநில சுயாட்சியிலேகூட, இன்னொரு படி மேலே போய், three tier Government இருக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். நம்முடைய முதலமைச்சர் அவர்கள் உள்ளப் பாங்கிலே அமைந்திருக்கின்ற தீர்மானத்தில் Two tier Government இருக்கவேண்டுமென்று இருக்கிறது. ஆனால், நம்முடைய அமைச்சர் அவர்கள் மாநிலத்திற்குக் கீழேயும் சுயாட்சி, அல்லது மாநிலங்களுக்குக் கீழே இருக்கிற உள்ளாட்சிகளுக்கும் உரிமைகள் வேண்டுமென்று கூறியிருக்கிறார். ஒருவேளை, அப்படிப்பட்ட நிலைமை அமைச்சரவையிலே கூட இருக்கிறதோ என்ற சந்தேகம் எனக்கிருக்கிறது.

கொஞ்ச நாட்களுக்கு முன்னாலே, நம்முடைய அமைச்சர் அம்மையார் அவர்கள் சொன்னார்கள், நான் சொல்கிற ஆணைகளை அதிகாரிகள் நிறைவேற்றுவதில்லை என்று, (குறுக்கீடு) இன்றைக்கு

[திரு. பெ. சீனிவாசன்] [1974 ஏப்ரல் 16

இந்த அறிக்கையை இங்கே கொடுத்திருக்கிறார்கள். இந்த அறிக்கையில் இருப்பதை, கொள்கை அடிப்படையில், அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் எதிர்க்கவில்லை. ஆனால், பயன்படுத்தப்பட்ட மாநில சுயாட்சி என்ற வார்த்தை, அறிஞர் அண்ணா அவர்கள் சொன்னதைப் போல், அதிக அதிகாரங்கள் வேண்டுமென்ற அந்த அடிப்படையில் கேட்டிருந்தால், நாங்கள் முழுக்க முழுக்க ஆதரிக்கிறோம்.

ஆனால், மாநில சுயாட்சியைக் கேட்டிருக்கிற முறைகள், கேட்டிருக்கிற இடம், கேட்டிருக்கிற காலம் இவற்றையெல்லாம் எண்ணிப் பார்க்கிற நேரத்தில், எங்களுடைய உள்ளத்திலே இருக்கிற ஐயப்பாடுகளை இங்கே தெரிவிக்க விரும்புகிறேன்.

நம்முடைய மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் திருக்குறளிலே வல்லுநர். இடம், பொருள், காலம் தெரிந்துதான் பகையைச் சந்திக்க வேண்டுமென்ற வள்ளுவர் குறளைப் பல தடவை அவர் பேச நான் கேட்டிருக்கிறேன்.

கடந்த முறை, ஜனாதிபதி தேர்தல் நடந்த நேரத்தில், நமது பிரதம அமைச்சர் அவர்கள் சொன்ன கருத்து என்னுடைய நினைவிற்கு வருகிறது. அன்றைக்குக் கட்சிக் கட்டுப்பாட்டை மீறி ஒரு வேட்பாளர் நிறுத்தப்பட்ட நேரத்தில், பிரபலமான ஒரு வார்த்தை பயன்படுத்தப்பட்டது, மனசாட்சி என்பது. அன்றைக்கும் அந்த வார்த்தை ஏற்றுக்கொள்ளப்பட்டது. அன்றைக்கு தி. மு. கழகம் நாங்கள் உட்பட, அத்தனைபேரும் அந்த வார்த்தைக்கு வாக்களித்தோம். ஆக, அந்த நேரத்தில் நம்முடைய பிரதம அமைச்சர் அவர்கள் தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக, அல்லது தன்னுடைய நிலையிலே இருந்து பார்த்து, ஒரு கட்சியின் கட்டுப்பாட்டை விட மனசாட்சிதான் முக்கியம் என்ற அந்தத் தத்துவத்தைச் சொன்னார்கள். ஒரு நெருக்கடியிலிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ள அந்தத் தத்துவத்தைச் சொன்னார்கள்.

நம்முடைய முதலமைச்சர் அவர்கள் இன்றைக்கு மக்கள் மத்தியில் பலவீனம் அடைகின்ற ஆளுங் கட்சியின் செல்வாக்கை எப்படியும் மீண்டும் கொண்டுவருகிற வரையில், நாட்டு மக்களின்

கவனத்தை வேறு பக்கத்திலே திருப்புவதற்காக, இருக்கிற பிரச்சனைகளைச் சமாளிக்காமல், இந்த மாநில சுயாட்சி என்ற தத்துவத்தைப் பயன்படுத்துகிறார்களோ என்று நான் உள்ளபடியே ஐயப்படுகிறேன்.

இப்படி மாநில சுயாட்சி என்ற கொள்கையை எடுத்து விளக்கு கிற இந்த நேரத்தில் உள்ளபடியே இந்தக் கட்சியின் பின்னணியில் 1969-ம் ஆண்டிலிருந்து இதுவரை முதலமைச்சரவர்களும் அவருடைய கட்சியைச் சேர்ந்தவர்களும் பேசிய பேச்சுக்களும், மாநாடுகளிலே வெளியிடப்பட்ட சில கருத்துக்களும், அவற்றிலே செய்யப்பட்ட சில விளம்பரங்களும் எதைக் குறிக்கின்றன என்று நான் இங்கே சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

இராஜபாளையம் தி. மு. க. மாநாட்டில் வெளிப்படையாக மாநில சுயாட்சி இல்லாவிட்டால் பிரிவினைதான் வரும் என்ற கருத்து உரத்த குரலிலே பிரபல பேச்சாளரால் வலியுறுத்தப் பட்டு, அயல் நாட்டுப் பத்திரிகைகளில் செய்தி வெளியிடப்பட்டு, அகில இந்தியா முழுவதிலும் மிகப் பிரபலமாக விமர்சிக்கப் பட்டது. (குறுக்கீடு) அந்த மாநாட்டுக்குப் போகிற பாதையில் முஜிபுர் ரகுமான் படமும் முதலமைச்சர் படமும் பெரிய அளவிலே வைக்கப்பட்டு, இந்த மாநில சுயாட்சி என்பது பிரிவினைக்கு அடிப்படைதான், முதல் கட்டம்தான் என்கிற பொருள் தொனிக்கும் வகையில் அன்றைக்கு விளம்பரம் செய்யப்பட்டது.

உள்ளபடியே அண்ணாவின் வழியில்தான் கேட்கிறார்கள் என்றால், முஜிபுர் ரகுமான் இருந்திருக்கிற இடத்தில் அண்ணாவி னுடைய படம்தான் இருந்திருக்க வேண்டும். ஆனால், அன்றைக்கு மாநாட்டில் வெளியே செய்யப்பட்டிருந்த விளம்பரங்களும், உள்ளே பேசிய பேச்சுக்களின் தோற்றமும் பிரிவினை கேட்பது என்ற தொனியில் அமைந்தது என்பதை யாரும் மறந்துவிட முடியாது.

சமீபத்தில் பாம்பன் பாலத்தைத் திறக்க நம்முடைய பிரதம அமைச்சர் அவர்கள் வந்த நேரத்தில், அதற்கு முதல் நாளோ, இரண்டு நாள் முன்னதாகவோ, முதலமைச்சரவர்கள் மதுரையிலே

ஒரு கூட்டத்தில் பேசும்போது குறிப்பிட்டார்கள், ஒன்றாக இருந்த இந்தியா, காங்கிரஸ்காரர்களுடைய பிடிவாதத்தால் இரண்டாக ஆனது. பிறகு பூட்டோவினுடைய பிடிவாதத்தால் மூன்றாக ஆனது. நான் அதற்குமேல் சொல்லமாட்டேன், என்று சூசகமாக, மறைமுகமாக ஒரு எச்சரிக்கை விடுத்தார்கள். அதுவும், தமிழ் நாட்டுக்குப் பிரதம அமைச்சர் அவர்கள் வருகின்ற நேரத்தில் அந்த எச்சரிக்கையை விடுத்தார்கள்.

ஆக, இந்தச் சம்பவங்களால், கருத்துக்களால், நம்முடைய அமைச்சர்களும், ஆளுங்கட்சியைச் சேர்ந்த பேச்சாளர்களும் எழுத்தாளர்களும் வெளிப்படுத்துகின்ற கருத்துக்களால், இன்றைக்கு நம்முடைய மாநிலம் மாத்திரமல்லாமல், அகில இந்தியா முழுவதிலும் மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் வேண்டுமென்று சொல்பவர்கள்கூட, நம்முடைய முதலமைச்சரவர்கள் மூலமாக எழுப்பப்படுகிற நேரத்தில், இந்தக் கோரிக்கைக்குப் பின்னால், பிரிவினைக் கோரிக்கை ஒளிந்து கொண்டிருக்கிறதோ என்று நியாயமாக அவர்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள் . . .

**திரு. கு. பெரியசாமி :** தலைவர் அவர்களே, எங்களுடைய திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய கோரிக்கைக்குப் பின்னால் பிரிவினை நோக்கம் ஒளிந்து கொண்டிருக்கிறதோ என்ற ஐயப்பாட்டினை மாண்புமிகு உறுப்பினர் அவர்கள் சொன்னார்கள். மதுரை மாநாட்டிலே, இந்த மாநில சுயாட்சிக்கு இணங்காவிட்டால், இராணுவத்தைச் சந்திக்கத் தயாராக இருக்கிறேன் என்று அவருடைய கட்சித் தலைவர் சொல்லியிருக்கிறாரே, அதுபற்றி அவருடைய கொள்கை என்ன என்பதைத் தெரிவிப்பாரா ?

**திரு. பெ. சீனிவாசன் :** நான் அதைப்பற்றி இன்னும் விளக்குவதானால் உங்களுடைய கட்சியே மிக நெருக்கடிக்குள்ளாக வேண்டி வரும், ஆகவே, வேண்டாம்.

ஆக, இந்தக் கோரிக்கையின் அடிப்படையில் இன்றைக்கு இங்கே ஆலடி அருணா அவர்கள்கூடப் பேசினார்கள். இது ஏதோ மிகப் பெரிய யுத்தம் என்றும், இதைச் சந்திக்கத் தயார் என்றும்,

இது பல ஆண்டுக் காலம் நடக்கும் என்றும், ஆனால் இறுதி வெற்றி நமக்குத்தான் என்றும், அயல் நாட்டைச் சந்திக்கின்ற பாணியிலே அவர்கள் பேசினார்கள்.

ஆனால், உள்ளபடியே இன்றைக்கு மாநிலத்திற்குக் கொடுத்திருக்கிற அதிகாரங்களை அவர்கள் சரியாகப் பயன்படுத்துகிறார்களா என்று கேட்க நமக்கு உரிமை இருக்கிறது.

உதாரணமாக, சட்டத் துறை, போலீஸ் நிர்வாகம்—நமது அரசாங்கம் ஆளுகின்ற அரசாங்கப் பாதுகாப்பிற்காக, எதிர்க்கட்சிகளை அடக்குவதற்காக இவற்றை முழுக்க முழுக்கப் பயன்படுத்துகிறார்கள். அதிகாரத்திலிருப்பவர்கள் தங்கள்மேல் கேள்விக் கணைகள் எழுப்பப்படுகின்ற நேரத்தில், தங்களுக்கு எதிர்ப்பு வருகின்ற நேரத்தில் கேள்விக் கணைகளுக்குப் பதில் சொல்லாமல், மக்களுடைய கவனத்தைத் திருப்பிவிட, இப்படிப்பட்ட சுலோகங்களை, உரத்த குரலில் எழுப்புகிறார்கள் என்பதுதான் என்னுடைய கருத்து.

இதே மாநில சுயாட்சியைப்பற்றி இராஜமன்னார் குழு அறிக்கை 1971-ல் தரப்பட்டிருக்கிறது. 1971-ல் தரப்பட்ட அறிக்கைமேல் அறிக்கை தர தி.மு. கழகத்தின் சார்பில் இன்னொரு கமிட்டி. இது அதைவிட சூப்பீரியர் கமிட்டியா என்ன என்பது எனக்குத் தெரியவில்லை. அதனுடைய அறிக்கைக்கும் இந்தச் சட்டமன்றத்திற்கும் சம்பந்தமே இல்லை. ஆனால் அரசாங்கச் செலவில் நியமிக்கப்பட்ட இராஜமன்னார் கமிட்டி அறிக்கை 1971-ல் வெளியிடப்பட்டது. அந்த அறிக்கையின் மீது இந்த விவாதத்தைத் தள்ளிப் போட வேண்டிய அவசியம் நம்முடைய மாநில சர்க்காருக்கு எப்படி ஏற்பட்டது என்பதுதான் என்னுடைய சந்தேகம்.

1971-க்குப் பின்னாலே அதற்கென்று ஒரு அகில இந்திய மாநாடு நடத்துவதற்கும் முயற்சி எடுக்கப்படவில்லை. அல்லது பிற மாநில முதலமைச்சர்களைச் சந்தித்து, அதைப்பற்றி உரையாடி,

அவர்கள் இக்கருத்தை ஏற்றுக்கொள்கின்ற முயற்சிகளையும் ஆளுகின்ற கட்சியோ அல்லது முதலமைச்சர் அவர்களோ, அல்லது ஏனைய அமைச்சர்களோ எடுத்துக்கொள்ளவில்லை.

ஆனால் இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னால் இந்தத் தீர்மானத்தை இங்கே கொண்டு வந்திருக்கிறார்கள், நாங்கள் குற்றஞ் சாட்டுகிறோம். திண்டுக்கல் தேர்தலுக்குப் பின்னால் அல்லது அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் வளர்ச்சிக்குப் பின்னால், கோயம்புத்தூர் தேர்தல் முடிவு தெரிந்ததற்குப் பின்னால், பாண்டிச்சேரி தேர்தல்கள் முடிவு தெரிந்ததற்குப் பின்னால், மக்களுடைய செல்வாக்கு அடியோடு போய்விட்டது என்ற உண்மையை உணர்ந்ததற்குப் பின்னால் திராவிட முன்னேற்றக் கழகம் அல்லது திராவிட முன்னேற்றக் கழகத்தின் அரசாங்கம் இவற்றைக் காப்பாற்ற வேண்டுமென்பதற்காக, இந்த அரசாங்கத்தைத் தக்க வைத்துக்கொள்ள மக்களுடைய எதிர்ப்பிலிருந்து தப்பித்துக்கொள்ள இத்தகைய கோரிக்கையைத் தீர்மான வடிவில் கொண்டு வந்திருக்கிறார்கள் என்று நான் தெளிவாகவும் திட்டவட்டமாகவும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் வேண்டுமென்பதை ஜனநாயகவாதிகள் யாரும் மறுக்க மாட்டார்கள். கிடைத்த அதிகாரத்தை சரியாகப் பயன் படுத்தத் தெரியாத அரசாங்கம் மேலும் அதிகாரங்களைக் கேட்பது இந்தக் கோரிக்கையின் உணர்வையே கெடுத்துவிடும்.

நம்முடைய போலீஸ் இலாக்காவும், சட்ட இலாக்காவும் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத் தொண்டர்கள்மேல் வழக்குமேல் வழக்கும்போட்டு வாட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

விழுப்புரத்திலும், விருத்தாசலத்திலும், இராமநாதபுரம் மாவட்டத்திலே சில இடங்களிலும் 40, 50 வாய்தாக்கள் என்று ஒவ்வொரு வழக்கிலேயும் போட்டு இழுக்கடிக்கப்பட்டுக்கொண்டிருக்கிறது. சுயேச்சையாக நீதிமன்றங்கள் இயங்க முடியாத நிலைமையில் கட்சித் தொண்டர்கள் வாரந்தோறும் வழக்கு மன்றங்களுக்கு அழைக்கப்பட்டு ஒரு வழக்கிலே கிட்டத்தட்ட 50 வாய்தாக்கள் வரை போடப்பட்டிருக்கின்றன. இருக்கிற கொஞ்ச

1974 எப்ரல் 16] [திரு. பெ. சீனிவாசன்]

அதிகாரங்களை வைத்துக் கொண்டே எதிர்ப்புக் குரல்களை அடக்குவதற்கு முயற்சிகளை மேற் கொண்டிருக்கிறது இந்த அரசாங்கம். மாநில சுயாட்சிக்காக மேலும் தீவிரமாகப் பாடுபடுவோம், போராடுவோம் என்றெல்லாம் ஆளுங்கட்சியின் சார்பிலே பேசிய திரு. ஆலடி அருணா அவர்கள் சொன்னார்கள். முதலமைச்சர் அவர்கள் கூட பல முறை சொல்லியிருக்கிறார்கள். மாநில சுயாட்சிக்காக நான் உயிரைக் கொடுக்கக்கூடத் தயாராக இருக்கிறேன் என்று சொல்லியிருக்கிறார்கள்.

நான் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். அவர்கள் உயிரைக் கொடுக் கவேண்டியதில்லை, மிகத் தீவிரமாகப் போராடக் கூட வேண்டியதில்லை, 1971 ஆம் ஆண்டிலே எப்படி சட்ட சபையைக் கலைத்துவிட்டு முதலமைச்சர் அவர்கள் தேர்தலை நடத்தினார்களோ அதைப் போன்று இன்றைக்கு இந்தச் சட்ட சபையைக் கலைத்துவிட்டு மக்களுடைய தீர்ப்பை இதிலே பெறுவதற்கு முன்வர வேண்டும்.

1971 ஆம் ஆண்டிலே எந்தவிதமான காரணமும் இல்லாமல் சட்டசபையைக் கலைத்தார்கள். அப்படிச் செய்யாமல் இந்தக் கோரிக்கையைச் சட்டமன்றத்திலே கொண்டு வருவதின் மூலமாக மக்களுடைய கோரிக்கையையும் இதையும் சம்பந்தப்படுத்தி விடலாம் என்றோ அல்லது இதன் மூலம் மக்களைத் திருப்திப்படுத்தி விடலாம் என்றோ நினைத்தால் இதற்கும் மக்களுடைய இன்றைய கோரிக்கைக்கும் சம்பந்தம் இல்லை என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

மக்களைத் திசை திருப்புவதற்காக இட்லர் கையாளுகின்ற பாணியிலே, சர்வாதிகாரிகள் கையாளுகின்ற பாணியிலே, உள்நாட்டிலே சிக்கல் என்றால் வெளிநாட்டின்மீது படையெடுக்கின்ற பாணியிலே, இந்த நிர்வாகத்தின் ஓட்டைகளை மறைப்பதற்காக, இந்த நிர்வாகத்திலே இருக்கின்ற குற்றச்சாட்டுகளை மறைப்பதற்காக முதலமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கின்ற சூழ்ச்சிகரமான தீர்மானம்தான் இது என்று கூறி அமர்கிறேன். வணக்கம்.

* THIRU L. GANESAN : Mr. Speaker, Sir, I am indeed very proud and happy to participate in the discussion on this auspicious day and to support the Resolution moved by the Hon. Chief Minister with all my heart, mind and soul.

This is a red-letter day, a day that should be inscribed in golden letters in the history of the whole of India a day, I would even state, that marks a definite turning point in the march of independent India.

Now and again great people, elderly statesmen, illustrious Con stutitional lawyers have protested against over-centralisation and the most authoritarian ways of the Central Government.

But at no time a concrete step has been taken and at no time an Assembly has discussed such a matter of public and national importance. I am very happy that our Government headed by our beloved Chief Minister, has given a definite lead and the country as a whole should move in that direction, and reach the goal, that is, State autonomy.

This is not a party issue. This is not a particular State issue. This is an issue which concerns the whole of India. This issue should never be viewed from the points of view of the D.M.K. party alone. I request hon. Members, especially the Members of the A.D.M.K. not to view this as a party issue.

Particularly, this country is not a mono-national State. This is a multi-national State, a State which is having too many nationalities. Different religions are practised and different languages are spoken. It is a vast and far flung sub-continent and a Federal set-up alone will be suitable.

But, unfortunately they have given a Constitution which is unitary in spirit but federal in form. What is a Federal Constitution? Too many illustrious Constitutional lawyers have given definite definitions. According to Thiru K.C. Wheare who wrote the book " Federal Government . . . "

"By Federal Principles, I mean the method of dividing powers so that the General and Regional Governments are each within a sphere co-ordinate and independent"

It has also been stated—

'Governments, Central and Local must have complete freedom from mutual control and encroachment in the determination of their policies and the way in which they are exercised. It is the Freedom that is soul of Federalism.'

So, we should kindly and dispassionately analyse the Indian Constitution. If we do so, you will see that definitely the Indian Constitution is not at all a Federal Constitution.

My hon. Friend, Thiru Seenivasan, has stated that it could be understood this way or that way. It can be taken as a Unitary Constitution or Federal Constitution. But the Constitutional lawyers have clearly stated that the Indian Constitution is quasi-Federal and it is rather more unitary than Federal. That is the opinion expressed by K.C. Wheare, Thiru Basu and so many other Constitutional lawyers.

Sir, as far as our country is concerned, there are too many nationalities. Individuality and the originality of the different nationalities together with the integrity and unity of the country should be protected. The autonomy and the unity and integrity are not contradictory to each other but are complementary. But unfortunately, they have taken up a different view. They have considered that autonomy is striking at the very root of national unity.

But national unity and integrity must be based on autonomy. As a matter of fact the British people were granting some sort of autonomy step by step. In those days our Congress people, as pointed out by Thiru Aladi Aruna, were vociferous in their opposition to the Government of India Act, of 1935 and they stated that the Act was not in the interest of the people. But the Indian Constitution is largely based on that very Act and now they have upheld the very Act which they once opposed.

[Thiru L. Ganesan] *[1974 ஏப்ரல் 16*

In the Federal Constitution the powers of the Centre will be enumerated and the residuary powers will be vested with the States. In this connection, I would go to the extent of saying that so far as the Constitutional amendments that are proposed in the resolution are concerned, they are a little more liberal. Usually, the powers of the Centre will be confined to• Defence, currency, communications, and foreign afairs and the rest of the powers which are not specified and which could arise in future, shall be vested with the State and that is Federal set-up.

As far as the Indian Constitution is concerned there are three lists. 1. Union List concerning the Centre. 2. State list concerning the State and 3. Concurrent List. Unfortunately even the Con current List is a list which is purely a Central List and if there is a clash between the Central Act and the State Act, the Central Act will predominate. I may submit to this House that the word 'concurrent list' is nothing but a list of the Centre. Apart from all these things, the residuary powers are vested with the Centre. Nowhere in the world, nowhere in the history of any federal Government has such a power been provided for the Centre. What has resulted because of such power? The result is Centre has become an authoritarian Government, Centre dominates the States and States are treated as subservient and servants to Centre. The Centre acts as sovereign and States are at the beck and call of the Centre.

Even the small diminutive powers granted by other provisions of the Constitution have been snatched away by the emergency provisions. Rajamannar Committee have gone deep into this question and they have given a detailed report on this. There are three types of emergency. One is that which deals with a particular State alone. It is the case where there is failure constitutional machinery. Another is that which concerns the country as a whole. The third is that which arises in case of financial instability. Whether it is a state of emergency under Article 356 or under Article 357, whether emergency concerns a particular State or the country as a whole, or an emergency

to threat to financial instability due the emergency provisions our Constitution a unitary one and make the States servants of the Centre.

As a matter of fact, emergency provisions are nowhere found in Federal Constitutions.

Commenting on Article 356, Professor Ranga, the then Swatantra Party leader has observed "Indian Constitution is not altogether free from totalitarian trend and therefore this Article has made the Central Government a dictator rather than a representative Government".

The peculiarity is this. If the President is satisfied he can invoke the Emergency provisions. He could be satisfied on any ground. How he could be satisfied is not specified. What are the grounds on which he should be satisfied are not clear. Nothing is mentioned. If he is satisfied that a situation has arisen in which the Government of a particular State cannot be carried on in accordance with the provisions of the Constitution or if he receives such report from the Governor or otherwise, he can declare a state of emergency. If this is done, the entire legislative powers or executive powers are assumed by Central Government. That is done in the name of President or his nominee the Governor. Therefore, it is why that we say the provision of concerning emergency be done away with. The emergency provision has affected the very basis of democracy. The very root of State autonomy. Article 352 deals with emergency on a national scale.

That 1935 Act, which had been opposed by Congress people, had been better. Article 360 is worse than article 352 and 356. No precedent of Article 360 is found in the 1935 Act. I mean the issue of directions by the Union requiring State or States to observe such canons of financial propriety as may be specified in directions. The Constitution does not say what are the best canons of financial propriety. This is what Rajamannar Committee writes—

"In other words one political party in power at the Centre has absolute discretion, uncontrolled by any Constitutional provision, to issue any direction it pleases to another political party in power at the State."

The situation has not arisen at the time of framing of Constitution. The ruling party in the Centre was ruling almost all the States. So, the contingency of giving direction by Centre to States did not arise so far. But the situation had completely changed after the 1967 general election. There are other parties ruling in different States and they are different from the ruling party in the Centre. That article giving power to the Centre to give directions to States, may be used to oust popularly-elected Governments in the States.

Another anomaly of the Indian Constitution is that the Governor will be the head of the State. That is against the federal characteristic of the Constitution and against the concept of democratic set up. It is said that the Cabinet or Council of Ministers shall hold office during the pleasure of Governor. Governor is to be appointed by the President. Who is the President? He is one elected by the Ruling Party at the Centre. What does this mean?

It means that the Governor is the agent of the Centre in the State. Such an agent is having so much power over the elected Cabinet. The elected Cabinet must have the full power and responsibility.

But it is said that the Council of Ministers shall hold office during the pleasure of the Governor. This is ridiculous. I could not find any other emphatic word. It is not at all federal, not even democratic.

With regard to the office of Governor, a lot of discussion had taken place in the Constituent Assembly. It has been suggested that all the MLAs of a particular State could elect the Governor. It was also suggested that the legislature could select a panel of names and send to the President and from out of that, a person could be nominated as Governor. But ultimately it has been decided otherwise.

The President appoints the Governor. He watches over the interests of the ruling party. He acts as the agent of the Centre. That is what really happens. Even at the time of the Constituent

Assembly this has been pointed out. Mrs. Vijayalakshmi Pandit, who had once been Governor says that the office of the Governor is redundant and so much of money is spent on him to no purpose and that this office is not wanted.

But yet the Governor is there with sweeping powers. Governor is to invite a person to form the Cabinet. Is there any provision that he should invite such a person who commands the majority in the Legislature? No, Sir. No such provision is there. In 1952, in Tamil Nadu, the United Front was in majority and when Mr. Prakasam on behalf of and as leader of the U.F. requested the Governor to permit him to form the Government, the Governor refused; not only that, the learned members of the House know that he invited Rajagopalachari who was not even a member of the Assembly and then nominated him as a member of the Council and asked him to form the Government.

Again in Bihar when there was a crisis and many Congress Members defected, Mr. Mandal requested the Governor to permit him to form the Government. But he was refused and refused on the ground that he was not an M.L.A. Therefore, the argument was that a person who was not an M.L.A. can never become a Minister. But Rajagopalachari who was not even a member of the Assembly was asked to form the Government though he did not command a majority.

Thus the Governor has discretionary powers. Whether those powers are used properly or whether there are guide-lines for using those powers Definitely not.

Again, in Travancore, the Congress Government was defeated by a no-confidence motion and the outgoing Chief Minister advised the Raja Pramukh, i.e. the Governor to dissolve the Assembly and he dissolved the Assembly. But subsequently in 1954 when Pattam Thanu Pillai was the Chief Minister, his Government was defeated by a no-confidence motion and when he advised the Governor to dissolve the Assembly, he did not do so. Why was it? It was because the Governor is only there to serve the purpose of the Centre, not the State. The Governor is only

the agent of the Centre, not the head of the State. Therefore, that office as a whole should be abolished. But unfortunately, our friends here and elsewhere are often and often imputting motives to our views with regard to that issue.

Our friend Mr. Seenivasan when he started speaking said jubilantly with fervour and enthusiasm and he even went to the extent of saying that the entire Constitution shall be burnt and he said that the words used by Aladi Aruna were mild, and that he would borrow the words of Ambedkar and say that the entire Constitution should be burnt. In such a tone he started. But when he came to the end, he was hesitant and confused and he was not clear and that was because now he belongs to a different section altogether Whenever we demand more rights for States and whenever we advocate decentralisation, we are accused of something ulterior.

Autonomy is not a curse; autonomy is not a bad word. Autonomy has a definite meaning in law. Therefore, when we say autonomy, it is a well used term and it has definite and clear meaning. If anybody is not happy with the word, find out another term. We have no objection. All that we want is only more powers for the States; we should not be dependent on the Centre, we should not be subordinate to the Centre, but we should co-ordinate with the Centre; the Centre and the State shall neither be independent nor dependent but should be inter-dependent and that should be the relationship of the Centre and the State. They should coordinate with each other. Call it by any name, we have no objection. But on that ground please do not go against democracy. What we want is only to save the entire country.

Our friends Mr. Seenivasan and Dr. Hande have given amendments, pointing out that D.M.K. has brought forward this resolution with the motive of separation. Whenever we ask for more rights for States, the members from the other side accuse us that we are indirectly demanding separation or secession Actually, that is not the case with us. We are definitely different. We have given up separation. Even if we cut open our hearts

and show the image of Bharatha Matha enshrined there, our learned friends are not prepared to believe us and believe in our sincerity.

Better opportunities were actually given up by us. When there was the Chinese aggression, when the enemies were knocking at our doors, when Ladak had fallen, when NEFA was over-run, when 12,000 square miles of Indian territory was occupied by the Chinese then our beloved Anna has given up our demand for separation.

Even subsequently when the Pakistani aggression was there, there was the finest opportunity. But we did not make use of it. Our beloved Chief Minister was then contributing to the Defence Fund. Whenever there was aggression, whenever the Centre was engaged with external aggression, that was the finest opportunity for any political party to have pressed for separation, to have what they wanted. But on the other hand we have supported the Centre, we have strongly and firmly stood by the side of the Centre. We did not stand by the Centre out of fear, definitely not. But because we have faith in the integrity and unity of the Country.

The difference between ourselves and others is this. We say the individuality and originality of different nationalites shall be protected along with the integrity and unity; they say national unity and integrity at the cost of and at the sacrifice of individuality of different nationalities. Thus the answer differs fundamentally. Then the trouble arises. So far as we are concerned, we are very clear that we want both should be protected If anybody on earth wants to sacrifice the individuality and uniqueness of the State, then definitely the history of India will be changed.

In this connection, I am often reminded of the story that I have read in the elementary grade class. A shepherd boy was grazing his herd. One day, he started shouting, 'Tiger, Tiger'. The farmers in fields in and around rushed to his rescue. When they approached the boy, he said 'I have played a trick on you;

I have cheated you '. The elders chided him and returned. After some time, for the second time, once again, the boy raised the same shouts. This time not all the farmers, but a few of them came to his rescue. When they approached the boy, they learnt that this time also he had played a trick on them. Days passed. At last one day, actually a tiger came and the boy shouted ' Tiger, Tiger, at the top of his voice. But nobody came to his rescue. The tiger pounced on him and tore him to pieces. That was the case of the shepherd. I am reminded of that story.

You are accusing us as being separatists and that we are asking for separation. Sir, that is not true. If they often use false allegation of separation to refute out arguments and to defeat our demand, I am afraid I have to warn them that one day separation will take place. That may be an historical inevitability. But we would not be a party for it.

Therefore, for having more power, to co-ordinate with the Centre, for having more financial resources, to give more benefits to the people, to bring prosperity to our people, we demand this State Autonomy. With these words, I whole heartedly support the resolution brought forward by the Hon. Chief Minister. Thank you, Sir.

திரு. என். கே. பழனிசாமி: கனம் தலைவர் அவர்களே, இன்றையதினம் மத்திய—மாநில அரசுகளின் உறவுகள் எப்படி இருக்க வேண்டும் என்பதைப்பற்றி, இராஜமன்னார் அறிக்கையை யொட்டி, சர்க்காருடைய கொள்கைகளை அது ஆதரிக்கக் கூடியதாக இருப்பதால், இந்தமாதிரி ஒரு தீர்மானம் இங்கு கொண்டு வருவது சரியல்ல. இந்தத் தீர்மானத்தை இந்தச் சபையில் கொண்டு வருவதற்கு முன்பு பாராளுமன்றத்தில் இருக்கக்கூடிய சகல கட்சி மெம்பர்களையும் கூட்டி மத்திய—மாநில அரசுகளின் உறவுகள் எப்படி இருக்க வேண்டும் என்பதைப் பற்றி விவாதித்து—திட்டக் கமிஷன் கூட்டத்திலும் சரி அல்லது முதல் மந்திரிகள் மாநாட்டிலும் சரி இதைப் பற்றி விவாதித்து ஒரு

கொள்கையை உருவாக்குவதுதான் சரியாக இருக்குமே தவிர, இந்தச் சபையில் இதைப்பற்றி இப்படி விவாதிப்பது என்பது ஒரு எலெக்ஷன் பிரசாரமாகத்தான் இருக்க முடியும்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** மாண்புமிகு உறுப்பினர் அவர்கள் இது ஒரு தேர்தல் பிரசாரமாக இருக்கிறது என்று குறிப்பிட்டார்கள். கொடுக்கப்பட்டிருக்கிற திருத்தத்தில் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் அவர்கள் மத்திய மாநில உறவுகள் பற்றி அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டியதில்லை என்ற கருத்தைக் கூறியிருக்கிறார்கள். அவர்கள் எலக்ஷன் பிரசாரம் என்று சொன்னார்கள். எலக்ஷன் மானிபஸ்டோவில் கம்யூனிஸ்ட் பார்ட்டி ஆப் இந்தியா 1972-ல் Centre-State relationship

"The problem of Centre-State relations has come to assume great importance, in the present pace of struggle in our country for democracy and national development. In this connection, the following steps have to be taken: -

என்று குறிப்பிட்டு,

"The reorganisation of the Centre-State relations with more powers to States in order to increase their initiative in developmental activities, appropriate amendments to the Constitution are necessary so as to promote democracy and strengthen the unity of the country as a whole."

என்று அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டுமென்று எலக்ஷன் மானிபஸ்டோவில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி மானிபஸ்டோவில் 1972-ல் குறிப்பிட்டிருக்கிறது. இந்தத் திருத்தத்திற்கும் அதற்கும் இவ்வளவு முரண்பாடு இருப்பது நியாயமா என்று நான் மாண்புமிகு உறுப்பினர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

**திரு. கே. டி. கே. தங்கமணி :** அது ரொம்ப விளக்கிப் பேச வேண்டிய பேச்சு. இன்று இங்கு வந்திருக்கக்கூடிய திருத்தம் அரசியல் சட்டத்தை என்னென்ன முறைகளில் திருத்த வேண்டும் என்று ஒரு பெரிய பட்டியலே கொடுக்கப்பட்டிருக்கிறது. அதற்கும் சில ரீ-ஆர்கனைசேஷன் வரவேண்டும் என்று சொல்வதற்கும் வித்தியாசம் இருக்கிறது. ஏ. ஆர்.ஸி. ரிப்போர்ட்டில்

கூட இன்றுள்ள அரசியல் சட்டத்தை வைத்துக் கொண்டு பார்த்தால் பல மாறுதல்களைச் செய்ய முடியும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** சில விஷயங்களுக்காக என்று அந்தமாதிரி இல்லை. To improve democracy and strengthen the unity of the country என்று மொத்தமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

**திரு. கே. டி. கே. தங்கமணி:** More powers to the State, we will be able to spell out when we speak இங்கு ஸ்டேட்க்கு மட்டும்தான் அதிகாரம் இருக்க வேண்டும், ஸ்டேட்ஸை வைத்துக் கொண்டுதான் சென்டர் செயல்பட வேண்டும் என்பதில் அடிப்படையில் வித்தியாசம் இருக்கிறது.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** அப்படியானால் இதற்குத் திருத்தம் கொடுத்த அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பதை ஒத்துக் கொண்டிருக்கிறது. அந்த வகையில் கம்யூனிஸ்ட் கட்சி அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பதை அவர்கள் திருத்தத்தோடு ஒத்துக் கொண்டிருக்கலாமே.

**திரு. கே. டி. கே. தங்கமணி:** எந்தெந்தக் குறிப்பிட்ட விஷயங்களில் அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்று தீர்மானம் வந்திருக்குமேயானால் எது எதற்குக் கொண்டுவர வேண்டும், வேண்டாம் என்பதைப் பற்றி திருத்தங்கள் கொண்டு வந்திருக்க முடியும். உங்களுடைய தீர்மானமே. It is an Omnibus Resolution. It wants the entire Constitution to be recast. ஆகவே, அடிப்படை மாறுதலைக் கொண்டு வரக்கூடிய தீர்மானமாக இருப்பதால் இந்த அடிப்படையே மாறக்கூடிய முறையில்தான் எங்களுடைய திருத்தம் இருக்கும். It is an alternate resolution அதுமட்டுமல்ல.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** மத்திய-மாநில உறவுகளுக்காக அரசியல் சட்டம் திருத்தப்படத் தேவை இல்லை என்பது கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் கொடுக்கப்பட்டிருக்கிற

திருத்தம். அவர்கள் தேர்தல் அறிக்கையில், கம்யூனிஸ்ட் கட்சி தேர்தல் அறிக்கை அதற்கு முற்றிலும் மாறுபட்டதாக இருக்கிறது என்பதைத்தான் சுட்டிக்காட்ட விரும்பினேன்.

**திரு. என். கே. பழனிசாமி:** ராஜமன்னார் கமிட்டி தன் அறிக்கையைச் சமர்ப்பிக்கக்கூடிய காலத்தில் மத்திய சர்க்காருக்கு யார் யார் விரோதமாக இருக்கிறார்களோ—தங்களையும் சேர்த்து, பதவி கிடைக்கவில்லை என்று—அவர்களுடைய அபிப்பிராயங்களைத் தொகுத்துத்தான் இந்த ரிப்போர்ட்டாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அரசியல் சட்டத்தில் உள்ள ஷரத்துக்களின் தொகுப்பாகக் கிடையாது. சொல்லப்பட்டிருப்பது பூராவும் அவர்கள் இன்டர்ப்ரடேஷனே தவிர இந்த ரிப்போர்ட் கிரிட்டிக்கலாக மத்திய-மாநில அரசுகளின் உறவுகள் எப்படி இருக்க வேண்டும் என்ற முறையில் அமையவில்லை.

இந்த நாட்டிலுள்ள மக்கள் வோட்டுப் போட்டு அதிகாரம் கொடுத்திருக்கும் ஒரு அமைப்பின் அதிகாரத்தைக் குறைக்க வேண்டும் என்பதற்காகத்தான் அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டும் என்பதுதான் சர்க்கார் கொள்கையாக இருக்கிறது. அரசியல் சட்டத்தை அவசியம் திருத்தித்தான் ஆகவேண்டும், திருத்த வேண்டியது அவசியந்தான். ஆனால் இன்றையதினம் எதற்காக அரசியல் சட்டத்தை நாம் திருத்த வேண்டும் என்பது தான் முக்கியமான பிரச்சனை.

அரசியல் நிர்ணய சபையில் எங்கள் கட்சியில் இருந்து லாகிரி என்ற ஒரு மெம்பர்தான் இருந்தார். அரசியல் சட்டம் எழுதப் பட்டவுடன் அவர் எழுந்து, மக்களுக்கு விரோதமாக ஒரு மெம்பர் சென்றால் அவரை வாபஸ் வாங்கும் அதிகாரத்தையும் அரசியல் சட்டத்தில் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று வாதாடினார்.

இன்றையதினம் அரசியல் சட்டத்தில் தனி நபர் சொத்து உரிமை புனிதமானது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இன்றைய தினம் அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டும் என்று கொண்டு வரக்கூடிய காலத்தில் ஏகபோக முதலாளிகளைக் கட்டுப் படுத்துவது, அன்னிய நாட்டு மூலதனத்தைப் பறிமுதல்

[திரு. என். கே. பழனிசாமி] [1974 ஏப்ரல் 16

செய்வது, நிலச் சீர்திருத்தம் இப்படிப்பட்டவைகளுக்காக அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டும் என்றால் அதை முதலில் வரவேற்கத் தயாராயிருக்கிறோம்.

இந்தச் சர்க்கார் கொண்டு வந்திருக்கக்கூடிய, டிரான்ஸ் போர்ட்டை தேசியமயமாக்க வேண்டும் என்பதில் கூட, அது சரி யான முறையில் இல்லை என்று சுப்ரீம் கோர்ட்டில் வழக்காடியிருக் கிறார்கள். ஒவ்வொருவருக்கும் ரைட் ஆப் வொர்க் இருக்க வேண்டும் என்பது அரசியல் சட்டத்தில் உள்ள பொன்னான மொழிகள். இந்தமாதிரி ஒரு சட்டம் நாட்டில் வர வேண்டும் என்று சர்க்கார் தரப்பிலிருந்து கொண்டுவந்தால் அதை நாங்கள் வரவேற்போம்.

பாராளுமன்றத்தில் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப் பினர்கள் இருக்கிறார்கள். ஒரு இன்டர் ஸ்டேட் கவுன்சில் வைத்து மாநிலங்களின் முதல் மந்திரிகள் அல்லது அவர்கள் பிரதிநிதிகள், ப்ரைம் மினிஸ்டர் சேர்மனாக இருக்கலாம் என்றால் இன்று இந்திரா காந்தி அவர்களுக்குச் செல்வாக்கு இருக்கிறது. இன்று இந்திரா காந்தி அவர்கள் இருக்கிறார்கள் ப்ரைம் மினிஸ்ட ராக. நாளை யார் வருவார்கள் என்று தெரியாது.

இந்தத் தீர்மானம், பார்லிமென்ட் அதிகாரங்களை வீட்டோ செய்யும் முறையில் முக்கியமான சிபார்சாக இருக்கிறதே தவிர, அந்த அதிகாரங்களைக் குறைத்தால், பெடரல் செட்-அப்பே அசைந்துவிடும். பின் எப்படி நிர்வாகம் செய்வது?

ரெஸிட்யூவரி பவர்ஸ் பற்றிச் சொன்னார்கள். ஆஸ்திரேலியா வில் ரெஸிட்யூவரி பவர்ஸ் ஸ்டேட்டுக்கு இருக்கிறது. கனடாவை எடுத்துக்கொண்டால் ரெஸிட்யூவரி பவர்ஸ் மத்திய சர்க்காருக்கு இருக்கிறது. எனவே ரெஸிட்யூவரி பவர்ஸ் மாநிலங்களுக்குத் தான் இருக்க வேண்டும் என்றில்லை. மாநிலங்களுக்கும் இருக்க லாம் அல்லது மத்திய சர்க்காருக்கும் இருக்கலாம். இந்தச் சர்க்காருக்கு நியாயமான சங்கடங்கள் இருக்கின்றன, அதை ஒத்துக்கொள்ள வேண்டியதுதான். ரெஸ்பான்ஸிபிலிட்டி மாநில சர்க்காருக்கு இருக்கிறது. பவர் மத்திய சர்க்காருக்கு இருக்கிறது.

1974 ஏப்ரல் 16] [திரு. என். கே. பழனிசாமி]

கல்வி, சுகாதாரம் போன்றவைகளுக்கு ரெஸ்பான்ஸிபிலிட்டி மாநில சர்க்காருக்கு இருக்கிறது, அவர்கள்தான் ஜனங்களை பேஸ் செய்ய வேண்டியிருக்கிறது. மத்திய சர்க்கார் என்ன செய்கி ருர்கள்? யார் யாருக்கு லைசென்ஸ் கொடுப்பது, ஜப்பானிலிருந்து இறக்குமதி செய்வதா அல்லது அமெரிக்காவில் இருந்து இறக்குமதி செய்வதா, எந்த எந்த அதிகாரங்களை வைத்துக்கொண்டு யார் யாருக்கு லைசென்ஸ் கொடுப்பது என்ற அதிகாரம் அவர்களுக்கு இருக்கிறது. யாருக்கு லைசென்ஸ் கொடுத்தால் எலக்ஷனுக்கு ஏராளமாகப் பணம் சேர்க்கலாம், இப்படிப்பட்ட அதிகாரங்கள் தான் அவர்களுக்கு இருக்கின்றன. அதிக அதிகாரங்கள் மாநிலங் களுக்கு வேண்டும் என்பது அவசியம்.

அதிக அதிகாரம் வேண்டுமென்று கேட்கும்போது இருக்கக் கூடிய அதிகாரங்களை வைத்துக் கொண்டு என்ன செய்கிருர்கள்? மொத்த வியாபாரத்தைச் சர்க்கார் எடுத்துக் கொள்ளலாம். அந்த முறையில் விவசாயிகளுக்கும் நியாயமான விலையில் பொருள்கள் கிடைக்கும். உங்களுக்கு அதிகாரம் இருக்கிறது. அந்த அதிகாரத்தை வைத்து என்ன செய்தீர்கள்? இன்னும் அதிக அதிகாரம் எதற்காகக் கேட்கிறீர்கள் என்று விளங்கவில்லை. மேற்கொண்டு அதிகாரம் வாங்கி என்ன செய்யப் போகிறீர்கள்? இது தான் நம் முன்னே இருக்கும் பிரச்னை.

லைசென்ஸ் கொடுக்கும் விஷயத்தில் மத்திய சர்க்காரில் பெரிய ஊழல் இருக்கிறது என்று சொல்கிருர்கள். அதை யெல்லாம் மாநில சர்க்கார் அதிகாரத்தின்கீழ் வரவேண்டுமென்று சொல்கி ருர்கள். அங்கே ஊழல் என்ருல், அதைக் களைந்து எரியும் வகையில் மத்திய சர்க்காருக்கு மாநில சர்க்கார் நிர்ப்பந்தம் கொடுக்கும் முறையில் இருக்க வேண்டும். அது தான் நல்லது.

ஹைக்கோர்டிலிருந்து கிரிமினல் வழக்குகளும், சிவில் வழக்குகளும் சுப்ரீம் கோர்ட்டுக்குப் போகக் கூடாது என்று சிபார்சு. அப்படி யென்ருல் எப்படி முடியும்? காங்கிரஸ்காரர்கள் காலத்தில் காங்கிரஸ் ஆட்சி சொல்பவர்களைத்தான் ஜட்ஜாகப் போட்டார்கள். மற்றவர்கள் இருக்கும் காலத்தில் அவர்கள் சொல்கிறவர்களைத்தான் போடுகிருர்கள். அப்படியானல் கேஸ்கள் என்னவாகும்?

[1974 ஏப்ரல் 16

**மாண்புமிகு திரு. செ. மாதவன் :** உச்ச நீதி மன்றத்தில் மத்திய சர்க்கார் தான் ஜட்ஜ்களை நியமிக்கிறார்கள். இந்த வாதம் அதற்கும் பொருந்துமா ?

**திரு. என். கே. பழனிசாமி :** ஹைக்கோர்ட் ஜட்ஜ் போடுவதற்கு மாநில அரசு சொல்லுகிறவர்களைத்தான் போடுகிறார்கள். இங்கே சிபார்சு செய்கிறவர்களைத்தான் போடுகிறார்கள்.

**மாண்புமிகு திரு. செ. மாதவன் :** அந்த வாதத்தைச் சொல்லி, மாநில சுயாட்சி கேட்பது அதற்காகத் தவறு என்று சொன்னீர்கள். உச்ச நீதிமன்றத்தில், சுப்ரீம் கோர்ட்டில் ஜட்ஜ் மத்திய சர்க்கார் விரும்புகிறவர்களைத்தான் போடுகிறார்கள். இந்த வாதம் மத்திய சர்க்காருக்கும் பொருந்துமா என்று கேட்டேன்.

**திரு. என். கே. பழனிசாமி :** பொருந்தும். மத்திய சர்க்கார் ஒழுங்காகச் செய்வார்கள் என்று சொல்லவில்லை. மாநில சர்க்கார் இந்த விஷயத்தில் கலந்து பேச வேண்டும். ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். போன்றவற்றில் தேர்வு குறித்து கலந்து பேசி தீர்க்க வேண்டிய விஷயம். இதற்குத் தனி அதிகாரம் வேண்டுமென்ற வாதம் சரியல்ல. சிவில் கேஸ், கிரிமினல் கேஸ் எதுவாக இருந்தாலும் சுப்ரீம் கோர்ட்டுக்குப் போகக் கூடாது என்று சொன்னால், பிறகு அது எந்த கேசாக இருந்தாலும் எடுத்துக் கொண்டு போக முடியாமல் போய்விடும். அதற்குப் பிறகு ஒன்றும் சொல்ல முடியாது.

கவர்னர் அவசியம் இல்லை என்று சொல்லியிருக்கிறார்கள். கவர்னர் வேண்டுமென்று சொன்னால் மத்திய சர்க்கார் 10 லட்சம் செலவு செய்து அவர்கள் இஷ்டப்பட்டால் வைத்துக் கொள்ளட்டும். அந்த கவர்னருக்குச் செலவாகும் பணம் அவர்களே கொடுக்க வேண்டுமென்று இருக்கிறது. கவர்னர் அவசியமில்லை என்று சொல்லிக்கொள்கிறேன்.

டாக்ஸ் பற்றி சொல்லப்பட்டிருக்கிறது. கார்ப்பரேஷன் டாக்ஸில் நமக்குப் பங்கு வரவில்லை. அடிஷனல் சூப்பர் டாக்ஸிலும் பங்கு வரவில்லை. இது கேட்பது நியாயம் தான்.

6-வது பைனான்ஸ் கமிஷன் போட்டு இருக்கிறார்கள். சர்க்கார் அஜிடேட் செய்த பிறகு தான் ஓரளவிற்கு நியாயம் வழங்கியிருக்கிறார்கள். இதிலே 400 கோடி 500 கோடி எடுத்து அவர்களுக்கு வேண்டிய ஸ்டேட்டுக்குக் கொடுக்கும் முறை இருக்கிறது. இந்த மாதிரிப் பணம் கொடுக்கும் நேரத்தில் பார்லிமெண்டில் வைத்து யார் யாருக்குக் கொடுப்பது, எந்தெந்த ஸ்டேட்டிற்குக் கொடுக்க வேண்டு மென்று சொல்ல வேண்டும். ஒரு காபினெட் பார்த்து அமைத்த குழு சொல்வது சரியல்ல.

பைனான்ஸ் கமிஷனை எடுத்துக் கொண்டால் அதை காபினெட் நியமிக்காமல், பார்லிமெண்டில் தீர்மானம் இயற்றி அந்தத் தீர்மானத்தின் அடிப்படையில் பைனான்ஸ் கமிஷன் போட வேண்டும். அப்போது தான் சட்டத்திற்கு, ஜனநாயகத்திற்குப் பொறுப்பாக இருக்கும் முறையில் பைனான்ஸ் கமிஷன் அமையும்.

ரிவர்ஸை எடுத்துக் கொண்டால், எலெக்டிரிசிடி போன்றவை இன்டர்ஸ்டேட்டாக இருக்க வேண்டும். அதாவது மத்திய சர்க்காருடன் இருக்க வேண்டும். அது எப்படியிருக்க வேண்டு மென்பதற்குச் சரியான முறையில் ஆலோசனை செய்யவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

இதிலே 17 அம்சங்கள் இருக்கின்றன. எந்தெந்த முறையில் அவை இருக்க வேண்டுமென்று பார்க்க வேண்டும். இதிலே என்னென்ன இருக்கிறது என்றால் மத்திய சர்க்கார் அதிகாரத்தைக் குறைப்பது, பார்லிமெண்டின் அதிகாரத்தைக் குறைப்பது, இன்டர் ஸ்டேட் கவுன்சில் வைப்பது போன்ற முறைகளில் இது எப்படியிருக்கும் என்று சொன்னால், இருக்க இருக்க மத்திய சர்க்கார் பலவீனம் அடைந்து, மாநிலத்தில் இருக்கும் முதல் மந்திரிகள் ஒரு சர்வாதிகாரியாக இருக்கும் நிலை இருக்குமே தவிர வேறு ஒன்றும் இருக்காது. ஆகவே, இன்று இதிலே பொதிந்து இருக்கும் விஷயம் மாநிலத்தில் தனியாட்சி, மத்தியில் கூட்டாட்சி என்ற முறை தான். எப்படியிருந்தாலும் இது பிரிவினை தான். இது சாம்பல் பூத்த நெருப்பு. உள்ளே நெருப்பு இருக்கிறது.

மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை
மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம்
திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[திரு. என். கே. பழனிசாமி] [1974 ஏப்ரல் 16

நாட்டில் இரண்டு விதமான முதலாளிகள் இருக்கிறார்கள். தேசிய முதலாளிகள், ஏகபோக முதலாளிகள். இந்த நாட்டில் நடக்கும் பொதுத்துறை தேசிய முதலாளிகள் சொல்லும் கொள்கை. இந்த நாட்டில் சமத்துவம் ஏற்பட்டு, பொதுத் துறையில், சர்க்கார் துறையில் தொழில் வளர்ப்பது, தொழில் வளர்ச்சிக்கு அரசாங்கம் வகுக்கும் கொள்கை தேசிய முதலாளிகள் கொள்கை. ஏகபோக முதலாளிகள் கொள்கை. ஜப்பான், அமெரிக்காவோடு கூட்டாக இருந்து கொண்டு கம்பெனிகளை அமைத்து அதிகப்படியாக லாபம் செய்ய வேண்டுமென்று நினைப்பது ஏகபோகக் கொள்கை. நாட்டில் அவர்கள் மக்கள் ஓட்டுப் பெற்று வரமுடியாது. எப்படியாவது அரசியல் அதிகாரம் பெறவேண்டும். ஆகவே, நாட்டில் அவர்கள் கிளர்ச்சிகள் கலவரங்களைத் தூண்டிவிடுகிறார்கள். குஜராத்தை எடுத்துக் கொண்டாலும் சரி, பீகாரை எடுத்துக் கொண்டாலும் சரி, மாணவர்களுக்குப் பணம் கொடுத்து சர்க்காருக்கு எதிராகக் கிளப்பும் காட்சியைப் பார்க்கிறோம்.

ஜயப்பிரகாஷ் நாராயணன் அவர்கள் மாணவர்கள் அரசியலில் பங்கு எடுத்துக் கொள்ளக்கூடாது என்று சொல்லிவிட்டு, இரண்டு நாட்களாக மாணவர்களுக்கு சட்டசபையில் 15 சதவீதம் இடமும் பார்லிமெண்டில் 25 சதவீதம் இடமும் கொடுக்கவேண்டுமென்று சொல்கிறார்கள். அந்த முற்போக்கான கொள்கைக்கு எதிராக தனியாக ஆட்சி ஏற்படுத்தி, ஒரு கவுண்ட்டர் ரெவல்யூஷன் ஏற்படும் நேரத்தில், இந்த மாதிரி தீர்மானம் கொண்டு வருவது அவ்வளவு நல்லதல்ல, அவர்களுக்கு ஆதரவு தெரிவிக்கும் வகையில் இருக்குமென்று சொல்லிக்கொள்கிறேன்.

ருஷ்யாவில் 1936-ல் அரசியல் சட்டம் கொண்டு வந்தார்கள். ஒவ்வொரு ஸ்டேட்டிற்கும் தனிச் சட்டம் கிடையாது. ருஷ்யா முழுமைக்கும் ஒரே சட்டம். அங்கே இருக்கும் ஒவ்வொரு ஸ்டேட்டிற்கும் ஈக்குவல் ரைட்ஸ். அவர்களுக்குப் பிரிந்து போகும் உரிமை இருக்கிறது. 1936-ல் இஸ்பேனியா, லாபியா போன்ற நாடுகள் பிரிந்து போய் மறுபடியும் வந்து சேர்ந்தன. அதற்குப் பிறகு பிரிந்து போகவில்லை.

THIRU K. KANDASWAMY : Hon. Speaker, Sir, on behalf of the Forward Bloc I want to express my views on the Tamil Nadu Government's views on the 'Rajamannar Committee's Report' and its stand on the 'State Autonomy'.

I strongly believe in having a strong centre and its organic parts of the State and also in having smooth administration in the country as a whole. A a follower of revered Netaji and Pasumpon Muthuramalinga Thevar. I believe in principle that in India, as a whole, one unit principle should obtain among our brothers and it should not be even partitioned on the religious basis. I uphold those views even to-day.

As a result of that unhappy partition of Pakistan from India, on the basis of religion, we still have continuous troubles on our borders and even in internal parts of India, especially there is the glaring example of Kashmir over which we spend crores and crores of rupees annually. It has affected our national economy and still we are not able to solve the problem. It is still a burning problem. In the international issue also there has been a cause for the external enemies to interfere in our internal matters.

(பிற்பகல் 12.30)

Therefore, here I want to remind one famous statement made by Mahatma Gandhiji about the creation of Pakistan. He said that Pakistan was not created on the wishes of the Muslims, but it is the creation of the Britishers. Actually Pakistan brothers did not want India to be divided as such. At the initial stages they wanted to remain as brothers in India. But due to the cunning politics and the divide-and-rule policy of the then British Government, Pakistan was created. So, our forefathers on the Independence Day had committed a very great blunder and the incidental and consequential effects we are having still to-day.

Some of the learned men and some of the forefathers collected together and blended together certain unitary aspects of the British system and certain federal aspects of the American

system and produced a curious mixture, which is the Indian Constitution. As a result of it we are to day finding it very difficult to put into practice certain administrative changes. We are neither having a unitary form of Government nor a federal form of Government as prevailing in U.S.A. and this is the system propounded by the Constituent Assembly itself.

Sir, the Articles of the Constitution are man-made only and they have not been created by some super-force. They have been created by human force only to regulate human conduct within human beings. In 1947 they had been so much internal troubles and external pressure and under certain pecular extraordinary circumstances, the Constitution was framed. Now we have got a totally different atmosphere and many of the provisions of the Constitution are found to be outmoded and obsolete. They are not suitable to the progressive Socialistic pattern of society which we desire to have not only in Tamil Nadu but throughout the length and breadth of the country.

Therefore, the Rajamannar Committee's Report is quite appreciable and it is a historical necessity which has to be accepted and adopted in toto not only by this Honourable House but throughout the country as a whole.

It is not the demand of our beloved Chief Minister, Dr. Karunanidhi alone or the D.M.K. It is the demand of $4\frac{1}{2}$ crores of the people of Tamil Nadu who want it in the interest of effective and speedy administration, in the interest of financial efficiency and in the interests of the healthy atmosphere. For the cordial relationship between the Centre and the States, it is a necessity. Therefore, I quite welcome it and appreciate it.

Sir, there are certain criticisms levelled by certain Opposition Members that it was brought with certain political motives. It is not fair to criticise the Resolution. We should not consider about the person who has brought forward it. But we will have to take into account the intention and the circumstances under which a particular thing is being done.

There are certain practical difficulties which we have come across from our past experience. Even the late Jawaharlal Nehru believed in the unity of India in diversity. States were reorganised on a linguistic basis and that is how our State came into being. There are several historical and geographical factors which go to show the differences between one set of people and another and therefore there is no use of uniformly applying the rule of law which some years ago was found to be practicable and fit.

There are certain provisions in the Constitution which confer sweeping powers on the Centre. There are inadequate financial resources for the States which depend on the Centre for financial assistance. There is the Finance Commission which is a statutory body and it has got more inherent powers to work out the financial resources for the Centre and the States so that there could be proper economic development of the country.

But the Planning Commission has been created by an executive order of the Central Government. Therefore, it is only a subordinate wing of the Central Government and it has usurped the constitutional guarantee given in the Constitution. These are some of the factors which led to the more dependence of the State Governments on the Centre.

Also due to the rule of one party for more than 20 years, there is no difference between the Ministers of the State and Central Governments. Most of the Ministers are prominent leaders of the Congress Working Committee and whatever resolution is passed by that Committee, it is accepted in toto by the Ministers. Now, several parties came to power in some States and they find it difficult to augment their financial resources for the speedy execution of the socialistic programmes.

Especially our State Government headed by Dr. Kalaignar is doing a lot of things with the minimum resources available. If all our resources are left unfettered as envisaged in this Resolution, I hope we can achieve tremendous results. To strengthen my argument, I want to cite the views of certain learned statesmen and eminent politicians.

In 'The Hindu' dated 26th January 1967, Thiru C. V. H. Rao has stated—

'Some of the issues such as internal peace, law and order, food policy, etc. over the last few years erupted into prominence with different degrees of acuteness but were prevented from flaring into serious conflicts because the Union and State Governments were manned by the Congress Party. With the probable change in the complexion of at least some of the State Governments after the next election, the possibility of their assuming a more strident form cannot be ruled out . . . . . . .'

This has become truer to-day.

Then Thiru Sattanathan in his article 'The Federal Process at Work' as published in 'The Mail', dated 27th September 1969 says—

'This pattern of settling Centre–State relations at the Congress High Command level, cannot possibly be extended to conditions now prevailing when non-Congress Ministries are in power in some of the State s . .'

This has also become true to-day.

Dr. V. K. John says the same reasons for advocating more powers to the States.

The late Thiru C. N. Annadurai, Hon. Chief Minister has more emphatically reiterated his suggestion or his argument for more powers to the State. For example, he quotes certain Articles under which more powers had been given to the Centre re: financial directions.

You have got every right to levy taxes to mobilise financial resources. If you control all finances, for inflation or deflation of money, you are responsible. I mean the Centre. He argues his case very vehemently and in a logical way. I appreciate his views. His argument is strengthened by politicians and statesmen.

Some members have pointed out some motives in the resolution moved by the Hon. Chief Minister. I disagree with them. No bias can be attributed to him. It is in the interest of the country

1974 ஏப்ரல் 16] [Thiru K. Kandaswamy]

he has brought this resolution. It is not for the interests of D.M.K. or Kalaignar or Navalar. It is for the welfare and better growth so that future generation may have more powers in States. We, as legislators and members, have to appreciate good things done by any party. Whatever may be the political label that may be attributed, we appreciate the merits of the ruling party done for betterment of the people. They have to be given encouragement and inspiration. We can have political discussions or criticisms outside. Good things done must be appreciated.

On behalf of the Forward Block I say that a strong centre is essential in a federal set up. That can be in charge of defence, communications, external affairs, inter-State relation and currency matters. These things have been pointed out by the Rajamannar Committee. Other powers may be given to the States. Thus we can have true federal set up and we can maintain the integrity as well as unity of the country.

Unless we maintain strong Centre an dalso States with sufficient powers we cannot work efficiently. Therefore I, on behalf of my party, strongly support the resolution moved by the Hon. Chief Minister. Thank you.

**திரு. கே. பி. கந்தசாமி:** பேரவைத் தலைவரவர்களே. இன்றைக்குத் தமிழ்நாடு சட்டப் பேரவை முன்பு நம்முடைய மாண்புமிகு முதலமைச்சரவர்கள் கொண்டு வந்திருக்கிற மாநில சுயாட்சித் தீர்மானத்தின்மீது, வரலாற்றுச் சிறப்பு மிக்க இந்தத் தீர்மானத்தின் மீது என்னுடைய கருத்துக்களை எடுத்துச் சொல்வதிலே பெருமிதம் கொள்கிறேன்.

இங்கே பேசிய, குறிப்பாக அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த உறுப்பினர் நண்பர் சீனிவாசன் அவர்கள் இந்த சுயாட்சித் தீர்மானத்தின் பின்னணியிலே பிரிவினை வாடை இருக்கிறது என்று அழுத்தம் திருத்தமாகச் சொன்னார்கள். இந்த நேரத்திலே நான் அவர்களுக்கு நினைவுபடுத்த விரும்புகிறேன். மாநில சுயாட்சித் தத்துவத்திற்குக் கதாநாயகனாக இருப்பவரே அவர்கள் யாரை தங்களுடைய தலைவர் என்று சொல்கிறார்களோ, எந்தத் தலைவருடைய பெயரைத் தங்களுடைய கட்சியின் பெயராக

## மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[திரு. வா. மை. அப்துல் ஜப்பார்] [1974 ஏப்ரல் 16

1969-க்கு முன்பு திரு. மதியழகன் அவர்கள் நிதியமைச்சராகவோ அல்லது உணவு அமைச்சராகவோ இருந்த நேரம் என்று நினைக்கிறேன். வேலூரிலே வெல்லத்தினுடைய விலை கடுமையாக ஏறியிருந்தது. இங்கே உற்பத்தியாகிற வெல்லம் எல்லாம் வெளி மாநிலங்களுக்குச் செல்லுகின்ற நிலைமை இருந்தது. அவர்கள் வெளி மாநிலங்களுக்கு வெல்லத்தை எடுத்துச் செல்லக் கூடாது என்று தடை போட்டார்கள். அதனால் வெல்லம் கிடைக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டு, பற்றுக்குறை சரிசெய்யப்பட்டது, விலையும் குறைந்தது. ஆனால் இடையிலே மத்திய அரசு ஒரு வாரத்திற்குள் புகுந்தது. அந்த அதிகாரம், அப்படி ஒரு மாநிலத்திலிருந்து இன்னொரு மாநிலத்திற்கு எடுத்துச் செல்கின்ற உரிமையைத் தடை செய்கின்ற அதிகாரம் உங்களுக்கு இல்லை என்று சொல்லி அந்த நிலைமையை மாற்றி விட்டார்கள். அதனால் விலை மீண்டும் இரண்டு, மூன்று மடங்கு அதிகமாகி விட்டது. அதனால் தமிழ் நாட்டு மக்கள் கஷ்டத்திற்கும் தொல்லைக்கும் ஆளான நிலைமையைப் பார்த்தோம்.

தன்னுடைய மாநிலத்தில் விளைகிற, உற்பத்தியாகிற பொருள்களைக் கட்டுப்படுத்த, விநியோக முறையைச் சீர்படுத்த அதிகாரம் இல்லை என்றால் இது உண்மையிலேயே சுயாட்சி உள்ள அரசுதானா என்பதை நியாய புத்தி உள்ளவர்கள் சிந்தித்துப் பார்ப்பார்கள்.

தேசிய நெடுஞ்சாலையைக் கடந்து ஒரு குடிநீர்க் குழாய் போட வேண்டுமென்றால்கூட—பொதுவாக சில இடங்களிலே சாலையின் இரு புறங்களிலும் ஊர்கள் அமைந்திருக்கும். குடிநீர் ஒரு பகுதிக்குக் கிடைக்கிறது என்றால் மற்றொரு பகுதிக்கும் குடிநீர் கிடைக்கச் செய்யவேண்டுமென்றால் இடையிலே இருக்கின்ற சாலையைக் கடந்து குழாயைக் கொண்டு செல்லவேண்டும், தேசிய நெடுஞ்சாலையைக் கடந்து எடுத்துச் செல்லவேண்டுமென்றால்கூட— அதற்கு மத்திய அரசைக் கேட்க வேண்டுமென்றால், உண்மையிலேயே மாநில அரசுக்கு அதிகாரம் போதுமா என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

வைத்திருக்கிறார்களோ, அவர்கள்தான் பேரறிஞர் அண்ணா அவர்கள் தான். இந்தத் தத்துவம் ஏற்பட்ட நேரம் திராவிட நாடு வேண்டும், வேண்டும், வேண்டும் என்று சொல்லி, பிறகு ஏற்பட்ட இந்தச் சூழ்நிலையிலே அது வேண்டாம்; அது கூடாது; அது கைவிடப்பட்டு வேறு எப்படிப்பட்ட அரசியல் அமைப்பு இந்தப் பகுதி மக்களுக்கு நல்லதொரு வாய்ப்புக்கு வளர்ச்சிக்கு வசதியாக இருக்கும் என்று எண்ணிப் பார்த்து, அந்தச் சிந்தனையின் கடைசியில் தான் இப்படிப்பட்ட ஒரு தத்துவம் அறிஞர் அண்ணா அவர்கள் மனதிலே தோன்றியது. அந்த நேரத்திலேதான் அவர்கள் மாநில சுயாட்சித் தத்துவத்தை எடுத்துத் தந்தார்கள். அந்தத் தத்துவத்திற்கு நாம் இங்கே செயல்வடிவம் கொடுக்கிறோம்.

இந்தச் சூழ்நிலையிலே இங்கே பேசிய நண்பர் சீனிவாசன் அவர்கள், கொள்கை ரீதியிலே அவர்கள் கட்சியின் சார்பில் ஏற்றுக் கொண்டாலும், கொண்டு வந்திருக்கிற நேரம் சரியில்லை; இந்தச் சுயாட்சி கோரிக்கையின் பின்னணியில் பிரிவினை வாடை அடிக்கிறது என்று எடுத்துச் சொன்னார்கள். இது உண்மையில் மிக மிக வேதனைப்படக்கூடிய ஒரு காரியம். அண்ணாவின் கொள்கையில் உண்மையிலேயே அவர்களுக்குப் பற்றும் பாசமும் இருக்கிறதென்றால், அண்ணாயிசம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்களே, அந்த முறையிலே அவர்களுக்குக் கொள்கைப் பிடிப்பு இருக்குமானால் இந்தத் தீர்மானத்திற்கு அவர்கள் நேரடியாக ஆதரவு தந்திருக்க வேண்டும். அதை விட்டுவிட்டு ஏதோ கொள்கை ரீதியிலே வரவேற்கிறோம் என்றும், வந்திருக்கிற நேரம் சரி இல்லை என்பதால் எதிர்க்கிறோம் என்றும் சொன்னார்கள்.

அவர்கள் நினைக்கிற மாதிரி இதிலே பிரிவினை வாடை எங்கே இருக்கிறது? மாநில சுயாட்சி என்று சொன்ன உடனே இது கூட்டாட்சித் தத்துவத்திற்கு விரோதமான கருத்து; கூட்டாட்சியை நாம் ஏற்றுக் கொண்டிருக்கிறபோது எப்படி ஒரு மாநிலம் சுயாட்சியாக இருக்க முடியும், எப்படி சுயாட்சியாக இயங்க முடியும் என்று கேள்வி எழுப்புகிறார்கள். இந்த இரண்டு தத்துவங்களுக்கும் முரண்பாடு கிடையவே கிடையாது.

*1974 ஏப்ரல் 16]* *[திரு. கே. பி. கந்தசாமி]*

*கூட்டாட்சி என்று சொல்லும்போது அது உண்மையான பரிபூரணமான கூட்டாட்சியாக இருக்க வேண்டுமானால் நிச்சயமாக அந்தக் கூட்டாட்சியில் இருக்கின்ற மாநிலங்களுக்குத் தன்னாட்சி இருக்க வேண்டும்; சுயாட்சி இருக்க வேண்டும். சுயாட்சியாக இயங்கக்கூடிய நிலைமையை இந்த மாநிலங்களுக்கு உருவாக்கியிருந்தால் பரிபூரணமான உண்மையான கூட்டாட்சி இருக்க முடியும். ஆகவே, மாநில சுயாட்சி நாம் கோருகின்ற நேரத்தில், மாநில சுயாட்சி கேட்கும்போது ஏதோ பிரிவினை என்ற எண்ணத்தை மனதிலே வைத்துக்கொண்டுதான் கேட்கிறார்கள் என்று யாரும் ஐயப்பட வேண்டியதில்லை, சந்தேகப்பட வேண்டியதில்லை.*

*இந்த அரசியல் அமைப்புச் சட்டம் இருக்கிறதே, அது உருவாக்கப்பட்ட நேரம்—அந்த நேரத்திலே அங்கே கூடிய தலைவர்கள், அரசியல் மேதைகள் இந்த நாட்டுக்கு எப்படிப்பட்ட அரசியல் அமைப்புச் சட்டம் தேவை, வேண்டும் என்று ஆராய்ந்து பார்த்த நேரத்தில் நாட்டிலே இருந்த சூழ்நிலைகள் இந்த நாட்டுக்கு ஒற்றையாட்சி முறை—யூனிட்டரி ஃபார்ம் ஆஃப் கவர்ன்மென்ட்—பொருந்தாது என்று நினைத்தாலும் கூட,*

*சென்ட்ரல் பார்ம் ஆப் கவர்ன்மெண்ட், அந்தக் கூட்டாட்சி முறைதான் நல்லாட்சி அல்லது அரசியல் முறையாக இருக்கின்றது என்ற முடிவுக்கு வந்தாலும் கூட அந்தக் கூட்டாட்சியை முழுவதுமாக அவர்கள் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அன்றைக்கு இருந்த சூழ்நிலை வடக்கே பாகிஸ்தான் தனியாகப் பிரிந்து போன நேரம். அதைத் தொடர்ந்து காஷ்மீரத்துப் பிரச்னை. தென்னாட்டிலே திராவிட முன்னேற்றக் கழகம் தனி திராவிட நாடு என்ற கோரிக்கை எழுப்பிய நேரத்தில், இந்தச் சூழ்நிலையில் கூடிய அரசியல் மேதைகள், அறிஞர்கள், அன்றைக்கு கூடிய தலைவர்கள், நம்முடைய மத்திய அரசுக்கு ஒரு கூட்டாட்சியிலே எந்த அளவுக்கு அதிகாரங்கள் கொடுக்கப்பட வேண்டுமோ, அதைவிட அதிகமாக ஏதோ ஒரு நெருக்கடி நிலை ஏற்பட்டால், தனி ஒரு ஒற்றை ஆட்சி முறை போல் இயங்கக்கூடிய, அங்கே அதிகாரங்கள் குவிக்கப்பட்டு நமக்கு அரசியல் அமைப்புச் சட்டமாகத் தந்தார்கள்.*

[திரு. கே. பி. கந்தசாமி] [1974 ஏப்ரல் 16

இந்த அரசியல் அமைப்புச் சட்டம் தனி யூனிட்டரியா அல்லது பெடரலா? இது என்ன என்று எனக்குப் புரியவில்லை என்று சொல்பவர்கள் இந்தச் சட்டத்தை ஆற அமர உட்கார்ந்து படித்துப் பார்த்தால், இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தின் மீது எத்தனை எத்தனையோ புத்தகங்கள் எழுதியிருக்கிறார்கள் அரசியல் மேதைகள். அந்த புத்தகங்களை எடுத்து படித்துபார்த்தால் எந்தவிதமான அமைப்பு என்பது மிகத் தெளிவாக விளங்கும். டாக்டர் வீர் தன் புத்தகத்தில் எழுதியிருக்கிறார் :

The new constitution establishes a system of Government which is almost quasi-federal, almost devolutionary in character, a unitary State with subsidary federal features rather than a federal State with subsidiary unitary features.

இது முழுக்க முழுக்க இதைப் பார்க்கும்போது ஒரு யூனிட்டரி ஸ்டேட் போலவும் ஒரு ஒற்றை அமைப்பு முறை போலவும், ஆனால் ஆங்காங்கே கூட்டாட்சி தத்துவத்தினுடைய வாடைகள் வீசப்படுவது போலவும், இந்த அரசியல் அமைப்பு இருக்கிறது என்பதை நிர்ணயித்திருக்கிறார்கள். இன்னும் சொல்லப் போனால் இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தைப் படித்துப் பார்த்த டாக்டர் கோஷால் இதைப் பற்றி தன் புத்தகத்தில் எழுதியபோது சொல்லியிருக்கிறார் :

Federal constitutions may be arranged in an ascending scale of conformity to the rigid federal principle beginning with Australia at the one end of the pole where the degree of conformity is the highest, to Canada at the other where it is the lowest. India's place in the scale would be by the side of Canada rather than Australia.

ஆகவே, நம்முடைய அரசியல் சட்டத்தைப் பார்க்கும்போது அது கூட்டாட்சித் தத்துவத்தை ஏற்றுக் கொண்டாலும் கூட, அந்தக் கூட்டாட்சி முறையை முழுவதுமாக நம் அரசியல் சட்டத்தில் நாம் பார்க்க முடிவதில்லை. ஆகவே நாம் சொல்லுகிறோம், அன்றைக்கு 1948, 1949, 1950-ம் ஆண்டுகள் அந்த நேரத்தில் இருந்த சூழ்நிலையிலே அப்படிப்பட்ட ஒரு அரசியல் அமைப்பு நமக்கு உருவாக்கித் தந்தாலும் கூட, இன்றைக்கு எழுகின்ற பிரச்சனைகளுக்கு

மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

1974 ஏப்ரல் 16] [திரு. கே. பி. கந்தசாமி]

இன்றைக்கு இருக்கக்கூடிய சூழ்நிலையில் இதற்குத் தீர்வு காண வேண்டுமானால், நாடெங்கிலும் தோன்றுகின்ற பிரச்னைகளுக்கு நல்லதொரு தீர்வு மக்களுடைய வாழ்வு வளம் பெறக் கூடிய அளவுக்கு நல்ல தீர்வு காண வேண்டுமானால், இந்த அரசியல் அமைப்புச் சட்டம் மாற்றப்பட்டாக வேண்டும் என்ற கொள்கையை நாம் இங்கே எடுத்திருக்கிறோம். அந்தத் தத்துவத்திற்கு, அந்தக் கொள்கைக்குக் கொடுக்கக்கூடிய செயல் வடிவம் தான் மாநில சுயாட்சிக் கோரிக்கை.

ஆகவே இதைச் சொன்னவுடனே ஏதோ பிரிவினையை மனதில் வைத்துக் கொண்டுதான் திராவிட முன்னேற்றக் கழகம் இப்படிப் பட்ட கோரிக்கையை எழுப்புகின்றது என்ற ஐயப்பாடு, என்ற சந்தேகம் யாருக்கும் எழத் தேவையில்லை. பிரிவினை கோரிக்கையை விட்ட பிறகுதான், திராவிடநாடு பிரிவினைக் கோரிக்கையை நாம் கைவிட்ட பிறகுதான் இந்த மாநில சுயாட்சி என்ற கோரிக்கையை நாம் எடுத்திருக்கிறோம். தெள்ளத் தெளிவாக நம் மனதில் பிரிவினை என்ற எண்ணமேயில்லை. ஆகவே பிரிவினை, பிரிவினை என்று சொல்லக் கூடியவர்கள் சற்றுச் சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று நான் இந்த நேரத்தில் கேட்டுக்கொள்கிறேன்.

இந்த நாட்டிலே சுதந்திரத்திற்கு முன்பு வெள்ளைக்காரன் இந்த நாட்டை ஆளுவதற்கு முன்பு, எத்தனையோ பேரரசுகள் இருந்திருக்கின்றன, சாம்ராஜ்யங்கள் இருந்திருக்கின்றன. மொகலாய சாம்ராஜ்யம், சிவாஜி சாம்ராஜ்யம், எத்தனை எத்தனையோ சாம்ராஜ்யங்கள் இந்த நாட்டில் இருந்திருக்கின்றன. ஏதோ குறிப்பிட்ட ஒரு தலைவர் ஒரு திறமையுள்ள, உறுதியுள்ள தலைவர் இந்த நாட்டை ஆண்ட நேரத்தில் ஒரு சாம்ராஜ்யம் போன்ற பேரரசை உருவாக்க வேண்டுமென்ற எண்ணம் தோன்றி, கொஞ்ச காலத்திற்கு அந்த முறையிலே அந்த அரசியல் அமைப்பு இங்கிருந்திருக்கிறது.

ஆனால் ஒவ்வொரு சாம்ராஜ்யமும், ஒவ்வொரு பேரரசும் அந்த குறிப்பிட்ட தலைவனுடைய மறைவுக்குப் பிறகு, சிதைந்து பல கூறுகளான காட்சியை நாம் இந்திய சரித்திரத்தில் பார்க்கிறோம். அந்த முறையிலேதான் இன்றைக்கு நாம் சொல்லக்கூடிய இந்த மாநில சுயாட்சி என்ற கோரிக்கை ஏற்றுக்கொள்ளப்

படாவிட்டால், ஏதோ அங்கங்கே பேசுகிறார்கள் பிரிவினைதான் என்று. அதைச் சொல்ல வேண்டிய தேவையே இல்லை. இருக்கின்ற சூழ்நிலையைப் பார்த்தால் இந்த ஒற்றை ஆட்சி முறை ஏதோ இங்கிருக்கக்கூடிய ஒரு சில தலைவர்கள், நான் சொல்லுவேன், நேரு இந்த நாட்டில் வாழ்ந்த காலம் வரை ஓரளவு சரியாக இது இயங்கி வந்தது. அதற்குப் பிறகு வந்திருக்கக்கூடிய இந்திரா காந்தி அம்மையார் ஏதோ ஒரு மாயையை இந்த நாட்டில் எழுப்பி விட்டாலும் கூட, அந்த மாயை கலைந்து போகக் கூடிய நிலைமை, ஏற்படலாம் நாட்டு மக்கள் அனைவரும், நாட்டிலே பல முறைகளில் இருக்கக்கூடிய பல இடங்களில் இருக்கக்கூடிய அத்தனை மக்களும் ஏற்றுக் கொள்ளக்கூடிய, தனித் திறமையுள்ள, உறுதியுள்ள தலைவர் இந்த நாட்டில் இருந்தால்தான், இன்றைக்கு இருக்கக் கூடிய அரசியல் அமைப்பில் இதை நாம் சரிவர இயங்க வைக்க முடியும்.

அப்படிப்பட்ட தலைவர் இந்த நாட்டில் இல்லாத நேரத்தில், இன்றைக்கு இருக்கக்கூடிய அரசியல் அமைப்புச் சட்டம் சரிவர இயங்க முடியாத ஒரு நிலை இருக்கிறது.

ஆகவேதான் நாம் சொல்லுகிறோம். எப்படிப்பட்ட சூழ்நிலையிலும், எந்த நேரத்திலும், நாம் தோற்றுவிக்கக்கூடிய அரசியல் அமைப்புச் சட்டம் சரிவர ஒழுங்காக இயங்க வேண்டுமானால், அது இன்னென்ன முறையில் இருக்க வேண்டுமென்று சிந்தித்து முடிவெடுத்த பிறகு தான் நாம் இப்படிப்பட்ட ஒரு மாநில சுயாட்சிக் கோரிக்கையை எழுப்பியிருக்கிறோம்.

இங்கே இந்த மாநில சுயாட்சித் தத்துவத்தின் அடிப்படையில் நாம் அதிகாரங்களை எந்தெந்த முறையில் பகிர்ந்து அளிக்க வேண்டுமென்று தெளிவாக எடுத்துச் சொல்லியிருக்கிறோம். இந்த மைய அரசு பட்டியல், மாநில அரசு பட்டியல், இப்படி அதிகாரங்கள் அந்த முறையிலே சீராக்கப்பட்டு, அது மாதிரி அமைக்கப்பட வேண்டும், சீர்திருத்தப்பட வேண்டுமென்று தெளிவாக எடுத்துச் சொல்லியிருக்கிறோம்.

இந்த மாநில அரசு நிச்சயமாக மத்திய அரசோடு சரி சமமான நிலையில் இருந்தால்தான், கூட்டாட்சித் தத்துவம் உண்மையில் இருக்கிறது என்று கருத முடியும். ஆகவே, நம்முடைய

**மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னர் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

*1974 ஏப்ரல் 16]* *[திரு. கே. பி. கந்தசாமி]*

கோரிக்கையின் பின்னணியில் நாம் சொல்லியிருப்ப தெல்லாம் இந்த அறிக்கையில், நாம் பேசவிருக்கின்ற ராஜமன்னார் குழு அறிக்கை, அதற்குப் பிறகு நம்முடைய அரசினுடைய வெள்ளை அறிக்கை, இவை அத்தனையையும் படித்துப் பார்க்கும்போது, இன்றைக்கு இருக்கக்கூடிய அதிகாரங்களை எந்த முறையிலே பகிர்ந்தளிக்க வேண்டுமென்று தெளிவாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அதை மாற்றி அமைத்து இன்றைக்குத் தோன்றியிருக்கின்ற பிரச்சனைகளுக்குத் தீர்வு காணும் விதத்தில் ஒவ்வொரு மாநில அரசுக்கும் உண்மையான சுயாட்சி இருக்கக்கூடிய நிலையில் இவைகள் சீர்பட்டாக வேண்டும். ஆகவே, அந்த முறையில் நம் அரசியல் சட்டம் திருத்தப்பட்டாக வேண்டும்.

இதற்கு நீங்கள் பதவியை ராஜினாமா செய்து விட்டுத் தேர்தலில் நிற்கலாம் என்ற கோரிக்கை இங்கே எடுத்து வைக்கப்பட்டது. நான் கேட்கிறேன். தேர்தலில் நின்று தமிழகத்தில் திராவிட முன்னேற்றக் கழகம் வெற்றி பெற்று விட்டால் மாத்திரம் இந்த நாட்டிலே இந்த அரசியல் அமைப்புச் சட்டம் மாற்றப்படக்கூடிய அல்லது திருத்தப்படக்கூடிய சூழ்நிலை இருக்கிறதா? அது இல்லவே இல்லை என்று சொல்லுகின்ற நாம், ராஜினாமா செய்து விட்டுத் தேர்தலுக்குப் போனாலும், வெற்றி பெற்றாலும் கூட, நாம் இந்த அரசியல் சட்டம் திருத்தக்கூடிய வாய்ப்பு இந்த நாடு முழுவதும் இந்த நிலை உண்டாக வேண்டும். இந்தத் தீர்மானத்தின் மூலமாக நாட்டில் இப்படிப்பட்ட ஒரு எழுச்சி ஏற்படும் என்ற அந்தக் கருத்தைச் சொல்லி இந்தத் தீர்மானத்தை ஆதரிக்கின்றேன். வணக்கம்.

(பிற்பகல் 1.00)

**திரு. நா. வீராசாமி:** பாயின்ட் ஆப் ஆர்டர். தலைவர் அவர்களே, இன்றையதினம் மாநில சுயாட்சிபற்றி—ராஜமன்னார் குழுவின் அறிக்கைபற்றி—இந்த மன்றத்தில் என்ன விவாதம் நடைபெறுகிறது என்பதை அகில இந்தியாவிலும் உள்ளவர்கள் பார்த்துக்கொண்டிருக்கின்ற நேரத்தில்—எதிர்க்கட்சியில் இருக்கக்கூடிய காங்கிரஸ் (ஓ), காங்கிரஸ் (ஆர்.) ஆகிய இரண்டு கட்சிகளில் இருந்தும் இதுவரை ஒருவர்கூடப் பேசவில்லையே, இந்த விவாதத்தில் கலந்துகொள்வதைப் புறக்கணித்து விட்டார்களா என்று அறிய விரும்புகிறேன்.

[1974 ஏப்ரல் 16

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** இது பாயின்ட் ஆப் ஆர்டர் இல்லை.

**திரு. பெ. சீனிவாசன் :** சார், பர்சனல் எக்ஸ்ப்ளனேஷன்—நண்பர் கந்தசாமி அவர்கள் பேசும்போது அண்ணா பெயரை வைத்திருக்கிற கட்சி இந்தத் தத்துவத்தை எதிர்ப்பதாகச் சொன்னார்கள். அறிஞர் அண்ணா அவர்கள் கொள்கை அளவில் மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டுமென்று சொன்ன கருத்துக்கு—மாநில சுயாட்சி என்று பெயரிட்டு, முஜ்பீர் ரஹ்மானை இழுத்து, இதற்கு வேறு வடிவம் கொடுப்பதைத்தான் நாங்கள் ஏற்க மாட்டோம் என்று சொன்னோம்.

* **திரு. வா. மை. அப்துல் ஜப்பார் :** தலைவரவர்களே, மாண்புமிகு முதலமைச்சர் அவர்களால் கொண்டுவரப்பட்டுள்ள மாநில சுயாட்சி கோரிக்கை குறித்த தீர்மானத்தை ஆதரிக்கும் முகத்தான் ஒருசில கருத்துக்களைச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

இன்று இந்தச் சபையிலே நண்பர் ஆலடி அருணா அவர்களுடைய கொள்கை வாதத்தையும், ஆவேசத்தையும் கண்டோம். அதற்கடுத்தபடியாக மனச்சாட்சியால் உந்தப்பட்டு மெல்லவும் முடியாது—விழுங்கவும் முடியாது தத்தளிக்கும் ஒரு சூழ்நிலையையும் கண்டோம். ஆக ஒன்றை நான் இங்கே சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

நமது திருநாடு பிரிட்டிஷார் ஆட்சி காலத்திற்கு முன்னதாகப் பல நூற்றுக்கணக்கான பகுதிகளாகப் பிரிந்திருந்தது. பல மன்னர்களால் ஆளப்பட்டு வந்தது. பிரிட்டிஷாருக்கு முன்னதாக இந்தத் திருநாடு ஒருநாடாக இருந்தது இல்லை. ஒரு கொள்கையின் அடிப்படையிலோ, ஒரு தலைவனுடைய தலைமையிலோ, பண்பாட்டின் அடிப்படையிலோ, கலாசாரத்தின் அடிப்படையிலோ, மொழியின் அடிப்படையிலோ ஒரே நாடாக இருந்தது இல்லை. பிரிட்டிஷாரின் ஆட்சியினால் பல தீமைகள் ஏற்பட்டன என்ற போதிலும், அவர்களது ஆட்சியினால் ஏற்பட்ட ஒரு பெரிய நன்மை—இந்த நாட்டை ஒருருவமாக ஆக்கி நம்மிடத்தில் ஒப்படைத்துச் சென்றிருப்பதுதான். அதனால்தான் இன்றைக்கு நாம் ஒரு நாடு என்று பேசுகிறோம்.

1974 ஏப்ரல் 16] [திரு. வா. மை. அப்துல் ஜப்பார்]

பிரிவினையைப்பற்றி இழுத்துப் பேசினார்கள். பாகிஸ்தானைப் பற்றிப் பேசினார்கள். அதைப்பற்றி நானும் ஒருசில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன்.

சர் ஸ்டாபர்ட் க்ரிப்ஸ் இந்த நாட்டுக்காக ஒரு திட்டத்தைக் கொண்டு வந்தார்கள். மாநில சுயாட்சியை அடிப்படையாகக் கொண்டு—இந்த நாட்டை மூன்று பகுதியாக அதனதன் கொள்கை அடிப்படையில் செயல்படக்கூடிய திட்டத்தைக் கொண்டுவந்தார்கள். காலஞ்சென்ற முகமது அலி ஜின்னா அவர்கள் மாநில சுயாட்சி அடிப்படையில் மத்தியில் சமஷ்டி ஆட்சி—மாநிலங்களில் அந்தந்த அரசு ஆட்சிகள் என்ற திட்டத்தில் இருந்த காரணத்தினால் இந்தத் திட்டத்தை ஏற்றுக்கொண்டார்கள். பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் பேசும்போது சூசகமாக அரசியல் நிர்ணயசபையை யாரும் கட்டுப்படுத்த முடியாது, அது யாருக்கும் கட்டுப்பட்டது அல்ல, நாங்கள் விரும்பிய முறையில் அரசியல் சாசனம் அமைக்கப்படும் என்று தெரிவித்த காரணத்தினால்—எதிர் காலத்தில் காங்கிரஸ் சூழ்ச்சி செய்து ஸ்டாபோர்ட் கிரிப்ஸ் திட்டத்தில் உள்ள மாநில சுயாட்சி உரிமை அழிக்கப்பட்டு விடும் என்று அஞ்சிய காரணத்தினால் இது நாம் கோருகிற ஒரு சுயாட்சியை அளிக்காது என்றே பிரிவினை வாதத்தை ஜின்னா அவர்கள் வற்புறுத்தினார்கள். அதனால் ஏற்பட்ட தீமைகளை, சொல்லொணாத துயரங்களை இன்று வரை நாம் அனுபவித்து வருகிறோம்.

கிழக்கு வங்காளத்திலும் அவர்கள் பிரிவினை கோரவில்லை. வங்காள மொழி அடக்கப்படுகிறது, நசுக்கப்படுகிறது தங்களுடைய நாட்டு செல்வத்தினால் மேற்கு பாகிஸ்தான் வளம் பெறுகிறது, தாங்கள் பெரும்பான்மையாக இருந்தும் தங்கள் உரிமைகள் நசுக்கப்படுகின்றன. மேற்கு பாகிஸ்தான் ஆதிபத்தியம் தான் அதிகமாக இருக்கிறது என்றெல்லாம் சொல்லி—மேற்கு பாகிஸ்தானோடு சமஷ்டி அமைப்பில் இருப்பதோடு, கிழக்கு வங்காளத்திற்கான அதிக அதிகாரங்களைக் கோரும் 6 அம்ச திட்டத்தைத்தான் முன்வைத்தார்கள். யாஹியாகானும், பூட்டோவும் அதை எதிர்த்த காரணத்தினால் பிரிவினை ஏற்பட்டாக வேண்டிய நிலைமை உருவாயிற்று.

[திரு. வா. மை. அப்துல் ஜப்பார்] [1974 ஏப்ரல் 16

ஆக, ஒன்றைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மாநில சுயாட்சி என்பது பிறப்புரிமை. அதை நசுக்க எண்ணம் கொள்பவர்கள்தான்—அறிந்தோ அறியாமலோ பிரிவினையைத் தூண்டுபவர்களாக—பிரிவினைக்கு ஆதரவு தருபவர்களாக ஆகிறார்கள்.

மாநில சுயாட்சி கேட்பதே தவறு அல்ல. வளர்ந்து வருகிற தன்மைக்கேற்ப மாநிலங்களின் வளர்ச்சிக்கு மாநில சர்க்கார்களுக்கு அதிக அதிகாரம் இருந்தாகவேண்டும் என்கிறபோது—அதை நசுக்க முற்படுபவர்கள் தான் பிரிவினைக்கு வித்திடுகிறார்கள்.

இந்த நாட்டின் பரப்பு—ஜனத்தொகைபற்றி எல்லாம் சொல்லப்படுகிறது. நான்கூட இங்கு சொல்லிக் காட்டியிருக்கிறேன். கன்னியாகுமரி முதல் இமாசலம் வரையில் என்றைக்கும் நாம் ஒற்றுமையாக இருந்ததாகத் தெரியவில்லை. நாகர்கோயிலில் இருப்பவருக்கும் குஜராத்தில் இருப்பவருக்கும் என்ன ஒற்றுமை இருக்கிறது ? ஆயினும் நமக்குள் இருக்கிற ஒற்றுமை ஒன்றே ஒன்றுதான்—நாம் எல்லோரும் உள்ள பூர்வமாக இந்தியன் என்று நினைக்கிறோம். ஒரு பகுதியின் சுதந்திரத்தை—வளர்ச்சியை—மொழியை—அரசியல் ஆதிக்கத்தினால் நசுக்க முற்படுகிறபோது தான் உள்ளபூர்வமாக நினைக்கிற ஒற்றுமையே சிதறுண்டு போகிறது.

நான் கிழக்கு வங்காளத்தைப்பற்றிச் சொன்னேன். கிழக்கு வங்காளக் கல்லூரிகளில் படித்த மாணவர்கள்தான் பெரிதும் அந்தக் கிளர்ச்சியில் ஈடுபட்டார்கள். அவர்களது மொழி நசுக்கப்படுகிறது என்றபோது அவர்களுக்கு அந்த ஆவேசம் வந்தது.

ஒவ்வொருவரும் அவர்களது மொழியை உயிரைக் காட்டிலும் நேசிக்கிறார்கள். தாய்மொழி நசுக்கப்படுகிறபோது—நாட்டுப் பற்றையே இழந்துவிடுகிற நிலை வருகிறது. இன்றைக்கு தமிழ் மொழியின் வளர்ச்சியை இந்தி நசுக்கிவிடும் என்று அஞ்சுகிறோம். மாநில சுயாட்சி என்பது நம்முடைய தாய்மொழியைப் பல்வேறு துறைகளிலும் வளர்ச்சி அடையச் செய்யவும் வழியாகிறது.

*1974 ஏப்ரல் 16]* *[திரு. வா. மை. அப்துல் ஜப்பார்]*

இன்று போஸ்டாபீஸ் போய் கார்டு வாங்கி வந்தேன் என்கிறோம் என்றால் இந்தி மொழியின் ஆதிக்கத்தை வளரவிட்டால் 50 ஆண்டு களுக்குப் பிறகு டாக்கர் போய்--கேவல்பதா வாங்கி வந்தேன் என்று சொல்லக்கூடிய நிலைதான் வரும். அதற்கு இடமளிக்கக் கூடாது என்பதற்குத்தான் மாநில சுயாட்சி.

நாங்கள் வட மாநிலங்களுக்குச் சென்றிருந்தபோது பார்த் தோம். திரு. சுப்பிரமணியம் போன்றவர்கள் எல்லாம் அரபிக் லெட்டர்ஸ்—ரோமன் லெட்டர்சுகளைத்தான் பயன்படுத்தவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஆனால் அங்குள்ளவர்கள் கார் நம்பர்களைக் கூட அவர்களது இந்தி எழுத்தில் எழுதியிருக்கி றார்கள். அந்த அளவுக்கு அங்கே வெறி என்று சொல்லலாம். நமக்கும் தமிழில் எண்கள் இருக்கின்றன. இதை எழுத ஆரம்பித்தால் என்ன நிலையாகும்? இவைகளை எல்லாம் சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அத்துடனே, நாம் என்ன பார்க்கிறோம் என்று சொன்னால், மத்திய அரசினுடைய திருநோக்கு எந்த எந்த மாநிலங்கள்மீது விழுகின்றதோ, அவர் களுடைய கருணை கடாட்சம் எந்த எந்த மாநிலங்கள் மீது விழு கின்றதோ—இங்கேகூட, அழகாக எடுத்துச் சொன்னார்கள்— உத்தரப் பிரதேச மாநிலத்திலிருந்து வருகின்றவர்கள்தான் இந்த நாட்டுப் பிரதம அமைச்சராக வருகிற காரணத்தால்—அந்த மாநிலத்திற்குத் தனிச் சலுகைகள் காட்டப்படுகின்றன என்று சொன்னார்கள்.

துரதிருஷ்டவசமாக, வெகுவாக தொழில் வளங்களில் முன்னேறியுள்ள பம்பாய்—மகாராஷ்டிரா—போன்ற மாநிலங்களி லிருந்து நிதி அமைச்சர்கள் வருகின்ற காரணத்தாலே, அந்த மாநிலங்கள் இன்னும் அதிகமாகத் தொழில் வளம் பெறுகின்ற தன்மை இருக்கிறது.

நம்முடைய முதலமைச்சரவர்கள் வெளியிடுகின்ற நிதிநிலை அறிக்கையில் ஒவ்வொரு ஆண்டும் என்ன அவல நிலையைக் காண் கிறோம்? மத்திய அரசிடம் கேட்டிருக்கிறோம். அவர்கள் கொடுக்க வேண்டியதைக் கொடுக்கவில்லை. நாம் மத்திய அமைச்சரிடம் கேட் டிருக்கிறோம், பஞ்சத்தின் காரணமாக. எதிர்பாராத விபத்துக் களின் காரணமாக இந்த அளவு நியாயமான தொகையைக் கேட் டோம், ஆனால் அவர்கள் இவ்வளவுதான் கொடுத்தார்கள். ரூபாய்

[திரு. வா. மை. அப்துல் ஜப்பார்] [1974 ஏப்ரல் 16

14 கோடி ஒதுக்கவேண்டிய சேலம் உருக்காலைக்கு ரூ. 3 கோடிதான் ஒதுக்கினார்கள், நாங்கள் வற்புறுத்தினாலும் அவர்கள் ஒத்துக் கொள்ளவில்லையென்று குரல்தான் எழுப்பப்படுகிறது.

இந்த நிலையிலே ஒரு மாநில அரசு இருக்குமானால், அந்த மாநிலம் வளர்ச்சி பெறுமா, அந்த மாநில மக்களுக்கு ஏதாவது பயன்படுமா, அதனால் மாநிலங்கள் வளர முடியுமா என்பதை எல்லாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இன்றைக்கு மாநிலங்களுடைய நிலைமை என்ன? சிமெண்ட், நூல், சர்க்கரை, உணவுப் பொருள் இவற்றை எடுத்துக் கொள் வோம். நம்மிடம் உற்பத்தியாகக்கூடிய சிமெண்ட் நம்முடைய தேவைக்குப் போக அதிகமாக இருக்கிறது. நம்மிடம் உற்பத்தி யாகக்கூடிய நூல், நமது தேவையைவிட இரண்டு மடங்கு அதிக மாக இருந்து கொண்டிருக்கிறது. ஆயினும், இன்றையதினம் நம் முடைய மாநிலத்தின் நிலை என்ன?

சிமெண்ட் பற்றுக்குறையினாலே பல அரசாங்கக் கட்டிடங்கள் கூட, தடைபட்டுப் போயிருக்கின்ற நிலை ஏற்பட்டிருக்கிறது. பொதுமக்கள் நிலையைப்பற்றி சொல்லவேண்டாம். சிமெண்ட் பெறுவதற்காக, மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகத்திற்கும், தாசில்தார் அலுவலகத்திற்கும் நடப்பதற்குச் சரியாக இருக்கிறது. அங்கு நடைபெறுகிற வேறு அந்தரங்கமான தன்மைகளைப்பற்றி நான் விளக்கத் தேவையில்லை. நாம் உபரியாக உற்பத்தி செய்கிறோம். அதே சமயத்தில், நம்முடைய மாநில மக்களுடைய நன்மைக்கு அவற்றை நாம் பயன்படுத்த முடியவில்லை.

நூல் சம்பந்தமாக எடுத்துக்கொள்வோமானால், நெசவாளர்கள் பட்டினியால் அவதிப்படுகிற அவல நிலையிலே இருக்கிறார்கள். அவர்களுக்கு இந்த அரசு முடிந்த அளவு எல்லா வசதிகளையும் செய்ய ஆசைப்பட்டது. ஆனால், தேவையான நூலை நம்மால் கொடுக்க முடிந்ததா? நூல் உற்பத்தியாகிறது. ஆனால், அதே சமயத்திலே அதை எடுத்து விநியோகிக்க முடியவில்லை. தேவையைப் பூர்த்தி செய்ய முடியவில்லை. அவர்களுடைய அன்றாட வாழ்வுக்கு உதவி செய்ய முடியவில்லையென்று சொன்னால், இந்த

அரசுக்கு இருக்கிற சக்தி, இருக்கிற அதிகாரம், முனிசிபாலிட்டிக்கு இருப்பதைவிடக் குறைந்தது, தரம் தாழ்ந்தது என்பது நமக்கு விளக்கமாகத் தெரிய வருகின்றது.

ஆகவேதான் சொல்கின்றேன். இம்மாதிரி நாம் உற்பத்தி செய்தும்கூட, மக்கள் பெறமுடியாத அளவு, அவர்களுக்கு உதவி செய்ய முடியாத அதிகாரம்தான் நமக்கிருக்கிறது. அந்த அதிகாரங்களை விரிவுபடுத்த வேண்டும். உண்மையிலே, மாநிலங்கள் வளர்ச்சி அடையக்கூடாது என்ற நிலையில் மத்திய அரசு இருக்கக் கூடாது என்று தான் முன்னேற்றத் திட்டங்கள் அனைத்தும் நிறை வேற்றப்பட அதிகாரங்கள் வேண்டுமென்றுதான் மாநில சுயாட்சி கேட்கின்றோம். (மணி அடிக்கப்பட்டது) எல்லோருக்கும் நேரம் கொடுத்திருக்கிறீர்கள் . . .

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** 15 நிமிடம் ஆயிற்று, எல்லோருக்கும் ஒரே நேரம்தான் கொடுத்துவருகிறேன்.

**திரு. எம். ஏ. லத்தீப் :** எங்கள் கட்சி உறுப்பினருக்கு நேரம் கொடுங்கள். 1½ மணி வரையிலும் பேசட்டும். இது முக்கியமான பிரச்னை.

**திரு. வா. மை. அப்துல் ஜப்பார் :** இன்னொரு அம்சத்தை நாம் கவனிக்க வேண்டும். இந்த மத்திய அரசு இவ்வளவு அதிகாரத்தை வைத்துக்கொண்டிருக்கிறதே, இந்த அதிகாரத்தைக் கொண்டு மக்களுக்கு ஏதாவது நன்மை செய்திருக்கிறதா என்றால், எந்த இடத்தில் பயன்படுத்த வேண்டுமோ, அங்கே அதிகாரத்தைப் பயன்படுத்தவில்லை. அங்கேதான் தவறிவிட்டார்கள்.

நீர் தகராறை எடுத்துக்கொள்வோம். நதி நீர்த் தகராறு—விதர்பா பகுதியில் நர்மதா ஆற்றுத் தகராறு, கிருஷ்ணா ஆற்றுத் தகராறு, மக்களிடையே இதனால் ஏகப்பட்ட சர்ச்சைகள். மத்திய அரசு மாநிலங்களுக்கு மேல் ஆதிக்கம் செலுத்தக்கூடிய மேலாதிக்கம் பெற்றிருக்கக்கூடியவர்கள், அவர்கள் உடனடியாக சமரசம் செய்திருக்க வேண்டும். இரண்டு மாநிலத்து மக்களும் பாதிக்கப்படாத நிலையில் விரைவான, முடிவான திட்டங்களை அவர்கள் வகுத்துத் தந்திருக்க வேண்டும். அந்தக் கடமையை அவர்கள் ஆற்றி வந்தார்களா என்று கேட்க விரும்புகிறேன்.

**மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னுர் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

[திரு. வா. மை. அப்துல் ஜப்பார்] [1974 ஏப்ரல் 16

காவேரி நீர்ப் பிரச்னை இன்றுவரை தீர்க்கப்படாததற்குக் காரணம், இந்தப் பிரச்னையைத் தூண்டிவிட்டு, மாநில அரசுகள் மீது மக்கள் நம்பிக்கை குறையவேண்டுமென்று உள்ளத்தில், அந்தரங்கத்தில் சதி செய்கிருர்களோ என்றுகூட நான் அஞ்ச வேண்டியிருக்கிறது.

உண்மையிலே, இவ்வளவு சர்வ வல்லமை உள்ள மத்திய அரசு இரண்டு அரசுகளுக்குமிடையே தீர்ப்பு வழங்கி, இப்படித்தான் நீரை வழங்க வேண்டுமென்று நிர்ப்பந்தித்திருக்க முடியாதா? அந்த அளவுக்கு அதிகாரம் இருக்கத்தான் செய்கிறது. இந்த நீர்ப் பங்கீட்டினுல், வளர்ச்சித் திட்டங்கள் எந்த அளவு பாதிக்கப்படு கின்றன? நான் கூட இந்த நீர்ப் பிரச்னையிலே பாதிக்கப்பட்டவன்.

என்னுடைய தொகுதியில் அமராவதி குறுக்கே அணை கட்ட வேண்டுமென்று சொல்லிக்கொண்டிருக்கிறேன். அதைக் கட்ட முடியாது. அண்டை மாநிலமான கர்நாடகத்தோடு உள்ள காவேரி நீர்ப் பிரச்னை என்று தீர்க்கப்படுமோ, இறைவன்தான் அறிவான். மத்திய அரசின் போக்கைப் பார்த்தால், 10 ஆண்டுகளானுலும்கூட, தீர்க்கப்படாது என்ற சூழ்நிலை இருக்கிறது. எங்கே, அவர்களு டைய அதிகாரங்கள் பிரயோகிக்கப்பட வேண்டுமோ, அங்கே பிரயோகிக்காது, எங்கே பைசல் செய்யவேண்டுமோ, அங்கே பைசல் செய்யத் தவறிவிட்டார்கள்.

மகாராஷ்டிராவிற்கும், கர்நாடகத்திற்குமுள்ள எல்லைப் பிரச்னையின் காரணமாக ஏற்பட்ட போராட்டங்களின் விளைவாக எத்தனை மக்கள் துன்பப்பட்டார்கள்? நிர்வாணமாக, பெண்கள். ஆண்கள் அனைவரும் துரத்தப்பட்டார்கள். சில பத்திரிகைகள் செய்தி வெளியிட்டன, சில பத்திரிகைகள் செய்தி வெளியிடவில்லை. என் ஊர் வாசிகள், கண்ணுலே கண்டவற்றைச் சொன்னுர்கள்.

மகாராஷ்டிரர்களைத் தவிர, அவர்கள் தமிழர்களாக இருக் கட்டும், கன்னடியர்களாக இருக்கட்டும், தெலுங்கர்களாக இருக்கட்டும், அவர்கள் எல்லாம் அடித்து விரட்டப்பட்டார்கள். அனைத்துப் பொருள்களையும் விட வேண்டிய சூழ்நிலையில் மத்திய அரசு தானே அதிகாரங்களை வைத்துக் கொண்டு எந்த அளவு அந்த அதிகாரங்களைப் பயன்படுத்த முடிந்தது?

ஆகவே, இப்படி தேவையற்ற அதிகாரங்களை வைத்துக் கொண்டு மக்களுக்கு இடையூருக இருப்பதால் என்ன பலன் என்று தான் கேட்க ஆசைப்படுகிறேன்.

இன்றைக்குக்கூடச் சொன்னுர்கள், ரஷியாதான் உலகத்திலேயே முற்போக்கான திட்டங்களுடன் இருக்கிறது என்று. அதிலே கருத்து மாறுபட்டவன் நான். அதைச் சொல்ல நான் வெட்கப் பட வேண்டியதில்லை. ஆனுல், இந்த ஒரு விஷயத்திலே குறைந்த பட்சம் ரஷியாவைப் பின்பற்ற வேண்டும்.

உக்கிரெயின் ரஷியாவிலே ஒரு மாநிலம். அது ஐக்கிய நாட்டு அவையில் அங்கம் வகிக்கிறது. சோவியத் குடியரசிலே இருக்கிற 14 மாநிலங்களில், உக்கிரெயின் ஒரு குடியரசு. அதனுடைய அந்தஸ்து எந்த அளவு உயர்த்தப்பட்டிருக்கிறது என்று சொன்னுல் ஐக்கிய நாட்டுச் சபையிலே தன் பிரதிநிதியும் அங்கம் வகிக்கக் கூடிய அளவில் தன்னுடைய நாட்டின் சார்பாக அவர்களால் வாக்களிக்க முடிகிறது என்று சொன்னுல், அந்த நாடு தாழ்ந்தா விட்டது? அந்த நாடு வளர்ச்சி அடையவில்லையா ?

பைலோ ரஷியா என்று இன்னெரு மாநிலமும் இந்த மாதிரி உரிமை பெற்றிருக்கிறது. மாநிலங்கள் சுயாட்சி பெற்றுவிட்டால் வளர்வோமே தவிர, இந்தியாவுக்கு, ஊறு நேர்ந்து விடாது, அங்கங்கள் வளர்ந்தால் உரு சிதைந்து விடாது என்பதை நான் இங்கே சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

இந்த மாநிலத்தினுடைய கஷ்டங்களைச் சமீப காலத்திலே பார்த்தோம். மின்சாரப் பற்ருக்குறை ஆண்டுதோறும் ஏற் பட்டது. அந்தச் சங்கடத்தை அனுபவிக்க வேண்டியவர்களாக இருக்கிரேும். சென்னையிலே உள்ளவரையில் எங்கள் பாடு நிம்மதிதான். ஊருக்குச் சென்ருல் தாங்கவே முடியாது. காரணம் மின் விசிறி ஓடாது. அந்த மாதிரி மின்சார கட் இருந்து கொண்டிருக்கிறது. இந்த ஆண்டோடு அந்த நிலை போய்விடாது. பத்து ஆண்டுகளுக்கோ, 12 ஆண்டுகளுக்கோ இருக்கும். அதற்கு மத்திய அரசுதான் காரணம்.

**மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

[திரு. வா. மை. அப்துல் ஜப்பார்] [1974 ஏப்ரல் 16

நல்லெண்ணம் உள்ளவர்கள், சிந்தித்து, மனச்சாட்சியோடு சிந்தித்துப் பதில் சொல்லுங்கள். இதற்கு மாநில அரசுதான் காரணமா?

ஹொகேனக்கல் திட்டத்தைக் கேட்டோம். நெய்வேலியில் இரண்டாவது சுரங்கத் திட்டம் என்ன, தூத்துக்குடியிலே அனல் மின்சாரத் திட்டம் என்ன, கல்பாக்கம் மின் திட்டம் என்ன? அவற்றைச் செய்து தாருங்கள் என்றால், செய்யவில்லை.

நிதி அனைத்தையும் எடுத்துக்கொண்டு, அதிகாரம் அனைத்தையும் எடுத்துக்கொண்டு, அவற்றிலே தாங்கள் செய்யவேண்டிய பணியைச் செய்யாது, இந்த மாநிலத்தைப் பஞ்சத்திலே ஆழ்த்தக் கூடிய அளவு மத்திய அரசிடம் இத்தனை அதிகாரங்கள் இருக்கத் தான் வேண்டுமா என்பதை இங்கே கூடியுள்ளவர்கள் ஆலோசித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

உரப் பற்றுக்குறை பற்றி மற்ற மாநிலங்களுக்குச் சென்று விசாரித்து வந்தோம். பகிரங்கமாகச் சொல்லப்பட்டது, சில அமைச்சர்கள்கூட ஒப்புக்கொண்டார்கள். வேறு மாநிலங்களிலே உரத்தைப் பொறுத்தவரையில் அரசாங்கத்தின் விலை 52 ரூபாய் அல்லது 55 ரூபாய் என்று விற்கப்படவேண்டியது வெளிச்சந்தை யிலே. 155 ரூபாய் வரையில் விற்கப்படுகிறது. 55 ரூபாய்க்கு விற்கவேண்டியதை 155 ரூபாய்க்கு விற்கிறவர்களை என் கைது செய்யக்கூடாது, அல்லது அவர்களுடைய ஸ்டாக்கைப் பறிக்கக் கூடாது என்று கேட்டால் எஷன்ஷியல் கமாடிட்டீஸ் ஆக்ட் என்று இருக்கிறது. அந்த ஆக்டின்கீழே மாநில அரசு எந்தவிதமான நட வடிக்கையும் எடுக்க முடியாது, அதனால் அப்படிப்பட்ட விநியோக முறையைத் தடுக்க முடியாது என்றுதான் சொல்கிறார்கள்.

தமிழ்நாட்டிலே மாத்திரமல்ல, ஒவ்வொரு மாநிலத்திலேயும்—மற்றப் பகுதிகளைவிட தமிழ்நாடு சிறப்பாகத்தான் இருக்கிறது என்று சொல்லவேண்டும்—அப்படிப்பட்ட நிலைமைதான் இருக் கிறது

மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை
மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம்
திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

1974 ஏப்ரல் 16] [திரு. வா. மை. அப்துல் ஜப்பார்]

மேற்கு வங்கத்திலே ஒருவரைக் கேட்டால் அவர் சொல்கிறார், நீங்கள் எதிர்க்கட்சி ஆளுகின்ற மாநிலமாக இருக்கிறீர்கள், ஆகவே மத்திய அரசோடு போராடி சில சலுகைகளைப் பெறக்கூடிய நிலைமை இருக்கிறது. நாங்கள் அப்படியல்ல, ஒரே கட்சியைச் சேர்ந்தவர்களாக இருக்கின்றவர்கள் ஆளுகின்ற காரணத்தினால் நாங்கள் வாய் திறக்கக்கூட முடியவில்லை என்று மேற்கு வங்கத்திலே இருக்கின்ற மதிப்பீட்டுக் குழு உறுப்பினர் ஒருவர் என்னிடம் சொன்னார்.

ஒரு வணிகன், ஒரு கள்ளமார்க்கட்காரன் கள்ளச் சந்தையிலே ஒரு பொருளை விற்கிறான் என்றால் அவனைத் தடுக்க முடியவில்லை. தண்டிக்க முடியவில்லை, மத்திய அரசு அவர்களை மறைமுகமாக ஆதரிக்கக்கூடிய நிலைமைதான் இருக்கிறது. இந்த நிலையிலே மாநில அரசால் என்ன செய்யமுடியும் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஆகவே மாநிலங்களுக்கு இருக்கின்ற அதிகாரங்கள் போதாது.

அது மட்டுமல்ல. எங்கே பார்த்தாலும் எண்ணெய் பற்றாக்குறை. அதே நேரத்திலே கடலை எண்ணெய் விலை 8 ரூபாய் 10 ரூபாய் விற்கிறது. இங்கே உள்ள கடலை மற்ற மாநிலங்களுக்குச் செல்லாமல் இருக்கவேண்டும். ஆனால் என்ன நிலைமை? 50 ஆயிரம் டன் கடலை வெளிநாட்டுக்கு பம்பாயிலிருந்து ஏற்றுமதி செய்யப்படுகிறது. அதைத் தடுக்க நம்மால் முடியவில்லை. மத்திய அரசு விசேஷ அதிகாரத்தைப் பயன்படுத்தி, மாநிலத்திலே விளைகிற பொருள்களை, உணவுப் பொருள்களை, எண்ணெய் போன்ற பொருள்களை ஏழை மக்கள் பயன்படுத்தக்கூடிய பொருள்களை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யக்கூடாது என்று தடை செய்வதற்கு மாநிலத்திற்கு அதிகாரம் கிடையாது என்றால் என்ன பயன்? எப்படி பற்றாக்குறையைச் சரி செய்ய முடியும். விலையைக் குறைக்க முடியும்?

[திரு. வா. மை. அப்துல் ஜப்பார்] [1974 ஏப்ரல் 16

கடைசியாக ஒரு கருத்தைச் சொல்லி முடித்துக்கொள்கிறேன். உண்மையாகவே இந்த மாநிலத்தை நேசிக்கின்ற உணர்வு இருக்குமானால் உண்மையாக இந்த மாநிலத்து மக்களை அவர்கள் நேசிப்பது உண்மையாக இருந்தால் அரசியல் சூழ்நிலைகளுக்கு அப்பாற்பட்டவர்களாக இருந்து நம்முடைய மாநிலம் சிறக்க வேண்டுமென்று விரும்புவார்களானால் அவர்கள் இந்த மாநில சுயாட்சித் தீர்மானத்தை ஆதரிக்க வேண்டுமென்று வேண்டுகோள் விட்டு இந்தத் தீர்மானத்தை எங்கள் கட்சியின் சார்பாக ஆதரித்து முடிக்கிறேன். வணக்கம்.

**திரு. ஜே. ஜேம்ஸ் :** ஆன் எ பாயின்ட் ஆப் கிளாரிபிகேஷன் சார், இன்றைய தினம் காங்கிரஸ் கட்சியின் சார்பாக யாரும் கலந்துகொள்ளவில்லை என்றும் அதனால் ஏதோ இந்தத் தீர்மானத்தை நாங்கள் ஆதரிக்கிறோம் என்றும் சொல்லி திரு. வீராசாமி அவர்கள் எங்கள் கட்சிக்கு ஒரு களங்கத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள். நாங்கள் பேசுவதற்கு சமயம் இல்லாத காரணத்தினால் தானே தவிர வேறு இல்லை. நாங்கள் கலந்துகொள்ளத் தயாராக இருக்கிறோம், நாளைய தினம் எங்களுடைய கருத்து என்ன என்பதை அவர்கள் அறிந்துகொள்ளலாம் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** தலைவர் அவர்களே, எனக்கு ஒரு சந்தேகம். ஒருவேளை தாங்கள் அவர்களுக்கு நேரம் தரவில்லையோ என்னவோ?

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** நானும் அதைத்தான் சொல்ல நினைத்தேன். அவர்கள் என்னை நேரம் வேண்டுமென்று கேட்கவில்லை. கேட்காதபோது நேரம் இல்லை என்று எப்படிச் சொல்ல முடியும் என்று எனக்குத் தெரியவில்லை.

பேரவையின் இன்றைய நிகழ்ச்சிகள் இந்த அளவோடு முடிவுற்று நாளைக் காலை 9 மணியளவில் பேரவை மீண்டும் கூடும். வணக்கம்.

பின்னர், பேரவை பிற்பகல் 1.28 மணியளவில் ஒத்திவைக்கப் பட்டது.

**மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

*1974 ஏப்ரல் 16] [திரு. வா. மை. அப்துல் ஜப்பார்]*

திரு. சீனிவாசன் அவர்கள் பேசும்பொழுது சொன்னார்கள், அவர்கள் சொன்ன கருத்துக்களிலே நியாயமானவற்றை நான் எடுத்துக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். த்ரீ டையர் அரசைப் பற்றிச் சொன்னார்கள். நம்முடைய அரசின் கோரிக்கை டூ டையர் தான் என்றாலும் த்ரீ டையராக மாற்றப்பட வேண்டுமென்று சொன்னார்கள். அவர்கள் அப்படிச் சொன்னதில் சிறிதளவு நியாயம் இருக்கிறது.

நான்கூடப் பார்த்திருக்கிறேன். மாவட்ட வளர்ச்சிக் குழு என்று இருக்கிறது, எங்களுக்கு என்ன வேலை? கூடுவோம், பேசுவோம், கலைவோம், அவ்வளவுதான், அதைத்தவிர வேறு ஏதாவது உருப்படியாக செய்திருக்கிறோமா என்றால் இல்லை, காரணம் என்ன? அங்கே எதைச் சொன்னாலும் நடைமுறைப்படுத்துவதற்கு எங்களுக்கு அதிகாரம் இல்லை. பேரூராட்சிகளுக்கும் அதிகாரம் இல்லை.

என்னுடைய ஊரிலே துணிந்து ஒரு குடிநீர்த் திட்டம் வாங்கி விட்டோம், அதற்காக 22¾ லட்சம் ரூபாய் கடன் வாங்கியும் விட்டோம். மக்கள் வரி கொடுக்க மறுக்கிறார்கள், வரி கொடா இயக்கம் நடத்துகிறார்கள், இதனால் நிதிப் பற்றாக்குறை ஏற்பட்டு இரண்டு வருஷமாக அவர்கள் வரி கொடுக்காமல் இருக்கிறார்கள் என்ற காரணத்தினால் சுகாதார சிப்பந்திகளுக்குக் கூட சம்பளம் கொடுக்க முடியாத நிலைமை இருக்கிறது.

ஆகவே, மாநிலத்திற்கு மத்தியிலிருந்து முதலிலே அதிகாரத்தைப் பெற்றுக்கொண்டு அதற்குப் பிறகு அதிலே ஒருசிலவற்றை ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் ஒன்றியங்களுக்கும் பேரூராட்சிகளுக்கும் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அப்படிச் செய்தால்தான் காந்தியடிகள் கண்ட கிராம ராஜ்யம் ஏற்படும். அவர்கள் சொன்னார்கள், ஒவ்வொரு கிராமமும் தங்களுடைய தேவைகளைத் தாங்களே நிறைவேற்றிக் கொள்ளவேண்டுமென்று நிலைமை ஏற்பட்டால்தான் பூரண சுதந்திரம் பெற்றவர்களாக இருப்போம் என்று சொன்னார்கள், அந்த நிலைமை அப்போது தான் ஏற்படும்.

## இணைப்பு

[22-ம் பக்கத்திலுள்ள அடிக்குறிப்பைக் காண்க.]

THE HON. DR. M. KARUNANIDHI:

Sir, I move the following Resolution :—

The House taking into consideration " The Tamil Nadu Government Views on State Autonomy and the Rajamannar Committee Report" and the Report of the Rajamannar Committee;

resolves that, in order to secure the integrity of India with people of different languages, civilisation and culture, to promote economic development and to enable the State Governments having close contact with the people to function without restraints, and

in order to establish a truly Federal set up with full State autonomy, the Central Government do accept the views of the Tamil Nadu Government on State Autonomy and the recommendations of the Rajamannar Committee and proceed to effect immediate changes in the Constitution of India.

## இணைப்பு I-அ

THE SPEECH OF THE CHIEF MINISTER HON. DR. M. KARUNANIDHI ON THE 16TH APRIL 1974 MOVING THE RESOLUTION ON " STATE AUTONOMY " IN THE LEGISLATIVE ASSEMBLY.

Hon'ble Mr. Speaker,

I am indeed very happy to have the privilege of moving this epochmaking resolution which, I am confident, will form a landmark in the history of India. I beseech the Honourable Members of this House, renowned as they are for their sagacity, to give their deep and deliberate consideration, keeping in view the laudable object of this resolution and to extend their support to it. We are all aware that the ruling party—Dravida Munnetra Kazhagam—has, on many an occasion, demonstrated its determination to play its full part to enhance India's might and strength and in safeguarding and securing that the integrity and unity of India are not affected in the slightest extent.

If proof were needed of the ardent patriotism of the Dravida Munnetra Kazhagam party, it is seen in the fact of how in 1962 the Party gave up its demand for secession, how it enthusiastically took part in the preparations for defence to repel the Chinese aggressors, how it contributed Rs. 6 crores to the National Defence Fund and thus was in the forefront of all the States. Indeed the Dravida Munnetra Kazhagam party had rendered heroic service for the defence of the country imbued by the sprit of being in the very battlefield of India's fight.

I am mentioning all these just to discourage consideration of this resolution on the basis of and with the point of view of unwarranted and unnecessary doubts.

In 1945, in its Election Manifesto, the All-India Congress Party had described the nature of the future Federal Constitution of India as below :—

> "The Federation of India must be a willing Union of its various parts. In order to give the maximum of freedom to the constituent units there may be a minimum list of common and essential federal subjects which will apply to all units, and a further optional list of common subjects which may be accepted by such units as desired to do so."

Following this, in 1947, the resolution moved by Pandit Jawaharlal Nehru in the Constituent Assembly emphazised that except the powers assigned to the Union all the other powers shall vest with the autonomous States. The material part of the Resolution runs as follows :—

> "Wherein the territories that now comprise British India, the territories that now form the Indian States, and such other parts of India as are outside British India and the States . . . . shall be a Union of them all; and the said territories, whether with their present boundaries or with such others as may be determined by the Constituent Assembly and thereafter according to the law of the Constitution, shall possess and retain the status of autonomous units, together with residuary powers."

After India attained independence, these resolutions and election manifestos which are part of history have been either conveniently forgotten or deliberately suppressed.

**This truth was on many occasions brought out both in** Parliament and the State Legislature by the Dravida Munnetra **Kazhagam while it was in the Opposition; and it has consistently pleaded for suitable amendments to the Consitution.** The idea of State autonomy had also been continuously propagated in Tamil **Nadu by the Tamil Arasu Kazhagam.**

In 1967 in the Election Manifesto of the D.M.K. it was **stated as follows :—**

"The D.M.K. had taken upon itself the responsibility of seeing that no region of the country dominates another region in the name of implementing integration:

The D.M.K. is determined to protect the rights of the States from being suppressed and to chalk out a plan for the uniform economic development of all the States;

It shall be the endeavour of the D.M.K. to protect the interests of the States and to transfer the residuary powers from the Centre to the States; it will reiterate the necessity to amend the Constitution for this purpose."

Dr. Anna as the Chief Minister of Tamil Nadu, while presenting the Budget for the year 1967-68, had forcefully pleaded against the financial dependence of the States on the Centre—

"We have obviously had to take note of the limitations under which the State Governments have to function in our federal set up. Apart from the provisions of the Constitution which are themselves weighed in favour of the Centre, the practices and conventions, which have evolved in the last fifteen years of economic planning have also tended to strengthen the role of the Central Government at the expense of the States. With the delimitation of powers as provided in the Constitution, which gives it the authority to regulate foreign trade, monetary and credit policy, the responsibility for overall direction of our economy vests with the Central Government. Through its access to the more elastic sources of revenue, including residuary powers of taxation, the Centre is in a position to syphon off a large share of the national income, leaving the States in a position where they have to depend on discretionary loans and grants-in-

aid from the Centre for implementation of their plans and policies. The Centre also regulates directly through powers vested in it under Article 293 of the Constitution, and indirectly through the Reserve Bank, the terms and conditions and limits subject to which the State Governments can augment their resources through public borrowings. The provision for an objective review of the financial needs of the States at quinquennial intervals through the Finance Commissions has not in any way served to mitigate substantially the dependence of the States on the Centre in view of the various limitations on the terms of reference of such Commissions.''

In the concluding part of his Budget Speech, Dr. Anna observed—

"The House is aware that there is need for rethinking on the relations between the Centre and the States. I have no doubt that every one will agree on the need for placing existing relations on a satisfactory basis. No one can deny that the experience so far in regard to distribution of revenues, delimitation of powers and allocation of assistance for Plan has been such as to cause bitterness. It has become an urgent necessity to eliminate this bitterness and evolve ways and means of promoting fruitful relations between Centre and States. The problem I have posed need cause no apprehension or misgiving but should only provoke thought. It is my earnest desire that through mutual goodwill and understanding we should forge a fraternal and beneficial nexus.''

Again, in 1969, the last article written by Dr. Anna, in the English Journal ''Home Rule'' runs as follows :—

"Dear Brother,

Never have I been mad after power. Nor am I happy of being the Chief Minister of our State under a Constitution which on paper is federal but in actual practice tends to get more and more centralised. On that account, I do not like my good friend E.M.S. declare that it is my intention to irritate the Centre or pick up quarrels with Delhi. True, a sense of determination at the appropriate stage is all important. But this should be preceded by educating the public on

federalism itself. In that, dear brother, I am quite confident of your active co-operation and intimate participation.

If by being in office, the D.M.K. is able to bring to the notice of the thinking public, that the present Constitution is a sort of dyarchy by the back door that would be a definite contribution indeed to the political world."

On the 8th April 1967, at a Press Conference in New Delhi, Dr. Anna observed—

"It will be sufficient if the Centre retains only such powers as are necessary for preserving the unity and integrity of the country leaving adequate powers to the States. In order to distribute the powers and to suggest the method of working out the Constitution, a High Power Commission should be appointed."

In pursuance of these observations and of my announcement on the floor of the Assembly on the 19th August 1969, a Committee consisting of Dr. P.V. Rajamannar as Chairman and Dr. A. L. Mudaliar and Thiru P. Chandra Reddy as Members was constituted by the Government on 22nd September 1969 in order to examine the question regarding the relationship between the Centre and the States on the basis of autonomy for the States without in the least impairing the integrity of the country.

It is to be remembered that, subsequently in 1971, in the Election Manifesto of the D.M.K., it was announced—

"Though the Constitution of India is described as a Federal one, the balance is more tilted towards the Centre, and hence the States are not able to function freely in the administrative and financial spheres. Only such powers as are necessary for the Centre to preserve the strength of India should be assigned to the Centre and all the other powers should be left to the States, without impairing the ideal of a strong India: and for this purpose, the Constitution should be amended. After the receipt of the report of the Expert Committee appointed for this purpose, the D.M.K. would seek support on an All-India level to the movement for State autonomy.

More powers in the executive and financial spheres are demanded to the States not for the mere sake of enjoying those powers. Since only the States are in close contact with the people, the States alone can serve the people up to their expectations. Hence it is that we demand State autonomy."

It will be relevant in this connection to point out that the election manifesto of the Mysore Pradesh Congress (O) issued in 1972 contained the following reference to State autonomy:—

"Congress will fight in a determined manner for greater autonomy for the State and against all discrimination and step-motherly treatment by the Centre."

The Report of the Rajamannar Committee was received on the 27th May 1971. The said report was sent to the Prime Minister of India, Thirumathi Indira Gandhi.

Acknowledging the receipt of the Report, the Prime Minister, in her letter, dated 22nd June 1971, wrote to me as below :—

"Dear Thiru Karunanidhi,

I have received your letter of the 15th June with which you have sent me a copy of the report of the Centre-State Relations Inquiry Committee. Your Government will probably examine the recommendations of this report. As you know, the Administrative Reforms Commission also went into this question and has already submitted a report which is under our consideration. If the views of your Government on this matter are made available to us, they will also be taken into account. These are important issues and we intend to consult all the Chief Ministers.

With regards,

yours sincerely,

(Sd.) INDIRA GANDHI."

In the meeting of the National Development Council held on 30th May 1972 under the Chairmanship of the Prime Minister, while explaining the policy of this Government, I said that—

"Decentralisation is particularly necessary if a large country like ours is to cope with the problems of a modern economy. It is in this sense that our demand for State

autonomy should be understood—as a request for more efficient management of the country's resources, as a means to enable the Centre to be strong in areas of vital national concern, as a method of enabling the minimum demands of our people to be met in the quickest time and in the most efficient manner."

Though we do not accept the Report of Dr. Rajamannar's Committee in full, we take the Report as the basis for the exposition of our policy in this regard.

As it was thought that a decision on these issues of historic importance had to be taken after great deliberation, the problem was considered at different levels. The Ruling Party appointed the Chezhiyan-Maran Committee and in the light of its observations, the report of Dr. Rajamannar's Committee was analysed. The Government also considered the report of the Administrative Reforms Commission appointed by the Centre. This Government, after a deep consideration of the various opinions expressed by the several Statesmen in India on this issue and after carefully studying the position in the other countries of the world has formulated its views on the report of Dr. Rajamannar's Committee and on the question of State autonomy; and the said views have been placed before this House along with my resolution for the acceptance of the same by this House.

In the recent meeting of the Consultative Committee on Home Affairs, Thiru Dandapani, Member of Parliament, enquired why the Central Government had not taken any decision on the healthy suggestions made by the Rajamannar Committee on the question of re-examining the powers of the Centre and State Governments, and the Union Minister for Home Affairs Thiru Dikshit replied that the said Committee was appointed by the State Government and the State Government had not yet communicated its views on that report.

In pursuance of the said reply by Thiru Dikshit and in response to the desire of the Hon. Members of this House to express their views on the Report of the Rajamannar Committee, this Government has brought forward this Resolution in order that all the States in India attain State autonomy and the Centre becomes a shining example of a true Federal Government.

[1974 ஏப்ரல் 16

The National Flag of India flutters in the glittering sun. We lift our eyes to the high skies beyond the clouds in our attempt to enjoy the majesty of the flag. We hear the National Anthem composed by Tagore, the golden voice of Bengal. The sweet melody of the Anthem rings in our ears like the soft music of the Courtallam Falls. Yes! Our country has awaken from its slavery liberating itself from foreign domination. The epic story of our herioc struggle for liberation of India from which we emerged, holding our heads high, is writ large in the history of the world.

The imprisoned nation has become free. The door has opened. With a smile, the prisoner comes out of the iron cage. The tender tottering child eagerly leaps towards its father to embrace him after the languish of long separation. The father with boundless joy stretches out his hands to lift and kiss his child. Alas! the hands do not function! Why is this so? He has been released from the prison. What is the further obstacle? What is it that prevents him? He looks around in surprise. He has come out of the prison and he is free. Then, who prevents him from embracing the child. Nobody prevents him. When he was in prison, his hands and legs were fastened with chains. In his joy of release, he came out of the prison without removing those chains. No doubt he is free but the chains that bind his limbs had not been removed. Man has become free. Then why should his hands and legs be kept bound? India has become free. Then, why should its limbs, namely the States, be kept bound by the chains of concentration of power in the Centre?

This is a burning question which has been before us for a long time. I bring forward this resolution to-day before this august House in the hope that it will help to quench the thirst that the question represents.

Our Constitution is not immutable. It has been amended more than thirty times.

It is my earnest appeal to the Central Government that they should realise that implementation of these great changes in the Indian Constitution will form the basis for strengthening our country and increasing its prosperity and that it will contribute to develop the languages of the States, to preserve and protect the different cultures, to foster good relations among the States, to promote healthy relationship between the States and the Centre

1974 ஏப்ரல் 16]

and to improve the economic conditions of our country. I seek your kind co-operation in this great endeavour. Moved by an ardent desire that the fruits of our freedom should be enjoyed fully by the people and keeping their welfare at heart, we, on behalf of the Government of Tamil Nadu have kindled this luminous lamp at the centre of the stage of Indian politics. I beseech the statesmen of India to help us to keep this flame alive and assist in preserving its glow.

## இணைப்பு-II

[36-ம் பக்கத்திலுள்ள அடிக்குறிப்பைக் காண்க.]

### மாநில சுயாட்சி பற்றியும் ராஜமன்னார் குழுவின் அறிக்கை பற்றியும் தமிழ்நாடு அரசின் கருத்துரைகள்.

இந்தியாவின் ஒருமைப்பாட்டினையும் இறையாண்மையினையும் ஓங்குறச் செய்வதில் தனக்குள்ள திடமான உறுதிப்பாட்டினைத் தமிழ்நாடு அரசு அழுத்தமாக அறிவித்துக்கொள்ளுகிறது. மேலும், நாட்டில் பொருளாதார, சமூக முன்னேற்றம் விரைவில் ஏற்பட வேண்டுமானல், உண்மையான கூட்டாட்சி முறையிலே நாட்டின் அரசியலமைப்பு அமைவது அவசியமென்று இவ்வரசு ஆழ்ந்த நம்பிக்கை கொண்டுள்ளது.

அரசியல் நிர்ணய சபையில், பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் முன்மொழிந்து, 1947 ஜனவரி 22 ஆம் நாளன்று நிறைவேறிய வரலாற்று இலட்சியங்கள் பற்றிய தீர்மானத்தின் முக்கியமான பகுதியை இங்கு குறிப்பிடுவது பொருத்தமாகும்,

"இப்போது பிரிட்டிஷ் இந்தியாவில் அடங்கியுள்ள ஆட்சிப் பகுதிகளும், இந்திய சமஸ்தானங்களாக உள்ள ஆட்சிப் பகுதிகளும், இவற்றுக்கு அப்பாலுள்ள பிற பகுதிகளும், சுதந்திர இந்தியாவுடன் இணைவதற்கு இசையும் மற்றப் பகுதிகளும் சேர்ந்து இந்திய ஒன்றியமாக அமைதல் வேண்டும் ;

மேற்சொன்ன ஆட்சிப் பகுதிகள் தற்போதுள்ள எல்லைகளுடனோ, அரசியல் நிர்ணய சபை வரையறுக்கும் எல்லைகளுடனோ, பின்னர் அரசியலமைப்புச் சட்டத்திற்கிணங்க ஏற்படும் எல்லைகளுடனோ சுயாட்சி பெற்ற மாநிலங்களாக விளங்கி எஞ்சிய அதிகாரங்களுடன் (Residuary powers) அரசாங்க, நிர்வாக

அதிகாரங்கள் அனைத்தையும் கொண்டிருத்தல் வேண்டும். ஒன்றிய அரசுக்கென்று ஒதுக்கப்படும் அல்லது அந்த அரசினைச் சார்ந்து நிற்கும் அதிகாரங்கள் ஒன்றிய அரசுடன் இயைந்துள்ளதும் பொதிந்துள்ளதுமாக உள்ள அதிகாரங்கள் இவை மட்டுமே மாநிலங்களுக்கு இருப்பதில்லை."

இந்திய நாடு பல்வேறு மொழிகளையும் பண்பாடுகளையும் வரலாற்றுச் சிறப்புக்களையும் கொண்ட மக்கள் வாழும் மிகப் பெரிய நிலப் பரப்பாகும். அதன் மாநிலங்கள் ஒவ்வொன்றுக்கும் தனித் தனித் தேவைகளும் பிரச்சினைகளும் உள்ளன. எனவே, மாநிலங்கள் இடையீடுகள் ஏதுமின்றிச் செயல்படுவதுடன், நாட்டின் ஒற்றுமைக்குக் குந்தகம் ஏற்படாத வகையில் முன்னேற்றம் அடைவதற்கான சட்டங்களை இயற்றுவதற்கும் நிர்வாகத்தினை நடத்துவதற்கும் தேவைப்படும் அதிகாரங்கள் அனைத்தையும் பெற்றிருத்தல் வேண்டும். உண்மையான கூட்டாட்சி முறையில்தான் இது சாத்தியமாகும்.

நம் நாடு விடுதலை பெற்ற பின்னர் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாக நாம் அடைந்துள்ள இதமற்ற அனுபவத்தை எண்ணிப் பார்க்கையில், மத்திய அரசிடம் குவிந்துள்ள அதிகாரங்களின் விளைவால் மாநிலங்கள் உறுதி குலைந்து ஊக்கமிழந்த நிலையில் இருப்பதையே காண்கிறோம்.

அரசியலமைப்பினை ஒற்றை ஆட்சி முறையிலே செயற்படுத்தி, மத்திய அரசுக்குக் கீழ்ப்பட்டவைகளாக மாநிலங்களை நடத்தும் தீவிரப் போக்கு இருந்து வருகிறது. பெரும்பாலான அதிகாரங்கள் மத்திய அரசிடம் குவிந்திருந்தால்தான் மத்திய அரசு வலுவுடன் இருக்க முடியும் என்பது கற்பனைக் கூற்றேயாகும். அரசியல் நிர்ணய சபையில் உறுப்பினராக இருந்தவரும், மூத்த அரசியலறிஞருமான திரு. கே. சந்தானம் அவர்கள் வலுவுள்ள மத்திய அரசு வேண்டுமென்ற கூற்றினை ஆய்ந்து கூறியுள்ளதாவது :—

" . . . இந்தியா சிதறிவிடாமலும் குழப்பத்தில் சிக்குண்டு குலைந்துவிடாமலும் இருப்பதற்கு வலுவுள்ள மத்திய அரசு இன்றியமையாததுதான். ஆனால், அரசியல் அதிகாரங்கள் குவிந்திருந்தால்தான் அத்தகைய வலுவேற்படும் என்ற கூற்றினை நான் ஏற்பதற்கில்லை. மாறாக, பரந்து கிடக்கும் இந்தியா முழுமையிலும் வாழும் பெருத்த மக்கள் தொகையினரின் சார்பான பொறுப்புக்

1974 ஏப்ரல் 16]

கள் பலவற்றை ஏற்றுக்கொள்வதன் மூலம் மத்திய அரசு மீள முடியாத அளவுக்குப் பலவீனமாகிவிடுகிறது என்பதே எனது திடமான கருத்தாகும். அவசியமான அனைத்திந்தியப் பொறுப்புகளில் மட்டுமே கவனத்தைச் செலுத்தி, அப்பொறுப்புக்களை மாநிலங்களோடு பகிர்ந்து கொள்ளாமல், அதே நேரத்தில், எஞ்சிய எல்லா அரசுத் துறைகளிலும் மாநிலங்களுக்கு முழு சுயாட்சி அளித்திடுவதன் வாயிலாகவே நாடாளுமன்றமும் மத்திய அரசும் உண்மையான வலுவுடன் உறுதியாக இருக்க முடியும். இந்தியா விடுதலையடைந்து இருபதாண்டு காலமாக ஒரே கட்சியின் அரசியல் ஆதிக்கம் நிலவி வந்தது. இதன் விளைவாக இந்தியக் கூட்டாட்சி முறையில் தெளிவில்லாமல் வழி நடத்திச் செல்லும் போக்கு வலுப்பெற்றுள்ளது. இப்போக்கு மத்திய அரசுக்கு இன்னலைச் சேர்க்கிறது, மாநிலங்களுக்கு எரிச்சலையூட்டுகிறது."

1967 ஜூன் 17 ஆம் நாளன்று சட்டமன்றப் பேரவையில் நிதிநிலை அறிக்கையை அளித்து ஆற்றிய உரையில் தமிழக முதல்வர் அறிஞர் அண்ணா அவர்கள் கூறியதாவது :—

"மாநிலங்களின் வளர்ச்சி வேண்டுமென்று கோருவது நாட்டின் ஒற்றுமையைக் குலைத்துவிடும் என்ற வாதம் வீணானது. மத்திய-மாநில அரசுகளின் நிதித் தொடர்பு முறைகள் அரசியலமைப்பில் உருவாக்கப்பட்ட காலத்தில் இருந்த நிலைமைகள் வெகுவாக மாறிவிட்டன. இந்திய அரசியலமைப்புச் சட்டம் இயற்றப்பட்டபோது எண்ணிப் பார்த்திருக்க இயலாத எத்தனையோ புதிய போக்குகள் தோன்றியுள்ளன. மத்திய அரசிடம் அதிகாரங்கள் பெருமளவில் குவிந்து விடுவதற்கு அரசியலமைப்புச் சட்டத்தில் வகை செய்யப்பட்டுள்ளது. அரசியலமைப்புச் சட்டத்தினை எழுதியவர்கள் எண்ணிப் பார்த்திராத புதியதொரு துறையின் மூலம் மத்திய அரசு மேற்கொண்டுள்ள அதிகாரங்கள் பெருகியுள்ளன. இது மாநிலங்களுக்குக் கவலையளிப்பதாகும். பொருளாதாரத் திட்டம் என்பது தான் அப்புதிய துறை. இதற்கான நிதி திரட்டுதல், நிதி ஒதுக்குதல், திட்டத்திற்காகப் பணத்தைச் செலவிடும் முறை இவையனைத்திலும் மத்திய அரசு ஏற்றுள்ள அதிகாரங்கள் மாநிலங்களைக் "கையேந்தி" நிற்கும் நிலைக்குத் தள்ளிவிட்டன. கட்சிக் கட்டுப்பாடு காரணமாக இது குறித்துப் பேசுவதற்குச் சிலர் தயங்கலாம். ஆனால், பொருளாதாரக் கண்கொண்டு இப்

[1974 ஏப்ரல் 16

பிரச்சினையை ஆய்ந்தோர் அனைவரும் மத்திய–மாநில நிதி உறவுகளில் எழுந்துள்ள இப் போக்குகள் குறித்துக் கவலை தெரிவித்துள்ளனர். அரசியல் சட்டத்தின் ஏழாவது இணைப்பில் மத்திய அரசுப் பட்டியலில் 36 முதல் 38 இனங்களாகக் கூறப் பட்டுள்ள பணம் வெளியிடுதல், அன்னியச் செலாவணி போன்ற துறைகள் மத்திய அரசின் அதிகாரத்தில் அடங்குவதால், பண வீக்கம், பற்றுக்குறை நிதி நிலை ஆகியவற்றுக்கான அனைத்துப் பொறுப்பும் மத்திய அரசினையே சேருகிறது. இதனால் விளையும் விலையேற்றத்திற்கும் மத்திய அரசே முழுப் பொறுப்பேற்க வேண்டும் இதன் பயனாக, விலைகளைக் கட்டுப்படுத்தும் பொறுப்பினையும் மத்திய அரசே ஏற்றுக்கொள்ள வேண்டி யிருக்கிறது. மத்திய அரசின் நடவடிக்கையால் விளையும் விலை யேற்றத்தினால் மாநிலங்கள் அவதியுறுகின்றன. ஆனால், விலைகளைக் கட்டுப்படுத்தும் நடவடிக்கைகளை எடுக்கும் அதிகாரங்கள் அரசியல் சட்டப்படி மாநிலங்களுக்கு இல்லை. ஆதலால்தான், விலையேற்றம் காரணமாக அரசு அலுவலர்களுக்கு ஊதிய உயர்வு தருவதால் ஏற்படும் அதிகச் செலவு, மலிவு விலையில் உணவுப் பொருள்களை வழங்குவதனால் ஏற்படும் இழப்பு, இவற்றில் மத்திய அரசும் பங்கேற்க வேண்டும் என்று நான் கேட்க வேண்டி யிருக்கிறது. மக்களுக்கு மலிவு விலையில் உணவுப் பொருள்களைத் தருவதாலும் அரசு ஊழியர்களின் ஊதியத்தை உயர்த்துவதாலும் ஏற்படும் பொறுப்புச் சுமையினை மாநிலங்களே தாங்கிக் கொள்ள வேண்டுமென மத்திய அரசு அடித்துக் கூறுகிறது. இதுபற்றி நான் கூறை கூறுவதன் காரணம் இப்பொழுது நன்கு விளங்குமென எண்ணுகிறேன். கட்சிக் கண்ணோட்டம் கருத்தினை மறைத் தாலன்றி, அரசியலமைப்புச் சட்டத்தில் காணப்படும் மத்திய-மாநில உறவு முறைகளை ஆய்ந்தறிந்தோர் எனது வாதத்திலுள்ள நியாயத்தினை ஒப்பக்கொள்ளத் தயங்க மாட்டார்கள்."

எனவே, மத்திய அரசிடம் அதிகமான அதிகாரங்கள் குவிந்திருப்பதால் அது உண்மையில் பலவீனந்தான் அடைகிறது என்பது தெளிவாகும். இன்றைய அரசியலமைப்புச் சட்டத்தின் கீழ் மாநிலங்கள் மத்திய அரசின் கைப்பாவைகளாக மாறி, கையாலாகாத நிலையில் உள்ளன.

உண்மையான கூட்டாட்சி அமைப்பில், நாட்டின் பாதுகாப்பு, வெளிநாட்டு உறவுகள், மாநிலங்களுக்கிடையே போக்குவரத்துத் தொடர்புகள், நாணயச் செலாவணி ஆகியவை குறித்த

1974 ஏப்ரல் 16]

அதிகாரங்கள் மட்டுமே மத்திய அரசிடம் இருக்க வேண்டும். ஏனைய அதிகாரங்கள் அனைத்தும் எஞ்சிய அதிகாரங்களுடன் மாநிலங்களிடம் இருக்க வேண்டும். மத்திய அரசும் மாநில அரசுகளும் தமக்குள்ள அதிகார வட்டத்திற்குள் சுயேச்சையாகச் செயல்பட வேண்டும். இத்தகைய கூட்டாட்சி முறை நிலவினால் தான் நாடு முழுவதுமாக நல்முறுதல் இயலுமென்பதே இந்த அரசின் உறுதியான நம்பிக்கை.

இதைக் கருத்திலே கொண்டுதான், மாநிலங்கள் தக்க அளவில் சுயாட்சியுரிமை பெற்றிட இயலும் வகையில் இந்திய அரசியலமைப்புச் சட்டத்தில் வேண்டிய திருத்தங்கள் செய்வதற்கான கருத்துரைகளை வழங்குமாறு 1969-ம் ஆண்டில் ஒரு குழுவினை இந்த அரசு நியமித்தது. டாக்டர் பி. வி. இராஜமன்னார் அவர்கள் தலைவராகவும் டாக்டர் ஏ. இலட்சுமணசாமி முதலியார் அவர்களும் திரு. பி. சந்திரா ரெட்டி அவர்களும் உறுப்பினர்களாகவும் இக் குழுவில் பணியாற்றினர். இக் குழுவின் அறிக்கை 1971-ம் ஆண்டில் அளிக்கப்பட்டது.

அரசியலமைப்புச் சட்டத்தின் ஏழாவது இணைப்பில், "மத்தியப் பட்டியல்". "மாநிலப் பட்டியல்", "பொதுப் பட்டியல்" என்ற தலைப்புகளில் நாடாளுமன்றம் மாநிலச் சட்டமன்றங்கள் ஆகியவற்றின் சட்டமியற்றும் அதிகாரங்கள் கூறப்பட்டுள்ளன. அப்பட்டியல்களில் பல்வகைத் திருத்தங்கள் செய்யப்பட வேண்டுமென இராஜமன்னார் குழு கருத்துரை வழங்கியுள்ளது: நாட்டின் பாதுகாப்பு, வெளிநாட்டு உறவுகள், மாநிலங்களுக் கிடையே போக்குவரத்துத் தொடர்புகள், நாணயச் செலாவணி ஆகியவை தொடர்பான அதிகாரங்களை மட்டும் கொண்டுள்ள மத்திய அரசும், எஞ்சிய அதிகாரங்கள் உட்பட ஏனைய அதிகாரங்கள் அனைத்தையும் கொண்டுள்ள மாநில அரசுகளும் உள்ள உண்மையான கூட்டாட்சியை நிறுவும் இலட்சியத்துடன் தமிழ்நாடு அரசு இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகளை ஆய்ந்த பின், அரசியலமைப்புச் சட்டப் பிரிவுகளிலும் அதிகாரப் பட்டியல்களிலும் செய்யப்பட வேண்டிய திருத்தங்களை வகுத்துத் தொகுத்துள்ளது. இதன் விளைவான வேறு மாறுதல்களையும் அரசியலமைப்புச் சட்டத்தில் செய்தல் வேண்டும்.

[1974 ஏப்ரல் 16

அரசியலமைப்புச் சட்டப் பிரிவுகளில் செய்யப்பட வேண்டிய முக்கியமான மாறுதல்கள் வருமாறு :—

**மைய அரசு மாநில அரசுகளுக்குக் கட்டளைகள் பிறப்பித்தல்.**

மாநில அரசுகளுக்குக் கட்டளை பிறப்பிக்க மைய அரசிற்கு அதிகாரமளிக்கிற 256, 257, 339 (2), 344 (6) பிரிவுகள் நீக்கப்பட வேண்டும். கட்டளைகள் பிறப்பிக்கும் அத்தகைய அதிகாரம் எதையும் மைய அரசு கொண்டிருத்தல் கூடாது.

**அனைத்து மாநிலக் குழு**

எல்லா முதலமைச்சர்களையும் அல்லது அவர்களது நியமன தாரர்களையும் கொண்டு அனைத்து மாநிலக் குழு அமைக்கப்பட வேண்டும். அதில் எல்லா மாநிலங்களுக்கும் சமப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும். இந்தியாவின் தலைமை அமைச்சர் இதன் தலைவராக இருக்க வேண்டும். மைய அமைச்சர் எவரும் இக் குழுவில் உறுப்பினராக இருக்கக்கூடாது.

பாதுகாப்பு, அயல்நாட்டு உறவுகள், மாநிலங்களுக்கிடையே போக்குவரத்து, நாணயச் செலாவணி ஆகியவை குறித்து எடுக்கப்பட வேண்டிய எந்த ஒரு நடவடிக்கையும், மைய-மாநில உறவை அல்லது மாநிலங்களைப் பாதிக்கிற வரையில் அதைப் பொறுத்து அனைத்து மாநிலக் குழு கலந்தாலோசிக்கப்பட வேண்டும்.

இதைப்போலவே, மைய அரசு மேற்கொள்ளும் பொருளாதார, நிதி, பணம் சம்பந்தப்பட்ட நடவடிக்கைகள் அனைத்தையும் விவாதிக்கும் வாய்ப்பையும் அனைத்து மாநிலக் குழு கொண்டிருக்க வேண்டும்.

அரசியலமைப்பின் 263-வது பிரிவில் சொல்லப்பட்டுள்ள அனைத்து மாநிலக் குழு பயனற்றது ; அதனால் எவ்வித பலனும் கிட்டாது.

அனைத்து மாநிலக் குழுவின் பரிந்துரைகள் மைய அரசையும், மாநில அரசுகளையும் கட்டுப்படுத்துவதாய் இருக்க வேண்டும். பரிந்துரை எதுவும் ஏதேனும் காரணத்திற்காக நிராகரிக்கப்

1974 ஏப்ரல் 16]

பட்டால், அந்தப் பரிவுரையும், அந்தப் பரிவுரை நிராகரிக்கப்பட்டதற்கான காரணங்களும் நாடாளுமன்றத்தின் முன்பும் மாநிலச் சட்ட மன்றங்களின் முன்பும் வைக்கப்பட வேண்டும்.

### பொதுப் பட்டியலின்கீழ் வரும் சட்டமியற்றும் அதிகாரம்.

பொதுப் பட்டியலில் கண்டுள்ள எந்த ஒரு பொருள் குறித்தும் நாடாளுமன்றத்தில் சட்டவரைவு எதுவும் அறிமுகம் செய்யப்படுவதற்குமுன். அனைத்து மாநிலக் குழுவும், மாநில அரசுகளும் கலந்தாலோசிக்கப்பட வேண்டும். இது சம்பந்தப்பட்ட சட்ட வரைவு அறிமுகம் செய்யப்படும்போது, அனைத்து மாநிலக் குழுவின் கருத்துரைகளும், மாநில அரசுகள் கருத்துத் தெரிவித்திருப்பின் அந்தக் கருத்துக்களின் சுருக்கமான விவரமும் நாடாளு மன்றத்தின்முன் வைக்கப்பட வேண்டும்.

### எஞ்சியுள்ள அதிகாரங்கள்.

சட்டமியற்றுவது, வரி விதிப்பதுபற்றிய எஞ்சியுள்ள அதிகாரங்கள் மாநிலச் சட்டமன்றங்களிடம் நிலைபெற்றிருத்தல் வேண்டும்.

### 154, 258-ஆவது பிரிவுகள்.

மாநில அரசுக்கும் மாநில அதிகாரமன்றங்கட்கும் அதிகாரம் வழங்குவதற்கான சட்டங்களை நாடாளுமன்றம் இயற்றுவதற்கான அதிகாரம் அளிக்கின்ற பிரிவுகள் நீக்கப்பட வேண்டும்.

### 169-ஆவது பிரிவு.

சட்டமன்ற மேலவைகளை எடுத்துவிடுவதற்கான அல்லது அமைத்திடுவதற்கான அதிகாரம், நாடாளுமன்றச் சட்டம் இயற்றும் தேவையில்லாமலேயே, மாநிலச் சட்டமன்றப் பேரவைகளிடம் நிலைபெற்றிருத்தல் வேண்டும்.

### 249-ஆவது பிரிவு.

மாநிலப் பட்டியலில் காணும் எப்பொருள் குறித்து சட்டமியற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்கு அதிகாரமளிக்கிற இந்தப் பிரிவு நீக்கப்பட வேண்டும்.

[1974 ஏப்ரல் 16

252-ஆவது பிரிவு.

இரண்டு அல்லது மேற்பட்ட மாநிலங்களின் இசைவைப் பெற்றுக்கொண்டு நாடாளுமன்றம் சட்டமியற்றுவதற்கு அதிகாரமளிக்கும் இப்பிரிவு நீக்கப்பட வேண்டும்.

மாநிலச் சட்ட வரைவுகளை குடியாட்சித் தலைவரது ஆய்வுக்காக ஒதுக்குதல்.

மாநிலச் சட்ட வரைவுகளை, குடியாட்சித் தலைவரது ஆய்வுக்காகவும், இசைவுக்காகவும் ஒதுக்குவது குறித்த பிரிவு நீக்கப்பட வேண்டும். சட்டமியற்றும் பொதுப் பட்டியலின் வரம்புக்குள் வரும் விவகாரங்கள் குறித்து மையச் சட்டத்தைவிட மாநிலச் சட்டமே மேலோங்கியிருக்க வேண்டுமென்கிற வகையில் 254-ஆவது பிரிவு திருத்தப்பட வேண்டும்.

ஆளுநர் அவசரச் சட்டத்தைப் பிரகடனம் செய்தல்.

ஓர் அவசரச் சட்டம் பிரகடனம் செய்யப்படுவதற்குமுன் குடியாட்சித் தலைவரின் கட்டளைகளைப் பெறும் அவசியத்தை ஏற்படுத்துகிற 213 (1) பிரிவுக்கான நிபந்தனை நீக்கப்பட வேண்டும்.

மானியங்கள்.

ஐந்தாண்டுத் திட்டச் செலவுக்காகவும், திட்டத்தின்கீழ் வராத செலவுகளுக்காகவும் மாநிலங்களுக்கு மைய அரசு அளிக்கின்ற மானியங்கள், நிதி ஆணைக்குழு அல்லது அதைப்போல் சட்டப்படி அமைந்த அமைப்பு போன்ற தனிப்பட்ட, பாரபட்சமற்ற அமைப்பு ஒன்றின் பரிந்துரைகளின்படியே வழங்கப்பட வேண்டும்.

நிதி ஆணைக்குழு.

அரசியலமைப்பில் உத்தேசிக்கப்பட்டுள்ள நிதி ஆணைக்குழு மாநிலங்களின் நிதிவாயில்களையும் தேவைகளையும் பரிசீலிக்கிறது. ஆனால் அது, மைய அரசு நிதி நிலையைப் பொறுத்து இதைப் போன்ற அலுவலை நிறைவேற்றுவதில்லை. எனவே, மைய அரசின் நிதி வாயில்களையும் தேவைகளையும்கூட அவ்வப்போது மதிப்பிட வேண்டுமென்பது அவசியம். இதற்கிணங்க, மாநிலங்களின் நிதி வாயில்களையும் தேவைகளையும் மட்டுமல்லாமல் மைய அரசின் நிதி வாயில்களையும் தேவைகளையும்கூட ஆய்வு செய்வதற்கான அதி

1974 ஏப்ரல் 16]

காரம் நிதி ஆணைக்குழுவிற்கு வழங்கிட வேண்டும். அப்போது மைய அரசு அதன் பொறுப்புக்களை நிறைவேற்றுவதற்குத் தேவையான தொகைகளை நிதி ஆணைக்குழு பரிந்துரை செய்யும். அவ்வாறு பரிந்துரை செய்யப்பட்ட தொகைகள், மைய அரசு விதிக்கும் வரிகளிலிருந்து ஒதுக்கப்பட வேண்டும்.

நிதி ஆணைக்குழு அதற்கு உரித்தான செயலகத்துடன் நிலையான அமைப்பாக விளங்க வேண்டும்.

அனைத்து மாநிலக் குழுவைக் கலந்தாலோசித்துக்கொண்டு நிதி ஆணைக் குழுவின் உறுப்பினர்கள் நியமிக்கப்பட வேண்டும்.

நிதி ஆணைக்குழுவின் பரிந்துரைகள், மைய அரசு, மாநிலங்கள் ஆகிய இரு தரப்பினர்களையும் கட்டுப்படுத்துமென்று அரசியலமைப்பில் வகைசெய்யப்பட வேண்டும்.

### மாநிலங்களின் கடன்களும், கடன் சுமையும்.

கூட்டாட்சிக் கடன் ஆணைக்குழு ஒன்று இருக்கவேண்டும். மாநிலங்களின் கடன் சுமை பற்றிய எல்லாப் பிரச்சினைகளையும் இக்குழு ஆய்வு செய்யவேண்டும். இந்த ஆணைக்குழு நாளடைவில், கூட்டாட்சி வளர்ச்சி வங்கியாகச் செயல்பட வேண்டும். இது மைய, மாநிலங்களின் பிரதிநிதிகளைக் கொண்டிருக்கும். வெளிச் சந்தையிலிருந்து திரட்டும் கடன்களுக்குமேல் மைய அரசோ மாநில அரசோ கடன் வேண்டுமென்று செய்துகொள்ளும் விண்ணப்பங்களை இந்த வங்கி பரிசீலிக்க வேண்டும்.

### இடருதவி நிதி.

இயற்கைப் பேரிடர்களினால் ஏற்படும் இன்னல்களைத் தீர்ப்பதற்காக ஒவ்வொரு மாநிலத்திலும் இடருதவி நிதி இருக்க வேண்டும். சீரமைப்புப் பணிகளுக்காகவும் இந்த நிதி பயன்படுத்தப்படலாம்.

### திட்ட ஆணைக்குழு.

திட்ட ஆணைக்குழுவானது, மைய நிர்வாகக் கட்டுப்பாட்டிலோ அல்லது அரசியல் கட்சிச் சார்புள்ளதாகவோ இல்லாமல் சுதந்திரமாகச் செயல்படும் ஓர் அமைப்பாக இருக்க வேண்டும். இந்த

[1974 ஏப்ரல் 16

நோக்கத்தை எய்த, திட்ட ஆணைக்குழுவினை நிறுவ வகை செய்யும் சட்டம் நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்டு அது சட்டப்படி அமைதல் வேண்டும்.

சட்டப்படி அமைக்கப்படும் திட்ட ஆணைக்குழுவில் பொருளாதார, அறிவியல், தொழில் நுட்ப மற்றும் வேளாண்மைத் துறை வல்லுநர்களும் பிற வகை தேசிய பணியைச் சேர்ந்த வல்லுநர்களும் மட்டுமே இடம் பெற வேண்டும். இந்திய அரசைச் சேர்ந்த அமைச்சர் எவரும் அதில் இடம் பெறலாகாது. இது தொடர்பாக இயற்றப்படவிருக்கும் சட்டத்தில், திட்ட ஆணைக்குழு உறுப்பினர்களின் பதவிக் காலம், பணி நிபந்தனைகள் ஆகியவற்றிற்கு வகை செய்யப்படல் வேண்டும். இந்த திட்ட ஆணைக்குழுவிற்கென்று தனியே ஒரு செயலகம் இருத்தல் வேண்டும். தற்போதுள்ள திட்ட ஆணைக்குழு கலைக்கப்பட வேண்டும்

திட்ட ஆணைக்குழுவின் பணி, மாநிலங்கள் உருவாக்கும் திட்டங்கள் குறித்து அறிவுரை வழங்குவதாக இருத்தல் வேண்டும்.

மாநிலங்களால் அல்லது மாநிலங்களில் தொடங்கப்படும் தொழில் திட்டங்களுக்காக மாநிலங்களுக்கு அன்னியச் செலாவணி வழங்குவது தொடர்பாக, நிதி ஆணைக் குழுவினால் பரிசீலிக்கப்படுவதற்கு பரிந்துரைகள் செய்ய வேண்டியதும் இதன் பொறுப்பாகவே இருக்கும். நிதி ஆணைக்குழு மானியங்களுக்குப் பரிந்துரை செய்கையில் திட்ட ஆணைக்குழுவின் பரிந்துரைகளையும் கருத்திற்கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு மாநிலமும் தனக்கென ஒரு திட்ட வாரியத்தை அமைத்துக் கொள்ளலாம்.

## திட்டமிடுதலும், வளர்ச்சியும்.

1951-ஆம் ஆண்டு தொழில்கள் (வளர்ச்சியும் ஒழுங்கு முறையும்) சட்டம் (மத்தியச் சட்டம் 65/1951) ரத்து செய்யப்பட வேண்டும்.

புதிய தொழில் நிறுவனங்களைத் தொடங்கி நடத்தி வருவதற்கும் மாநிலத்திற்குள் புதிய தொழில் நிறுவனத்தைத் தொடங்குவதற்காக உரிமம் வழங்குவதற்கும் மாநிலத்திற்கு அதிகாரம் இருத்தல் வேண்டும். ஒரு மாநிலத்தால் உரிமம் வழங்கப்பட்ட அல்லது தொடங்கப்பட்ட ஒரு தொழில் நிறுவனத்திற்கு அன்னியச் செலாவணி தேவைப்படுமானால், தேசியத் திட்ட முன்னுரிமைகள்,

1974 ஏப்ரல் 16]

தேசியத் தேவை மதிப்பீடு, செய்திப்பகிர்வு முறை ஆகியவற்றுக்கு உட்பட்டு ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒதுக்கப்படும் மொத்த மானிய வடிவில் அவ்வுதவி அளிக்கப்படல் வேண்டும்.

## நீதித்துறை.

### உச்ச நீதி மன்றம்.

மைய-மாநிலப் பிரச்சினைகள் உட்பட அரசியலமைப்புப் பிரச்சினைகள், அல்லது மத்தியச் சட்டத்திற்குப் பொருள் விளக்கம் கூறுதல் ஆகியவை தவிர்த்த வேறு எந்த சாதாரண உரிமை இயல், குற்றவியல் அல்லது பிற வழக்குகளில் எவ்வளவு தொகை சம்பந்தப்பட்டிருப்பினும், என்ன தண்டனை விதிக்கப்பட்டிருப் பினும் அத்தகையவற்றில் உயர்நீதி மன்றங்களிலிருந்து உச்ச நீதி மன்றத்திற்கு மேன்முறையீடு இருத்தல் கூடாது. நீதிபதிகளை நியமிக்கும்போது, கூடியமட்டிலும் திறமைக்குக் குந்தகமில்லாத வாறும், நாட்டின் உச்ச நீதி மன்றத்திற்கு பல்வேறு பகுதிகளில் உள்ள உயர்நீதி மன்றங்களுக்கும் வழக்கறிஞர் சங்கங்களுக்கும் உரிய பிரதிநிதித்துவம் இருக்குமாறு பார்த்துக்கொள்வது விரும் பத்தக்கதாகும்.

### உயர்நீதி மன்றங்கள்.

உயர்நீதி மன்றத்தின் அமைப்பு, நிர்வாகம் சம்பந்தமாகச் சட்ட மியற்றும் அதிகாரம், மாநிலப் பட்டியலுக்கு மாற்றப்பட உத் தேசிக்கப்பட்டுள்ளதால், 217. 222, 223, 224, 224-எ பிரிவுகளைப் பொருத்தமான முறையில் திருத்த வேண்டியுள்ளது அல்லது விட்டு விட வேண்டியுள்ளது.

### உயர்நீதி மன்றத்தின் ஆய்வுரை கோரல்.

மாநிலச் சட்டம் ஒன்றினுடைய ஒரு குறிப்பிட்ட பிரிவு அரசிய லமைப்புச் சட்டத்திற்கு முரணுயுள்ளதென்று உயர்நீதி மன்றத்தில் எழுப்பப்படும்பொழுதெல்லாம், அந்த வழக்கை, மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட நீதிபதிகளைக் கொண்ட—அவர்களில் ஒருவர் தலைமை நீதிபதியாக இருக்க வேண்டும்—முழு நீதிபதி ஆயத்திடம் ஒப்படைப்பதற்காக உயர்நீதி மன்றத்தை கேட்டுக் கொள்வதற் கான உரிமையை மாநில அரசு பெற்றிருத்தல் வேண்டும். அவ்வாறு

அமைக்கப்பட்ட நீதிபதி ஆயம், சம்பந்தப்பட்ட சட்டத்தின் ஒவ்வொரு பிரிவையும் ஆராய வேண்டும்; அது தன்னுடைய தீர்ப்பினை வழங்கிய பின்னர், அரசியலமைப்புச் சட்டத்திற்கு முரணானது என்னும் காரணத்தைக் கொண்டு அச்சட்டத்தின் பிரிவு எதுபற்றியும் வாதிடக் கூடாது. பொது முக்கியத்துவம் வாய்ந்த சட்டம் அல்லது பொருண்மை குறித்து உயர்நீதி மன்றத்தின் அறிவுரைக் கருத்தினைக் கேட்டறிய மாநில அரசுக்கு அதிகாரம் அளிக்கப்பட வேண்டும்.

## ஆளுநர்.

ஆளுநர் பதவி, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் விட்டுச் சென்ற ஒரு பதவியாகும். ஆளுநர் நியமனம் குறித்து நமது அரசியலமைப்பில் வகை செய்யப்பட்டுள்ளது மக்களாட்சி முறையில் காலத்திற்கு ஒவ்வாத ஒன்றாகும். இவர், மத்திய அரசால் நியமிக்கப்பட்டு மத்திய அரசுக்குப் பொறுப்புள்ள அதிகாரியாவார். எனவே, உள்ளூர் நிலைமைகளையும் அரசியல் நிலைமையையும் இவர் அறிந்திருக்க முடியும் என்று எதிர்பார்க்க இயலாது. ஆளுநர் பதவிக்காகச் செய்யப்படும் செலவு சமதர்ம சமுதாய முறைக்கு ஏற்றதாக இல்லை. இச்செலவு வீணானது; இதனைக் கைவிடலாம். அமைச்சர், ஆளுநருக்குக் கீழ்ப்பட்டவர் என்று ராவ் ஷிவ் பகதூர் சிங்கிற்கும் விந்தியப் பிரதேச அரசுக்கும் இடையே நடைபெற்ற வழக்கில் உச்ச நீதி மன்றம் தீர்ப்பளித்தது (1953 S.C.R. 1188). இவ்வாறாக, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதி ஒருவர் சட்ட கோட்பாட்டின்படி மைய அரசுப் பிரதிநிதியின் ஊழியராக இருக்கிறார். ஆளுநர் பதவியை எடுத்து விடுவதற்கு உற்ற தருணம் இதுவேயாகும்.

மரணம், பதவி துறப்பு முதலிய காரணங்களினால் முதலமைச்சர் பதவி காலியானால் மேற்கு ஜெர்மனியில் பின்பற்றப்படும் நடைமுறையின்படி அடுத்த முதலமைச்சர் குறிப்பிட்ட கால அளவிற்குள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்படாவிடில் சட்டமன்றப் பேரவை தானாகவே கலைந்து விட்டதாகக் கொள்ளப்படும். இத்தகைய இடைக்கால அளவில் புதிய முதலமைச்சர் பொறுப்பேற்கும்வரை மாநிலத்தின் தலைமை நீதிபதி நிர்வாகப் பொறுப்பினை ஏற்கலாம். இக்கருத்துக்குப் பின்னணியாக அமைந்துள்ள கோட்பாடு ஏற்றுக்கொள்ளப்பட்டால், ஏனைய விவரங்கள் தொகுக்கப்படலாம்.

*1974 ஏப்ரல் 16]*

மேற்கு ஜெர்மானிய நடைமுறையின்படி நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மூலம் நிர்வாகத் தலைமை அகற்றப்படலாம். இது "ஆக்க முறையிலான நம்பிக்கையில்லாத் தீர்மானம்" என்றழைக் கப்படுகிறது. இந்த நடைமுறையின்படி, அடுத்த முதலமைச்சர் தேர்வு பற்றிய நம்பிக்கையில்லாத் தீர்மானத்துடன் அனுப்பப் பட்டாலன்றி நிர்வாகத் தலைமை, அகற்றப்பட முடியாது. இதைப் போன்றதொரு முறை இங்கேயும் பின்பற்றப்படலாம். ஆளுநர் தற்போது கவனித்து வரும் அலுவலை முதலமைச்சர் கவனிக்க லாம். இடைக்காலம் ஏற்பட்டால், முதலமைச்சர் இல்லாத மாநிலத்தின் தலைமை நீதிபதியே அந்த அலுவல்களை ஆற்றலாம்.

### நெருக்கடி கால அதிகாரங்கள்.

356, 357 பிரிவுகள், மாநிலங்களில் குடியரசுத் தலைவரின் நேரடி ஆட்சியைத் திணிக்க நெருக்கடி கால அதிகாரங்களை அளிக் கின்றன. இப் பிரிவுகள் நீக்கப்பட வேண்டும்.

**பிரிவு 365.**—மைய அரசு கட்டளைகள் பிறப்பிப்பதற்கான பிரிவுகள் விடப்பட்டுள்ளன. எனவே, இப்பிரிவும் நீக்கப்பட வேண்டியுள்ளது.

### தேசீய நெருக்கடி நிலை.

**பிரிவுகள் 352, 354.**—நெருக்கடி நிலையை பிரகடனம் செய்வது தொடர்பாக 352, 354 பிரிவுகளின்கீழ் உள்ள அதிகாரங்கள், அவை தொடர்பான அதிகாரங்கள் ஆகியவை போரோ, ஆக்கிரமிப்போ இருந்தாலன்றி செயல்படுத்தப்படக்கூடாது.

**பிரிவு 353 (ஏ).**—நெருக்கடி நிலை பிரகடனம் செய்யப்பட்டுள்ள போது. போர் அல்லது ஆக்கிரமிப்பு குறித்து மட்டுமே கட்டளைகள் பிறப்பிப்பதற்கான அதிகாரம் பயன்படுத்தப்பட வேண்டும். ஆனால் அனைத்து மாநிலக் குழுவின் அனுமதியுடன் மட்டுமே அத் தகைய கட்டளைகள் பிறப்பிக்கப்பட வேண்டும்.

**பிரிவு 355.**—போர் அல்லது ஆக்கிரமிப்பின்போது மட்டுமே ஒவ்வொரு மாநிலத்தையும் பாதுகாப்பது மைய அரசின் கடமை யாகும்.

[1974 ஏப்ரல் 16

## நிதி நெருக்கடி நிலை.

**பிரிவு 360.**—இந்தியாவின் நிதி நிலை உறுதிக்கு அல்லது நாணயத்திற்கு அபாயம் ஏற்படும் நேர்வுகளில், நெருக்கடி நிலையை பிரகடனம் செய்ய குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் அளிக்கும் பிரிவு நீக்கப்பட வேண்டும்.

## அரசுப் பணிகள்.

இரண்டு வகைப் பணிகள் மட்டுமே இருக்கவேண்டும்—

(1) மைய அரசுப் பணிகள்.

(2) மாநில அரசுப் பணிகள்.

ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். பணிகள் உட்பட தற்போதுள்ள அனைத்து இந்தியப் பணிகள் மைய அரசுப் பணிகளுடனோ மாநில அரசுப் பணிகளுடனோ இணைக்கப்பட வேண்டும்.

மாநில அரசுப் பணிகளுக்கான தேர்வு, பணி நிபந்தனைகள் ஆகியவை மாநிலங்களால் தொடர்ந்து முறைப்படுத்தப்பட வேண்டும். கூட்டாட்சி அரசுப் பணிகளுக்கான தேர்வு தற்போதுள்ள நடைமுறையையொட்டி இருக்கும். அத்தகைய தேர்வு ஒவ்வொரு மாநிலத்திலும் அரிசனங்கள், பழங்குடி மக்கள், பின்தங்கிய வகுப்பினர் ஆகியோரின் எண்ணிக்கையை ஒட்டி அவர்களுக்குப் பதவிகள் ஒதுக்குவதற்கான ஏற்பாட்டுடன் மாநில வாரியான அடிப்படையில் செய்யப்பட வேண்டும்.

கூட்டாட்சி அரசுக்கும் சம்பந்தப்பட்ட மாநில அரசுக்கும் இடையே ஒப்புக்கொள்ளக்கூடிய வரையறைகள், நிபந்தனைகளின்படி மாநில அரசுப் பணியாளர்களையும், கூட்டாட்சி அரசுப் பணியாளர்களையும் பரஸ்பரம் மாற்றிக் கொள்ள வழிவகை இருத்தல் வேண்டும்.

**பிரிவு 312.**—அனைத்திந்தியப் பணிகள், புதிய அனைத்திந்தியப் பணியை உருவாக்குதல் ஆகியவை தொடர்பான இந்த பிரிவு நீக்கப்படவேண்டும்.

## மைய அரசுப் பணியாளர்களின் ஊதியங்கள்.

மைய, மாநில அரசுப் பணியாளர்களின் ஊதியங்கள், உள்ளூர் அல்லது தனி நிலைகளுக்குரிய சலுகைகள் அளிக்கப்பட்டு, நாடு முழுவதும் ஒருபடித்தாக அமைய வேண்டும்.

1974 ஏப்ரல் 16]

## மாநில அரசுப் பணியாளர் தேர்வு ஆணைக்குழு.

மாநில அரசுப் பணியாளர் தேர்வு ஆணைக்குழு, அதன் உறுப்பினர்களை நீக்குதல் அல்லது தற்காலிகமாகப் பணியிலிருந்து நிறுத்தி வைத்தல் ஆகியவை தொடர்பான அதிகாரம் மாநில அரசிடமே இருத்தல் வேண்டும்.

## மாநில ஆட்சிப் பகுதி.

ஒரு மாநிலத்தின் ஆட்சிப் பகுதி ஒருமைப்பாட்டில், பின்வரும் மூன்று மாற்று வகைகளில் யாதேனுமொன்றிற்கிணங்க அல்லாமல் மற்ற எம்முறையிலும் தலையிடுதல் கூடாது என்று அரசியலமைப்புச் சட்டத்திலேயே தெளிவாக வகை செய்யப்பட வேண்டும் :—

(1) தொடர்புள்ள மாநிலச் சட்டமன்றத்தின் இசைவைப் பெறவேண்டும்.

(2) இவ்வழக்கினை போட்டியிடும் தரப்பினரின் இசைவுடன் இதற்கென அமைக்கப்படும் உயர்நிலை நீதிமுறை தீர்ப்பாயத்தினிடம் ஒப்படைக்கப்பட்டு தீர்ப்பளிக்கப்பட வேண்டும். அதனுடைய தீர்ப்பு எல்லாத் தரப்பினரையும் கட்டுப்படுத்துவதாக இருக்கவேண்டும்.

(3) தொடர்புடைய பகுதியின் அல்லது பகுதிகளின் மக்களுடைய கருத்தைத் தனி வாக்கெடுப்பு ஒன்றை நடத்தி அறிந்திட வேண்டும்.

அதாவது, 3, 4 பிரிவுகள் நீக்கப்பட வேண்டும். ஒரு மாநிலத்தின் எல்லைகள், பகுதி முதலியவற்றை மாற்ற அரசியலமைப்புச் சட்டத்தில் திருத்தம் செய்யவேண்டியது அவசியமாகும்.

## நாடாளுமன்றத்தில் மாநிலங்களுக்குப் பிரதிநிதித்துவம். மாநிலங்கள் அவை.

ஒவ்வொரு மாநிலத்திற்கும் சமமான பிரதிநிதித்துவம் இருத்தல் வேண்டும். அதாவது, ஒவ்வொரு மாநிலத்திற்கும் அதன் மக்கள் தொகை யாதாயினும் பிரதிநிதிகள் சம எண்ணிக்கையில் இருக்கவேண்டும்.

[1974 ஏப்ரல் 16

மாநிலங்களவைக்கு உறுப்பினர்கள் நியமிக்கப்படக்கூடாது.

**மக்கள் அவை.**

1951-ல் ஒவ்வொரு மாநிலத்திற்கும் அறுதியிடப்பட்ட இடங்களின் எண்ணிக்கை மக்கள் தொகையில் அதிகரிப்பு ஏற்பட்டிருந்தாலன்றி மற்றபடி, மாற்றம் செய்யப்படாமல் இருந்தவாறே இருக்க வேண்டும். மக்கள் தொகை அதிகரித்திருந்தால், அதிக அளவு எண்ணிக்கை ஒன்றிற்குட்பட்டு, இடங்களின் எண்ணிக்கை அதிகரிக்கப்படலாம். ஆயினும், 1951-ல் ஒவ்வொரு மாநிலத்திற்கும் அறுதியிடப்பட்ட இடங்களின் எண்ணிக்கை எந்நிலையிலும் குறைக்கப்படக்கூடாது.

**மொழி.**

மைய அரசின் ஆட்சி மொழி, அரசியலமைப்புச் சட்டத்தின் எட்டாவது விவரப் பட்டியலில் குறிப்பிட்டுள்ள அனைத்து மொழிகளாகவும் இருக்க வேண்டும். இந்நிலையினை எய்தும் வரை, மைய அரசு தலைமைச் செயலகம உட்பட மைய அரசுத் துறைகளனைத்திலும் மைய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும் இடையே தொடர்பு கொள்ளவும் ஆங்கிலமே தொடர்ந்து ஆட்சி மொழியாக இருக்க வேண்டும். உச்ச நீதி மன்றத்தில் ஆங்கிலமே தொடர்ந்து பயன்படுத்தப்படவேண்டும். உயர் நீதிமன்றம் உட்பட நீதிமன்றங்கள் அனைத்திலும் பயன்படுத்தப்படும் ஆட்சி மொழியை அந்தந்த மாநில அரசுகளே முடிவு செய்யவேண்டும். மாநிலத்தில் உள்ள மைய அரசின் அலுவலகங்கள் பொதுமக்களுடன் அலுவல் தொடர்பு கொள்வதற்கு ஆங்கிலத்துடன் அந்தந்த மாநிலத்தின் ஆட்சி மொழியையும் பயன்படுத்த வேண்டும். மாநிலத்தில் அமைந்துள்ள மைய அரசின் அலுவலகங்களால் மாநில அரசோடும் அதன் அலுவலகங்களோடும் மேற்கொள்ளப்படும் தகவல் தொடர்புகள், அந்த மாநிலத்தின் ஆட்சி மொழி வாயிலாகவே நடைபெறல் வேண்டும். மாநிலத்தில் பணிபுரியும் மைய அரசுப் பணியாளர்கள் அந்த மாநிலத்தின் ஆட்சி மொழியை நன்கு அறிந்திருத்தல் வேண்டும்.

**வர்த்தகமும், வாணிபமும்.**

*பிரிவு 302.*—மாநிலங்களுக்கிடையே வர்த்தகத்தின்மீதும் வாணிபத்தின்மீதும் பிறதொடர்புகள்மீதும் தடைகள் விதிக்க நாடாளுமன்றத்திற்கு இப்பிரிவு அதிகாரம் அளிக்கிறது. **இது நீக்கப்பட வேண்டும்.**

வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தோடு தான், ஒரு வேளை அதற்கு முன்னதாக மாநில சுயாட்சி எண்ணம் அவர்கள் உள்ளத்தில் இருந்தாலும் கூட, நாட்டைப் பாதுகாக்க வேண்டுமென்று இன்று இருக்கின்ற அரசியல் சட்டத்தை நிறைவேற்றித் தந்தார்கள் என்பதை நான் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

இன்று இந்தத் தீர்மானம் கூறுகின்றது என்ன ? நாட்டின் பாதுகாப்பு, வெளிநாட்டு உறவுகள், மாநிலங்களுக்கிடையே கடிதப்போக்குவரத்துத் தொடர்புகள், அன்னியச் செலாவணி, இந்த நான்கு தலைப்பின் கீழுள்ள அதிகாரங்கள் மட்டும் மத்திய அரசாங்கத்திடம் இருக்க வேண்டும், எஞ்சிய அனைத்து அதிகாரங்களையும் மாநிலங்களுக்கு அளித்தாக வேண்டும் என்று கூறும்போது நிச்சயமாக மத்திய அரசு ஒரு வலுவுள்ள அரசாக இருக்க முடியுமா என்பதை நாம் சற்று சிந்திக்க வேண்டும்.

இந்தத் தீர்மானத்தில் கூறுகின்றோம். மத்திய அரசாங்கம் வலுவுள்ள அரசாங்கமாக இருக்க வேண்டும் என்பதை நாம் ஒத்துக் கொள்கிறோம். காலம் சென்ற முன்னாள் முதலமைச்சர் மாண்புமிகு அண்ணா அவர்களும்கூட மத்திய அரசு வலுவுள்ள அரசாக இருக்க வேண்டுமென்ற கருத்தைச் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இன்றைய தினம் தீர்மானத்தைப் பார்க்கும்போது மத்திய அரசாங்கம் வலுவு குறைந்த அரசாங்கமாகவும் மாநில அரசாங்கம் வலுவுள்ள அரசாங்கமாகவும் மாறுவதற்கு ஏற்ற முறையில் இந்த அரசியல் சட்டத்தை மாற்றியமைக்க வேண்டுமென்ற முறையில் தான் இந்தத் தீர்மானம் இங்கே வந்திருக்கின்றது. இது இந்த நாட்டிற்கு நல்லதா என்பதை நான் கேட்டுக் கொள்ள விரும்புகிறேன்.

இன்று இருக்கின்ற சூழ்நிலையில் நாடு பாதுகாக்கப்பட்ட நிலையில் இருக்கின்றதா ? சைனா நம் நாட்டை விட்டு வெகு தூரத்தில் இருக்கிறதா, அல்லது பாகிஸ்தான் நம் நாட்டோடு உள்ள உறவை புதுப்பித்துக் கொண்டதா ? இன்னும் எத்தனையோ தீமைகள் நமது நாட்டை ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கும்போது நாட்டின் மத்திய அரசு எந்த அளவுக்கு வலுவுள்ள அரசாங்கமாக

இருக்க வேண்டுமோ அது இருந்து தான் ஆக வேண்டும் என்பதை நாட்டுப் பற்றுள்ள, தேச பக்தியுள்ள எந்த நபரும் ஏற்றுக் கொள்வார்கள் என்பதை நான் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

ஆனால் 1971-ம் ஆண்டு திராவிட முன்னேற்றக் கழகமானது தனது தேர்தல் அறிக்கையில் கோரியுள்ள ஒன்றை நான் இங்கே சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அந்தத் தேர்தல் அறிக்கையில் உள்ளது கூட இன்று இருக்கின்ற தீர்மானத்திற்கு முரண் பாடாக இருக்கின்றது என்பதை நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். ஏனென்று சொன்னால் அந்தத் தேர்தல் அறிக்கையில் "பொருளாதார வளம் ஒரு சீராக எல்லா மாநிலங்களுக்கும் ஆக்குவதற்கான திட்டத்தை மேற்கொள்ளப்படும் என்பதற்கு தி.மு.க. பொறுப்புடன் பணியாற்ற உறுதி கொள்கிறது" என்று இருக்கிறது. ஆக, இந்த நாட்டிலிருக்கின்ற அனைத்து மாநிலங்களின் பொருளாதாரமும் பாதுகாக்கப்பட வேண்டுமென்ற கொள் கையைத் தேர்தல் அறிக்கையில் கூறியிருக்கிறார்கள்.

ஆனால் இன்றைய தினம் தீர்மானத்தைப் பார்க்கும்போது இந்த நான்கு அதிகாரங்கள் மட்டும் மத்திய அரசாங்கத்தில் இருந்தால் இந்த நாட்டிலிருக்கின்ற அனைத்து மாநிலங்களின் பொருளாதார நிலையைப் பாதுகாக்கின்ற பொறுப்பு யாரிடம் இருக்கும்? இல்லை யென்று சொன்னால் நிச்சயமாக பல மாநிலங் களின் பொருளாதாரம் சிதைவு அடையும் என்பதை நிச்சயமாக யாரும் மறுக்க இயலாது.

ஆக, இன்றையதினம் வந்திருக்கின்ற தீர்மானத்தைப் பார்க்கும் போது நிச்சயமாக முன்னுக்குப் பின் முரண்பட்டதாக, இது ஒரு ஆப்டர் தாட் என்பதை நான் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்ததாக, இன்றைய தினம் நமது நாட்டிலிருக்கின்ற நமது மாநிலத்தில் ஏற்பட்டிருக்கின்ற பெரும் ஆபத்தை நாம் அனைவரும் உணர்ந்திருக்கின்றோம். கர்நாடக மாநிலமானது காவிரியின் குறுக்கே அணை கட்டியதன் விளைவாக தஞ்சைத் தரணி இப்போ திருக்கின்ற வளத்தை இழந்து விடுமோ என்ற ஐயப்பாடு ஏற்படக் கூடிய நிலையில் நாம் இருந்து கொண்டிருக்கிறோம் என்பதை

நிச்சயமாக நாம் அனைவரும் மறந்திருக்க இயலாது. மாநில சுயாட்சியை கர்நாடக மாநிலம் கேட்டால், மத்திய அரசாங்கம் இப்போது இருக்கின்ற சக்தியைக் கூட இழந்து விட்டால், தமிழ் நாட்டிற்கு ஏற்பட்டிருக்கின்ற ஆபத்திலிருந்து தமிழ் நாட்டைக் காப்பது யார் என்பதை மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் எண்ணிப் பார்க்க வேண்டும். இப்போதே ஒரு வேளை மத்திய அரசாங்கத்திற்குப் போதுமான அதிகாரம் இருந்தாலும் கூட . . .

திரு. எல். கணேசன் : தலைவரவர்களே, ஆன் எ பாயின்ட் ஆப் கிளாரிபிகேஷன். மாநில சுயாட்சி கொடுத்து விட்டால் அவர்கள் காவிரியில் அணை அங்கே கட்டப்பட்டு விடுமென்ற பாணியில் பேசுகிறார்கள். இப்போதே மத்திய அரசு தன்னுடைய அதிகாரத்தில் இருக்கிறபோதே கூட, கவர்னர் ஆட்சி அங்கே நடந்து கொண்டிருக்கும்போது, அவர்கள் தடுத்து நிறுத்தியிருக்கலாம் என்ற நிலைமையிருந்தாலும், நிதி ஒதுக்கி அணை கட்டுவதற்கு அனுமதி கொடுத்தார்கள். மத்திய அரசாங்கம் விரோதமாக இருக்கிறது என்பதுதான் குற்றச்சாட்டு. மாநிலங்களுக்கு விரோதமாக மத்திய அரசு ஈடுபட்டுக் கொண்டிருக்கிறது என்பது தானே குற்றச்சாட்டு.

(நண்பகல் 12-00)

திரு. ஏ. ஆர். மாரிமுத்து : நமது மாநில அரசின் ஸ்டாண்டே கூட அணை கட்டக் கூடாது என்கிற ஆட்சேபணை இல்லை. நமக்குக் கிடைத்து வந்த தண்ணீர் அளவு குறையக் கூடாது என்பதுதான்.

திரு. எல். கணேசன் : அணை கட்டுவதற்கே கூட இரண்டு மாநிலங்களில் தொடர்பு உடைய ஆறுகள் எனில் அனுமதி பெற்றே கட்ட வேண்டுமென்பது விதி.

திரு. ஜே. ஜேம்ஸ் : நான் கூறிய கருத்தைத்தான் அன்பரும் கூறியிருக்கிறார்கள். இம்மாதிரியான விவகாரங்கள் எழும்போது மத்திய அரசு வலுவுள்ள அரசாக இருந்தால்தான் இரண்டு மாநிலங்களுக்கு மிடையே ஒரு நீதியை நிலைநாட்ட முடியும் என்கிற கருத்தினை நான் இங்கே கூற விரும்புகிறேன்.

*1974 ஏப்ரல் 17]*

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** மாநிலங்களுக்கிடையே ஏற்படும் நீர் பற்றிய தகராறுகள் எப்படித் தீர்க்கப்பட வேண்டும் என்பது குறித்த தமிழ்நாடு அரசின் கருத்துரைகளில் விளக்கம் தரப்பட்டிருக்கிறது. அதையும் உறுப்பினர் படித்துப் பார்த்தார்களா ?

*மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் :* திரு. ஜேம்ஸ் அவர்கள் 11.25-க்கு ஆரம்பித்தார்கள். இப்போது 12 மணி ஆகிறது. இன்னும் பத்து நிமிடத்தில் முடித்துக்கொள்ள வேண்டும்.

*திரு. ஜே. ஜேம்ஸ்:* மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் நேற்றைய இந்த விவாதத்தில் எங்கள் கட்சியின் சார்பில் யாரும் கலந்து கொள்ளாததற்கு வருத்தம் தெரிவித்தார்கள். அவர்களுக்கு திருப்தி ஏற்படுகிற வகையில் எங்கள் கட்சியின் சார்பில் எல்லாக் கருத்துக்களையும் சொல்வதற்கு தாங்கள் அனுமதி அளிக்க வேண்டுமென்று சுட்டிக்காட்டுகிறேன்.

நமது மாநிலத்திலுள்ள அனைத்துக் தொழில்களுக்கும் வெளி மாநிலங்களில் இருந்து தான் 'கோல்' எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். மின்சாரத்திற்குக் கூட மற்ற மாநிலங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். மாநில சுயாட்சியை எல்லா மாநிலங்களும் பெற்றுவிட்டால் இதற்கு இடையூறு வரும் என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

அடுத்ததாக, ராஜமன்னர் குழு அறிக்கையில் அரசியல் சட்டத்தில் முக்கிய சில ஷரத்துக்கள் திருத்தப்பட வேண்டும் என்று சுட்டிக்காட்டி யிருக்கிறார்கள். குறிப்பாக ஆர்ட்டிகிள் 256, 257 ஆகியவை எல்லாம்—அதாவது மத்திய அரசு மாநில அரசுகளுக்குக் கட்டளை பிறப்பிக்கிற அதிகாரங்கள் எல்லாம் எடுக்கப்பட வேண்டும் என்கிறார்கள். பாராளுமன்றம் சட்டங்கள் இயற்றுகிறபோது, அந்தச் சட்டத்தை அமல்படுத்தச் சொல்லும் கட்டளைகளைத்தான் மாநிலங்களுக்கு மத்திய அரசு அதன் மூலம் கட்டளை பிறப்பிக்க அந்த ஷரத்துக்கள் இருக்கின்றன. for that purpose direction can be given by the Centre. இதற்கான கட்டளைகளை

மத்திய அரசு கொடுக்க வேண்டுமென்று கூறியிருக்கிறதே தவிர, மாநிலத்தின்மீது, ஆதிக்கியத்தைச் செலுத்துவதற்கு இந்த ஷரத்துக்கள் இல்லை என்று நான் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்ததாக, மாநில அரசாங்கங்களைக் கட்டுப்படுத்துகிற அதிகாரம் எதுவும் மத்திய அரசுக்கு இல்லை என்று வைத்துக் கொள்வோம். அதுபோல மாநிலங்களில் உள்ள கார்ப்பரேஷன்களைக் கட்டுப்படுத்துகிற அதிகாரம் மாநில அரசுகளுக்கு இல்லை என்றால்—கார்ப்பரேஷன்களில் நடக்கும் மோசடிகளை மாநில அரசு எப்படிக் கட்டுப்படுத்த முடியும்? சென்னை கார்ப்பரேஷனையே எடுத்துக் கொண்டால் மாநில அரசுக்கு அதிகாரம் இருந்த காரணத்தினால்தான் உடனடியாக அந்தக் கார்ப்பரேஷனைக் கலைத்து ஊழல், மோசடியில் சம்பந்தப்பட்டவர்கள்மீது மாநில அரசினால் நடவடிக்கை எடுத்துக் கொள்ள முதலமைச்சர் அவர்களால் முடிந்தது. இதுபோல மாநில அரசுகளில் ஊழல்கள், மோசடி குற்றச்சாட்டுகள் எழுகிறபோது அதை மேற்பார்வை செய்வதற்கு ஒரு சக்தி இருப்பது விரும்பத்தக்கது என்று கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

நீதித் துறையை எடுத்துக்கொண்டால் உச்ச நீதி மன்றத்திற்கு அரசியல் அமைப்புப் பிரச்சினைகள் அல்லது மத்தியச் சட்டத்திற்குப் பொருள் விளக்கம் கூறுதலைத் தவிர மற்ற வழக்குகளில் அப்பீல் செய்கிற முறை தவிர்க்கப்பட வேண்டும் என்கிறார்கள். நான் கூறிக் கொள்வேன்—இதற்குக் காரணமாக—மத்திய அரசில் உள்ளவர்களின் ஆதித்தியம் தான் உச்ச நீதி மன்றத்தில் இருக்கிறது என்கிற ஐயப்பாடுதான். இதுபோன்ற ஐயப்பாடு ஏற்படுவது நல்லதா என்று கேட்க விரும்புகிறேன். அப்படிப் பார்த்தால் உயர்நீதி மன்றங்களில் மாநில அரசுகளின் ஆதிக்கியம் தான் இருக்கிறது என்கிற ஐயப்பாடும் எழும்பக் கூடும். இது போன்ற ஐயப்பாட்டை அகற்றி—நீதிமன்றங்கள் நடுநிலையோடு செயல்பட உதவ வேண்டுமே தவிர உயர்நீதி மன்றத்திற்கு அப்பீல் செய்து கொள்ள வழியே இருக்கக் கூடாது என்பது சரியல்ல.

உயர்நீதி மன்றங்களின் நீதிபதிகளை நியமிக்கின்ற பொறுப்பு—இப்போது மாநில அரசுகளின் கருத்துரைகளைக் கேட்டு மேதகு ஆளுநர் அவர்கள் நியமிக்கின்றார்கள். இது வரவேற்கத்தக்கது

என்று கூறியிருக்கிறார்கள். நிச்சயமாக வரவேற்கத்தக்கதுதான். இந்த அறிக்கையைப் பார்க்கிறபோது உச்ச நீதிமன்ற நீதிபதிகளை நியமிக்கின்ற அதிகாரம் பாராளுமன்றத்திற்கும் அது நிறைவேற்றுகிற சட்டத்திற்கு ஜனாதிபதி தன் கையொப்பம் கொடுத்து அனுமதிக்கிற பொறுப்பும் இருக்கிறது. அது மிகவும் முக்கியமான அம்சம் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

நீதிபதிகளுக்குப் பாதுகாப்பு இல்லை என்றால் இந்த நாட்டிலுள்ள யாருக்கும் பாதுகாப்பு இல்லாமல் போகும். மாநில அரசுக்கு இந்த அதிகாரம் வந்தால்—நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம்—சபாநாயகரை நாம் எந்த எந்த முறையில் எல்லாம் நமக்கு அதிகாரம் இருக்கிறது என்று மாற்றியிருக்கிறோம் என்பதை—ஆகவே இந்த அதிகாரம் மாநிலத்திற்குத் தேவையில்லை என்று சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

அடுத்து, இன்றையதினம் இந்த நாட்டில் பல்வேறு மைனாரிட்டிகள் இருக்கிறார்கள். சில மைனாரிடிகள் மதத்தின் அடிப்படையில் அரசியல் கட்சிகளை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். முஸ்லீம் லீக் ஒரு அரசியல் கட்சி—மைனாரிட்டியினர் தங்கள் மதத்தின் அடிப்படையிலேயே கட்சி வைத்திருக்கிறார்கள். ஜனசங்கமும் மதத்தின் அடிப்படையில் அமைந்த ஒரு கட்சியாக இருக்கிறது ஒருவேளை ஜனசங்கம் ஆட்சியில் இருக்கக்கூடிய நிலைமை ஒரு மாநிலத்தில் வந்தால் அங்குள்ள முஸ்லீம் மைனாரிட்டிகள் நிலைமை என்ன ஆகும்? இதை லத்தீப் அவர்கள் சிந்திக்க வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** அதுபோல ஜனசங்கம் பெரும்பான்மை பெற்று மத்தியில் ஒரு அரசு அமைக்கிற சூழ்நிலை ஏற்பட்டால் என்ன ஆகும்?

திரு. ஜே. ஜேம்ஸ் : ஜனசங்கம் எல்லாப் பகுதிகளிலும் இல்லை என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** சென்ற தடவை ஜனசங்கத்தோடு தேர்தலில் கூட்டு வைத்துக் கொண்டார்களே, ஒருவேளை இவர்களே வெற்றி பெற்று அமைந்திருந்தால் என்ன ஆகியிருக்கும்?

[1974 ஏப்ரல் 17

திரு. ஜே. ஜேம்ஸ்: உங்களோடும் கருத்து வேறுபாடுள்ள பலர் கூட்டு சேர்ந்திருப்பதனால் என்ன ஏற்பட்டிருக்கிறது? அதுபோல அப்போதும் எந்தத் தோஷமும் ஏற்பட்டிருக்காது. அதுபோல முஸ்லீம் லீக் பெரும்பான்மை பெற்று ஒரு மாநிலத்தில் அரசு அமைத்துவிட்டால் அந்தப் பகுதியில் உள்ள மைனாரிட்டியான ஜனசங்கத்தைச் சேர்ந்தவர்கள் கதி என்ன ஆகும்? இதை எல்லாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்: ஒரு உறுப்பினரே எல்லாக் கருத்துக்களையும் சொல்வது என்றால் 2 மணி நேரம் கூட போதாது. பலரும் பேச இருப்பதால் ஒவ்வொருவரும் சில சில கருத்துக்களைத் தொகுத்து குறிப்பிட்ட நேரத்திற்குள் பேச வேண்டும். திரு. ஜேம்ஸ் அவர்கள் ஏற்கனவே அதிக நேரம் எடுத்துக் கொண்டு விட்டார்கள்.

திரு. ஜே. ஜேம்ஸ்: கடைசியாக, நண்பர் ஆலடி அருணா அவர்கள் கூறினார்கள், இந்த அரசியல் சட்டத்தைக் கடலில் தூக்கி எறிய வேண்டிய நிலை ஏற்படும், இது இந்த நாட்டைப் பாது காக்கக்கூடிய நிலையில் இல்லை, என்று.

திருமதி த. ந. அனந்தநாயகி: ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர், சார். கனம் ஆலடி அருணா அவர்கள் இந்த கான்ஸ்டிட்யூஷனை வங்கக் கடலில் போட வேண்டுமென்று சொல்கிறார். இங்கு மெம்பராகப் பிரமாணம் எடுத்ததே கான்ஸ்டிட்யூஷனுக்கு உட்பட்டுத் தான். ஆகவே, அவர் தனது பதவியை ராஜினாமாச் செய்து விட்டு, பிறகு வங்கக் கடலிலே தூக்கி எறியலாம்.

திரு. எல். கணேசன்: நாம் அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டுமென்பதோ, மறுபரிசீலனை செய்ய வேண்டுமென்பதோ அந்த அரசியல் சட்டத்திற்கு விரோதமானது இல்லை என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

திருமதி த. ந. அனந்தநாயகி: அரசியல் சட்டத்தையே மதிக்காமல் வங்கக் கடலில் தூக்கி எறிய வேண்டுமென்று சொல்கிறவருக்கு இங்கே பதவி வகிப்பதற்கு என்ன இருக்கிறது?

*1974 எப்ரல் 17] [திருமதி த. ந. அனந்தநாயகி]*

**திரு. ஜே. ஜேம்ஸ்** : தலைவரவர்களே, மாண்புமிகு ஆலடி அருணா அவர்கள் கூறினார்கள். அவர் ஒரு வழக்கறிஞராக இருப்பதால், அதன் பலனைப் பற்றி அவருக்குத் தெரியாமல் இல்லை. தி.மு.க. அரசு பதவியேற்று, இந்த ஆட்சியில் இருக்கிறது என்றால், அந்த அரசியல் சட்டம் இருப்பதால்தான் மாண்புமிகு முதலமைச்சர் கருணாநிதி அவர்கள் இன்று முதலமைச்சராக இருக்கிறார். ஒருவேளை ஆலடி அருணா அவர்களுக்கு அரசாங்கத்தின் மீது என்ன கோபமோ? . . .

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி** : அரசியல் சட்டத்தை எழுதிய அம்பேத்கார் அவர்கள் அதைக் கொளுத்த வேண்டுமென்று சொன்னார்கள். அப்பொழுதெல்லாம் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?

**திரு. ஆர். பொன்னப்ப நாடார்** : அதனால்தான் தி.மு.க.வி லிருந்து கொளுத்தி, அதற்குத் தண்டனையும் பெற்றார்கள். அதற்குப் பிறகு, இப்பொழுது ஆட்சிக்கு வந்த பிறகு தான் மாற்றிக் கொண்டு விட்டார்கள்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி** : அண்மையிலேதான் கோடம்பாக்கத்தில் கக்கன் அவர்கள் தலைமையில் அம்பேத்கார் சிலையைத் திறந்து வைத்தார்கள்.

**திரு. ஜே. ஜேம்ஸ்** : ஆலடி அருணா அவர்கள் இதை என்னுடைய சொந்தக் கருத்து என்று சொன்னார்கள். கட்சியின் கருத்து என்று சொன்னால் அதனால் முதலமைச்சருக்கு எவ்வளவு ஆபத்து இருக்கிறது என்பதை உணர்ந்துதான் அவர்கள் அந்தக் கருத்தைச் சொன்னார்கள். ஆகவே, முதலமைச்சர் அவர்கள் அந்தக் கருத்தை ஏற்றுக் கொள்ளாததற்காக நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். இந்தத் தீர்மானம் தேவையற்றது, இது தேவையில்லையென்று கூறி முடித்துக் கொள்கிறேன்.

**திருமதி த. ந. அனந்தநாயகி** : கனம் முதலமைச்சர் அவர்கள் அம்பேத்கார் அவர்கள் அரசியல் சட்டத்தைக் கொளுத்தவேண்டும் என்று சொன்னதாகச் சொன்னார். எனக்கு ஞாபகம் இல்லை. ஆதாரம் கொடுங்கள். நான் சொல்வது, நீங்கள் வெளியே போய்

என்ன வேண்டுமானாலும் கொளுத்துங்கள், சாப்பிடுங்கள். ஆனால், அரசியல் சட்டப்படி பிரமாணம் எடுத்துவிட்டு, அதை வங்கக் கடலில் போடுகிறோம் என்று சொன்னால் என்ன நியாயம்?

**மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்:** அதற்கு ஏதாவது அப்ஜெக்ஷன் இருந்தால், பிரிவிலேஜ் மோஷன் கொடுத்து தனியாக டிஸ்கஸ் பண்ணலாம். இதிலே ஏன் நேரத்தை வீணாக்குகிறீர்கள்?

**திரு. முனு ஆதி:** 4 குருடர்கள் சேர்ந்து யானையைக் கண்டு பிடித்தார்கள் என்று அனந்தநாயகி அவர்கள் கூறினார்கள். எதிர் காலப் பதவி ஆசையை—குருடர்கள் பார்த்ததுபோல் பார்த்து, முழுமை அடையாத நிலைமையை அவர்கள் . . .

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** திரு. அருணா ஒன்றும் முரண்படவில்லை. அம்மையார் அவர்கள் ஒரு கட்சியின் சார்பிலே உறுதி மொழி எடுத்து, இன்னொரு கட்சியின் சார்பிலே இங்கே பேசுகிறார்கள்.

**திருமதி த. ந. அனந்தநாயகி:** தப்பாகச் சொல்லாதீர்கள். We have not taken oath for the party; we have taken oath under the Constitution.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** நீங்கள் உங்களைத் தேர்ந்தெடுத்த மக்களுக்கே மதிப்பளிக்காதவர்கள். அரசியல் சட்டத்தைப் பற்றிப் பேசியிருக்கிறீர்கள்.

**திருமதி த. ந. அனந்தநாயகி:** ஆனால், இதை மக்களைச் சந்தித்துத்தான் செய்திருக்கிறேன், பேசிக் கொண்டிருக்கிறேன் என்று கலைஞர் கருணாநிதி அவர்களுக்குத் தெரியாமலிருக்கலாம். அதைப் பற்றி நீங்கள் சொல்ல வேண்டாம்.

**திரு. க. மு. இராசகோபால்:** அரசியல் சட்டத்தைக் கொளுத்தியவர்கள் சட்டமன்ற உறுப்பினர்களாக வந்ததாகச் சொன்னார்கள். அப்பொழுது முதலமைச்சராக இருந்த பக்தவத்சலம் அவர்கள் சென்னையிலே கொளுத்துவதாகப் பேரறிஞர் அண்ணா அவர்கள் சொன்னபோது, முன்கூட்டியே கைது செய்துவிட்டார்கள். ஆனால், மதுரை, செங்கற்பட்டு போன்ற இடங்களிலே

கொளுத்திய பிறகு, ஆணை பிறப்பித்து இப்படிக் கைதாக்கினார்கள். அதனால அதற்குப பின்னால் இருந்தவர் அன்றைய முதலமைச்சர் பக்தவத்சலம் என்பதை இந்த அவைக்குத தெரிவித்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

**மாண்புமிகு திரு. க. இராசாராம்:** துணைத் தலைவரவர்களே, ஒரு வரலாற்றைச் சொல்லிவிடுகிறேன். எல்லாக் கட்சியிலேயும் இப்படிப்பட்ட பதவிப் பிரமாணங்கள் செய்வதைப் பற்றி சொன்னதனாலே தங்கள் மூலமாக இந்த அவைக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். வெள்ளைக்காரன் காலத்திலே யூனியன் ஜாக்கின் கீழ் பண்டித ஜவகர்லால் நேரு வைஸ்ராயிடத்திலே பிரமாணம் எடுத்துக் கொண்டார்கள். சுதந்திரத்திற்குப் பிறகு, பிரதம அமைச்சரானார்கள். ஆகவே, அது ஒன்றும் புதிதல்ல.

THIRU K. M. SUBARMANIAM: Hon. Deputy Speaker, I have taken the oath under the present Constitution and I am going to speak in support of the Resolution brought by the Chief Minister. The reason is this. I feel I am not contradictory in my conscience. I have seen the working of the Constitution and I am working under it. But I think if the Constitution is altered and if it is bettered, the working of it will be better and that is the reason why, though we take the oath under the Constitution, we propose an amendment or alteration of it whenever we find it necessary for the good of the people. I do not think there is any objection to support such an amendment.

So far as we are concerned, we are taking this matter a bit lightly, I think. This is a very serious matter and this vitally affects about 55 crores of the people of India. This particular resolution is not a resolution pertaining to Tamil Nadu alone. For, if this resolution is accepted, or partially accepted with amendments, the working of the Constitution will be different, the administration will be different and the entire Indian financial conditions will be different.

Today, it is well known that decentralisation brings in better results. I do not think any experienced politician or administrator or executive will oppose decentralisation in any form. We

are thinking of decentralisation because of that. Secondly, the original Constitution was drafted by the Constituent Assembly, consisting of efficient lawyers, constitutional lawyers, efficient and experienced administrators, but not of men closely connected with the living conditions of the people. That has to be taken into account. Twenty-two or twenty-three years of the working of the Constitution has shown that we are gradually degenerating; our economic condition is terribly failing; inflation is raging like anything; unemployment is increasing on the one side and we are getting all sorts of inefficiency because of the fact that all administrative powers are concentrated in Delhi.

Sir, one great man—I do not wish to name him now—when the Constitution was adopted asked me. 'Do you know what the Constitution is, K.M.S. '. I did not know for, then I was a small boy. He said, 'The State is only a magnified Corporation of Madras '. It has only the powers of a magnified municipality. All power is concentrated in the Centre '. 'One day ', he said, 'people may drastically alter the Constitution so that the administrative powers are vested with the States '. To say that the D.M.K. Government brings in this resolution because of its weakness is meaningless. People know the present state of the country. We have to analyse why things are like this. On the basis of such an analysis it you find that justice cannot be done if directions are given from Delhi for the good of Kanyakumari, that power has to be transferred to the executive authority of Kanyakumari.

Similarly, both the Centre and the State are in charge of administration. The State has got certain responsibilities and similarly the Centre has got certain responsibilities, which the Centre alone can perform. Whatever that has to be administered by the State must be passed on to the States. I do not say that everything should be passed on to the States, as mentioned here

Take for example, Railways, I am alive and I know the M.S.M. Railway and S.I. Railway during the British days. There were small and small railway companies and the administration was not bad. Why not the administration of Railways be given to the States? Now there are Zonal Railways. Instead

*1974 ஏப்ரல் 17]* (Thiru K. M. Subramaniam)

of Zonal Railways, there is nothing wrong in having State Railways. The question is this. The entire co-relation and co-ordination must rest with the Board with power to the States to administer.

What is State autonomy? State Autonomy is full power to govern the States. State Autonomy is more powers to the States to administer within the limited framework of the Constitution. State autonomy means passing of such powers to the States to govern the States properly in all common matters. The subjects like Finance, like Defence or certain other aspects of Finance like Foreign Exchange, Foreign Relations, Foreign Debts can rest with the Central Government. They have been mentioned clearly here. I doubt whether they would be accepted in toto by other States.

The first and foremost is the Constitution of Inter-Council of States. This is very important. To-day the people are agitated against the rise in prices of essential commodities.

There was a Bandh in Maharashtra. There was a Bandh in Tamil Nadu. Who was responsible for this? Who was responsible for this rise in prices of essential commodities? If there is such an Inter-State Council, all the Chief Ministers can meet, think and take a decision on such vital matters. Yesterday only, Sir, under your Chairmanship we discussed one important thing with regard to the Housing Board.

We discussed that the Banks have refused to give credit to the Housing Board. The Schedule Banks have refused to give credit to the Housing Board at not less than 12½ per cent. Is it right on the part of the Schedule Banks, Sir? Are we to tolerate such a state of affairs?

If the banking is within the control of the State, can they say like that, Sir? Like that there are so many things. The Resolution has been drafted very nicely. The real powers that are necessary are with the Central Government now. There is a curb on getting credit facilities by the State Institutions. Since there is a curb on credit policies, the private bankers are lending money at 24 or 36 per cent. The private people get loans from them and charge the interest on the consumers.

Therefore, the prices are shooting up like anything. Now I am doing my business. If I am refused loan by a Schedule Bank or by a nationalised bank, I will go to some Champalal and get the money at 24 per cent or 36 per cent for four months and increase the prices of goods. Correspondingly, the retail prices will go up. This will happen, if there is no control by the State on banking, if there is no control on credit policy, if there is no control on industrial policy, and if there is no control on licencing policy. All these things are sure to happen. How can we accuse a Chief Minister of a State and how can the Chief Minister of a State control the rise in prices of commodities in such a situation? How can he control the prices?

The cotton prices are controlled by the Centre. The steel prices are controlled by the Centre. Steel is the most vital raw material for industries for production of essential commodities. It is a vital commodity for the construction of houses. It is a vital commodity for the manufacture of cycles, nails, cutting machines and so many other things. The prices are not controlled by the Government of Tamil Nadu.

Similarly, price of sugar is controlled by the Government of India and 30 per cent of the production is given by the Centre for open market sales. Why should there be this 30 per cent open market sales? It is only to please the so-called capitalists this 30 per cent free market sale has been introduced.

Similarly, with regard to cloth also, they have made the same thing. I know this because I am in cloth trade for the past 36 or 37 years. In the cloth trade, 25 per cent is controlled cloth. What is happening is this. So many mills instead of producing controlled cloth, they simply show in their accounts that they have produced so much of quantity of controlled cloth. Can the Hon. Minister for Industries, Thiru Madhavan get into the mill and ask the mill owner what is his production of controlled cloth? The power is vested with the Centre. I am only quoting a few examples.

The price of cotton cloth has been increased by 20 per cent just 15 days back. Increase of 20 per cent is not a joke. The price of the essential commodity of cloth goes up. The millers are happy about the increase in their commodity. It is because the Centre could not have good administration though they may have good rules.

Unless the State autonomy comes true, unless the State is given full powers, it would be difficult to solve the problem of rise in prices of essential commodities.

I think even in Railways, the State should have powers. Of course, I do not think the State should have power in Income Tax because there is difficulty in the collection of taxes. But the State should have powers in sharing the income-tax. In the collection of income-tax, there is this dfficulty. If the tax is collected in Madras, then the business people will have their accounts in Bombay and Calcutta and it may not be possible to trace them.

So far as the other subjects mentioned by our Hon. Dr. M. Karunanidhi on the views of the Tamil Nadu Government on Rajamannar Committee's Report, I do not agree cent per cent. I agree 90 per cent and would like to say that State autonomy is an absolute necessity. Otherwise what will happen is, as pointed out by my friend Aladi Aruna, the Constitution has to be thrown into the Bay of Bengal. He need not throw the Constitution into the Bay of Bengal but the people themselves will throw it in the Bay of Bengal because they cannot tolerate the huge starvation, they cannot tolerate mismanagement, and they cannot tolerate large scale unemployment. The people will be forced to rebel. Unless a Committe sits immediately and goes into the recommendations of this legislation, it cannot be averted. The States should have full effective powers to control, to govern to regulate the matters and act properly; otherwise, they are completely doomed. Thank you Sir.

* திரு. ஏ. சுப்பிரமணியம்: தலைவர் அவர்களே, மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் இங்கே கொண்டு வந்திருக்கின்ற தீர்மானத்தை மிக வன்மையாக எதிர்த்து சில வார்த்தைகளைப் பேச விரும்புகிறேன்.

இந்தத் தீர்மானம் தேவையற்றது, காரிய சாத்தியம் இல்லாதது, நாட்டிற்கு அபாயம் விளைவிக்கக்கூடியது என்ற காரணங்களால் நான் இதனை வன்மையாக எதிர்க்கிறேன். தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானத்தைப் பற்றி இங்கே விவாதிக்கும்போது

We cannot discuss it in abstract. We will have to discuss it therotically as well as, in the present contex''

இந்தத் தீர்மானத்திற்கு அடிப்படையாக ராஜமன்னர் கமிட்டி அறிக்கையை வைத்திருக்கிறார்கள். இந்த அறிக்கையைப் பற்றிச் சொல்லும்பொழுது இந்த அறிக்கைக்குப் பெயர் Report of the Centre-State Relations Inquiry Committee என்று இருக்கிறது. மெய்யாகவே இந்த கமிட்டி 'சென்டர்-ஸ்டேட் ரிலேஷன்ஸ்' பற்றிய என்கொயரி கமிட்டி அல்ல.

It was a Committee formed with the purpose of arguing a case for State autonomy. This was the reason why a Committee was appointed. It was not appointed to go into the question of Centre-State relations, to go into the question of how to readjust the Centre-State relations for the objective of having a strong and united country.

(பிற்பகல் 12.30)

அடுத்து சட்ட மேதைகளை இந்தக் கமிட்டி உறுப்பினர்களாக அரசு நியமித்தது. நான் நினைக்கிறேன் இந்த மோசமான வழக்கை வாதாடுவதற்குச் சாதாரண வழக்குரைஞர்கள் போதாது, சிறந்த கெட்டிக்கார வழக்கறிஞர்களாக இருக்க வேண்டும். 'Very skilled and clever lawyers are essential என்ற வகையிலே தான் இவர்களைப் போட்டிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். ஆனால் அவ்வளவு கெட்டிக்கார வழக்குரைஞர்களாக இருந்தும் அவர்களாலே கூடப் போதுமான அளவில் சரியாக வழக்கை உருவாக்க முடியவில்லை என்பதைச் சொல்லிக் கொள்வேன்.

அடுத்து, மாநில சுயாட்சி என்ற அந்த வார்த்தையை, என்ற அந்தத் தீர்மானத்தை முதலமைச்சரவர்கள் கொண்டு வந்திருக்கிறார்கள். இதற்குச் சில காரணங்கள் முக்கியமானவை

*1974 ஏப்ரல் 17]* *[திரு. ஏ. சுப்பிரமணியம்]*

என்று சொல்லப்படுகிறது. மக்களுக்கு நன்மைகள் செய்வதற்கு, நல்ல திட்டங்களை நிறைவேற்றுவதற்கு அதிகாரம் போதவில்லை என்பது ஒரு காரணம். தேவையான பணம் கிடைக்கவில்லை மத்திய சர்க்காரிடத்திலேயிருந்து என்பது இன்னொரு காரணம். பல்வேறு திட்டங்களுக்கு அனுமதி கிடைப்பதற்குத் தாமதம் ஏற்படுகிறது என்பது மூன்றாவது காரணம். பாரபட்சம் காட்டப்படுகிறது என்பது இன்னும் ஒரு காரணம். இம்மாதிரி பல காரணங்களைச் சொல்லியிருக்கிறார்கள்.

அதிகாரத்தைப் பொறுத்த வரையில் இங்குமங்கும் போதாது என்ற உணர்வுகள் இருக்கலாம். நான் ஒன்றைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இந்த மாநிலத்திலே ஏற்கனவே இருக்கின்ற அதிகாரத்தைக் கொண்டே பல நல்ல காரியங்கள் இந்த மாநிலத்திலே முன்னர் காங்கிரஸ் அரசுகளாலே செய்யப்பட்டிருக்கின்றன. ஏராளமான தொழில்களைத் தொடங்கி, இந்த மாநிலத்திலே மின்சார வசதியை அதிகப்படுத்தி, பள்ளிப் பிள்ளைகளுக்கு மதிய உணவுத் திட்டத்தைக் கொண்டு வந்து சமுதாய மாற்றம் ஏற்படுத்தப் பல்வேறு திட்டங்களைக் கொண்டு வருவதற்கு இருக்கின்ற அதிகாரங்களைக் கொண்டே செய்ய முடிந்தது. ஆனால் இப்பொழுது நாம் என்ன பார்க்கிறோம் என்றால், இந்த அரசு இருக்கின்ற அதிகாரத்தை எப்படிப் பயன் படுத்துகிறது என்றால்—இந்த மாநிலத்தில் ஜனநாயகத்தைப் பாழடிப்பதற்கு, தனது கட்சியின் சர்வாதிகாரத்தை, party autocracy இங்கே உருவாக்குவதற்குத்தான் முயன்று கொண்டிருக்கிறார்கள். கிடைக்கின்ற அதிகாரத்தை மக்களுக்கு நலம் பயக்கும் காரியங்களுக்குப் பயன்படுத்தாமல் ஒரு கட்சியின் ஆதிக்கத்தை என்றென்றைக்கும் நிலைபெறச் செய்ய, ஜனநாயகத்தைக் குழி தோண்டிப் புதைக்கப் பயன்படுத்தும் நிலையில் மேலும் அதிகாரம் வேண்டுமென்று கேட்கும்பொழுது அந்தக் கோரிக்கையை I cannot view it without suspicion.

இன்னொன்று சொல்ல விரும்புகிறேன். மாநிலத்திற்குக் கூடுதல் அதிகாரம் வேண்டுமென்று கேட்கிறீர்கள். ஆனால் இங்கேயுள்ள உள்ளாட்சி அமைப்புகள், கூட்டுறவு இயக்கம், இன்னும் பல்வேறு அமைப்புகள் இவற்றிற் கெல்லாம் கூடுதலாக அதிகாரம் வேண்டுமென்று அவைகள் கேட்கின்றனவே அதற்கு நீங்கள் அளிக்கும்

*[திரு. ஏ. சுப்பிரமணியம்] 1974 ஏப்ரல் 17]*

பதில் என்ன? சட்டபூர்வமாக இருக்கட்டும், சட்டத்தில் என்ன சொல்கிறது என்பது வேறு இருக்கிறது, ஆனல் நடைமுறையிலே பாரபட்சம் காட்டுவதில்லையா? நடைமுறையிலே அவர்கள்மீது சர்வாதிகாரத்தைத் திணிப்பதில்லையா?

இவைகளை யெல்லாம் செய்து கொண்டிருக்கிறீர்கள். பதில் என்ன சொல்கிறார்கள் என்றுல் பல்வேறு நிலைகளில் இவை தேவைப்படு கின்றன என்று சொல்கிறார்கள். அவைகளுக்கும் கூடுதல் அதிகாரம் கொடுக்க வேண்டுமென்ற 'ஃபிலாசபி' இருக்க வேண்டும். திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு அந்த ஃபிலாசபி கிடையாது. சாதாரண மக்களிடத்திலே அதிகாரம் போக வேண்டுமென்ற எண்ணம் கிடையாது. அதிகாரத்தைத் தன்னிடத்திலேயே வைத்துக் கொண்டு தவறுகளைச் செய்ய வேண்டுமென்ற ஃபிலா சபியை வைத்துக் கொண்டு, எங்களுக்கு இன்னும் கூடுதலாக அதிகாரம் வேண்டுமென்று கேட்பது முரண்பட்டதாக இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பணம் போதுமான அளவில் இல்லை என்று சொல்லியிருக் கிறார்கள். ஃபைனன்ஸ் கமிஷனைப்பற்றிக் குறைப்பட்டுக் கொண் டிருக்கிறார்கள். பணம் போதாது என்ற கோரிக்கையை நான் தவறு என்று சொல்ல மாட்டேன். எந்த மாநிலமும், எந்த உள்ளாட்சியும், எந்த அமைப்பும் கூடுதலாக வேண்டுமென்று 100 கேட்டால்தான் 50-வது கிடைக்கும். ஒவ்வொரு மாநிலத் திற்கும் கூடுதல் வேண்டுமென்று ஒவ்வொரு மாநிலமும் கேட்கும். அப்படிக் கேட்பதை நான் குறை சொல்ல மாட்டேன். ஆனல் அதையே ஒரு குற்றச்சாட்டாகச் சொன்னல் அதை ஒப்புக் கொள்ள முடியாது. இந்த மாநிலத்திற்குப் பாரபட்சம் காட்டு வதாகச் சொல்லப்படும் குற்றச்சாட்டை ஒப்புக் கொள்ள முடியாது. ஏனென்றால் உண்மை வேறு வகையாக இருக்கிறது. என்றை மட்டும் நான் சொல்லிக் கொள்வேன்.

Fourth Five-Year Plan— Central assistance

என்று ஒவ்வொரு மாநிலத்திற்கும் பார்த்தால். நான் நான்கைந்து மாநிலங்களைப்பற்றி மட்டும் கணக்கைச் சொல்கிறேன்.

Gujarat 34.7 per cent out of the total outlay.

Haryana 34.7 per cent.

Maharashtra 27 per cent.
Punjab 34 per cent.
Tamil Nadu 40 per cent.

இதை நான் எதற்காகச் சொல்கிறேன் என்றால் இதற்குமேல் கேட்க வேண்டாமென்பதற்காகச் சொல்லவில்லை. நான் சொல்வது, தமிழகத்திற்கு மட்டும் ஓரவஞ்சனை காட்டப்படுகிறது என்ற குற்றச்சாட்டு உண்மை அல்ல. It is opposed to facts. என்பதனைக் காட்டுவதற்காக இந்த ஒன்றை மட்டும் நான் குறிப்பிட்டேன்.

இன்னொன்றும் சொன்னார்கள். ஃபைனான்ஸ் கமிஷன் போதுமான அளவில் நிதி ஒதுக்கவில்லை என்று சொன்னார்கள். புரஹிபிஷனுக்காக நஷ்ட ஈடு தரவில்லை என்ற குறைபாடு அரசின் சார்பில் சொல்லப்பட்டது. ஃபைனான்ஸ் கமிஷனிடம் என்ன கேட்டீர்கள்? புரஹிபிஷனை அமல்படுத்திவிட்டு நஷ்ட ஈடு வேண்டுமென்று கேட்கவில்லை. புரஹிபிஷனை அமல் செய்தால் எங்களுக்கு இழப்பு ஏற்படக் கூடும், அதற்கு நீங்கள் உத்தரவாதம் கொடுப்பீர்களா என்று கேட்டீர்கள். அவர்கள் கொடுக்கவில்லை. ஆகவே, அதைக் குற்றச்சாட்டாகச் சொல்வது சரியல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்து, நிதிநிலைகளைப் பொறுத்த வரையில் இராஜமன்னார் கமிட்டி அறிக்கை என்ன சொல்கிறது? அந்த அறிக்கை முன்னுக்குப் பின் முரணாக இருக்கிறது. 57-வது பக்கத்தில்

Financial autonomy of the Centre and State is vital to the preservation of the federal principle.

என்று சொல்லியிருக்கிறார்கள். அதே அறிக்கையிலே 17-வது பக்கத்திலே

' The reasons for the perpetuation and growth of unitary trends are mainly

(c) Inadequacy of State's fiscal resources and consequent dependence on Centre for financial assistance.'

என்று சொல்லியிருக்கிறார்கள். ஆக, இராஜமன்னார் கமிட்டி அறிக்கையே சொலகிறது, பல மாநிலங்களுக்கு—எல்லா மாநிலங்களுக்கும் இருக்க முடியாது—பல மாநிலங்களுக்கு செல்வாதாரப் பற்றாககுறை இருக்கிறது. அதனால் அவைகள் மைய அரசினிடத்தில் நிதி உதவிக்காகச் செல்ல வேண்டியிருக்கிறது. அப்படிப்பட்ட மாநிலங்கள் என்ன செய்வது? பல மாநிலங்கள் இருக்கின்றன. எதற்காக இதைப்பற்றிச் சொல்கிறேன் என்றால், இராஜமன்னார் கமிட்டி.....

திரு. செ. கந்தப்பன் : தலைவரவர்களே, மாண்புமிகு உறுப்பினர் திரு. சுப்பிரமணியம் அவர்கள் தம்முடைய கருத்தைச் சொல்லியிருந்தால் நான் குறுக்கிட்டிருக்க மாட்டேன். இராஜமன்னார் கமிட்டி அறிக்கையில் முரண்பாடு இருப்பதாக இல்லாத ஒன்றைச் சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் மேற்கோள் காட்டியதைத்தான் நான் சொல்கிறேன். போதுமான நிதி ஆதாரங்கள் மாநிலத்தில் இல்லை என்று சுட்டிக்காட்டி, அடிக்கடி கெஞ்ச வேண்டியிருக்கிறது என்று சுட்டிக்காட்டி, பரிந்துரைகள் வரும்பொழுது அந்த நிலையை மாற்ற நிதி ஆதாரங்களை மாநிலங்களுக்குப் பெருக்கித் தாருங்கள் என்று முடித்திருக்கிறார்கள். எனவே இதில் முரண்பாடு இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

(பேரவைத் தலைவர் தலைமை)

திரு. ஏ. சுப்பிரமணியம் : நிதி ஆதாரங்கள் என்பது கேட்டவுடன் கிடைக்கின்ற காமதேனு அல்ல. நிதி ஆதாரங்கள் என்பது மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடும். நமக்கே தெரியும்.

பீஹார் மாநிலத்தில் நிலக்கரி அதிகமாக இருக்கிறது, இன்னொரு மாநிலத்தில் இன்னொரு பொருள் அதிகமாகக் கிடைக்கிறது, அதனால் அதிக வருவாய் இருக்கிறது.

பம்பாய், கல்கத்தா போன்ற மாநிலங்களில் தொழில்கள் மிகுதியாகக் குவிந்து கிடக்கின்றன. எனவே அங்கே வருமான வரிகள் கூடுதலாகக் கிடைக்கும், தொழில் வரி கூடுதலாகக் கிடைக்கும்.

ஆனால் ஒரிசாவை எடுத்துக் கொண்டால் தொழில்துறையில் பின்தங்கி இருக்கிறது. எனவே நிதி ஆதாரங்களை இஷ்டம்போல் ஏற்படுத்திக் கொள்ளுங்கள் என்று சொல்வது சாத்தியப்படாது.

*1974 ஏப்ரல் 17]* *[திரு. ஏ. சுப்பிரமணியம்]*

நம்முடைய மாநிலத்தில் ஒவ்வொரு மாவட்டத்தையும் நிதி ஆதாரங்களை நீங்களே தேடிக் கொள்ளுங்கள் என்று சுயாட்சி கொடுத்தால் என்னவாகும்? கோவை மாவட்டத்திற்கு நிதி ஆதாரங்கள் நிறையக் கிடைக்கும், ஆனால் இராமநாதபுரம், நெல்லை, கன்னியாகுமரி போன்ற மாவட்டங்களுக்கு அப்படிக் கிடைக்காது. ஆகவே, மாவட்டத்திற்கு மாவட்டம், தாலுக்காவிற்குத் தாலுக்கா எப்படி மாறுபட்டிருக்கிறதோ, அதேபோல்தான் மாநிலத்திற்கு மாநிலம் மாறுபட்டிருக்கிறது. அதிகாரத்தைக் கொடுத்துவிட்டால் மட்டுமே நிதி ஆதாரங்களைத் தேடிவிட முடியாது.

இன்னொரு குற்றச்சாட்டைச் சொன்னார்கள். சேங்ஷன் ஆவதில் தாமதம் ஏற்படுகிறது, ஆகவே, மாநில சுயாட்சி வேண்டுமென்று சொல்கிறார்கள். தாமதம் எல்லாயிடத்திலும்தான் ஏற்படுகிறது. ஒரு மாநில ஆட்சியிலே மாதக் கணக்கிலே ஆண்டுக் கணக்கிலே தாமதம் ஏற்படுகிறது. பல்வேறு பஞ்சாயத்துக்கள் சம்பந்தமாக மாதக்கணக்கில் ஆண்டுக்கணக்கில் சேங்ஷன் ஆகாமல் தாமதம் ஏற்படுகிறது என்று சொல்கிறார்கள். அவர்களுக்கு சுயாட்சி கொடுக்கலாமா? தாமதம் ஏற்படுகிறது என்றால் பல நிர்வாக இயந்திரங்களில் பல்வேறு கோளாறுகள் இருக்கலாம். அந்த இயந்திரத்தை நாடு முழுவதிலும் சீர்திருத்தி அமைக்க வேண்டும்.

தாமதத்திற்கு இன்னொரு காரணம் இருக்கிறது. நிர்வாக இயந்திரத்தில் இருப்பவர்கள் மனிதர்கள் தான். மனிதர்கள் பல்வேறு விருப்புகள், வெறுப்புகளுக்கு உள்ளாவார்கள். எல்லா இடங்களிலும் இருக்கிறது. சாதி உணர்வுகள் இருக்கும், பிரதேச உணர்வுகள் இருக்கும், மாவட்டம் என்ற உணர்வு இருக்கும். அம்மாதிரி— They also play a part இதெல்லாம் அன்றாட நிர்வாகத்தில் ஏற்படுகிற கோளாறுகள்— Human factor plays a major role in that அந்த மாதிரி விஷயங்களுக்கு அரசியல் சட்டத்தை மாற்றி நாட்டின் பொலிடிகல் செட்-அப்பையே மாற்ற வேண்டுமென்று கூறுவது சரியான தல்ல.

[திரு. ஏ. சுப்பிரமணியம்] [1974 ஏப்ரல் 17

இது அபாயகரமானது என்பதற்குச் சில காரணங்களைச் சொல்ல விரும்புகிறேன். இதைச் சொல்வதற்கு முன்னால் முதலமைச்சர் அவர்கள் உரையில் பண்டித ஜவகர்லால் நேரு அவர்கள் 1947 ஜனவரி மாதம் கான்ஸ்டிடுவென்ட் அசெம்பிளியில் பேசியதை எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். அடானமஸ் ஸ்டேட் வேண்டு மென்று அவரே கூறியிருக்கிறார் என்று சொன்னார்கள். இது 1947-ம் ஆண்டு ஜனவரி மாதம் நாடு விடுதலை பெறுவதற்கு முன்பு கூறிய கருத்து.

நாடு விடுதலை பெற்றது ஆகஸ்டு 15-ம் தேதிதான். அன்று இந்தியாவுக்கு விடுதலை பெற்றது எந்த அடிப்படையில்? பெத்திக் லாரன்ஸ் திட்டத்தின் அடிப்படையில், லார்டு வேவல் திட்டத்தின் அடிப்படையில் சுதந்திரம் கிடைத்தது. அதற்குப் பல்வேறு எதிர்ப்புகள் இருந்தன. அன்று பிரின்ஸ்லி ஸ்டேட்ஸ்—600-க்கு மேற்பட்ட மன்னர்கள் இருந்தனர். அவர்கள் ஆங்கில அரசின் பகடைக் காய்களாகப் பயன்படுத்தப்பட்டனர். பிரதேச வெறிகளை வளர்த்து வந்தார்கள். அந்த எதிர்ப்புகளை எல்லாம் சமாளித்து எப்படியும் இந்தியாவுக்கு விடுதலை பெற்றுத் தந்தாக வேண்டும், ஆங்கிலேய ஆட்சி அகற்றப்பட வேண்டுமென்ற காரணத்தால் சிலபல வாக்குறுதிகள் கொடுக்கப்பட்டன.

அன்று மன்னர்களுக்கு மானியம் கொடுப்பதாக ஒப்புக் கொண்டோம். கவனன்ட்ஸ் ஏற்படுத்தி புனிதமானது என்று சொன்னோம். மானியங்கள் உண்டு, பிரின்ஸ்லி ப்ரிவிலெஜஸ் காப் படும் என்ற உத்தரவாதம் கொடுக்கப்பட்டது. ஆனால் பின்னர் The covenant was torn to pieces இதனைப் பலர் எதிர்த்தார்கள். அன்று கவனென்ட் புனிதாமனது என்று சொன்னார்கள். நாம் என்ன பதில் சொன்னோம்? கால மாறுதலுக்கேற்றவாறு மாற்றுவதாகச் சொன்னோம்.

அந்நிய அரசின் பாக்கெட்டுகளாக, சுதந்திரத்தை சாபடேஜ் செய்யும் ஏஜெண்டுகளாக அவர்கள் இருப்பார்கள் என்ற காரணத்தால், அன்று அவர்களுக்குச் சலுகைகள் காட்ட வேண்டிய

அவசியம் ஏற்பட்டது, காட்டினோம். இன்று கால மாறுதலுக் கேற்ப அதை எடுத்து விட்டோம். அப்படி பல்வேறு மாறுதல் களைச் செய்ய வேண்டியிருக்கிறது.

முப்பது முறை அரசியல் சட்டத்தைத் திருத்தியிருக்கிறோம் என்று முதலமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆமாம்; செய்திருக்கிறோம். எதற்காக? இந்த நாட்டை இன்றைய நிலையி லிருந்து முன்னுக்குக் கொண்டு போக, பொருளாதாரத் துறையில் நாட்டிலிருக்கும் ஏற்றத் தாழ்வுகளை அகற்ற, சமுதாய நீதியை ஏற்படுத்த இந்தத் திருத்தங்களைக் கொண்டு வந்தோம். ஆனால் இந்தத் தீர்மானத்தைப் பார்த்தால், இந்த நாட்டைத் துண்டாடுகிற வகையில் இருக்கிற தன்மை இருக்கிறது. மைய அரசைப் பலவீனப்படுத்தும் வகையில் இருக்கிறது. அன்று ஜவகர்லால் நேரு அவர்கள் சொன்னதை மேற்கோள் காட்டுவது பொருந்தாது. அன்றைக்கு இருந்த நிலையில் சொன்னார்கள். அதே ஜவகர்லால் நேரு இருந்துதான் 1950-ம் ஆண்டு ஜனவரி மாதம் 26-ம் தேதி இந்த அரசியல் சட்டத்தையும் உருவாக்கியிருக்கிறார்கள் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

இந்தப் புத்தகத்தைப் படித்துப் பார்த்தால் இவர்கள் பல்வேறு அதிகாரங்களைக் கேட்கிறார்கள் என்பது தெரிகிறது. கான்ஸ்டி டியூஷன் 256-வது ஆர்டிகிளையே எடுத்து விட வேண்டுமென்று கேட்கிறார்கள். அந்த ஆர்டிகிள் என்ன சொல்லுகிறது? நாடாளு மன்றம் இயற்றும் சட்டங்களை மாநிலங்கள் ஒழுங்காக நிறை வேற்றுகின்றனவா என்பதைக் கண்காணித்து டைரக்ஷன் கொடுக்கும் அதிகாரத்தைத் தந்திருக்கிற பிரிவு அது. அந்தப் பிரிவை எடுத்து விட வேண்டுமென்று சொல்லுகிறார்கள். நாம்தான் நாடாளுமன்றத்தை உருவாக்கி வைத்திருக்கிறோம். நாடாளு மன்றத்திற்குப் போட்டியாக சூப்பர் பார்லிமெண்ட் போல் இன்டர் ஸ்டேட் கவுன்சில் என்ற ஒன்றை ஏற்படுத்த வேண்டுமென்று சொல்லுகிறார்கள். சட்டங்கள் ஒழுங்காக நிறைவேற்றப்படுவதற்கு டைரக்ஷன் கொடுக்கும் அதிகாரம் மைய அரசுக்குக் கூடாது என்று சொல்லுகிறார்கள்.

டாக்ஸைப் பொறுத்தவரை என்ன சொல்லுகிறார்கள்? இன்கம் டாக்ஸ், எக்ஸைஸ் டியூட்டி, கார்ப்பரேஷன் டாக்ஸ், எஸ்டேட் டியூட்டி, டெத் டியூட்டி, டர்மினல் டாக்ஸ் என்று எல்லா வரிகளும் போட மாநில அரசுக்கு அதிகாரம் வேண்டு மென்று கேட்கிறார்கள். முதலமைச்சர் கருணை கூர்ந்து மைய அரசுக்கு விட்டிருக்கும் வரிகள் இரண்டே இரண்டு. கஸ்டம்ஸ் டியூட்டி, எக்ஸைஸ் டியூட்டி. இந்த இரண்டு வரிகளை வைத்துக் கொண்டு சென்டர் ஸ்ட்ராங்காக இருக்க வேண்டுமென்று சொன்னால் எப்படி இருக்கும்?

Financially also the Centre must be strong: militarily the Centre must be strong and politically also the Centre must be strong.

எல்லா வகையிலும் சென்டர் வலுவாக இருந்தால்தான் நல்லது. இப்போதுள்ள நிலை முன்பு மாதிரி அல்ல.

Fissiparous tendencies have raised their heads throughout the country

பல்வேறு வகையான பிரிவினை எண்ணங்கள் வருகின்றன. இந்த நாட்டில் முற்போக்கான சட்டங்களைக் கொண்டு வர வேண்டும். மாநிலங்களுக்கு அதிகாரத்தைக் கொடுத்துவிட்டால் முற்போக்கான சட்டங்கள் நாடு முழுமையும் வர முடியாது. ஒரு மாநிலத்தில் முற்போக்கான அரசாங்கம் இருக்கலாம். வேறு சில மாநிலங்களில் பிற்போக்கான அரசாங்கங்கள் இருக்கலாம். (மணி அடிக்கப்பட்டது).

**மாண்புமிகு பேரவைத் தலைவர்:** நீங்கள் 20 நிமிடம் கேட்டீர்கள். இன்னும் ஐந்து நிமிடத்திற்குள் முடித்து விடுங்கள்.

**திரு. முனு ஆதி:** இன்றைக்கு அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து பேசுவதற்கு சான்ஸ் இல்லை. நேரம் இல்லை யென்று ஆகிவிட்டது. துணைத் தலைவர் தேர்தல் எல்லாம் முடிந்து 11½ மணிக்குத் தான் இந்த விவாதத்தை ஆரம்பித்தோம். பேச வேண்டிய பிரச்சினை அதிகமாக இருப்பதால் 19-ம் தேதியோடு

முடித்து விடாமல் 20-ம் தேதியும் வைத்துக் கொள்ளலாம். எல்லாக் கட்சிகளும் தங்கள் கருத்துக்களை விளக்கமாகச் சொல்ல வசதியாக இருக்கும்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** கட்சிக்கு ஒருவர் வீதம் பேசுங்கள். பாயின்ட் ஆப் ஆர்டர் என்று உறுப்பினர்கள் பிரச்சினையை இழுத்துக் கொண்டு சென்றிருக்காவிட்டால் 11½ மணி ஆகியிருக்காது.

**திரு. முனு ஆதி :** முதல்வர் அவர்கள் எதிர்க் கட்சித் தலைவர்களுடன் பேசி 20-ம் தேதியும் வைத்துக் கொள்ளலாம்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** திரு. சுப்பிரமணியம் இன்னும் ஐந்து நிமிடத்தில் முடித்துக் கொள்ள வேண்டும்.

**திரு. ஏ. சுப்பிரமணியம் :** அப்படி பிற்போக்கான அரசாங்கங்கள் இருந்தால் முற்போக்கான சட்டங்களை அந்த அரசுகள் கொண்டு வராது. நாட்டில் உள்ள முதலாளித்துவ சக்திகளைப் பற்றி நமக்குத் தெரியும். இந்த நாட்டில் இருக்கும் முதலாளித்துவ சக்திகள் மட்டுமல்ல, அந்நிய நாட்டு சக்திகள் கூட பல இடங்களில் செயல்படும் என்பது அவர்களுக்கே தெரியும். அது எங்கெங்கு ஊடுருவுகிறது என்று தெரியும். இப்படி ஆங்காங்கு பிற்போக்கு சக்திகள், முதலாளித்துவ சக்திகள், அந்நிய நாட்டு சக்திகள் ஊடுருவ இடம் கொடுத்துவிட்டால் மத்திய அரசு எப்படி வலுவாக இருக்க முடியும்?

மாநிலத்திற்கு மாநிலம் தகராறு வருகிறது. யார் அவற்றைத் தீர்ப்பது? மாநில சுயாட்சிப்படி மைய அரசுக்கு இருக்கிற அதிகாரங்கள், டிபென்ஸ், கம்யூனிகேஷன்ஸ்—மற்ற அதிகாரங்கள் எல்லாம் மாநிலங்களுக்குத்தான் என்று சொல்லிவிட்டார்கள். இவ்வளவு அதிகாரங்களைக் கொடுத்து விட்ட பிறகு மாநிலங்களுக்கிடையே ஏற்படுகிற பிரச்சினைகளைத் தீர்ப்பது எப்படி? அவற்றை எல்லாம் தீர்ப்பதற்கு மைய அரசுக்கு அதிகாரம் வேண்டுமா, வேண்டாமா? அந்த நிலையில் என்ன ஏற்படும்? 'சிவில் வார்' உண்டாகும். அமெரிக்காவில் லிங்கன் காலத்தில் வந்தது போல் மாநிலத்திற்கு மாநிலம் 'சிவில் வார்' உண்டாகும்.

[திரு. எ. சுப்பிரமணியம்] [1974 ஏப்ரல் 17

இப்போதே பல்வேறு பிரச்சினைகளைக் கிளப்பி விட்டுக் கொண்டிருக்கிறோம். மாநில வெறியை, மொழி வெறியை உண்டாக்குகிற மாதிரி ஆட்சிப் பொறுப்பில் இருப்பவர்களே பேசுகிறார்கள். மகாராஷ்டிரத்தில் தமிழர்கள், மலையாளிகள், கன்னடியர்கள் பாதிக்கப்படுகிறார்கள். இங்கு இரண்டு கேரளம் இருக்கக் கூடாது, மற்ற மொழிக்காரர்கள் அடக்கத்தோடு இருக்க வேண்டும் என்றெல்லாம் முதலமைச்சரே சொல்லும் நிலை ஏற்பட்டால் மாநிலத்திற்கு மாநிலம் ஆங்காங்கு 'சிவில் வார்' தான் வரும்.

அது இந்த நாட்டில் வர வேண்டுமென்று நீங்கள் நினைக்கிறீர்களா? நிச்சயம் கூடாது என்று நான் நினைக்கிறேன். இந்த நாடு ஒற்றுமையான, வலுவான நாடாக இருக்க வேண்டுமென்று தான் நாங்கள் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டோம். சுதந்திரப் போராட்டத்தில் பங்கெடுத்தவர்கள் நாங்கள். பல தியாகங்களைப் புரிந்திருக்கின்றனர் பலர். உயிரைக் கொடுத்து தியாகங்கள் செய்தது எதற்காக? அவர்கள் நாடு பிரிந்து போக தியாகம் செய்ய இல்லை. நாடு வலுவாக இருக்க வேண்டுமென்றுதான் அவர்கள் தியாகம் செய்தார்கள்.

அடுத்தபடியாக, கால மாறுதல் பற்றிச் சொல்லும்போது நான் ஒன்றைக் குறிப்பிட விரும்புகிறேன். சில ஆண்டுகளுக்கு முன்னால் டெல்லியில் ஜெயப்பிரகாஷ் நாராயணன் அவர்கள் ஒரு மாநாட்டைக் கூட்டினார்கள். ஜனநாயகத்தை இந்த நாட்டில் வளர்ப்பதற்கான ஆலோசனைகளைக் கூற ஒரு மாநாட்டைக் கூட்டினார்கள். அதற்கு நானும் அழைக்கப்பட்டிருந்தேன், நானும் போயிருந்தேன், நாற்பது ஐம்பது வல்லுநர்கள், சட்ட வல்லுநர்கள், மற்றும் பெரியவர்கள் வந்து கூடியிருந்தார்கள்.

அப்போது குடியரசுக் கட்சியைச் சேர்ந்த ஒரு தலைவர் சொன்னார், பஞ்சாயத்து ராஜ் என்பது ஜயப்பிரகாஷ் அவர்களுக்கு, அவர்களது நெஞ்சுக்கு இனிய ஒன்று. ஊராட்சி மன்றங்களுக்கு அதிக அதிகாரங்கள் வேண்டும் என்று கருத்துச் சொல்லப்பட்ட போது அவர்கள்—அந்தக் குடியரசுக் கட்சித் தலைவர் அவர்கள் நாடாளுமன்றத்தில் உறுப்பினராக இருந்தார்கள்—அதைக் கடுமையாக எதிர்த்தார்கள். எதிர்த்ததற்குக் காரணம் என்ன? இன்றி

ருக்கிற சமுதாய அமைப்பில் பஞ்சாயத்து ராஜ்யம் என்று கொடுத்துவிட்டால் அங்கு ஜாதி இந்துக்கள் தான் ஆதிக்கம் செலுத்துவார்கள் என்று கூறி, பஞ்சாயத்து ராஜ்யம் என்று வந்தாலும் மேலே இருக்கிற அரசுக்கு அதில் தலையிடுகிற அதிகாரம் இருந்துதான் தீரவேண்டும் என்று அவர்கள் வலியுறுத்தினார்கள்.

இதை எதற்காகச் சொல்கிறேன் என்றால், ஒரு காலத்தில் பல்வேறு கருத்துக்கள் இருந்தன. சுதந்திர போராட்டக் காலத்திலும் அதற்கு பின்னால்கூட எவல்யூஷன் ஸ்டேஜில் பல்வேறு கருத்துக்கள் பலரால் சொல்லப்பட்டு வந்தன. அரசியல் கட்சிகளும் காலத்திற்கேற்ப, நடைமுறைக்கேற்ப, தங்கள் கருத்துக்களை, தங்கள் கோட்பாடுகளை, தங்கள் குறிக்கோள்களை நிலைமைக்கேற்ப மாற்றிக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தங்கள் ஏற்படத்தான் செய்யும்.

தியரிப்படி ஒன்றைச் செய்தால் ப்ராக்டிக்கலாகப் பல கஷ்டங்கள் சில சமயங்களில் நேரிடுகின்றன. ஆகவே 1947-ல், 45-ல், 35-ல் என்ன சொன்னார்கள், என்று சொல்வதை விட்டு இன்றிருக்கிற ப்ரெசண்ட் டே கான்டக்ஸ்டில் பார்க்க வேண்டும். அப்படி அது சரியாக இருக்குமா என்று பார்க்கும்போது இது ஆபத்தானது என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

இது யாரிடமிருந்து வருகிறது, எங்கிருந்து வருகிறது என்று பார்க்கும்போது இன்னும் பெரிய ஆபத்தாகத்தான் எங்களுக்குப் படுகிறது. ஆளும் கட்சி உறுப்பினர்கள் கூடக் கேட்டார்கள். திரு. கந்தப்பன் அவர்கள்கூட கேட்டார்கள்.

Do you suspect our bona fides?

என்று கேட்டார்கள். ஆம்

but we do not suspect individuals' bona fides. We do suspect the bona fides of the ruling party.

காரணம் என்ன. சரித்திரம்.

முதல்வர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். 1962-ல் திராவிட நாடு கோரிக்கையை விட்டு . . .

மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை
மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம்
திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[1974 ஏப்ரல் 17

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** சரித்திரம் என்றால் அப்போது நேரு அவர்கள் பேசியதும் சரித்திரம்தான். அந்தச் சரித்திரத்தை விட்டுவிட்டு இந்தச் சரித்திரத்தை மாத்திரம் எடுத்துக்கொள்வது என்ன முறை?

**திரு. ஏ. சுப்பிரமணியம்:** நேருவைப் பற்றி எல்லோருக்கும் தெரியும். திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பற்றியும் எல்லோருக்கும் தெரியும். அதனால்தான் சொல்கிறேன். வார்த்தைகள், எல்லோரும் ஒரே வார்த்தைகளைத்தான் பயன்படுத்துவார்கள். சர்வாதிகாரத்தில் மூழ்கிக் கிடக்கிறவர்களும், காலமெல்லாம் சர்வாதிகாரம் செலுத்துகிறவர்கள் ஜனநாயகம் பற்றிப் பேசினால், காலமெல்லாம் அக்கிரமங்கள் செய்கிறவர்கள் பூஜை செய்ய முற்பட்டால், கோவிலுக்கு சென்று கும்பிடுகிறேன் என்று சொன்னால், வார்த்தைகள் சரியாக இருக்கலாம், ஆனால் யார் சொல்கிறார்கள், என்ன சொல்கிறார்கள் . . .

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** நீங்கள் பேசுகிற கருத்துக்கள் பி.எஸ்.பி. அடிப்படையில் எடுத்துக் கொள்வதா அல்லது இந்திரா காங்கிரஸ் கட்சி அடிப்படையில் எடுத்துக் கொள்வதா?

**திரு. ஏ. சுப்பிரமணியம்:** இந்தக் கேள்வி வரும் என்று எனக்குத் தெரியும். பி.எஸ்.பி. தலைவர்கள் கூட, நான் இருந்த பி.எஸ்.பி. கட்சித் தலைவர்கள் கூட ஸ்ட்ராங் சென்டர் வேண்டும் என்று சொல்கிறார்கள். முன்பு பி.எஸ்.பி. சொல்லி வந்த டிசென்ட்ரலைசேஷன் கொள்கை பொருந்தாது என்று வெளிப்படையாக நாடாளுமன்றத்தில் பேசியிருக்கிறார்கள்.

உங்கள் கட்சியைப் பொறுத்தவரையில் 1962-ல் பிரிவினையை நாட்டுப் பற்றினால் விடவில்லை. 1962-ல் சட்டம் வரும் என்று தெரிந்ததற்குப் பிறகு பிரிவினை வாதம் பேசுவது கிரிமினல் குற்றம் என்று ஆக்கப்படுமென்று தெரிந்ததற்குப் பிறகு விட்டார்கள். அப்படி விட்டதற்குப் பிறகு, மாண்புமிகு உறுப்பினர் கந்தப்பன் அவர்கள் கூடச் சொன்னார்கள் நாங்கள் அதை வரவேற்கிறோம் என்று. வரவேற்றோம் என்றால் இன்னொன்றும் சொல்லியிருக்கிறோம் நீங்கள் மாறவேண்டும் என்று. டாக்டர் ஜெக்கில் அன்ட் மிஸ்டர்

ஹைட் போல் ஒரு நேரத்தில் ஒரு முகத்தைக் காட்டுகிறீர்கள், இன்னொரு நேரத்தில் இன்னொரு முகத்தைக் காட்டிக் கொண்டிருக்கிறீர்கள்.

பிறகு தனிக் கொடி வேண்டுமென்று கூடக் கேட்டார்கள். மாநிலச் சுயாட்சி கேட்டார்கள். இங்குள்ள அமைச்சர்கள், மாண்புமிகு சுகாதார அமைச்சர் அவர்கள் கூட ஆர்க்காடு மாநாட்டில் தனித் தமிழ்நாடு வேண்டுமென்று கேட்கிறவர்களுக்கு வாழ்த்துக் கூறியிருக்கிறார்கள். ஆளும் கட்சி உறுப்பினர்கள் பல்வேறு வகைகளில் பேசுகிறார்கள். அரசியல் சட்டத்தைக் கடலில் தூக்கி எறிய வேண்டும் என்று பேசுகிற அளவிற்கு வந்தாகிவிட்டது.

**மாண்புமிகு திரு. க. அன்பழகன்:** ஆர்க்காட்டில் பகுத்தறிவாளர் மாநாடு நடைபெற்றது. உறுப்பினர் அவர்கள் பகுத்தறிவை ஒப்புக்கொள்ள மறுக்கிறார் போலிருக்கிறது.

**திரு. ஏ. சுப்பிரமணியம்:** பகுத்தறிவைப் பொறுத்தவரையில் உங்களைவிட நான் முன்னே நிற்கிறவன். ஆனால் பகுத்தறிவு என்பது தனித் தமிழ் நாடு அல்ல. உங்களுடைய உள் உணர்வுகள் உரிய நேரத்தில் வெளிப்படுகின்றன. உள்ளுணர்வுகள் எல்லாம் தமிழ்நாடு, தனி நாடு, தனி நாடு என்று இருக்கின்றன. முன்னமே பேசினீர்கள் அல்லவா, வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது, தெற்கு சுரண்டப்படுகிறது என்று, அந்த உள்ளுணர்வால் வந்த தீர்மானம் இது. ஆகவே இந்தத் தீர்மானம் ஆபத்தான தீர்மானம். இந்த நாட்டின் சாவரினிட்டி அன்ட் இன்டக்ரிட்டியைக் காப்போம் என்று சொல்வது வெறும் வார்த்தை. இந்தத் தீர்மானம் உண்மையில் இந்த நாட்டைத் துண்டாட . . .

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** எடுத்துச் சொல்கிற வாதத்தைச் சந்திக்க முடியாதவர்கள் இப்படி பிரிவினை என்ற ஒரு திரையைப் போட்டு அதை மூடிவிட முயற்சிப்பார்கள். அந்த முயற்சியில் நண்பர் சுப்பிரமணியம் போன்ற திறமையாளர்கள் ஈடுபடுவது நல்லதல்ல.

**திரு. ஏ. சுப்பிரமணியம் :** நீங்கள் பிரிவினைவாதத்தை விட வேண்டும் என்ற ஆசை எனக்கும் உண்டு. ஆனால் உங்கள் நடைமுறை, உங்கள் பேச்சுக்கள் இவற்றைப் பார்த்த பிறகு நீங்கள் அதை விட்டதாக இல்லை, திராவிட நாடு கேட்க முடியாது என்ற காரணத்தினால்தான் இன்றையதினம் வேறு வகையில் மாநிலச் சுயாட்சி என்று மாற்றி, மைய அரசுக்கு இருக்கிற அதிகாரங்கள் முழுமையும் பெறுவதற்கு, ஒன்றிரண்டு அதிகாரங்களை விட்டுவிட்டு அதிகாரங்கள் முழுமையையும் பிடுங்க வேண்டும் என்று கேட்கிறீர்கள். ஆகவே இந்தத் தீர்மானத்தை நான் கடுமையாக எதிர்க்கிறேன். இந்தத் தீர்மானத்தை இந்த அவையில் நிறைவேற்றுவது இந்த மாநிலத்திற்கும், இந்த மாநில மக்களுக்கும் நல்லதல்ல என்று கூறி அமர்கிறேன்.

* THIRUMATHI ALDA M. FOWLER : Mr. Speaker, Sir, many hon. Members have produced arguments for and against the resolution. But I would merely strike a note of caution and patience.

Mature and prudent statesmen were commissioned with the task of preparing the report on State Autonomy and we have faith in their judgment. We are also aware of the frustration on the part of the Government of Tamil Nadu. On the one hand we have this present Government with its go-ahead schemes; it has its goals which it would like to reach; there is inflation which has to be arrested; new industries to initiate and so many other matters it can implement if only it had the means to do and that too in the least amount of time.

But there are certain curbs which have been made by the Central Government and it is lack of funds which halt the wheels of progress.

I do not doubt the ability of the Government. The fact that a bold piece of ligislation of this magnitude is brought forward, is proof of its mature thinking and of the confidence it has in its own ability to accomplish these things. This, it has sought to do today.

But Governments change; they are not constant; also the forms of Government alter and so, this instrument of Government in the hands of wise administrators can be a very good thing.

1974 ஏப்ரல் 17] [Thirumathi Alda M. Powler]

But in the hands of unwise ones, it can become a dangerous weapon. Who can guarantee all succeeding Governments will be wise, strong, able and committed to the cause of the people and their welfare? This, then, Sir, is my personal worry.

The second reason of concern is because of the fact that all the States of India are involved in this resolution. When we look at the political map of the country, we see chaos and confusion. The strength of one State has to be matched by all the other States. Some States are the play-ground of mischievous groups and the welfare of the State is not their prime consideration, rather the success of their exploits. The more terrible, the better they feel. Governments so often go out of power. All sorts of people share the responsibility for it. (autonomy).

My humble submission is that we should set aside all political considerations and bring wise, sane, sobre statemanship to bear upon this issue.

(பிற்பகல் 1-00)

We have to remember that the decisions taken to-day are not for this Government alone, or for this generation alone, but years to come will be the best judge of the situation. A hundred years from now, the Government of that day must look back to the Government of to-day and congratulate this Government for its wisdom. I merely state that caution, restraint and patience be brought to bear on this epoch--making Resolution.

Thank you, Sir.

**திரு. கே. டி. கே. தங்கமணி :** சபாநாயகர் அவர்களே, அவை முன்னால் . . .

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** அரை மணி நேரம் இருக்கிறது. உங்களுக்கு எவ்வளவு நேரம் வேண்டும்?

**திரு. கே. டி. கே. தங்கமணி :** நான் அரை மணி நேரத்தில் முடிக்கவில்லையென்றால் நாளை எடுத்துக்கொள்கிறேன். ஒரு மணி நேரம் கொடுத்தால் நல்லது. இந்த ½ மணியில் எவ்வளவு கண்டன்ஸ் செய்யவேண்டுமோ செய்து விடுகிறேன்.

[1974 ஏப்ரல் 17

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இன்றைக்கே கொஞ்சம் நேரம் 1½ மணிக்குப் பிறகு எடுத்துக்கொண்டு முடித்து விடுங்கள்.

திரு. கே. டி. கே. தங்கமணி: 1½ மணிக்கு மேல் உட்கார வேண்டாம் என்று பார்க்கிறேன். நாளை தொடர்ந்து பேசுகிறேன்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: சரி பார்க்கலாம், பேசுங்கள்.

திரு. கே. டி. கே. தங்கமணி: சபாநாயகர் அவர்களே, இன்று சபைக்கு முன்னால் முதலமைச்சர் அவர்களால் பிரேரேபிக்கப் பட்டு இருக்கும் இந்தத் தீர்மானமானது முக்கியமான தீர்மானம் என்பதில் ஐயமில்லை. எனவேதான் இந்தத் தீர்மானத்தில் நம்முடைய கருத்தைக் கொஞ்சம் ஆழமாகச் சொல்லவேண்டுமென்ற முறையில் எங்கள் கட்சியின் சார்பில் திருத்தம் கொடுத்து இருக்கிறோம்.

இந்தத் தீர்மானத்தை விவாதிக்கிறபோது அரசு எடுத்த சில நடவடிக்கைகளைப் பற்றி நான் பாராட்டவேண்டும். 1969-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் டாக்டர் ராஜமன்னார், டாக்டர் ஏ. லட்சுமண சுவாமி முதலியார், திரு. சந்திரா ரெட்டி ஆகிய மூவர் கொண்ட ஒரு குழுவை அமைத்து, அந்தக் குழு அளித்த சிபார்சை இங்கே வந்த பிறகு விவாதிக்கவேண்டுமென்று கிட்டத்தட்ட 2 ஆண்டு காலமாகத் தொடர்ந்து பலரும் கேட்டு இருக்கிறார்கள். என்ன காரணமோ தெரியவில்லை, அரசு அதை விவாதிப்பதற்கு எடுத்துக் கொள்ளவில்லை.

ஆனால் இன்று விவாதிக்க எடுத்துக் கொள்கிறபோது, விவாதத்தில் பங்கு எடுத்துக்கொள்ளக்கூடியவர்களுக்கும் விவரங்கள் சரியாகத் தெரியக்கூடிய அளவில் அரசின் கருத்தை ஒரு வெள்ளறிக்கையாகவும் வைத்து இருக்கிறார்கள். அந்த அறிக்கை ரொம்ப உதவியாக இருக்கிறது. அது மாத்திரமல்லாமல் இதே மாதிரி மத்திய மாநில உறவு சம்பந்தமாக மத்திய சர்க்கார் அமைத்த பாண்டு குழுவின் சிபார்சின் சுருக்கமும் எங்களுக்குக் கொடுக்கப்பட்டு இருக்கிறது. ஆகவே, விவாதத்தை நல்ல முறையில் நடத்த வேண்டுமென்ற ஒரு நோக்கத்தோடு இந்த சபைக்கு உதவியாக செய்யப்பட்டிருக்கும் காரியத்தை நான் வரவேற்கிறேன்.

*1974 ஏப்ரல் 17]* *[திரு. கே. டி. கே. தங்கமணி]*

அதே நேரத்தில் இந்தத் தீர்மானத்தின் பேரில் பல விவரங்களை எடுத்துப் பேசிய ஆலடி அருணு அவர்கள் சொன்ன சில கருத்துக் களை நாம் முதலில் கவனிக்கவேண்டுமென்று நினைக்கிறேன். அவர் களுடைய பிரசங்கத்தின் பெரும் பகுதி எப்படி இந்த அரசியல் சட்டமானது மெஜாரிட்டி மக்களின் பிரதிநிதிகள் இல்லாமல் அமைக்கப்பட்ட அரசியல் சட்டம் என்று ஒரு அஸ்திவாரத்தைப் போட்டு, அடுத்தபடியாக அப்படிப்பட்ட இந்த அரசியல் சட்டத் தைக் கண்டிப்பாக நாம் ஏற்றுக்கொள்ளக்கூடாது அதை நிரா கரிக்கவேண்டும் என்ற அடிப்படையிலே சொன்னூர்கள்.

அவர் எம்மொபாடிகாக அதைச் சொல்லக்கூடிய விதத்தில் அதை வங்கக் கடலில் தூக்கி எறிய வேண்டுமென்று சொன்னூர்கள். இதில் தான் எங்களுக்கும் ஆளும் கட்சிக்கும் இருக்கும் முரண்பாடு. அமைக்கப்பட்டு இருக்கும் அரசியல் சட்டம் பற்றி என்ன கருத்து கொண்டு இருக்கிறீர்கள். அது துலாம்பரமாகத் தெரிந்தாக வேண்டும். ஆகவேதான் இந்தப் பிரச்சினையிலே அரசியல் சட் டத்தை திருத்தவேண்டியதில்லை என்கிறபோது, இதிலே பொதிந்து இருக்கும் சில அரசியல் பிரச்னை பற்றி சொல்லித்தான் ஆக வேண்டும் என்று கருதுகிறேன்.

அம்மாதிரி சொல்கிற நேரத்தில் சற்று இந்த விவாதத்திற்கு அப்பால் போகிறது என்று சொல்லி என்னைத் தடுக்காமல் இருக்க வேண்டுமென்று தங்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

சென்ற ஆண்டு ஜனவரி மாதம் என்று நினைக்கிறேன். இந்த திராவிட முன்னேற்றக் கழகம் 'பொலிடிகல் பிலாசபி' என்ற அடிப்படையில் ஒரு திருத்தத்தைக் கொண்டுவந்தார்கள். அந்தத் திருத்தம் என்னவென்ருல்—

"The political philosophy was incorporated as an amendment to the Party's Constitution under the heading 'Objectives of the Party' at the meeting of the D.M.K. General Council held at Pudukottai in the beginning of January"

மத்தியில் கூட்டாட்சி, மாநிலத்தில் சுயாட்சி என்று திருத்தம் கொண்டு வந்தார்கள். இதை ஒரு அரசியல் கோஷமாக அவர்கள் கட்சிக்கு வைத்தார்கள். அதை வைத்த உடனேயே

[திரு. கே. டி. கே. தங்கமணி] [1974 ஏப்ரல் 17

எங்களுடைய கட்சியைப் பொறுத்தவரையில் இது நம்முடைய நாட்டிற்கு அபாயகரமான போக்கு. இந்த அரசியல் கோஷத்தை வளர்க்க விடுவோமானல் பெரும் தவறு இழைக்கும் நிலையேற்பட்டு விடும். இந்தத் தமிழ்நாட்டிற்கு மட்டுமல்ல, நாட்டிற்கே பெரும் தீங்கு ஏற்பட்டு விடும் என்று சொன்னோம்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** மத்தியில் கூட்டாட்சி, மாநிலத்தில் சுயாட்சி என்று மாண்புமிகு உறுப்பினர் குறிப்பிட்டதுபோல், புதுக்கோட்டை மாநாட்டில் தீர்மானம் போடவில்லை, அதற்கு முன்னலே பொதுத் தேர்தலுக்கு முன்பே, 1971-க்கு முன்பே திருச்சியில் பஞ்சாப் மாநில முதல்வர் குர்நாம்சிங் அவர்கள் தலைமையில் நடந்த மாநாட்டில் அந்த கோஷத்தை வைத்தோம். அதற்குப் பிறகு, நாமெல்லாம் கூட்டு சேர்ந்து 1971-- தேர்தலில் நின்றோம்.

**திரு. கே. டி. கே. தங்கமணி:** அது உங்களுடைய திட்டமாக இருந்து இருக்கலாம். முதலில் எழுத்து மூலமாகச் சொன்னது புதுக்கோட்டை மாநாட்டில்தான். அதற்கு முன்னே பலர் பல விதமாகப் பேசியிருக்கலாம். ஆனல் அந்த மாநாட்டில்தான் உங்களுடைய கட்சியின் சட்ட திட்டத்தில் அதை வைத்தீர்கள். உங்களுடைய குறிக்கோள் என்ன என்று தெளிவாகச் சொல்லியிருக்கிறீர்கள்.

When you define the purpose as such, you will have to spell out. இதை ஸ்பெல் அவுட் செய்கிறபோது ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாதிரி சொல்ல ஆரம்பித்தார்கள். இந்தப் பின்னணியில் எங்களுடைய கருத்து என்னவென்றால்

'Undoubtedly, Centre-State relations in India need recasting in the direction of giving more powers to the States, especially in the sphere of finance and fiscal resources, so as to put an end to all elements of Central arbitrariness. But the problem is not a mere constitutional problem, it is a political and class problem, both at the centre and in the States.

The real problem is to integrate the urges and aspirations of the working people and other democratic sections of society in every State with those of the nation as a whole. In order to do this, while the powers of the States need enlarging in some

spheres, at the same time the Centre must be in a position to maintain the basic integrity and unity of India as a whole both to ensure integrated all-India economic development as well as to cambat the disruptionist and fissiparous forces at work, which are innumerable and which have imperialist, neocolonialist backing. மத்திய-மாநில உறவு சம்பந்தமாக எங்களுடைய கருத்தை நான் சொல்கிறேன். எங்களுடைய கருத்தைப்பற்றி நேற்றேகூட முதலமைச்சர் அவர்கள் சொன்னார்கள். நீங்கள் திருத்தக் கூடாது என்று சொல்கிறீர்களா என்று கேட்டார்கள்.

The Constitution should be amended to ensure :

Judges, including the Chief Justices of the Supreme Court and High Courts, shall be appointed from among the names of the panels approved by Parliament in the case of Supreme Court and by the concerned State Assemblies in the case of the High Courts.

The minimum qualifying age for voting right should be lowered from 21 to 18. This is essential to ensure our young people the full measure of participation in the political life.

The system of proportional representation should replace the present system for elections to the Lok Sabha and State Assemblies.

The posts of Governors should be abolished.

இது அதிகாரபூர்வமாக நாங்கள் உங்களுடைய தீர்மானம் வந்த பிறகு நிறைவேற்றியது. இதுதான் எங்களுடைய நிலை. எங்களுடைய நிலையைப் பொறுத்தவரையில் மத்திய மாநில உறவு சம்பந்தமாக எந்தவிதமான மாறுதலும் இல்லை என்பதல்ல. மாறுதல் எந்த உருவத்தில் வரவேண்டுமென்று நாங்கள் வெளிப்படுத்தி இருக்கிறோம்.

அப்படி வெளிப்படுத்தக் கூடிய முறையில்தான் 1971-லும் பிறகு 1972-லும் இந்த இரண்டு தடவைகளிலும் எங்களுடைய தேர்தல் அறிக்கையில் நாங்கள் தெளிவாகச் சொல்லி இருக்கிறோம். 1971 தேர்தல் அறிக்கை மிகவும் முக்கியமானது. அது

[திரு. கே. டி. கே. தங்கமணி] [1974 ஏப்ரல் 17

அன்றைக்கு இடைத் தேர்தல் வருகிறபோது நாங்கள் தெளிவாகச் சொல்லியிருக்கிறோம். எங்கள் எலெக்ஷன் மானிபஸ்டோவில் தெளிவாகப் பல விஷயங்களை நாங்கள் சொல்லியிருக்கிறோம்.

The posts of Governors should be abolished.

The Council of Ministers should be restricted to the maximum of 10 per cent of the total elected membership of the Lok Sabha and the concerned State Assemblies. The Prime Minister and Chief Minister must be a member of the Lok Sabha and the Assembly concerned

என்றெல்லாம் சொல்லப்பட்டிருக்கிறது. இன்றைக்கு நாம் பார்க்கிறோம். 46 பேர் பீகார் மந்திரி சபையில். அதைக் கூடக் குறைக்க வேண்டும் என்ற கருத்து சொல்லப்பட்டிருக்கிறது.

The Upper House should be abolished.

The provision for joint session of two Houses of Parliament should be made explicity applicable for passing the Constitution Amendment Bills by joint session.

The provisions relating to emergency shall be drastically revised to reduce the emergency powers, particularly those that affect the democratic rights and weaken democracy.

The Constitutional provision relating to Centre-State relations should be amended to provide for more powers to the State consistent with the basic unity of the country.

இன்னும் சில விஷயங்களைச் சொல்லியிருக்கிறோம். எதற்காகச் சொல்கிறேன் என்றால், இந்த அரசியல் சட்டத்தை அப்படியே எடுத்துக்கொண்டு இன்றைக்கு நமக்குக் கிடைத்த அனுபவத்தை வைத்து என்னுடைய கட்சியில் சில முடிவுகளை எடுத்திருக்கலாம். மற்ற எல்லாக் கட்சியினரும் சேர்ந்து ஆலோசித்தால் எந்த மாதிரியாகத் திருத்தம் கொண்டு வர முடியும் என்று ஒரு முடிவுக்கு வர முடியும். அந்த மாதிரி சொல்கிறபொழுது மாநில மத்திய அரசு உறவு சம்பந்தமாகச் சில திருத்தங்கள் தேவை. அந்தத் திருத்தங்களின்படி மாநிலத்திற்கு அதிக

1974 ஏப்ரல் 17] [திரு. கே. டி. கே. தங்கமணி]

அதிகாரம் எந்தக் கட்டத்தில் எந்த முறையிலே இருக்க வேண்டும் என்று மிகத் தெளிவுபட சொல்லியிருக்கிறோம். ஆனால் நமக்கு முன்னால் வந்திருக்கக்கூடிய விஷயம் என்ன?

இங்கே வந்திருக்கக்கூடியது மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும் என்ற ஒரு பிரச்னை அல்ல. இங்கே வந்திருக்கக்கூடிய விஷயம்—நான் முழுவதையும் சொல்ல விரும்பவில்லை—1, 2, 3, 4, 5. 6 இந்த சிபார்சுகள்—17 சிபார்சுகள் இருக்கின்றன 215-வது பக்கத்தில் சாப்டர் 21-ல் கொடுத்திருக்கிறார்கள்—அந்த 17 சிபார்சு களில் முதல் ஆறு சிபார்சுகளை எடுத்துக்கொண்டால் மத்திய அரசை ஒரு சம்பிரதாயபூர்வமான இணைப்பு சர்க்காராக மாற்றி விடுகிறது, மத்திய அரசை பலகீனப்படுத்துகிறது. மத்திய அரசு அமைப்பு இருக்கிறதே, அந்த அமைப்பே இருக்கவேண்டுமா என்ற கேள்வி எழுப்பக்கூடிய முறையில் இருக்கிறது.

இதைப் பார்க்கும்பொழுது நம்முடைய ரிபோர்ட்டில் ஒரு விஷயத்தைச் சொல்லியிருக்கிறார்கள். 1935-ம் வருஷச் சட்டத்தில் மாநிலங்களுக்கு என்ன அதிகாரங்கள் இருந்தனவோ அந்த அதிகா ரங்கள்கூட இப்பொழுது இல்லை என்பது போல சொல்லி யிருப்பதைப் பல இடங்களில் நாம் பார்க்கலாம். நம்முடைய ராஜமன்னார் கமிட்டி ரிபோர்ட்டில் சொல்லியிருக்கிறார்கள். அப்படிப் பார்க்கிறபொழுது தான் நாம் கொஞ்சம் சரித்திரத்தைப் புரட்டிப் பார்க்கவேண்டியிருக்கிறது. 1935-ம் வருஷத்திற்கு முன்னால் 1919-ம் வருஷச் சட்டத்தில் மாநிலங்களுக்கு அதிகாரங் கள் கொடுத்திருக்கிறார்கள். அதற்குத்தான் டயார்கி என்று சொன்னார்கள். சில இடங்களில் அப்படித்தான். ராஜா பனகல் அவர்கள் அப்படிப் பணியாற்றியிருக்கிறார்கள். அன்றைக்கு முதல் அமைச்சராக இருந்தார்கள். அந்த டயார்கியை ஓரளவுக்குப் பயன்படுத்திக் கொண்டு மதத்தையெல்லாம் கட்டுப்படுத்தக்கூடிய

The Hindu Religious Endowments Board is a creation of diarchic form of Government.

அப்படி நம்முடைய சென்னை மாகாணத்தில் அந்த அளவுக்குச் செய்தார்கள். அதற்கு மேலும் கொஞ்சம் அதிகாரம் வேண்டும் என்று கூறுகிறபொழுது 1935-ம் வருஷ சட்டத்தைப் பார்த்தால்

[திரு. கே. டி. கே. தங்கமணி] [1974 ஏப்ரல் 17

The Power of the States or Provinces is conferred by the Crown.

மத்தியிலே இங்கிலாந்தில் இருக்கக்கூடிய அரசு இருக்கிறதே அந்த அரசு ஒவ்வொரு மாநிலத்திற்கும் தன்னுடைய அதிகாரத்தைக் கொடுக்கிறது. அன்றைக்கு ஒரு மத்திய சர்க்கார் கிடையாது, மத்தியிலே பிரதம அமைச்சர் கிடையாது. சென்னை மாகாணத்தில் அன்றைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கக்கூடிய சட்டமன்ற உறுப்பினர்களில் ஒருவர் முதல் அமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். அவருக்கும் தான் பிரதம மந்திரி என்று பெயர். ஸி. ராஜகோபாலாச்சாரியார் அப்படி 1937-ம் ஆண்டில் பிரதம மந்திரியாக இருந்தார். ஒவ்வொரு மாநிலத்திலும் பிரதம மந்திரி, அந்தப் பிரதம மந்திரியைக் கட்டுப்படுத்துவதற்கு கவர்னர், கவர்னர்களுக்கெல்லாம் சேர்ந்து ஒரு கவர்னர்-ஜெனரல், அந்த முறையில் தான் அப்பொழுது அவர்கள் வைத்திருந்தார்கள்.

எல்லோருமே யாருக்குப் பதில் சொல்லவேண்டியவர்களாக இருந்தார்கள் என்று சொன்னால், லண்டனில் இருக்கக்கூடிய சர்க்காருக்குத்தான் பதில் சொல்லவேண்டும் என்று வந்தது. எப்படி 10, 12 மாநிலங்கள் இருந்தனவோ அம்மாதிரி 500 சமஸ்தானங்களும் இருந்தன. அந்த சமஸ்தானங்களுக்கும் அதே அதிகாரம், அந்த சமஸ்தானங்களும் நேரடியாக லண்டனில் இருக்கக்கூடிய அந்த அரசின் கீழே தான் இருக்க வேண்டும் என்ற முறையில் வைத்திருந்தார்கள். இதுதான் 1935-ம் வருஷத்திய அமைப்பு.

1935-ம் வருஷத்திய அமைப்பு 1947-ம் வருஷத்திய அமைப்பு அல்ல. 1947-ம் வருஷத்தில் நமக்குக் கிடைத்தது என்ன: எல்லா மாநிலங்களும் ஒன்றுகச் சேர்ந்து எப்படியாவது பிரிட்டிஷாரை வெளியேற்றி விடவேண்டும், அரசாங்க அதிகாரத்தை உண்மையிலேயே நமக்குக் கொடுப்பது, அரசாங்க அதிகாரத்தை நாம் பூராவும் பெற்றுக்கொண்டு நாம் பகிர்ந்துகொள்வோம் என்ற முறையில் வந்தது.

'இன்ஸ்ட்ருமெண்டு ஆஃப் இண்டிபெண்டென்சைப்' பார்க்க வேண்டும்.

The power was transferred to the entire people of India. It was not transferred to the people of Madras State or Bombay State. It was transferred to the entire people of India.

அப்படி வந்த முறையில்தான் அன்றைக்கு ஒரு அரசியல் நிர்ணய சபை ஏற்பட்டது. அந்த அரசியல் நிர்ணய சபை அன்றைக்கு அமைத்தது போதுமா, சரியானதா என்று கேட்டால் நான் ஒன்றுகூட சொல்வேன். பொதுவாக ஜவஹர்லால் நேரு அவர்கள் சொன்ன அளவுக்குக் கூட அது அரசியல் நிர்ணய சபையாக இருக்கவில்லை. மத்தியில் சட்டசபை இருந்தது. ஒவ்வொரு மாநிலத்திலும் சட்ட சபை இருந்தது. மாநில சட்டசபையால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் உட்கார்ந்து அந்த அரசியல் நிர்ணய சபை அமைந்திருந்தது. நமக்குத் தெரியும் அந்த அரசியல் நிர்ணய சபை அன்றைக்கு இருந்த நிலைமையில் ஜவஹர்லால் நேரு அவர்களின் பெருமை என்னவென்றால், அன்றைக்கு சுதந்திரத்திற்கு முன்னின்ற காங்கிரஸ் கட்சியின் பெருமை என்னவென்றால், ' ஒரு கட்சிப் பிரச்னையாக ஆக்க நாங்கள் விரும்பவில்லை, இந்த நாட்டில் எல்லாப் பகுதி மக்களும் கூட சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள்' என்று சொன்னார்.

எங்கள் கட்சி சார்பில் ஒரே உறுப்பினர் இருந்தார் ஸோமனாத் லாகரி, அவர்கூட அரசியல் நிர்ணய சபையில் இருந்தார். எங்களைக் கைது செய்த நேரத்தில் அவரையும் பாதுகாப்புக் கைதியாகப் பிடித்துவிட்டார்கள். எல்லாவிதமான கருத்துக்களையும் கொண்டு வந்து வைத்து படிப்படியாக நல்லதோர் அரசியல் சட்ட அமைப்பை உருவாக்க வேண்டும் என்று டாக்டர் அம்பேத்கார் கையில் விடப்பட்டது.

என்ன சந்தேகம் வருகிறது என்றால், அவர் அரசியல் சட்டத்தையே உருவாக்கியவர். அவர் எந்த இடத்தில் அரசியல் சட்டத்தை நெருப்பில் வைக்கவேண்டும் என்று சொன்னார் என்பது தெரியவில்லை. அரசியல் சட்டத்தை உருவாக்கியதே டாக்டர் அம்பேத்கார் அவர்கள். அவருடைய விவாதத்தைப் பார்த்தால் நமக்குப் பெரும் உதவியாக இருக்கிறது. நேற்று முந்தைய தினம் கூட இதைப்பற்றி விவாதித்தோம்.

அரிசனங்கள் அர்ச்சகராக இருக்கவேண்டும் என்று சொல்லி, மதத்தின் பெயரால் கட்டுப்பாடு இருக்கக்கூடாது என்று பார்க்கிறபொழுது டாக்டர் அம்பேத்காரைவிடத் தெளிவாக வேறு யாரும் பேசி இருக்க முடியாது. மதம் எங்களைக் கட்டுப்படுத்த முடியாது, அரசியல் சட்டம் தான் மதத்தையும், மதத்தின் பெயரால் இருக்கக்கூடிய எல்லாவற்றையும் கட்டுப்படுத்தவேண்டும், மதம்தான் தங்களுக்குப் பெரியது என்று சொன்னால் முஸ்லீம்கள் வேறு தேசத்திற்குப் போகவேண்டும், பாகிஸ்தானில் வேண்டுமானால் அப்படி இருக்கலாம், இந்தியாவில் அப்படி இருக்க முடியாது என்று ஆணித்தரமாகப் பதில் சொல்லி நமக்கு வழி காட்டியிருக்கக்கூடிய மாமேதை அரசியல் சட்டத்தை அன்றைக்கு விளக்கிச் சொன்னார். அரசியல் சட்டத்தை உருவாக்கிய அவரே அரசியல் சட்டத்தை நெருப்பில் வைக்கவேண்டும் என்று எந்த இடத்தில் சொன்னார் (ஒரு குரல்—திரு. பெ. சீனிவாசன் அவர்கள் இங்கே சொன்னார்) என்பது எனக்குப் புரியவில்லை. அது எந்த சந்தர்ப்பத்தில் சொன்னார் ? அதற்குத்தான் நான் என்ன சொல்கிறேன் என்று சொன்னால்

For purpose of argument if you say that a man like Dr. Ambedkar

நெருப்பு வைக்கவேண்டும் என்று சொன்னார் என்று சொன்னால்

it does not do credit to Dr. Ambedkar, a great man.

ஏதாவது ஒரு குறிப்பிட்ட விஷயம் இடைஞ்சலாக இருக்கிறது என்று சொல்லியிருந்தால் சொல்லியிருக்கலாம். அப்படி ஒரு நிலைமையாக இருந்திருக்குமே தவிர,

When some thing is taken out of the context

என்ற முறையில் சொல்வது என்றால், அது சரியுமல்ல, முழுமையாகவும் ஆகாது. அதே மாதிரி ஜவஹர்லால் நேரு அவர்கள் 1947, ஜனவரி 22-ல் அடானமியைப் பற்றிச் சொன்னார்கள். அதே மாதிரி ரெஸிடுயரி பவர்ஸ் பூராவும் ஸ்டேட்சுக்குத்தான் இருக்க வேண்டும் என்று சொன்னார் என்றால், வாஸ்தவம் தான். சுதந்திரம் கிடைத்த பிறகு அவர் கூறியிருக்கிறார் என்றால்,

He is not only a Constitutional pandit, but is also a political leader. He is leader of a great country.

1974 ஏப்ரல் 17] [திரு. கே. டி. கே. தங்கமணி]

நாடு பிரிவினை ஆகிறது, நாட்டைப் பிரிக்க வேண்டும் என்று சொல்லி அதற்கு முன்னால் பல திட்டங்களைக் கொண்டு வந்தார்கள். ஞாபகப்படுத்துகிறேன், அன்றைக்கு கூப்லாண்ட் திட்டம் என்ற ஒரு திட்டம் வந்தது. அந்தத் திட்டத்தை ஆதரித்தது டாடா, பிர்லா. கூப்லாண்ட் திட்டத்தின்படி ஹிந்துஸ்தான், பாகிஸ்தான், பிரின்சஸ்தான் என்று மூன்று ஸ்தானங்கள் இருக்கவேண்டும் என்று சொன்னதைத் தேசிய இயக்கம் நிராகரித்தது. தேசிய இயக்கத்தில் ஈடுபட்ட எல்லாக் கட்சியினர்களும் நிராகரித்தோம். நிராகரித்ததற்குப் பின்னால் இந்தக் கருத்து வேண்டாம், இம்மாதிரி பிரிவினை கூடாது, பாகிஸ்தானைக்கூட இந்திய யூனியனோடு சேர்க்க வேண்டுமென்ற கருத்து இருந்ததே தவிர, இம்மாதிரி மூன்று ஸ்தானங்களாகப் பிரிக்க வேண்டும் என்ற நிலை இல்லை. வேறு வழியில்லாமல் பாகிஸ்தான் பிரிந்தது. பாகிஸ்தான் பிரிந்ததை யாரும் விரும்பவில்லை. பாகிஸ்தான் பிரிந்தாகிவிட்டது. பிரிந்த பிறகு இந்தப் பிரிவினையைப் பயன்படுத்தியது யார்? அந்தப் பிரிவினையை உருவாக்குவதற்கு யார் காரணமாக இருந்தார்களோ அதே நிபுணர்கள்தான் அதைப் பயன்படுத்தினார்கள். அதைப் பயன்படுத்திய முறை காஷ்மீரை வைத்துக்கொண்டு. அப்போது காஷ்மீரை வைத்துப் பயன்படுத்தியதை ஜவஹர்லால் நேரு அவர்கள் புரிந்து கொண்டார்கள். அதனால் நம்முடைய அரசியல் நிர்ணய சபை சட்டத்தை அமைக்கும்போது அதையெல்லாம் கருத்தில் கொண்டு, அதிக அதிகாரத்தை மத்திய சர்க்காருக்குக் கொடுக்க வேண்டுமென்று முடிவு செய்தார்கள். மக்களைக் கேட்டால் அதற்கு ஒத்துக்கொள்வார்கள் என்ற முறையிலே மத்திய அமைப்பு உருவாகியது.

the set-up must be democratic centralism.

எல்லா மக்களுக்கும் நல்ல ஜனநாயக ரீதியிலே விவாதிக்க இடம் இருக்க வேண்டும். ஆனால் பிடி அங்கேதான் இருக்க வேண்டும் என்ற ஒரு சிந்தனை அப்போது வந்தது ஆச்சரியமான விஷயம் அல்ல.

நேற்று பேசும்போது ஆலடி அருணா அவர்கள் மிகத் திறமையாக பிரசென்ட் செய்தார்கள். அவர்களுடைய கேசை திறமையாக பிரசன்ட் செய்தார்கள். அவர்களுடைய கேசை வேறு

எந்த லாயரும் அப்படி பிரசென்ட் செய்திருக்க முடியாது. இந்த மாதிரி ஒரு பெடரேஷன் என்று இருந்தால் அதனுடைய ரெசுடுவரி பவர்ஸ்,

The residuary power in any federation will go to the States.

என்று சொன்னார்கள். பின்னால் கந்தசாமி அவர்கள் பேசும் போது அப்படி அல்ல.

residuary powers go to the Centre in the case of the Canadian constitution; in the case of the Australian constitution the residuary powers go to the States.

என்று யாரோ ஒருவர் பேசிய விஷயத்தைச் சொன்னார்கள். நாம் அமைத்திருக்கக்கூடிய இந்த அரசியல் சட்டம்—

when it is a written constitution.

ரொம்ப ரிஜிடாக இருக்கும். சிலவற்றை மாற்ற முடியாது. அதனால்தான் அமெரிக்க கான்ஸ்டிடியூஷனை மாற்றுவது ரொம்ப கஷ்டமாக இருக்கிறது. நம்முடைய அரசியல் சட்டம்,

though it is a written constitution, it is flexible and allows certain provisions to be modified.

என்ற முறையில் இருக்கிறது. ஆகவேதான் 32, 33 தடவைகள் மாற்றியிருக்கிறோம். அதை அமென்ட்மென்ட் செய்வது நம்முடைய பெருமையைத்தான் காட்டுகிறது; அதனால் நமக்கு சிறுமை அல்ல. இதை பெடரேஷன் என்றும் சொல்ல முடியாது unitary constitution with some federal bearings here and there என்று சொல்லியிருக்கிறார்கள். அது நம்முடைய இந்திய ஜன நாயகம் என்று சொல்ல வேண்டும்.

எங்களைப் பொறுத்தவரையில் வல்லபாய் பட்டேல் இந்த நாட்டுக்கு ஒரு நல்ல காரியத்தைச் செய்திருக்கிறார் என்று சொல்வோம். கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த தோழர்களைச் சுட்டுப் பொசுக்கியது அவர்தான். அதனால் எங்களுக்கு அவர்மேல் வெறுப்பு இருந்தாலும், 500-க்கு மேற்பட்ட துண்டுகளாக, சமஸ்

தானங்களாக சிதறிக் கிடந்த இந்தியாவை ஒரே அமைப்பாகக் கொண்டுவந்தவர் அவர்தான்; அதனால் அவரைப் பாராட்டுகிறோம். சிதறிக் கிடந்த பகுதிகளை எல்லாம் ஒன்றாக்கி ஒரே தேசமாக்கியது பாராட்டத்தக்கது. வருங்கால சரித்திரம் அதைச் சொல்லும். இப்படி முதலாளித்துவம் வளர்ந்து, ஏகாதிபத்தியத்தை விரட்டிட எல்லோரும் ஒன்றுபடுகிறார்கள். இந்தியா அப்படித்தான் இருக்கிறது.

இந்தியா எப்போது ஒன்றாக இருந்தது என்று எனக்குத் தெரியவில்லை. தமிழ் இலக்கியங்களை நன்றாகப் படித்தவர்கள் இங்கே இருக்கிறார்கள். மணிமேகலையில் ஒரு இடம் வருகிறது. தாதி என்ற ஒரு தாய் வருகிறாள். அவளுடைய பாவம் தீருவதற்காக வாரணாசியிலிருந்து கன்னியாகுமரி நோக்கி வருகிறாள். அப்படி வருகின்ற சமயத்தில் காவேரிக் கரையில் குழந்தை பிறக்கிறது. இந்தக் காவியம் எழுதப்பட்டு, ஆயிரம் வருஷத்திற்குக் குறையாமல் இருக்கும் என்று கருதுகிறேன். அப்போதே ஏதோ ஒரு ஒற்றுமை இந்தியாவில் உருவாகி இருக்கிறது. (குறுக்கீடு) சீனாவிலிருந்து ஆள் வந்ததாக நான் சொல்லவில்லை; அவர்கள் வேறு காரியங்களுக்காக வந்தார்கள். நான் அதைச் சொல்லவில்லை. பாவம் தீருவதற்காக வாரணாசியிலிருந்து கன்னியாகுமரிக்கு அந்தத் தாய் வந்ததாகத் தமிழ் இலக்கியம் இருக்கிறது.

There was probably a cultural unity.

எங்களுடைய கட்சியில் இருக்கின்ற பேராசிரியர் ஹிரேன் முகர்ஜி அவர்கள் சொன்னார்கள். (குறுக்கீடு) வடக்கே இருப்பவர்கள் இங்கே வந்தார்கள்; இங்கே இருப்பவர்கள் அங்கே போனார்கள். அதில் ஒன்றும் தப்பு இல்லையே.

இன்றைக்கு இருக்கக்கூடிய ஸ்டேட்ஸ் இங்கே எப்படி வந்தது என்று தெரியும்.

Only when capitalism develops the concept of autonomous States comes

இல்லாவிட்டால் சிறுநில மன்னர்கள், குறுநில மன்னர்கள்—இப்படித்தான் இருப்பார்கள். முதலாளித்துவம் வளரக்கூடிய நாட்டில்தான்—

When capitalist form of development takes place, States want autonomy.

இப்போது இங்கே என்ன வருகிறது என்றால், நம்முடைய மனதில் முதலாளித்துவம் வளரவேண்டும், தொழில் வளரவேண்டும் என்ற நிலை இருந்து வருகிறது. அது எந்த அளவுக்கு இருக்கவேண்டும்? உலகிலுள்ள பல நிலைமைகளை வைத்துப் பார்க்க வேண்டும்.

அப்படிப் பார்க்கும்போது ஓர் அபாயம் இருக்கிறது. அப்படி என்ன அபாயம் இருக்கிறது என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். நம்முடைய முஸ்லீம் லீக் உறுப்பினர்கள் சொன்னார்கள். அதற்கு நான் பதில் சொல்லவேண்டியிருக்கிறது. நான் சோவியத் நாட்டுக்கு எதிரி என்ற முறையில் சொன்னார்கள். இந்திய மக்களின் தேசிய இயக்கத்தை ஆதரிக்கின்றவர்கள் அங்கே இருக்கிறார்கள்.

ஏகாதிபத்திய வெள்ளையர்கள் இங்கே இருந்து மூலப் பொருட்களை எடுத்துக்கொண்டுபோய், அங்கிருந்து 'ஃபினிஷ்ட்' பொருட்களாக இங்கே கொண்டுவந்து விற்று பெரும் லாபம் சம்பாதித்துக் கொண்டிருந்தார்கள். அப்போதுதான் 'பஞ்சத்தை பஞ்சால் வெல்வோம்' என்று காந்தியடிகள் சொன்னார்கள். ஏகாதிபத்தியம் இங்கே கூடாது என்று சொன்னார்கள். அந்த எதிர்ப்பு உணர்ச்சி நமக்கு இன்றைக்கு இருக்கிறது. (குறுக்கீடு).

ஏகாதிபத்திய நாடும், சோசலிச நாடும் ஒன்று என்று சொல்கிறார்கள்.

சீனா கம்யூனிஸ்ட், சோவியத் கம்யூனிஸ்ட் என்று சர்ச்சை எழுந்து, கருத்து வேற்றுமை வந்து கட்சி பிளவுபடும் நிலைமை வந்தது. (குறுக்கீடு). 1962-ல் என்று சொல்கிறார்கள். மாறுபட்ட கருத்தின் காரணமாக கட்சியில் பிளவு ஏற்பட்டது. அதை வைத்துக்கொண்டு நாங்கள் எதிரி என்று சொல்கிறார்கள்.

*1974 ஏப்ரல் 17]*

**மாண்புமிகு திரு. க. அன்பழகன் :** தலைவரவர்களே, நேற்றைய தினம் அவர்கள் பேசுகின்றபோது 'சோவியத் யூனியனை எல்லா வகையிலும் முன் உதாரணமாகக் கொள்ளவில்லை; ஆனால் அங்கே இருந்து வருகிற சோசலிஷ அமைப்புகளுக்காக மட்டும் இதைச் சொல்கிறேன்' என்று சொன்னார்கள். பின்பற்றுகிறேன் என்று சொல்லவில்லை; உதாரணமாகச் சொல்கிறேன் என்று சொன்னார்கள். அதனால் சோவியத் யூனியனை எதிர்க்கிறார்கள் என்று சொல்லவில்லை; அரசியல் எதிர்ப்பு காட்டவில்லை.

**திரு. கே. டி. கே. தங்கமணி :** நான் மறுத்து அவர்களுக்குப் பதில் சொன்னால் பிறகு கோபம் வரும். சோவியத் நாட்டிலே கம்யூனிஸ்டுகள் இருக்கிறார்கள் என்றாலும், இங்கே இருக்கிறார்கள் என்றாலும் கம்யூனிஸ்டு கட்சியிலே ஜாதி வேறு பட்டவர்கள் அல்லது மதம் வேறுபட்டவர்கள் இருப்பார்கள். இதை சரித்திரம் எடுத்துக்காட்டியிருக்கிறது. இதைச் சொன்னால், . . .

**திரு. எல். கணேசன் :** சோஷலிச சித்தாந்தத்தை ஆதரிக்கின்ற வர்கள் கம்யூனிஸ்டுகளை எதிர்க்க முடியும் என்ற கருத்தை நீங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா? இல்லையா?

**திரு. கே. டி. கே. தங்கமணி :** இது ஒரு சோஷலிச நாடு. சோவியத் நாடு ஒரு சோஷலிச நாடு. நான் எதிர்க்கிறேன் என்று சொல்லலாம். அது வேறு ஒரு நாடு. அப்படிச் சொல்வதில் தப்பு இல்லை. இங்கே ஆளும் கட்சி சோவியத் நாட்டுக் கொள்கைக்கு மாறுபட்டிருக்கலாம்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** ஒரு முக்கியமான பிரச்சனையை கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தங்கமணி அவர்கள் எழுப்பியிருக்கிறார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பொறுத்த வரையில் இன்று நேற்று அல்ல, நீண்ட நெடுங்காலமாகவே சோவியத் நாட்டின்மீது ஒரு நல்ல பற்றும், ஆழ்ந்த அன்பும் கொண்டது கழகம் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஆனால் இப்போது சோவியத் ரஷியாவுடன் அதிக உறவு ஏற்படுத்த முடியாமல் இந்தியக் கம்யூனிஸ்டு கட்சி பார்த்துக்கொண்டிருந்தாலும் அதற்கும் மேலாக அன்பு காட்டிக்கொண்டிருப்பது ஆளும் கட்சி என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**மாநில சுயாட்சி பற்றியும், இராஜமன்னர் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

[1974 ஏப்ரல் 17

**திரு. கே. டி. கே. தங்கமணி :** முதலமைச்சரவர்கள் எந்த அரசாங்க தூதரகத்திற்கும் போகலாம் அவர்களும் அழைக்கத் தயாராக இருப்பார்கள். அதிலே சிக்கல் ஒன்றும் இல்லை. எங்களுடைய செல்வாக்கை விட முதலமைச்சருக்கு அதிக செல்வாக்கு உண்டு.

சோவியத் நாட்டில் நடைபெறும் மாநாட்டுக்கு யாரை அனுப்பலாம் என்று கேட்டால் (குறுக்கீடு) நாங்கள் போகிறோம். அதைப் பற்றிச் சொல்லவில்லை. நான் போய் வந்தால், சோவியத் நாடு எப்படி இருக்கிறது என்று ஒருவர் என்னைக் கேட்டால் நன்றாக இருக்கிறது என்று நான் சொன்னால் 'இவன் கம்யூனிஸ்டுக்காரன், அப்படித்தான் சொல்வான்' என்று சொல்லிவிடுவார்கள். 1969-ம் வருஷம்தான் முதன் முதலாக நான் சோவியத் நாட்டுக்குப் போனேன். அதனால் அந்த மாநாட்டுக்கு மற்றவர்களை அனுப்ப வேண்டுமென்று கருதுகிறேன். திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த ஆலடி அருணாவையும் மற்றவர்களையும் எனக்கு இருக்கின்ற ஒரு சிறிய அதிகாரத்தைப் பயன்படுத்தி அனுப்பலாம். ஆனால் ஆளும் கட்சியில் இருக்கிற முதலமைச்சரவர்கள், அவர்கள் நினைத்தால் எந்த நாட்டுக்கு வேண்டுமானாலும் போகலாம். அதற்கு நான் சிபாரிசு செய்ய வேண்டியதில்லை.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** நான் உறவு என்று சொன்னதை அங்கே போவதற்கு பாஸ்போர்ட் வாங்கித் தர வேண்டுமென்ற முறையில் சொல்லவில்லை; உறவு என்பதை வேறு முறையிலே சொன்னேன்.

**திரு. கே. டி. கே. தங்கமணி :** கம்யூனிஸ்ட் கட்சியைப் பொறுத்தவரையில் திராவிட முன்னேற்றக் கழகத்தவர்களை சோவியத் நாட்டுக்கு அழைக்கக்கூடாது என்று நாங்கள் சொல்லவில்லை. கட்சித் தலைமையில் அப்படிச் சொல்லவில்லை. (மணி அடிக்கப்பட்டது).

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** பேரவையின் இன்றைய அலுவல்கள் இத்துடன் முடிவுற்று, நாளைக் காலை 9 மணி அளவில் பேரவை மீண்டும் கூடும்.

பின்னர் பேரவை பிற்பகல் 1-30 மணியளவில் ஒத்திவைக்கப் பட்டது.

**தமிழ்நாடு சட்டப் பேரவை**

---

வியாழக்கிழமை, 1974 ஏப்ரல் 18.

---

சென்னை செயின்ட் ஜார்ஜ் கோட்டையிலுள்ள சட்டப்பேரவை மண்டபத்தில் காலை 9 மணி அளவில் மாண்புமிகு பேரவைத்தலைவர் **புலவர் கா. கோவிந்தன்** அவர்கள் தலைமையில் பேரவை கூடியது.

| | |
|---|---|
| பக்கங்கள் 403 முதல் 404 வரை<br>பக்கங்கள் 509 முதல் 512 வரை | வேறு அலுவல்கள் |

தமிழ்நாடு சட்டப்பேரவை

வியாழக்கிழமை, 1974 ஏப்ரல் 18

அரசினர் தனித் தீர்மானம்.

மாநில சுயாட்சி பற்றியும், இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ் நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்படவேண்டும் என்பது குறித்து—தொடர்ச்சி

மாண்புமிகு பேரவைத் தலைவர் : அடுத்து, அரசினர் தனித் தீர்மானத்தின் மீதான விவாதம் தொடரும். திரு கே.டி.கே. தங்கமணி அவர்கள் பேசலாம்.

பேரவை 20-ஆம் தேதி வரை தொடர்ந்து நடைபெறும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : முடிவடையும்.

மாண்புமிகு பேரவைத் தலைவர் : 20-ஆம் தேதியோடு முடிவடையும்.

திரு கே.டி.கே. தங்கமணி : பேரவைத் தலைவர் அவர்களே, அரசின் சார்பில் கொண்டுவந்திருக்கக்கூடிய தனித் தீர்மானத்தின் மீதும், எங்கள் கட்சியின் சார்பில் கொண்டுவந்திருக்கக்கூடிய மாற்றுத் தனித் தீர்மானத்தைப்பற்றியும் நான் சில கருத்துக்களை நேற்று சொன்னேன்.

ஏழெட்டு விஷயங்கள் குறித்து எங்களுடைய கட்சியின் நிலை என்ன என்பதை நான் சுருக்கமாகச் சொல்லி என்னுடைய பேச்சை முடிக்கலாம் என்று கருதுகிறேன்.

தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய திரு. ஆலடி அருணா அவர்கள் அரசியல் நிர்ணய சபையில் திரு. அனுமந்தையா அவர்களுடைய பிரசங்கத்தை எடுத்துக் குறிப்பிட்டார்கள். அதே திரு. அனுமந்தையா அவர்கள் தலைமையில்தான். ஏ.ஆர்.சி. ரிபோர்ட் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது. அந்த ஏ.ஆர். சி. ரிபோர்ட்டில் மத்திய-மாநில உறவு சம்பந்தமாக அவர்கள் தெளிவாக சிபார்சு கொடுத்திருக்கிறார்கள். முதல் சிபார்சிலே—

'No Constitutional amendment is necessary for ensuring proper and harmonious relations between the Centre and the States in as much as the provisions of the Constitution governing Centre-State relations are adequate for the purpose of meeting any situation or resolving any problem that may arise in this field . . '.

என்ற கருத்தை அவர்கள் கொடுத்திருக்கிறார்கள்.

அதே கருத்தைத்தான், அரசியல் சட்ட மேதை என்று பெயர் பெற்றவரும் பல முக்கியமான கேஸ்களில் வாதாடியவருமான திரு. பல்கிவாலா அவர்கள் நேற்று சென்னையில் நிகழ்த்திய பிரசங்கத்தில் சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் சொல்லுவது என்னவென்றால்—

'We must restore to the States their legitimate powers envisaged in the Constitution in the fields of Commerce and Industries. It is time we restored to States their legitimate powers

envisaged in the Constitution. I am not in favour of autonomy for States nor am I advocating any constitutional amendment in this regard '. என்று அவர்கள் தெளிவாகத் தெரிவித்திருக்கிறார்கள். இதிலிருந்து தெரிவது என்ன வென்றால் இன்று இருக்கக் கூடிய அரசியல் சட்டத்தை முறையாக செயல்படுத்தினாலே மாநிலத்திற்கு நாம் விரும்புகின்ற பல அதிகாரங்கள் கிடைக்கும். அப்படி. கிடைக்காமல் இருக்கிறதே என்றால் இதற்கு மத்திய அரசின் தவறான போக்குத்தான் காரணம் என்பதை நான் இங்கே சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

மத்திய அரசுக்கு என்ன அதிகாரம், மாநில அரசுக்கு என்ன அதிகாரம் இரண்டுக்கும் சேர்ந்து பொதுவாக உள்ள அதிகாரங்கள் என்ன என்பதை எல்லாம் நீங்கள் அறிவீர்கள். There is an exclusive Union List. அதில் நாம் போய்த் தலையிடுவது இல்லை. The Concurrent List is more or less converted into an exclusive Union List, என்பதில் மத்திய அரசின் தலையீடு ஜாஸ்தியாகத்தான் இருந்து கொண்டிருக்கிறது. There is an exclusive State List. Even in the exclusive State List, sometimes the Government of India interferes in the name of uniformity என்று எல்லா மாநிலங்களுக்கும் ஒரேமாதிரியான சட்டங்கள் இருக்க வேண்டுமென்ற முறையில் தலையிடுகிறார்கள். அதை அமல் படுத்துகிற போது rigid bureaucracy without imagination தடை செய்கிறார்கள் என்பதை நான் சுட்டிக்காட்டாமல் இருக்க முடியாது.

இன்றைக்கு முன்னாள் முதலமைச்சர் திரு. பக்தவச்சலம் அவர்கள் ஒரு குறிப்பிட்ட கருத்தைக் தெரிவித்திருக்கிறார்கள். இங்கு இருக்கக் கூடிய நிலவரியை ரத்து பண்ணலாமா என்பதைதமிழ்நாடு காங்கிரஸ் அரசாங்கத்திற்கு ஆலோசித்துப் பார்க்கச் சொன்னபோது It is a tax on incoeme. அதை ரத்து செய்யலாம் என்பதை மத்திய அரசு ஏற்றுக் கொண்டதாக சொல்லியிருக்கிறார்கள். எந்தெந்த முறையில் மாநிலச் சர்க்கார் தங்கள் நிர்வாகத்தை நல்ல முறையில் நடத்துவதற்கு முன் வந்தார்களோ அப்போது எல்லாம் மத்திய சர்க்கார் தலையிடவில்லை என்று சொன்னார்கள். அப்படித் தலையிடாமல் இருப்பதுதான் நல்லது, தலையிட்டாலும் தலையிடக்கூடாது என்பதை நாம் வற்புறுத்துவது நம் முடைய பண்பாடாகவும் நமக்கு ஏற்படவேண்டும்.

இன்றைக்குக் கோளத்தில் கூட வெளிநாட்டு அந்நியச் செலாவணியைத் தரக்கூடிய தோட்டப் பயிர்களைத் தேசீயமயமாக்கவேண்டுமென்று அவர்கள் ஒரு அவசரச் சட்டத்தைக் கொண்டு வந்தபோது மத்திய சர்க்கார் தலையிட்டு நிறுத்தியிருக்கிறார்கள். இது தவறான நடவடிக்கை—எல்லா மாநில சர்க்காரும் இப்படிப்பட்ட தலையீட்டை எந்த நேரத்திலும் சந்திக்க நேரிட லாம். இதை எதிர்க்கவேண்டும். ஆகவே திரு. ஹனுமந்தையா சிபாரிசு நாங்கள் எடுத்திருக்கக்கூடிய நிலைக்கு ஒத்ததாக இருக்கிறது என்பதை நான தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

1974 ஏப்ரல் 18]

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: திரு. ஹனுமந்தையா அவர்களின் சிபாரிசின்படி அரசியல சட்டம திருத்தப்படாமலேயே மத்திய மாநில உறவுகளைத் திருத்தி அமைத்துக்கொள்ளலாம் என்றுதான் கம்யூனிஸ்டுக் கட்சி விரும்புகிறதா?

திரு கே. டி. கே. தங்கமணி : திருத்தங்கள் இல்லாமலேயே பல காரியங்களைச் செய்ய முடியும். அவசியமானால் ஒன்றிரண்டு சிறு திருத்தங் கள் போதுமானவை. தமிழ்நாடு சர்க்கார் மாநில சுயாட்சி என்ற அடிப்படையில் அரசியல் சட்டத்தில் என்ன, என்ன திருத்தங்கள் தேவை என்று கருதுகிறார்களோ, ராஜமன்னார் குழு என்ன என்ன திருத்தங்கள் தேவை என்று சொல்லியிருக்கிறதோ—அந்தத் திருத்தங்களை—மாறுதல் களைத் கொண்டுவரவேண்டிய தேவை இல்லை என்பதுதான் எங்களுடைய நிலை.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : 1970-ஆம் ஆண்டு மே திங்கள் 3-ஆம் நாள் டெல்லியில் நடைபெற்ற சென்டர் ஸ்டேட் ரிலேஷன் பற்றிய செமினாரில் திரு. பூபேஷ் குப்தா ஆற்றிய உரையில் ஒன்றைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். நேற்று திரு. கே.டி.கே. தங்கமணி அவர்கள் பேசியபோது அரசியல் சட்டத்தைத் தாறுமாறாகச் சொல்லக்கூடாது என்று சொன்னார்கள். திரு. பூபேஷ் குப்தா அரசியல் சட்டத்தைப்பற்றி என்ன குறிப்பிடுகிறார் என்றால்........

'If you ask my opinion, the constitutional structure is an opportunistic compromise between the demands of federalism and pressures of unitarism. I think it is therefore an illegitimate child...'.

அதுமாத்திரம் அல்ல.—1970 ஆம் ஆண்டில் தான்—இடையில் 3 ஆண்டுதான் ஆகிறது—அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டாம் என்கிறார்களே, அவர் குறிப்பிடுகிறார்.

'I am finishing. As far as political powers are concerned, we want certainly States to get autonomy...'.

இதைப் பற்றி எல்லாம் திரு. கே.டி.கே. தங்கமணி அவர்கள் என்ன கூறுகிறார்கள் ?

திரு. கே. டி. கே. தங்கமணி : இன்றைக்கு நாங்கள் எடுத்திருக்கக் கூடிய நிலையை விளக்கினால் போதும், எல்லாம் தெளிவுபடும் என்று கருதுகிறேன்.

1971-ஆம் வருஷத்தில் இன்று ஆளுங்கட்சியாக உள்ள திராவிட முன்னேற்றக் கழகத்துடன், கம்யூனிஸ்டுக் கட்சியும் சேர்ந்து தேர்தலில் கூட்டாக நின்றோம். அப்போது பிரதானமாக வந்த விஷயம் என்ன ?

'Supremacy of the Parliament'. பார்லிமெண்டுக்கு அதிகமான அதிகாரங்கள் கொடுக்கப்பட வேண்டும், டெல்லியில் உள்ள பிரதம மந்திரிக்கு அதிகாரம் இல்லை, ஹைகோர்ட் ஜட்ஜூக்கு, சுப்ரீம் கோர்ட் ஜட்ஜூக்கு அதிகாரம் இல்லை—முழு அதிகாரம் பார்லிமெண்டுக்கே இருக்கவேண்டும் என்று சொன்னோம்.

அப்படியானால் இன்றைக்கு உதாரணமாக ஆர்டிகிள் 263-இல் இண்டர்-ஸ்டேட் கவுன்சில் ஒரு மாநிலத்திற்கும் இன்னொரு மாநிலத்திற்கும் தகராறு ஏற்படுகிறபோது, மாநிலத்திற்கும் மத்திய சர்க்காருக்கும் தகராறு ஏற்படுகிறபோது ஆலோசனை வழங்கக் கூடிய ஒன்றாகத்தான் இருக்கமுடியும். ஆனால் இப்போது நீங்கள் இண்டர்-ஸ்டேட் கவுன்சில்—பிரதம அமைச்சரும், மாநில முதலமைச்சர்களும் சேர்ந்து எடுக்கிற முடிவே முடிவானது என்கிறபோது—பார்லிமெண்டிற்கே எந்தவிதமான அதிகாரமும் இல்லாமல் போய் விடுகிறது. அன்றைக்கு நாம் பார்லிமெண்டுக்குத்தான் அதிக அதிகாரங்கள் வேண்டும் என்றோம். ஆனால் இன்றைக்கு உங்கள் நிலை பார்லிமெண்டின் அதிகாரத்தைக் குறைக்கக்கூடிய ஒரு ஆலோசனையாகத்தான் இருக்கிறது. முன்பு எடுத்த நிலையோடு பார்க்கிறபோது இது மிகப் பெரிய மாறுதலாக இருக்கிறது. ஆர்டிகிள் 263 சம்பந்தமாக திரு ஹனுமந்தையா சிபார்சு—இண்டர்-ஸ்டேட் கவுன்சில் என்பது ஆலோசனைக் குழுவாகத்தான் இருக்க வேண்டும் என்பது Consultative Committees have come to stay. அதற்கு முடிவு செய்யும் அதிகாரம் இல்லாமல் இருக்கலாம். ஓரளவு அது எல்லா சாராரையும் நிர்ப்பந்தப் படுத்தக்கூடியதாக இருக்கும். It can rise to a political level. மக்கள் மத்தியில் அதை எடுத்து விளக்க உதவிகரமாக இருக்கும். இந்த அளவுக்கு இருக்கவேண்டுமே தவிர—சர்வ வல்லமை படைத்ததாக இருக்கக்கூடாது என்பதுதான் எங்கள் நிலை.

அடுத்து, நாங்கள் கூட தேர்தல் அறிக்கையிலே கவர்னர் வேண்டாம் என்று சொல்லியிருக்கிறோம். கவர்னரை வேண்டாம் என்று சொல்லுகிறபோது இந்த அரசினிடத்தில், வெறுப்போ, மத்திய அரசினிடத்தில் விருப்போ கொண்டு சொல்லவில்லை.

1967-க்கு முன்னால் மத்தியிலும், மாநிலங்களிலும் ஒரே கட்சி ஆட்சிக்கு வரக்கூடிய நிலை இருந்தது. ஆனால் 1967-க்குப் பிறகு மத்தியில் ஒரு கட்சி ஆட்சிக்கு வந்தால் மாநிலங்களில் பல கட்சிகள் அங்கங்கே ஆட்சிக்கு வந்திருக்கிற நிலையைப் பார்க்கிறோம். இதன் காரணமாக பல முரண்பாடுகள் ஏற்படக் கூடும். இதைச் சொல்கிறபோதுதான் திரு. பூபேஷ் குப்தா இந்தக் கருத்தை வலியுறுத்தியிருக்கிறார்கள். நாங்கள் பல டாக்குமெண்ட்களிலும் அதைச் சொல்லியிருக்கிறோம்.

கவர்னர் என்பவர் மத்திய சர்க்கார் நேரிடையாக நியமிக்கக்கூடிய பதவியாக இருக்கிற காரணத்தினால் அவர்களுக்கு இருக்கிற அதிகாரம் ஓரளவுக்குக் கட்டுப்பாடுடையதாக இருக்கவேண்டும் என்றுதான் திரு. அச்சுத மேனனும் சொல்லியிருக்கிறார்கள்.

குறிப்பாக, தனியார் பள்ளிகளைச் சேர்ந்த முக்கியமானவர்கள் கவர்னரைப் போய்ப் பார்த்தார்கள். அதுபற்றி நிருபர்கள் திரு. அச்சுத மேனனிடம் சொன்னபோது அவர்கள் சொன்னார்கள்—'இந்து' சென்னைப் பதிப்பு 8—8—1972 பக்கம் ஒன்றில் வந்திருக்கிறது—

'I am aware of the management meeting the Governor. Anybody is free to meet the Governor. Only the Government can take decision on the issue and implement the same...'.

அந்த நிலைதான் கேரள சர்க்காராக இருந்தாலும், தமிழக சர்க்காராக இருந்தாலும்—எந்த மாநில அரசும் எடுக்க வேண்டிய நிலை—யார் போய் கவர்னரைப் பார்த்தாலும் முடிவு எடுக்கின்ற அதிகாரம் அவரிடம் இல்லை—மாநில அரசையேதான் சார்ந்தது, என்று அச்சுத மேனன் சொல்லியிருக்கிறார்கள் என்பதைச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.

அதேமாதிரி நமது மாநிலத்தில் மேல் சபை இருக்கிறது. மேல்சபை என்பது கிட்டத்தட்ட இங்கு நடப்பதை அங்கே திருப்பிச் சொல்லக்கூடிய—டூப்ளிகேஷனாகத்தான் ஆகிறது. நேரம் போகிறது. அமைச்சர்கள் மற்ற வேலைகளையாவது கவனிக்கலாம். இங்கு சொன்னதை அங்கே திருப்பிச் சொல்லக்கூடிய நிலைதான் இருக்கிறது.

The very concept of Second Chamber is that elders must be in the Second Chamber, to see that there is no hasty legislation or hasty action taken by the Lower House.

இன்றைக்கு அதுவா நிலைமை? அங்கேயிருக்கிறவர்கள் எல்லாம் எல்டர்ஸா? இங்கே இருப்பவர்களைவிட வயதிலே குறைந்திருக்கிறவர்கள் இருக்கிறார்கள், ஏதேதோ காரணத்திற்காக வந்திருக்கக்கூடியவர்களாகத்தான் இருப்பார்கள்.

ராஜ்ய சபையைப் பற்றி உங்களுடைய கருத்து என்ன என்று கேட்டால் எங்களுடைய கருத்து அதேதான். ராஜ்ய சபை இருக்கவேண்டுமென்று சொன்னால் அமெரிக்காவிலே, சோவியத் யூனியனிலே இருக்கக்கூடிய அதே முறையிலே கூட இருக்கலாம். நம்முடைய நாட்டிலே பல மாநிலங்கள் இருக்கின்றன, எல்லா மாநிலங்களிலும்—எல்லா மாநிலங்கள் என்று நான் சொல்வதை சென்ட்ரலி அட்மினிஸ்ட்ரேட் ஸ்டேட்ஸ் அல்ல—தமிழ்நாடு, கேரளம், உ.பி., பீகார் எல்லா மாநிலங்களுக்கும் சம எண்ணிக்கை உள்ள பிரதிநிதிகளை இருக்கச் செய்ய வேண்டுமென்ற முறையிலே இருந்தால் நான் ஏற்றுக்கொள்கிறேன்.

Chamber of Nationalisties is represented.

அங்கே இருக்கக்கூடிய சேம்பர் ஆப் நேஷனலிட்டிஸ் போன்று ஒவ்வொரு மாநிலத்திற்கும் சம எண்ணிக்கையுள்ள பிரதிநிதிகளைக் கொண்டு வரலாம். நான் சொல்வது இரண்டாவது சேம்பர் ஒன்று இருக்கவேண்டுமென்று சொன்னால்தான் அந்த மாதிரி இருக்கவேண்டுமென்று சொல்வது. அப்படியிருப்பதிலே ஆட்சேபணையில்லை.

நேற்று நான் ஆரம்பிக்கிறபோது ஒரு விஷயத்தைச் சொன்னேன். இந்த நாடு விடுதலை அடைந்ததற்குப் பிறகு இந்த நாட்டின்மீது கண் வைக்கக்கூடியவர்கள் இருக்கலாம். அது பாகிஸ்தான் படையெடுப்பாக இருந்தாலும் சரி, சைனாவின் படையெடுப்பாக இருந்தாலும் சரி, இந்திய மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து எதிர்க்கிறோம்.

ஆனால், அந்தப் படையெடுப்பின் அடிப்படையில் இருக்கக்கூடிய கருத்து என்ன? பாகிஸ்தான் தானாகப் படையெடுக்கிறதா? அப்படி படையெடுப்பதற்கு அதற்கு சக்தி உண்டா? அவர்களைத் தூண்டிவிடக்கூடிய வர்கள் அவர்களுக்கு பக்கப் பலமாக நின்று அப்படிச் செய்யச் சொல்கிறவர்கள்தான் காரணம்.

சென்ற யுத்தத்திலே 7-வது கப்பல் படை சென்னை அருகே வந்த தாகச் செய்தி வந்தது. அது வந்தவுடனே சோவியத் கப்பல் பின்னால் வந்து விட்டது என்றெல்லாம் செய்தி வந்தது. அதுபற்றி இந்தச் சட்ட மன்றத்திலேகூட கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன.

பாகிஸ்தான் படையெடுப்பதற்குக் காரணம் என்னவென்றால் எங்க ளுடைய மொழியிலே அதைச் சொல்லவேண்டுமென்றால், உலக ஏகாதி பத்தியம் தூண்டிவிடுகிறது, இன்னும் கொஞ்சம் தெளிவாகச் சொன்னால் அமெரிக்காவிலே இருக்கக்கூடிய பல முதலாளிகள்—நான் அமெரிக்கா விலே இருக்கக்கூடிய மக்களைச் சொல்லவில்லை—அந்த ஏகாதிபத்தியம் உலகத்திலே எங்கேயாவது ஒரு பக்கத்திலே யுத்தத்தை நடத்திக் கொண்டிருக்க வேண்டுமென்ற எண்ணத்திலே சண்டைகளை மூட்டிவிட்டுக் கொண்டு இருக்கிறார்கள். அந்த முறையிலேதான் அவர்கள் இந்து மகா சமுத்திரத்திலே ஒரு நேவல் பேஸ் வைப்பதற்கு ஏற்பாடு செய்துகொண்டிருக் கிறார்கள், அதைப் பலரும் எதிர்த்துக்கொண்டிருக்கிறார்கள். அதைப்பற்றிக் கூட இந்தச் சட்ட மன்றத்திலே அதை எதிர்த்துத் தீர்மானம் போட்டிருந் தால் பெருமையாக இருக்கும். அப்படிப்பட்ட அபாயம் இருக்கிறது.

இந்த நிலையிலே எல்லோரும் ஒன்றுபட்டு நிற்கிறோம் என்ற நிலைமை இருக்குமானால் அந்த அபாயத்தால் நமக்கு ஒன்றும் ஏற்படாது. பிரிந்து பிரிந்து நிற்கிறோம் என்ற நிலைமை ஏற்பட்டால் என்ன ஆகும்? பிரிந்து போக வேண்டும் என்ற கருத்தை யாரும் சொல்லவில்லை. சோவியத் யூனியன் கான்ஸ்டிடியூஷனிலே பிரிந்து போகலாம் என்ப தற்கு வழி இருக்கிறது. உக்ரேன் பகுதிக்குத் தனி அந்தஸ்து இருக்கிறது. அவுட்டர் மங்கோலியாவுக்குத் தனி அந்தஸ்து இருக்கிறது. தமிழ் நாட்டிற்கு ஒரு தனி அந்தஸ்து வேண்டுமென்று யாரும் கேட்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன். எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து இருக்கவேண்டுமென்ற நிலைமைதான் இருக்கிறது. எப்படியாவது பிரிந்து போக வேண்டும் என்ற கருத்து ஆழமாக வேரூன்றி இருக்கிறது.

1974 ஏப்ரல் 18] [திரு. கே. டி. கே. தங்கமணி]

ஆந்திர மாநிலத்திலே அந்த மாநிலம் இரண்டாகப் போகவேண்டு மென்று சொல்லப்பட்ட நேரத்திலே எல்லாக் கட்சிகளும் எதிர்த்தன. காங்கிரஸ் கட்சியிலே ஒரு சாரார் அதை ஆதரித்தார்கள். கம்யூனிஸ்ட் கட்சி எதிர்த்தது. ஆனால் திராவிட முன்னேற்றக் கழகத்தின் நிலை என்ன? அந்தக் கட்சியைச் சேர்ந்த இரண்டு நாடாளுமன்ற உறுப்பினர் கள் அங்கே சென்று அதற்கு ஆதரவாகப் பிரச்சாரம் செய்தார்கள். பிரிவினைப் பிரச்சாரம் செய்தால் அதை எப்படியாவது ஆதரிக்க வேண்டு மென்கிற நிலைமைதான் இருக்கிறது.

அஸ்ஸாம் மாநிலத்திலே ஒரு பிரிவினை இயக்கம் நடந்தது. அதிலே தி. மு. கவின் நிலை என்ன? அவர்கள் சொல்லவில்லை. தனித்துப் போக வேண்டும், பிரிந்து போக வேண்டுமென்ற கருத்து நாட்டு மக்க ளிடத்திலே கொஞ்சம் கொஞ்சமாகத் தூவிவிடப்படுகிறது. இப்படிப்பட்ட விஷக் கருத்து ஆபத்தான கருத்து பரவுகிற நிலைமை வந்தால் அமெரிக்கா போன்ற நாடுகள் நுழைவதற்குத்தான் அது சந்தர்ப்பமாக அமையும்.

சமீபத்திலே முக்கியமான ஒரு தலைவர் கூட.......

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : ஏதோ இங்கே ஒரு பிரிவினைத் தீர்மானம் முன்மொழியப்பட்டிருப்பது போலவும், அதையொட்டி அவர்கள் பேசுவதுபோலவும், சட்டத்தை நன்கு படித்து இருக்கின்ற திரு கே.டி.கே. தங்கமணி அவர்கள் வாதிடுவது வேடிக்கையாக இருக்கிறது. கொண்டுவரப் பட்டிருக்கின்ற தீர்மானத்திற்கு ஆதரவாகக் கருத்துக்களை வழங்குவார் கள் என்று எதிர்பார்த்தேன். எதிர்ப்பாக அவர்கள் தெரிவிக்கின்ற கருத்துக்களின்மூலம் திருத்திக்கொள்வதற்கு அவை உதவிகரமாக இருக்கக்கூடிய கருத்துக்களாக இருக்கும் என்று எதிர்பார்த்தேன். ஆனால் அதற்கு மாறாக, ஏதோ பிரிவினைத் தீர்மானம் முன்மொழியப் பட்டிருப்பது போலவும் அதையொட்டி அந்தத் தீர்மானத்தை அவர்கள் எதிர்த்துப் பேசுவது போலவும் பேசுவது சரியல்ல. திரு. பூபேஷ் குப்தா அவர்கள் 1970-ஆம் ஆண்டு டெல்லியிலே என்ன கருத்தைச் சொல்லியிருக் கிறார்களோ அந்தக் கருத்தின் அடிப்படையிலே தான் இந்தத் தீர்மானம் முன்மொழியப்பட்டிருக்கிறது.

திரு. கே. டி. கே. தங்கமணி : அதுதான் நான் சொன்னேன், முகவுரையிலேயே, பிரிவினை வேண்டுமென்று சொல்வார்கள் என்று நினைக்கவில்லையென்று. தி. மு. க.வினரா ஆந்திரா பிரியவேண்டுமென்று கேட்டார்கள்? அங்கே பிரிவினை கேட்ட கூட்டமே வேறு. இவர்கள் அதற்கு ஆதரவாக நின்றார்கள்.

வட நாட்டிலே 75 சதவீதம் தொழில்கள் இருக்கின்றன. தமிழ் நாட்டிலே அப்படி இல்லை, தமிழ்நாட்டிலேயும் தொழிற்சாலைகள் இருக்க வேண்டுமென்ற கருத்தைச் சொல்லியிருக்கிறார்கள்.

இந்த ராஜமன்னார் குழு அறிக்கை வந்தது. அந்த அறிக்கையிலே பல கருத்துக்களைச் சொல்லியிருக்கிறார்கள். படித்துப்பார்த்தால் பள்ளி மாணவர்களுக்கு ரிப்போர்ட் பண்ணுவது மாதிரி இருக்கின்றது. தொகுத்து எடுத்திருக்கக்கூடிய விஷயம் இருக்கிறதே அதைத்தான் நான் உதாரணத்திற்குச் சொன்னேன். 263-ஐப்பற்றி எந்த மாதிரியாக நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள் என்று எடுத்துக்காட்டினேன். இப்படிப்பட்ட பல கருத்துக்களையும் வைத்துப் பரிசீலனை செய்வதற்குப் பல அமைப்புகள் இருக்கின்றன.

வருடத்திற்கு மூன்று தடவைகள், நான்கு தடவைகள் முதலமைச்சர்கள்கூடுகிறார்கள். முதலமைச்சர்கள் கூறக்கூடியதைப் புறக்கணிக்கக்கூடிய சக்தியாக மத்திய சர்க்கார் இருப்பதாக நான் நினைக்கவில்லை. டெவலப்மெண்ட் கவுன்சில் கூட்டம் நடக்கிறது என்று சொன்னால் அந்த அஜண்டாவிலே இதை வைத்து இந்த சட்டமன்றத்திலே இதைப்பற்றி விவாதிக்கப்பட்ட கருத்துக்களையெல்லாம் எடுத்துவைத்து அரசியல் சட்டம் வந்து 20 ஆண்டுகளுக்கு மேலாக ஆகிறது. பல அம்சங்கள் மாற்றப்படவேண்டியிருக்கின்றன. இப்படி இப்படியெல்லாம் மாற்றலாம் என்றும் அதைப்பற்றி விவாதிப்பதற்குத் தயாராக இருக்கிறோம் என்றும் சொல்லியிருந்தால் உதவிகரமாக இருந்திருக்கும். இங்கே வந்து இருக்கக்கூடிய தீர்மானம் மத்திய சர்க்காருக்கு வேண்டுகோளாக இல்லை. 25, 26-ஆம் விதிகளுக்கு அப்பாற்பட்டு 26-ஏ என்ற முறையிலே எல்லாம் திருத்தி அர்ச்சகர்களாக எந்த ஜாதியைச் சேர்ந்தவர் வேண்டுமானாலும் வரலாம் என்று சொல்லக்கூடிய முறையிலே அந்தத் தீர்மானத்திலே வேண்டிக் கொண்டிருக்கிறோம்.

ஆனால் இந்தத் தீர்மானத்திலே இந்தச் சபை தீர்மானிக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'இந்தச் சபை தீர்மானிக்கிறது, நீங்கள் என்ன செய்வீர்கள்?' என்ற முறையிலே அமைந்திருக்கிறது. இப்படியில்லாமல் நான் சொன்ன மாதிரி சொல்லியிருந்தால் கூட எங்களுக்குக் கஷ்டமான நிலைமைதான் வரும். உங்களுடைய தீர்மானத்தைப் பல அம்சங்களிலே எதிர்க்கக்கூடிய நிலைமை வந்திருக்கும். ஆகவே வேறு முறையிலே இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருந்தால் வேறு மாதிரியாக இருக்கும்.

கொண்டுவரப்பட்டிருக்கின்ற தீர்மானத்திற்குத்தான் நாங்கள் எல்லாம் திருத்தம் கொடுத்திருக்கிறோம். சபையின் கருத்துக்களைப் பார்த்தால், ஏ.டி.எம்.கே., சுதந்திராக் கட்சிகள் எல்லாம் தீர்மானத்தை எந்த தினசரியிலே உருவாக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள்? இந்தச் சபையிலே அநேகமாக எதிர்க்கட்சிகளிடையே முஸ்லிம் லீக்தான் முழுமையாக ஆதரிக்கலாம், அல்லது தமிழரசுக் கழகம் ஆதரிக்கலாம். மற்றக் கட்சிகள் எப்படி ஆதரிக்க முடியும் என்று எனக்குத் தெரியவில்லை, பார்வார்டு பிளாக் கட்சி நேத்தாஜி சுபாஷ் சந்திர போசின் பாரம்பரியத்திலே வந்த கட்சி எப்படி அவர்கள் இந்தத் தீர்மானத்தை முழுமையாக ஆதரிக்கமுடியும் ?

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : மாநில சுயாட்சி, ஸ்டேட் அட்டானமி, என்றால் இந்தியா பிரிய வேண்டுமென்று பொருளா ?

(முற்பகல் 9-30)

திரு. கே. டி. கே. தங்கமணி : இந்தியா பிரியவேண்டுமென்று பொருளா என்று கேட்டால் நேரடியாகப் பதில் சொல்வது கஷ்டம். உங்களுடைய இந்தத் தீர்மானத்தை நாம் ஏற்றுக்கொண்டால் ஏதோ மாநிலங்கள் பூராவும் சுதந்திரமாக இருந்து இணைந்துக்கு ஒன்று சேர்ந்து இந்த மத்திய சர்க்காரை அமைப்பது போன்ற தோற்றத்தை உருவாக்கு கிறது. இப்பொழுது மாநிலங்களெல்லாம் விடுதலை பெற்று அவைகளெல் லாம் ஒன்று சேர்ந்து அரசியலமைப்பை ஏற்படுத்தக்கூடியது போன்ற ஒரு கருத்து உங்களுடைய தீர்மானத்திலே...........

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : திரு. கே. டி. கே. தங்கமணி அவர்களுக்கு மிகவும் பிடித்தமான வார்த்தைகளில் திரு. பூபேஷ் குப்தா அவர்களுடைய பேச்சை சொல்ல வேண்டுமென்றால், பூபேஷ் குப்தா அவர்கள் சொல்கிறார்கள்.—

"We are talking about Centre-State relations. For delegation we speak of different States. But they are really not States. They are zamindaris to the New Delhi Home Ministry."

திரு. கே. டி. கே. தங்கமணி : இதெல்லாம் கோபத்திலே சொல்லு வது. எப்படி நேற்றுகூட, அம்பேத்கார் அவர்களே அரசியல் சட்டத்தை நெருப்பு வைத்துக்கொளுத்த வேண்டுமென்று சொன்னார்களே என்று சொன்னோமோ, அவர்கள் ஏதாவது கோபத்திலே இவைகள் இல்லை என்று சொன்னால் அதற்கு நெருப்பு வைத்தால் என்ன என்று சொல்லியிருக்கலாம். அதைப்போல அதிகாரத்தைக் கையில் வைத் துக்கொண்டு மாநிலங்களுக்குக் கொடுக்க மறுக்கும் நிலையில் ஜமீன்தாரி கள் என்ற முறையில் சொல்லியிருக்கிறார்கள். இருக்கின்ற அதிகாரங் களை அதிகமாகக் குவித்து வைத்துக்கொண்டு மாநிலங்களுக்கு அதி காரங்களே கூடாது என்று மறுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்ற முறை யில்தான் எங்கள் தலைவர் கொடுத்திருக்கிறார்கள்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : பூபேஷ் குப்தா அவர்கள் திட்டவட்டமாகச் சொல்லியிருக்கிறார்கள்.

' As far as political powers are concerned ' we want certainlp the State to get autonomy. But the Seventh Schedule to the Constitution must be revised. The invasion of the State List by Central Government must be stopped.

" 'ரிவைஸ்ட்' என்று சொல்லுகிறார்கள்."

திரு கே. டி. கே. தங்கமணி : அதனால்தான் நான் முதலிலேயே சொன்னேன். 3 லிஸ்ட்டிலே அவர்கள் எப்படி எப்படித் தலையிட்டுக்கொண்டிருக்கிறார்கள் என்று சொன்னேன். இப்பொழுது வேண்டுமென்றால் நம்முடைய வரி போடுவதிலே இன்கம் பேரிலே வரி இருக்க வேண்டும் என்ற அந்தக் கருத்து இருக்கிறது அல்லது அதற்கு விதி விலக்கு கொடுத்து ஒவ்வொரு மாநிலத்திற்கும் "டாக்ஸ் ஆன் இன்கம்" கொடுக்க வேண்டும். இன்றைக்கிருக்கிற நிலையில் அம்மாதிரி முடியாது. அதைப்பற்றி இன்னும் அதிகமாக உட்கார்ந்து, சில குறிப்பிட்டவர்கள் உட்கார்ந்து விவாதிக்க வேண்டிய விஷயம் அது அல்லது, கருத்தரங்குகளில் சொல்ல வேண்டிய விஷயமே தவிர, தீர்மானத்திலே, It is ery diffcult to spell out the details ஆகவே, பொதுவான கருத்துகளை நீங்கள் வற்புறுத்தியிருக்கிறீர்கள், இந்த முறையில்தான் இருக்கிறது என்று சொல்லி இந்தத் தீர்மானத்தை ஏற்றுக்கொள்வதற்கில்லை என்று சொல்லி முடித்துக்கொள்கிறேன்.

மாண்புமிகு திரு செ. மாதவன் : தீர்மானத்தில் தவறு இருப்பதைப் போல் அவர்களுடைய பேச்சின் முடிவு இருக்கிறது. தீர்மானம் தெளிவாகப் போடப்பட்டிருக்கிறது. இந்த மன்றத்திலே உள்ள கருத்துக்களின் அடிப்படையில் அரசியலமைப்பு திருத்தப்பட வேண்டும் என்ற அடிப்படையில், 3 பிரிவுகளில் அதிகாரம் இருக்கிறது. மொத்தமாக 4 அதிகாரகங்கள் தவிர மற்ற அதிகாரங்கள் முழுவதும் மாநிலங்களுக்கு இருக்க வேண்டும். அந்த அதிகாரங்கள் என்னென்ன என்பதை 3 பிரிவுகளில் போட்டிருக்கிறோம். அந்தப் பிரிவுகளில் சொல்லியிருக்கும் அதிகாரங்கள் தவறு என்று அவர்கள் கருதுகிறார்களா ? இதிலுள்ள அதிகாரங்களை மத்திய அரசு கொடுக்க வேண்டுமென்று விரும்புகிறார்களா ? அதைத் தெளிவாகச் சொல்ல வேண்டும். திரு பூபேஷ் குப்தா அவர்கள் மாநிலங்களின் அதிகாரங்களில் மத்திய சர்க்கார் படை எடுக்கிறது என்று சொல்லியிருக்கிறார்கள். "அட்டானமி", மாநில சுயாட்சி வேண்டுமென்று கேட்கிறார்கள். அந்த அடிப்படையிலே தீர்மானத்தை உருவாக்கி இருக்கிறோம்.

திரு கே. டி. கே. தங்கமணி : தீர்மானத்தில், "மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துக்களை மத்திய அரசு ஏற்று---மத்தியில் கூட்டாட்சி, மாநிலங்களில் சுயாட்சி கொண்ட உண்மையான சுயாட்சி முறையை உருவாக்கும் அடிப்படையில், இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் உடனடியாகத் திருத்தப்பட வேண்டும் என்று கொடுத்திருக்கிறீர்கள். It is so general, so comprehensive and so exhaustive ஆகவே, அந்த முறையிலே வந்துள்ள தீர்மானத்தை எப்படி ஏற்றுக்கொள்ள முடியும் ? தெளிவாகச் சொல்லிவிடலாம், அரசியலமைப்புச் சட்டம் பூராவையும் மாற்றி, வேறொரு அரசியல் நிர்ணயச் சட்டத்தைப் போட்டு, இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தை மாற்றலாம் என்ற அளவில் இருக்கிறதா ?

1974 ஏப்ரல் 18]

மாண்புமிகு திரு செ. மாதவன் : மத்தியில் கூட்டாட்சி, மாநிலத்தில் சுயாட்சி, இது தீர்மானத்தின் வடிவம். மத்தியிலே கூட்டாட்சி என்னும் பொழுது என்னென்ன அதிகாரங்கள் என்று விரிவாகப் போட்டிருக்கிறோம். அதைப் படித்துப் பார்த்தார்களா ? அந்தப் பகுதிக்கு அவர்களுடைய பதில் என்ன ? அந்தப் பகுதியிலே உள்ளதை எதைத் தவறு என்று சொல்கிறார்கள் ?

திரு கே. டி. கே. தங்கமணி : அதற்கு ஒரு மணி நேரம் கொடுத்தால் பதில் சொல்வேன். அதையும் படித்திருக்கிறேன். எந்தெந்த அளவில் அதிகமாக மாநிலங்களுக்கு நிச்சயமாக வேண்டுமென்ற தன்மையிருக்கிறது. அந்த முறையிலே மத்திய சர்க்கார், மாநில சர்க்கார்கள் தவறு செய்யும் பொழுது கண்காணிக்க வழியிருக்க வேண்டும். மாநில சர்க்கார்கள் தவறு செய்தால் அவர்களுக்குக் கொஞ்சநாள் ரெஸ்ட் கொடுக்க வேண்டிய அதிகாரங்கள் அவர்களுக்கு இருக்க வேண்டும் என்று நான் நினைக்கிறேன்.

எந்த அளவிற்கு இருக்க வேண்டுமென்பது வேறு விஷயம். அந்த மாதிரி விஷயங்களை எடுத்துவிட வேண்டுமென்ற நிலையிருக்கிறது. சுதந்திரமாக இருக்கின்ற மாநிலங்கள் ஒன்றாகச் சேர்ந்து மத்திய அரசை உருவாக்கும் போக்காக இது இருக்கிறது. நேற்றே நான் சொன்னேன், சுதந்திர இந்தியாவிலே மத்திய அரசு மாநில அரசுகளை உருவாக்கி மாநிலங்களுக்கு வேறு வேறு அதிகாரங்களைக் கொடுக்க வேண்டிய திசையிலே போக வேண்டுமென்ற நிலையைவிட்டு இது ரிவர்ஸ் டைரக்ஷனில் போகிறது என்ற காரணத்தினால் இந்தத் தீர்மானத்தை ஆதரிக்க முடியாத நிலையில் இருக்கிறேன்.

திரு கே. எ. வகாப் : பாயிண்ட் ஆஃப் ஆர்டர் சார். மாண்புமிகு கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர் திரு கே. டி. கே. தங்கமணி அவர்கள் நேற்றைக்கும் முஸ்லீம் லீகைப்பற்றிச் சொல்லி சில கருத்துக்களைச் சொன்னார்கள். இடையிடையே குறுக்கீடு செய்ய வேண்டாமென்ற காரணத்தினால் இப்பொழுது இந்தப் பிரச்னையை எழுப்ப விரும்புகிறேன். இன்றைக்கும் முக்கிய பிரச்னையைச் சொல்லியிருக்கிறார்கள்.

மாநில சுயாட்சித் தீர்மானத்தின் அடிப்படையில் பேசும்பொழுது, பிரிவினை அடிப்படையில் வரும் கருத்துக்களைச் சொல்கிறார்கள், இதை வேண்டுமென்றால் முஸ்லீம் லீகும், தமிழரசுக் கழகமும் ஆதரிக்கலாம், அனால் ஃபார்வர்ட் பிளாக் அப்படி அல்ல என்று சொல்லி, முஸ்லீம் லீக் பிரிவினையை ஆதரிக்கும் என்ற உள்கருத்தில் பேசினார்கள். அப்படிப்பட்ட கருத்தை விளக்க வேண்டுமென்று விரும்புகிறேன். பிரிவினை என்று வருகின்ற நோக்கில் அதை முதலில் எதிர்ப்பது முஸ்லீம் லீக் என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும் அவர்கள் குறிப்பிட்டார்கள், முஸ்லீம் லீக் அங்கத்தினர் பேசும் பொழுது இரஷ்யா விரோதி நாடு என்ற கருத்தைச் சொன்னதாகச் சொன்னார்கள். ஆனால் அந்த அங்கத்தினர் அந்தக் கருத்தில் சொல்ல வில்லை. இன்றையதினம் அவர்களே கூடச் சொன்னார்கள். உக்கிரேன், அவுட்டர் மங்கோலியாவைப் பற்றிச் சொன்னார்கள். இப்படிப் பட்ட கருத்துக்களைச் சொல்லும்பொழுது.. ............

மாண்புமிகு பேரவைத் தலைவர் : அடுத்து நீங்கள் பேசும்பொழுது இதைப்பற்றி விரிவாகப் பேசுங்கள்.

திரு கோவை செழியன் : பாயின்ட் ஆஃப் கிளாரிபிகேஷன் சார். பேரவைத் தலைவரவர்களே, மாண்புமிகு முஸ்லீம் லீக் கட்சியைச் சேர்ந்த உறுப்பினரவர்கள் பேசும்பொழுது முஸ்லீம் லீக் பிரிவினையை எதிர்க்கும் என்று சொன்னார்கள். எதிர்த்த காரணத்தால்தான் பாகிஸ்தான் பிரிவினை வந்ததா ? அப்பொழுது அந்தப் பிரிவினையை ஆதரித்தார்களா ?

திரு கே. எ. வகாப் : அவர்கள் பழைய விஷயங்களைச் சொல்கிறார்கள். 1947-க்கு முன்னால் இந்த நாட்டில் நடந்துவிட்ட சம்பவம் அது. அதற்குப் பின்னால் ஏற்பட்ட விளைவுகளை இந்த நாடு கண்டு, அனுபவித்து, பாதிக் கப்பட்டவர்கள் இருக்கிறார்கள். ஆகவே, பிரிவினையின் கொடுமைகளை உணர்ந்ததால்தான் சொல்கிறோம், முஸ்லீம் லீக் எந்தக் காரணத்தைக் கொண்டும், எந்தக் காலத்திலும் பிரிவினையை ஆதரிக்காது.

திரு எ. ஆர். மாரிமுத்து : தலைவரவர்களே, மாண்புமிகு முதல மைச்சரவர்கள் திரு பூபேஷ் குப்தா அவர்களுடைய கருத்தைச் சொல்லும் பொழுது அவர்கள் முழு அட்டானமி வேண்டுமென்று குறிப்பிட்டதாகக் குறிப்பிட்டார்கள்.

இன்றைக்கு இந்தச் சபையிலே இராஜமன்னார் குழுவினால் சிபார்சு செய்யப்பட்டு, மத்திய சர்க்காருக்கு எந்தெந்த அதிகாரங்கள் இருக்க வேண்டுமென்றும் அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டுமென்றும், மாநில அரசுக்கு எந்தெந்த அதிகாரங்கள் இருக்க வேண்டுமென்றும் கொடுக்கப்பட்ட தீர்மானத்தைப் படித்துப் பார்த்து அவர்கள் இந்தக் கருத்தைச் சொல்லியிருப்பார்கள் என்று நான் கருதவில்லை. ஆகவே, அவர்கள் அட்டானமி என்று சொல்வதற்கும், நீங்கள் சொல்லுகின்ற அட்டானமிக்கும் நிச்சயமாக வித்தியாசம் இருக்கிறது. உங்களுடைய அட்டானமியில் மத்திய சர்க்கார் எந்த அதிகாரமும் இல்லாத பொம்மை அரசாக இருக்க வேண்டுமென்று சொல்வதை அவர்கள் நிச்சயமாக ஏற்றுக்கொண்டிருப்பார்கள் என்று கருதுவதற்கில்லை. இதைப் படித்துப் பார்த்து அவர்களுடைய விவாதம் நடந்ததாகத் தகவல் இல்லை.

1974 ஏப்ரல் 18]

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : தலைவரவர்களே, 1970-லே பேசியிருக்கிறார்கள். எனவே, இந்தத் தீர்மானத்தைப் படித்துப் பார்த்து பேசுவதற்கு இயலாது என்பதை மிகவும் வருத்தத்தோடு திரு மாரிமுத்து அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். நாங்கள் பூபேஷ் குப்தா போன்ற அறிஞர்கள் பேசியதைப் படித்துப் பார்த்து இந்தத் தீர்மானத்தை உருவாக்கியிருக்கிறோம்.

திரு வா. மை. அப்துல் ஜப்பார் : தலைவரவர்களே, நான் நேற்று முன்தினம் பேசும்பொழுது இரஷ்யா விரோதி நாடு என்று சொல்லவில்லை. நான் இரஷ்யாவின் கொள்கையை எதிர்நோக்குபவன் அல்ல என்றுதான் சொன்னேன். என்னுடைய சித்தாந்தங்களுக்கு ஏற்ப, அரசியல் கொள்கைகளுக்கேற்ப நான் இரஷ்யாவை எதிர்நோக்குபவன் அல்ல என்று சொல்கிறேன். அதன்மூலம் இரஷ்ய நாட்டை விரோதி நாடு என்று சொல்லவில்லை.

* திரு கோப்பூர் திருவேங்கடம் : மாண்புமிகு சட்டப் பேரவைத் தலைவரவர்களே, மாண்புமிகு தமிழக முதலமைச்சர் டாக்டர் கலைஞர் அவர்கள் முன்மொழிந்திருக்கின்ற தீர்மானத்தை வரவேற்று நான் என்னுடைய கருத்துக்களைச் சொல்ல முற்படுகிறேன்.

இரண்டு நாட்களாகப் பேசிய மாண்புமிகு உறுப்பினர்கள் இராஜமன்னர் குழு அறிக்கையின் பல்வேறு கருத்துக்களைப் பற்றியெல்லாம் இங்கே கூறினார்கள். நேற்று பேசிய காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த உறுப்பினர்கள் திரு ஜேம்ஸ் அவர்களும், திரு சுப்பிரமணியம் அவர்களும் இராஜமன்னர் குழு அறிக்கை என்பது ஏதோ திராவிட முன்னேற்றக் கழகம் பிரிவினை நோக்கத்தின் அடிப்படையிலே கொண்டு வந்திருப்பதாக இங்கே குறிப்பிட்டார்கள்.

உண்மையிலேயே திராவிட முன்னேற்றக் கழகம் பிரிவினைக் கொள்கையை விட்டுவிட்டு பல ஆண்டுகளாகியும்கூட இன்றைக்கும் அவர்கள் அப்படிப்பட்ட ஒரு மாயையிலிருந்து தங்களை விடுவித்துக்கொள்ளவில்லை என்பதுதான் நேற்று அவர்கள் பேசிய பேச்சுக்களிலிருந்து தெரிகிறது. பேரறிஞர் அண்ணா அவர்களும், அவருக்குப் பிறகு தமிழ்நாட்டின் முதலமைச்சராக வந்திருக்கின்ற டாக்டர் கலைஞர் அவர்களும் பல்வேறு கூட்டங்களிலும், சட்டமன்றக் கூட்டத் தொடர்களிலேயும் தெளிவாக திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கை மாநில சுயாட்சி பெறுவதேயொழிய, பிரிவினை அல்ல என்பதைத் தெளிவுபடுத்தியிருக்கிறார்கள்.

ஆனால் எதிர்க் கட்சியிலே இருப்பவர்கள் என்ற காரணத்தால் ஏதோ எதிர்த்துப் பேச வேண்டுமென்ற நோக்கத்தின் அடிப்படையிலே பேசியிருப்பதாகத்தான் அவர்கள் நேற்று பேசிய பேச்சுக்களிலிருந்து தெரிகிறது.

## மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[திரு. தோப்பூர் திருவேங்கடம்] [1974 ஏப்ரல் 18

இராஜமன்னர் குழு அறிக்கை இன்று அகில இந்திய அரசியல் வட்டாரங்களிலும் மற்ற மாநிலங்களிலும் ஒரு பெரிய பரபரப்பையும் உத்வேகத்தையும் உருவாக்கியிருக்கிறது என்றால் அது மிகையாகாது. ராஜமன்னர் குழு அறிக்கையைப் பார்த்த நம் பிரதம அமைச்சர் அவர்கள் கூட அந்த அறிக்கை புறக்கணிக்கக் கூடியது என்று சொல்லவில்லை. அது பரிசீலிக்கப்பட வேண்டியது என்று தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள்.

அரசியல் சட்டத்தை இயற்றி இருபது ஆண்டுக் காலத்திற்கு மேலாகியும் அந்த அரசியல் சட்டத்தை வைத்துக்கொண்டிருக்கிறோம். ஆகவே அந்த அரசியல் சட்டத்திற்கு நாம் பல்வேறு திருத்தங்களைச் செய்தால்தான் மாநில அரசுகளுக்குத் தேவையான அதிகாரங்களைப் பெறமுடியும் என்பது இன்று தமிழகத்தில் இருக்கிறவர்கள் மட்டுமல்ல அகில இந்திய அரசியலில் இருக்கிற பல்வேறு மாநிலங்களைச் சேர்ந்த முதல்வர்களும், முன்னாள் முதல்வர்களும் மிகத் தெளிவாக எடுத்துச் சொல்லியிருக்கிற ஒரு கருத்தாகும்.

கேரள காங்கிரசைச் சார்ந்த தலைவர் ஜார்ஜ் என்பவர் மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள். இந்தியாவில் வங்காள தேசங்கள் தோன்றாமலிருக்க மாநிலங்களுக்கு சுயாட்சி வழங்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள்.

அதேபோல் இன்றைக்கு ஆளும் காங்கிரஸ் கட்சியைச் சார்ந்தவரும், முன்னாள் ஆந்திர மாநிலத்தின் முதல்வராகவும் இருந்த திரு பிரம்மானந்த ரெட்டியவர்கள் பேசுகிற நேரத்தில் ஒன்றைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதை இங்கே நான் குறிப்பிட விரும்புகிறேன். "பொருளாதார உயர்வளிக்கத்தான் அதிகாரம் தேவை. மாநில அரசிடம் அதிக அதிகாரம் இருக்குமானால் விரைவாக மக்களை முன்னேற்ற முடியும். அதனால்தான் மத்திய அரசில் சமூக வளர்ச்சி, சுகாதாரம், கல்வி, விவசாயம் போன்ற துறைகளில் மாநிலங்களுக்கு மேலும் உரிமை தேவை என்று நான் கூறுகிறேன். மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் என்றால் அதிக நிதி வசதி என்று பொருள்" என்று திரு பிரம்மானந்த ரெட்டி அவர்கள் மிகத் தெளிவாகக் கூறியிருக்கிறார்கள். மாநிலங்கள் அதிக நிதி வசதி பெறுவதற்காகத்தான் மாநில மக்களுடைய முன்னேற்றத்தைக் கருத்தில்கொண்டுதான் மாநிலச் சுயாட்சியை திராவிட முன்னேற்றக் கழகம் கேட்கிறது என்பதை அவர்கள் எல்லோரும் புரிந்துகொண்டிருக்கிறார்கள்.

ஆனால் அதை நம்முடைய சட்டமன்றத்தில் இருக்கிற எதிர்கட்சி உறுப்பினர்கள் புரிந்து கொள்ளவில்லை என்பதில் நான் வருத்தப்படுகிறேன். கேரள மாநில முதல் அமைச்சர் திரு அச்சுத மேனன் அவர்கள் கூட குறிப்பிட்டிருக்கிறார்கள்.

"The constitution must be suitably altered"

## மாநில சுயாட்சி பற்றியும், இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

1974 ஏப்ரல் 18] [திரு. தோப்பூர் திருவேங்கடம்]

இந்திய அரசியல் சட்டம் தகுந்தாற்போல் திருத்தப்பட வேண்டுமென்று அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆகவே, இந்திய அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டுமென்று பல்வேறு மாநிலங்களின் முன்னாள் முதல்வர்களும் இன்றிருக்கிற முதல்வர்களும் வலியுறுத்திவருகிற ஒரு கருத்துக்கு இன்றைக்கு இந்திய அரசியல் வட்டாரத்தில் நல்ல முறையில் உற்சாகமான முறையில் வரவேற்பு இருக்கிறது என்பதை நான் இந்த நேரத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் ஒரு முறை குறிப்பிடும்போது சொன்னார்கள், மாநில அரசுகள் எல்லாம் கம்பவுண்டர்கள் என்ற நிலையில் இருக்கின்றன. மத்திய அரசு டாக்டர் நிலையில் இருந்து கொண்டு இருக்கிறது. டாக்டர் எந்த மருந்தை கலக்கிக் கொடுக்கும்படியாக கம்பௌண்டரிடம் சொல்கிறார்களோ அந்த மருந்தைத்தான் மாநிலங்கள் என்ற கம்பவுண்டர்கள் மக்களுக்கு மருந்தைக் கலக்கிக்கொடுக்க வேண்டிய நிலையில் இருக்கின்றன, அப்படி மத்திய அரசு டாக்டர் நிலையில் இருந்து கொண்டிருப்பது நல்லதல்ல என்று அண்ணா அவர்கள் மிகத் தெளிவாகப் பல ஆண்டுகளுக்கு முன்பாகவே சொல்லியிருக்கிறார்கள்.

அதேபோல் இன்று மாநிலங்களுக்கு இருக்கிற உரிமைகளை எந்த அளவிற்கு மத்திய அரசு பறிக்கிறது என்பதைப் பார்க்கும்போது, "இங்கிருக்கிற விவசாயிகள் கரும்பைப் பயிரிடுகிறார்கள். பயிரிட்டு கரும்பு ஆலைகளுக்குச் சென்று சர்க்கரையாக மாறியவுடன் அந்த சர்க்கரைக்கு விலை நிர்ணயிப்பது, அதைப் பகிர்ந்தளிப்பது மத்திய அரசின் இடத்தில் இருக்கிறது. அது தேவைதானா என்பதைப் பற்றி இங்கு இன்று நம் தமிழக அரசு கேட்டுக் கொண்டிருக்கிறது.

அதேபோல் வேலூரில் ஒரு கோட்டை இருக்கிறது. அந்தக் கோட்டையில் ஒரு கோவில் இருக்கிறது. அந்தக் கோவிலைப் புதுப்பிக்க வேண்டுமென்றும் அந்தக் கோவிலில் சிலை வைத்து வழிபடவேண்டுமென்றும் நீண்ட நாட்களாக அங்கு இருக்கிற பக்தர்கள் எல்லாம் கேட்டு வருகிறார்கள். அந்தக் கோயிலைப் புதுப்பிக்கிற அதிகாரம் நம் தமிழக அரசின் அறநிலையத் துறை அமைச்சர் அவர்களிடத்தில் இல்லை. அந்த அதிகாரம் மத்திய அரசிடம் இருப்பதால் அது எந்த வகையில் மத்திய அரசைப் பலப்படுத்தியதாகும் என்று கேட்க விரும்புகிறேன்.

கர்நாடக மாநிலத்தினுடைய முன்னாள் முதல்வராக இருந்த திரு. அனுமந்தையா அவர்கள் மிகத் தெளிவாக இந்திய அரசியல் சட்டம் எந்த அடிப்படையில் தீட்டப்பட்டது என்பதைத் சொல்லியிருக்கிறார்கள். "நமது அரசியல் அமைப்புச் சட்டம் இந்திய யூனியனை ஒற்றையாட்சியாக ஆக்கியிருக்கிறது. கூட்டாட்சியை ஏற்படுத்தவில்லை. மத்திய அரசைப் பலமாக ஆக்கவேண்டும் என்கிற கவலையில் அவர்கள் மத்திய அரசிற்கு அதிகமான சட்டம் இயற்றும் அதிகாரங்களையும் நிதி அதிகாரங்களையும் கொடுத்து மாநிலங்களை ஏதோ மாவட்டங்கள்போல் ஆக்கிவிட்டன. இந்தப்

போக்கு மத்திய அரசைப் பலப்படுத்தாது என்று நான் அஞ்சுகிறேன். இந்திய அரசியல் சட்டத்தின் நகலைத் தயாரித்தவர்களுக்கு நான் சொல்லிக்கொள்ள ஆசைபபடுகிறேன. பேரரசுத் தலைமைச் செயலகத்தில் பைல்கள் குவிவதால் மட்டும் மததிய அரசு பலம் பொருந்தியதாக ஆகி விடாது. நான் புரிந்துகொண்டது சரி என்றால் மத்திய அரசின் பலம் பலமான இராணுவததில் இருக்கிறது. பலமான கப்பற்படையில் இருக் கிறது. பலமான விமானப படையில் இருக்கிறது" என்று தெளிவாக திரு. அனுமந்தையா அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

மாநில அரசுக்கும் மத்திய அரசுக்கும் இடையே பல்வேறு பிரச்னைகள் எழுகின்றன. மேறகு வங்க அரசுககும் இந்திய அரசுக்கும் நடநத வழக்கு ஒன்றில் இந்திய உச்சநீதிமனறம் ஒரு மாநிலத்திறகுச் சொநத மான சொத்தை மத்திய அரசு உருவாக்கும் சட்டத்தின் மூலம் அந்த மாநிலத்தின் சொத்தைக் கூட மத்திய அரசு கவர்ந்துகொள்ள முடியும் என்று ஒரு வழக்கு மூலம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

அதேபோல் மீடியம் ஆப் இன்ஸ்ட்ரக்ஷன், பயிற்சி மொழிபற்றிக் கூட மத்திய அரசு தலையிட முடியும் என்று ஒரு வழககில் தீர்ப்பு கூறப்பட் டிருக்கிறது. குஜராத் பல்கலைக்கழகத்திற்கும் கிருஷ்ண ரங்கநாத் முதோல் கர்க்கும் இடையே நடந்த வழக்கு ஒன்றில், அந்த வழக்கில் தீர்ப்பளிக்கப் பட்டபோது அது மத்திய அரசுக்குச் சாதகமாக இருக்கிறது. அதேபோல் மீடியம் ஆப் இன்ஸ்ட்ரக்ஷன், பல்கலைக்கழகங்களில் பயிற்சி மொழியை நிர்ணயிக்கும் அதிகாரம், தரத்தை நிர்ணயிப்பதற்கும் மத்திய அரசுக்கு அதிகாரம் இருக்கிறது என்று அந்த வழக்கில் மிகத் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

ஆகவே, இப்படிப்பட்ட பல்வேறு சம்பவங்கள் மூலம் மாநிலங்களுக்கு இருக்கிற அதிகாரங்களை எல்லாம் மத்திய அரசு கவர்ந்து கொள்ளமுடியும் என்பது இன்று பல்வேறு நீதிமன்றத் தீர்ப்புக்கள் மூலம் நிரூபிக்கப்பட் டிருக்கிறது. ஆகவேதான் அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டிய ஒன்று கும் என்பதை நாம் வலியுறுத்திக்கொண்டு வருகிறோம். இந்திய அரசியல் சட்டத்தை நிறைவேற்றிய அறிஞர் பெருமக்கள் எல்லாம் எந்த நோக்கத்தில் இந்திய அரசியல் சட்டத்தை உருவாக்கினோம் என்பதை மிகத் தெளிவாகச் சொல்கிறார்கள். டாக்டர் பாபு ராஜேந்திர பிரசாத் அவர்கள் எந்த நோக்கத்தில் இந்திய அரசியல் சட்டம் தீட்டப்பட்டது என்பதைப் பற்றிக் குறிப்பிட்டதை இங்கே கூறுவது பொருத்தம் என்று கருதுகிறேன்.

"I do not anticipate that there will be any tendency on the part of the Centre to get more powers than what is necessary for the good administration of the country as a whole."

நான் எதிர்பார்த்ததெல்லாம் மத்திய அரசு அதிக அதிகாரங்களை அபகரித் துக்கொள்ளும் போக்கில் செல்லாது என்று கூறுகிறார். ஆனால் அதற் குத் தேவையான அதிகாரங்களை மட்டும் பெற்று, இந்த நாட்டை நல்ல

முறையில் ஆளும் என்று நான் எதிர்பார்த்தேன், எதிர்பார்த்துத்தான் இந்த அரசியல் சட்டத்தை உருவாக்கினோம் என்று சொல்லியிருக்கிறார்கள். அதேபோல் டாக்டர் அம்பேத்கார் அவர்களும் மிகத் தெளிவாகச் சொல்லி யிருக்கிறார்கள். இந்திய அரசியல் சட்டத்தை உருவாக்கும்போது எந்த நோக்கத்தினுடைய அடிப்படையில் உருவாக்கினோம்.?

" In normal times it is framed to work as a federal form but in times of war, it is so designed as to make it work as though it were a unitary system.''

இந்திய அரசியல் சட்டம் சாதாரண காலங்களில் கூட்டாட்சி முறையில் இயங்கவும், நெருக்கடியான காலங்களில் குறிப்பாக போர்க்காலங்களில் ஒற்றையாட்சி முறையில இயங்கிடவும ஆன சூழ்நிலையில் நாங்கள் அரசியல் சட்டத்தைத் தயாரித்தோம என்று டாக்டர் அம்பேத்கார் அவர்கள தெளி வாகச் சொல்லியிருக்கிறார் அதேபோல் அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள், ''இந்திய தேசத்தில் பொருளாதார நெருக்கடி ஏற்படும்போது இந்திய அரசியல் சட்டம் அதிக அதிகாரங்களைப் பெற்று மத்திய அரசு பலம் பொருந்தியதாக இருக்கவேண்டும் என்ற நோக்கத்தின் அடிப்படையில் இந்திய அரசியல் சட்டத்தை உருவாக்கி னோம்'' என்று எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

ஆகவே, இந்திய அரசியல் சட்டத்தை உருவாக்குகிற நேரத்தில் இருந்த அறிஞர் பெருமக்கள் கூறியது மத்திய அரசு அதிக அதிகாரங்களை அபகரித்துக்கொள்ளும் போக்கில் செல்லாது என்று கருதித்தான் அரசியல் சட்டத்தை உருவாக்கியிருக்கிறார்கள்.

ஆனால் இன்றுள்ள சூழ்நிலையும் போக்கும், மத்திய அரசு அதிக அதிகாரங்களை அபகரித்துக்கொள்கிற போக்கில் மாநிலங்களுக்கு இருக்கிற உரிமைகளைக் கவரும் போக்கில் செல்வதால்தான் அரசியல் சட்டம் திருத்தப் படவேண்டிய ஒன்றாகும் என்பதை இன்று நம் தமிழக அரசு வலியுறுத்திச் சொல்கிறது.

பேரறிஞர் அண்ணா அவர்கள் அன்று சட்ட மேலவையில் பேசும் போது ஒரு முறை குறிப்பிட்டிருக்கிறார்கள். " மைய அரசு இன்று கூறப் படுவதுபோல் இந்தியாவின் இறைமையையும் ஒருமைப்பாட்டையும் நிலை நிறுத்தப் போதுமான அளவிற்கு வலிமையுடையதாக இருக்க வேண்டு மென்று நான் விரும்புகிறேன். இந்தியாவை பாகிஸ்தான் அபாயத்தி லிருந்தோ, சீன பலுச்சிஸ்தான் அபாயத்திலிருந்தோ காப்பதற்கு மைய அரசு இங்கே ஒரு சுகாதாரத் துறையை வைத்திருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. அது எந்த வகையில் இந்தியாவின் இறைமையையும், சுதந்திரத்தையும் வலுவுடையதாக்கும் ? அவர்கள் இங்கே ஒரு கல்வித் துறையை வைத்திருக்க வேண்டுமா ? அங்கே ராணுவத்தினரின் போராடும் திறனை இது எந்த வகையில் அதிகப்படுத்தும் ? என்று ஒரு முறை பேசும்போது மிகத் தெளிவாகப் பேசியிருக்கிறார்கள்.

ஆகவே மாநிலங்களுக்கும் மத்திய அரசுக்கும் இருக்கிற பிரச்னைகள், மூன்று துறைகளில் பிரச்னைகள் இருக்கின்றன. சட்டம் இயற்றுகிற துறையில் இருக்கிறது. நிர்வாகத் துறையில் இருக்கிறது, நிதிப்பங்கிடு கின்ற முறையில், மத்திய அரசுக்கும் மாநில அரசுக்கும் பிரச்னைகள் இருக்கின்றன. அதைத்தான் பழைய காங்கிரஸ் தலைவர்களில் ஒருவரான திரு சாதிக் அலி ஒரு முறை பேசும்போது மத்திய ராஜ்ய சர்க்கார்க ளிடையே தற்போதுள்ள உறவு முறையை ஆக்க ரீதியில் மறு பரிசீலனை செய்ய வேண்டும் என்று வலியுறுத்திச் சொல்லியிருக்கிறார்கள்.

திரு பானர்ஜி என்பவர் மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள்.

"the policy of extreme centralisation depresses and discourages the provincial governments"

மத்திய அரசினிடம் அதிக அதிகாரங்களைக் குவிப்பது மாநிலங்களை பின் தங்கிய நிலையில், பலஹீனமடையச் செய்திருக்கிறது என்று எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

முன்னாள் உச்ச நீதிமன்ற பிரதம நீதிபதியாக இருந்த திரு சுப்பா ராவ் அவர்கள் மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள். "நிதித் துறையைப் பொறுத்த வரை மாநில அரசு நிதி ஆதாரங்களைப் பெருக்கிக் கொள்ளும் விதத்தில் அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டிய ஒன்று என்று எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

இப்படிப் பல்வேறு அறிஞர் பெருமக்கள் கருத்துக்களையெல்லாம் பரி சீலனை செய்த பிறகு அவர்கள் இன்றைக்கு நம்முடைய தமிழக அரசு இந்த இந்திய அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டிய ஒன்றாகும் என்பதை வலியுறுத்திச் சொல்லி, இன்றைக்கு மத்திய அரசின் கவ னத்தை ஈர்க்கின்ற விதத்தில், சட்ட மன்றத்தில் இப்படிப்பட்ட ஒரு அரசியல் சட்டத் திருத்தத்தை மாநிலங்களுக்கு மேலும் அதிகாரங்கள் வேண்டுமென்ற சட்டத் திருத்தத்தை இங்கே கொண்டு வந்திருக் கிறது.

நேற்றைய தினம் பேசிய பல்கிவாலா—இந்திய அரசியல் சட்டத் துறை யில் நிபுணத்துவம் வாய்ந்தவர்—அவர் கூட சொல்லுகிறார், மாநிலங் களுக்கு அதிக அதிகாரங்கள் வேண்டுமென்று. இது எந்த வகையில் உருவாக்கப்பட வேண்டும் என்பதைத்தான் அவரால் சொல்லமுடியவில்லை.

குஜராத்தில் ஒரு பர்டிலைஸர் பிளாண்ட் வேண்டுமென்று கேட்டார்கள். அங்கே மத்திய அரசாங்கம் அவர்களுக்கு பர்டிலைஸர் பிளாண்ட் கொடுக்க வில்லை. இப்படிப்பட்ட நிலையில் இருந்தால் மாநிலங்கள் எப்படி பொரு ளாதாரத் துறையிலே முன்னேற்றமடையும் என்று நேற்றைய தினம் பல்கிவாலா அவர்கள் பேசும்போது மிகத் தெளிவாகக் குறிப்பிட்டிருக் கிறார்கள்.

**1974 ஏப்ரல் 18] [திரு. தோப்பூர் திருவேங்கடம்]**

ஆகையினால் இன்றைக்கு அகில இந்திய அரசியல் வட்டாரத்தில் அத்துணை அறிஞர்களும் மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும், மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்களிருந்தால் தான் மாநில மக்கள் வாழ்வை முன்னேறச் செய்ய முடியும் என்பதை ஒத்துக்கொண்டிருக்கிறார்கள்.

இதைத்தான் அன்றைக்கே கூட நம்முடைய அண்ணா அவர்களும், நம்முடைய கலைஞர் அவர்களும், நம் திராவிட முன்னேற்றக் கழகமும் மிகத் தெளிவாகச் சொன்னது. ஏதோ சமீபத்தில் ஏற்பட்ட தோல்விகளின் காரணத்தாலே தான் இந்த மாநில சுயாட்சி கோரிக்கையை வைக்க வேண்டுமென்ற எண்ணத்தின் அடிப்படையில் இன்றைக்கு இந்த மாநில சுயாட்சி பற்றி தமிழகச் சட்டமன்றத்தில் நாம் முன்மொழிந்திருக்கிறோம் என்று கூட எதிர்க்கட்சியிலிருக்கின்றவர்கள் சொன்னார்கள்.

நாம் 1967-ம் ஆண்டு திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய தேர்தல் அறிக்கையில் கூட மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் வேண்டுமென்ற முறையில் திராவிட முன்னேற்றக் கழகம் பாடுபடும் என்பதை மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறோம். ஆகையினால் திடீரென்று ஏதோ ஒரு கருத்தை வலியுறுத்த வேண்டுமென்ற நோக்கத்தோடு திராவிட முன்னேற்றக் கழகம் சொல்லவில்லை. இது நீண்ட நாட்களாக இருந்து வருகின்ற ஒரு கோரிக்கையாகும்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் பல ஆண்டு காலமாக இந்த மாநிலத்திற்கு அதிக அதிகாரங்கள் வேண்டுமென்ற கோரிக்கையை எடுத்துச் சொல்லி வருகின்றார்கள்.

சைமன் கமிஷன் ஒரு அறிக்கையில் சொல்லுகிறது. "ஒரு நாட்டின் பூகோளப் பரப்பளவு, மக்கள் தொகை ஆகியவற்றிற்கும் அந்நாட்டில் வெற்றிகரமாகச் செயல்படக் கூடிய அரசியல் அமைப்புச் சட்டத்திற்கும் நிச்சயம் தொடர்பு இருக்கிறது. மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகிற பிரதிநிதிகள் ஆட்சிப் பொறுப்பை மேற்கொள்கிற முறை செயல் வடிவு பெற வேண்டுமானால் போதுமான அளவுள்ள அரசியல் பரப்பளவில் தான் அதை பிரயோகித்துத் தீரவேண்டும். பாராளுமன்ற ஜனநாயகம் தேர்ந்தெடுக்கிறவருக்கும், தேர்ந்தெடுக்கப்படுகிறவருக்கும் இடையே நெருங்கிய உறவு அவசியமானது என்கிற அடிப்படையில் தான் வெற்றியடைந்திருக்கிறது" என்பதை மிகத் தெளிவுபட சைமன் கமிஷன் அன்றைக்கே சொல்லியிருக்கிறது.

அந்த முறையில் பார்க்கும்போது அரசியல் சட்டத்திற்கும், தமிழகத்திற்கும் தொடர்பு இருக்கிற முறையில் உருவாக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு தான் இன்றைக்கு அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டுமென்பதை நம்முடைய தமிழக அரசு வலியுறுத்திக் கொண்டிருக்கிறது.

மத்திய அரசாங்கம் அதைக் கேளாக் காதினராய் அல்லது இதைப் பற்றி யோசிக்க வேண்டாமென்று எண்ணுகின்ற சிந்தனையில் இருந்தால் நிச்சயம் வருங்காலம் அவர்களுக்குப் பதில் சொல்லியேத் தீரும்.

அனதத்தான் அண்ணா அவர்கள் ஒரு முறை சொன்னார்கள். "மக்கள் என்ற சொல்லின் பொருளிலே உள்ள ஆழமும், செறிவும் ஒருவருக்கும் முழுவதும் புலனாகாதது மட்டுமல்ல. அந்தப் பொருள் வளர்ந்த வண்ண மிருக்கிறது. நாட்டின் நிலைமைகளுக்கேற்ப, காலத்தின் தன்மைக்கேற்ப, இதன் பொருள் வளருகிறது, மிளிருகிறது. அது போல இந்தப் பொருள் நாட்டு நிலைமையையும், காலத்தின் போக்கையும் மாற்றி விடவும் செய்கின்றது" என்பதைக் கூறிக்கொண்டு, என் உரையை முடிக்கின்றேன். வணக்கம்.

* திரு. கா. வேழவேந்தன் : மாண்புமிகு சட்டப் பேரவைத் தலைவர் அவர்களே, கடந்த சில நாட்களாக இந்த மாமன்றத்தில் விவாதிக்கப் படுகின்ற, தமிழக முதலமைச்சரால் கொண்டு வரப்பட்டிருக்கின்ற, மாநில சுயாட்சித் தீர்மானத்தை நான் நெஞ்சார வரவேற்று, அதற்கான காரணங் களை இங்கே சொல்ல வேண்டுமென்று விரும்புகிறேன்.

இன்றைய தினம் மாநிலத்தில் சுயாட்சி, மத்தியில் கூட்டாட்சி என்றும், தன்னாட்சி பெற்ற உரிமை மாநிலங்களுக்கு வழங்கப்பட வேண்டு மென்றும் வற்புறுத்தப்படுவது எதிர்காலத்தில் இந்த நாடு உண்மை யிலே முன்னேற வேண்டுமென்று நினைக்கின்ற எல்லா உள்ளங்களும் வரவேற்கத்தக்க ஒரு சிறந்த கொள்கையாக இருக்கிறது. இங்கே தீர்மானத்தில் "தன்னாட்சி" என்று கூறப்பட்டிருந்தாலும், இங்கே எதிர்க்கட்சியிலே இந்தத் தீர்மானத்தை எதிர்க்கின்றவர்கள் "தனி ஆட்சி" என்று குழப்பிக் கொண்டிருக்கிற காட்சிகளை நாம் பார்த்துக் கொண்டிருக் கிறோம். "உறவுக்குக் கை கொடுப்போம், உரிமைக்குக் குரல் கொடுப் போம்" என்கின்ற குரல் இந்த இந்திய நாடு ஒன்றாக இருக்க வேண்டு மென்பதற்காகவும், அதே நேரத்தில் நம்முடைய உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டுமென்பதற்காகவும் சொல்லப்படுகின்ற முக்கியமான குரல் என்பதை இங்கே எடுத்துச்சொல்ல வேண்டியவர்களாக இருக்கிறோம்.

இந்தியா சுதந்திரமடைந்து, நாம் வெள்ளி விழாவையும் கொண்டாடி முடித்து விட்டோம். இத்தனை ஆண்டுகளுக்குப் பின்னால் உலக அரங்கில் இந்தியாவும், இந்தியாவில் இருக்கிற 21 மாநிலங்களும் இருக்கிற நிலைமை களைப் பார்க்கும்போது அடிப்படையிலே மிகப் பெரிய மாற்றத்தை இந்திய அரசியல் சட்டத்தை திருத்துவதன் மூலமாக இன்றைக்குக் கொண்டு வர வேண்டுமென்பதை எண்ணுபவர்களெல்லாம் நிச்சயம் ஒப்புக்கொள்ளு கிறார்கள்.

இன்றைக்கு இந்தியாவினுடைய பகுதிகளாக இருக்கிற மாநிலங்களில் அவைகளுக்கு முழுக்க இருக்கிற அதிகாரங்களை வைத்துக் கொண்டே பயன்படுத்தவில்லை என்ற கருத்தை இங்கே எனக்கு முன் எடுத்துச் சொன்னார்கள். நமது மனச்சாட்சிப்படி அவர்கள் தங்கள் உள்ளங்களைப் பார்த்துக் கேட்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

1974 ஏப்ரல் 18] [திரு. கா. வேழவேந்தன்]

ஒவ்வொரு மாநிலத்திலும் இன்றைய தினம் வேலையில்லாத் திண்டாட்டம் மிக அதிகமாகத் தாண்டவமாடுகிறது. உதாரணமாக தமிழகத்திலேகூட பல்வேறு வாலிபர்கள் வேலையில்லாமல் மிகப் பெரிய நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. அதிகாரங்கள் தேவையில்லை என்று சொல்லுகிறீர்களே, அப்படிச் சொல்லுகிறவர்கள் தங்களுக்குத் தானே ஒரு முறை கேட்டுக் கொள்ள வேண்டும். தமிழ் நாட்டிலே வேலையில்லாத் திண்டாட்டம் இருக்க தமிழ்நாடு அரசு தான் காரணமா ? எண்ணிப் பார்க்க வேண்டாமா ?

இன்றைக்கு பூமிக்கு மடியில் நம் மண் அன்னை ஏராளமான கனிவளங்களைத் தன்னுடைய மடியில் ஒளித்து வைத்துக் கொண்டிருக்கிறாள். அப்படி சேலத்தில் இரும்பு பதுங்கிக் கிடக்கிறது. நெய்வேலியில் ஏராளமான நிலக்கரி இன்னும் வெட்டப்படாமல் இருக்கிறது. காவிரி ஆற்றில் ஏராளமான எண்ணெய் வகைகள் இருக்கின்றன என்று கண்டு பிடிக்கப்பட்டடு, அவையெல்லாம் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்படாமலிருக்கின்றன.

இன்றைக்கு நமக்கு இருக்கிற அதிகாரங்களை வைத்துக் கொண்டு இவற்றையெல்லாம் தொட முடியுமா என்றால், நிச்சயமாக முடியாது. டெல்லியிலேயிருந்து தாக்கீது வந்தால் தான் அல்லது டெல்லியில் இருப்பவர்கள் கருணை வைக்தால்தான் அவற்றையெல்லாம் எடுக்கமுடியம என்பதையும், தொழிற்சாலைகளை உருவாக்க முடியும் என்பதையும் பார்க்கும்போது, எந்த நாள் அவைகள் எடுக்கப்படும், எப்போழுது வேலையில்லாத் திண்டாட்டம் தீர்க்கப்படும் என்பதை அடிப்படையிலே எண்ணிப் பார்க்க வேண்டுமென்பதைத்தான் நான் இங்கே சொல்ல விரும்புகிறேன்.

இன்றைய தினம் இருக்கிற அதிகாரங்கள் போதாதா என்று நம்மைப் பார்த்து எதிர்க்கட்சியிலே இருப்பவர்கள் கேட்கிறார்கள். என்ன அதிகாரம் இருக்கிறது ? தமிழ் நாட்டிலே ஒரு தெருவின் பெயரை மாற்ற வேண்டுமென்றால் கூட டெல்லி சம்மதித்தால் தான் இன்றைக்கு மாற்ற முடியும். உதாரணத்திற்குச் சொல்லுகிறேன். ஜார்ஜ் டவுன், ஜார்ஜ் டவுன் என்று சென்னை மாநகரத்தில், இன்றைய தினம் பழைய அடிமை முறிச் சீட்டை ஞாபகப் படுத்துகின்ற முறையில் தமிழகத்தின் மையமான பகுதியில், தலை நகரத்தில் ஒரு முக்கியமான இடத்தில் அந்தப் பகுதியிருக்கிறது. அந்த ஜார்ஜ் டவுன் பகுதியைக் கப்பல் ஓட்டிய தமிழன் வ.உ.சி. யின் பெயரை வைத்து அழைக்க வேண்டும் என்று தமிழக முதலமைச்சர் கலைஞர் அவர்களும், இந்த அமைச்சர் அவையும் விரும்பி அந்தத் தீர்மானத்தை அனுப்பியபோது, மத்திய அரசாங்கம் ஒரு தமிழ்த் தலைவன் பெயரை வைக்கக் கூடாது என்று ஈவு இரக்கமில்லாமல், இதனால் ரீஜனலிஸ உணர்ச்சி உண்டாகும், ஆகவே இதை வைக்க மாட்டோம் என்று சொல்லியிருக்கிறது.

இந்த உணர்ச்சியைப் பார்க்கும்போது தான் இந்த நாட்டிலே பிறந்த, இந்த நாட்டிற்குப் பெருமை தேடித் தந்த, விடுதலைப் போரில் தன்னுடைய பங்கைச் செலுத்திய ஒரு தமிழன் பெயரை ஒரு பகுதிக்கு வைக்க முடியாது என்று சொல்வதைப் பார்க்கும்போது என்ன அதிகாரம் தமிழ் நாட்டிற்குக் கிடைத்திருக்கிறது என்பதைத் தான் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

அது மட்டுமல்ல, நம் தொழிற்சாலைகளைத் துவங்குவது பற்றி சொன்னேன். இன்றைய தினம் அடிப்படையிலே எந்தத் தொழிலைத் துவங்க வேண்டுமானாலும், ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் இருக்கிற டெல்லியிலிருந்து தான் நாம் அனுமதி பெற்ற பின்னால் இங்கே துவங்க முடியும் என்ற சூழ்நிலை இருப்பதால், தொழிற்சாலைகள் துவங்க முடிகிறதில்லை.

இன்றைக்கு எத்தனையோ நூற்றுக்கணக்கான விண்ணப்பங்கள் டெல்லியில் தேங்கிக் கிடக்கின்றன என்பதை நம் தொழில் அமைச்சர் பட்டியல் போட்டு காட்டிக் கொண்டேயிருக்கிறார்கள். ஆக, நம்முடைய நாட்டில் நம்முடைய மூலதனத்தை வைத்து நம்முடைய கனி வளங்களைப் பயன்படுத்தி, இங்கே இருக்கிற உழைப்பை வைத்துக் கொண்டு, நாம் பாடுபட வேண்டுமானால் அதற்கான அனுமதியை நாம் டெல்லியிடத்தில் பெற வேண்டியவர்களாக இருக்கிறோம் என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

(முற்பகல் 10-00)

இன்னும் எந்த அளவுக்கு நமக்கு இருக்கிற அதிகாரங்களில் டில்லியின் தலையீடு இருக்கிறது என்பதற்கு இன்னும் உதாரணங்களைச் சொல்லுகிறேன். ஒரு தேசிய நெடுஞ்சாலை தமிழ் நாட்டில் இருந்து—அந்தச் சாலையின் வடக்குப் புறத்தில் ஒரு ஊர்ப் பகுதியும், தெற்குப் புறத்தில் இன்னொரு ஊர்ப்பகுதியும் இருந்து, அங்கிருக்கும் ஊராட்சி மன்றத் தலைவர் வடக்கிலே இருப்பவருக்குத் தண்ணீர் கொடுத்து விட்டு தெற்கிலே இருக்கும் ஊர்ப்பகுதிக்குத் தண்ணீர் கொடுக்க வேண்டுமென்று சொன்னால் நெடுஞ்சாலையின் குறுக்கே ஒரு குழாய் புதைக்கப்பட வேண்டும்.

அந்தப் பணி ஒரு மணி நேரத்தில் முடிந்து விடக்கூடியது. அதற்குத் தமிழ்நாடு அரசு அதிகாரம் பெற்றிருக்கிறதா என்றால் இல்லை. ஒரு மணி நேரத்தில் முடிந்து விடக்கூடிய அந்த வேலைக்கு ஃபைலை இங்கே ஆரம்பித்து, டில்லிக்கு எழுதி, டில்லி தேவதைகள் அனுமதி வழங்க வேண்டும். அதற்குப் பின்னால்தான் தண்ணீர் வழங்கும் சூழ்நிலை இருக்கிறது. இது ஜீவாதார உரிமையைப் பாதிக்கவில்லையா? குடி தண்ணீரை ஒரு பகுதியிலிருந்து இன்னொரு பகுதிக்குக் கொண்டு போவதற்குக் கூட குறுக்கே அரசியல் சட்டம் எவ்வளவு எதிர்ப்பாக இருக்கிறது என்ற காட்சியை நாம் காண்கிறோம்.

முதல்வர் அவர்கள் அருமையான உவமையைச் சொல்லியிருக்கிறார்கள். அதைப் பற்றி ஒருவர் கூட சுட்டிக்காட்டவில்லை. சிறையிலிருந்து தந்தை வெளியே வருகிறான். அப்படி வெளியே வருகிற

போது அன்பு மகனைக் கட்டித் தழுவ நினைக்கிறன். ஆனால் அவனுடைய கைகளில் விலங்கு பூட்டப்பட்டிருக்கும் காரணத்தால் கட்டித் தழுவ முடியவில்லை. எந்தக் குறிக்கோளுக்காக வெளியே வந்தானே அதை நிறைவேற்ற முடியாது இருக்கிறன். இந்த அருமையான உவமையைச் சொல்லியிருக்கிறார்கள். இந்த வாதத்தை எல்லாம் மறுப்பார்களோ என்று எதிர்பார்த்தேன். ஆனால் அவர்கள் பொதுக் கூட்டங்களில் என்ன பேசிக் கொண்டிருக்கிறார்களோ அவற்றையே தான் இங்கும் எடுத்துச் சொன்னார்களே தவிர, உருப்படியாக எதிர்க்க வேண்டிய காரணங்களைச் சொல்லவில்லை.

இந்தியா என்பது ஒரு பெரிய துணைக் கண்டமாக, மிகப் பெரிய நாடாக, கூட்டாட்சித் தத்துவத்தில் இயங்கிக் கொண்டிருக்கிறது. மாநில சுயாட்சி பிரிவினை அல்ல என்று திட்ட வட்டமாகச் சொல்லுகிறோம் என்று எடுத்துச் சொன்னார்கள். ஆனால் நாம் விட்டாலும் கூட எதிர்த் தரப்பில் உள்ளவர்கள் விடுவதாக இல்லையென்ற முறையில் பேசிக் கொண்டிருக்கிறார்கள். சிறிது நேரத்திற்கு முன்னால் பேசிய திரு. கே. டி. கே. அவர்கள் கூட, இது பிரிவினை லட்சியமாகத் தான் இருக்க முடியும், முடிவாக அதுதான் லட்சியமாக இருக்க முடியும் என்ற கருத்தைத் திருப்பித் திருப்பி எடுத்துச் சொன்னார்கள்.

முதல்வர் அவர்கள் சில மாதங்களுக்கு முன்னால் ஒரு அருமையான உவமையைச் சொல்லியிருக்கிறார்கள். இந்தியா என்பது ஒரு ஆலமரம். அந்த ஆல மரத்திலிருந்து பல்வேறு விழுதுகள் மாநில உரிமைகளாக இருக்கின்றன. ஒரு ஆல மரத்தில் பல விழுதுகள் தோன்றுவதால் ஆலமரம் பலவீனப்படுமா ? இன்றைக்கு உரிமைகள் வழங்கப்பட்டு மாநிலங்கள் வெகு வேகமாக முன்னேற வேண்டுமென்று கூறுவது பிரிவினைக் கூற்றாகுமா என்று தெளிவாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

யார் பேசினாலும் பரவாயில்லை, நம்முடைய வலது கம்யூனிஸ்ட் கட்சி நண்பர்கள்; இந்திய கம்யூனிஸ்ட் கட்சி நண்பர்கள் இரண்டு காரணங்களுக்காக இந்தத் தீர்மானத்தை ஆதரிப்பார்கள் என்று எதிர்பார்த்தேன். இந்தப் பேதை நெஞ்சம் ஏமாந்து போய்விட்டது. ஆயினும் அந்த இரண்டு காரணங்களைக் கூறாமல் இருக்க முடியவில்லை. முதல் காரணம் இன்றைக்கு நம்முடைய தமிழ்நாடு உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெற்று மற்ற மாநிலங்களுக்கு வழங்கிக் கொண்டிருக்கிறது. இன்னும் வேடிக்கை என்னவென்றால் பக்கத்தில் இருக்கும் குருவாயூரப்பன் கோயிலில் மணி அடிக்க வேண்டுமென்றால் இங்கிருந்து அரிசி அனுப்பிக் கொண்டிருந்தோம். அந்த அளவுக்கு கேரளத்திற்கு அரிசியைத் தரும் பெருமையைப் பெற்றிருந்தோம். ஆனால் இந்திய அரசியல் சட்டம், டில்லியில் இருப்பவர்கள் அதிகார வெறி அதற்குக் குறுக்கே நின்றது. நேரடியாக அரிசியை அனுப்பக்கூடாது என்று சொன்னார்கள். உடனே, கேரள அமைச்சர்கள் கடுமையான எதிர்ப்பைத் தெரிவித்தார்கள். அங்கு எதிர்ப்புத் தெரிவித்து விட்டு இன்றையதினம் இந்தத் தீர்மானத்தை ஆதரிக்காமல் இருப்பதைப் பார்க்கும்போது வருத்தமாக இருக்கிறது.

[திரு. கா. வேழவேந்தன்] [1974 ஏப்ரல் 18

டில்லியிலிருந்த கேரள மாளிகையில் அவர்கள் அலுவலகத்திற்குக் கொஞ்சம் பயன்படுத்திக் கொண்டார்கள் என்பதற்காக கேரள முதல்வருக்கு டில்லி அரசாங்கம் அபராதம் விதித்த காட்சியைப் பார்த்தோம். ஒரு மாநில முதல்வருக்கு வேலைக்காரனுக்கு அபராதம் விதிப்பதுபோல் விதிப்பதைப் பார்க்கும்போது இன்றைக்கு இருக்கும் அரசியல் சட்டத்தின் மூலமாகப் பழி வாங்குவதைப் பார்க்கும்போது இந்த மிக மோசமான நிலை மாற்றப்பட வேண்டாமா?

இன்றைக்கு மத்திய அரசோடு சேர்ந்திருப்பதால் லாபம் இல்லையா என்று கேட்டார்கள். நான் ஒரு புள்ளி விவரத்தை இங்கு சொல்ல விரும்புகிறேன். மத்திய அரசாங்கம் மாநிலங்களுக்குக் கடன் கொடுக்கிறது. எந்த அளவுக்குக் கடன் தொகை ஏறியிருக்கிறது என்று பார்க்க வேண்டும். சுதந்திரம் அடைந்த நேரத்தில் எல்லா மாநிலங்களும் சேர்ந்து மத்திய அரசுக்குக் கொடுக்க வேண்டிய கடன் தொகை 44 கோடி ரூபாய்தான். இன்றைக்கு டில்லி அரசாங்கம் பெரிய மார்வாடியைப் போல் எவ்வளவு பெரிய தொகையைக் கடனாகக் கொடுத்திருக்கிறது என்று பார்க்க வேண்டும். 1973–74-ல் அந்தக் கடன் தொகை 8,536 கோடி ரூபாய். 8,536 கோடி ரூபாயை மத்திய அரசு 21 மாநிலங்களுக்கு வழங்கியுள்ளது. தன் கையிலிருந்து அதை வழங்குகிறதா என்றால் இல்லை. உலக வங்கியிலிருந்து கடன் வாங்கி, அரை வட்டி, முக்கால் வட்டிக்குக் கடன் வாங்கி, மாநில அரசுகளுக்குத் தயவு தாட்சண்யத்தோடு தருகிறதா என்றால் இல்லை. ஆறு சதவிகிதம் முதல் அதற்கு மேலும் வட்டி வாங்கிக்கொள்கிறது. இப்படி மத்திய அரசு மார்வாடித் தனத்தோடு நடந்து கொள்கிறது. இரக்க உணர்வோடு நடந்து கொள்ளவில்லை என்பதை மட்டும் இந்த நேரத்தில் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

டாக்டர் அம்பேத்கார் அவர்கள் ஒரு கருத்தைச் சொன்னார்கள். "மாநிலங்களை எல்லாம் இப்படி அடிபணிய வைத்திருப்பது முரட்டு மிருகங்களை எல்லாம் ஒரே ஒரு கயிற்றில் கட்டி கொட்டடியில் போட்டிருப்பது தான்; இது காலம் முழுவதும் நடக்காது" என்ற கருத்தைச் சொன்னார்கள்.

இந்தியா என்ற மிகப் பெரிய வயலில் 21 மாநிலங்கள் பாத்திகளாக இருக்கின்றன. டில்லியிலிருந்து மடை திறக்கப்படுகிறது. எந்தெந்தப் பாத்திக்குத் தண்ணீர் போகின்றது என்று தெரியவில்லை. நாங்கள் வரப்பு இருக்க வேண்டுமென்று சொல்லுகிறோம். இந்தியா என்ற பலம் வாய்ந்த நாடும் இருக்கும், அந்த எல்லையும் இருக்கும். மாநிலங்கள் பாத்திகளாக இருக்கும். மடைகளைத் திறக்கும் அதிகாரம் மாநில முதல்வர்களுக்கும் கொடுக்கப்படும். பாத்திகளும் இருக்கும், வரப்பும் இருக்கும். எல்லாப் பாத்திகளுக்கும் தண்ணீர் போகும். அதுதான் மாநில சுயாட்சியின் அடிப்படைக் கொள்கை. இந்தக் கீதம் நாடெங்கும் ஒலிக்க ஆரம்பித்து விட்டது என்ற கருத்தைத் தெரியப்படுத்தி அமைகிறேன். வணக்கம்.

திரு. தி. பொன்னுமலை: ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர் சார்.

நேற்றையதினம் துணைத் தலைவர் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அவர்களை அறிமுகப்படுத்தும் வகையில் இன்றைக்கு அவர்களுக்கு அதிக நேரம் வாய்ப்பளித்தால் நலமாக இருக்குமென்று தெரிவித்துக்கொள் கிறேன்.

திரு. மணலி சி. கந்தசாமி: தலைவர் அவர்களே, மாண்புமிகு முதல்வர் அவர்களால் பிரேரேபிக்கப்பட்ட, இந்திய அரசியல் சட்டத்திலே அடிப்படையான திருத்தங்கள் வேண்டுமென்று சொல்லக்கூடிய தீர் மானத்தை உணர்வு பூர்வமாக ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

இந்தத் தீர்மானத்திற்கு ஒரு திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அரசியல் சட்டத்திலே எந்தத் திருத்தமும் தேவையில்லை என்ற அடிப் படையில் இந்தத் திருத்தம் அமைந்திருக்கிறது. மதிப்பு மிக்க நண்பர் கே.டி.கே. அவர்களும் திருத்தம் கொடுத்திருக்கிறார்கள். ஆனால் பேசுகிற காலத்தில் சில மாற்றங்கள் தேவை என்று ஒத்துக்கொண்டு பேசும்போது எந்தத் திருத்தமும் தேவையில்லை என்று சொல்லுவது பொருத்தமானது அல்ல என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இந்திய கம்யூனிஸ்டு கட்சி அதிகப்படியான அதிகாரங்கள் மாநிலங் களுக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்பதிலே அழுத்தந் திருத்தமான கருத்துக் கொண்டிருந்தது. அந்த மாற்றங்களைச் செய்ய இந்திய அரசியல் சட்டத்தில் திருத்தம் செய்துதான் தீரவேண்டுமென்ற அடிப் படையில் பார்க்கும்போது புனிதமான அரசியல் சட்டத்தைத் திருத்தக் கூடாது என்று சொல்லக்கூடிய வாதமானது சரியானது அல்ல என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

காங்கிரஸ் நண்பர்களும் இந்தத் திருத்தத்தில் கையெழுத்திட்டிருக் கிறார்கள். அவர்களும் யோசித்துப் பார்க்க வேண்டும். இந்த இந்திய அரசியல் சட்டத்தை வைத்துக்கொண்டு வருங்கால வளர்ச்சியை ஏற்படுத்தி விட முடியாது. இதைக் கட்சிக் கண்ணோட்டத்தை விட்டு சற்றுத் துல்லியமாகப் பார்க்க வேண்டுமென்று பணிவோடு வேண்டிக் கொள் கிறேன்.

இன்றையதினம் இந்தத் தீர்மானத்தைப் பிரேரேபிக்கிற நேரத்தில் என்னுடைய கருத்து—இது திராவிட முன்னேற்றக் கழகத்தின் தீர்மானம் அல்ல. இதை திராவிட முன்னேற்றக் கழக முதலமைச்சர் அவர்களால் பிரேரேபிக்கப்பட்டு இருக்கும் தீர்மானமாகக் கருதவில்லை. இதை ஒரு நல்ல முற்போக்கான, இப்போது இருக்கும் காலகட்டத்தில், தேசிய பாதையில் செல்லும் ஒரு தீர்மானமாகக் கருதுகிறேன். இது பல

மாநிலங்களுக்கும் பொருந்தும். இந்த நாட்டின் ஒருமைப்பாட்டைப் பாதுகாக்க நிச்சயமாக இது உதவும் என்று அழுத்தம் திருத்தமாக நான் கூற விரும்புகிறேன்.

ஒரு பலமான மத்திய சர்க்கார் வேண்டும். யாரும் வேண்டாம் என்று சொல்லவில்லை. பலம் என்று சொல்கிற நேரத்தில் தேகத்தில் இருக்கும் எல்லா உறுப்புகளும் பங்கெடுக்கும் வகையில் இருக்க வேண்டும். அதேபோல் மத்திய அரசாங்கமும் எல்லா மாநிலத்தையும் நல்ல வகையில் இயங்கச் செய்யும் விதத்தில் இருக்க வேண்டும். பாரபட்சம் இல்லாத வகையில், அவைகள் நன்கு செயல்படுவதற்கு வாய்ப்புகள் அளிக்க வேண்டும். எல்லோரும் சுதந்திரமாக இருக்க வேண்டும். எல்லோருக்கும் சம உரிமை இருக்க வேண்டும் என்பதை உணர்வில் கொள்ள வேண்டும். இந்தக் கருத்தோடு பார்த்தால் நிச்சயமாக இன்று இருக்கும் மத்திய மாநில உறவு நிச்சயமாக அதை ஊர்ஜிதம் செய்யும் வகையில் இல்லை என்று இருதய சுத்தியாக யாரும் சொல்லமுடியும்.

நாட்டின் வரலாற்றையெல்லாம் சொன்னார்கள். நானும் காங்கிரசில் இருந்திருக்கிறேன். அவர்கள் தான் சுதந்திரம் வாங்குவதற்குக் காரணம் என்று சொல்லமுடியாது. இந்த தேசத்திலுள்ள பொதுமக்களின் போராட்டத்தால் கிடைத்தது தான் இந்தச் சுதந்திரம். அந்த இயக்கத்திற்குத் தலைமை தாங்கிய ஸ்தாபனமாக வேண்டுமானால் காங்கிரஸ் இருநது இருக்கலாம். சுதந்திரம் என்பது இந்த நாட்டிலுள்ள எல்லோருக்கும் சொந்தம். சுதந்திரம் பெற்று 20, 25 ஆண்டுகள் ஆன பிறகும் நாங்கள்தான் அதற்குப் பொறுப்பு என்று சொல்லிக்கொண்டிருப்பது தவறான பாதையில் கொண்டு போய்விடும்.

சுதந்திரப் போராட்டத்தைப் பற்றி என் கருத்தைச் சொல்ல விரும்புகிறேன். எனக்கு எப்போதுமே அந்த விஷயத்தில் ஒரு அழுத்தமான கருத்து உண்டு. மகாத்மா காந்தி அவர்கள் இந்த தேசத்தின் தந்தை, பெரிய தியாகி என்பதில் ஆட்சேபனை இல்லை. அவர் செய்த தியாகம், அவர் செய்த தொண்டு மிகப் பெரியது.

ஆனால் அவர்கள் எந்தவிதப் போராட்டமும் இல்லாமல் அதிகார மாற்றம் ஏற்படும்படி செய்தார்கள். அதுதான் நாட்டிற்கு தலைவலியாக இருக்கிறது. சென்ற 30 ஆண்டு காலமாக சரித்திரம் இதை நிரூபித்துக் காட்டியிருக்கிறது. போராட்டத்தில் விளைந்த சுதந்திரமாக இருந்திருந்தால் இன்றைக்கு இதுபோன்ற பிரச்னைகள் வந்திருக்காது. போராட்டத்தின் காரணமாக அரசியல் நிர்ணய சபை அமைக்கப்பட்டு இருந்தால் இன்று இந்தத் திருத்தம் கொண்டு வந்திருக்க வேண்டிய அவசியம் வந்திருக்காது. குந்தினால்போல் உட்கார்ந்து இந்த நாட்டிற்கு சுதந்திரம் வந்துவிட்ட காரணத்தால், இந்த நாட்டின் பெரு முதலாளிகளின் ஏஜெண்டாக இருந்து கொண்டு காங்கிரஸ் கட்சி அதில் பங்கெடுத்துக்கொண்டு, அதனுள்ளே

இருந்த கம்யூனிஸ்ட்களையும் காலப்போக்கில் வெளியேற்றிவிட்டு, முதலாளித்துவத்தை வளர்க்கும் அடிப்படையில் இந்த அரசியல் சட்டத்தைக் கொண்டுவந்து விட்டார்கள்.

இன்று இருக்கும் அரசியல் சட்டம் பெருமுதலாளிகளைப் பாதுகாக்கக் கூடிய சட்டம். ஏகபோக முதலாளிகளைக் காக்க வேண்டுமென்ற அஸ்திவாரத்தில் எழுந்த அரசியல் சட்டம் என்று நான் திட்டவட்டமாகக் கருதுகிறேன்.. இது தான் எங்களுடைய கண்ணோட்டம்.

இப்போதுதான் நான் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து வெளியேறி வந்திருக்கிறேன். இந்திய கம்யூனிஸ்ட் கட்சி பல வருஷங்களாகச் சொல்லிக்கொண்டு வந்திருக்கிறது. இந்த சர்க்கார், இந்திய சர்க்கார், இந்தியப் பெரு முதலாளிகளைக் காக்கும் சர்க்கார், அவர்களுக்கு மார்க்கெட் தேடிக் கொடுக்கும் சர்க்கார், அவர்கள் அதிக லாபத்தை அடைய பாதுகாப்புக் கொடுக்கும் சர்க்கார். அவர்களுக்குத் தகுந்த முறையில் அரசியல் அமைப்பை இந்த நாட்டில் ஏற்படுத்திய சர்க்கார் என்பது எங்கள் அரசியல் கண்ணோட்டம். இந்த அரசியல் சட்டம் அதற்குத்தான் வழிகோலுகிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. பண்டித ஜவஹர் லால் நேரு அவர்களே ஒரு முறை சொன்னார்கள். காலப்போக்கில் மாநில சுயாட்சி பெறுவதை யாரும் தடுக்க முடியாது, தவிர்க்க முடியாது. அவரால் அன்றைக்கு அந்த நிலைமையைப் புரிந்துகொள்ள முடிந்தது. இதைக் காங்கிரஸ்காரர்கள் சிந்திக்க வேண்டும். அரசியல் சட்டத்தைத் தொடாதே என்ற போக்கு நல்லதல்ல என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

நேற்றைய தினம் திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் வல்லபாய் படேல் அவர்களைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அதைப் பற்றி நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். வல்லபாய் படேல் ஒரு பிஸ்மார்க். எப்படி பிஸ்மார்க் ஜெர்மனியை இணைத்தானோ, அதே போல் அவர் இந்தியாவில் ஒரு பிஸ்மார்க்காக இருந்து இந்தியாவை ஒருங்கிணைத்தார்கள். அவருடைய நோக்கமே, வல்லபாய் படேலின் நோக்கமே, சமஸ்தான பிரஜைகள் கிளர்ந்தெழுந்து மன்னர்களைத் தூக்கியெறியும் நிலைக்கு வந்து விடக்கூடாது என்ற முறையில் செயல்பட்டு, இந்தியாவை ஒருங்கிணைத்தார்கள் என்பது எங்களுடைய கண்ணோட்டம்.

நான் எதற்காக இதைச் சொல்கிறேன் என்றால், இன்று இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றிவிட்டால் நாடு சுக்கல் சுக்கலாகப் போய் விடும் என்று யாரும் நினைக்க வேண்டாம். மக்களின் மீது நம்பிக்கை வைத்துச் செய்யுங்கள். நம்முடைய நாட்டு மக்கள் தேசபக்தி மிகுந்தவர்கள். தமிழக மக்கள் தேசபக்தி மிக்கவர்கள். யார் நினைத்தாலும் இந்த நாட்டு மக்கள் இந்த நாட்டை துண்டாட விடமாட்டார்கள். இந்தத் தீர்மானத்தை மக்கள் மீது நம்பிக்கை வைத்து ஆராய்ந்து பார்க்க வேண்டுமென்று அழுத்தம் திருத்தமாக கூறிக்கொள்கிறேன்.

[திரு. மணலி சி. கந்தசாமி] [1974 ஏப்ரல் 18

மக்கள் மீது நம்பிக்கை வைக்காமல் எந்தப் பிரச்சினையைப் பார்த்தாலும் எந்தவிதமான முடிவிற்கும் வரமுடியாது. மக்களை மறந்து விட்டு, இதை முன்மொழிந்திருக்கும் முதலமைச்சரை மட்டும் பார்க்காதீர்கள். இந்தத் தீர்மானத்தின் நோக்கம் என்ன ? இதனுடைய மையக்கருத்து என்ன என்று பாருங்கள். இங்கே தமிழ்நாட்டிலிருந்து பிறந்தவர்கள் தான் சுப்பிரமணிய பாரதி, வ.உ.சி., வாஞ்சி போன்றவர்கள். அந்த ரத்தம் தமிழனின் உயிரோட்டத்தில் இருக்கிறது. அந்த அடிப்படையில் இந்த தமிழக மக்கள் இந்த பாரத தேசம் சிதறுண்டு போகாமல் பார்த்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறார்கள். எல்லோருக்கும் தேசப்பற்று பூரண அடிப்படையில் இருக்கிறது. அந்த அடிப்படையில் இதைப் பார்க்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

நான் இருதயபூர்வமாக இந்தத் தீர்மானத்தை ஆதரிக்கிறேன். தோழமைக் கட்சியாக இருக்கிறோம், அதனால் ஆதரிக்கிறோம் என்று யாரும் எண்ணக்கூடாது. இது ஒரு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த தீர்மானம். இப்படிப்பட்ட சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த தீர்மானத்தை இந்த அவையில் கொண்டுவருவதற்கான வாய்ப்பு நம்முடைய முதலமைச்சர் கலைஞர் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. இன்றைக்கு இந்தப் பின்னணியில் வராமல் போனால், வரப்போகின்ற காலங்களில் இந்தப் பின்னணியில் செல்லாமல் இருந்துவிட்டோமே என்று வருந்தும் நிலை வந்துவிடும் என்று கூறிக்கொள்கிறேன்.

இன்றைக்கு மாநிலத்தில் சுயாட்சி, மத்தியில் கூட்டாட்சி என்று சொல்கிறோம். இதில் என்ன தவறு ? பார்லிமெண்டில் ஏகபோக பெரு முதலாளிகளுக்கு ஆதரவு கொடுக்கும் நிலைமையைப் பார்க்கிறோம். பல மாநிலங்களில், பல்வேறு மொழிபேசும் மாநிலங்களில் ஏற்றத் தாழ்வு இருப்பதைப் பார்க்கிறோம். பலவிதமான சிக்கல்கள் இருக்கின்றன. பெரு முதலாளிகளில் கூட வங்காள முதலாளிகள், குஜராத் முதலாளிகள் என்று இருக்கிறார்கள். இந்த 100 ஏக போக குடும்பங்கள் என்று கூறுகிறோமே இதில் அதிகமானவர்கள் வட நாட்டில் இருக்கிறார்கள். பிரதம மந்திரி தேர்தல் வருகிறது என்று சொன்னால் டாடா, பிர்லா, கோயங்கா கோடிக்கான பணத்தை எடுத்துக் கொண்டு ஓடுகிறார்கள். அவர்கள் பணத்தை வைத்துக் கொண்டு தேர்தலில் ஜெயித்து வந்தால் எந்த அடிப்படையில் நாடு இருக்கும் ? சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இங்கே கூட பார்த்தோம். ராஜ்ய சபை தேர்தல் வந்தது. ராஜ்ய சபை தேர்தல் வந்தபோது ஒரு தனி நபர், எந்தக் ஒரு கட்சியையும் சேராதவர் 43 ஓட்டுகளை வாங்கியிருக்கிறார். எந்த அரசியல் கட்சியையும் சாராதவர் எப்படி இவ்வளவு வாங்க முடியும், யாருடைய பின்னணியில் அவர் வந்தார் என்பதை நாம் கண்ணால் பார்த்தோம். தமிழ்நாட்டில் இருக்கும் முதலாளிகள் வந்தார்கள்.

1974 ஏப்ரல் 18] [திரு. மணலி சி. கந்தசாமி]

இன்றைக்கு இந்தத் திருத்தத்தைப் பார்த்தால் பலமான ஒரு இந்தியா அமைய வேண்டுமென்ற அடிப்படையில் இந்த தேசத்தை ஒருமுகமாக்கும் வகையில் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இது உள்ள படியே நாட்டுக்கு நல்ல நேரம், நாட்டுக்கு முன்னேற்றம் தர வாய்ப்பு வகுக்கும் தீர்மானம். காங்கிரஸ்காரர்கள் இதைப் பாராட்டத் தவறிவிட்டார்கள். இதைப் பாராட்டுவதற்கும், பாராட்டிப் பெருமைப்படுவதற்கும், இதைக் கொண்டுவந்த முதலமைச்சர் அவர்களுக்கு நன்றி செலுத்தவும் கடமைப்பட்டவனாக நான் இருக்கிறேன்.

இந்தத் தீர்மானத்தின் நோக்கம் என்ன என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இந்தத் தீர்மானத்தைப் பார்த்தேன். உள்ளபடியே இதிலே நல்ல கருத்து பொதிந்து இருக்கிறது. மாண்புமிகு முதலமைச்சர் ஆற்றிய உரையையும் நான் பார்த்தேன்; படித்தேன். நல்ல கருத்து அதிலே இருக்கிறது. அந்தக் கருத்தின் அடிப்படையில் தான் நாம் பார்க்க வேண்டுமே தவிர நீங்கள் இந்த நோக்கத்தில் செய்கிறீர்கள்; அதை நினைத்து இப்படிச் செய்கிறீர்கள்; அப்படிச் செய்கிறீர்கள் என்று சொன்னால் என்ன செய்வது ?.

கலைஞர் அவர்கள் ஒன்றைச் சொல்லிவிட்டு, ஒன்றைச் செய்தால் நாம் விட்டுவிடுவோமா ? நாமெல்லாம் என்ன சோதாவா ? அவர்களைத் தூக்கி எறிவதற்கு நமக்குச் சக்தி இருக்கிறது. மக்கள் நமக்கு அதற்கு ஆதரவு தருவார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது.

நான் கலைஞர் அவர்களுடைய தூய எண்ணத்தை அறிந்துதான் பாராட்டுகிறேன். யாரும் அவருடைய நோக்கத்தைத் தவறாகக் கருத வேண்டாம். கலைஞர் அவர்கள் ஒன்றைச் சொல்லி ஒன்றைச் செய்தால் நம்மால் தடுக்க முடியும். இருக்கிற நிலைமைகளை வைத்துப் பார்ப்பதை விட்டு விட்டு, இதற்கு நோக்கம் கற்பிப்பது அவர்களைப் புரிந்து கொள்ளாதது மட்டுமல்ல, புரிந்து கொண்டும் புரிந்து கொள்ளாதது போல் பாவனை செய்வது சரியான பாதை அல்ல என்று வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். பிறகு எடுத்துக் கொள்வோம். இண்டர்ஸ்டேட் கவுன்சில் பற்றி திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் பேசினார்கள். அதனுடைய வாசகங்களைப் படித்துப் பாருங்கள். இன்டர்ஸ்டேட் கவுன்சில் ஏற்படுத்துவதனால் பாராளுமன்றம் வலுவிழந்துவிடும் என்று கூறுவதற்கில்லை. மையத்தில் கூட்டாட்சி அமைப்பில் இப்படிப்பட்ட ஒரு அம்சம் இருப்பது தவிர்க்க முடியாதது என்று சொல்லக்கூடிய விதத்தில்தான் தெளிவாகப் போடப்பட்டிருக்கிறது. அந்தப் பாராவை படித்துக் காட்ட விரும்புகிறேன்.

'In respect of any action to be taken in any matter relating to defence, foreign affairs, inter-State communications and currency in so far as it affects the Centre-State relations or a State or States, the Inter-State Council should be consulted'. கன்ஸல்டேடிவ் கமிட்டி என்றுதான் போடப்பட்டிருக்கிறது. கன்ஸல்ட் பண்ண வேண்டும் என்றுதான் சொல்லப்பட்டிருக்கிறது.

பலவந்தமாக மீறி செய்யக்கூடிய அதிகாரத்தை வைத்திருக்கக் கூடிய கவுன்சில் என்று சொல்லவே இல்லை. இதைக் கொஞ்சம் கவனித்துப் பார்க்க வேண்டும். சந்தேகம் வந்துவிட்டால் பிரச்சினையையே மறந்துவிடுகிறது. இன்றைக்கு தி. மு. க.-வின் மீது சந்தேகம், கவர்னரின் மீது சந்தேகம். இப்படி சந்தேகத்திற்கு இடையே இந்தத் தீர்மானத்தை அணுகினால் உண்மையான ஜீவித பிரச்னைகள் பின்னுக்குத் தள்ளப்படுகின்றன அது தமிழ் நாட்டுக்குப் பெரிய ஆபத்தான சூழ்நிலையை ஏற்படுத்திவிடும் என்று கருதுகிறேன்.

கூட்டாட்சி மையத்தில் வேண்டும், அதாவது பெடரல் ஸ்ட்ரக்சர் வேண்டும். மாநிலத்தில் பூரண சுயாட்சி வேண்டும் என்று சொல்வதில் ஒன்றும் தப்பு கிடையாது. அதன் காரணமாக இந்தியா அறுந்துபோய் விடாது. இன்னும் இறுகும். இந்திய ஒருமைப்பாடு இறுகும். சுதந்திரம் கிடைத்து 30 வருஷங்கள் ஆயிற்று. என்னுடைய அனுபவத்தைச் சொல்கிறேன். மத்திய சர்க்கார் பலம் வாய்ந்த அதிகாரங்களை வைத்துக் கொண்டிருக்கிறது. நான் பார்ப்பதைத்தான் சொல்கிறேன். இன்றைக்கு மத்திய சர்க்கார் என்ன சொல்கிறது ? பிஸிபாரஸ் டெண்டன்ஸீஸ் தலை எடுத்திருக்கிறது என்று சொல்கிறது. இதற்குக் காரணம் என்ன ? ஒரு பலம் வாய்ந்த மத்திய சர்க்கார் நாட்டை ஆளுகின்ற காலத்தில் என் இப்படி நாட்டை உலுக்கின்ற சக்திகள் தோன்ற வேண்டும் ? என் இந்த நிலைமை ? என் நெருக்கடி முற்றவேண்டும் ? வெளிநாட்டுக்காரன் தலையீடுதான் காரணம். உண்மையாகவே பலவீனமான சர்க்கார்தான் இருக்கிறது. அதனால்தான் அமெரிக்காகாரன் உள்ளே வருகிறான் என்று தெளிவாக நான் பார்க்கிறேன்.

இந்த பலவீனமான சர்க்காரைப் பலப்படுத்துவதற்காகத்தான் நாம் இந்த முயற்சி எடுக்கிறோம். இன்னும் பலவீனப்படுத்தவில்லை. பலப்படுத்துகிறோம். அமெரிக்காவைப் பற்றிக் கூறுவது கம்யூனிஸ்டுக்கு ரொம்ப நாள் பழக்கம். அமெரிக்க தலையீடுதான் காரணம். அமெரிக்காகாரன் உள்ளே நுழைகிறான். அமெரிக்க நாட்டு மீது நம்பிக்கை வைக்க வேண்டாம். நாட்டு மக்கள்மீது நம்பிக்கை வையுங்கள் என்றுதான் சொல்கிறேன். நாட்டிலுள்ள குடியானவன், நாட்டிலுள்ள சாதாரண ஏழை மக்கள் மீது நம்பிக்கை வையுங்கள்.

நான் தமிழ் நாட்டு மக்களைப் பற்றி நன்கு அறிவேன். வெளிநாட்டினர் தலையிடுவதை இந்த நாட்டு மக்கள் விரும்பமாட்டார்கள் என்பதை உணரவேண்டும். அப்படிப்பட்ட மக்கள்மீது நம்பிக்கை வைத்து காரியங்களை ஆற்றவேண்டும். அமெரிக்கா தலையீட்டின் காரணத்தால்தான் பிஸிபாரஸ் டெண்டென்ஸீஸ் தலையெடுக்கிறது. இந்திய கம்யூனிஸ்டு கட்சி பூபேஷ் குப்தா அவர்கள் பேசியது, என். கே. கிருஷ்ணன் அவர்களின் ஆர்டிகிள்ளை வைத்துக்கொண்டு நம்முடைய மதிப்பிற்குரிய நண்பர் திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் பேசினார்கள். எனக்குத் தெரியும். திருப்பித் திருப்பிப் பேசலாம். ஒரு நாளைக்கு வரக்கூடிய நிகழ்ச்சி அடுத்த நாளைக்கு இல்லை. காரணம் அமெரிக்க தலையீடு (குறுக்கீடு).

இப்பொழுது நான் சுயேச்சையாகப் பார்க்கிறேன். பிரச்சினையின் அடிப் படையில்தான் பார்க்கவேண்டும். தி. மு. க. எகாதிபத்திய சார்புடைய, ஏகாதிபத்தியத்தினுடைய அடிப்படையில் இருக்கக்கூடிய கட்சி என்று ஒரு சந்தேகத்தை வைத்துப் பார்த்தால், நிச்சயம் தி. மு. க. வை நாம் ஜெயிக்க முடியாது, அகற்றவே முடியாது. அந்த அடிப்படையில்தான் நான் கூறுகிறேன். பிரச்னையை வைத்துக்கொண்டுதான் பார்க்கவேண் டும். வேறு ஒன்றையும் வைத்துக்கொண்டு பார்க்கக்கூடாது.

சென்டர்-ஸ்டேட் ரிலேஷன்ஷிப் மாற வேண்டுமா ? மாறவேண் டாமா ? மாற வேண்டும் என்று சொன்னால் மத்தியில் கூட்டாட்சி, மாநில சுயாட்சி என்று சொல்லக்கூடிய பாதை இருக்கிறதே, அந்தப் பாதைதான் சரியான பாதை, முறையான பாதை. அந்தப் பாதை மாறினால் இந்தியாவை உலைக்கக்கூடிய பாதையில்தான் கொண்டுபோய் விடும். சமுதாய அடிப்படையை வைத்து, தேசிய அடிப்படையை வைத் துப் பார்த்தால் அந்தப் பாதைதான் சரியான பாதை. தேசிய நிலைமையை வைத்துப் பார்த்தால் அதுதான் சரியான பாதை. விலை வாசிபற்றிப் பேசுகிறோம். எதற்கெடுத்தாலும் மந்திரி மத்திய சர்க்காரை காட்டுகிறார். மத்திய சர்க்காரை குற்றம் சொல்கிறார். நாமும் பதில் சொல்ல முடியவில்லை. பேசாமல் உட்கார்ந்துவிடுகிறோம். அப்படிப்பட்ட நிலைமை இல்லாமல் மத்திய சர்க்காருக்குத் தேவையான அதிகாரத்தை நாட்டின் ஒற்றுமை உலைக்கப்படாத அளவுக்கு, பலம் வாய்ந்த மத்திய சர்க்காருக்கு எந்த லட்சணங்கள் வேண்டுமோ அம்மாதிரி வேண்டிய அதிகாரங்களை மட்டும் மத்திய சர்க்கார் வைத்துக்கொள்ள வேண்டும் என்று சொல்வதில் எந்தத் தவறும் இல்லை.

கம்யூனிகேஷன், டிபென்ஸ், பாரின் ரிலேஷன், கரென்சி என்று சொல்லக்கூடிய நான்கு பெரிய முக்கியமான விஷயங்களை மட்டும் மத்திய சர்க்கார் வைத்துக்கொள்வதில் எந்தவிதமான சந்தேகத்திற்கும் இடம் இல்லாமல் மத்திய சர்க்கார் கையில் வைத்துக் கொண்டு, பாக்கி இருக்கக்கூடிய அதிகாரங்களை மாநில சர்க்காருக்கு விட்டுவிட வேண்டும் என்று கூறுவதில் என்ன தவறு வந்துவிடும் என்று எனக்குப் புரிந்து கொள்ள முடியவில்லை. அப்படி தவறு வரக்கூடிய அளவுக்கு மக்கள் விட்டுவைக்க மாட்டார்கள். நான் மக்களை வைத்துப் பேசுகிறேன். கலைஞரை வைத்துப் பேசவில்லை, உங்களுடைய கட்சியை மாத்திரம் வைத்துப் பேசவில்லை.

தமிழ் நாட்டு மக்கள், தமிழ் நாட்டில் இருக்கக்கூடிய முற்போக்கு சக்தி படைத்தவர்கள் அத்தனை பேர்கள் மீதும் நம்பிக்கை வைத்து பேசுகிறேன். ஏன் இவர்கள் மீது நம்பிக்கை வைக்கக்கூடாது ? என்ன அது அத்தனை புனிதமான சட்டமா ? சட்டத்தைத் திருத்தினால் என்ன வந்துவிடும்? சட்டத்தையே தொடக்கூடாது என்று ஏன் சொல்லவேண்டும் ? அந்தப் புனிதமான சட்டத்திற்கு 33 திருத்தங்கள் வந்தாகிவிட்டன.

இன்னும் எத்தனை வரப் போகிறதோ எனக்குத் தெரியவில்லை. ஏன் இதைத் திருத்தினால் என்ன ? ரொம்பப் புனிதமானது, திருத்தவே கூடாது என்று பேசுவதில் என்ன அர்த்தம் இருக்கிறது என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. சமீபத்தில்கூட நாம் ஒரு திருத்தத்திற்கு இசை வைத் தெரிவித்தோம். இப்படி பல திருத்தங்கள் வரத்தான் போகின்றன. திருத்தமே கொண்டு வரககூடாது என்று ஏன் அடிப்படையையே எதிர்க்க வேண்டும்? விவரங்களைப் பற்றி வேண்டுமானால் உங்களுடைய கருத்தைச் சொல்லுங்கள். இன்னும் சொல்லப்போனால் இன்றைக்கு என்னுடைய கோரிக்கை என்னவென்று சொன்னால், மத்திய சர்க்கார் ஒரு புதிய அரசியல் நிர்ணயசபை ஏற்படுத்தி, இந்த அரசியல் சட்டத்தை பரிபூரணமாக பரிசீலித்து தக்க மாற்றங்கள் ஏற்படுத்த வேண்டும். மத்தியில் கூட்டாட்சி, மாநிலத்தில் சுயாட்சி அடிப்படையைக் கொண்டு வரவேண்டும். ஏன் என்று சொன்னால் இதிலே கட்சி மாச்சரியங்கள் வரக்கூடாது. வேறு ஒன்றும் இல்லை.

நாளைக்கு அதிகாரத்தில் இங்கே காங்கிரஸ் கட்சியே வரலாம். மாண்புமிகு பொன்னப்ப நாடார் அவர்களே இங்கு முதல் அமைச்சராக வீற்றிருக்க லாம். நீங்கள் இப்பொழுது இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றினால், அது உங்களுக்கு அப்பொழுது உதவி செய்யாதா என்பதைத்தான் நான் உள்ளபடியே கேட்கிறேன். நிச்சயம் உதவி செய்யும். அதனால் தான் சொல்கிறேன். கலைஞரை வைத்துப் பார்க்காதீர்கள். கட்சியை வைத்துப் பார்க்காதீர்கள். தேசியப் பிரச்சினை, சரித்திரப் பாதை என்ற அடிப் படையில் பாருங்கள், இந்தப் பிரச்சினையை நீங்கள் சரியான கோணத்தில் பார்க்க வேண்டும். சரியான நியாயமான பாதையா என்று தான் பார்க்கவேண்டும்.

விவரங்களுக்குப் போகக்கூடிய சந்தர்ப்பத்தில் வேண்டுமானால் நீங்கள் சொல்லக்கூடிய மாறுபட்ட கருத்துக்கள் இருந்தால் விவரங்களைப்பற்றிச் சொல்லுங்கள். அடிப்படையை ஒத்துக்கொள்ளுங்கள் என்றுதான் சொல் கிறேன். ஒரு கட்சியை சந்தேகப்படக்கூடிய விதத்தில் உங்கள் பார்வை இருப்பது நாட்டிற்கு நல்லது அல்ல. அப்படிச சொல்வது காங்கிரஸ் தேசிய வீச்சு அதனுடைய பாரம்பரியத்துச்கு நல்லது அல்ல. உங்கள் கட்சிக் காரர்கள் சந்தேகப்படக்கூடிய வீச்சு, தவறான கோணத்தில் வைக்கக்கூடிய பார்வை, இதெல்லாம் உங்கள் தேசிய வீச்சையும், பாரம்பரியத்தையும் பாதிக்கக்கூடும்.

சுதந்திரம் கிடைத்து விட்ட பிறகு பல விஷயங்கள் நடைபெற்றிருக் கின்றன. பல மாநிலங்களில் பல ஆட்சிக்காரர்கள் வந்து போய்க்கொண்டி ருக்கிறார்கள். அடுத்த தேர்தலில் என்ன நடக்கப்போகிறது என்று யாரும் சொல்வதற்கில்லை. காங்கிரஸ் அல்லாத ஆட்சி, தி. மு. க.-வின் ஆட்சி இந்த மாநிலத்தில் நடக்கிறது. அடுத்த தேர்தலில் என்ன வரப் போகிறது என்று யாரும் சொல்ல முடியாது. இங்கே பேசிய ஒருவர்கூட முழுகுகிறவன் துரும்பைப் பற்றிக்கொண்டு தொங்குகிறான் என்று சொன் னார். அவன் மூழ்கிவிட்டாலும் மேலே தலை தூக்கிவரக்கூடியவர்கள்,

முன்னேற்றம் உள்ளவர்களாகத்தான் இருப்பார்கள். அவர்களை விட மோசமாக வெளியே உள்ளவர்கள் இருக்கமாட்டார்கள். கட்சிக் கண்ணோட்டத்தை விட்டுவிட்டு, இதை தேசியப் பிரச்சினையாகக் கருதிப் பார்க்க வேண்டும்.

அடுத்தபடியாக, நான் சில விஷயங்களை இந்தத் தீர்மானத்தின் மூலமாக தி.மு.க. வினருக்குச் சொல்ல விரும்புகிறேன். முக்கியமான ஒரு பெரிய எழுச்சியை உண்டாக்கக்கூடிய ஒரு தீர்மானத்தை நீங்கள் இங்கே பிரேரேபித்திருக்கிறீர்கள். அந்த அளவுக்கு நீங்கள் உங்களைத் தயார் செய்துகொண்டு, அந்த அளவுக்கு தேசிய கண்ணோட்டத்தோடு நீங்கள் இதை அணுகி, சகல பகுதி மக்களுடைய ஒத்துழைப்பையும் பெறவேண்டும் என்ற கண்ணோட்டத்தோடு இதைப் பார்க்கவேண்டும்.

கலைஞர் சாதுரியம் மிக்கவர், அறிவு மிக்கவர், ஆற்றல் மிக்கவர் என்று வைத்துக்கொண்டுதான் நான் கூறுகிறேன்.

இந்தப் பிரச்சினையைப் பற்றி பேசுகிற நேரத்தில் கட்சிப் பிரச்சினையைப் பற்றி பேசாதீர்கள். தமிழ் மக்களுடைய தாகத்தை அடக்கக்கூடிய ஒரு தேசிய எழுச்சி இது என்று வைத்துக்கொண்டு உங்கள் கட்சியினர் பேசுவதற்கு முன்வரவேண்டும். கட்சி கண்ணோட்டத்தோடு நாம் இதிலே வாதித்து, ஒரு விரோதமான நிலையை உண்டாக்கக்கூடாது. இந்த அடிப்படையை வைத்துக்கொண்டுதான் நான் கேட்டுக்கொள்கிறேன்.

காங்கிரஸ் கட்சியில் இருக்கக்கூடிய பல நண்பர்களுக்கும் சொல்லிக் கொள்வேன். சரித்திரம் உங்களை இந்தப பாதையிலே நிர்ப்பந்தமாகக் கொண்டுவந்துவிடும். கம்யூனிஸ்டு கட்சியும் நீண்ட நாட்களுக்கு இந்தப் பாதையில் சென்றுகொண்டிருக்க முடியாது. அதுவும் ஒரு நாளைக்கு சரியான பாதைக்கு வந்துதான் சேரவேண்டும். கீழே இருக்கக்கூடிய சக்திகள் அவர்களை நிர்ப்பந்தமாக அந்தப் பாதைக்குக் கொண்டு வந்து விட்டு விடும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. அந்த நம்பிக்கையில் தான் நான் உட்கார்ந்திருக்கிறேன்.

(முற்பகல் 10-30)

நான் பல்வேறு பிரச்சினைகளைக் கூறியிருக்கிறேன். ஆளும் கட்சி அந்த வகையில் ஒரு முக்கியமான பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கிறது. பெரிய தேசிய எழுச்சியை ஏற்படுத்துகின்ற தலைமை உங்கள் கையில் வந்திருக்கிறது. அதை நடத்திச் செல்வதற்கு யோக்யதை உள்ளவர்களாக நீங்கள் உறுதியுடன் நடந்துகொள்ள வேண்டும் என்று நான உங்களைக் கேட்டுக்கொள்கிறேன். அந்த அணுகு முறை இருக்க வேண்டும். ஒரு மாச்சரிய கண்ணோட்டத்தோடு, ஒரு கட்சி கண்ணோட்டத்தோடு யாரையும் அணுகக்கூடாது. அண்ணா அவர்கள் அதைத்தான் சொல்வார்கள். அண்

[திரு. மணலி சி. கந்தசாமி] [1974 ஏப்ரல் 18

அவர்கள் தன்னடக்கத்தோடு நடந்து கொண்டு, ஒரு சரித்திரப் பாதையை உருவாக்க வேண்டுமென்று சொல்வார்கள். அந்த முறையிலே நீங்கள் நடந்துகொள்ள வேண்டும். அந்தச் சரித்திரப் பாதையை நீங்கள் உருவாக்க வேண்டும். கட்சிக் கண்ணோட்டத்தைக் காட்டினால் பலவித தகராறுகள் வரும். ஆகவே இந்த விஷயத்தில் அதையெல்லாம் மறந்து விட்டு, ஒரு சரித்திரப் பாதையை, ஒரு தியாகப் பாதையை நீங்கள் உருவாக்க வேண்டும்.

இந்தத் தீர்மானத்தை இங்கே நிறைவேற்றி பார்லிமெண்டுக்கு அனுப்பப்போகிறீர்கள். அங்கே அவர்கள் என்ன செய்யப்போகிறார்கள்? ஒன்றுமே செய்யப்போவதில்லை; ஒன்றும் நடக்காது. ஆகவே, இது மக்கள் மத்தியிலே வந்தாக வேண்டும்; வந்துதான் தீரவேண்டும்; வந்தே தீரும். அப்படிப்பட்ட ஒரு முயற்சியில் உங்கள் அணுகுமுறை இருக்க வேண்டும். அந்த அளவுக்கு உங்கள் கட்சியில் உள்ளவர்களைத் தயார் படுத்திக்கொள்ள வேண்டும்.

மாறுபட்ட கருத்து உடையவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களை எல்லாம் இதற்குத் தயார்படுத்திக்கொள்ள வேண்டும். இது அரங்கிலே தீராது. அம்பலத்திற்கு வந்த பின்னால்தான் தீரும். தெருவுக்கு வந்துதான் தீர்க்கப்படக்கூடியதாக இருக்கும்.

இன்றைக்கு குஜராத்திலே என்ன நடக்கிறது? இன்றைக்கு பீகாரிலே என்ன நடக்கிறது? இன்றைக்கு உத்திரப்பிரதேசத்திலே என்ன நடக்கிறது? வேறுபட்ட கருத்துக்களை வெளியிலே சொல்லிக்கொள்ளலாம். ஆனால் உள்ளுக்குள்ளே ஒரு குமுறல் இருக்கிறது. பீகார் குளோஸ் ஆகிவிட்டது. குஜராத் குளோஸ் ஆகிவிட்டது. "மெனோவரிங்" முறை இனி நடக்காது. ஆட்டைத் தூக்கி குட்டியிலே போட்டு, குட்டியைத் தூக்கி ஆட்டிலே போட்டு நடத்துவது மாதிரியான "மெனோவரிங்" முறை இனி நடக்காது.

இந்திரா காந்தி அம்மையார் ஒரு நல்ல பாரம்பரியத்தில் வந்தவர்கள் தான். நல்ல அரசியல் பாரம்பரியம் அவர்களுக்கு உண்டு. நேரு குடும்பத்தில் பிறந்தவர்கள் எப்படியோ இந்த 5, 6 ஆண்டுகள் சமாளித்து விட்டார்கள். இன்றைக்கு இருக்கின்ற நெருக்கடியை அவர்களால் சமாளிக்க முடியாது. இன்றைக்கு ஏற்பட்டிருக்கின்ற நெருக்கடியை சமாளிக்கின்ற அளவுக்கு அவர்களிடம் திறமை இல்லை என்றுதான் நான் கருதுகிறேன். துணிச்சலான முடிவுகளை மேற்கொள்ளும் துணிவு இருந்தால்தான் இன்றைய நெருக்கடியைச் சமாளிக்க முடியும். அந்தத் துணிவு அவர்களுக்கு இருக்கிறதா என்பது கேள்விக்குறிதான். அதை விட்டு விட்டு முதலாளிகளுக்குப் பாதுகாப்பாக மத்திய அரசாங்கம் அமையுமானால் மத்திய அரசாங்கத்தைத் தூக்கி எறியக்கூடிய அளவுக்கு அங்கே இருக்கின்ற அதிகாரங்களைப் பிடுங்கக்கூடிய அளவுக்கு மாநிலங்கள் வளர்ந்து விடும் என்பதில் சந்தேகமில்லை. அந்த அளவுக்கு மாநிலங்களில் உணர்வு எழுந்துவிடும்.

குறிப்பாக ஆளும் கட்சியாக இருக்கின்ற நீங்கள் பலம் வாய்ந்திருந் தாலும் தன்னடக்கத்தால் பலரையும் உங்கள் இயக்கத்திற்கு சேர்த்துக் கொள்ள வேண்டும். மற்றவர்கள் உங்களுக்கு ஒத்துழைப்புக் கொடுக்கின்ற வகையில் நீங்கள் நடந்துகொள்ள வேண்டும்.

கலைஞர் அவர்களை நான் கேட்டுக்கொள்வது, நாடு பூராவும் இந்த இயக்கம் பரவக்கூடிய அளவுக்கு நீங்கள் நடந்துகொள்ள வேண்டும்; அதற்கு உங்கள் கட்சி முயற்சி செய்ய வேண்டும்; அப்படி நீங்கள் நடந்து கொண்டால் தோழமைக் கட்சிகளாகிய நாங்கள் அதற்கு மார் தட்டிப் பேசத் தயாராக இருக்கிறோம். இந்த இந்திய பூபாகத்திலே இருக்கக்கூடிய என்னைப் போன்றவர்கள் கடைசிக் காலத்தில் இப்படிப்பட்ட ஒரு இயக்கத் திற்காக உயிரையும் விடத் தயாராக இருக்கிறோம் என்று சொல்லி (கரவொலி) முடித்துக்கொள்கிறேன்.

திரு. எம். சுரேந்திரன் : சார், பாயின்ட் ஆப் கிளாரிபிகேஷன். மணலி கந்தசாமி அவர்கள் பேசும்போது, கம்யூனிஸ்ட் கட்சியிலே இருக்கும்போது திராவிட முன்னேற்றக் கழகத்தை அமெரிக்க கையாளாக மதிப்பிட்டிருக் கிறேன் என்று சொன்னார்கள். இப்போது அவர்களுடைய மதிப்பீடு என்ன என்பதை அறிந்துகொள்ள விரும்புகிறேன்.

திரு. மணலி சி. கந்தசாமி : நான் மிகத் தெளிவாகக் குறிப்பிடு கிறேன். இப்போது தமிழ் மக்கள் எண்ணங்களைப் பிரதிபலிக்கின்ற ஒரு தேசியக் கட்சியாக இருக்கிறது (கரவொலி).

DR. H. V. HANDE : Hon. Speaker, Sir, on behalf of the Anna D.M.K. I would like to state the stand of our Party with regard to the Report of the Rajamannar Committee which is before the House for discussion.

Sir, I would like to stress the fact that the D.M.K. Party which is headed by the Honourable Thiru Karunanidhi, has chosen to bring this Report for discussion after nearly $2\frac{1}{2}$ years or three years. Now after a lapse of nearly three years the Government have chosen to bring this matter for discussion. That itself will give a clear indication that the whole attitude of the D.M.K. with regard to States getting more power or State autonomy is motivated in a political manner. In other words, it is because of the political motivation that our Honourable Chief Minister has timed it so perfectly to suit his party and his manoeuvres and brought it at this juncture.

I would like him to clearify in his reply what prevented him from bringing it earlier. In other words, what made him to choose confrontation with the Centre at this crucial time of his political career or political life of the D.M.K. That is a very mischievous thing for which an answer should be forthcoming from our Honourable Chief Minister.

Of course, he is having a happy time temporarily because he is under the illusion that we will be in a flux as far as this Resolution is concerned. The position of the Anna D.M.K. is clear.

We are for more powers for the States. Even our late revered Rajaji was for more powers for the States. Not only he but even our respected Thiru Kamaraj is also for more powers for the States. The Congress (O) Party also has passed resolutions asking for much greater devolution of powers. Even our late revered Anna was also for more powers for the States. Not only these persons but several eminent jurists and eminent lawyers and eminent economists are for more powers for the States. So far as this is concerned, I am quite sure there can be no two opinions. But the point is that the D.M.K. Party has now chosen to whip up the frenzy of State autonomy to do certain political manoeuvres in the name of State autonomy. This is clear and I would request the Honourable Members to be watchful.

Even the 28-page document was drafted in a very hurried manner and in an overnight it was drafted and placed on the table of the House. Lot of mistakes are there in the document itself. If only we go through it patiently, we will find that there are several omissions and commissions and several irregularities in it. If the Honourable Chief Minister thinks of sending this document to the Prime Minister and the Central Government, we will be making a fool of ourselves......

Thiru K. PERIASAMY: Sir, the Honourable Member has stated 'We will be making a fool of ourselves'.

இந்த வார்த்தைகள் சரிதானா? இந்த அவைக்கு பொருத்தமாக இருக்கிறதா?

Is it parliamentary, I am asking.

THE HON. THIRU K. ANBAZHAGAN : For his argument, he has used that expression which would include himself. As he has included himself for the purpose of argument, I do not think there is any privilege issue or point of order.

DR. H. V. HANDE : That is exactly what I mean. We should not make fool of ourselves by sending it to the Centre.

Now I will very briefly refer to the issue of Directions to the States by the Union. The whole crux of the matter is that Articles 356 and 365 are like Damocle's sword. Under these two Articles, the Assembly is likely to be dissolved or the State Government can be removed from Office. Then I come to Article 256 which empowers the Central Government to issue directions. The Honourable Chief Minister will so clearly manoeuvre a situation in such a manner that Articles 356 and 365 will be invoked and the Assembly dissolved. Then he will say that because there is no 'Manila Swayatchi' we have lost our power. In other words, he will make a deliberate attempt to disobey the directions of the Central Government envisaged in Article 256. Then he wants that an Inter-State Council should be formed.

What is the Inter-State Council after all? Has the Hon. Chief Minister or his adviser the Honourable Thiru Madhavan given thought to it? Who are going to be in the Inter-State Council? After all, the Chief Ministers of different States are going to be there. How are they going to give better relief and justice than the Members of the Parliament?

All these members of Inter-State Council are Chief Ministers. Chief Ministers are ruling Congress Ministers. How is it going to help us? It will be only a glorified Chief Ministers' meet. What is it he is going to get out of the Chief Ministers' Conference, what is it he is going to get from Inter-State Council? How is it going to help remove obstacles of Chief Ministers Conference? All the Chief Ministers will be members of Inter-State Council. Let the Hon. Chief Minister clarify how this will help him. But clarification is not forthcoming.

Will he have the guts to stand up and say how many non-Congress Chief Ministers are there? What is the core of the problem of State autonomy? The main problem is the stranglehold of a single party rule in New Delhi, i.e. the rule of Congress Party which has its tentacles in almost all the States. That should be removed. Otherwise, how can you get better administration?

As Mr. Santhanam has rightly pointed out, the main problem is the tendency towards unhealthy fraternalism which is to envelop Indian federalism as a result of the dominance of single parts rule during the first two decades of Independence. That dominance of Centre is unpleasant and provocative to the States. This problem cannot be got over by Inter-State Council. The Central Ministers are confronted by Congress Chief Ministers from States. So, the inter-State Council will not solve the problem.

They want Article 169 to be amended. The power to abolish Legislative Council should be vested exclusively in State Legislative Assembly. That is what is now said. Have you at any time passed a resolution saying that Legislative Council should be abolished? Has the Centre not acted on that resolution without assigning any reason? No. You have not chosen to pass any such resolution. The point whether the Legislative Council should be abolished or not is a different thing. I do not want to go into the merits or demerits of it now......

THIRU R. PONNAPPA NADAR: When one of your party member, Mr. Kovai Chezhiyan was speaking he was saying that the Upper House is not necessary. Do you think that the Upper House is unnecessary and should be abolished *in toto*?

DR. H. V. HANDE: I mentioned clearly that I did not want to go into that issue now. What I want to ask is, have you passed any such resolution for abolishing the legislative council and has the Centre not okeyed it? Can you give one example that Article 169 has acted as a bottleneck to you? I may tell for Mr. Ponnappa Nadar that as far as our party is concerned, we are for abolition of Upper Houses. There is no question of confusion.

1974 ஏப்ரல் 18]

Thirumathi T. N. ANANDANAYAKI : I may tell for the information of the hon. Member that State which did not want Legislative council have passed such resolutions and the Centre has given its consent in such cases. It did not stand in the way of States.

Dr. H. V. HANDE : That is what I was saying.
அதைத்தான் நானும் தெளிவாகச் சொல்லிக்கொண்டிருக்கிறேன் மாறுபட்ட கருத்தாக இருந்து குறுக்கிட்டால் சரியாக இருக்கும்.
What is the use of repeating what I have said? The hon. Lady member must mention something new when she wants to interrupt me.

THIRU K. PERIASAMY : Does the resolution hold good for Governor's appointment and posting also?

டாக்டர் எச். வி. ஹண்டே : நான் அதையும் டிஸ்கஸ் பண்ணத் தயாராய் இருக்கிறேன். நம்மைப் பொறுத்த வரையில் கவர்னரை எடுக்க வேண்டுமென்ற ரெசலூஷனை நாம் பாஸ் பண்ண முடியாது.

On page 8 they have mentioned a peculiar thing. Finance Commission should be a permanent body. It is said. It is not a secretariat. Without any thought the whole thing has been drafted. It has been drafted in an ill-fashioned manner. That is my submission. It is said that members of the Finance Commission should be appointed in consultation with Inter-State Council. You were not able to argue your case with Finance Commission properly. That is my point.

I have tabled that question a number of times, and the Chief Minister has not given the proper answer. Time and again I have raised it. Answers were not at all comprehensive. I do not know whether the Chief Minister is aware of all these things.

It is said that there should be a Federal Debt Commission. Why? You have not been able to present your case properly before the Finance Commissions. When that is the case, the Chief Minister wants another Commission to completely destroy and demolish the Finance Commission, holding that we have not got justice from Finance Commission. He wants Federal Debt Commission to go into the question of indebtedness of

States. But that is one of the terms of reference of the Finance Commission. How do you ask this House to pass such a thing? It is all fantastic.

Then they came to emergency powers under Articles 356 and 357 relating to imposition of President's rule. As far as exercise of powers is concerned, I cannot order the Inspector-General of Police. It is the Chief Minister who has to order the Inspector-General of Police. I can tell what I want to say to Chief Minister and it is for the Chief Minister to order the Inspector-General of Police.

As an elected man, I represent my points to the Chief Minister of the State and he, as Chief Minister, can order the Commissioner of Police or Inspector-General of Police.

Here the President assumed control. Suppose you abolish emergency provisions *in toto*. Then what is the solution? What is the other article you can substitute in its place? You have not mentioned anything. So, what you say is fantastic.

I can understand your saying that emergency powers should not be misused. But you have not said that.

Another thing. They want all-India services to be abolished. The Chief Minister has taken action against I.A.S. Officers and I do not want to go into any particular case, since it is sub-judice. But has he not been able to take any action against any I.A.S. Officer?

When that is the thing, why do you want to abolish All-India services? That is the only thing where there is some sort of popular standard throughout the country. You want to abolish that. You do not want our people to go and serve in other parts of India. Is it so? Then where is integration? The whole thing looks so absurd.

Then comes representation of States in Parliament. It is said that each State should have equal representation. That will work against you. You want a small State with 5 lakhs of population and a State with 4 crores of population and a State like U.P. to have the same representation. The whole thing is

because the Chief Minister is obsessed with U.P. I am also obsessed with something that happened in U.P. But then how can we say that representation of big States could be done away with. If you say that, why do you have nomination to the Legislative Council? If you plead for abolition of nomination to Rajya Sabha, the same thing should hold good to Legislative Council here also. What I say is, the whole thing has been done in an ill-fashioned manner.

Then he wants inter-State railway to be abolished. Every day Howrah Mail comes to Madras. The engine comes from Vijayawada and then it goes to Bangalore with the Brindhavan Express. How can we stop that intra-State and inter-State communications? It is so fantastic.

These things go to show that the whole thing has been ill-drafted. If this House is going to pass this, we will be a laughing-stock to persons who know something about Constitution and other things. That is why I strongly oppose this ill-drafted resolution.

It is meaningless, it is ill-drafted, it is an insult to our common sense, it is an insult to our intelligence, it is an insult to our knowledge of law and all these things are there.

Then again, what is it I am objecting this for? As far as our Chief Minister is concerned, day-in and day-out, he has the habit of saying,

அதற்காகத்தான் மாநில சுயாட்சியைக் கேட்டேன்.

If there is a break-down of law and order I speak about it and அதற்காகத்தான் மாநில சுயாட்சியைக் கேட்டேன்.

(Mr. Deputy Speaker in the Chair.)

When there is a strike and when an adjournment motion is brought forward, he says

அதற்காகத்தான் மாநில சுயாட்சியைக் கேட்டேன்.

(Interruption) I request the Deputy Speaker to protect me from the running commentary of my friend to my right here. When he goes on commenting, to some extent I can withstand. But still it distracts me. Please.

THIRU K. M. SUBRAMANIAM: Sir, on a point of order. He is speaking of insult to intelligence. Intelligence is not the monopoly of anybody. May be, one has super-intelligence and I am not so intelligent. But he cannot give out ideas in that way. I have never known I was ever insulted like this. Let him make his statements in a proper manner. But let him not fall foul on me. I am certain that at this age of 66 I am not a bloody fool. I do not think he has the right to say so.

DR. H. V. HANDE: I don't know why the hon. Member should take it on himself.

THIRU K. M. SUBRAMANIAM: Certainly I take it for me because I am one amongst the legislators here. I know it does not fit my cap and therefore I am taking objection. I am taking it on me because he is going absolutely wrong. Perhaps it fits him well.

DR. H. V. HANDE: Congratulations on his excellent defence of the Government.

Now, the Chief Minister has unleashed the frenzy of State Autonomy feeling among the rank and file of his own party. A few days ago, we found what the hon. Member A. M. Raja said, I have great regard for him, nothing personal against him. He got up and quoted Bangala Desh and he quoted Pakistan. why such seeds of dissension are let loose? A feeling has been created among his party men that this country will break to pieces if State Autonomy is not given. That is the feeling that has been generated in the minds of the ruling party members under the Chairmanship of our Chief Minister. Why should this happen? Because, he has directly or indirectly whipped up the passions of everybody in his party. They start saying like this and their proximity to him is as the degree to which this blasphemous division of the country is preached in the name of State Autonomy. That is why we say that this practice should be put an end to.

Some two years ago, he showed us a flag in this House. He had shown to us and we had to discuss about it. In other words, that sort of feeling to have a separate flag does not emanate from a genuine feeling of asking for more powers.

In fact my submission is if there is one who can ruin getting more powers for the State, it is none else than my distinguished friend the Hon. Mr. Karunanidhi, the Chief Minister of our State. He alone is responsible more than anybody else in destroying the beautiful opportunity of getting more powers for the State. That is one thing I would like him to understand and see that he rectifies the passion that he has whipped up.

The other day I was talking about distribution of ration cards, the messing up of it. Immediately that day they brought in the State Autonomy. I talk about the increase in prices, they immediately bring in State Autonomy; I spoke about unemployment problem, they brought in State Autonomy. I talk of strikes, I talk of corruption, I talk of political confusion, whatever subject that I want the Government to properly tackle, the Hon. Chief Minister has always the knack of bringing then the State Autonomy, making it a subject of ridicule.

Another thing is this. Who is asking for state autonomy? Which party is asking for it? Who is making the whole subject a snow-ball-like thing. It is the D. M. K. It is the Chief Minister who belongs to that party. That has got to be studied and analysed and seen whether it is proper on our part to hand over state autonomy into his hands.

A fine knife is wanted by the surgeon for operation purposes. The person who wants it should know the proper manner of its use. My submission is this.

It is most dangerous to give state autonomy into the hands of our Hon. Chief Minister. Why? I have got several reasons for it. I would only say that what little power he has got, he has misused. I can give a number instances. The power he has already in his hands, he has thoroughly misused and messed up. I can give instances.

One is this. In Chengam Co-operative Bank on 17th March 1974, there was the Chengam Vatta Cooturavu Vistharippu and one E. Kuppusami decided certain things about the election.

தேர்தல் காலை 11 மணிக்குத் தொடங்கி 1-20-க்கு முடிவடையும். தி. மு. க.வைச் சேர்ந்த ஒரு பிரமுகர் சுமார் 30 பேர்களுடன் மத்தியானம் ஒன்றரை மணிக்கு வந்தார். அந்த ஆபீசரை மிரட்டி, தொல்லைகொடுத்து, அவர்களை வாக்காளர்களாக ஏற்றுக்கொள்ளுகிறீர்களா இல்லையா என்று அவர்களை அடிப்பதற்கு ஏற்பாடு செய்தார். அந்தக் கூட்டுறவுச் சங்கத்தின் சார்பாக மனுக்கொடுக்கப் போனார்.............................

Mr. DEPUTY SPEAKER: I would like to know what connec ion there is between election of the Co-operative Bank and State Autonomy. Let the hon. Member explain.

Dr. H. V. HANDE: If the Hon. Deputy Speaker could kindly go through my amendments he would have seen that in the name of state autonomy, several things are committed. Whatever power is in the hands of the Chief Minister, that is being misused and therefore no further power should be given to him. I am giving only examples to say that he is misusing the power in his hands. I am giving only marginal cases. And then this association has given a complaint and they wanted the Registrar to interfere. What happened? The Registrar—I have got facts and figure here—that day was bamboozled and threatened by another important man of the ruling party. He has told the Association—

நீங்கள் என்னிடத்திலே கொடுக்க வந்தீர்கள். எனக்கே பாதுகாப்பு இல்லையே, நான் என்ன செய்வது.

This is what he has said. In other words, the powers are being misused. That is one example. Example No. 2 is.........

Thiru M. V. KARIVENGADAM: Sir, the hon. Member says that powers of the Chief Minister have been misused. If powers given under the Constitution to the Centre are misused, can they be divested, Sir?

Dr. H. V. HANDE: I am only citing instances to show that the Chief Minister has no right, the least legal sanction, for asking for more powers. It is up to the Chief Minister to refute it or any one of the ruling member to refute it.

திரு. கு. பெரியசாமி : துணைத் தலைவர் அவர்களே, இப்போது நாம் பேசிக்கொண்டிருப்பது, மாநில சுயாட்சி பற்றி, ராஜமன்னார் குழு அறிக்கை பற்றி. சீப் மினிஸ்டர் பவரை மிஸ்யூஸ் பண்ணுகிறார் என்று இங்கே சொல்வது எப்படி பொருத்தமாக இருக்கமுடியும்?

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : அவர்களுடைய கேஸை விளக்குவதற்காக அவர்கள் சில வாதங்களைச் சொல்லலாம். அவர்களுடைய கருத்து அது. அவர்களுக்கு சொல்வதற்கு உரிமை இருக்கிறது, விட்டு விடுங்கள்.

DR. H. V. HANDE : Then again No. 2 example is in Thanjavur, Manickam Vandikara Street, Government aided school. Persons who were running the institution were assaulted by members of the ruling party for not obliging the premises to be used for conducting the 29th ward D.M.K. Elections. I am having number of such things.

Then I come to my amendment which relates to panchayats, municipalities and other local bodies. They have absolutely no freedom at all. The Government are conducting their affairs with them in a dictatorial manner. For instance, with regard to the Suramangalam Town Panchayat—I have mentioned it several times in this House—I have received petitions......

THIRU K. NAGARAJAN: Sir, I would like to seek one clarification from the hon. Member. Parliament and the Legislatures have powers to legislate and they are not like panchayats or municipalities which are just administrative bodies and they cannot make laws. How he is equating both of them, I cannot understand . . . .

டாக்டர் எச். வி. ஹாண்டே : எனக்கு அவர்களுடைய கருத்து ரொம்ப உதவிகரமாக இருக்கிறது. அதற்காக நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : 10-35 மணிக்கு ஆரம்பித்தீர்கள். 11-10 மணிக்குள் முடித்துக்கொள்ளுங்கள். அதற்குத் தகுந்த மாதிரி விளக்கத்தை வைத்துக்கொள்ளுங்கள்.

திரு. க. உரொ. எட்மண்ட் : 11-15 மணி வரை கொடுங்கள்.

DR. H. V. HANDE : Sir, I am very grateful to the Hon. Member for helping me . . . . . .

அவரே சொல்கிறார். பஞ்சாயத்துக்களுக்கு பவர்ஸ் கொடுக்கக்கூடாது, முனிசிபாலிட்டிகளுக்குக் கொடுக்க வேண்டிய தேவையில்லை என்று சொல்கிறார். அந்தமாதிரிதான் வரவேண்டும். எனக்குச் சாதகமாக இருக்கிறது.

THIRU K. M. SUBRAMANIAM : Sir, I do not want this House to be misled. What he has stated . . . . . .

திரு. முனு ஆதி : இப்படி குறுக்கீடு அதிகமாகிக்கொண்டே இருந்தால் எப்படி பதில் சொல்வது? பிறகு சீக்கிரம் உட்காருங்கள் என்று சொல்வீர்கள்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : அந்த நேரத்தை, ஒரு நிமிஷம், இரண்டு நிமிஷம் அலவன்ஸ் கொடுப்போம்.

திரு. முனு ஆதி : திரு. பெரியசாமி அவர்கள் குறுக்கிட்டுக்கொண்டு வருவதைப்பார்த்தால் ஏதோ திட்டமிட்டு குறுக்கிடுவதைப்போல் தோன்றுகிறது.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : அந்த மாதிரிக் கருத்தில் நீங்கள் எடுத்துக்கொள்ள வேண்டாம்.

திரு. நா. வீராசாமி : தலைவரவர்களே, திரு. நாகராசன் அவர்கள் சொன்னதை மிஸ்லீட் செய்வது மாதிரி சொல்கிறார்கள். ஹாண்டே சொல்வதுமாதிரி அவர் சொல்லவில்லை.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : எல்லோரும் எழுந்து நின்றால் எப்படி? ஒவ்வொருவராக எழுந்து சொல்லுங்கள்.

THIRU K. M. SUBRAMANIAM : Sir, I want to enlighten this House......

MR. DEPUTY SPEAKER : This is a matter between Thiru Nagarajan and Dr. Hande.

THIRU K. M. SUBRAMANIAM : He has stated something which would lead to serious consequences. Are we to suffer......

DR. H. V. HANDE: Thiru Nagarajan is very intelligent and he can look after himself.

என்னுடைய வாதத்திற்கு அவர் இன்னும் கொஞ்சம் வலிவூட்டுகிறார். பஞ்சாயத்துக்களும், முனிசிபாலிட்டிகளும் அந்த அளவிற்குக்கூட இன்றைக்குச் சுதந்திரம் பெறுவதற்கான வாய்ப்பு தமிழ்நாட்டு முதலமைச்சருடைய சர்க்காரில் கிடையாது என்று திட்டவட்டமாக நான் சொல்வதற்குத் தயாராக இருக்கிறேன். ஒரு கடிதத்தைப் படிக்கிறேன்.

This is a letter written by Thiru Raghavachari to the highest person in the State. It is as follows :—

'I have submitted all the facts to the Education Minister, Local-Self Government Minister, Labour Minister and also to Dr. Kalaignar, the Honourable Chief Minister. All of them seem to wink at . . . . .'

MR. DEPUTY SPEAKER: The hon. Member has only referred to Thiru Raghavachari. What is his address?

DR. H. V. HANDE: Thiru S. S. Raghavachari, President, Suramangalam Town Panchayat, Salem Junction, Salem-5.

I have shown the letter to the Hon. Speaker. Thiru Raghavachari has further stated—

'I am sending out this cry from my lacerated heart and appeal to you to kindly make the inspecting officers and Government do their duty and see that the local officer backed by certain important persons is corrected. (I am not reading their names). I pray that the democratic institution of Grama Raj (so dear to Mahatma and all of us) is allowed to function...... '

என்ன செய்தார்? வேறு ஒரு ஆபீசர், ஏறத்தாழ இரண்டரை ஆண்டுக் காலம், நல்ல முறையில் எலக்ட் செய்யப்பட்ட, ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் நல்லவகையில் ஓட்டுகளைப் பெற்று, ஜனநாயக ரீதியாக வந்துள்ள ஒருவர் தலைவராகச் செயலாற்ற முடியாத அளவிற்கு இரண்டரை ஆண்டுக்காலம், ஒரு அதிகாரியாலே நிறுத்தி வைக்கப்பட்டு, ஜனநாயகத்தினுடைய உணர்ச்சிகளையெல்லாம் முடக்கக் கூடிய அளவிலே செயலாற்ற முடியுமென்றால் நான் கேட்கிறேன், நான் காட்டமாகக் கேட்க முடியும். நான் ஏற்கனவே ஒரு தடவை கேட்டேன், இப்படியிருக்கும் பொழுது என்ன யோக்கியதை இருக்கிறது என்று கேட்டேன். ஆனால் இன்றைக்கு அப்படிக் கேட்க மாட்டேன், ரொம்பக் கஷ்டமாக இருக்கிறது. அப்படித் தாராளமாகக் கேட்கலாம்.

MR. DEPUTY SPEAKER : I would request the hon. Member not to use the expression 'Yogyathai'. It sounds insensible.

டாக்டர் எச். வி. ஹாண்டே : தகுதி என்று வேண்டுமானால் சொல்கிறேன். போன தடவை சொன்னேன், அவ்வளவு காட்டமாக இப்பொழுது சொல்லமாட்டேன். போன தடவை சொன்னது ரெக்கார்டிலே போய் இருக்கிறது. இப்பொழுது கேட்கிறேன், என்ன தகுதி இருக்கிறது என்று கேட்கிறேன். நான் இதை முதலமைச்சரைக் கேட்கிறேன். என்னுடைய திருத்தத்திலேயும் அதைத்தான் சொல்லியிருக்கிறேன், எதிர்க்கட்சிக்காரர்களிடம் உள்ள பஞ்சாயத்துக்களுக்கு எப்படித் தொல்லை கொடுத்துக்கொண்டிருக்கிறீர்கள் என்பதற்கு ஒரு ஆதாரம் கொடுத்தேன். இப்பொழுது ஒன்று தருகிறேன். இப்படி ஒவ்வொன்றாகக் கொடுத்துக் கொண்டிருப்பேன்.

திருச்சியிலே நகராட்சியிலே ஸ்தாபன காங்கிரசைச் சேர்ந்த டாக்டர் ரங்கநாதன் அவர்கள் தலைவர். அந்த இடத்திலே, இங்கே எப்படி துணை சபாநாயகர் இருக்கிறாரோ இதைப்போல—உதாரணத்திற்காகச் சொல்கிறேன், இவருக்கிருக்கும் பவர்ஸ்கூட அவருக்கு இருக்கிறதா இல்லையா என்பதெல்லாம் டெக்னிகல் பாயிண்ட்—ஆகவே அதை விட்டுவிடுகிறேன்.

முன்னதாக காத்தமுத்து என்பவர் கலெக்டரைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். அப்பொழுது உறுப்பினர்கள் பேசிய பிறகு அங்கே கமிஷனர் தமது கருத்தைத் தெரிவிக்கலாம் என்று இரத்தினம் என்ற ஒரு உறுப்பினர் கேட்டுக்கொண்டிருக்கிறார். கமிஷனர் பிறகு பேசலாம், நான் பேசுகிறேன், என்று கேட்டிருக்கிறார்கள். ஆனால் என்ன நடந்திருக்கிறது ? இதையடுத்து கமிஷனர் தலைவரை நோக்கி தங்களைப் பேச அனுமதி கேட்டார். தலைவர் அனுமதி மறுக்கிறார். அதன் விளைவாகக் காட்டமாகப் பேசப்பட்டு, எப்படி அனுமதி மறுத்தீர்கள் என்று கமிஷனர் கேட்கிறார். கமிஷனர், என்னை எப்படி அனுமதிக்கவில்லை என்று காட்டமாகப் பேசிவிட்டு வெளி நடப்பு செய்கிறார். உடனே பரபரப்பான நிலைமை. அப்பொழுது அங்கேயுள்ள முனிசிபாலிட்டி தலைவர் வேதனைப்பட்டு இங்கே செயலாற்ற முடியாது என்று.............

திரு மு. வேதாசலம் : மாநில சுயாட்சி பற்றிப் பேசும் பொழுது இது எப்படி வரும் ?

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : இப்படி அடிக்கடி குறுக்கிட்டால் மேலும் 5 நிமிஷம் வேண்டுமென்று கேட்பார்.

டாக்டர் எச். வி. ஹாண்டே : இன்னும் பத்து நிமிஷத்தில் முடித்து விடுகிறேன்.

1974 ஏப்ரல் 18]

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : இல்லை, இன்னும் 5 நிமி ஷங்களில் முடித்துவிடுங்கள்.

டாக்டர் எச். வி. ஹாண்டே : என்னுடைய திருத்தத்தைப் படித்திருந் தால் இந்தக் குழப்பங்கள் அவர்களுக்கு ஏற்பட்டிருக்காது. நீங்கள் மாநில சுயாட்சி கேட்பதற்கான தகுதியை இழந்துவிட்டீர்கள். உங் களுக்கு அந்தச் சாவியைக் கொடுத்தால் தீமைகள் இன்னும் அதிகமாக வரும்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : அப்படியானால் இரண்டு வருஷங் கள் கழித்து மாநில சுயாட்சி கேட்கலாமா ?

டாக்டர் எச். வி. ஹாண்டே : நான் பேசும்பொழுது முதலமைச்சர் இங்கே இல்லை என்று கருதுகிறேன். என்னுடைய முன்னுரையிலேயே தெளிவாக நான் சொல்லியிருக்கிறேன். அதிக அதிகாரம் கேட்பது நியாயம் என்று முதலிலேயே சொல்லிவிட்டு...........

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : நாங்கள் ஆட்சியிலே தொடர்ந்து இருந்தால்தான் மாநில சுயாட்சி வந்தால் ஆபத்து என்பது ஹாண்டே அவர்களுடைய வாதம். ஆனால் இரண்டாண்டுகளுக்குப் பிறகு நாங்கள் ஆட்சியிலே இருக்க மாட்டோம் என்ற அவர்களது கற்பனை வெற்றி யடைந்தபிறகு அவர்கள் மாநில சுயாட்சி வாங்கிக் கொள்வதற்குத் தயாரா ? அப்பொழுது கொடுக்க வேண்டுமென்று கேட்பார்களா ?

டாக்டர் எச். வி. ஹாண்டே : கற்பனை யாருக்கு என்பது 24 ஆம் தேதி தேர்தலுக்குப் பிறகு, நம்முடைய முதலமைச்சருக்குக் கற்பனையா, நமக்குக் கற்பனையா என்பது 26 ஆம் தேதி ஓட்டு எண்ணிக்கைக்குப் பிறகு தெரிந்துவிட்டது. எனவே, கற்பனையைப் பற்றி மதிப்பிற்குரிய முதலமைச்சரவர்கள் எனக்குச் சொல்ல வேண்டிய தேவையில்லை. நிச்சய மாக நீங்கள் நல்ல ஆட்சி நடத்தியிருந்து இதைக் கேட்டிருந்தால் நன்றாக இருந்திருக்கும். அந்த வாய்ப்பை இழந்துவிட்டீர்கள்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : மாநிலத்தில் இவர்களுடைய ஆட்சி நல்ல ஆட்சியாக இல்லை, ஆகவே, மாநில சுயாட்சி தேவையில்லை என்பது உங்கள் கருத்து.

டாக்டர் எச். வி. ஹாண்டே : நல்ல ஆட்சியாக இருந்தால் கேட்பதற்கு உரிமையிருக்கிறது. நாங்கள் வந்தால் நிச்சயமாகக் கேட்போம். அப் பொழுது கொடுக்க வேண்டுமென்பதில் சந்தேகம் கிடையாது.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : அப்படி நீங்கள் கேட்கும்பொழுது ஒருவேளை நாங்கள் எதிர்க்கட்சியிலே இருந்தால் நிச்சயமாக ஆதரிப்போம், பரந்த மனப்பான்மையோடு.

டாக்டர் எச். வி. ஹாண்டே : நாங்கள் நடத்தும்பொழுது நல்லாட்சியாக இருக்கும் காரணத்தினுலே நீங்கள் ஆதரித்துத்தான் ஆகவேண்டும், ஆதரிப்பீர்கள் என்றும் தெரியும். அப்பொழுது நீங்களும் நல்லவர்களாகிவிடுவீர்கள் என்றும் தெரியும். நல்லவர்தான். (Intrinsically he is a good man) ஆனுல் இப்பொழுது கொஞ்சம் பவர் ஜாஸ்தியாக இருப்பதால் இப்படித் தவருன வழியில் போகிறீர்கள்.

முதலிலேயே நான் சொன்னேன். இரண்டரை ஆண்டுகளுக்குப் பிறகு ஏன் கொண்டு வந்தீர்கள்? அதுதான் முக்கியம். அண்ணு திராவிட முன்னேற்றக் கழகம் தோன்றியது. உங்களுக்கு அண்ணு திராவிட முன்னேற்றக் கழகத்துடன் மோத வேண்டுமென்பதுதான் பிரச்சினை. உங்களுக்குத் தோல்வி மேல் தோல்வி. திண்டுக்கல் தோல்வி, கோவையில் தோல்வி, இன்னெரு இடத்தில் தோல்வியைப் பற்றிச் சொன்னுல் அது வேறு மாநிலம் என்று சொல்லிவிடுவீர்கள். தோல்விக்கு மேல் தோல்வி. ஒரு பெரிய கப்பல் ஓட்டையாகி விட்டது. ஆளும் கட்சி கப்பல் ஓட்டையாகிவிட்டது. அந்தக் கப்பல் மூழ்கிவிடக்கூடிய பயங்கரமான நிலையில் "லைஃப் பெல்ட்" தேவை. "சிங்கிங்" நிலையில் லைப் பெல்ட் தேவை. லைப் பெல்ட்டாக மாநில சுயாட்சியை எடுத்துக் கொண்டீர்கள். அதை வைத்துத் தப்பித்துக் கொள்ளலாமா என்று பார்க்கிறீர்கள். இத்தனை வருஷ காலமாக இல்லாமல் இப்போது எதற்காகக் கொண்டு வந்தீர்கள். பரபரப்பான நிலைமையை உண்டாக்க வேண்டுமென்று பார்க்கிருர்கள்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணுநிதி : தலைவர் அவர்களே, இப்போது தான் ஏதோ இடைத் தேர்தல் தோல்விக்குப் பிறகு மாநில சுயாட்சிக் கொள்கையை முன்வைப்பதாகச் சொல்லுகிருர்கள். ஒரே ஒரு விஷயத்தைத் தங்கள் அனுமதியோடு படிக்கிறேன்.

1972 ஆம் ஆண்டு மே திங்கள் 6, 7 தேதிகளில் தஞ்சை மாவட்டத்திலுள்ள மன்னுர்குடியில் நடைபெற்ற தி.மு.க. மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம்—

"இந்திய நாட்டின் ஒருமைப்பாட்டின் பாதுகாப்புக்கு மேலும் வலிவு தரும் வகையில் மத்திய அரசு பலமுள்ளதாகவும், மாநில அரசுகள் மக்களுக்கு வளம் பெருக்கும் வகையில் அதிகார உரிமைகளைப் பெற்றவைகளாகவும் விளங்கும் வண்ணம் தி.மு.க. கோரி வருகிற மாநில சுயாட்சிக் கோரிக்கைக்கு மத்திய அரசு செவிமடுத்து ராஜமன்னுர் குழு அறிக்கையின் அடிப்படையில் அதற்கான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டுமென்று இந்த மாநாடு கோருகிறது."

என்ற தீர்மானத்தை முன்மொழிந்து இன்று அண்ணு திராவிட முன்னேற்றக் கழகத்தில் இருக்கும் திரு. எஸ். டி. சோமசுந்தரம் அவர்கள் பேசியிருக்கிருர்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

1974 ஏப்ரல் 18]

திரு. க. உரொ. எட்மண்ட் : தலைவர் அவர்களே, எங்கள் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகக் கொள்கை பரப்புச் செயலாளர் மதிப்பிற்குரிய திரு. எஸ்.டி. சோமசுந்தரம் அவர்கள் இந்தத் தீர்மானத்தை முன்மொழிந்ததாக மாண்புமிகு முதல்வர் அவர்கள் சொன்னார்கள். அதை ஏற்றுக் கொள்கிறேன். இல்லையென்று சொல்லவில்லை. ஆனால் இன்றைக்கு அந்த மாநில சுயாட்சி என்று கூறப்படுவதை எதற்காக எதிர்க்கிறோம் என்றால், உங்களை விட்டுப் பிரிந்த பின்னால் உங்களிடம் இருக்கும் அதிகாரத்தை நீங்கள் எந்த அளவுக்குத் தவறான வழியில் பயன்படுத்துகிறீர்கள் என்பதைப் பார்த்த பிறகு .. .. ..

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : நான் சொன்னதற்கு திரு. எட்மண்ட் அவர்கள் குறுக்கிடுவது சரியாகத் தெரியவில்லை. அவர் பேசும் போது விளக்கங்களைச் சொல்லலாம். தலைவர் என்ற முறையில் விளக்கம் அளிக்கிறார் என்றால் நான் இன்னொன்று கேட்க விரும்புகிறேன்.

நான் சொல்ல வந்தது—டாக்டர் ஹாண்டே அவர்கள் குறிப்பிட்டது. இதுவரை திராவிட முன்னேற்றக் கழகம் மாநில சுயாட்சி பற்றிப் பேசவில்லை ; இடைத்தேர்தல் தோல்விக்குப் பிறகு பலவீனத்தை மறைக்க மாநில சுயாட்சிக் கொள்கையைக் கொண்டு வந்திருப்பதுபோல் சொன்னார்கள். அப்படி அல்ல. 1970-ம் ஆண்டிலேயே மாநில சுயாட்சி மாநாடு போட்டிருக்கிறோம். அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தில் இருக்கும் பல தலைவர்கள் அன்று அதிலே கலந்து கொண்டிருக்கிறார்கள். மன்னார் குடியில் 1972-ம் ஆண்டில் இன்று அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தில் இருக்கும் திரு. எஸ்.டி. சோமசுந்தரம் தீர்மானத்தை முன்மொழிந்து பேசியிருக்கிறார்கள் என்பதையும் தெரிவித்தேன்.

திரு. க.உ.ரொ. எட்மண்ட் : எங்கள் கட்சியைச் சார்ந்த டாக்டர் ஹாண்டே அவர்கள் வெளியே பேசியதைப்பற்றியோ, மாநாடுகளில் தீர்மானங்கள் போட்டதுபற்றியோ குறிப்பிடவில்லை. 1969-ம் ஆண்டில் ராஜமன்னார் தலைமையில் குழு போடப்பட்டு அவர்கள் 1971-ம் ஆண்டில் தங்களுடைய அறிக்கையைக் கொடுத்திருக்கிறார்கள். அப்படிக் கொடுத்து மூன்று ஆண்டுகளுக்குப் பிறகுதான் இந்தத் தீர்மானம் இங்கே கொண்டு வரப்பட்டிருக்கிறது. இதற்கிடையில் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் தொடங்கப்பட்டு, அதற்குப் பின்னால் இடைத் தேர்தல்கள் நடைபெற்று படுதோல்வியடைந்த பிறகு அந்தத் தோல்விகளைச் சமாளிப்பதற்காக மக்களைத் திசை திருப்புவதற்காக அதற்காக இந்த அவையில் நாட்களை ஒதுக்கி இந்த மன்றத்தில் தீர்மானத்தை வைத்திருக்கிறார்கள் என்றுதான் டாக்டர் ஹாண்டே அவர்கள் கேட்கிறார்களே தவிர, வெளியே பேசவில்லை என்று சொல்லவில்லை என்றுதான் கருதுகிறேன். இதை அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்று கருதுகிறேன்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : ராஜமன்னார் குழு அறிக்கை மாநில சுயாட்சி அடிப்படையில் போடப்படும் என்பதை இந்த மன்றத்தில் அறிவித்திருக்கிறேன். அதற்குப் பிறகு பல நேரங்களில் நாம் எல்லாம்

ஒன்றாக இருந்த நேரத்தில், அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் உருவாகாதபோது, மாநில சுயாட்சியைப்பற்றி பல நேரங்களில் பேசி வந்திருக்கிறோம். அதை ஆதரித்து இன்று அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தில் இருக்கும் உறுப்பினர்கள் அன்று பேசியிருக்கிறார்கள். ஆகவே, இது புதிதாக இந்த மன்றத்தில் பேசப்படுகிற பேச்சல்ல. மாநில சுயாட்சிபற்றி ராஜமன்னார் குழு அறிக்கை அளித்த பிறகு காலதாமதம் ஆகக் காரணம் என்ன என்று கேட்கிறார்கள். இடையில் ஒரு கமிட்டி போட்டோம். செழியன், மாறன்—குழுவில் மனோகரன், கே.ஏ. கிருஷ்ணசாமி போன்றவர்கள் எல்லாம்கூட இருந்தார்கள். அவர்கள் எல்லாம் சேர்ந்து நல்ல யோசனைகளை வெளியிட்டார்கள். அந்த யோசனைகளின் தொகுப்பை ஆளும் கட்சி ஆராய்ந்து, வேறு பல அறிக்கைகளை ஆராய்ந்து ஏ.ஆர்.சி. குழு போன்றவற்றின் அறிக்கைகளை ஆராய்ந்து மொத்த வடிவமாக தீர்மானத்தைக் கொடுத்திருக்கிறது. இடையில் இரண்டாண்டு காலம் எதுவும் இல்லாத வெட்ட வெளியான சூழ்நிலை ஏற்பட்டுவிடவில்லை. பல நேரங்களில் மாநில சுயாட்சியைப்பற்றி நானும் அமைச்சர் பெருமக்களும், மற்றவர்களும் பேசி வந்திருக்கிறோம்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : டாக்டர் ஹாண்டே அவர்கள் இன்னும் இரண்டு நிமிடங்களில் முடித்துவிட வேண்டும்.

டாக்டர் எச். வி. ஹாண்டே : முடியாது .. .. ..

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : உங்களுக்காக திரு. எட்மண்ட் அவர்கள் வக்கீல் வேலை செய்திருக்கிறார். அதனால்தான் டைம் ஆகிவிட்டது.

டாக்டர் எச். வி. ஹாண்டே : நான் பேசுகிறேன். சென்டன்ஸை முடிப்பதற்குள் ஒரு வரி சொல்லுவதற்குள் முதலமைச்சர் குறுக்கிட்டு பேசுகிறார். எனக்கு ஐந்து நிமிஷம் வேண்டும். ஐந்து நிமிஷம் பொறுமையோடு கேட்க வேண்டும். பேசும்போது குறுக்கிட வேண்டாம். பிறகு பதில் சொல்லட்டும்.

நான் திட்டவட்டமாகச் சொல்லுகிறேன். அவர்கள் படிப்படியாக மாநில சுயாட்சி கோஷத்தை ஆரம்பித்தார்கள். ஆரம்பித்தபோது இவ்வளவு டெம்போ கொடுக்கவில்லை. அமைதியாக டிஸ்கஸ் பண்ணினோம். நான் சுதந்திரக் கட்சியில் இருந்தபோது ராஜாஜி உட்பட அவ்வளவு பேரும் மாநிலத்திற்கு ஜாஸ்தி பவர் கொடுக்க வேண்டுமென்று தெளிவாகச் சொல்லியிருக்கிறோம். இப்பொழுதும் சொல்லுகிறோம். ஜாஸ்தி அதிகாரம் வேண்டுமென்பதுதான் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் திட்டவட்டமான கொள்கை. ஆனால் உங்களுடைய நோக்கம்—அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் துவங்கிய பிறகு அந்த டெம்போவை இன்க்ரீஸ் பண்ணிக் கொண்டிருக்கிறீர்கள். அவ்வளவு கூடவா எங்களுக்குத் தெரியவில்லை ? படிப்படியாக இப்போதிருந்தே

சூடேற்றிக் கொண்டிருக்கிறீர்கள். எதுவரை இந்த டெம்போவை இன்க்ரீஸ் பண்ணிக் கொண்டிருப்பீர்கள்? இன்னும் ஒன்றரை ஆண்டு காலத்திற்கு டெம்போவை இன்க்ரீஸ் பண்ணிக் கொண்டிருப்பீர்கள். 1976க்கு ஆறு மாதத்திற்கு முன்பு ஆர்டிகிள்ஸ் 256, 365, 356 ஆகியவற்றை எல்லாம் வைத்து இந்த அரசாங்கத்தை டிஸ்மிஸ் செய்து விட்டால் என்ன ஆகும்? ஒரு ஹூராய்சம், மாநில சுயாட்சி கேட்டதற்காக நாங்கள் வெளியேற்றப்பட்டோம் என்பார்கள். திட்டமிட்டுச் செய்கிறார்கள். அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்திற்குப் பயந்து கொண்டு பேசுகிறார்கள். இன்றையதினம் ஒரு கன்ப்ராண்டேஷன் ஏற்படாதா என்று பார்க்கிறார்கள்.

It is a choice taken at a particular time.

இன்றைக்கு அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தைக் கண்டு பயந்து பொதுமக்களைத் திசை திருப்புவதற்காக மாநில சுயாட்சி என்று கூறிக் கொண்டிருக்கிறார்கள். ஓட்டைக் கப்பலிலிருந்து தப்பித்துக் கொள்ளுவதற்காகப் பேசப்படுகிற பேச்சு. பிரசிடெண்ட் இப்போது கலைக்கக் கூடாது. $1\frac{1}{2}$ ஆண்டு காலத்திற்குத் திட்டம் போட்டு சூடேற்ற வேண்டும். ஐந்து நாட்கள் இதை டிஸ்கஸ் பண்ணுகிறோம் என்று இன்று சொல்லி விட்டு 1976க்கு ஆறு மாதத்திற்கு முன்னால் நடக்கப் போவதைப் பாருங்கள். பொதுமக்களிடம் ஒரு சிம்பதி வருவதற்காகத் திட்டமிட்டுச் செய்து கொண்டிருக்கிற சதி இது.

You want to be dismissed by President's proclamation.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : இரண்டாண்டுகளுக்குப் பிறகு தீர்மானம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இது சதி என்று சொன்னார். திருமணமாகி இரண்டு ஆண்டுகள் கழித்துக் குழந்தை பிறக்கிறது என்றால் திருமணமான மறுநாளே ஏன் பிறக்கவில்லை என்ற விபரீதமான கேள்வியைக் கேட்கிறார்.

டாக்டர் எச். வி. ஹாண்டே : நம்முடைய கலைஞர் அவர்கள், நான் நிர்மாணச் சட்டம் பற்றியும், மாநில சுயாட்சி என்று சொல்லும்போது முக்கியமான அதிகாரங்கள் என்ன என்று சொல்லும்போது அவருக்கு ஞாபகம் திருமணம், குழந்தைதான். ஒரு லா பாயிண்டாவது பேச முடியுமா?

Is it relevant?

திருமணம், குழந்தை இந்த மாதிரிதான் சொல்ல முடியும்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : மாநில சுயாட்சி என்ற வகையில் அதிக அதிகாரங்கள் தேவை என்பதுபற்றி உங்கள் கட்சியின் கொள்கை என்ன?

டாக்டர் எச். வி. ஹாண்டே : மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டுமென்பதுதான் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கை.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : நான் கேட்பது—"கட்டுண்டு வாழோம்"; பிரிவினை நாடோம்; சமநிலையில் இணைவோம்" என்ற இந்த மூன்றுக்கும் அர்த்தம் என்ன ?

டாக்டர் எச். வி. ஹாண்டே : We are neither for dependence nor independence but for inter-dependence.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : எனக்கு ஆங்கிலம் தெரியாது. தமிழில் விளக்குங்கள்.

டாக்டர் எச். வி. ஹாண்டே : தமிழ் உங்களுக்குப் புரியும். தமிழ் கலைஞருக்கு புரியவில்லை என்றால் அதை நான் ஏற்றுக் கொள்ள முடியாது.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : கட்டுண்டு வாழோம் என்றால் எதில் எதில் கட்டுண்டு வாழ மாட்டோம். வெளிநாட்டு உறவு. மத்திய சர்க்கார் வெளிநாட்டு உறவில் தனியாக இருக்க வேண்டுமா, அல்லது கட்டுண்டு வாழாமலிருப்பீர்களா, அன்னியச் செலாவணியில் கட்டுண்டு வாழாமலிருப்பீர்களா, தேசீய பாதுகாப்பில், கட்டுண்டு வாழாமலிருப்பீர்களா கட்டுண்டு வாழோம் என்றால் எதிலும் கட்டுண்டு வாழ மாட்டோம் என்று சொல்லுவதுதான் பிரிவினை.

திரு. க. உரொ. எட்மண்ட் : கட்டுண்டு வாழோம் என்றால் எதிலும் கட்டுப்பட்டு வாழ மாட்டோம் என்பது பொருள் இல்லை. விளக்கமாகச் சொல்லுகிறேன். கட்டுண்டு வாழோம் என்பதைத் தனிப்பட்ட முறையில் மாத்திரம் அந்த வார்த்தையை எடுத்துக் கொள்வீர்களானால் கம்ப்ளீட் இன்டிபெண்டன்ஸ், எதிலும் கட்டுப்பட்டு வாழ மாட்டோம் என்பது. அண்ணா திராவிட முன்னேற்றக்கழகம் இந்தக் கொள்கையைப்பற்றி சொல்லுகின்ற நேரத்தில் கட்டுண்டு வாழோம் என்ற வார்த்தை மாத்திரம் சொல்லிவிட்டு முடிக்கவில்லை. கட்டுண்டு வாழோம் என்று சொல்லி முடித்துவிட்டு, உடனே அதையடுத்து பிரிவினை நாடோம் என்ற வார்த்தையைச் சொல்லியிருக்கிறோம். இதை யாரும் சந்தேகிக்க கூடாது என்பதற்காக அல்லது தவறான வழியில் இதற்குப் பொருள் கொடுக்கக்கூடாது என்பதற்காக மத்திய அரசாங்கமும், மாநில அரசாங்கமும் சமநிலையில் இணைவோம் என்று சொல்வதிலிருந்து நாங்கள் கட்டுப்பட்டு வாழ மாட்டோம் என்று அதற்கான பொருளை முதலமைச்சர் போன்ற டாக்டர் கலைஞர் அவர்கள் புரிந்து கொள்வார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : எந்தெந்த விஷயங்களில் சமமான நிலையில் இணைவீர்கள் ?

1974 ஏப்ரல் 18]

திரு. க. உரொ. எட்மண்ட் : கட்டுண்டு வாழோம், பிரிவினை நாடோம், பிரிவினையைக் கேட்கின்ற அதிகாரங்களைக் கேட்காமல், அதே நேரத்தில் மத்திய அரசாங்கத்திற்கு முழுமையாக அடிமையாக இல்லாமல், சம நிலையில் இணைவோம். மாநில அரசாங்கம் அந்த அரசாங்கத்தை நடத்துவதற்கு உண்டான போதுமான அதிகாரங்கள், மத்திய அரசாங்கம் ஒருமைப்பாட்டைப் பேணிக் காப்பதற்காக, வெளிநாட்டு கலாச்சாரத்தை அல்லது வெளிநாட்டு காரியங்கள் ஆற்றுவதற்கு மத்திய அரசாங்கத்திற்கு உண்டான அதிகாரம் அவர்களிடம் இருக்க வேண்டுமென்று சொல்லி, குறிப்பிட்டுக் காட்டுவதற்குத் தான் கட்டுண்டு வாழோம், பிரிவினை நாட மாட்டோம். ஆனால் மத்திய அரசாங்கத்தோடு மாநில அரசாங்கம் சம நிலையில் இணைவோம் என்ற வார்த்தையை மூன்று பகுதியாகச் சேர்த்துச் சொல்லியிருக்கிறோமே தவிர வெறும் கட்டுண்டு வாழோம் என்று நாங்கள் சொல்லவில்லை என்பதை முதல் அமைச்சர் அவர்கள்.. ..

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : அது தான் கட்டுண்டு வாழோம் என்று சொல்லி விட்டு, ஓஹோ, நாம் விடுதலை கேட்டோம் என்று சந்தேகப்படுவார்கள் என்பதற்காக பிரிவினை நாடோம் என்று தேவையில்லாமல் ஒரு வார்த்தையைப் போடுகிறீர்கள். அதைத் தான் இன்று இந்திய ஒருமைப்பாட்டை, அந்த ஒற்றுமையை மாநில சுயாட்சி என்று சொல்லுகிறோம். நீங்கள் கட்டுண்டு வாழோம் என்று சொல்லைச் சொல்லி விட்டு, வாய் தவறியோ என்னவோ கம்பிளீட் இண்டிபெண்டன்ஸ் என்று குறிப்பிட்டீர்கள். கட்டுண்டு வாழோம் என்றால் அது தான். அதற்குப் பிறகு பிரிவினை நாடோம் என்ற வார்த்தையைப் போடுகிறீர்கள். ஆகவே, அந்தக் குழப்பம் தேவையில்லை என்பதற்காக இந்திய ஒருமைப்பாடு பாதிக்காமல், மாநில சுயாட்சி என்ற வார்த்தையை நாம் பயன்படுத்துகிறோம்.

திரு. க. உரொ. எட்மண்ட் : அப்படிப் பார்க்கப் போனால் நாம் கேட்கின்ற மாநில சுயாட்சி என்ற வார்த்தையைத் தமிழ் படுத்தினால் இண்டிபெண்டன்ஸ் என்று தான் பொருள்படும். மாநில சுயாட்சி என்றால் இண்டிபெண்டன்ஸ் என்ற பொருளை நாம் எடுத்துக் கொள்ளலாம்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : சுயாட்சிக்கு அண்ணா தந்திருக்கிற பொருளே ஸ்டேட் அடானமி என்பது தான். அடானமி தான் சுயாட்சிக்குப் பொருள். இண்டிபெண்டன்ஸ் என்றால் சுதந்திரம்.

திரு. க. உரொ எட்மண்ட் : அண்ணா சுயாட்சி என்ற வார்த்தையை எங்கேயும் பயன்படுத்தியதாக எங்களுக்கு தெரியவில்லை.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : அண்ணா அவர்கள் கோரி வந்த மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் எப்படி, எப்படி வேண்டும் என்பதைப் பற்றி எல்லாம் மாண்புமிகு உறுப்பினர், எதிர்க்கட்சி துணைத் தலைவர் திரு எட்மண்ட் அவர்கள் படித்திருப்பார்கள் என்று எண்ணுகின்றேன். அதன் மொத்த பொழிப்புரை மாநில சுயாட்சி என்று சொல்லுகிறார்கள்.

திரு. க. உரொா. எட்மண்ட்: முதலமைச்சர் அவர்களை நான் கேட்க விரும்புவது: அண்ணா அவர்கள் கூடுதல் அதிகாரம், ஸ்டேட் அடானமி என்று உபயோகித்திருக்கிறார்கள். இல்லை என்று சொல்லவில்லை. அண்ணா அவர்கள் இந்த மாநிலத்தினுடைய முதலமைச்சராக இருந்தபோது, இந்த மன்றத்திலே 67-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கை கொடுத்த நேரத்தில் மார்ச், ஜுன் மாதத்தில் பேசிய பேச்சில் நான் சொல்லுகிறேன். அண்ணா அவர்கள் மாநில சுயாட்சி என்கின்ற தமிழ் சொற்றொடரை எங்கே உபயோகப்படுத்தியிருக்கிறார்கள் என்பதைக் காட்ட முடியுமா?

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: அண்ணா அவர்கள் ஸ்டேட் அடானமி என்ற வார்த்தையை உபயோகப்படுத்தியிருக்கிறார்கள் என்று சொன்னார்கள். அது பதிவேட்டில் இருக்கிறது. ஸ்டேட் அடானமி என்ற ஆங்கில வார்த்தைக்கு மாநில சுயாட்சி தான் சரியான தமிழ்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்: கன்ப்யூஸ் பண்ணிக் கொண்டிருக்காதீர்கள். அடானமி என்பது கிரீக் வேர்ட். செல்ப் ரூல் என்றால் சுயாட்சி. சரியான தமிழ். அந்த அடிப்படையில் தயவு செய்து பேசுங்கள்.

டாக்டர் எச். வி. ஹாண்டே: நான் முதலில் பேசும்போது முதலமைச்சர் எங்கே இருந்தார்? நான் ஒவ்வொரு ஆர்டிகளையும், ஆர்டிகள் பை ஆர்டிகளாக அவருக்கு I can quote and explain நான் ஆர்டிகளை பற்றிப் பேசும்போது சந்தேகிக்க மாட்டார். சும்மா உட்கார்ந்து விட்டு, கடைசியில் போடுவார். அவர் டெக்னிக் எனக்குத் தெரியும்.............

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: நீங்கள் அந்த ஆர்டிகளில் எவ்வளவு தவறாகப் பேசியிருக்கிறீர்கள் என்ற புள்ளி விவரங்களை நாளை மறு நாள் பதிலில் விளக்குகிறேன்.

டாக்டர் எச். வி. ஹாண்டே: நான் என்ன சொல்கிறேன்? என் பாயிண்ட் எல்லாம் இந்தந்த முறையில் டிவைட் பண்ணுங்கள் என்று சொல்லுவது தவிர திட்டவட்டமாக நான் ஆரம்பித்த நேரத்தில் சொன்னேன். அப்போது அவர் பதில் கொடுக்கவில்லை. இதை திருப்பி, திருப்பிக் கேட்கிறார்கள். நம்முடைய நிலைமையைப் பொறுத்த வரையில் தெளிவாக சொல்லுகிறேன். (குறுக்கீடு) ஒரு நிமிடத்தில் முடித்து விடுகிறேன். ஆகவே முதலமைச்சர் மன்றத்தில் எப்போது வேண்டுமானாலும் எழுந்து பேசலாம். நான் அதற்குப் பதில் கொடுக்கக் கூடாது என்று இருந்தால் நான் பதில் கொடுக்க முடியாது. அதற்காகச் சொல்லுகிறேன். அவர் எழுப்பிய சந்தேகங்களுக்கு என்னிடம் பதில் இருக்கிறது.

1974 ஏப்ரல் 18]

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்: உங்கள் கட்சியின் தலைவர் உங்கள் நேரத்தை எடுத்துக் கொண்டார். உங்களை பிரிவெண்ட் பண்ணுகிறோம் என்று நீங்கள் எடுத்துக் கொள்ளக் கூடாது.

டாக்டர் எச். வி. ஹாண்டே: நம் நிலைமையைப் பொறுத்த வரையில் தெளிவாக நாம் சொல்லலாம். கிரேட்டர் பவர்ஸ் பார் தி ஸ்டேட் ஜாஸ்தி கொடுக்க வேண்டியது தேவை என்று சொல்லுகிறோம். ஆனால் உங்களுக்கும் நமக்கும் இருக்கிற வித்தியாசம் கடைசியாகச் சொல்லுகிறேன்.

As far as you are concerned, the accent, as evidenced by the number of speeches is on "பிரிவினை". The second thing is more important. As far as we are concerned, We are for more powers butwe do not want. பிரிவினை என்பதைக் கொண்டிருக்கிறோம் என்று சொல்லிவிட்டு நான் முடித்துக் கொள்கிறேன்.

திரு. செ. கந்தப்பன்: தலைவர் அவர்களே, அண்ணா அவர்களுடன் நெருங்கிப் பழகிவிட்டு, அண்ணாவின் கொள்கையில் பற்றும், பாசமும் கொண்டு, நீங்காத ஆர்வத்தோடு, அண்ணா அவர்கள் உயிரோடு இருந்த காலத்தில் எதிர்ப்பாக இருந்து, பின்னால் இன்றைக்கு எம்.ஜி.ஆர்., அவர்கள் தலைமையில் இயக்கத்தில் சேர்ந்திருக்கிற தலைவர் ஹாண்டே அவர்கள்................(குறுக்கீடு).

மாண்புமிகு பேரவை துணைத் தலைவர்: பர்ஸனல் ரெஃபரன்ஸ் இல்லாமல், தனிப்பட்ட முறையில் யாரையும் குறை கூறாமல் பேசுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

டாக்டர் எச். வி. ஹாண்டே: எந்த அளவுக்குப் பழகியிருக்கிறேன் என்பது அண்ணா அவர்களுக்குத் தெரியும். என் கருத்தைத் தாக்கிப் பேசுங்கள், என் கொள்கையைத் தாக்கிப் பேசுங்கள்.

திரு. செ. கந்தப்பன்: தலைவர் அவர்களே, அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் என்கின்ற வார்த்தைக்குப் பதிலாக, ஒரு வேளை தலைவர் என்ற வார்த்தையைப் பயன்படுத்தியது அவருக்கு ரொம்ப வருத்தமாக இருக்கலாம் என்பதால் திரும்பப் பெற்றுக் கொள்கிறேன். ஒன்றை நான் குறிப்பிட விரும்புகிறேன். என் பாராளுமன்ற அனுபவத்தில் இவ்வளவு கடுமையான, கொடுமையான, கூர்மையான வாசகங்கள் "அப்யூசிவ் லேங்குவேஜ்" என்று ஆங்கிலத்தில் சொல்வதாக இருந்தால், அந்த மாதிரி வார்த்தைகளை டாக்டர் ஹண்டே அவர்கள் பயன்படுத்துகிற அளவுக்கு வேறு எந்த பார்லிமெண்டேரியனும் பயன்படுத்திப் பார்த்ததில்லை (ஆரவாரம்).

ஆனால், நான் கட்டுப்பாடோடு பேச விரும்புகிறேன். எங்கள் பொருளில் வலிவு இருக்கிறது என்று உறுதியோடு நான் நம்புகிறேன். இங்கே இதற்கு முன்னால் பல வாதங்களை அழகாக மாண்புமிகு முதலமைச்சர் தந்திருக்கிறார். மதிப்பிற்குரிய மணலி அவர்கள் சிறப்பாகச் சொன்னார் கள். பிரச்னையைப் பாருங்கள் கர்த்தாவைப் பார்க்காதீர்கள். கருத்தை ஆராயுங்கள் என்பதை இங்கே வலியுறுத்திச் சொன்னார்கள். சில மாதங் களுக்கு முன்னாலே இண்டியன் எக்ஸ்பிரஸ் ஏட்டில், ஜனவரி 11-ந் தேதி ஏட்டில் இருக்கிறது. அந்த இரண்டு வரிகளை நான் சுட்டிக் காட்டு வது ரொம்பவும் பொருத்தமாக இருக்கும் என்று கருதுகிறேன்.

It would be disastrous to view the autonomy demand from the point of view of party politics என்று ஏறத்தாழ ஒரு நடுநிலைமையான நிலையில் சொல்லப்பட்ட கருத்து இது. இந்த மாநில சுயாட்சி பற்றிச் சொல்லும்போது மிகத் தெளிவான கருத்துவிளக்கம் கொடுத்திருக்கிறார்கள். மாநில சுயாட்சிக்கான காரணகாரியங்களை எடுத்துச்சொல்லுவதற்கு முன்னால் இன்றைக்குத் தனிப்பட்ட திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய போக்காக உள் நோக்கம் கற்பிக்கின்ற இந்த வாதம் இன்றைக்கு இங்கே பேசப்பட லாம். இதற்கு முன்னாலே கல்கத்தாவில், டெல்லியில் வந்திருக்கின்ற ஒரு ஏடு திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய தலைவர் மாநில சுயாட்சி கேட்பதைக் குறித்து என்ன எழுதியிருக்கிறது என்பதை நான் உங்கள் அனுமதியோடு இங்கே சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

(முற்பகல் 11-30)

As leader of the only non-Congress Government left in the country, he may have felt that he enjoys a special responsibility to stabilise Centre-State relationships in terms of Dr. Ambedkar's belief that the Indian Constitution was federal and unitary depending on circumstances. This vision of an all-India role may particularly explain Mr. Karunanidhi's recent inaguration of U.P. Convention of Backward Classes and minority communities என்று சொல்லிவிட்டு திராவிடக் கழகத்தினுடைய பிரிவினைக் கொள் கையை திராவிட முன்னேற்றக் கழகம் ஆதரிக்கிறதா என்ற வினாவை இந்தப் பத்திரிகை எழுப்பிக்கொண்டு அதற்குப் பதில் சொல்கிற வகையில் ஒரு வாசகத்தைக் குறிப்பிட்டிருக்கிறது. டாக்டர் ஹாண்டே போன்றவர் கள் இதைக் கவனமாகக் கேட்டுக் கொள்ளவேண்டுமென்று விரும்பு கிறேன்.

Periyar E.V.R. is not however relevant in D.M.K's. aspirations since alliance with Periyar group is little more than symbolic nor does 'indirectly encouraging' the D.K. leader necessarily detract from the authority of Mr. Karunanidhi's claim. He has persistently presented a well-argued case for State Governments to enjoy greater autonomy under the Constitution and has recently

suggested that another national convention should be held to look into ways and means of increasing the States powers without
into ways and means of increasing the States' powers without

இன்னும் தொடர்ந்து இதேபோல் மேற்கோள்களை என்னால் காட்ட முடியும். நான் எதற்குச் சொல்கிறேன் என்றால் இங்கே அரசியல் நோக்கத்தை வைத்துக்கொண்டு பிரச்சினையைத் திசை திருப்புகிற எண்ணத்தோடு முதல்வர் அவர்கள் உள்நோக்கத்தோடு இப்படிச் செய்யப்போகிறார், அப்படிச் செய்யப் போகிறார் என்று வாதாடுவதில் பொருள் இல்லை. ராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் என்ன, எந்த அடிப்படையில் அந்தப் பரிந்துரைகள் வந்திருக்கின்றன, இந்திய நாட்டில் இருக்கிற இன்றைய நிலவரம் என்ன, இந்த நிலைமைகளுக்கு என்ன பரிகாரம் என்ற பிரச்சினையைக் கவனமாக அலசிப் பார்க்கக் கடமைப்பட்டிருக்கிறோம். நான் இங்கு ஒன்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். இந்தத் தீர்மானத்தை முன்மொழிந்த நம்முடைய முதல்வர் அவர்கள் ஒன்றை சுட்டிக்காட்டினார்கள். 1945-ல் காங்கிரஸ்லினுடைய தீர்மானம் கூட்டு மையத்தை அடிப்படையாகக் கொண்டது. 1947-ல் நேரு பெருமகனாரின் தீர்மானமும் இதுபோன்றுதான். பின்னால் இடையில் இது மாற்றம் அடைந்தது என்ற கருத்தை எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். பாகிஸ்தான் பிரியும் அல்லது பிரிந்தேயாகும் என்ற கட்டம் ஏறத்தாழ அரசியல் நிர்ணயசபை கூட ஆரம்பித்து விட்ட சூழ்நிலையில் ஏற்பட்டது. அதுவரையில் காந்தியார் காலத்திலிருந்து, அதற்கு முன்னாலிருந்து இந்த நாடு வெள்ளையனிடத்திலிருந்து விடுதலை பெறுவது என்ற எண்ணம் ஏற்பட்ட நாளிலிருந்து

It is a polyglot nation

பல மொழிகளைக் கொண்ட தேசம், பல மொழிகளையுடைய தேசியங்கள் கொண்ட தேசம் என்ற கருத்து ஒத்துக்கொள்ளப்பட்டு அந்த அடிப்படையில் நிர்ணய சபை கூடி திடீரென்று பாகிஸ்தான் பிரிந்த காரணத்தினால் ஒரேயடியாக ஒரு முனையிலிருந்து இன்னொரு முனைக்கு தாவி இந்த நாட்டு மக்களுடைய வாழ்க்கையை மத்திய அரசுக்கு அடிமைப்படுத்துகிற ஒரு யூனிட்டரி என்று சொல்லுகிற அரசியல் சட்டத்தை வகுப்பது நியாயம்தான் என்று யாராவது ஒத்துக்கொள்ள முடியுமா என்பதைச் சிந்தித்துப்பார்க்கவேண்டும். வீட்டில் கோபித்துக் கொண்ட ஒரு தந்தை கோபத்தை அங்கு காட்டமுடியவில்லை என்றால் குழந்தையைப் போட்டு அடிப்பார் என்பதை நாம் பார்த்திருக்கிறோம். அதேபோல் பாகிஸ்தான் பிரிந்து விட்டது என்பதைச் சகித்துக்கொள்ளமாட்டாது ஆத்திர நிலையில் இருந்த சில கர்த்தாக்கள் அந்த நேரத்தில் மாநிலங்களைப் போட்டு அடிப்பது என்ற நிலைக்கு வந்துவிட்டார்கள் என்பதை அரசியல் நிர்ணய சபையில் நடந்த விவாதங்களைப் பார்த்தவர்களுக்கு நன்கு தெரியும்.

அங்கு படாஸ்கர் சொன்ன ஒரு வார்த்தை நான் மேற்கோள காட்டுகிறேன்.

If the present idea had existed throughout we never would have changing the names of provinces into States.

ப்ராவின்ஸ் என்பதை ஸ்டேட் என்று நாம் ஆக்கியதற்குக் காரணமே இந்த நாட்டில் ஒரு பெடரேஷன் அமைக்கவேண்டும் என்பதற்காகச் செய்தோம் என்று சொன்னார்கள்.

If the present idea had existed through out we never would have made that change.

ஆனால் இன்றிருக்கிற எண்ணம் முன்பே இருந்திருக்குமானால் இந்த ப்ராவின்ஸ் என்பதைக் கூட நாம் மாநிலம் என்று மாற்றியிருக்க மாட்டோம்

But while the name of "State" is there, the power of the State is so curtailed that it is a misnomer to call it a "State" any longer.

இது எச்.வி. படாஸ்கர் அவர்கள் கான்ஸ்டிட்யூவண்ட் அஸெம்பிளியில் சொன்ன வாசகமாகும். இதைப் பற்றி ஹனுமந்தையா அவர்கள் என்ன சொன்னார்கள் என்பதை நண்பர் ஆலடி அருணா அவர்கள் இந்தத் தீர்மானத்தை வழிமொழிந்து பேசுகிற நேரத்தில் மிக அழகாகக் குறிப்பிட்டார்கள். அதை மறுபடியும் கூட சுட்டிக்காட்டுவது பொருத்தமாகயிருக்கும். முப்பட்டைக் கோணம் அடித்தளத்திலிருந்து எப்படி கூம்பிச் செல்கிறதோ அதேபோல் அமைப்பு இருக்கவேண்டும். ஆனால் இங்கே நிலைமை தலைகீழாக இருக்கிறது என்று அவர்கள் குறிப்பிட்டது எவ்வளவு பொருத்தமான ஒன்று என்பதை இன்று இந்த நேரத்தில் பார்க்கிறோம். திரு பி.ஸி. ராய் அவர்கள் மேற்கு வங்க முதல் அமைச்சராக இருந்தவர்கள். காங்கிரஸ் இயக்கப் போராட்டத்தில் பெரும் பங்குகொண்டவர். அவர்கள் முதல் பைனான்ஸ் கமிஷனுக்கு தன் மெமோரண்டத்தில் முதல் அமைச்சர் என்ற நிலையில் தந்த மெமோரண்டத்தில் மிக அழகாகக் குறிப்பிடுகிறார்.

An attempt to build a strong Centre on the foundations of weak States is like an attompt to build a strong building on the foundation of sands. Strength means in this context ability to perform adequately and properly the duties assigned to each.

பலம் என்பது எங்கே இருக்கிறது என்பதை இதைவிட அழகாக விளக்க முடியுமென்று நான் நினைக்கவில்லை. நம் டாக்டர் ஹாண்டே அவர்கள் இங்கே சொன்னார்கள், அவர்கள் ராஜாஜி அவர்களைக் கூட நினைவுபடுத்தினார்கள். இன்று சற்றேறத்தாழ பனிரெண்டு ஆண்டுகளுக்கு முன்னால் 1962 எப்ரல் 17-ம் தேதி ஹிந்துஸ்தான் டைம்ஸில் அவர்கள் எழுதுகிறபோது

The independence of the States is forgotten and a unitary State is being established thoughtlessly. 'thoughtlessly'

என்று சொல்லிய வார்த்தையை நான் மொழிப்பெயர்க்கத் தேவையில்லை என்று கருதுகிறேன். அவ்வளவு கடுமையாகச் சொல்லி

யிருக்கிறார்கள். இது 12 ஆண்டுகளுக்கு முன்பு சொல்லப்பட்டதாகும். இன்று மேற்கு வங்கத்தில் உள்ள உயர் நீதிமன்றத்தின் நீதிபதி பி.பி. முகர்ஜி என்பவர்—பின்னால் கூட சில மேற்கோள்களைக் காட்ட விரும்புகிறேன். காரணம், எனக்குத் தெரிந்து அரசியலுக்கு அப்பாற்பட்டு நீதித்துறையில் மட்டுமல்லாது பல துறைகளில் பணியாற்றியுள்ளவர் அவர்கள். திரு முகர்ஜி அவர்கள் ராஜமன்னார் கமிட்டி ரிப்போர்ட்டை தனி நிலையிலிருந்து ஒரு நிபுணர் என்ற நோக்கில் ஆராய்ந்து மிக அழகான சில தீர்ப்புகளை வழங்கியிருக்கிறார்கள். இப்பிரச்சினை பற்றி ஒரு அருமையான கருத்தை வெளியிட்டிருக்கிறார்கள். நமது அரசியல் சட்டம் மையக் கூட்டமைப்பாக அமையுமா அல்லது ஒற்றையாட்சி முறையா என்பதைப் பற்றி வாதப்பிரதிவாதங்கள் இருக்கின்றன. ஆனால் ஒன்று எல்லோருக்கும் தெரியும். பெடரல் அல்லது பெடரலிஸம் என்ற வார்த்தையை நமது அரசியல் சட்டத்தில் எந்த இடத்திலும் பிரயோகப் படுத்தவில்லை. அதைப் பற்றி டாக்டர் அம்பேத்கார் அவர்கள் அரசியல் நிர்ணய சபையில் குறிப்பிடுகிறபோது அதைப் பிரயோகப்படுத்தாததினால் பெரிய தவறு நடந்து விடப் போவதில்லை என்று அமெரிக்கா போன்ற இடங்களிலுள்ள சட்டங்களிலிருந்து சுட்டிக்காட்டி யூனியன் என்பது அதுதான் என்று சொல்லியிருக்கிறார்கள். நான் குறிப்பிட்ட ஜஸ்டிஸ் முகர்ஜி அவர்கள் இதற்கு வேறு ஒரு நோக்கம் இருப்பதாகச் சொல்கிறார்கள். அவர்கள் சொல்லியிருக்கும் வாசகத்தை நான் படித்துக் காட்ட விரும்புகிறேன்.

'Pattern of Centre—State relation'

என்ற தலைப்பில் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவு கட்டுரை வடிவத்தில் வெளிவந்திருக்கிறது.

The constitution of India does not use the world "Federation" or "Federalism" in any of its numerous articles. The omission is deliberate, because, the framers of the Constitution wanted to avoid the ticket or the label of federation or federalism for the Indian Constitution.

எதிர்காலத்தில் கூட இந்திய அரசியல் சட்டத்திற்கு இதுபோன்ற ஒரு வண்ணம் ஏற்பட்டு விடக்கூடாது, நிறம் வந்துவிடக் கூடாது என்ற எச்சரிக்கையோடு அதை ஒதுக்கியிருக்கிறார்கள். ஏன் வேண்டுமென்று அதைச் செய்தார்கள் என்பதற்கான வாதங்களை நான் பின்னால் கோடிட்டுக் காட்ட விரும்புகிறேன்.

ஆனால் மொழி பற்றிய கூறுபாடுகள் அரசியல் சட்டத்தில் இருப்பதைக் கூர்ந்து பார்க்கிறபோது முகர்ஜி அவர்கள் ஏன் இந்த முடிவிற்கு வருகிறார்கள் என்பதை நம்மால் புரிந்துகொள்ள முடிகிறது. இருபது ஆண்டுகளுக்கு மேலாக அரசியல் சட்டம் நடைமுறையில் இருக்கிறபோது எப்படி படிப்படியாக மாநிலங்கள் எல்லாம் தங்களுடைய உரிமைகளை

எல்லாம் இழந்து மெல்ல, மெல்ல மைய அரசின் ஆதிகத்திற்குள் இழுக்கப்படுகின்றன என்பதைப் பார்க்கும்போது இந்த உள் நோக்கம் அவர்களுக்கு ஏன் வந்திருக்கிறது என்பதை நம்மால் நிச்சயமாகப் புரிந்து கொள்ள முடிகிறது.

இதையெல்லாம் மிக அழகாக நுணுகி ஆராய்ந்து ஜஸ்டிஸ் முகர்ஜி அவர்கள் மிக அழகாக ஒரு தீர்ப்பு சொல்கிருர்கள்.

This review of the Centre-State relationship brings out clearly that events have belied Dr. Ambedkar's pronouncements in the Constituent Assembly that "States are as sovereign in their field which is left to them by the Constitution as the Centre in the field which is assigned to it"

டாக்டர் அம்பேத்கார் அவர்கள் ஸாவரினிட்டி பற்றிச் சொல்கிறபோது ஸாவரினிட்டி என்பது நம்முடைய அரசியல் சட்டத்தில் இருக்கிற ஐந்தாவது உருப்புப்படி, ஆர்டிகிள் 5-ன் அடிப்படையில் பார்ப்போமானுல் இந்த நாட்டின் கொற்றம் அல்லது ஸாவரினிட்டி என்பது மக்களிடத்தில் இருக்கிறது. அப்படி மக்களிடத்தில் இருக்கிற அதிகாரத்தை அரசியல் அமைப்பு பெற்று மாநிலங்களுக்கும் மத்திய அரசுக்கும் தருகிறது. மாநில அரசுக்கு என்று வகுக்கப்பட்ட அதிகாரங்கள், மத்திய அமைப்புக்கு வகுக்கப்பட்ட அதிகாரங்கள் இவை இரண்டும் தனித்தனி கொற்றம் உடையவை என்ற கருத்தை அவர்கள் வெளிப்படுத்தியிருக்கிருர்கள்.

அதை முகர்ஜி அவர்கள் ஆராய்ச்சி செய்கிறபோது, அம்பேத்கார் அன்று நினைத்திருந்த கருத்து பொய்யாகப் போய்விட்டது. அந்த அளவுக்கு நடைமுறையில் மத்திய அரசாங்கம் இந்திய மாநிலங்களை வெற்றுத்தரையாக ஆக்கியிருக்கிறது என்ற கருத்தைச் சொல்லியிருக்கிருர்கள்.

தலைவரவர்களே, இந்த நேரத்தில் நான் ஒன்றைத் தெளிவாக்க விரும்புகிறேன். பல பேர் மாநில சுயாட்சி என்ற உடனேயே கீழே இருக்கும் பஞ்சாயத்து அமைப்புகளோடு ஒப்பிட்டுப் பார்த்துப் பேசுகிருர்கள். நம் எல்லோருக்கும் ஒன்று நன்ருகத் தெரியும். இன்றைக்கு இருக்கும் மைய அல்லது மாநில அமைப்பு என்பது அதனுடைய அதிகாரம் எல்லாம் அரசியல் நிர்ணய அமைப்பிலே இருக்கிறது.

The source of the authority for the State and Centre is the Constitution, but the municipalities or the panchayats derive the power from the legislature, not from the Constitution. Let us not forget that.

இன்று நம்முடைய அரசியல் அமைப்பு பற்றி பார்க்கிறபோது, இரண்டு அமைப்புகள் வரையறுக்கப்பட்டிருக்கின்றன. அந்த அரசியல் அமைப்புச் சட்டத்தின்கீழ் நேரடியாக அதிகாரம் பெறுபவைகள் மத்திய அரசும்,

1974 ஏப்ரல் 18] [திரு. செ. கந்தப்பன்]

மாநில அரசுகளும். மற்ற அமைப்புகளெல்லாம் சட்ட மன்றத்தின் அமைப்பிலிருந்து அதிகாரம் பெறுபவை. இப்படி நிலைமை இருக்கும் போது, எப்படி வாதத்திற்காக இதைப்போல் சொல்வது தேவையற்றது என்று சொல்லிக்கொள்கிறேன்.

இங்கே திரு மணலியார் அவர்கள் ஒரு அழகான அறிவுரையைச் சொன்னார்கள். அந்த அடிப்படையில் சொல்லப்படுகிறபோது, நாங்கள் அறிஞர் அண்ணா அவர்களால் வளர்க்கப்பட்டவர்கள், கலைஞர் அவர்களும் எங்களை அந்தப் பின்னணியில் தான் அழைத்துச் செல்கிறார்கள். நாங்கள் யாரும் வேண்டுமென்று ஒருவருக்குத் தீங்கிழைக்கும் வகையில், பேசமாட்டோம். இன்று சுதந்திரம் அடைந்து 27 ஆண்டுகள் ஆகிவிட்டன. 27 ஆண்டுகால சுதந்திர இந்திய வரலாற்றை அருள் கூர்ந்து எண்ணிப் பார்க்க வேண்டும், சிந்திக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

ஒவ்வொரு ஆண்டும் மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் அதிகரித்துக் கொண்டே வருகிறதே தவிர குறையவில்லை. எல்லா மாநிலங் களிலும்—தமிழகம், கேரளா சில நேரங்களில், ஒரிசா சில நேரங்களில், மேற்கு வங்காளம், இன்னும் சில மாநிலங்களில் குறுகிய காலம் என்ற அளவில் தவிர— 27 ஆண்டுகள் எல்லா மாநிலங்களிலும் பெரும்பாலும் காங்கிரஸ் முதலமைச்சர்களே இருந்து வந்திருக்கிறார்கள்.

மத்தியில் காங்கிரஸ் பிரதம அமைச்சராக பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் இருந்து இருக்கிறார்கள். ஆனால் 1949-இல் நமக்குப் பின்னாலே சுதந்திரம் அடைந்த நாடுகளில் உள்ள பொருளாதார முன்னேற்றத்தை நம்மால் நெருங்க முடியவில்லை.

இரண்டாவது உலகப்போரில் அழிந்துவிட்ட ஜப்பான் இன்று அடைந் திருக்கும் வளர்ச்சியைப் பார்க்கும் போது நாம் ஒரு நூறு ஆண்டு களுக்குப் பின்னால் கூட அந்த நிலையை அடைய முடியும் என்று சிந்தித்துப் பார்க்கக்கூட முடியாத தன்னம்பிக்கை அற்ற நிலையில் இருக்கிறோம். எந்தப் பொருளாதார வளர்ச்சியை இந்த நாட்டில் அபி விருத்தி செய்தார்கள்?

27 ஆண்டுகள் தொடர்ந்து டெல்லியில் அதிகாரம் அதிகரித்துக் கொண்டே இருந்தது. எந்த மாநிலங்கள் தவறு செய்தாலும் கண்டிக்க முடியும். மைய அரசின் திட்டக்குழு தான் பொருளாதாரத் திட்டத்தை வகுத்தது. அந்தத் திட்டக்குழுவை மீறி நாம் எதுவும் செய்ய முடியாது.

இன்று இந்த நாட்டில் பஞ்சம், பட்டினி இவைகள் இருப்பதைப் பார்க்கிறோம். என்ன காரணம்? நல்ல திறமை படைத்த நிர்வாகிகள் இல்லையா? பண்டித ஜவஹர்லால் நேரு நல்ல திறமை படைத்த நிர்வாகி இல்லையா? லால்பகதூர் சாஸ்திரி திறமை அற்ற நிர்வாகியா?

இந்திரா காந்தி திறமை அற்றவரா? இந்த மாநிலத்தில் முதலமைச்சராக இருந்த காமராசர் திறமை அற்றவரா? ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் நிர்வாகம் தெரியாதவரா? கேரளாவில் இருந்த பனம்பள்ளி மேனன் திறமை அற்றவரா? இ.எம்.எஸ். நம்பூத்திரிபாட் நல்ல நிர்வாகி இல்லையா? ஆந்திராவில் இருந்த சஞ்சீவி ரெட்டி போன்றவர்கள் ஆற்றல் அற்றவர்களா?

திருமதி த. ந. அனந்தநாயகி : உங்களிடத்தில் மாநில சுயாட்சியைத் தூக்கிக் கொடுத்துவிட்டால், பஞ்சம் பட்டினியைத் தீர்த்து விடுவீர்களா?

திரு செ. கந்தப்பன் : அம்மையார் அவர்கள் அவசரப்பட்டிருக்க வேண்டாம். கொஞ்சம பொறுமையோடு இருந்து நான் பேசுவதைக் கேளுங்கள். நான் எங்களுக்காகப் பேசவில்லை. உங்களுக்கும் சேர்த்துத் தான் பேசுகிறோம். தமிழ்நாட்டிற்கு மட்டுமல்ல. எல்லா மாநிலங்களுக்கும் சேர்த்துப் பேசுகிறோம். இது எல்லோருக்கும் தெரியும். அம்மையார் அவர்கள் தியாகம் செய்ததாகச் சொன்னார்கள்.

திருமதி த. ந. அனந்தநாயகி : நான் செய்யவில்லை என்றால் என்னுடைய தேசிய பரம்பரை செய்து இருக்கிறது.

திரு செ. கந்தப்பன் : அம்மையார் அவர்கள் ரொம்ப தேசீயப் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் என்பதை யாரும் மறுக்கவில்லை. தேசீய பரம்பரைப் பட்டியலில் அம்மையாரைத் தவிர வேறு யாரும் சேர்ந்து இருக்கக்கூடாது எனபதல்ல. நானும் அந்தப் பரம்பரையைச் சேர்ந்தவன் தான். என்னுடைய வீட்டில் பலர் இருக்கிறார்கள்.

MR. DEPUTY SPEAKER : Members may please avoid personalities.

திரு செ. கந்தப்பன் ; தலைவரவர்களே, இன்றைக்கு இதுபோன்று பல்வேறு முதலமைச்சர்கள் இருந்து இருக்கிறார்கள். கருநாடக மாநிலத்தில் நிஜலிங்கப்பா போன்றவர்கள் இருந்து இருக்கிறார்கள். இன்று மத்தியில் இருக்கிற சவான் அவர்கள் மராட்டியத்தில் முதலமைச்சராக இருந்து இருக்கிறார்கள். மேற்கு வங்கத்தில் பி. சி. ராய். இப்படி எந்தத் தலைவரை எடுத்துக்கொண்டாலும், அவர்கள் ஆற்றல் மிக்கவர்கள், திறமை மிக்கவர்கள், அப்படித் திறமைமிக்கவர்கள், ஆற்றல் மிக்கவர்கள், மாநிலங்களில், மத்தியில் இருந்திருந்தபோதிலும் நாம் முன்னேற முடியாமல் இருந்ததற்குக் காரணம் என்ன? அம்மையார் அவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அம்மையார் அவர்களுக்குத் தெரிந்திருக்க நியாயம் இல்லை என்று கருதுகிறேன். அவர்களுக்குச் சொல்லவேண்டுமென்பதற்காகவே கொண்டு வந்தேன். "திரும்பு முனை" ஐந்தாவது திட்ட அணுகுமுறை பற்றிய விவரச் சுருக்கம், இந்திய சர்க்கார், திட்டக்கமிஷன் சார்பில் வெளியிடப் பெற்றது. அதில் சொல்லியிருக்கும் ஒரு கருத்தை இங்கே நான் படித்துக் காட்டுவது பொருத்தமாக இருக்குமென்று கருதுகிறேன்.

"திட்டவட்டமான முடிவுகளை மேற்கொள்ள வேண்டியதொரு கட்டத்தை நாடு இப்பொழுது அடைந்துள்ளது. (திட்டக்குழு சொல்கிறது) அடுத்த சில ஆண்டுகாலங்கள் அவ்வளவு எளிதாக இருக்கும் என்று கூறுவதற்கில்லை. எனவே, ஐந்தாவது திட்டத்தைச் செயல்படுத்துவது அவ்வளவு எளிதாக இருக்காது.

நாட்டின் விடுதலைப் போராட்டத்தின்போது நாம் தியாகத்தையும் ஈடு பாட்டையும் மேற்கொண்ட அளவுக்கு, இத்திட்ட காலத்திலும் தியாகத்தை யும் ஈடுபாட்டையும் மேற்கொள்ளவேண்டும் என்று அறைகூவப்பட் பட்டுள்ளது. இது தவிர நமக்கு வேறு எந்த வழியும் இல்லை". இந்த நாட்டு மக்கள் இதைச் சகித்துக்கொள்ள வேண்டுமென்று திட்டக்குழு சொல்கிறது. 27 ஆண்டுக்கால சுதந்திர ஆட்சிக்குப் பிறகு 27 ஆண்டு களுக்கு முன்பு எத்தகைய போராட்டத்தைச் செய்தோமோ அதைச் செய் தால் பிழைக்கலாம். இல்லையென்றால், வேறு வழியில்லை என்று இந்த நாட்டின் தலைவிதியை, பொருளாதாரத்தை நிர்வகித்துக் கொண்டிருந்த அந்தத் திட்டக்குழு அமைப்பு பொருளாதாரத்தை நிர்ண யிக்கும் உச்ச அமைப்பு சொல்லியிருக்கிறது. அந்த "சூப்பர் காபினட" என்ற அந்த அமைப்பு, உச்ச திட்ட வளர்ச்சிக்குழு இப்படிச் சொல்கிறது என்றால், இந்த நாட்டில் ஏதோ கோளாறு இருக்கிறது என்பதை ஏன் ஒப்புக்கொள்ள மறுக்கிறீர்கள்? திட்டக்குழுவைக் குறை சொல்ல மாட் டேன். வளர்ச்சியடையாமல் இருக்கும் இந்த நிலைமைக்குக் காரணம் என்ன? கடந்த காலத்தில் இருந்த திட்டக்குழுக்கள் என்ன செய்தார் கள் என்பதை ஆராயும் போது, அவர்கள் செய்தது தவறாகப் போய் விட்டது. அவர்கள் சரிவரச் செய்யவில்லை என்று சொல்லி, ஒரு உதா ரணத்தையும் சொல்கிறார்கள்.

"காளையின் கொம்புகளைப் பிடித்து அதை அடக்க முயலாமல் அதன் வாலைப்பிடித்து அடக்க முயன்றனர்" அதனால் நிலைமை மோசமாகப் போய் விட்டது என்று அவர்கள் சொல்கிறார்கள். 27 ஆண்டுகளாக இருந்து வந்த திட்டக்குழு வாலைப் பிடித்து விட்டது. நாங்கள் கொம்பைப் பிடிக்கப் போகிறோம் என்று சொல்கிறார்கள். அவர்கள் கொம்பைப் பிடிப்பார்கள் என்று எப்படி நாம் நம்புவது?

நான் திட்டக்குழு மீது பழி சொல்லவில்லை. மத்திய அரசாங்க நிர்வாகத்தின் மீது பழி சொல்லவில்லை. மாநிலங்களின் நிர்வாகத்தைப பற்றிப் பழி சொல்லவில்லை. என்னுடைய வாதம் தவறா? ஏதோ

ஒரு அமைப்பு முறையில் சிக்கி, இந்த நாட்டில் வளம் இருந்தும், இந்த நாட்டில் ஆற்றல் மிகுந்த ஆட்கள் இருந்தும், திறமைமிக்க நிர்வாகிகள் இருந்தும் இந்த நாடு முன்னேற்றம் அடைய முடியவில்லை. அப்படிப்பட்ட ஒரு அரசியல் நிலைமை நம்மை ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கிறது. இதை மாற்றி அமைத்தால்தான் நாம் ஒரு விமோசனத்தைக் காண முடியும் என்று உறுதியாக நம்புகிறேன்.

சுதந்திரா கட்சியின் தலைவர் இன்னும் இங்கே பேசவில்லை என்று நினைக்கிறேன். அந்தக் கட்சியின் தலைவர் திரு. பிலுமோடி அவர்கள் ஒரு கருத்தைச் சொல்லியிருக்கிறார்கள்.

"Mr. Piloo Modi, Chairman of the Swatantra Party said here yesterday, the Constitution Amendments enacted so far had been 'politically motivated and vote oriented' and resulted in over-centralisation of powers rendering the States 'ineffective and impotent'".

இதுவரையில் அரசியல் அமைப்புச் சட்டத்தில் ஏற்பட்டு இருக்கும் திருத்தங்கள் "இன்எபக்டிவ்" என்று மட்டு சொல்லவில்லை "இம்பொடன்ட்" மலடியாக ஆக்கிவிட்டிருக்கிறது. செயலற்றவைகளாக ஆக்கிவிட்டிருக்கிறது. அவர்களால் எதுவும் செய்யமுடியாது என்று பிலு மோடி அவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

நேற்று கூட குறிப்பிட்டேன், அசோக் மேத்தா, வீரேந்திர படில், ஜன சங்கத் தலைவர் அத்வானி—மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் கூட நேற்று குறிப்பிட்டார்கள்—புபேஷ் குப்தா போன்றவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். டெல்லியில் நடந்த விவாதத்தில் பொருளாதாரத்தில் மாநிலங்களுக்குக் கிடைப்பதிலே அநியாயம் இருக்கிறது, நிச்சயமாக பொருளாதாரப் பங்கீடு கொடுப்பதில் அதிகாரப் பங்கீடு தேவை என்ற கருத்தை ஜனசங்கத் தலைவர் அத்வானி வலியுறுத்திக் கூறியிருக்கிறார்கள்.

சில நாட்களுக்கு முன்னால் இந்தியாவில் ஏழு கட்சிகள் ஒன்றாக இணைந்து ஒரு கூட்டறிக்கையைத் தந்திருக்கிறார்கள். அவர்கள் ஒன்றாகத் தந்து இருக்கும் அறிக்கையில் "மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டும்" என்று சொல்லியிருக்கிறார்கள். நாங்கள் மட்டும் இப்படிச் சொல்லவில்லை. நாடுபூராவும் எப்படி "டிரெண்டு" போக்கு இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். ஏதோ கலைஞர் ஆட்சிக்குப் பெரிய ஆபத்து வந்து விட்டது போல் ஒரு கருத்தினை உருவாக்கிக் கொண்டு, அதைக் காப்பாற்றிக் கொள்ள இதைச் செய்கிறார்கள் என்று சொல்வது ரொம்ப சிறுபிள்ளைத்தனமானது என்பதைப் பொறுப்புள்ள உறுப்பினர்கள் உணர்ந்து பார்க்க வேண்டும்.

நாடு பூராவும் இந்த "டிரெண்டு" போக்கு இருக்கிறது. இன்று டி. ஏ. பாய் அவர்கள் மத்தியில் இருக்கிறார்கள். ஆற்றல் மிகுந்த நிர்வாகி என்பது நமக்கெல்லாம் தெரியும். அவர் "லைசென்சிங்"

பற்றி என்ன சொன்னார்கள்? டெல்லிக்குப் போகாமல் எந்தக் காரியமும் நடக்காது. அங்கே இருக்கும் நடைமுறை பெரிய காடு போல் இருக்கிறது. அந்தக் காட்டில் பல புலிகள் இருக்கின்றன என்று சொல்லியிருக்கிறார்கள்.

திரு. தோப்பூர் திருவேங்கடம் அவர்கள் பால்கிவாலா கூறியதைப் பற்றிச் சொன்னார்கள். அவர் ஆற்றல் மிகுந்த கம்பெனி லாயர் என்பதை நாம் எல்லோரும் அறிந்து இருக்கிறோம். அவர் இந்த சென்டர்-ஸ்டேட் ரிலேஷன் பற்றிக் குறிப்பிடும் போது, இன்றைக்குத் தொழில் துறையில் நம்முடைய அரசியல் அமைப்புச் சட்டத்தில் எப்படி நம்முடைய மாநிலத்திற்குத் தரப்பட்டு இருக்கும் அதிகாரம் ஊடுருவல் செய்யப்பட்டிருக்கிறது, கான்ஸ்டிடியூஷன் மேக்கர்ஸ் அரசியல் அமைப்புச் சட்டம் உருவாக்கிய கருத்துப்படி, அந்த அடிப்படையில் சுதந்திரத்தைத் தரவும் மறுக்கப்பட்டிருக்கிறது, ஊடுருவல் செய்யப்பட்டிருக்கிறது. இன்றைக்கு சீப்பு, சோப்பு முதற்கொண்டு டெல்லியில் இருப்பவர்கள் இண்டஸ்ட்ரியல் ரெகுலேசன் ஆக்ட் என்கின்ற சட்டத்தின்கீழே கொண்டு வந்து, தங்கள் கைவசம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அதனால் மாநிலங்களுடைய பொருளாதாரம் நலிந்து இருக்கின்றது என்ற கருத்தை மிக வலிய சொல்லியிருக்கிறார்கள். நம்முடைய அரசு, தமிழக அரசு 6-வது நிதி ஆணைக் குழுவினிடம் கொடுத்த தனது அறிக்கையில் இந்தக் கருத்துக்களை, ஏற்கெனவே இருக்கிற நிலவரம், அமைப்புச் சட்டத்தை மாற்றி அல்ல, இருக்கிற அரசியல் அமைப்புச் சட்டத்தில் அதனுடைய ஸ்பிரிட், அதனுடைய உள் அர்த்தத்தை, உள் நோக்கத்தைச் சரிவர மதிக்காமல் கொஞ்சம் திரிவாகப் பொருள் கொண்டு, டெல்லி ஆதிக்கத்தில் செய்திருக்கக்கூடியதின் விளைவாக ஏற்பட்ட சில கேடுபாடுகளை சுட்டிக்காட்டியிருக்கிறது.

The Government of Tamil Nadu believe that the proliferation of Central sector and centraly-sponsored schemes reduces the financial flexibility of States.

என்று குறிப்பிட்டு

it has to be conceded that Central sector programmes in areas like agriculture, education, medical and public health which are primarily State's responsibilities tend to be over staffed and overcentralised. There is a tendency to run them from New Delhi.

என்று சொல்லி விட்டு, மேற் கொண்டு அழகாக ஒரு பட்டியலையும் தந்திருக்கிறார்கள். 1972–73-ம் ஆண்டுமொத்த ஒதுக்கீட்டில் அக்ரிகல்சருக்கு டெல்லியிலிருந்து கொடுத்த 782 கோடி ரூபாயில், 422 கோடி ரூபாய் செண்டிரல் செக்டார் என்பதையும் மாநிலங்கள் மற்ற டெரிடரீஸ் எல்லாம் சேர்த்து 332 கோடி ரூபாய் என்பதையும் இங்கே அழகாக சுட்டிக் காட்டியிருக்கிறார்கள். சோஷல் வெல்பேர் என்ற தலைப்பில் 150 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டதில் 2·56.

கோடி ரூபாய் மட்டும் தான் பல்வேறு மாநிலங்களுக்குப் பிரித்துக் தாப்பட்டு, மிச்சம் இருக்கிற பணத்தை மத்திய சர்க்கார் செலவழித்திருக்கிறது. இது போல காரணங்களை நாம் ஏராளமாகக் காட்டலாம்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்: இன்னும் ஐந்து நிமிடங்களில் முடித்து விடுங்கள். நீங்கள் பேசத் தொடங்கி அரை மணி ஆகி விட்டது.

திரு. செ. கந்தப்பன்: இன்னும் 10 நிமிடமாவது கொடுங்கள், சீக்கிரம் முடித்துவிடப் பார்க்கிறேன்.

அதே போல திட்டக் காலத்தில் நமக்குச் செய்த ஒதுக்கீடுகளைப் பார்க்கிற பொழுது முதல் திட்டத்தில் 10·8 விழுக்காடும், இரண்டாவது திட்டத்தில் 9 விழுக்காடும், மூன்றாவது திட்டத்தில் 7½ விழுக்காடும் நான்காவது திட்டத்தில் 4·7 விழுக்காடும் என்ற அளவுக்கு நிலைமைகள் ஆகியிருப்பதை நாம் அறிவோம். இன்னும் சொல்லப்போனால் வளமான மாநிலம், வளமற்ற மாநிலம் என்றெல்லாம் சொல்லப்படுகிறது. நான் அதற்குள் போக விரும்பவில்லை. எனக்கு நீங்கள் காலம் குறைவாக இருக்கிறது என்பதை உணர்த்தியிருக்கிற காரணத்தினால். நான் இப்பொழுது எதை விடுவது, எதைப் பேசுவது என்று தெரியாமல் திண்டாடுகிறேன். அவ்வளவு குறிப்புகளை வைத்திருக்கிறேன். பத்து நிமிடங்களில் முடித்துவிடுகிறேன்.

நம்முடைய முதல் அமைச்சர் அவர்கள் ஏதோ மாநில சுயாட்சியைப் பற்றித் திடீரென்று கிளப்பினார்கள் என்றெல்லாம் இங்கே குறிப்பிடப்பட்டது. அவர்கள் தெரிந்து வேண்டுமென்றே திசை திருப்புகின்ற முறையில் குறிப்பிட்டார்கள் என்றெல்லாம் பேசினார்கள். 1971–72-ம் ஆண்டில் நம்முடைய நிதி நிலை அறிக்கையில் நம்முடைய முதல் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்ட ஒரு வாசகத்தை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். திரு. கே. டி. கே. தங்கமணி அவர்களுக்காக நான் இதைக் குறித்து வைத்தேன். அவர்கள் இப்பொழுது இங்கு இல்லை. இருந்தாலும், பிறகாவது தெரிந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

It should be viewed more as a part of the theme of socialism that the organs of peoples' power should be vested with necessary resources and authority. In our view, the surest way to ensure the implementation of socialist ideals in a large country like India, whose constituent States are politically and geographically distinctive is to endow the States with greater autonomy. If, therefore, we reiterate our plea for greater powers for the States, it is only because of our earnest desire that a strong centre should emerge, under pinned by prosperous and powerful States—

சமதர்ம திட்டத்தை உருவாக்க, இந்த நாட்டில் ஒழுங்காக வசதிகளையும் மேம்பாடுகளையும் செய்வதற்கு மாநில சுயாட்சி தேவை என்று மிக அழகாக முதல் அமைச்சர் அவர்கள் 1971–72-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையில் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

நான் இன்னொரு குறிப்பைப் பார்த்தேன். இன்றைக்கு நம்முடைய கம்யூனிஸ்டு நண்பர் தத்துவத்தைப்பற்றி நான் அதிகமாகச் சொல்ல வேண்டியதில்லை. ஒன்றை மட்டும் சொல்ல விரும்புகிறேன். 1953-54-ல் "இன் தி எர்லி பிஃப்டீஸ்", ரஷ்யாவுக்கும், இந்தியாவுக்கும் நெருக்கம் ஏற்படாத வரையில் மிக திட்டவட்டமாக, தீவிரமாக, தெளிவாக மாநிலம் தனி நாடாக ஆகிற அளவுக்கு உரிமை பெற்றிட வேண்டும் என்று தான் கம்யூனிஸ்டுகள் தீவிரமாகச் சொல்லிவந்தார்கள். பின்னால் குருஷேவுக்கும் நமக்கும் ஏற்பட்ட உறவு. தொடர்ந்து நீடித்த உறவு. பிறகு காங்கிரஸ் இரண்டாக உடைந்த பிறகு இந்திரா காந்தி அம்மையார் ரஷ்யாவுடன் கொண்டிருந்த நெருக்கம் இதற்கெல்லாம் பிறகு கே. டி. கே. தங்கமணி அவர்களின் அரசியல் கருத்து வெளிப்பட்டிருக்கிறது என்பதை நான் பார்க்கிறபொழுது, அதைப்பற்றி நான் அதிகம் சொல்வதற்கில்லை.

நான் சுட்டிக் காட்ட விரும்புவது

'Lenin's thesis on the "Right of Nations to self determination"

என்ற ஒரு புத்தகத்தில் லெனின் அவர்கள் இதைப்பற்றி மிக அழகாக குறிப்பிட்டிருக்கிறார்கள்.

Whoever does not recognise and does not champion equality of nations and languages, does not fight against all notional oppression or inequality, is not a marxist, is not even a democrat.

ஒரு மொழி, தேசிய இனம் இவற்றினுடைய சமனப்பாட்டுக்கு போராடாதவன் ஒரு கம்யூனிஸ்டு மார்க்சிஸ்ட், ஒரு டெமாக்ரட் என்று கூட ஒத்துக்கொள்ள மாட்டேன் என்று லெனின் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அந்த அடிப்படையில் கே. டி. கே. தங்கமணி அவர்களை லெனின் ஏற்றுக்கொள்வாரோ, இல்லையோ தெரியாது.

அரசியல் அமைப்புச் சட்டத்தில் இன்னொன்றைக் கூர்ந்து கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். உறுப்புகள் 15, 16 ஆகிய இரண்டு பிரிவுகளிலும் மனிதனுக்கு என்று சில அடிப்படை உரிமைகளைப்பற்றி சொல்லுகிறபொழுது, ஆண், பெண் என்ற பாகுபாட்டை வைத்தோ அல்லது பிறந்த இடத்தை அல்லது மதத்தை அல்லது வேறு காரணத்தை வைத்தோ இந்தியாவிலுள்ள ஒருவனிடமிருந்து ஒருவனை வேற்றுமை செய்து பிரிக்ககூடாது என்று

Prohibition of discrimination.........

ஆர்டிகிள் 15-ல் கூறப்பட்டிருக்கிறது. அதே மாதிரி ஆர்டிகிள் 16-ல் மனிதனுக்கு வேலை வாய்ப்பு தருகிறபொழுது இதே போல பல்வேறு அடிப்படையிலே அவனை பிரித்துப்பார்க்கக்கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது போல உறுப்புகள் பல ஜனநாயக நாடுகளில் உண்டு. மேற்கு ஜெர்மனி, மற்றைய நாடுகளில் இப்படிப்பட்ட உறுப்புகள் இருக்கின்றன. ஐக்கிய நாட்டுச் சபையில் இதுபோன்ற உறுப்புகள் இருக்கின்றன.

Art. 2 of the Universal Declaration of Human Rights Art. 1 of the United Nations Charter''

அவற்றிலெல்லாம் இதைப்போல பிரிவுகள் இருக்கின்றன. அந்தப் பிரிவுகளை எடுத்து இதிலே போட்டிருக்கிறார்கள் ஆனால் ஒரு பெரிய விபரீதம் ஏற்பட்டிருக்கிறது. சட்டமன்றத்தில் உள்ள நண்பர்கள் யாராவது இதைப்பற்றி சிந்தித்துப் பார்த்து துணிந்து பதில் சொல்ல முன்வருவார்களேயானால் நான் அதை வரவேற்கிறேன். இந்தப் பிரச்னை நம்முடைய பாராளுமன்றத்தில் இளப்பப்பட்டிருக்கிறது.

இந்த அடிப்படையில் ஒரு தனியார் மசோதா பாராளுமன்றத்தில் கொண்டுவரப்பட்டிருக்கிறது. தி.மு.க. நண்பர் செழியன் அவர்களால் கொண்டுவரப்பட்டது. "பண்டமெண்டல் ரைட்ஸ்" என்று சொல்லும் பொழுது எல்லாவற்றையும் சொல்லிவிட்டு, மொழி அடிப்படையில் பாகு படுத்தக்கூடாது என்பதை மட்டும் வேண்டுமென்றே விட்டிருக்கிறார்கள்.

The State shall not discriminate against any citizen on grounds only of religion, race, caste, sex, place of birth or any of them

யுனைடெட் நேஷன்ஸ் அமைப்பிலே கூட இவற்றையெல்லாம் சொல்லிவிட்டு, மொழி என்பதைச் சேர்த்திருக்கிறார்கள். இங்கே டிஸ்கிரிமினேஷன், அதாவது மனிதனை, மனிதன், இந்தியனைப் பாகுபடுத்தக்கூடாது என்பதற்கு பல அடிப்படைகளைச் சொல்லிவிட்டு, இந்திய நாட்டு மக்களை வேறுபடுத்துகிற ஒரு அடிப்படையான மொழி அடிப்படையை மட்டும் வேண்டுமென்றே, திட்டமிட்டே விட்டிருக்கிறார்கள், அதாவது "லாங்குவேஜ்" என்ற அடிப்படையில் பாகுபடுத்தக்கூடாது என்பது மட்டும் விடப்பட்டிருக்கிறது. இந்த அரசியல் அமைப்புச் சட்டம் சுயமரியாதைக்குச் சவால் விடுகின்ற சட்டம் என்று யாராவது அழைத்தால் அதைத் தவறு என்று சொல்ல முடியாது. மனிதன் தாய்மொழியில் வேண்டுமென்றே பிடிவாதமாகச் பேசவில்லை.

These are all accidents of birth. Fundamental rights—inalienable rights.

என்பது மனிதனை விட்டுப் பிரிக்க முடியாத உறுப்புகள். என்னுடைய நிறத்தை என்னிடமிருந்து பிரிக்க முடியாது. நான் பிறந்திருக்கிற இடம் என்னுடைய சக்திக்கு அப்பாற்பட்டது. நானாக விரும்பிப் பெற்றுக்கொண்டது அல்ல. இவை யெல்லாம் accidents of birth. இந்த அடிப்படைகளை மனிதனிடமிருந்து பிரிக்க முடியாது. ஜனநாயக தாகத்தினுடைய முதல் மூச்சு மொழி. இங்கே அந்த மூச்சு நசுக்கப்பட்டிருக்கிறது. அந்தச் சட்டத்தைத் தான் நாம் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். ஏதோ அதன் தூய்மையை நாம் கெடுத்துவிடுவோம், ஏதோ அரசியல் சட்டம் என்பது கைபடாத ரோஜா, அதன் மேல் கையை வைக்காதீர்கள் என்றெல்லாம் பேசுவது பொருத்தமற்றதா இல்லையா என்பதை யோசிக்க வேண்டும்.

உறுப்பு 16-ம் இதே போலத்தான் கூறுகிறது. நான் வேகமாகப் போய்க்கொண்டிருக்கிறேன். இறுதியாக ஒன்றை மட்டும் கூறி முடித்துக் கொள்கிறேன்.

[நண்பகல் 12-00]

இங்கே அட்மினிஸ்டிரேட்டிவ் ரீபார்ம்ஸ் கமிஷனைப் பற்றி எல்லாம் சொன்னார்கள். அட்மினிஸ்ட்ரேடிடிவ் ரீபார்ம்ஸ் கமிஷன் அறிக்கையையும் நம்முடைய தமிழக அரசு நியமித்த ராஜமன்னார் குழு அறிக்கையையும் ஒப்பு நோக்கி, இரண்டு அறிக்கைகளிலும் இருக்கின்றதன்மைகளை அலசிப் பார்த்து, ராஜமன்னார் குழு அறிக்கையில் பல பரிந்துரைகள் மிகச் சிறப்பானவை என்பதையும் ஏற்றுக்கொண்டு, பி. பி. முகர்ஜி அவர்கள் கூறிய கருத்துக்களை தலைவரவர்களின் அனுமதியோடு இங்கே சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

'The major recommendations of the Rajamannar Committee are threefold :

(1) Abirdgement to the Concurrent Legislative List in the Seventh Schedule of the Constitution and transfer of a number of items in the List to the State List;

(2) Greater devolution of financial powers to the States so that progressive States who raise major resources may not be penalised; and

(3) Transfer to the States of licensing powers for most of the industries together with substantial check on the Union Government's power for centralised planning ...'

நேற்று நண்பர்—சுப்பிரமணியம் என்று நினைக்கிறேன்—அவர்கள் பேசும்போது ராஜமன்னாரும், லட்சுமணசாமி முதலியாரும், சந்திராரெட்டியும் இந்த அரசாங்கத்திற்கு நல்ல வக்கீல்களாக இருந்து அறிக்கை கொடுத்திருக்கிறார்கள் என்று சொன்னார்கள். நான் குறிப்பிடுகின்ற முகர்ஜி அவர்கள் நம்முடைய தமிழகத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல. அவர்கள் மேற்கு வங்கத் தலைமை நீதிபதி. அவர்கள் ராஜமன்னார் குழு அறிக்கை பற்றிச் சொல்லிய கருத்துக்களை இங்கே கூறுகிறேன்.

'It is plain logic that States which control their population and where people work harder and more systematically, should not be penalised for the benefit of States which permit indiscriminate breeding of population and where people do not evince the requisite responsibility in the task of economic development of their regions. No doubt this view must be tempered with the attitude of helping under-developed or backward regions of India. The winds of change are already blowing throughout the different States. States

which earn a larger share of foreign exchange demand more and more for a larger allocation of foreign exchange for the purpose of their industrial development. Democracy with a growing consciousness for social welfare naturally promotes a sense of State autonomy ......

என்று சொல்லிவிட்டு

'Free enterprise and initiative among the States as between individuals should foster healthy competition and growth ......'

என்று சொல்லியிருக்கிறார்கள். ஒவ்வொரு மாநிலத்திலும் இதே ஆரோக்கியமான போட்டிதான் மாநில பொருளாதாரத்தை வளர்க்கக் கூடியது என்று திட்டவட்டமாகக் குறிப்பிடுகிறார்கள். இப்போது இருப்பது ஒரு ஆரோக்கியமான நிலைமை அல்ல எதற்கெடுத்தாலும் டில்லியை நோக்கிப் படையெடுக்க வேண்டியிருக்கிறது. அவர்கள் கொடுக்கக்கூடிய உதவியை வாங்கிக் கொள்ளக் கூடிய ஒரு கேவலமான நிலைமை இருக்கிறது என்பதைச் சுட்டிக் காட்டி, அந்த நிலைமை மாற வேண்டுமென்று கூறுகிறார்கள்.

இறுதியாக ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். இன்றைக்கு இந்த நாடு அனைவருக்கும் சொந்தம். ஆனால் நம்முடைய உழைப்பு வேறு ஒருவருடைய சுரண்டலினால் பாழ்படுகிறது என்று சொன்னால் இந்தியத் திருநாட்டில் எந்த ஒரு மாநிலமும் இப்போதிருக்கின்ற அமைப்பில் பொருளாதாரத்தை வளர்த்துக் கொள்ள முடியாது. இந்த வாதத்தை நாம் மட்டும் சொல்லவில்லை. பார்லிமெண்டிலும் சொல்கிறார்கள். அங்கேயும் இந்த வாதத்தை நாம் கேட்கிறோம்.

இந்தியாவிலுள்ள பல்வேறு மாநிலத்தவர்களும் தங்கள் தங்கள் மாநிலத்திற்குச் சரியான நிதிப் பங்கு கிடைக்கவில்லை ; கிடைக்கவில்லை என்றுதான் பேசிக் கொண்டிருக்கிறார்கள். ஒரு முறை பைனான்ஸ் பற்றிய விவாதம் வந்தது. அப்போது சவான் அதற்குப் பதில் சொன்னார்கள் என்று நினைக்கிறேன். எல்லா மாநில உறுப்பினர்களுமே நிதி இல்லை, நிதி இல்லை என்று சொன்னார்கள். அப்படியானால் நிதி எங்கே போகிறது என்று கேட்டார்கள். இதுதான் நம்முடைய அமைப்பில் இருக்கிற ஒரு கோளாறு ; அது மாற வேண்டும் என்றுதான் நாம் கேட்கிறோம். நம்முடைய உழைப்பு நமக்குப் பயன்பட வேண்டும். அந்த அரசியல் அமைப்பு நட்பு முறையில் மாநிலத்திற்கு மாநிலம் போட்டி போடக் கூடியதாக இருக்க வேண்டும். அந்த அமைப்பைக் கேட்கிறோம். அது கூடாது என்று சொல்வது எப்படி இருக்கும் என்பதை நம்முடைய தமிழ் இலக்கியத்திலிருந்து 4 வரிகளை இங்கே எடுத்துக்காட்டுவது பொருத்தமாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வநத நம்முடைய மாண்புமிகு முதலமைச்சரவர்கள் பொருளாதார மாறுதலை மட்டும் வைத்து கொண்டுவரவில்லை. மிக முக்கியமான மொழி, நாகரீகம், பண்பாடு ஆகியவைகளையும் சேர்த்துத் தான் கொண்டு வந்திருக்கிறார்கள். அதுவும் மிக மிக முக்கியம்.

உகாண்டாவிலிருந்து குடிபெயர்ந்து இந்திய நாட்டுக்கு வருகின்ற குஜராத்தியர்களைப் பற்றியும் பேசுகிறோம்; இலங்கையிலிருந்து குடி பெயர்ந்து வருகின்ற தமிழர்களைப் பற்றியும் பேசுகிறோம். நாம் இலங்கையிலிருந்து வருகின்ற தமிழர்களைப் பற்றி பேசுகிறபோது கொஞ்சம் உணர்ச்சி அதிகமாக ஏற்படும். அது தவறு அல்ல. மாநில உணர்வால் ஏற்படுகின்ற இயற்கையான சுபாவம். தமிழ் இலக்கியமான புறநானூற்றில் இருந்து 4 வரிகளை இங்கே குறிப்பிடுகிறேன்.

"ஈயென விரத்த லிழிந்தன் றதனெதிர்
ஈயே னென்ற லதனினு மிழிந்தன்று
கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன் றதனெதிர்
கொள்ளே னென்ற லதனினு முயர்ந்தன்று"

என்று புறநானூற்றில் 4 வரிகள் வருகின்றன. நாம் ஒருவரிடம் சென்று பிச்சைக் கேட்பது இழிவானது. பிச்சை கேட்டபோது இல்லை என்று சொல்வது அதைவிடக் கேவலமானது. இன்றைக்கு பைனான்ஸ் கமிஷன் முடிவு அப்படித்தான் இருக்கிறது.

எதையும் மத்தியிலுள்ளவர்களைக் கேட்டே பெற வேண்டியிருக்கிறது. கேட்டுத்தான் பெறுகின்றோம். நாம் கொடுக்கக்கூடிய நிலையில் இருந் தாலும் கேட்டுப் பெற வேண்டிய நிலையில் இருக்கிறோம். டிஃபன்ஸ் பண்டுக்கு நாம் அள்ளிக் கொடுத்தோம். கொடுக்கக் கூடாது என்று சொல்லவில்லை. மற்றவர்களைவிட அதிகமாக நாம் கொடுத்தோம். ஆனால் இருக்க வேண்டிய நிலை அப்படியல்ல. கொடுக்கும்போது வேண்டாம் என்று சொல்வது ஒரு நாட்டுக்கு ரொம்பவும் சுயமரியாதை உடையமேம்பாடு தருகின்ற ஒரு நிலை என்பதை யாரும் மறுக்க முடியாது. இன்றைக்குப் பொருளாதார அமைப்பில் இந்தச் சீரமைப்பை செய்துகொண் டால் தான் அந்தக் கவியின் விமர்சனப்படி நாம் மேன்மையடைய முடியும்.

ராஜமன்னர் குழுவின் அறிக்கை முழுவதையும் படித்தவர்கள், அதேபோன்று முரசொலி மாறன் அவர்கள் எழுதிய மாநில சுயாட்சி புத்தகத்தை முழுமையாகப் படித்தவர்கள் அநேகமாக இந்த அடிப் படைக்கு மாறாகப் பேசுவது மிக மிகக் கடினம். அப்படிப் பேசுகிறார்கள் என்றால் அது வாதம் என்பதை விட அரசியலிலே அவர்கள் காட்டுகின்ற பிடிவாதம் என்ற முடிவுக்குத்தான் வர வேண்டும்.

நண்பர் ஹாண்டே அவர்கள் பேசுகின்ற நேரத்தில் எல்லாம் உரத்த குரலிலே பேசினார்கள். அப்படிச் சத்தமிட்டுப் பேசுவதைவிட, சத்தான வாதத்தை அதிகம் வைத்து, இந்த நாட்டு மக்களுக்கு நன்மை செய் கின்ற திராவிட முன்னேற்றக் கழகத்துடன் இணைந்து பாடுபட வருவது நல்லது என்று கூறி, எனக்குப் பேசுவதற்கு ஒரு வாய்ப்பினை அளித்த தலைவரவர்களுக்கு நன்றி கூறி, என்னுடைய உரையை முடித்துக்கொள் கிறேன். வணக்கம்.

திரு எம். சுரேந்திரன்: சார், பாயின்ட் ஆப் கிளாரிபிகேஷன். திரு. கந்தப்பன் அவர்கள் பேசும்போது திட்ட ஆணைக் குழுவிலே 1947-ம் ஆண்டுக்கு முன் சுதந்திரத்திற்காகத் தியாகம் செய்ததைப் போல

இப்போதும் தியாகம் செய்ய வேண்டுமென்று கூறியிருக்கிறார்கள் என்று சொன்னார்கள். அதிலே தவறு இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நாம் செய்த தியாகத்தால் தேசிய சுதந்திரம் தான் வந்தது; பொருளாதார சுதந்திரம் வரவில்லை. அதனால் அப்படிக் குறிப்பிட்டிருக்கலாம் என்பதை திரு. கந்தப்பன் அவர்கள் அறிவார்கள் என்று நினைக்கிறேன்.

திரு. செ. கந்தப்பன்: தலைவரவர்களே, நான் என்ன சொன்னேன் என்பதை அவர்கள் சரியாகக் கவனிக்கவில்லை என்று கருதுகிறேன். இந்தப் புத்தகத்திலே—திட்டக்குழு இந்த அறிக்கையில் தியாகம் செய்வதற்குத் தயாராக இருங்கள் என்று சொல்லியிருந்தால் நான் அதைப் பற்றி ஒன்றும் சொல்லியிருக்கமாட்டேன். ஆனால் அவர்கள் மத்தியிலே திட்டம் போட்ட முறையே தவறானது என்று சொல்லியிருக்கிறார்கள். இதிலே " அப்பிரச்சினையை அணுகிய முறை வேறு வகையிலாக இருந்தது. வறுமை நிலையைப் போக்க அவர்கள் நேரடியான முறையில் அல்லாமல் பிறவழிகளில் முயன்றனர். அதாவது காளையின் கொம்புகளைப் பிடித்து அதை அடக்க முயலாமல் அதன் வாலைப் பிடித்து அடக்க முயன்றனர்." என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்த அறிக்கை 1972–73-ம் ஆண்டில் வெளிவந்திருக்கிறது. (குறுக்கீடு). இந்தப் புத்தகம் பிளானிங் கமிஷன் சார்பில் வெளியிடப்பட்டது.

திரு. எ. ஆர். மாரிமுத்து: அதிலே குறிப்பிட்டிருப்பது ஒன்றும் தவறில்லையே. இருக்கின்ற நிலைமையைச் சொல்லியிருக்கிறார்கள்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: திரு. மாரிமுத்து அவர்கள் தவறு இல்லை என்று திரு. கந்தப்பன் அவர்களுக்குச் சொல்வதை திரு. சுரேந்திரன் அவர்களுக்குச் சொன்னால் நன்றாக இருக்கும்.

திரு. எ. ஆர் மாரிமுத்து: பிளானிங் கமிஷன் இப்போதுள்ள அப்ரோச்சிங் முறையைக் கொடுத்திருக்கிறார்கள். இதற்கு முன்னால் போட்ட திட்டங்களில் தவறு இருக்கிறது. ஆனால் இன்றைக்குப் போடும் திட்டங்களில் தவறு இல்லை.

திரு. எம். சுரேந்திரன்: பொருளாதார அணுகு முறையில் ஏற்பட்டிருக்கிற தவறைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். முன்னால் அணுகிய முறையில் தவறு ஏற்பட்டிருக்கிறது. அதனால் ஐந்தாண்டுத் திட்டத்தில் இதுவரையில் இருந்த அணுகு முறையை விட்டு விட்டு இப்போது புதிய முறையில் அணுகுகிறார்கள். ஆகவே தான் கொம்பைப் பிடித்து அடக்க வேண்டியிருக்கிறது. மாட்டின் கொம்பைப் பிடித்து அடக்கும் போது தியாகங்கள் பண்ண வேண்டிய சந்தர்ப்பம் ஏற்படும். அதனால் அப்படிக் குறிப்பிட்டிருக்கலாம்.

திரு செ. கந்தப்பன்: டெல்லியில் காங்கிரஸ் ஆட்சி மாறி—திராவிட முன்னேற்றக் கழக ஆட்சி ஏற்பட்டு—டாக்டர் கலைஞர் அவர்கள் பிரதமராகி "இதுவரை அணுகின முறை தவறு" என்று இதுபோலச் சொல்லியிருந்தார்கள் என்றால் புரிந்துகொள்ள முடியும். தொடர்ந்து காங்கிரஸ் ஆட்சியே

அங்கு இருந்து கொண்டிருக்கிறபோது இதுபோலச் சொல்கிறார்கள் என்றால்-இந்த நாட்டு மக்களின் ரத்தத்தை வியர்வையாக்கிக் கொடுத்த பணம்—ஐம்பதாயிரம் கோடி, ஆயிரம் கோடி என்று திட்டங்களிலே போட்டு விரயமாக்கிவிட்ட பிறகு இன்றைக்குக் கொம்பைப் பிடிப்பதற்குப் பதில் வாலைப் பிடித்துவிட்டோம் என்றார்கள் என்றால்—அதைத்தான் நான் குறிப்பிட்டேன்.

திரு எம். சுரேந்திரன் : பொறுப்புமிக்க திரு. கந்தப்பன் இதுபோலச் சொன்னார்கள் என்றால் நானும் சொல்ல முடியும்—கடந்த காலத் தவறுகளை எல்லாம் எண்ணி இன்றைக்கு மாநில சுயாட்சி என்று கொண்டு வந்திருக்கிறோம் என்று பேசுகிறார்களே, கடந்த காலத் தவறுகளை உணர்ந்து திருந்திக்கொள்வது எந்தவகையில் தவறு இருக்கிறது?

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : இப்போதாவது உணர்ந்தார்களே என்று நண்பர் பாராட்டுகிறார்கள். நானும் பாராட்டுகிறேன். ஆகையால்தான் பாராட்டுகிறபோது "கொம்பைப் பிடிப்பதற்குப் பதிலாக வாலைப் பிடித்துக் கொண்டிருந்துவிட்டோம்' என்று சொல்வது கூட சரியாக இருக்காது. தும்பைப் பிடித்திருக்க வேண்டும்—தும்பைப் பிடிக்க வேண்டும் என்று சொல்லியிருக்க வேண்டுமென்று திருத்திக் கொள்ளலாம்.

திரு எம். சுரேந்திரன் : நான் மொழியைப்பற்றிப் பேசவில்லை. கருத்தைப்பற்றித்தான் சொன்னேன்.

திருமதி த. ந. அனந்தநாயகி : அவர்கள் என்ன சொன்னார்களோ—மொழிபெயர்ப்பில் கூட தவறு இருக்கலாம்.

திரு பெ. சீனிவாசன் : ஐந்தாண்டுத் திட்டம் என்பது பொருளாதாரத் திட்டம். இதில் யார் தியாகம் செய்ய வேண்டும்? ஏற்கனவே தியாகம் செய்து தேய்ந்து போனவர்களே மீண்டும் தியாகம் செய்ய வேண்டுமா? டாட்டா, பிர்லா தியாகம் செய்ய வேண்டுமா?

திரு எம். சுரேந்திரன் : தேசிய சுதந்திரம் வேறு—பொருளாதார சுதந்திரம் வேறு—அன்றைக்குச் செய்த தியாகங்கள் எல்லாம் தேச சுதந்திரத்திற்குத்தான். பொருளாதார சுதந்திரத்திற்குத் தியாகம் செய்ய வேண்டும் என்பதுதான் இப்போதுள்ள நிலை.

*திரு எம். எ. லத்தீப் : பேரவைத் தலைவர் அவர்களே, வரலாற்றுச் சிறப்புமிக்க இந்தத் தீர்மானத்தின் மீது திராவிட இனத்தைச் சார்ந்த தமிழ் சமுதாயத்தினுடைய—முஸ்லிம் மார்க்கத்தைக் கடைப்பிடிக்கின்ற இந்தியக் குடிமகன் என்ற உணர்வுடனும் மிகப் பொறுப்புணர்ச்சியுடனும் என்னுடைய சில கருத்துக்களைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

[திரு. எம். ஏ. லத்தீப்] [1974 ஏப்ரல் 18

இங்கே கடந்த மூன்று நாட்களாக மிகச் சிறப்பான முறையில் நமது உறுப்பினர்கள் எல்லாம் தங்கள் கருத்துக்களை—இன்று அவைமுன் இருக்கிற இந்தத் தீர்மானத்தின் மீது வழங்கியிருக்கிறார்கள். இந்தக் கருத்துக்களை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்த நான் ஒரு சந்தேகத்திற்கு என்னை ஆளாக்கிக் கொண்டிருக்கிறேன்.

இந்தத் தீர்மானத்தை மாண்புமிகு டாக்டர் முதல்வர் அவர்கள் இங்கே முன்மொழிந்திருப்பது ராஜமன்னார் குழு சமர்ப்பித்த அறிக்கையின் அடிப்படையிலா? அல்லது தங்கள் சார்பாகக் கொண்டிருக்கிற கருத்தின் அடிப்படையிலா என்று புரியாமல் ஒரு சிலர் பேசினார்களோ என்பது என் ஐயம்.

ராஜமன்னார் குழு மத்திய மாநில தொடர்பு எப்படி இருக்க வேண்டும், உறவுகள் எப்படி இருக்க வேண்டும்,—இன்று இந்த உறவில் இருக்கிற சிக்கல்கள் யாவை, அதனால் ஏற்பட்டிருக்கிற இன்னல்கள் யாவை, மாநிலங்கள் எப்படி எல்லாம் இந்த உறவுமுறையின் காரணமாக பாதிக்கப் பட்டிருக்கின்றன, இவற்றை எல்லாம் சரி செய்ய அரசியல் அமைப்பு விதிமுறைகள் எப்படி எப்படி எல்லாம் மாற்றப்பட வேண்டும், என்பதனை எல்லாம் ஆராய்ந்து ஒரு கருத்தினை—ஒரு அறிக்கையினைச் சமர்ப் பித்திருக்கிறார்கள்.

அந்தக் குழுவில் இருந்தவர்கள் யார்? மிகப் பெரிய தேச பக்தர்கள்—சட்ட நிபுணர்கள்—கல்வி வல்லுநர்கள்—தேசத்திற்கே தம்மை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டவர்கள்.

நேற்றைய முன் தினம் தான்—அந்தக் குழுவில் இருந்து சிறப்பாகப் பணியாற்றிய—டாக்டர் லட்சுமணசாமி முதலியார் அவர்கள் மறைவு குறித்து நாம் நம் அனுதாபத்தைத் தெரிவித்தோம். இந்திய நாட்டின் தலைமை அமைச்சர் அவர்களே—டாக்டர் லட்சுமணசாமி முதலியார் அவர் களுடைய தேச பக்தியைப் போற்றியும்—நுண்ணிய கல்வி அறிவைப் போற்றியும்—மருத்துவத் துறையில்—அவர் இந்திய நாட்டிற்கு மட்டு மல்ல—மனித சமுதாயத்திற்கே ஆற்றிய தொண்டினைப் போற்றியும்—அவர்கள் நாட்டின் சுதந்திரத்திற்காக, மருத்துவத் துறைக்காக—கல்வித் துறைக்காக ஆற்றியுள்ள அளப்பரிய சேவைகளை எல்லாம் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள்.

திரு. ராஜமன்னார் இந்த நாட்டின் நீதிபதியாக இருந்தவர்—மிகப் பெரிய தேசபக்தர்—இந்த நாட்டின் மீது அசையாத பக்தியும் மதிப்பும் வைத் திருந்தவர்.

திரு. சந்திரா ரெட்டி உச்ச நீதிமன்றத்தின் பிரதம நீதிபதியாக இருந்தவர்.

இப்பேர்ப்பட்டவர்கள் ஒன்று கூடி இந்தப் பிரச்சினைகளைப்பற்றி ஆற அமர அலசி ஆராய்ந்து ஒரு அறிக்கையினைச் சமர்ப்பித்திருக்கிறார்கள். அந்த அறிக்கையின் மீது தங்களது கருத்துக்களை மாண்புமிகு உறுப்பினர்

கள் அளிப்பார்கள் என்று மூன்று நாட்களாகக் காத்திருந்தேன். அவர்கள் ராஜமன்னர் குழு கொடுத்த அந்த அறிக்கையின் மீது தங்கள் கருத்துக்களைச் சொல்லாமல் எதோ இந்தக் கருத்துக்களை எல்லாம் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் தொகுத்துக் கொடுத்த அறிக்கைபோலப் பேசியிருக்கிறார்களே என்பதுதான் என்னுடைய வேதனையாகும்.

இந்தத் திட்டத்தைக் கொண்டு வருவதற்கு உங்களுடைய நோக்கம் என்ன? **What is your bona fides?** என்று எதிர்க் கட்சியினர் சிலர் கேட்க, மாண்புமிகு உறுப்பினர் திரு கந்தப்பன், "Do you question our **bona fides?** எங்கள் நல்லெண்ணத்தைச் சந்தேகிக்கிறீர்களா?" என்று திருப்பிக் கேட்க, "ஆம்" என்று எதிர்க் கட்சியினர் சொன்னார்கள்.

இங்கே இருப்பது கந்தப்பனுடைய நல்லெண்ணமா? மற்றவர்கள் நல்லெண்ணமா என்பது பிரச்சினை அல்ல. ராஜமன்னர் குழு சில சிபார்சுகளைச் செய்திருக்கிறது. மாபெரும் தேச பக்தர் ராஜமன்னர்—மாமேதை லட்சுமணசாமி முதலியார்—நடுநிலை தவறா சந்திரா ரெட்டி—ஆகியவர்கள் கொடுத்த அறிக்கையைச் சந்தேகிக்கிறீர்கள் என்றால்—அவர்களுடைய தேசபக்தியிலேயே சந்தேகம் கொண்டிருக்கிறீர்களா என்று கேட்க ஆசைப்படுகிறேன்.

இங்கே பேசுகின்ற லத்தீபை விட்டுவிடுங்கள்—கந்தப்பனை விட்டுவிடுங்கள்—டாக்டர் கலைஞரை விட்டுவிடுங்கள்—டாக்டர் கலைஞர் அவர்கள் இங்கே கொண்டு வந்திருக்கிற தீர்மானம் ராஜமன்னர் குழு அளித்த அறிக்கையின் அடிப்படையில் அமைந்திருப்பது—நீங்கள் இதற்கு உள்நோக்கம் கற்பிக்கிறீர்கள் என்றால் ராஜமன்னர் குழுவினர்களுக்கு உள்நோக்கம் கற்பிக்கிறீர்கள்.

மாண்புமிகு அம்மையார் போன்றவர்கள் சொன்னார்கள். நாங்கள் தேசபக்தி பாரம்பரியத்தில் வந்தவர்கள் என்று. அவர்கள் தேசபக்தி பாரம்பர்யத்தில் வந்தவர்கள் என்பதை நான் ஏற்றுக் கொள்கிறேன். அதே நேரத்தில் டாக்டர் லட்சுமணசாமி முதலியார் அவர்கள், ராஜமன்னர் அவர்கள், மிகப் பெரிய தேசபக்தர்கள்—நாட்டின் ஒற்றுமைக்காக உழைத்தவர்கள்—நாட்டின் ஒற்றுமையைப் பேணிக் காக்க வேண்டும் என்பதற்காகவே தங்கள் வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்டவர்கள்—அவர்களுடைய அறிக்கைபற்றி உங்களது தெளிவான கருத்து என்ன என்பது தான் இப்போது நம் முன்னுள்ள பிரச்சினை. அதைச் சிந்தித்துப் பார்க்கக் கடமைப்பட்டவர்களாக இருக்கிறோம்.

இந்தத் தீர்மானத்தில் பல கருத்துக்களைக் கேட்டோம். இதன் விளைவாக தெளிவாக நான்கு கருத்துக்கள் வந்திருக்கின்றன என்று நான் நினைக்கிறேன். முதல் கருத்து :

The Indian Constitution as it is now is truly Federal in character, that the rights of the States are judiciously and sufficiently safe-guarded and as such no constitutional amendments are called for.

The second opinion is like this.

[திரு. எம். ஏ. லத்தீப்] [1974 ஏப்ரல் 18

The present Constitution as it divides the powers of Centre and States is judiciously Federal having only a bias towards unitarianism. But by convention and practice due to a single party rule both in the Centre and in the States for a period of about 15 years certain powers enumerated in List II of the Seventh Schedule have either been ussrped by the Centre or have been bemuinbed and as such barring constitutional amendments as have been recommended by the Committee, the said unconstitutional practices should be given up in order to make the States more viable, efficient and effective.

இப்போதிருக்கிற நிலைமையிலே இன்று இருக்கிற அரசியல் சட்டத்தின் அடிப்படையிலே ஒவ்வொரு மாநில அரசும் சமமாக நடத்தப்படுவதற்கு முடியும். ஆகையால் அரசியல் சட்டத்திலே வேறுவிதமான திருத்தங்களைச் செய்ய வேண்டிய அவசியம் இல்லை என்பது ஒரு கருத்து.

மற்ெருரு கருத்து, இன்றிருக்கிற அரசியல் சட்டம் மாநிலங்களுக்குப் போதிய அதிகாரங்களை, தேவையான அதிகாரங்களைக் கொடுத்திருக்கிறது என்பதிலே எந்தவிதமான ஐயமும் இல்லை.

ஆனால், கடந்த 15, 17 ஆண்டுகள் மத்தியிலும், மாநிலங்களிலும் ஒரே கட்சி ஆட்சி இருந்ததன் காரணமாக, மாநிலங்களிலே ஆட்சி செய்கின்ற ஆட்சியாளர்களுக்குத் திட்டங்களை, கொள்கைகளை, வகுத்துக் கொடுக்கக் கூடியவர்கள் மத்தியிலே இருந்த தலைமையகத்தைச் சேர்ந்தவர்களாக இருந்த காரணத்தினால், மத்தியிலே இருப்பவர்களுக்கும் மாநிலத்திலே இருப்பவர்களுக்கும் எந்தவிதமான சிக்கலும் ஏற்படவில்லை.

அதனால், அரசியல் சட்டத்திலே மாநிலங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற வரையறைகளை, சில அதிகாரங்களைக் கூட, மத்திய அரசு செயல் முறைகளிலே, கன்வென்ஷன்ஸ் அண்ட் பிராக்டிஸஸ் என்று சொல்லக் கூடிய, திட்டங்களிலே மரபுகளிலே அந்த அதிகாரங்களைத் தன்னகப் படுத்தி, மாநிலங்களுக்கு அந்த அதிகாரங்கள் சரியாகக் கிடைக்காமல் செய்துவிட்டது. ஆகையினாலே, அந்த நடைமுறைச் சிக்கல்களை மட்டும் அகற்றும் வகையில் சில திட்டங்களை, மாற்றங்களை, நிர்வாகத்தில் செய்துவிட்டால்—கான்ஸ்டிட்யூஷனல் அமெண்ட்மெண்ட் தேவையில்லை யென்று மத்திய அரசினுடைய நிர்வாகக் குழுவின் குறிப்பு இருக்கிறது என்பதை ஒத்துக்கொண்டு, கான்ஸ்டிட்யூஷனல் அமென்மெண்ட் தேவையில்லை யென்று இங்கே ஒரு சிலர் பேசியிருக்கிறார்கள்.

The third opinion is that the present constitution is neither federal nor unitary, but quasi-federal making the States ineffective and subordinate and leaving the Centre prominent in all spheres of administration and it should be suitably checked by constitutional

amendments. But the bona fides of the ruling D.M.K. party is questionable and therefore there is reluctance in extending support to the resolution that is being discussed in this House.

அடுத்த கருத்து, இன்று இருக்கிற நம்முடைய இந்த சமஷ்டி முறை உண்மையான பெடரல் தத்துவத்தின்மீது அமைந்திருக்கவில்லை. அதே நேரத்தில் ஒற்றையாட்சி என்று சொல்லக்கூடிய யூனிட்டேரியனிசம் அதில் இருக்கிறது என்றால், அதுவுமல்லாமல், இதுவுமில்லாமல் அதிலே சில தத்துவங்களையும், இதிலே சில தத்துவங்களையும் வைத்து, புதிய குவாசி பெடரேஷன், சமஷ்டி முறை பாணியிலே, சமஷ்டி முறை அடிப்படையிலே இது அமைந்திருக்கிறது. இதன் வாயிலாக, மாநிலங்களையெல்லாம் மத்திய அரசுக்குக் கட்டுப்பட்டு, மத்திய அரசால் அடக்கப்படுகின்ற மத்திய அரசால் ஒரு திட்டத்தைக் கொண்டு வந்தால், அந்தத் திட்டத்தை ஏற்றுக் கொள்ள வேண்டிய கட்டத்திற்கு மாநிலங்கள் உட்படுத்தப்படுகின்றன.

ஆகையினாலே, இந்த முறைகளையெல்லாம் மாற்றி, மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்களைக் கொடுக்கும் வகையிலே அரசியல் சட்டத்தினை மாற்றிட வேண்டும். அதை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

ஆனால், இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கக் கூடிய திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய உள் நோக்கத்தை நாங்கள் சந்தேகிக்கிறோம். எந்த நேரத்திலே இந்தத் தீர்மானம் கொண்டு வரப்பட்டிருக்கிறது ? உண்மையிலே மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் வேண்டுமென்று இவர்கள் கொண்டு வந்திருக்கிறார்களா, அல்லது தாங்கள் இழந்துவிட்டிருக்கிற அரசியல் செல்வாக்கை மீண்டும் பெற்றிட வேண்டுமென்று அவர்கள் கொண்டு வந்திருக்கிறார்களா ? இப்பொழுது மாநிலங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற அதிகாரங்களைக் கொண்டு இது வரையிலே இவர்கள் தூய்மையாக ஆட்சி நடத்தி இருக்கிறார்களா ? அந்த அதிகாரங்களை வைத்து, தி.மு.க. ஆட்சி நடத்தியிருக்கிறது. மேற் கொண்டும் அதிகாரங்களைக் கொடுத்தால் நல்ல முறையிலே ஆட்சி செய் வார்களா ? ஆகையினாலேதான் நாங்கள் அரசியல் சட்டத் திருத்தத்தை ஏற்றுக் கொண்டாலும், இங்கே தி.மு. கழகத்தின் நோக்கத்தைச் சந்தேகிக்கின்றவர்களாக இருக்கிற காரணத்தினால் இதை ஏற்றுக்கொள்ளவில்லை. இது ஒரு வாதம்.

அடுத்த வாதம்.—

The present constitution, the practice and conventions arising out of it, have all rendered the States ineffective and impotent, reducing them into glorified super-municipalities and as such, the constitution must undergo drastic changes to make the States autonomous and the Centre strong to safeguard the unity and integrity of the country.

அடுத்து, 4-வது எண்ணம் உடையவர்கள் கருத்தைச் சொல்லி இருக்கிருர்கள். தெளிவாகச் சொல்லியிருக்கிருர்கள். இன்றைக்கு இருக்கிற சமஷ்டி முறை, இன்றைக்கு இருக்கிற இந்த அரசியல் சட்டம் மாநிலங்களுக்கு அதிகாரங்களைக் கொடுத்ததாகச் சொல்லி, அரசியல் சட்டத்திலே வரையறுக்கப்பட்டிருக்கிற அதிகாரங்களைக் கூட, செயல்முறை களிலே, அந்த அதிகாரங்களைக் கூடப் பறிக்கின்ற வகையிலே மத்திய ஆட்சியாளர் நடக்கிருர்கள். இன்றைக்கிருக்கிற இந்த அதிகாரங்களை வைத்துக் கொண்டு எந்த மாநிலமும் செம்மையாகச் செயல்படவில்லை.

நம்முடைய திரு. கந்தப்பன் அவர்கள் எடுத்துச் சொன்னதைப் போல், மாநிலங்களெல்லாம் மலடுகளாக ஆக்கப்பட்டிருக்கின்றன. எந்த ஒரு காரியத்தையும் தன்னிச்சையாக மாநிலங்களின் தேவைகளுக்கேற்ப அவ்வப்பொழுது, உரிய நேரத்தில், உரிய அதிகாரங்களைக் கொடுத்து இந்த நாட்டில் ஏற்பட்டிருக்கிற, பொருளாதாரச் சிக்கல்களை உடனுக் குடன் அகற்றுவதற்கும், ஏற்ற வகையில் அதிகாரங்கள் இல்லாத அளவு இன்றைக்கு மாநில அரசாங்கங்கள் மலடுகளாக்கப்பட்டிருக்கின்றன என்ற காரணத்தினுல், உண்மையான சமஷ்டி முறையை யொட்டி மாநிலங் கள் உறுதியான முறையிலே, உண்மையிலே அதிகாரங்களைப் பெற்றிட வேண்டும். அந்த அதிகாரங்களை உடனுக்குடன் நிறைவேற்றக் கூடிய வாய்ப்புகளைப் பெற்றவர்களாகவும் இருந்திட வேண்டும். அதற்கு அரசியல் சட்டத்தை நாம் மாற்றிட வேண்டும்.

அதே சமயத்தில், அரசியல் சட்டத்தை மாற்றி, மாநிலங்களுக்குச் சுயாட்சிக் கோரிக்கையை வைக்கின்ற அதே நேரத்தில், இந்திய நாடு நமது நாடு, இந்த நாட்டினுடைய ஒற்றுமை காக்கப்பட வேண்டும், இந்த நாட்டினுடைய சக்தி காக்கப்பட வேண்டும். அந்த அடிப் படையிலே மத்திய அரசும் நாட்டினுடைய ஒற்றுமையைக் காப்பதற்குச் சக்தியுள்ள அரசாக இருக்க இந்தத் திருத்தத்தை மேற்கொள்ள வேண்டு மென்ற வாதத்தை நான்காவது வாதமாக இங்கே உறுப்பினர்கள் வைத்திருக்கிருர்கள்.

நான் முஸ்லீம் லீக் கட்சியின் சார்பாகப் பேசுகிறேன். அந்த என்னுடைய கட்சியின் சார்பாக நான் நான்காவது வாதத்தை முழு மனதுடன் ஏற்றுக் கொண்டு, என்னுடைய கருத்துக்களைச் சொல்கிறேன்.

ஏன் இதை ஆதரிக்கிருர்கள் என்று கூடக் கேட்கப்பட்டது. பிரிவினை வாதத்தை இங்கே ஏற்றுக்கொள்வதாகச் சொல்லப்பட்டு, தமிழரசுக் கட்சி ஏற்றுக் கொள்ளலாம், அல்லது முஸ்லீம் லீக் கட்சி ஏற்றுக்கொள்ளலாம், ஏனென்ருல், அவர்கள் பிரிவினைவாதிகள் என்று இங்கே பேசினுர்கள் என்று நான் கேள்விப்பட்டேன்.

ஆனல், நான் ஒன்றைத் தெளிவாகச் சொல்லிக் கொள்கிறேன். திராவிட முன்னேற்றக் கழகம் பிரிவினையை விட்டு விட்டது என்று டாக்டர் கலைஞர் அவர்களுடைய காலத்திலே அல்ல, இந்தத் தமிழ்ச் சமுதாயத்தினுடைய மூல நாயகனுக, தமிழன் தமிழன்

என்ற பெருமையினை உணர வேண்டும் என்று அந்தக் காலத்திலேயே எடுத்துணர்த்திய மறைந்த பெரியவர் அந்தப் பிரிவினையை விட்டு விட்டோம், விட்டுவிட்டோம் என்று உலகுக்கு உணர்த்தினார்கள்.

ஆனால், சிலருக்கு உணர்வு இல்லை—உணரவே இல்லை. அதுதான் நமக்கிருக்கிற வேதனை. அவர்கள் நன்றாக உணர்த்தினார்கள்—நாம் பிரிவினையை விட்டுவிட்டோம் என்று.

அந்தப் பிரிவினையை விட்டுவிட்ட பிறகு, நான் சில உண்மைகளை இந்த அவையின் முன் வைக்கிறேன். இங்கே பலதரப்பட்ட உறுப்பினர்கள் பேசுகிறார்கள். மதிப்பிற்குரிய பெரியார் என். வி. நடராசன் அவர்கள் இங்கே இருக்கிறார்கள். திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் சுய மரியாதைக் கட்சிக்கும், முஸ்லீம் லீக்கிற்கும் இருந்த அந்தப் பாரம் பரியமான, சிறப்பான தொடர்பைப் பற்றி அவர்கள் அடிக்கடி எடுத்துச் சொல்வார்கள்.

1938-வது வருஷம் இந்தியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்து சிறைக்குச் சென்ற நேரத்தில், அவர்களுக்கு வாதாடிய முஸ்லீம் லீக் உறுப்பினர்கள் நம்முடைய மதிப்பிற்கும் மரியாதைக்குமுரிய காயிதே மில்லத் இஸ்மாயிலும் மற்றவர்களும் ஆவார்கள், இங்கே சட்டசபையிலே அன்றைக்கு வாதாடியிருக்கிறார்கள்.

திராவிட முன்னேற்றக் கழகத்கைச் சேர்ந்தவர்கள் அன்றைக்குச் சட்ட சபையிலே இல்லை

ஆனால், அன்றைக்கு அரசியலிலே ஆதிக்கம் இருந்தாலும், திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைவர் அறிஞர் அண்ணா அவர்கள், அரசி யலிலே என்னதான் நாம் வலுவுள்ளவர்களாக இருந்தாலும், பாராளுமன்றத்திலே, சட்டமன்றத்திலே நுழையாவிட்டால், சமூகச் சீர்திருத்தம் செய்ய முடியாது என்று எண்ணி, 1957-லே திராவிட முன்னேற்றக் கழகம் தேர்தலிலே பங்கு கொண்டது. அன்றைக்கு அவர்கள் தங்கள் கொள்கையாகத் திராவிட நாட்டுக் கொள்கையை வைத்தார்கள். அந்தக் கோரிக்கையை வைத்து அவர்கள் அன்றைக்கு தேர்தலிலே நின்றார்கள். அந்த நேரத்தில், எங்களது மரியாதைக் குரிய காயிதே மில்லத் அவர்களை அணுகி, வாணியம்பாடி தொகுதிலே போட்டியிட்ட தி.மு.க. வேட்பாளருக்கு ஆதரவு தர வேண்டுமென்று நான் கேட்டேன். நான், அப்பொழுது பி.யூ.சி. படித்துக் கொண்டிருந் தேன், சின்னவன். இருந்தாலும் கேட்டேன். காங்கிரஸ்காரர் போட்டி யிடுகிறார். அவர் வால்போஸ்டர் ஒட்டுகிறார். அரசாங்கத்தினால் தேர்ந் தெடுக்கப்பட்ட அபேட்சகர், அரசாங்கத்திற்கும் கட்சிக்கும் அப்பொழுது வித்தியாசமே கிடையாது. அரசாங்கத்தினால் தேர்ந்தெடுக்கப்பட்ட அபேட்சகர், அதாவது வேட்பாளர். அந்தக் காலத்தில் அபேட்சகர், என்று சொல்லுவார்கள். அந்தக் காலத்தில் அந்த மொழிதான்.

(பி. ப. 12–30)

ஆகவே நாம் அவர்களை ஆதரிக்க வேண்டும் என்று சொன்ன பொழுது முஸ்லீம் லீக்கினுடைய தலைவர் அவர்கள் தெளிவாகச் சொன்னார்கள், தி.மு.க.வுக்கும் நமக்கும் உணர்ச்சிபூர்வமாகத் தொடர்பு இருக்கிறது, ஆனால் நாம் ஆதரிக்க முடியாத காரணம் அவர்கள் திராவிட நாட்டுப் பிரிவினை கேட்கிறார்கள், ஆகவே முறையாக ஆதரவு தர முடியாது என்று திட்டவட்டமாக திரு. காயிதே மில்லத் அவர்கள் 1957–லே என்னிடத்திலே சொன்னார்கள், எல்லோரிடத்திலேயும் சொன்னார்கள்.

அதற்குப் பிறகு மாற்றுத் திட்டம் வேறு சொல்லி வாணியம்பாடித் தொகுதியிலேயும், இசைமுரசு நாகூர் ஹனிபா அவர்களுக்கு நாகப் பட்டினத்திலும் 1957–லிலே ஆதரவு தந்தது. மற்ற இடங்களில் எல்லாம் முஸ்லீம் லீக் திராவிட முன்னேற்றக் கழகத்தை எதிர்த்தது, எதிர்த்ததின் காரணம்—நம்முடைய திரு. என். வி. என். அவர்களுக்கும் நமக்கும் உணர்ச்சி பூர்வமான தொடர்பு இருந்தாலும், கலைஞர் அவர்களுக்கு இந்த சமுதாயத்தின் மீது அன்பு இருந்தாலும், நாவலர் அவர்களுக்குச் இந்தச் சமுதாயத்தின்மீது அன்பு இருந்தாலும்—அவர்கள் பிரிவினை கோருகிறார்கள், அதனால் ஆதரவு கொடுக்க முடியவில்லை என்பதுதான்.

திருப்பூர் மொய்தீன் அவர்கள் காஞ்சிபுரத்திலே அறிஞர் அண்ணா அவர்களைச் சந்தித்துச் பேசினார்கள். நமக்குள்ளே உணர்ச்சிப் பூர்வமான தொடர்பு இருக்கிறது, அது தொடருவதற்கு நீங்கள் பிரிவினையை விட்டு விட வேண்டுமென்று சொன்னார்கள், அதனுடைய விளைவு என்ன நடந்தது என்பது உங்களுக்கு எல்லாம் தெரியும்.

பிரிவினையை விட்டுவிட்டோம் என்று அறிஞர் அண்ணா அவர்கள் அறிவித்தார்கள். அதற்குப் பிறகு முஸ்லீம் லீக்கிற்கும், தி.மு.க. வுக்கும் தொடர்பு ஏற்பட்டது. 1967–லே அது எந்த வகையிலே ஏற்பட வேண்டுமோ அந்த வகையிலே ஏற்பட்டது, அதன் பிறகுதான், அந்தத் தேர்தலிலே தி.மு.க. வெற்றி பெற்று ஆட்சி அமைத்தது, முஸ்லீம் லீக் நான்கு இடங்களிலே போட்டியிட்டு மூன்று இடங்களிலே வெற்றி பெற்று முதன்முறையாக இந்த அவையிலே காலடி எடுத்து வைத்தது. முஸ்லீம் லீக்கினர் பிரிவினையை எழுப்புகிறார்கள் என்று சொல்வது இந்த அவையிலே ஒரு சிறுபான்மையோருக்கு எதிராக அப்படிப் பேசுவது தலைவர்களாக இருப்பவர்களுக்கு ஏற்றதல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பாகிஸ்தான் பிரிவினைக்கு முஸ்லீம் லீக்தான் காரணம் என்று சொல்கிறார்கள். அது உண்மையல்ல என்பதை நமக்கு எல்லாம் பல தலைவர்கள் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். மௌலானா அபுல் கலாம் ஆசாத் அவர்கள் எழுதிய புத்தகங்கள் தமிழிலேயும் இருக்கின்றன, ஆங்கிலத்திலேயும் இருகின்றன, உருது மொழிலேயும் இருக்கின்றன.

1974 ஏப்ரல் 18] [திரு. எம். ஏ.லத்தீப்]

அது மட்டுமல்ல; வட புலத்திலே இருக்கின்ற சில வல்லுநர்கள் சில உண்மைகளைச் சொல்லியிருக்கிறார்கள். பாகிஸ்தான் ஏற்படுவதற்கு காரணம்—அப்படிக் கோரிக்கை இருந்ததுதான்; என்னவென்றால் முஸ்லீம்ஸ் அட்டானமஸ் ஸ்டேட்ஸ் என்ற வகையிலே கோரிக்கையை எழுப்பினார்கள். ஆனால் பண்டித ஜவஹர்லால் நேரு, வல்லபாய் படேல், ராஜேந்திர பிராசத், பந்த் போன்றவர்கள் எல்லாம் என்ன நினைத்தார்கள் என்றால்—பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களோடு சம அந்தஸ்து உடையவராக முகமது அலி ஜின்னா அவர்கள் இருந்தார்கள். லியாகத் அலி இருந்தார்கள்—அவர்களை வைத்துக் கொண்டு ஒட்டு மொத்தமாகச் சுதந்திரம் பெற்று ஆட்சியை அமைத்தால் நம்முடைய செல்வாக்கு போய்விடும். நமக்கு செல்வாக்கு இருக்காது, ஜின்னாவுடைய செல்வாக்கும் என்னுடைய செல்வாக்கும் ஒன்றாக இருக்கும், என்று கருதி அன்றைக்கு இருந்த காங்கிரஸ்காரர்கள்—காந்தியடிகள் பிரிவினைக்குத் தயக்கம் காட்டிய நேரத்திலே—திட்டமிட்டு அதை உருவாக்கினார்கள்.

பண்டித நேரு போன்றவர்களும், படேல் போன்றவர்களும் ராஜேந்திர பிரசாத் போன்றவர்களும் பந்த் போன்றவர்களும் அதை ஏற்படுத்தினார்கள் என்ற உண்மையை நான் சொல்லவில்லை, புத்தகங்களிலே காரணங்களைத் தந்திருக்கிறார்கள், யாரும் படித்துப் பார்த்துக் கொள்ளலாம் என்று கேட்டுக் கொள்கிறேன்.

திரு பெ. சீனிவாசன் : நம்முடைய லத்தீப் அவர்கள் ஒரு புதுச் சரித்திரத்தைச் சொல்கிறார்கள். பாகிஸ்தான் பிரிவினை ஏற்பட்டதற்குக் காரணம் வட நாட்டிலே அப்போது நடந்த கொலைகள், பயங்கரக் கலவரங்கள்தான் காரணம் என்று சொல்லப்படுகிறது. ஆனால் இவர்கள் ஒரு சிறிய காரணம் ஒரு புதுக் காரணத்தைச் சொல்கிறார்கள் அது பொருத்தமாக இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு. எம். ஏ. லத்தீப் : கொலைகளையும், கலவரங்களையும், எண்ணுகின்ற பழக்கம் எங்களுக்கு இல்லை. மறப்போம் மன்னிப்போம் என்ற நிலைமையில் இருக்கிறோம், நாங்கள் அதை யெல்லாம் தேடிச் செல்வதில்லை. ஆனால் மீண்டும், மீண்டும் முஸ்லீம் லீக்கைப்பற்றி அப்படிப் பேசக்கூடிய சூழ்நிலை இருக்கிறது, அது உண்மையல்ல..

திரு. கே. என். குமாரசாமி : பாகிஸ்தான் பிரிவினைக்குக் காரணம் காங்கிரஸ் தலைவர்கள்தான் என்று சொன்னார்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் பிரிவினையை ஏற்படுத்த வேண்டுமென்று நினைத்து பாகிஸ்தான் தலைமையைத் தங்கள் கைக்குள் போட்டுக் கொண்டார்கள். அதுதான் சரித்திரம், ஆகவே, சரித்திரத்தைத் திருத்த முடியாது, பிரிவினையைக் கொண்டு வந்தவர்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம்தான், அதற்கு அடிபணிந்தவர்கள் முஸ்லீம் லீக், ஜின்னா போன்றவர்கள், வெள்ளிக் தோட்டாவைக் கொடுங்கள், வேறு ஒன்றும் செய்யவேண்டாம் என்று பணத்தை மட்டும் கொடுங்கள் என்று கேட்டார்கள். அதுதான் சரித்திரம், அதை மாற்ற நினைத்தால் மக்கள் மறந்துவிடமாட்டார்கள்.

திரு. எம். எ. லத்தீப் : சரித்திரத்தை மாற்றவில்லை. சரித்திரம் என்பது காலத்தின் படைப்பு. அதை யாரும் மாற்றவோ மறைக்கவோ முடியாது.

THIRU K. S. KOTHANDARAMIAH : Sir, the subject-matter of discussion in the House is quite different. If we allow talks about partition, it will lead us somewhere. Let us confine ourselves to the relevant subject before us.

திரு. எம். எ. லத்தீப் : நான் உள்ளே நடந்த சில உண்மைகளை அன்றைக்குப் பெரியவர்கள் எழுதிய கருத்துக்களைச் சொன்னேன். அந்தக் கருத்துக்களைப் படித்துப் பார்க்கலாம். அபுல் கலாம் ஆசாத் அவர்கள் எழுதிய புத்தகத்தைப் படிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன். ஆசாத் எழுதிய புஸ்தகத்தைப் படித்துப் பாருங்கள். சில எண்ணங்களைச் சில பெரியவர்கள் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள். அவ்வளவு தெளிவாக இருக்கின்ற கருத்துக்களை எடுத்துக் கொள்வது அவரவருடைய மனோநிலையைப் பொறுத்தது ஆகும். நான் இன்றைக்கு கூடச் சொல்கிறேன், அவர்கள் அப்படி நடந்துகொண்டதுதான் இந்திய நாட்டிலே எங்களுக்குப் பெருத்த பாதகத்தை இன்றைக்கு ஏற்படுத்தியிருக்கிறது. பிரிந்து போனவர்கள் எல்லாம் இங்கேயே இருந்திருந்தால் எங்கள் எண்ணிக்கை கணிசமாக இருந்திருக்கும். இப்படிப்பட்ட பேச்சுக்கள் இருந்திருக்காது இன்றைய தினம்.

இங்கே பேசிய மதிப்பிற்குரிய தலைவர் அவர்கள் அம்பேத்கார் பற்றிச் சொன்னார்கள். அரசியல் நிர்ணய சபையைப்பற்றிச் சொன்னார்கள். இந்த நாட்டிலே அரசியல் சட்டம்தான் புனிதமானதே தவிர Personal laws அல்ல, தனிப்பட்டவர்களுடைய சட்டம் முக்கியமானதல்ல, முஸ்லீம்கள், அரசியல் சட்டத்தைத்தான் புனிதமாகக் கருத வேண்டும். இல்லாவிட்டால் இந்த நாட்டைவிட்டு ஓட வேண்டுமென்று சொன்னார்கள் என்று பொறுப்பு மிகுந்த தலைவர் சொன்னார்கள். அப்படி அவர்கள் சொல்லியிருக்கிறார்களா என்று நான் நேற்றிலிருந்து தேடித் தேடிப் பார்த்தேன், 15 வால்யூம்களிலேயும், ஒரு வார்த்தையாவது அப்படியிருக்கிறதா என்று....

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : எந்த பொறுப்புமிக்க தலைவர்? பொறுப்புமிகுந்த தலைவர் என்று சொன்னால் பேரவைத் தலைவராகிய தங்களைத்தான் குறிக்கும். ஆகவே யார் பொறுப்புமிகுந்த தலைவர் என்று சொன்னால் அது குறிப்பிலே தெளிவாக வரும்.

திரு. எம். எ. லத்தீப் : பெயரைச் சொன்னால்கூட சில பேர்களுக்குக் கோபம் வரும். கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் திரு. கே.டி.கே. தங்கமணி அந்தக் கருத்தைச் சொன்னார்கள், நான் அது இருக்கிறதா என்று சிரமப்பட்டுத் தேடிப் பார்த்தேன். காயிதே மில்லத் அப்போது பேசியிருக்கிறார்கள். மைனாரிட்டி ரைட்ஸ்பற்றி விவாதம் நடந்திருக்கிறது

[1974 ஏப்ரல் 18 [திரு. எம். எ. லத்தீப்]

சில திருத்தங்களைப்பற்றி அப்போது காயிதே மில்லத் அவர்கள் பேசியிருக்கிறார்கள். டாக்டர் அம்பேத்கார் அவர்கள் பேசியிருப்பதாகக் குறிப்பிட்டார்கள். அவர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்றால் **Muslim laws are not immune,** என்ற ஒரே வார்த்தையை, ஒரே செண்டன்ஸில் சொல்லியிருக்கிறார்கள். நான் அதைப் படித்துப் பார்த்தேன். இவைகள் மாற்றப்படக் கூடாது என்பதல்ல என்ற வார்த்தையை நம் அம்பேத்கார் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் அப்பேர்ப் பட்ட பெருமகனாரைப் பற்றி இந்த அவையில் பேசும்போது அவர்கள் இந்த நாட்டிலிருக்கின்ற முஸ்லீம்களை வெளியேறுங்கள் என்று சொன்னார் என்று சொல்லுவது ஒரு நல்ல வாதமாகாது. அதை நாம் தவிர்த்திருக்க வேண்டும். அவர்கள் மீண்டும் வலியுறுத்திச் சொன்னார்கள். இந்த நாட்டினுடைய அரசியல் சட்டத்தை நாம் மதிக்க வேண்டும். அதைப் புனிதமாகக் கருத வேண்டுமென்று சொன்னார்கள். நான் பெருமிதத் தோடு ஏற்றுக் கொள்கிறேன். அரசியல் சட்டத்தை மாற்ற வேண்டு மெனக் கூறலாம். அதுவரையில் அரசியல் சட்டம் அமுலில் இருக்க வேண்டும். அதைப் பாதுகாக்க, அதன்படி நடந்து கொள்வதற்கு கடமைப்பட்டவர்களாக இருக்கிறோம். ஆனால் அதே நேரத்தில் நான் மிகுந்த பணிவுடன் நம் மதிப்பிற்குரிய கே.டி.கே. தங்கமணி அவர் களுக்குச் சொல்லுவேன். அதே அரசியல் சட்டத்தில்தான் விதிகள் 25-லிருந்து 30 வரையில் மைனாரிட்டி சமூகங்களுக்குச் சில சலுகைகளும், அவர்களுக்கு இருக்கக் கூடிய உரிமைகளும் அந்த அரசியல் சட்டம், வரையறுத்துச் சொல்லுகிறது. நாங்கள் கேட்பது அரசியல் சட்டத்திற்கு அப்பாற்பட்டது அல்ல. அந்த பர்சனல் லா-வை நீங்கள் தூக்கி எறிந்து, நீங்கள் இல்லாது ஒழியுங்கள் என்று சொல்லுகிறீர்களே, அதே பர்சனல் லா காக்கப்பட வேண்டும், அதை காக்க வேண்டிய உரிமை அரசுக்கு உண்டு, மக்களுக்கு உண்டு, அது கொடுக்க வேண்டிய உரிமை என்று அரசியல் சட்ட விதிகள் அங்கே தெளிவாகச் சொல்லுகின்றது. அந்த அரசியல் சட்டத்தை, அதை எழுதிய கர்த்தாவான நம் அம்பேத்கார் அவர்கள் அப்படிப் பேசுகிறார்கள் என்று சொல்லுவது ஒரு நல்ல முறையாக இருக்காது என்பதை நான் தெளிவாகச் சொல்லிக் கொள்கிறேன். இன்றைக்கு நான் அவருக்குத் தெளிவாகச் சொல்லு கிறேன். முஸ்லீம் பர்சனல் லாவை மாற்ற வேண்டுமென்று நீங்கள் சொல்லுகிறீர்கள், மாற்றிவிடுங்கள், மாற்றிவிட்டால் முஸ்லீம்கள் முஸ்லீம்களாக இருக்க முடியாது என்பது எங்களுடைய நிலை, ஏனென்றால் நாங்கள் முஸ்லீம்களாக இருக்கிறது எங்களுடைய ஷேரியத் சட்டப் படி நடந்தால்தான் முஸ்லீம்களாக இருக்க முடியும். முஸ்லீம் என்று சொல்லி விட்டு, அப்துல் லத்தீப் தொப்பி போட்டுக் கொண்டாலும் முஸ்லீம் என்று சொல்லுவதில்லை. எங்களுக்குச சில விதிகள் நம் முடைய பெருமானார் சல் அல்லாஹு அலைவச் சல்லம் நபி நாயகம் அவர்கள் அளித்திருக்கிறார்கள். அதன்படி நடந்தால்தான் நாம் முஸ்லீம்களாக இருக்க முடியும். இல்லாவிட்டால் நாங்கள் ஆட்டோ மேட்டிகலி வி ஸீஸ் டு பி முஸ்லீம்ஸ் முஸ்லீம்களாக இருக்க முடியாது.

[1974 ஏப்ரல் 18

திரு முனு ஆதி : தலைவர் அவர்களே, நியாயத்தை எதிர்பார்க்கின்றேன். எங்களுடைய உறுப்பினர் பேசுகின்றபோது 30 நிமிடத்தில் முடித்து விடச் சொன்னீர்கள். இவர் 45 நிமிடமாகப் பேசுகிறார்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : சரியாக 12-15-க்குத் தான் ஆரம்பித்தார்.

திரு முனு ஆதி : எங்கள் உறுப்பினரை 20 நிமிடத்தில் நிறுத்தி விட்டீர்கள். எவ்வளவு நேரம் என்பதை ஒதுக்கி அதற்கு ஏற்றவாறு நடந்து கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்: 20 நிமிடம் யார் பேசினது? 10-35-க்கு ஆரம்பித்து 11-30 வரை பேசியிருக்கிறார். அவர் என்னிடத்தில் கேட்டது ½ மணி நேரம். குறுக்கீடெல்லாம் சேர்ந்து அவ்வளவு ஆகியிருக்கிறது. இவர் 12-15-க்கு ஆரம்பித்திருக்கிறார். 45 நிமிடம் ஆகவில்லை. அவர் கேட்டது மொத்தம் 45 நிமிடம். அவ்வளவு தான்.

திரு பெ. சீனிவாசன் : திரு கே.டி.கே. தங்கமணி மன்றத்தில் இல்லை. நேற்று சொன்னது அம்பேத்கார் அவர்கள் சொன்னதைச் சொன்னாரே தவிர, இந்திய முஸ்லீம்களுக்கு பர்சனல் லா இருக்கக் கூடாது என்ற கருத்தை அவர்கள் சொல்லவில்லை.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : அவர் சொன்னார் என்றுதான் சொன்னார்.

திரு பெ. சீனிவாசன் : அந்தத் தொனியில் பேசுகிறார். ஒரு டெலிகேட் மேட்டர். அப்படிப் பேசக் கூடாது என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : நேற்று பேசும்போது கே.டி.கே. அவர்கள் அப்படிச் சொல்லவில்லை.

திரு எம். ஏ. லத்தீப் : கே. டி. கே. க்கு பதில் சொல்லிக் கொள்கிறேன். நீங்கள் என் வக்காலத்து வாங்கிப் பேச வேண்டும்? ஆகையினால் நான் இன்றைக்குத் தெளிவாகச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

மத்திய-மாநில உறவைப் பற்றி இங்கே பேசுகின்ற நேரத்தில் நாங்கள் தெளிவாகச் சொல்லுகிறோம். மாநிலங்களுக்கு எல்லா அதிகாரங்களும் வேண்டுமென்று கேட்கின்ற அதே நேரத்தில் பர்சனல் லா பொறுத்து அதிகாரம் மத்திய அரசாங்கத்திடம் தான் இருக்க வேண்டும் என்பதை இந்த நேரத்தில் நான் வலியுறுத்திச் சொல்ல ஆசைப்படுகிறேன். ஏனென்றால் நாங்கள் தமிழ் நாட்டோடு கட்டுண்டவர்கள் அல்ல, எங்களுடைய சமுதாயம் இந்திய நாடு, இந்த பூபாகம் பூராவும் இருக்கிறது. ஆகையினால் அந்த நோக்கத்தோடு நாங்கள் பேசுகிறோம்.

பிரிவினை என்ற அளவுக்கு யாராவது நினைத்து வாதிடுவார்களானால் அதை எதிர்க்கக் கூடியவர்கள் முதலாக முஸ்லீம் லீகும், முஸ்லீம்களாகவுமிருப்பார்கள் என்பதைத் தெளிவுபடுத்தி, ஏற்கனவே லிஸ்ட் 1-ல் இந்தெந்த அதிகாரங்கள் குறிப்பாக மாநில அரசுக்குக் கொடுக்க வேண்டும், கன்கரெண்டு லிஸ்ட் அதிகாரங்கள் மாநில அரசுக்குக் கொடுக்க வேண்டும், நம் பர்சனல் லா-வை பொறுத்த வரையில் மத்திய அரசிடம்தான் இருக்க வேண்டும், மாநிலங்களுக்குத் தரக் கூடாது என்பதை இந்த நேரத்தில் நான் சொல்லிக் கொள்கிறேன்.

பர்சனல் லா-வைப் பொறுத்த வரையில் நாங்கள் அந்த பர்சனல் லா-வை விட்டு விட்டு முஸ்லீம்களாக இருக்க முடியாது. அப்படி நீங்கள் மாற்றுவீர்களானால் இந்த நாட்டிலே இருக்கின்ற 10 கோடி முஸ்லீம்களுடைய பிணங்களின் மீது அந்தச் சட்டத்தின் புத்தகம் வைக்கப்படுமே தவிர அவர்கள் உயிரோடு இருக்க மாட்டார்கள். ஏனென்றால் அவர்கள் முஸ்லீம்களாக இருக்க முடியாது என்ற நிலையில் தான் நான் இதைத் தெளிவுபடுத்துகின்றேன்.

திரு ஆர். பொன்னப்ப நாடார் : கேரளாவில் நீதிபதியாக இருக்கின்ற ஒரு முஸ்லீம் ஜட்ஜ் அவர்கள் இந்த ஷேரியத் லாவை மாற்ற வேண்டும் என்று தீர்ப்புக் கூறி, இது தங்களுடைய கவனத்திற்கு வந்திருக்கும் என்று நம்புகிறேன். அந்தக் கருத்தை நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களா? அதே மாதிரி அரசியல் சட்ட அமைப்பில் ஒரு யூனிபார்ம் சிவில் கோடு வேண்டும். அந்த மாதிரி பர்சனல் லா வேண்டும் என்ற கருத்தைப் பலரும் சொல்லியிருக்கிறார்கள். அதை ஏற்றுக் கொள்கிறீர்களா என்ற விளக்கத்தை அவர்களிடமிருந்து பெற விரும்புகிறேன்.

திரு திருப்பூர் எ.எம். மொய்தீன் : தலைவர் அவர்களே, கேரளத்தில் ஒரு ஜட்ஜ் முஸ்லீம்களுடைய சட்டத்தைத் திருத்த வேண்டுமென்ற சொன்னார் என்பதற்காக முஸ்லீம்கள் அதை ஒப்புக் கொள்ளவில்லை. முஸ்லீம்களுடைய நடைமுறைச் சட்டம் மற்றவர்களுக்குப் பாதகமில்லாது பயன்பட்டு வருகின்ற சட்டம். இதை மாற்ற வேண்டுமென்று சொல்லுகிறவர்கள் மற்ற சமூகத்திற்கோ அல்லது மற்றவர்களுக்கு என்ன பாதகம் அது விளைவிக்கிறது என்று அவர்கள் ருஜுப்படுத்துவார்களானால், அதைப் பற்றி நாங்கள் யோசிக்க தயாராக இருக்கிறோம்.

திரு ஆர். பொன்னப்ப நாடார் : எங்களுக்கு எந்தவிதமான பாதகமும் இல்லை, உங்கள் சமூகத்தைச் சேர்ந்த பெண்கள் சில வாதங்களைச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள். இந்த பாலிகமி போன்றவைகள் இருக்கக் கூடாது என்றவாதங்கள் அடிக்கடி தீர்மான ரூபமாக வந்து கொண்டிருக்கிறது. அதற்கு மாற்றம் தேவை. மறுமலர்ச்சி தேவை என்ற கருத்த முஸ்லீம் பெருங்குடி மக்கள் எடுத்துக் கூறுகிறார்கள். அந்த வாதத்தை நீங்கள் எதிர்க்கிறீர்களா என்று மட்டும் நான் கேட்க விரும்புகிறேன்.

[1974 ஏப்ரல் 18

திரு. திருப்பூர் ஏ. எம். மொய்தீன் : முஸ்லீம்கள் சிலர் தவறு செய்கிறார்கள் என்பதற்காக அந்தச் சமூகம் இதைச் செய்யுங்கள் என்று அவர்கள் வேண்டுவார்கள் என்று நான் கருதவில்லை. அவர்கள் விரும்பிச் செய்வது இருக்கிறதே அது சொந்த இஷ்டத்தைப் பொறுத்தது. முஸ்லீம்களுக்கு பர்தா சிஸ்டம் வைத்திருக்கிறோம். அதை அனுஷ்டிக்காத பெண்கள் எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள். அதை நாங்கள் கட்டாயப்படுத்திக் கொண்டிருக்கிறோம். அதை சட்ட பூர்வமாகக் கொண்டுவர வேண்டும் என்று நீங்கள் நிர்ப்பந்தப்படுத்த வேண்டாம் என்பது எங்கள் வாதம்.

திரு. எம். ஏ. லத்தீப் : இந்த வாதத்தை இத்தோடு விட்டுவிட்டேன். இன்றைக்கு இருக்கின்ற நம் அரசியல் சட்டத்தின் தன்மையைப் பார்க்கும் போது தலைவர் அவர்களே நான் உண்மையில் நொந்து சொல்லுகிறேன். நாம் கேட்பது யாருக்கு? இந்த மாநிலத்திற்கு மட்டும் சுயாட்சி கேட்கிறோமா? இந்தியாவில் இருக்கிற அத்தனை மாநிலங்களுக்கும் மாநில சுயாட்சி வேண்டும் என்று அந்தத் தீர்மானம் வழி செய்திருக்கிறது.

இன்றைக்கு இருக்கின்ற திராவிட முன்னேற்றக் கழகம் ஆட்சியிலே இருக்கலாம். அவர்கள் 2 ஆண்டுகளுக்குள் 1976-லே அவர்கள் மக்களை சந்திக்க யிருக்கிறார்கள். அவர்கள் இந்தத் தீர்மானத்தை, மாநில சுயாட்சி கோரிக்கையை அந்த மக்கள் மத்தியில் வைக்கத்தான் போகிறார்கள். அதை மக்கள் ஏற்றுக் கொள்கிறார்களா இல்லையா என்பதை 1976-இல் நாம் தீர்மானிக்க வேண்டும். ஆகையினால் அதை மக்கள் ஏற்றுக் கொள்கிறார்களா இல்லையா என்ற ஒரு பிரச்னையைத் தீர்மானிக்கும் காலம் வெகு சமீபத்தில் இருக்கும்போது, இன்றைக்குப் பொறுப்புள்ள எதிர்க் கட்சியாக இருப்பவர்கள் ஆளும் கட்சியாக வரலாம். அவர்களுக்குக் கூட மாநில சுயாட்சி வேண்டு மென்று அன்றைக்கு அவசியம் ஏற்படலாம். ஆகையினால் இதில் கட்சிக் கண்ணோட்டம் இல்லை. திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு கட்டாயம் இல்லை. மற்றவர்களுக்கும் இல்லை. தமிழ் மாநிலத்திற்கும் வேண்டும், மகாராஷ்டிர மாநிலத்திற்கும் வேண்டும். இது இந்த நாட்டிலுள்ள அத்தனை மாநிலங்களுக்கும் வேண்டுமென்ற அடிப்படையில் கேட்கிறோமே தவிர வேறு வகையில் இல்லை. இதை நான் மனப்பூர்வமாக நம்புகிறேன். அந்தச் சட்டத்தில் ஓரளவுக்குக் கொஞ்சம் ஒரு பர்செண்டேஜ் தெரிந்தவன் என்ற காரணத்தினால் நான் தெளிவாகச் சொல்லுகிறேன்.

இன்றைக்கு இருக்கின்ற இந்த அரசியல் சட்டத்தின் விதிமுறைகள் மாநிலங்களைப் பொறுத்த வரையில் தீங்கு இழைக்கக் கூடியதாக இருக்கிறது என்பதை நான் இந்த நேரத்தில் மிகத் தெளிவாகச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

இன்னும் பாருங்கள். ஆர்டிகிள் 298 மத்திய அரசு மாநிலங்களுக் குள்ளே புகுந்து மாநிலத்தி லிருக்கின்ற எந்த பூ பாகத்தையும், எந்த ஒரு சொத்தையும் கூட அவர்கள் பறிமுதல் செய்வதற்கும், அவர்கள் கையகப்படுத்திக் கொள்வதற்கும் மாநிலஆட்சியின் ஒரு அனுமதியில்லாமல்,

அதைக் கையகப்படுத்திக்கொள்வதற்கும் ஒரு உரிமையை இந்த விதிமுறையினால் மத்திய அரசு பெறுகிறது. இது எந்த ஜனநாயகத்திலேயும், எந்த அரசியல் சட்டத்திலேயும் இல்லாத ஒரு புதுமையாக இருக்கிறது. இதை நாம் சமஷ்டி முறையில் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறோமா என்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும். இப்போதுகூட இந்த கோட்டை மத்திய அரசு நிர்வாகத்தில்தான் இருக்கிறது. இந்தக் கோட்டையைக் கையகப்படுத்துகிறோம், நீங்கள் வெளியேறுங்கள் என்று திடீரென்று சொன்னால்கூட நமக்கு வேறு வழியில்லை. இது நல்ல முறை இல்லை என்பதற்காக உதாரணமாக இதைச் சொன்னேன்.

அதைப்போல அரசியல் சட்ட விதிகள் 256, 257 எடுத்துக் கொண்டால், மாண்புமிகு முதலமைச்சரவர்கள் தங்களது விரிவுரையிலே சொன்னார்கள். இராஜமன்னார் குழுவிலேயும் சொல்லியிருக்கிறது.

'Directions by the Central Government to the State Government'

டைரக்ஷன்ஸ் கொடுக்கிறார்களாம். இந்த நாட்டில் அரசியலமைப்பிலே

All are creations of the Constitution, whether it is the Central Government or the State Government. Whatever may the public offices, they are all creations of the Constitution and the rights conferred upon a citizen or a group of individuals emanate from one source, the perennial source of rights and privileges and that is the Constitution of India. The Constitution has rightly delimited the spheres of activities of every individual and of every group of individuals in this country

என்ற அளவிற்கு இந்த கான்ஸ்டிடியூஷனில் இருக்கிறது. பொதுவான மூலத்திலிருந்து நாம் அதிகாரங்களைப் பெறுகிறோம். அந்த மூலம்தான் மத்திய சர்க்காருக்குச் சில அதிகாரங்களைக் கொடுத்திருக்கிறது. மாநில சர்க்கார்களுக்கு சில அதிகாரங்களைக் கொடுத்திருக்கிறது. ஆகவே, மத்திய சர்க்காரின் தயவில் நாம் அதிகாரம் பெற்றோம் என்று சொல்வதற்கு வழியில்லை. மூலமாக உள்ள சொத்திலேயிருந்து நாம் அதிகாரங்களைப் பெற்றிருக்கிறோம். நமக்கிருக்கின்ற சில திட்டங்களை நிறைவேற்றுகின்ற பொழுது டைரக்ஷன் கொடுக்கும் முறை சமஷ்டி முறைக்கும், நீதி முறைக்கும் எல்லா வகையிலேயும் பாதகம் ஏற்படுத்தும். இதை நாம் வைத்துக் கொண்டு இந்த நாட்டிலே ஆட்சியை நடத்த முடியுமா என்றால் நிச்சயமாக நான் சொல்லுகிறேன், எந்த மாநில ஆட்சியும் "குளோரிஃபைட் முனிசிபாலிட்டியாகத்தான்" இருக்க முடியும். மாண்புமிகு அமைச்சர் அன்பில் தர்மலிங்கம் அவர்கள் டைரக்ஷன்ஸ் அனுப்பலாம். அவை ஸ்டாச்சுடரி பாடி. அதற்கு அனுப்பலாம்.

This is a creation of the Constitution. The State Government and the State Legislature are the creations of the Constitution and the State Governments are only responsible to the State Legislature and not to anybody else.

என்று ஆர்டிகிள் 164-லே தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இன்றைய தினம் இவர்கள், இங்கேயுள்ள அமைச்சர்கள், இந்தச் சட்ட சபைக்கு மக்களாலே தேர்ந்தெடுக்கப்பட்ட இறையாண்மை பெற்றவர்கள் முழுமையும் இந்த அவைக்குப் பதில் கொடுக்க இருக்கின்றவர்களை எங்களுக்கும் நீங்கள் ஜவாப்தாரிகள் என்று சொன்னால், அது சமஷ்டி முறைக்குப் பாதகமானது என்பதைத் தெளிவாகத் சொல்ல விரும்புகிறேன்.

மாண்புமிகு உறுப்பினர் டாக்டர் ஹாண்டே அவர்கள் சில கேள்விகளைக் கேட்டார்கள். ஆர்டிகிள் 356 என்று எமர்ஜென்சி நேரத்தில் என்ன செய்ய வேண்டுமென்று சில கேள்விகளைக் கேட்டார்கள். எமர்ஜென்சி எது, எமர்ஜென்சி எது இல்லை என்று தீர்மானிக்கின்ற முழுப் பொறுப்பு யாரிடத்தில் இருக்கிறது ?

Who imposes the Presidential rule or the Central Government rule under Article 356 ? Who has to decide whether a real emergency prevails in the country or not ?

யார் முடிவு செய்வது? மத்திய சர்க்கார்தானே. இப்பொழுது இரண்டு வாரங்களுக்கு முன்னால் நடந்த ஒரு விஷயத்தைப்பற்றி நம்முடைய நண்பர் அவர்கள் சொன்னார்கள். எங்கேயோ ஓர் இடத்தில் 21 நாட்களிலே முடிந்து விட்ட ஒரு கதையைப்பற்றிச் சொன்னார்கள்.

'How can the President impose such a rule under Article 356 of the Constitution ? This is against the Federal set-up. Democracy has been killed. Democracy has been murdered.'

என்றெல்லாம்கூட நம்முடைய மாண்புமிகு உறுப்பினர் அவர்கள் பேசும் பொழுது எனக்குக்கூட மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. இவ்வளவு தூரம் இதைப் பற்றிப் பேசுகிறார்களே என்று நினைத்தேன். சொல்லப்படும் கருத்துக்களிலே வாதம் சரியாக இருக்கிறதா இல்லையா என்பது பிரச்னை அல்ல. ஆனால் மத்திய சர்க்கார் செய்கின்ற முறைகளைக் கண்டிக்கிறார்களே என்று நினைத்துப் பார்த்தேன்.

Full power to decide as to what emergency has existed in any particular State and whether the constitutional machinery has broken down in a particular State is vested in the Central Government and there is no guarantee that they will not act arbitrarily.

அதைப்பற்றி அரசியல் சட்டத்திலே எந்த நிர்ணயமும் செய்யப்படவில்லை. ஆகவே there is only an emergency provision in Article 356.

என்று சொல்லப்படுவதை நாம் வரையறுத்து, முறைகளை வரையறை செய்ய வேண்டும். அதை அமல் செய்வதற்கு முன்னால் சில சட்ட விதிகளை மத்தியிலே இருப்பவர்கள் நிர்ணயித்த முறைகளை மாற்ற வேண்டும், அதற்காக அரசியல் சட்டத்தில் திருத்தம் வேண்டுமென்று சொல்கிறோமே தவிர வேறு காரணம் இல்லை. (மணியடிக்கப்பட்டது.) 12-15 மணிக்கு ஆரம்பித்து, இடையிலே குறுக்கீடுகள் வந்துவிட்டன. இன்னும் 10 நிமிஷங்களில் முடித்துவிடுகிறேன்.

ஹேமில்டன் என்ற அறிஞர் சொல்கிறார்: இன்றைக்கிருக்கின்ற நிலைமை என்னவென்றால், ஸ்டேட்ஸ் என்று சொல்லப்படும் தனிப்பட்ட மாநிலங்கள் சில உருவாக்கப்பட்டிருக்கின்றன என்றால், ஏற்கெனவே ஒட்டாட்சி முறையிலிருந்து தனியாகப் பிரிந்து சமஷ்டியாக இருக்கிறார்கள். தனித்தனியாக இருந்தவர்கள்

'Association of States to form a new one'.

நாமெல்லாம் ஒன்று சேர்ந்து எல்லோருக்கும் பாதுகாப்பு இருக்க வேண்டுமென்ற எண்ணத்தால் உந்தப்பட்டு சேர்ந்திருப்பவர்களே தவிர கட்டாயப்படுத்தி, பலஹீனப்படுத்தி, நாங்கள் அடிக்கிறோம், நீங்கள் வாங்கிக் கொண்டிருங்கள், நீங்கள் பட்டினிதான் கிடந்து இங்கே இருக்க வேண்டும் என்று எந்த சமஷ்டியும் நடைபெறுவதில்லை என்று ஹேமில்டன் தெளிவாகச் சுட்டிக்காட்டுகிறார்கள்.

For example so far as the American democracy is concerned, a Confederation of 13 States was formed in the year 1777 and all the Independent States came together to form one country.

நம்முடைய டைசி என்ற அரசியல் நிபுணர் சொல்கிறார்.

'It is a political contrivance to reconcile national unity with the maintenance of the State's rights . .'

தேசத்தின் ஒற்றுமையைப் பாதுகாப்பதற்காக நாம் முடிவு செய்தால் மாநிலங்களுக்குள்ள அதிகாரங்களை, முழுவதும் உண்மையாக சுயாட்சி கொடுத்தால்தான் யூனிட்டி என்பது இருக்க முடியுமே தவிர, இல்லாவிட்டால் நீண்ட தத்துவமாக இருக்காது என்பதை சமஷ்டி முறையை ஏற்றுக் கொண்டிருப்பவர்கள் புரிந்து கொள்ள வேண்டுமென்று டைசி போன்ற அரசியல் வல்லுனர்கள் சொல்லுகிறார்கள். அவர் சில காரணங்களையும் சொல்கிறார். சமஷ்டி முறை எப்படி ஏற்படுகிறது என்றால்

There must be a desire for union. There must be a desire among the units to resolve themselves into a single entity and that means Federation.

அந்த டிசையர், எண்ணம் இருக்க வேண்டும். அந்த எண்ணத்தால் உந்தப்பட்டுத் தான் இந்தியப் பெருமக்கள் சுதந்திரத்திற்குப் பிறகு, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கு உட்பட்டிருந்த மாநிலங்கள் மட்டுமல்லாமல் சமஸ்தானங்களும் ஒன்று சேர்ந்து வந்தார்கள் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் சுட்டிக் காட்ட ஆசைப்படுகிறேன். இம்மாதிரிதான் டிசைரிங் அடிப்படையில்,

Thirteen American States formed a Federation in 1777. Also six Colonies in Australia formed a single Federation. There was a strong desire among the people of the six colonies in Australia to form a Federation and as a result of that strong desire, the six colonies were merged into a single Federation in the year 1900.

1900 என்ற அந்த ஆண்டிலே அவர்கள் மெர்ஜ் செய்யப்பட்டார்கள்.

இன்றைக்கு நம்முடைய நாட்டிலே பார்த்தால் நாம் பிரிக்கப்படுகிறோம். நம் மாநிலத்திலுள்ள எல்லா வசதிகளையும் மற்றவர்கள் எடுத்துச் செல்கிறார்கள். இன்கம் டாக்ஸை எடுத்துச் செல்கிறார்கள், எக்சைஸ் டூட்டியை எடுத்துச் செல்கிறார்கள், இரயில்வே இன்கம்மை எடுத்துச் செல்கிறார்கள். போர்ட்டிலே உள்ள எல்லாவற்றையும் எடுத்துச் செல்கிறார்கள். சர்க்கார் அலுவலகத்தில் தமிழ் மக்களின் எண்ணிக்கை என்ன என்று பார்த்தால் மிகவும் குறைவாக இருக்கிறது. இந்த நிலைமை நீடித்தால் தமிழ் நாட்டு மக்கள் கேட்க மாட்டார்களா என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

நாம் தமிழ் நாட்டிற்காகக் கேட்டால், ஆந்திராவில் ஆந்திர மக்களுக்காகக் கேட்கிறார்கள், காஷ்மீரத்தில் அவர்களுக்காகக் கேட்கிறார்கள், உத்தரப் பிரதேசத்தில் உத்தரப் பிரதேச மக்களுக்காகக் கேட்கிறார்கள். இப்படி ஒவ்வொருவரும் தங்களுடைய உணர்வுகளைச் சொல்வது தவறு அல்ல. அவர்களுடைய உரிமைகள் பாதிக்கின்ற அளவில் மத்திய சர்க்கார் தன்னுடைய கைக்குள்ளே எல்லா அதிகாரங்களையும் வைத்துக் கொண்டிருந்தால் நான் நிச்சயமாகச் சொல்கிறேன், மக்களிடத்திலே வெறுப்பு ஏற்படும். அதைத் தவிர்க்க வேண்டுமென்று விரும்புகிறேன்.

அதைத் தவிர்க்க வேண்டுமென்றால் மாநிலங்களுக்கு அதிக அதிகாரத்தைக் கொடுக்க வேண்டுமென்று நான் இந்த நேரத்தில் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அதே நேரத்தில், பூகோள ரீதியாக ஒட்டிய பகுதியாக இருக்க வேண்டும். அப்பொழுது தான் சமஷ்டி முறை இருக்க முடியும்.

தமிழ்நாட்டில் பிரிவினை கேட்கிறார்கள், பிரிவினை கேட்கிறார்கள் என்று சொல்கிறார்கள். எப்படிப் பிரிவினை கேட்க முடியும்? தமிழ் நாடு இந்தியாவின் ஒரு கோடியில் இருக்கிறது. நதியை எடுத்துக் கொண்டால் காவேரி நதி கர்நாடகத்தில் இருக்கிறது. அந்தத் தண்ணீரைப் பெறாமல் இங்கே வாழ முடியாது. மின்சாரத்திற்கும் மற்றவர்களை எதிர்பார்க்க வேண்டியவர்களாக இருக்கிறோம். அரிசியை நம்மிடத்திலேயிருந்து மற்றவர்கள் எதிர்பார்க்கிறார்கள். நம்மைச் சுற்றிக் கடல் இருக்கிறது. தனியாகப் போய்விடுவோம் என்றால் எப்படிப் போவது? அது என்ன வாதம் என்று தெரியவில்லை.

நம்முடைய மக்களுக்காக மத்திய சர்க்காரிலேயிருந்து சில உரிமைகளைக் கேட்டால் பிரிந்து போய்விடுகிறேன் என்று சொல்கிறார்கள் என்று பேசுவது நல்ல முறை அல்ல. அப்படிச் சொல்வதால் நாம் மக்களுக்கு நியாயம் வழங்குபவர்களாக இருக்க மாட்டோம். ஆகவே, இதை எல்லோரும் ஆதரிக்க வேண்டுமென்ற கருத்தைச் சொல்லிக் கொள்கிறேன்.

1947 ஏப்ரல் 18] [திரு. எம். ஏ. லத்தீப்]

இன்னொன்று முக்கியமானது 'the absence of marked inequalities' ஒரு மாநிலத்திற்கும் இன்னொரு மாநிலத்திற்கும் காட்டப்படுகின்ற வித்தியாசங்கள்தான்; இது சமஷ்டி முறை அல்ல, ஒரே நாடாக இருந்தாலும் அதைத் துண்டு துண்டாகச் செய்துவிடும் என்று அரசியல் வல்லுநர்கள் இன்றைக்குச் சொல்கிறார்கள்.

இந்த மாதிரி ஜெர்மன் சாம்ராஜ்யத்திலே, 1861-ம் வருஷம் அங்கே இருந்த இணைப்புகள் எல்லாம் ஒன்றாக இருந்தன. ஆனால், பிரஷ்யா மாநிலம் மட்டும் எல்லா மாநிலங்களையும் சுரண்டியது. எல்லா மாநிலங்களிலும் இருந்த மூலப் பொருள்களைத் தன்னகத்தே வைத்துக்கொண்டிருந்தது. பிரஷ்யா வைத்ததுதான் சட்டமாக இருந்தது. அதன் காரணமாக ஒன்றாக இருந்த ஜெர்மானிய சாம்ராஜ்யம் அழிபட்டது.

இப்பொழுது, எதை எடுத்தாலும் உத்தரப் பிரதேசம். தெற்கு தேய்கிறது, வடக்கு வாழ்கிறது என்று அன்று சொல்லப்பட்ட வாசகம் இன்று வரையும் நடந்து கொண்டிருக்கிறது.

The same conditions prevailed in the Southern States of United States of America.

(மாண்புமிகு பேரவைத் தலைவர் தலைமை)

அதே 1861-லே அமெரிக்காவிலே, தெண் மாநிலங்கள் எல்லாம் புரட்சி செய்தன. இதேதான் அங்கும் நடந்தது. பெரிய யுத்தம் நடந்தது. காரணம் என்ன வென்றால், தென் மாநிலங்கள் எல்லாம் பாதிக்கப்பட்டன. வட மாநிலங்களால், தென் மாநிலங்கள் சுரண்டப்பட்டன. தென் மாநிலங்களுடைய வளர்ச்சி, திட்டமிட்டு தடுக்கப்பட்டது. இறுதியில், ஐக்கிய அமெரிக்க நாட்டிலே இருந்து தென் மாநிலங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து, வட மாநிலங்களோடு பெரிய யுத்தம் நடத்திய காரணத்தினால், அனைத்து மாநிலங்களுக்கும் அங்கே அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன. தென் மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன. தென் மாநிலங்களுடைய புரட்சிக்குப் பிறகு அதிகாரங்கள் அதிகமாக தென் மாநிலங்களுக்குக் கொடுக்கப்பட்டன. பிறகு, இன்று வரை ஐக்கிய அமெரிக்க நாடுகளில் மாநிலங்கள் சம வாய்ப்புகள் பெற்றிருக்கின்றன. கான்ஸ்டிட்யூஷன் சுப்ரீமாக இருக்கிற காரணத்தினால், Neither the Ce tral Government northe State Governments are supreme. Only the Constitutionis supreme' என்று சொன்னார்கள். அந்த அளவிலே இன்றைக்கு நிலைமை இல்லை, நம்முடைய நாட்டிலே. அந்த நிலைமைகளை நாம் உருவாக்கத்தான் வேண்டும். எதை எடுத்தாலும் திட்டங்களிலே இருக்கிறதா இல்லையா என்று பார்க்கவேண்டியதில்லை. ரூ. 10 கோடி பவுண்டேஷன் ஸ்டோன் ரூ. 60 கோடி பவுண்டேஷன் ஸ்டோன் ரூ. 15 கோடி பவுண்டேஷன்ஸ்டோன் என்று காரணமில்லாமல் உத்தரப் பிரதேசத்திலே நடந்து கொண்டிருக்கிறது. இன்றைக்கு உத்தரப் பிரதேச ஜனத்தொகை அடிப்படையிலே செனட்டிலே அம்மாநிலத்திற்கு பிரதிநிதித்துவம்

கொடுக்கிறார்கள். ஆனால் அமெரிக்காவில், சின்ன நாடாக இருந்தாலும், பெரிய நாடாக இருந்தாலும், ஈக்குவல் ரெப்ரசன்டேஷன் கொடுக்கப்பட்டிருக்கிறது.

Neither the Central Government is dependent on the State Government nor is the State Government dependent on Central Government. They all receive their representat on and so far as authority is concerned, they derive only from single source of the Constitution and whatever dispute arises between the Centre and State, there is Court to interpret the provisions of the Constitution and therefore these are essential features of Federal Constitution. இங்கு, ஜனத்தொகை அடிப்படையிலே ரெப்ரசன்டேஷன் கொடுக்கப்படுகிறது. இன்றைக்கு ராஜ்ய சபையிலே எல்லா ஸ்டேட்களுக்கும் ஈக்குவல் ரெப்ரசன்டேஷன் கிடைக்கும் வகையிலே நம்முடைய அரசியல் சட்டத்தைத் திருத்தவேண்டும். வேண்டுமானால், ஹவுஸ் ஆப் ரெப்ரசன்டேட்டிவிலே ஜனத்தொகை அடிப்படையிலே ரெப்ரசன்டேஷன் கொடுக்கலாம்.

இன்றைக்கு உத்தரப் பிரதேசத்திலே நடக்கிற நிகழ்ச்சிகள் நிச்சயமாக நம்முடைய உள்ளத்திலே கொந்தளிப்பை ஏற்படுத்தி இருக்கின்றன. மகாராஷ்டிராவிலே ஒரு திட்டத்தை, அரசுப் பணிகளில் 80 சத விகிதம் மகாராஷ்டிரா மக்களுக்குத்தான் உத்தியோகம் தர வேண்டுமென்று அவர்கள் சொல்கிறார்கள் என்றால், இது சமஷ்டி முறை எந்த அளவுக்கு வெற்றிகரமாக இருக்கிறது என்பதை எடுத்துக் காட்டுகிறது. நாம், தமிழ் நாட்டிலே அதைச் செய்யவில்லை. அவ்வளவு பெருந்தன்மையாக இருக்கிறோம். ஆனால், நம்மைப் பார்த்து, பிரிவினைவாதிகள் என்று சொல்வது எந்தவிதத்தில் நியாயமாக இருக்கும் என்பதை மிகவும் வேதனையாகவும் பணிவாகவும் சொல்லி, என்னுடைய மனதில் பட்டதை 'as a student of constitutional law I say and my bonafides cannot be questioned' என்ற அளவில் நிச்சயமாக நான் நம்பி வாதாடுகிறேன்.

இந்தத் திட்டம், இந்தத் தீர்மானம் இந்த நாட்டிற்கு, இந்திய பூபாகத்திற்கு விடிவெள்ளியாக வந்திருக்கிற தீர்மானம், வரலாற்றுச் சிறப்புமிக்க தீர்மானம், ஏழ்மையை ஒழிப்பதற்கான தீர்மானம், எல்லாருக்கும் சம வாய்ப்பு கொடுக்க வேண்டுமென்ற தீர்மானம், இந்த நாட்டிலே இருக்கிற இன்னல்களை ஒழிக்கக்கூடிய தீர்மானம், ஏழ்மையினை ஒழிக்கக் கூடிய தீர்மானம், மாநிலங்களுடைய உணர்வுகளைக் காக்க, நன்மையைக காக்க வந்திருக்கிற தீர்மானம். அது சிறப்புமிக்க தீர்மானமாக இருக்கும், வரலாற்றுச் சிறப்புமிக்கத் தீர்மானமாக இருக்கும், நம்முடைய இராஜமன்னார் போன்ற மிகப் பெரிய தேசபக்தர்கள் கொடுத்த அறிக்கை

யினுடைய அடிப்படையிலே மாண்புமிகு கலைஞர் டாக்டர் அவர்கள் இந்தத் தீர்மானத்தைத் தந்திருக்கிறார்கள். வரலாற்று நாயகனாக நீங்கள் போற்றப்படுவீர்கள். தேசத்திலே மாநில சுயாட்சி ஏற்பட்டுவிடும். அன்றைக்கு உங்களை நினைப்பார்கள் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

திரு. கோவை செழியன் : மாண்புமிகு பேரவைத் தலைவரவர்களே, அமெரிக்க ஹிஸ்டரியைப்பற்றி திரு. லத்தீப் அவர்கள் சொன்னார்கள். அமெரிக்க வரலாற்றிலே, வட மாநிலங்ககளுக்கும் தென் மாநிலங்களுக்கும் ஏற்பட்ட தகராறு அடிமை முறையை ஒழிக்க வேண்டுமென்பதற்காக. தென் மாநிலங்களிலே அப்பொழுது பெரிய நிலப்பிரபுக்கள் இருந்தார்கள். அவர்கள் தங்கள் ஆதிக்கம் போய்விடுமோ என்று உள்நாட்டுப் போரே, தென் மாநிலங்களுக்கும் வட மாநிலங்களுக்கும் அதன் காரணமாகத் தகராறு வந்ததே தவிர, தயவு செய்து தவறான வரலாற்றைச் சட்டசபை யிலே சொல்ல வேண்டாம்—சில பேர் படிக்காமல் இருக்கலாம்—இப்படித் தவறான தகவலைக் கொடுக்கவேண்டாமென்று சொல்ல விரும்புகிறேன்.

திரு. எம். ஏ. லத்தீப் : அவர்கள் விரும்பிப் படிப்பார்கள் என்று நினைக்கிறேன். அவரைவிட அதிகமாகத் தெரிந்திருக்கிறது என்று நான் சொல்லவில்லை. அதைப்பற்றி 3 புத்தகம் வேண்டுமென்றால் தருகிறேன். அங்கே உற்பத்தி செய்கிற சிங்க் ஷீட்டை யெல்லாம், தொழிற் சாலைகளுக்குத் தேவையான மூலப் பொருள்களெல்லாம் வடபுலத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டன என்பதை அவர்கள் வர்ணிக்கிறார்கள். அதனு டைய விளைவுதான் இது. அவர்கள் வரலாறு தெரியாமல் சொல்லவில்லை. நான் கூடக் கொஞ்சம் வரலாறு படித்திருக்கிறேன் என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

திரு. மு. சுருளிவேல் : மாண்புமிகு சட்டப்பேரவைத் தலைவர் அவர் களே, தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற மாநில சுயாட்சித் தீர்மானத்தை ஆதரித்து என்னுடைய ஓரிரு கருத்துக் களைக் கூறுவதற்கு வாய்ப்பளித்ததற்காக என்னுடைய நன்றியைத் தெரி வித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இந்தத் தீர்மானத்தை முன்மொழிந்த அந்த நாளிலே எந்த அளவிற்கு நாம் மகிழ்ச்சியுடன் இருந்தோமோ, இந்திய ஒற்றுமையைக் காப்பதற்காக நமது நாட்டிலே இருக்கக் கூடிய எல்லா மாநிலங்களும் பொருளாதார வளர்ச்சி பெறுவதற்காக வழிகாட்டக் கூடிய ஒரு தீர்மானத்தை முன்மொழியக்கூடிய அந்தப் பேறு, வரலாற்றிலே இடம் பெறக் கூடிய அந்தப் பாக்கியம், திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய தானைத்தலைவர் டாக்டர் கலைஞர் அவர்களுக்குக் கிடைத்திருக்கிறது என்ற எண்ணத்திலே ஒவ்வொரு தொண்டனும் அந்த நாளிலே மகிழ்ந்தோம்.

[திரு. மு. சுருளிவேல்] [1974 ஏப்ரல் 18

ஆனால், நடைபெற்ற 3 நாள் விவாதங்களிலே மாண்புமிகு முதல்வர் அவர்கள் எடுத்து வைத்திருக்கக்கூடிய காரணங்களை அலசுவதற்குப் பதிலாக, ஒரு உண்மையான பெடரேஷனிலே மத்திய அரசுக்கு என்ன என்ன அதிகாரங்கள் இருக்க வேண்டும் மாநில சர்க்காருக்கு என்ன என்ன அதிகாரங்கள் இருக்க வேண்டுமென்று அவர் கோடிட்டுக் காட்டியதை ஒட்டிப் பேசுவதற்குப் பதிலாக, அதை முன்மொழிந் திருக்கக்கூடிய டாக்டர் கலைஞர் அவர்களைப்பற்றியும், திராவிட முன் னேற்றக் கழகம் கடந்த காலத்திலே முன் வைத்திருந்த திராவிட நாட்டைக் காப்பதற்காக வைத்திருந்த தனித் திராவிட நாட்டுக் கொள்கையை பற்றியும் இங்கே நண்பர்கள் எல்லாம் பேசினார்கள்.

அன்றைய தினம் எப்படி பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் சரித்திரத்தினுடைய போக்கை மாற்றி, இந்தியா பிரிவதற்குக் காரணமாக இருந்தாரோ, அதே தவறை இன்றையதினம் மத்திய சர்க்காரை ஆளு கின்ற கட்சியின் உறுப்பினர்கள் இந்தியாவினுடைய பிரதமருக்கு, அதே பாதையைக் காட்டிவிடுவார்கள் என்ற அச்சத்தினுடைய அடிப்படை யிலே நாமெல்லாம் மிகவும் மனம் நொந்த நிலையிலே இங்கேயிருக் கிறோம்.

திராவிட முன்னேற்றக் கழகம் ஒரு காலத்தில், தந்தை பெரியார் அவர்களை விட்டுப் பிரிந்த நேரத்தில், திராவிட இனத்தின் நன்மை களுக்காக, திராவிட மாநிலங்களைக் காப்பதற்காக, திராவிட நாடு கொள்கையை வைத்திருந்த துஎன்பதை நாங்கள் மறுக்கத் தயாராயில்லை.

ஆனால் இன்றைய தினம் நான் தெளிவாகக் கூறுகிறேன், இந்தியா-சீன எல்லைப் பிரச்சினைக்குப் பிறகு, இந்திய ஒற்றுமையைக் காப்பதற்காக அந்தக் கொள்கையை நாங்கள் கைவிட்டு விடுகிறோம். ஆனால் முன்பு 99 விளக்கங்களைக் கூறி, 100-வதாக, எனவே இந்தப் பிரச்னைகளெல்லாம் தீர்க்கப்பட வேண்டுமென்றால், திராவிட நாடு வேண்டுமென்று முழங்கி னோம். ஆனால், இன்று 100-வது விளக்கத்தை மட்டும்தான் விட்டிருக் கிறோமே தவிர, 99 காரணங்கள் நாட்டிலே இன்னும் இருந்து கொண்டு தான் இருக்கின்றன, என்று அண்ணா அவர்கள் சொன்னார்கள். இந்த நாடு முன்னேறுவதற்கு 99 காரணங்கள் இருந்து கொண்டிருக்கின்றன.

திராவிட முன்னேற்றக் கழகம் கண்ட அண்ணா அவர்கள் திராவிட நாடு திராவிடருக்கே என்கின்ற கொள்கையை விட்டவுடனே இந்திய அரசியல் சட்டம், இந்திய அரசியல் உரிமை, ஒருமைத்தன்மை ஆகிய வற்றுக்குள், தனிக் கலாசாரம், இனம் ஆகியவற்றைக் கொண்ட நாடாக இருக்கப் பாடுபடுவதே திராவிட முன்னேற்ற கழகத்தின் கொள்கை என்று கூறினார்கள். அந்த அளவில், அதை ஜீவாதாரக் கொள்கையாக

மாநில சுயாட்சி பற்றியும், இராஜமன்னார் குழுவின்
பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும்
கருத்துக்களை மத்திய அரசு ஏற்று அரசியல்
அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும்
என்பது குறித்து

1974 ஏப்ரல் 18] [திரு. மு. சுருளிவேல்]

ஏற்றுக்கொண்டு, பல நோக்கங்களிலே, இந்தித் திணிப்பை எப்படி எதிர்க்கிறோமோ, அதேபோல் வறுமையை ஒழிக்க வேண்டுமென்று எப்படிக் கூறுகிறோமோ, அதற்கு மாநில சுயாட்சியை அடைந்தாகவேண்டுமென்று இன்றைய தினம் கூறி வருகிறோம்.

அந்த நோக்கத்தைத் திராவிட முன்னேற்றக் கழகம் ஜீவாதார லட்சியமாக வைத்துப் போராடிக் கொண்டிருக்கிறோம். நம்முடைய கடந்த காலத்தை வைத்து இங்கே ஐயப்படுகிறவர்களுக்கு நான் கூறிக் கொள்வேன். நிச்சயமாக நாங்கள் பிரிவினை கோரவில்லை. ஆனால் பிரிவினை கோராத நேரத்தில் உரிமைகள் மறுக்கப்படுவதை ஏற்றுக் கொள்ள முடியாது, நிச்சயமாக ஏற்றுக்கொள்ள முடியாது. இந்தியா போன்ற நாட்டிலே, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தால் துப்பாக்கி முனையில் ஒருமைப்பாடு உண்டாக்கப்பட்ட நாட்டிலே, நிர்வாக வசதிக்காக பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தால் ஒன்றுக்கப்பட்ட நாட்டிலே, இன்று இருக்கும் அரசியலமைப்புச் சட்டத்தால் அந்த மாநிலங்கள் நன்மை அடைய முடியாத நிலை இருக்கிறது என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

பெடரல் செட் அப் இருந்தால் மாநிலங்கள் முன்னேற முடியாது என்று நான் கூறவில்லை, மாண்புமிகு உறுப்பினர் லத்தீப் அவர்கள் தன்னுடைய பேச்சில் ஆதாரங்களைச் சுட்டிக் காட்டினார். மதிப்பிற்குரிய மவுலானா அபுல் கலாம் ஆசாத் அவர்கள் தன்னுடைய "இந்தியா வின்ஸ் ப்ரீடம்" என்ற நூலில் மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள்.

In a true federation, the federating units must have freedom to decide the number and nature of subjects to be transferred to the Central Government

என்று தெளிவாகக் கூறியிருக்கிறார்கள்.

அந்த லட்சியத்தை நிறைவேற்றும் வகையில்தான் மத்திய சர்க்காருக்கு என்னென்ன அதிகாரங்கள் வைத்துக் கொள்ள வேண்டும், மாநில சர்க்காருக்கு என்னென்ன அதிகாரங்கள் வைத்துக் கொள்ள வேண்டும் என்ற அளவில் இன்றைய தினம் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள். இந்தத் தீர்மானத்தைப் பற்றி மாண்புமிகு திரு. பொன்னப்ப நாடார் அவர்கள் கூறுகின்ற நேரத்தில் "பிரிவினை கலந்திருக்கிறது ; உள்நோக்கம் தவறு" என்ற முறையிலே பேசியிருக்கிறார்கள்.

ஒற்றுமையைக் காக்கவேண்டும், பேண வேண்டுமென்று இருக்கக் கூடிய எங்களுக்கு அவ்வாறு கூறுவது மன வேதனையாக இருக்கிறது. இந்திய ஒற்றுமைக்கு ஊறு விளைவிக்கும் நோக்கம் உடையவர்கள் நிச்சயமாக திராவிட முன்னேற்றக் கழகத்தில் இல்லை என்பதைத் தெளிவாகக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

1974 ஏப்ரல் 18 [திரு. மு. சுருளிவேல்]

மாண்புமிகு உறுப்பினர் திரு. லத்தீப் அவர்கள் பேசுகின்ற நேரத்தில் தெளிவாகச் சொன்னார்கள். மதிப்பிற்குரிய நண்பர் திரு. சீனிவாசன் அவர்கள் இந்தியா-பாகிஸ்தான் பிரிவினைக்கு அரசியல் தொல்லைகள் காரணம் என்று சப்பைக் கட்டு போட்டது இன்று அவர் சார்ந்திருக்கக்கூடிய முகாம் காரணமாக, பிரதமரை ஆதரிக்கும் நிர்ப்பந்தத்தின் காரணமாக சொல்லப்பட்ட கருத்தாக இருக்கிறது. அவருக்காக நான் பரிதாபப் படுகிறேன்.

மாநில சுயாட்சி மறுக்கப்பட்டதன் காரணமாகத்தான் அந்த நிகழ்ச்சி ஏற்பட்டதே தவிர, இந்தியா-பாகிஸ்தான் என்று ஆனதற்கு முஸ்லீம் லீக்கோ, ஜின்னாவோ காரணம் அல்ல. பண்டித ஜவஹர்லால் நேருவும், சர்தார் வல்லபாய் பட்டேலும், காங்கிரஸ் கட்சியுந்தான் காரணம். "ஸ்ட்ராங் சென்டர்" என்ற வார்த்தையைப் பயன்படுத்தி மாநில சுயாட்சி மறுக்கப்பட்ட காரணத்தால்தான் பாகிஸ்தான் ஏற்பட்டது.

வரலாற்றைத் திருப்புகிறார்கள் என்று மாண்புமிகு உறுப்பினர் திரு. குமாரசாமி அவர்கள் சொன்னார்கள். வரலாற்றைத் திருப்புவது லத்தீப் அல்ல. இந்தியத் துணைக் கண்டத்தில் அந்த நிலையை ஏற்படுத்தியது பண்டித ஜவஹர்லால் நேருவும் அந்தக் கட்சியினருந்தான் என்று தெளி வாகச் சொல்ல முடியும்.

இந்திய முஸ்லீம் லீக் பாகிஸ்தான் கோரியவுடனே இந்தியா ஒன்றாக இருக்க வேண்டுமென்று விரும்பிய தொழிற்கட்சியின் ஆட்சிப் பிரதமர் அட்லி அவர்கள் 1946-ம் ஆண்டு மார்ச் 23-ம் தேதி இந்த நாட்டிலே ஒற்றுமையை ஏற்படுத்த வேண்டும், பிரிவினை இல்லாமல் அரசியலமைப்புச் சட்டத்தைக் கொண்டு வந்து சம உரிமை பெறும் அடிப்படையில் பிரிட்டிஷ் காபினேட் மிஷனை அட்லி அவர்கள் அனுப்பி வைத்தார்கள்.

Sir Stafford Cripps, Secretary of State for India, Lord Pethic Lawrence, President, Board of Trade and Mr. A. V. Alexander, First Lord of the Admiralty.

இந்த மூவரும் கொண்ட குழுவை அனுப்பி 1946-ம் ஆண்டு மே மாதம் 2-ம் தேதியில் இருந்து 12-ம் தேதி வரை சிம்லாவில் கூடி ஒரு தீர்மானத்தை உருவாக்கினார்கள். அதிலே மத்திய சர்க்காருக்கு, டிபென்ஸ், ஃபாரின் அஃபேர்ஸ், கம்யூனிகேஷன் இந்த மூன்று அதிகாரங்களை வைத்துக் கொள்ள வேண்டும். மீதி அதிகாரங்களை மாநிலங்களுக்கு வழங்க வேண்டுமென்று 1946-ம் ஆண்டு மே மாதம் முடிவு செய்யப்

பட்டது. அந்தத் தீர்மானத்தை முஸ்லீம் லீக் ஏற்றுக் கொண்டது. அந்த மாநாட்டில் கலந்து கொண்ட காங்கிரஸ் கட்சியின் தலைவர் ஜவஹர் லால் நேரு அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். மவுலானா அபுல் கலாம் ஆசாத் அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். மகாத்மா காந்தி யடிகள் ஏற்றுக் கொண்டார்கள். அதைப் பற்றி கூறுகின்ற நேரத்திலே

The acceptance of the Cabinet Mission Plan both by the Congress and the Muslim League is a glorious event in the history of freedom movement in India.

என்ற அளவில் வரலாற்றுச் சிறப்புமிக்க ஒற்றுமையை ஏற்படுத்தினார் கள். அதற்குப் பிறகுதான் சர்தார் பட்டேல் மனத்திலும், ஜவஹர்லால் நேரு அவர்கள் மனத்திலும் எங்கே தாங்கள் ஆட்சிக்கு வரும் நேரத்தில் பலவீனமான மத்திய சர்க்கார் ஏற்பட்டு விடுமோ, அதிகாரங்கள் குறைந்து விடுமோ என்று இன்று இருக்கும் தலைமை நினைப்பது போன்று அன்று நினைத்த காரணத்தால் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் அரசியல் நாணயத்தைக் காக்கத் தவறி, சிம்லா மாநாட்டில் கையெழுத்திட்ட பிறகு 1946 ஜூலை 10-ம் தேதி பம்பாயில் நடைபெற்ற செய்தியாளர் கூட்டத்தில் முன்னுக்குப் பின் முரணாக, கையெழுத்திட்ட வாசகத்தை மீறிப் பேசி யிருக்கிறார்.

The Congress would enter the Constituent Assembly completely unfettered and free to meet all situations as they arise. The Congress regarded itself free to change or modify the Cabinet Mission Plan.

என்று உடன்பாடு ஏற்பட்ட பிறகு பண்டித ஜவஹர் லால் நேரு மீறிய காரணத்தால்தான் வரலாற்றில் இவ்வளவு துக்ககர மான சம்பவங்கள் இந்தியா முழுவதும் ஏற்பட்டு விட்டன.

மாநில சுயாட்சி மறுக்கப்பட்டால் இந்தக் கொள்கை அழிந்து விடாது. அந்தக் கொள்கையைக் கூறும் இயக்கத்தை அழித்து விட முடியும் என்று தயவு செய்து தவறாகக் கணக்குப் போட வேண்டாம். மாநில சுயாட்சி மறுக்கப்பட்டதன் காரணமாகத்தான் இந்தியா துண்டாடப்பட்டிருக் கிறது.

டாக்டர் ஹாண்டே அவர்கள் தன்னுடைய திருத்தத் தீர்மானத்தில் பேசுகின்ற நேரத்தில் பங்களா தேஷைப் பற்றிப் பேசக் கூடாது என்று கூறினார்கள். பங்களாதேஷின் கதை என்ன? ஷேக் முஜிபூர் ரக்மான் மாநில சுயாட்சி கேட்டார். 1971-ம் ஆண்டில் திராவிட முன்னேற்றக் கழகம் வெற்றி பெற்று வந்தது போல் ஷேக் முஜிபூர் ரக்மானுக்கு

மக்கள் ஆதரவு கொடுத்தார்கள். ஆனால் அவரை ஆட்சிப் பீடத்தில் அமர விடாமல் தடுத்தார்கள். "ஸ்ட்ராங் சென்டர்" என்ற வார்த்தையைப் பயன்படுத்தினார்கள். அடுத்து நடந்த அக்கிரமங்கள், கற்பழிப்புகள், அட்டூழியங்கள் உலகு அறியும்.

திராவிட முன்னேற்றக் கழகம் மாநில சுயாட்சி கேட்கிறது. தமிழ் நாட்டு மக்கள் வாக்களித்து திராவிட முன்னேற்றக் கழகத்தை ஆட்சியில் அமர்த்தியிருக்கிறார்கள். இந்த நாட்டு மக்களுக்கு அளித்திருக்கும் வாக் குறுதிகளை நிறைவேற்ற பொருளாதார வளத்தை மேம்படுத்த மக்களுடைய வாழ்க்கையில் ஒளியை ஏற்படுத்த மாண்புமிகு போக்குவரத்து அமைச்சர் அவர்கள் கூட கோகலே ஹாலில் ஒரு கருத்தைச் சொன்னார்கள். மாண்புமிகு உறுப்பினர் திரு. சீனுவாசன் அவர்கள் அதைச் சரியாகப் படிக்காமல் கூறினார்கள்.

Political unit is the State for economic development, the region is the unit, for defence, communication, the nation will be the unit.

என்று மூன்று டயர் சிஸ்டத்தை மிகத் தெளிவாகக் கூறினார்கள்.

அரசியல் அடிப்படையில் ஒரு மாநிலம் முழு அதிகாரம் பெற்றிருக்க வேண்டும். பொருளாதார வளம் மேம்பட இந்தியா முழுவதும் நான்கு ரீஜியன்களாகப் பிரிக்கப்பட்டு திட்டங்கள் மேற்கொள்ளப்பட வேண்டும். சில முக்கியமான அதிகாரங்கள், பாதுகாப்பு, வெளிநாட்டுத் தொடர்பு போன்ற அதிகாரங்களை மத்திய சர்க்கார் வைத்துக் கொண்டு மற்ற வற்றை மாநிலங்களுக்குக் கொடுத்துவிட வேண்டுமென்று அருமையான திட்டத்தை அரசியல் சிந்தனையாளர்களுக்கு இன்றைய தினம் விடுத்திருக் கிறார்கள்.

எனவே, எங்களைப்பற்றி, இந்திய ஒற்றுமையைக் காக்க விரும்புகிற எங்களை நீங்கள் ஐயப்படுவது என்றால் அப்படி ஐயப்படுவதின் காரணமாக மாநில சுயாட்சியை ஏற்றுக்கொள்வதை மறுத்துவிட்டால், இந்தத் தீர்மானத்தை மறுத்துவிட்டால் நீங்கள் என்ன செய்யமுடியும் என்றெல் லாம் கேட்பது, அல்லது என்ன ஏற்படும் என்றெல்லாம் கேட்பது பல விபரீதங்களுக்கு நிச்சயமாக வழிவகுக்கும். அதற்கு திராவிட முன்னேற்றக் கழகம் தலைமை தாங்காமல் இருக்கலாம். ஆனால் தமிழ கத்தினுடைய உரிமைகளைக் காப்பதற்காக, தமிழ்நாட்டினுடைய நலன்களைக் காப்பதற்காக, மத்திய அரசின் ஆதிக்கத்தில் தமிழகத்தின் பொருளாதார வளர்ச்சி குன்றுகிறது என்று எண்ணுகிற ஒரு பிரிவு தங்கள் உரிமைகளை நிலைநாட்ட விரும்பினால் அதன் விளைவுகள் நிச்சயமாக இந்தியாவின் ஒற்றுமைக்குப் பலன் அளிக்கக்கூடிய ஒன்றாக இருக்காது.

எனவே, இந்திய ஒற்றுமைக்குப்பாடுபடுகிற, அதற்காக முன் வைத்திருக்கக் கூடிய மாநிலச் சுயாட்சித் தீர்மானத்தை மாண்புமிகு உறுப்பினர்கள் கூறுகிறவர்கள் யார், கூறக்கூடிய இயக்கம் என்ன என்பதை யெல்லாம் விட்டுவிட்டு இதை ஆதரிக்கவேண்டுமென்று கேட்டு நானும் ஆதரித்து விடைபெறுகிறேன். வணக்கம்.

*திரு. எம். முத்தையா : மாண்புமிகு பேரவைத் தலைவர் அவர்களே, மாண்புமிகு முதல் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கக்கூடிய மாநிலச் சுயாட்சிபற்றிய தீர்மானத்தை எங்கள் கட்சி சார்பாக ஆதரித்து என் கருத்துக்களைச் சொல்ல விழைகிறேன்.

இரண்டு மூன்று நாட்களாகவே மாநிலச் சுயாட்சி பற்றிய விவாதம் நடந்து கொண்டிருக்கிறது. அதற்காக அரசியல் சட்டத்தைத் திருத்தி மத்திய அரசுக்குள்ள அதிகாரங்களைப் பகிர்ந்தளிக்க வேண்டும் என்ற விதத்தில் இந்த மன்றத்தில் விவாதம் நடந்து கொண்டிருக்கிறது. அதிக அதிகாரங்கள் மாநிலத்திற்கு இருந்தால்தான் சுயமாக இயங்க முடியும். ஆகவேதான் இந்தத் திருத்தத்தைக் கொண்டுவரக் கோருகிறார்கள்.

இரண்டு மூன்று நாட்களாக விவாதிக்கிறோம். மேலை நாடுகளைப் பார்த்தால் சந்திர மண்டலத்திற்கு எப்படிப் போவது, அங்கு போனால் அங்கு மனித சஞ்சாரம் இருக்குமா, மனிதன் அங்கு குடியிருக்க முடியுமா என்று வாதிக்கிறார்கள். அங்கு குடியிருக்க வசதி இல்லை என்றால் செவ்வாய் கிரகத்திற்குப் போகலாமா, அங்கு இருக்கலாமா என்பதைப் பற்றி விஞ்ஞானிகள் முற்போக்கான விவாதங்களை விவாதித்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் நம்முடைய மாநிலத்தில் இங்கு நாம் என்ன நினைக்கிறோம் என்றால் மத்திய சர்க்கார் அதிகாரங்களைப் பிரித்து மாநில சர்க்கார்களுக்குக் கொடுத்துவிட்டால் என்ன செய்வோம் ஏது செய்வோம் என்று பயந்து கொண்டிருக்கிறார்கள். அப்படி பயப்படக்கூடிய ஒரு சூழ்நிலை இருக்க வேண்டியதில்லை. அப்படி அதிகாரங்களைப் பகிர்ந்தளித்தால், மத்திய சர்க்காருடைய சுமை குறையும். அவர்களுடைய பளு குறையும். நாற்பது பேர்கள் சேர்ந்து 30 தேங்காயை மூட்டைகட்டி சுமந்த கதைதான் நினைவிற்கு வருகிறது. மத்திய சர்க்கார் அதிகாரங்களைக் குவித்து வைத்து செயல்படுகிறார்கள். அதைப் பகிர்ந்தளித்தால் அவர்களது சுமை குறையும். அவர்களுக்கும் சுலபமாக இருக்கும், மாநில சர்க்கார்களுக்கும் சுலபமாக இருக்கும் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

முக்கியமானவைகளை மத்திய சர்க்கார் வைத்துக் கொள்ளலாம், அதாவது பாதுகாப்பு, போக்குவரத்து போன்றவைகளை, சொல்லப் போனால் இன்னொரு முக்கியமான விஷயம் அவர்கள் கையில்தான் இருக்கிறது. அதாவது கரன்ஸிநோட் அடிப்பது அவர்கள் கையில் இருக்கிறது. இது ஒன்றை வைத்துக் கொண்டாலே அவர்கள் என்ன வேண்டுமானாலும் செய்ய லாம். ஆகவே சாதாரண விஷயங்களுக்காக அரசியல் சட்டத்தை மாற்று வது கூடாது என்று சொல்வது சரியல்ல. அரசியல் சட்டத்தைத் திருத்தி மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் கொடுத்தால் மாண்புமிகு முதல் அமைச்சர் அவர்கள் வீட்டுக்குக் கொண்டுபோய் விடுவார்கள் என்று பயப்படுகிறார்கள். அப்படி அல்ல அது.

எந்தச் சர்க்கார் வந்தாலும் அவர்களுக்கு இது உதவியாக இருக்கும். மதிப்பிற்குரிய கே.டி.கே. தங்கமணி அவர்கள் பார்வேட் ப்ளாக் கட்சி இதை ஏற்றுக் கொள்கிறதா என்று கேட்டார்களாம். அப்போது நான் இல்லை. நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம். ஏனென்றால் அவர்களது கட்சியைச் சேர்ந்த ரஷ்ய நாட்டில்கூட ஐந்தாண்டுத் திட்டங்கள் நிறை வேற்றப்பட்டு அதே திட்டத்தை நம் மத்திய சர்க்கார் காப்பி அடித்து நான்கு ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றினார்கள். அதனால் நாட்டு மக்கள் என்ன பலன் அடைந்தார்கள் ?

அடுத்தப்படியாக, மத்திய சர்க்கார் லைசென்ஸ், பெர்மிட், கோட்டா இவைகளை வைத்துக் கொண்டு செயல்படுகிறார்கள். இதனால் இந்த நாட்டு பிரஜைகளுக்கு என்ன பலன் ஏற்பட்டது ? உழுதவர்கள் உழுதுகொண்டு தானிருக்கிறார்கள். வயல்களில் வரப்பு வெட்டிக் கொண்டிருந்தவர்கள் இப்போதும் வரப்பு வெட்டிக் கொண்டிருக்கிறார்கள். அதனால் வாழ்பவர்கள் வேறு. டாட்டா, பிர்லா, கோயங்கா, முந்திரா, முத்தையா செட்டியார் போன்ற பெரிய பெரிய 85 பண முதலைகள்தான் இந்தத் திட்டங் களினால் வாழ்கிறார்களே தவிர, நாட்டு மக்கள் இதனால் வாழவில்லை யென்பதால் இந்தத் திருத்தம் வேண்டுமென்று சொல்லக் கடமைப் பட்டிருக்கிறோம்.

இன்னொன்று, மத்திய சர்க்கார் அரசியல் சட்டத்தைத் திருத்தக் கூடாது என்று சொல்கிறார்கள். ஏன் திருத்த வேண்டாம்? ஆனால் மாநில சர்க்கார் ஒரு தவறு செய்தால் அதைக் கண்டிப்பதற்கு மத்திய சர்க்கார் இருக்கிறது. அப்படி மத்திய சர்க்கார் இருக்கும்போது நமக்குள் இடைத் தரகராக ஒருவர் இருக்கிறார். நமக்கு மேல் ஒரு கவர்னர் தேவையா என்று கேட்கிறேன். அவருக்காகச் செலவழிக்கும் தொகை என்ன ஆகிறது ? யானையைக் கட்டி தீனி போடுவது மாதிரி அவருக்காக ஆகும் செலவு ஆகிறது அப்படியிருக்கும்போது ஏன் அரசியல் சட்டத்தைத் திருத்தக் கூடாது? அப்படித் திருத்தினால்தான் நம் மாநிலம் மட்டும் அல்லாது மற்ற மாநிலங்களும் வாழும் என்பது என் கட்சியின் நோக்கம், என் நோக்கமும்கூட.

அடுத்தப்படியாக, இந்திய ஒற்றுமையைப்பற்றிப் பேசினார்கள். இந்தியா வில் 14 மொழிகளுக்குமேல் பேசக்கூடிய மொழிகள் இருக்கின்றன. ஆனால் இன்று இந்திதான் ஆட்சிமொழி என்றால் மற்ற மொழிகள் ஆட்சி மொழிகளாக இருக்கக் கூடாதா ? இந்தி மொழி பேசுகிறவர்கள் மெஜாரிட்டியாக இருந்தால் அதற்காக அந்த மொழி ஆட்சிமொழியாக இருக்க வேண்டுமென்றால் அதை வேண்டுமானால் ஒத்துக் கொள்ளலாம். ஆனால் இந்த இந்திக்கு 20, 30 கோடி ரூபாய் ஏன் செலவு செய்ய வேண்டும் என்பதுதான் என் வாதம். அந்த மொழியின் வளர்ச்சிக்காக என்கிறார்கள். அப்படியானால் அது மழலை மொழியா ? அந்த மழலை மொழிக்கு இவ்வளவு பணம் செலவு செய்வது தேவையா? அப்படி யானால் அது ஆட்சி மொழியா? இதுதான் என் வாதம். இந்திக்காக முப்பது கோடி ரூபாய் செலவழிப்பதற்குப் பதிலாக அந்தந்த மாநில மொழிகளும், ஆங்கிலமும் போதும் என்பதுதான் என் வாதம்.

அடுத்தப்படியாக, ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ்., ஐ.எப்.எஸ். பட்டத் தேர்வு களுக்காக எல்லா மாநிலங்களில் இருந்தும் தேர்வில் கலந்து பரீட்சை எழுதும்போது இந்தியிலும் ஆங்கிலத்திலும் எழுதலாம் என்றால் இந்தியை தாய்மொழியாகக் கொண்டவர்கள் முதல் கட்டத்தில் தேறி இந்தி பேசாத மக்கள் இரண்டாவது கட்டமாகத்தான் வர முடிகிறது. முதல் கட்ட மாணவ னாக தேற முடியவில்லை. இது ஒருமைப்பாடா ?

எந்த மாநிலத்தைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் அவர்கள் அகில இந்திய ரீதியில் பரீட்சை எழுதும்போது ஆங்கிலத்தில்தான் எழுத வேண்டும் என்ற கட்டுப்பாடு வேண்டும். இல்லாவிட்டால், அந்தந்த மாநில மொழி யில், அவர்கள் தாய் மொழியில் எழுத வேண்டும் என்று நிர்ணயம் செய்ய வேண்டும். ஆகவே அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டும் என்று சொல்வது தவறு அல்ல.

அடுத்தப்படியாக ஜாதி சமுதாய வேறுபாடுகளைக் களைவதற்காகத் தமிழ் சமுதாயத்தில் ஒரு ஹரிஜன்கூட அர்ச்சகராக ஆகலாம் என்று இந்தச் சட்டசபையில் ஒரு சட்டம் நிறைவேற்றப்பட்டு அது எதிர்க்கப்பட்டு மத்திய சர்க்காருக்கு உட்பட்ட உச்ச நீதிமன்றம் என்ன சொல்கிறது என்றால் அரசியல் சட்டத்தில் இடமில்லை என்று தீர்ப்பு வந்திருக்கிறது. இது நியாயமா ?

அதேபோல் இன்னொன்று கூற விரும்புகிறேன். மொழிவழியால் அண்டை நாடான பாகிஸ்தானில் பிரிவினை ஏற்பட்டது. காரணம் இது தான். மொழிவழிதான் நாட்டுப் பிரிவினைக்குக் காரணமாக இருந்தது. அதேபோல் தமிழகத்தில் உள்ள சர்க்கரை ஆலைகள், சிமெண்ட்

ஆலைகளில் நம் தேவைக்கு அதிகமாக உற்பத்தி செய்தும்கூட மத்திய சர்க்காருடைய ஒரு கண்ட்ரோல் காரணமாகத்தான் நம்முடைய தேவைகள் எல்லாம் தடைப்படுகிறது.

தமிழ்நாடு உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெற்றிருக்கிறது என்பது எல்லா மாநிலத்தாரும் ஒத்துக் கொள்ளக்கூடிய ஒரு விஷயம். அப்படி யிருந்தும் ஏன் இந்த உணவுப் பற்றுக்குறை ? ஏன் இந்த விலைவாசி யேற்றம்? காரணம், இவை எல்லாம் மத்திய சர்க்காரின் ஆதிக்கத்தில் இருப்பதால்தான், இப்படிப்பட்ட கொடுமைகள் வருகின்றன. மண்ணெண் ணெய், பெட்ரோல், டீஸல் இவைகள் எல்லாம் வெளிநாடுகளிலிருந்து வர வேண்டியிருப்பதால், அந்தந்த நாடுகளில் இருந்து நாம் நேரடியாக, டைரக்ட்டாக வாங்கலாமே. மத்திய சர்க்காரிடம் போய் அவர்கள் ப்ரோக்கர் மாதிரி இல்லாமல் நாமே டைரக்ட்டாக வாங்குவது என்றால் நமக்குச் சுலபமாக இருக்குமே.

திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் பார்வேர்ட் ப்ளாக் கட்சி ஏற்றுக் கொண்டார்களா என்று கேட்டார்கள். சுபாஷ் சந்திர போஸ் 1938-ல் கல்கத்தா காங்கிரஸ் மகாசபையில் கூடச் சொன்னார்கள். உண்மையான சுதந்திரம் இருந்தால்தான் ஏற்றுக்கொள்வோம், கண் துடைப்பு சுதந்திர உடன்படிக்கை தேவை இல்லை என்று சொன்னார்கள்.

ஆகவே, இப்போது நேதாஜி போஸ் இருந்தால் கூட இந்த மாநில சுயாட்சி வேண்டுமென்று கேட்டு இருப்பார்கள். தேவர் கூட என்ன சொன்னார் ? காங்கிரஸ் கட்சியில் இருந்தார். அவர்களுடைய யதேச்சாதிகாரப் போக்கு பிடிக்காததால் கட்சியை விட்டு விலகிவிட்டார். கூட்டாட்சி வேண்டுமென்று சொன்னால் நாம் மாநில அரசுக்கு அதிக அதிகாரம் வேண்டுமென்று கேட்கிறோம். (மணியடிக்கப்பட்டது).

மதம், ஜாதி என்ற பெயரால் சமுதாயம் சீர்குலைக்கப்படுகிறது. அதை நீக்க வேண்டும். மற்றும் மூடப் பழக்க வழக்கங்கள் நோக்கங்களை அகற்றப்பட வேண்டுமென்றும் இந்தியா ஒரு சிறப்பு பெற்ற கூட்டாட்சி நாடாகவே திகழ வேண்டும் என்றும், இந்தியாவில் ஒருமைப்பாடு சீரான வகையில் இருக்க சட்டங்கள் திருத்தப்பட வேண்டு மென்றும் தமிழக $4\frac{1}{2}$ கோடி மக்களின் சார்பாகக் கேட்டுக்கொண்டு' என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

தமிழ்நாடு சட்டப் பேரவை

வெள்ளிக்கிழமை, 1974 ஏப்ரல் 19.

சென்னை செயின்ட் ஜார்ஜ் கோட்டையிலுள்ள சட்டப்பேரவை மண்டபத்தில் காலை 9 மணி அளவில் மாண்புமிகு பேரவைத்தலைவர் **புலவர் கா. கோவிந்தன் அவர்கள்** தலைமையில் பேரவை கூடியது.

பக்கம் 512-A } வேறு அலுவல்கள்
பக்கங்கள் 631 முதல் 633 வரை } வேறு அலுவல்கள்

128 - 39 A

## தமிழ் நாடு சட்டப்பேரவை

## வெள்ளிக்கிழமை, 1974 ஏப்ரல் 19.

### அரசினர் தனித் தீர்மானம்.

**மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து.**

மாண்புமிகு டாக்டர் இரா. நெடுஞ்செழியன்: பேரவைத் தலைவர் அவர்களே, மாண்புமிகு முதல்வர் அவர்கள் கொண்டுவந்துள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க, ஏனைய மாநிலங்களுக்கெல்லாம் எடுத்துக்காட்டாக விளங்கத்தக்க, அரசியலே நல்வாழ்வு பெற வேண்டும் என்று எண்ணுகின்ற, அரசியல்வாதிகளுக்கெல்லாம் தூண்டுகோலாக அமையக்கூடிய தீர்மானத்தை ஆதரித்துச் சில கருத்துக்களை வைக்கின்ற வாய்ப்பு கிட்டியிருப்பதற்காக நான் பூரிப்பும் பெருமையும் கொள்ளுகின்றேன்.

தமிழகம் பல்வேறு வகைகளில்—இறந்த காலத்திலும் சரி, நிகழ் காலத்திலும் சரி—மற்ற மாநிலங்களுக்கு எடுத்துக்காட்டாகவும், மற்ற மாநிலங்களுக்கு வழிகாட்டியாகவும் இருக்கத்தக்க நிலையில் இருந்து வருவதையொட்டி இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றுவதன் மூலமும் ஏனைய மாநிலங்களுக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் என்கின்ற திண்மை நமக்கெல்லாம் உண்டு. அந்த வகையில் வழிகாட்டியாக இருக்கத்தக்க பல்வேறு வல்லமைகளை இந்தத் தமிழகம் பெற்றிருக்கிறது என்பதையும் நாம் நன்கு உணருவோம். அந்த முறையில் இந்தத் தீர்மானம் மிகச் சிறப்பு வாய்ந்தது, எதிர்காலத்தில் ஆக்கம் பயப்பதற்கு அடிப்படையாக விளங்கத்தக்க வகையில் அமையக்கூடியது என்பதை எல்லோரும் நன்கு உணருவார்கள்.

இந்தத் தீர்மானத்தையொட்டி பல்வேறு கருத்துக்களை எதிர்க் கட்சித் தரப்பிலே உள்ளவர்கள் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். இந்தத் தீர்மானத்தினுடைய அவசியத்தை வலியுறுத்தி மாண்புமிகு முதல்வர் அவர்கள், தம்முடைய முன்னுரையில் மிகத் தொகுப்பாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். இந்தத் தீர்மானத்தை எதிர்க்கின்ற வகையில் கருத்துக்களை வழங்கிய எதிர்க் கட்சியைச் சார்ந்த உறுப்பினர்கள், "இது பிரிவினைக்கு இடம் கொடுக்கும், ஆகவே இந்தத் தீர்மானமே கூடாது" என்ற வகையில் எடுத்துக் குறிப்பிட்டுக் காட்டியிருக்கிறார்கள். தீர்மானத்தைப்பற்றி பேசிய ஆளுங்கட்சியைச் சார்ந்த உறுப்பினர்கள் பலரும், தோழமைக் கட்சியைச் சார்ந்த உறுப்பினர்களும் அதற்கான அளவுக்குத் தக்க ஆதாரங்களைத் தந்திருக்கிறார்கள்.

பிரிவினைக்கு இடந்தருகிற தீர்மானமாக இது அமைகிறது என்று கூறுவதை நான் முழுக்க, முழுக்க மறுக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்.

ஏனென்று சொன்னால், பிரிவினை உணர்வு எந்த நேரத்திலும் ஏற்படாமல் தடுப்பதற்கு இந்தத் தீர்மானம்தான் உறுதுணையாக இருக்கும் என்பதை வரலாறும்கச் சிறப்பாகச் சுட்டிக்காட்டியிருப்பதை அனைவரும் நன்கு உணருவார்கள். நாம் கேட்பது—மாநிலத்திலே சுயாட்சி வேண்டும்; மத்தியிலே கூட்டாட்சி வேண்டும். கூட்டாட்சிக்கு உரிய இலக்கணங்கள் அமைந்த வகையில் ஆட்சி அமைந்தால்தான் நம்முடைய நாட்டின் எதிர்கால வாழ்வு நன்றாக அமையும் என்பதற்குக் காரண காரிய விளக்கங்கள் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த நாடு விடுதலை பெற்று 27 ஆண்டுகள் ஆகியும், அரசியலமைப்புச் சட்டம் நடைமுறைப் படுத்தப்பட்டு 24 ஆண்டுகள் ஆகியும், இந்த நாடு போதுமான அளவுக்கு—எதிர்பார்த்த அளவுக்கு—வளர்ச்சியைப் பெறுமலிருப்பதற்கு அடிப்படைக் காரணங்கள் என்ன என்று ஆராயும்போதுதான் இந்தத் தீர்மானத்தினுடைய இன்றியமையாத் தன்மையை மிக நன்றாக நம்மால் உணர முடியும்.

மாண்புமிகு உறுப்பினர் திரு. கந்தப்பன அவர்கள் நேற்று பேசும் போது அதைச் சிறப்பாக விளக்கிக் காட்டினார்கள். இந்த நாடு விடுதலை பெற்று 27 ஆண்டுகள் ஆகியும், அரசியலமைப்புச் சட்டம் உருவாகி 24 ஆண்டுகள் ஆகியும், 24 ஆண்டுக் காலமாக இந்த அரசியலமைப்புச் சட்டத்தின் அடிப்படையில் மத்திய அரசும் மாநில அரசுகளும் செயல்பட்டு வந்தும், நாம் எதிர்பார்த்த பலனைப் பெற முடியாமலிருப்பதற்கு என்ன அடிப்படைக் காரணம் என்று நாம் நன்றாக உணர வேண்டும். அதற்கு முன்னர் அன்னிய ஆதிக்கம் இருந்த காரணத்தால் நாடு பொருளாதாரத் துறையில், தொழில் துறையில் உயரக்கூடிய முறையில், அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளும் வகையில் நம்மால் முன்னேற முடியாமல் இருந்தது என்று காரணம் சொல்லப்பட்டது. நாடு விடுதலை பெற்றதற்குப் பிறகு, முழு உரிமை நமக்கு அளிக்கப்பட்ட சூழ்நிலை கிடைத்த பிறகும் நம்மால் வளர முடியாமலிருப்பதற்கு காரணம், ஆட்சிப் பொறுப்பில் இருந்தவர்களுக்கு ஆற்றல் இல்லை, அறிவு இல்லை என்று சொல்லிவிட முடியுமா என்றால்—அதைத்தான் மாண்புமிகு உறுப்பினர் திரு. கந்தப்பன் அவர்கள் சுட்டிக் காட்டினார்கள்.

மத்தியில் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் இருந்திருக்கிறார்கள். அவருக்குப் பிறகு திரு. லால்பகதூர் சாஸ்திரி அவர்கள் இருந்திருக்கிறார்கள். அவருக்குப் பிறகு அம்மையார் அவர்கள் இருந்துகொண்டிருக்கிறார்கள்.

அவர்களைப்போன்று பல்வேறு மாநிலங்களிலும் மூத்த அரசியல் தலைவர்கள் ஆட்சிப் பொறுப்பில் இருந்து நடத்திக்கொண்டு வந்திருக்கிறார்கள். சிறந்த அறிவாற்றல் மிக்கவர்கள், அரசியலில் நீண்ட காலம் பழக்கப்பட்டவர்கள், அரசியலில் தியாகங்கள் பல செய்தவர்கள், இந்த நாட்டினுடைய அரசியல் சூழ்நிலையை நன்கு உணர்ந்தவர்கள் எல்லாம்

## மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னர் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

*[டாக்டர் இரா. நெடுஞ்செழியன்]*

*1974 ஏப்ரல் 19]*

பல்வேறு மாநிலங்களினுடைய ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்திக் கொண்டு வந்திருக்கிற நிலையில், எதிர்பார்த்த பலன்களை நாம் பெற முடியாமல் போனதற்கு அடிப்படைக் காரணம், ஆட்சிப் பொறுப்பில் உட்கார்ந்திருக்கிறவர்கள் ஆற்றலை—அறிவை—பயன்படுத்துவதில் ஏற்பட்ட கேடல்ல, அமைப்பிலே ஏற்பட்டிருக்கிற சீர்கேடுதான் நாம் பெறவேண்டிய அத்தகைய பலன்களைப் பெற முடியாமல் ஆக்கியிருக்கிறது என்பதை நாம் உணரலாம்.

ஜப்பான் நாடு மிகச் சிறிய நாடாக இருந்தாலும் அந்த நாடு 1956-லிருந்து 1966 ஆம் ஆண்டு வரையில், இந்தப் பத்தாண்டு காலத்தில் 780 சத வீத வளர்ச்சியைக் கிட்ட முடிந்திருக்கிறதென்றால், இந்த நாடு சுதந்திரம் பெற்று, இவ்வளவு வாய்ப்பு வசதியுடையதாக இருந்தும், அறிவாற்றல் மிக்கவர்களின் ஆளுகையின்கீழ் மாநில அரசுகளும் மத்திய அரசும் இருந்தும் சரியான வகையில் முன்னேற முடியாமலிருப்பதற்குக் காரணம் இந்த அமைப்பு முறை சரியாக இல்லை என்பதுதான்.

ஆகவே, பிரிவினைக்கு வித்திடுகிறது என்ற காரணத்தைச் சொல்லி, அந்தக் காரணத்தை வைத்து எதிர்க்க, எதிர்க்கட்சி உறுப்பினர்கள் முயன்றிருக்கிறார்களே தவிர, மாநில சுயாட்சி ஏற்படுவதனால் இன்ன இன்ன கேடுகள் விளையும், இந்த நாடு முழுமையான கூட்டாட்சி பெற வேண்டும் என்ற கருத்தில் கொண்டுவரப்பட்டிருக்கும் இந்தத் தீர்மானம் நிறைவேற்றப்படுவதனால் கேடுபாடுகள் இன்ன இன்ன என்று விளக்கி அதற்கான வாதங்களை எடுத்துவைக்க முடியவில்லை.

ஆகவே, இல்லாத ஒரு தன்மையைத் தாங்களே வரவழைத்துக் கொண்டு, "பிரிவினைக்கு வித்திடும், ஆகவே, பிரிவினைக் கொள்கையை எதிர்க்கிறோம்" என்று அதற்கான வாதங்களை வைத்துவிட்டுத்தான் உட்கார்ந்தார்கள். இங்கு இல்லாத ஒன்றை, மாண்புமிகு முதல்வர் அவர்கள் எடுத்துத் தெரிவிக்காத ஒன்றை அவர்கள் சொல்லுகிறார்கள். நாம் அழுத்தந்திருத்தமாகச் சொல்கிறோம். இந்தியா ஒரு நாடாகத்தான் இருக்கும்; அதற்குள்ளே மாநிலங்கள் இருக்கும். நாம் மாநில சுயாட்சி கேட்கிறோமே தவிர, தனி நாட்டுக்கு ஆட்சி கேட்கவில்லை. தன்னாட்சி கேட்கிறோமே தவிர, தனி ஆட்சி கேட்கவில்லை. ஸெல்ஃப் ஆட்டானமி கேட்கிறோமே தவிர, ஸெல்ஃப் இன்டிபெண்டென்ஸ் கேட்கவில்லை. "நாடு" என்று நாம் அழைக்கவில்லை. "மாநிலம்" என்றுதான் அழைக்கிறோம். "மாநிலம்" என்று அழைக்கும்போது, பல மாநிலங்கள் சேர்ந்து ஒரு நாடு என்பதை ஒப்புக்கொண்டிருக்கிறோம் என்று தெளிவுபடுகிறது. ஆகவே, இந்தியா ஒரு நாடாக இருக்க வேண்டும். அதில் பல்வேறு மாநிலங்கள் சுயாட்சி உரிமை பெற்றவைகளாக இருக்க வேண்டும். மத்தியிலே கூட்டாட்சி அமைய வேண்டும் என்று நாம் தெளிவுபட எடுத்துச் சொல்லியும், சொல்லப்படாத—இல்லாத—ஒரு கருத்தை எடுத்து வைத்துக்

[டாக்டர் இரா. நெடுஞ்செழியன்]

[1974 எப்ரல் 19

கொண்டு, அதற்கான வகைகளில் தம்முடைய வாதங்களை இங்கே எடுத்து வைத்திருக்கிறார்களே தவிர, மாநில சுயாட்சி ஏற்படுவதால் கூட்டாட்சிக்கு என்ன என்ன கேடுபாடுகள் ஏற்படும் என்பதற்கான காரண காரிய விளக்கங்களை எடுத்து வைத்திருக்கிறார்களா என்றால் அந்தக் காரண காரிய விளக்கங்களை எடுத்துவைக்கவில்லை. நாட்டுப் பிரிவினைக் கருத்தை இந்த அவையிலே இருக்கிற யாரும் வற்புறுத்தவில்லை. ஆளும் கட்சித் தரப்பிலும் சரி, எதிர்க்கட்சித் தரப்பிலும் சரி, யாரும் வற்புறுத்தவில்லை. யாரும் இதற்குச் சாதகமாக இல்லை என்று தெரிந்து கொண்டதற்குப் பிறகு கூட, பிரிவினைக் கருத்து வாதங்களை இங்கே எடுத்துக் காட்டுவது மிக மிகப் பொருத்தமற்றது. எதிர்காலத்தில் வர இருக்கிற சிக்கல்கள், மற்றவைகளை நீக்குவதற்கு வழிவகை காண்கிற வகையில் இந்தத் தீர்மானம் அமைந்திருப்பதால், இது ஒரு சிறந்த பாதையாக அமையும் என்று பெரியவர் மணலி அவர்கள் கூட மிக சிறப்பாகச் சுட்டிக்காட்டியிருக்கிறார்கள். இதுவரையில் உள்ள இடுக்கண்கள், இடர்ப்பாடுகள், சிக்கல்கள் ஆகிய அத்தனையையும் அகற்றுவதற்காக இந்தத் தீர்மானத்தின் மூலம் ஏற்பட இருக்கிற புதிய வழி நமக்கு ஏற்றதொரு தன்மையை வகுத்துக் கொடுக்கும் என்ற நோக்கத்தின் அடிப்படையில்தான் இந்தத் தீர்மானத்தை நாம் இங்கே கொண்டு வந்திருக்கிறோம்.

கூட்டாட்சி முறை என்று நாம் சொல்கின்ற அத்தகைய கருத்து நாமாகவே கண்டுபிடித்த கருத்து அல்ல. மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களோ அல்லது தி.மு.க. வோ முதன் முதலில் கண்டுபிடித்த ஒன்று அல்ல. பிரிவினைக்கு ஈடாக இதுவரையில் உலகத்தில் வேறு யாரும் கண்டுபிடிக்காத ஒன்றை நாங்கள் கண்டுபிடித்து, அதை இங்கே கொண்டு வந்து வைத்து, மறைமுகமாகப் பிரிவினையைக் கொண்டு வருகிறோம் என்று கூறுவதும் பொருத்தமற்றது.

கூட்டாட்சி முறை என்பது உலகத்தில் பல்வேறு ஆண்டுகளாகப் பல்வேறு நாடுகளில் கடைப்பிடிக்கப்பட்டு வருகிற ஒன்றாகும். இந்தியாவில் கூட்டாட்சி முறையின் மூலம் நல்ல பலன் ஏற்படும் என்ற கருத்தைப் பலரும் எடுத்துச் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அந்த வகையில் பார்க்கும் பொழுது ஆட்சிமுறையில் இன்றைக்கு இருக்கிற இந்தியாவினுடைய அமைப்பில் இது கூட்டாட்சி என்ற பெயராக இருந்தாலும் பெரும் பகுதி ஒற்றை ஆட்சி முறைக்கான இலக்கணங்களைப் பெற்றிருப்பதன் காரணமாக, முழு கூட்டாட்சித் தன்மையைப் பெறவேண்டும் என்றுதான் இந்தத் தீர்மானத்தின் மூலம் வற்புறுத்தி வருகிறோம். "இந்திய யூனியன்" என்று சொல்கிறபொழுது, கூட்டாட்சிக் கருத்துக்களை நாம் ஏற்றுக்கொண்டிருக்கிறோம் என்று எடுத்துச்சொன்னாலும்கூட, நடைமுறையிலே வருகின்ற பொழுது ஒற்றையாட்சிக்குரிய இலக்கணங்களைத்தான் கொண்டிருக்கிறது. அந்தக் காரணத்தினால்தான் இவ்வளவு இடர்ப்பாடுகள் ஏற்படுகின்ற தன்மை இருக்கிறது. முழுமையான, உண்மையான கூட்டாட்சி அமைய

வேண்டும். முழுமையான உண்மையான கூட்டாட்சி என்றால், மத்தியில் கூட்டாட்சி, மாநிலத்தில் சுயாட்சி அமைய வேண்டும் என்ற அடிப்படையில் நாம் எடுத்துச் சொல்லியிருக்கிறோம்.

இப்பொழுது இருக்கிற அரசியல் அமைப்புச் சட்டத்தில் விதிக்கப்பட்ட விதிகளே போதுமானவை, இவற்றைத் திருத்த வேண்டிய அவசியமில்லை, இவற்றை வைத்துக்கொண்டே நாட்டின் எதிர்காலத்தை நடத்தி விடலாம் என்று கூறுகிறவர்களுக்கு நான் எதையும் சொல்லவில்லை. ஆனால் அடுத்தாற்போல் எடுத்துச் சொன்ன, பெரும்பாலோர் எடுத்துச் சொன்ன, அதிக அதிகாரங்கள் வேண்டும் என்ற கருத்தை நாங்களும் வற்புறுத்துகிறோம்.

அதிக அதிகாரம் வேண்டும், ஆனால் அதற்காக மாநில சுயாட்சி தேவையில்லை என்பதை சில பேர்கள், எதிர்க்கட்சித் தரப்பில் எடுத்துச் சொன்னார்கள். அதிக அதிகாரம் வேண்டும் என்பதை ஒப்புக்கொள்கிறார்கள். என்னென்ன அதிகாரம் வேண்டும் என்பதைக்கூட அவர்கள் அறுதியிட்டுக் காட்டவில்லை. அதிக அதிகாரம் வேண்டுமென்றால், அதற்குச் செயல்வடிவம்தான் மாநில சுயாட்சி. எனவேதான், நாம் அதிக அதிகாரங்கள் வேண்டும் என்று வலியுறுத்துகிறோம். அதைச் செயல் வடிவத்தில் எப்படிக் கொண்டுவருவது என்று பார்க்கிறபொழுது, மாநிலத்தில் சுயாட்சி, மத்தியில் கூட்டாட்சி என்ற முறையில்தான் அதைச் செயல் வடிவத்திற்குக் கொண்டுவர முடியும். இப்பொழுது, அதிக அதிகாரம் வேண்டும், அதிக அதிகாரம் வேண்டும் என்று நாம் எல்லோரும் சொல்லிக்கொண்டிருந்தாலும்கூட, 27 ஆண்டு அனுபவத்தில் பார்த்தால், நடைமுறையில் பார்த்தால், மாநிலங்களுக்கு 1950-வது ஆண்டு அரசியல் அமைப்புச் சட்டத்தில் இருக்கிற, ஒதுக்கப்பட்டிருக்கிற அதிகாரங்களைத் தவிர, இந்த 24 ஆண்டு காலத்தில் மத்திய அரசால் எடுக்கப்பட்டிருக்கிற வரலாற்றைப் பார்க்கிறோமே தவிர, 24 ஆண்டு காலத்தில், இங்கே உறுப்பினர்கள் பலரும் எடுத்துத் தெரிவித்ததற்கு இணங்க, அதிகாரத்தைக் கொடுக்கின்ற வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறதா என்றால், 24 ஆண்டு காலத்தில் ஏற்படவில்லை. 24 ஆண்டு காலத்தில் மத்திய அரசினால் இயற்றப்பட்ட சட்டங்களைப் பார்த்தால்கூட 1950-ம் ஆண்டில் கொடுக்கப்பட்டிருக்கிற அதிகாரங்கள், வரைமுறைகள்கூட எடுக்கப்பட்டிருக்கிற நிகழ்ச்சிதான் தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டிருக்கிறதே தவிர, கொடுக்கப்பட்டிருக்கிற நிகழ்ச்சி இந்த 24 ஆண்டு காலத்தில் எந்த நிலையிலும் நடைபெறவில்லை. ஆகவேதான், அதிக அதிகாரம் வேண்டும் என்பதை நிலைநாட்ட, உறுதிப்படுத்த, எந்த வகையிலும் யாரும் எடுத்துக் கொள்ளாமல் இருக்கிற வகையில்தான், நாம் மாநில சுயாட்சி மூலம் அதை நிறைவேற்ற முடியும் என்று கருதுகிறோம். இன்றைக்கு இருக்கிற சூழ்நிலையிலே மாநில சுயாட்சி, மத்தியில் கூட்டாட்சி என்று சொல்கிற முறைதான் ஏற்றுக்கொள்ளத்தக்க முறையாக இருக்கிறது.

**மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னர் குழுவின் பரிந்துரைகள், மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

[டாக்டர் இரா. நெடுஞ்செழியன்]

[1974 ஏப்ரல் 19

உலகத்தில் இருக்கிற முறைகளை ஒற்றையாட்சி, நாடுகளின் கூட்டாட்சி, கூட்டாட்சி என்று மூன்று வகைப்பட்ட முறைகளாகத் தீர்மானித்திருக்கிறார்கள். ஒற்றையாட்சி முறை (யூனிடரி கவர்ன்மெண்ட்), நாடுகளின் கூட்டாட்சி (கான்பெடரேஷன்), கூட்டாட்சி (ஃபெடரேஷன்) என்று மூன்று முறைகள் இருக்கின்றன.

மைய அரசுக்கு வட்டார அரசுகள் கட்டுப்பட்டு நடப்பது ஒற்றையாட்சி முறை. நிர்வாக வசதிக்காக வட்டார அமைப்புகள் ஏற்படுத்தப்படுகின்றன. ஆனால், முழு முதல் அதிகாரத்தை ஏற்றுக்கொண்டிருப்பதும், எல்லா விதமான சட்டத்தைக் கொண்டிருப்பதும், எல்லாவிதமான வரி வசூலிக்கின்ற அதிகாரத்தைப் பெற்றிருப்பதும், கடன் வாங்குகின்ற அதிகாரத்தைப் பெற்றிருப்பதும், இத்தகைய எல்லாவிதமான அதிகாரங்களைப் பெற்றிருப்பதும் மைய அரசு.

மைய அரசு கொடுக்கின்ற அதிகாரத்தை நிர்வகிக்கின்ற அளவுக்கு இருக்கும் அதிகாரத்தைக் கொண்டது வட்டார அரசுகள். மைய அரசுக்கு வட்டார அரசுகள் கட்டுப்பட்டு நடக்க வேண்டும். இதுதான் ஒற்றையாட்சி முறை (யூனிடரி கவர்ன்மெண்ட்) என்று பல ஆண்டுகளாக உலகத்திலுள்ள வல்லுநர்கள் வகுத்திருக்கிறார்கள்.

மாநில அரசுகளுக்கு மைய அரசு கட்டுப்பட்டு நடப்பது நாடுகளின் கூட்டாட்சி முறை. மாநில அரசுகள் வலிமை மிக்க அரசுகள். மாநில அரசுகளுக்கு மைய அரசு கட்டுப்பட்டே தீரவேண்டும். மாநில அரசுகளின் தீர்மானங்களை, நோக்கங்களை நிறைவேற்ற வேண்டும்; மைய அரசு அதற்குக் கட்டுப்பட வேண்டும். இதுதான் கான்ஃபெடரெஷன், நாடுகளின் கூட்டாட்சி என்று கூறப்பட்டிருக்கிறது.

கூட்டாட்சி (ஃபெடரேஷன்) என்பது மைய அரசைத் தனி அமைப்பாக ஏற்று, மாநில அரசுகளைத் தனி அமைப்புக்களாக ஏற்று, இரண்டிற்கும் தனித்தனி ஆட்சிப் பொறுப்புகளை ஒதுக்கி, ஒன்றின் எல்லையில் மற்றொன்று தலையிடாமல் காப்பது கூட்டாட்சி முறையாகும்.

நம் நாட்டிலுள்ள வரலாற்று முறைகள், நம்முடைய நிலை, நில அமைப்பு, நம்முடைய நாட்டினுடைய மக்களுடைய பழக்க வழக்கங்கள், கலாச்சாரம், நாகரிகம், மொழி, பண்பு ஆகிய அத்தனையின் அடிப்படையில் பார்த்தால், இது ஒற்றையாட்சிமுறைக்கு ஏற்றது அல்ல, கூட்டாட்சி நாடாக இருப்பதற்குத்தான் ஏற்றது என்ற வகையில் அத்தனை பேர்களும் விரும்புகின்ற பாங்கினை நாம் காண்கிறோம்.

அந்த வகையில் பார்த்தால்கூட, இது ஒற்றை ஆட்சி முறைக்கு ஏற்ற நாடு அல்ல, கூட்டாட்சி முறைக்கு ஏற்ற நாடுதான் என்று பல்வேறு வல்லுநர்களும், அரசியல் சட்டங்களை நன்றாக உணர்ந்தவர்களும்,

**மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

[டாக்டர் இரா. நெடுஞ்செழியன்]

1974 எப்ரல் 19]

இறந்த கால வரலாற்று நிகழ்ச்சிகளைக் கண்டவர்களும் வலியுறுத்தியிருக்கிறார்கள். இது கூட்டாட்சிக்கு ஏற்ற நாடுதான் என்று வலியுறுத்தியிருக்கிற தன்மையைத்தான் காண்கிறோம்.

கூட்டாட்சி முறைக்கு ஏற்ற நாடாக விளங்குகின்ற வகையில் அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா, சுவிட்சர்லாந்து போன்ற நாடுகள் எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. அந்த வகையில் பார்க்கும்பொழுது ஒற்றை ஆட்சி முறைக்குரிய இலக்கணங்களை இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் அதிகமாகக் கொண்டிருக்கிறதா, அல்லது கூட்டாட்சி முறைக்கு வகுக்கப்பட்டிருக்கிற இலக்கணங்களை அதிகமாகக் கொண்டிருக்கிறதா என்று நாம் சற்று சிந்தித்துப் பார்ப்போம்.

ஒற்றையாட்சி முறைக்கு உலக அரசியல் வல்லுநர்கள் வகுத்துத் தந்திருக்கிற கருத்துக்கள், ஒற்றையாட்சிக்கு இருக்கக்கூடிய இலக்கணங்கள் என்னவென்றால், ஒற்றை ஆட்சியில் வட்டார அரசுகள் மைய அரசினால் நிறுவப்படும். வட்டார அரசுகள் அரசியலமைப்பிற்குத் தெரியாத படைப்புக்கள். வட்டார அமைப்புகள் இப்பொழுது இருக்கிற நகராட்சி, உள்ளாட்சி முறைகளைப்போல் அரசியல் அமைப்பைச் சட்டத்திற்குத் தெரியாத படைப்புகள். அதைப்போல ஒற்றை யாட்சியில் வட்டார அரசுகள் அமைந்திருந்தால்கூட அரசியல் சட்டத்திற்குத் தெரியாத படைப்புக்கள்.

வட்டார அரசுகள் மைய அரசினால் நீக்கப்படவும் கூடும். அடியோடு அவைகளை ஒழிக்க, மாற்ற, அல்லது திருத்த முழு வல்லமை பெற்றது மைய அரசு. வட்டார அரசுகளுக்கு அதிகாரங்களைக் கொடுக்கவோ, மறுக்கவோ, கூட்டவோ, குறைக்கவோ, மைய அரசுக்கு முழு உரிமை உண்டு. இரு வகையான அரசுகளும் சரி சமமானவை அல்ல. மைய அரசு எல்லா வகையிலும் உயர்ந்தது. வட்டார அரசுகள் எல்லா வகையிலும் தாழ்ந்தவை. மைய அரசு மட்டுமே இறைமையின் உறைவிடமாகக் கருதப்படும்; வட்டார அரசுகளுக்கு இறைமைப் பண்பு சிறிதளவேனும் இல்லை. இவைதான் யூனிடரி கவர்ன்மெண்டுக்கு இருக்கவேண்டிய இலக்கணங்களாக வகுக்கப்பட்டிருக்கிறன.

கூட்டாட்சி முறைக்கு வகுக்கப்பட்டிருக்கிற இலக்கணங்களைப் பார்ப்போமானால், கூட்டாட்சியில் இருக்கும் மாநில அரசுகள் மைய அரசு போன்றே அரசியலமைப்பால் ஏற்றுக்கொள்ளப்படும் பெருமையுடையவை. மத்திய அரசும் அரசியல் அமைப்புச் சட்டத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட அமைப்பு, மாநில அரசுகளும் அரசியல் அமைப்புச் சட்டத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட அமைப்புகள்.

மாநில அரசுகளின் அதிகாரங்கள் அனைத்தும் மைய அரசின் அதிகாரங்களைப் போன்று அரசியலமைப்பிலிருந்து நேரடியாகப் பிறந்தவையாகும். மைய அரசு, மாநில அரசுகள் ஆகிய இரண்டுமே அரசிய

லமைப்பால் தோற்றுவிக்கப்பட்டவையாகும். ஒன்றால் மற்றொன்று ஆக்கப் படுவதில்லை. ஒன்று மற்றொன்றை அழிக்க முடியாது. ஒன்றை நம்பி மற்றொன்று இயங்கவேண்டிய அவசியமில்லை. மைய அரசு, மாநில அரசுகள் ஆகிய இரண்டுமே சரி சமமானவை. ஒன்றின் சுதந்திரத்தில் மற்றொன்று தலையிடுவது இயலாத காரியம். இரு தரப்பு அரசுகளிடையே உயர்வு—தாழ்வு பாராட்டுவது கிடையாது.

மைய அரசும் மாநில அரசுகளும் நாட்டின் இறைமையைத் தங்க ளிடையே பகிர்ந்துகொள்ளுகின்றன. இவைதான் கூட்டாட்சி முறைக்கான இலக்கணங்கள் என்று வகுக்கப்பட்டிருக்கின்றன. கூட்டாட்சி முறைக்கான இலக்கணங்கள் இவைதான் என்று உலக நாடுகளிலுள்ள பெரும்பாலான அரசியல் அறிவியல் அறிஞர்கள் எல்லாம் எடுத்துச் சொன்ன கருத்துக்கள். அவைகளைத்தான் நான் தொகுத்துச் சொன்னேன்.

இன்றைக்கு இருக்கிற அரசியல் அமைப்புச் சட்டத்தைப் பார்த்தாலும், மாநில-மத்திய அரசுகளின் போக்குகளைப் பார்த்தாலும், ஒற்றை ஆட்சிக்கு வகுத்திருக்கிற இலக்கணங்களைத்தான் பெரும்பாலும் மத்திய அரசு கொண்டிருக்கிறதே தவிர, கூட்டாட்சிக்கான இலக்கணங்களைக் கொண் டிருக்கவில்லை. அதன்காரணமாகத்தான் மாநிலத்திற்கு சுயாட்சி வழங் கப்படவேண்டும் என்று கோரப்படுகிறது. வழங்கப்பட்டிருக்கிற சுயாட்சி முழுமை பெற்றதாக இல்லை. அளிக்கப்பட வேண்டிய அளவுக்கு அளிக்கப் படவில்லை. ஆனால், வழங்கப்பட்டிருக்கிறது என்று அரசியல் சட்டத்திலே சொல்லிவிட்டாலும் கூட, இன்றைக்கு இருக்கிற அரசியல் அமைப்புச் சட்டத்தின் அடிப்படையில் எல்லா அதிகாரங்களையும் மத்திய அரசினிடத் திலே குவித்து வைத்துக்கொண்டு, மத்திய அரசு ஒரு ஒற்றையாட்சித் தன்மையிலேயே நடந்துகொண்டிருக்கிறது. அப்படி ஒற்றையாட்சித் தன்மையிலே இயங்குகின்ற காரணத்தால்தான் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறோம்.

இன்றைக்கு நம்முடைய அரசியல் அமைப்புச் சட்டத்திலே கூறி இருக் கின்ற அடிப்படைத் தன்மைகள், ஒதுக்கப்பட்டிருக்கிற அதிகாரங்கள் இவற்றை எல்லாம் எடுத்து கணித்துப் பார்த்தால் கூட, மத்திய அரசுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிற அதிகாரங்களைப் பார்த்தால் கூட, மத்திய அரசு 97 இனங்களைத் தன்னிடம் வைத்துக்கொண்டிருக்கிறது ; அரசியல் அமைப் புச் சட்டத்தின் அடிப்படையில் மாநில அரசுக்கு 65 இனங்கள் ஒதுக்கப் பட்டிருக்கின்றன. பொதுப் பட்டியலில் 47 இனங்கள் இருக்கின்றன. எஞ்சியவை மத்திய அரசாங்கத்தினிடமே இருக்க வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

அமெரிக்கா போன்ற நாடுகளை எடுத்துக்கொண்டால் அங்கே கூட்டாட்சி அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி எல்லா அதிகாரங்களையும் பெற்றிருக் கின்றன என்பது மட்டுமல்ல ; குறிப்பிட்ட அதிகாரத்தை மத்திய அரசுக்குக்

கொடுத்துவிட்டு, மற்ற அதிகாரங்களை மாநில அரசுகளே எடுத்துக்கொண்டிருக்கின்றன. எஞ்சிய அதிகாரங்கள் மாநிலங்களையே சேர்ந்தவை என்று வைக்கப்பட்டிருக்கிறது.

திருமதி த. ந. அனந்தநாயகி : சார், பாயின்ட் ஆப் ஆர்டர். நம்முடைய அரசியல் சட்டத்தில் ரொம்ப விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. யூனியன் லிஸ்ட், ஸ்டேட் லிஸ்ட், கன்கரண்ட் லிஸ்ட் என்று மூன்று பிரிவுகளில் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ரெசுடுவரி பவர்ஸ் என்பது மிகவும் குறைவு. மற்ற நாடுகளில் அப்படி அல்ல. ஆகவே, அதற்காக நேரத்தை எடுத்துக்கொள்ளாமல் மற்ற விவகாரங்களைப் பற்றிச் சொன்னால் நல்லது.

மாண்புமிகு பேரவைத் தலைவர் : நீங்கள் பேசும்போது அதைப்பற்றிச் சொல்லிக்கொள்ளுங்கள்.

மாண்புமிகு டாக்டர் இரா. நெடுஞ்செழியன் : அம்மையார் அவர்கள் எனக்கு அறிவுரை கூறவேண்டாம். எப்படிப் பேசவேண்டும் என்பது எனக்குத் தெரியும் ; அவர்கள் அறிவுரை கூறவேண்டாம். எஞ்சிய அதிகாரங்கள் கொஞ்சம் இருந்தால் அந்தக் குறைவான அதிகாரங்களை மத்திய அரசு வைத்துக் கொண்டு என் கஷ்டப்பட வேண்டும் ? அதையும் மாநிலங்களிடமே கொடுத்து விட்டுப்போவதுதானே ? மிகக் குறைந்த அதிகாரங்கள் தானே.

திருமதி த. ந. அனந்தநாயகி : அவை மிகக் குறைந்த அதிகாரங்களாக இருந்தாலும் "நேஷனல் இம்பார்ட்டன்ஸ்" வாய்ந்தவை. தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவைகளாக இருப்பதால் அவைகளை மத்திய அரசாங்கமே வைத்துக்கொண்டிருக்கிறது ; மாநிலங்களுக்குக் கொடுக்க முடியாது.

மாண்புமிகு டாக்டர் இரா. நெடுஞ்செழியன் : எந்த எந்த வகையிலே அவை தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவை என்று விபரமாகச் சொன்னால் நன்றாக இருக்கும். எஞ்சிய அதிகாரங்கள் என்று சொல்லும்போது இப்போது இருப்பவை மட்டுமல்ல ; புதிது புதிதாக வருகின்றவைகளும் அந்தப் பட்டியலில்தான் சேரும். அம்மையார் அவர்களுடைய கருத்து அப்படிப்பட்டதாக இருக்கலாம், அவர்களுடைய கட்சியின் கருத்து அப்படி இருக்கலாம். அவர்களுடைய கருத்து இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தை மாற்ற வேண்டாமென்று சொல்வதாக இருக்கலாம். அது அவர்களுடைய கொள்கை.

நாங்கள் எஞ்சிய அதிகாரங்கள் மாநிலங்களுக்கு வர வேண்டுமென்று சொல்கிறோம். அதற்கு எடுத்துக்காட்டு உண்டா என்றால், உண்டு.

மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை
மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம்
திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[டாக்டர் இரா. நெடுஞ்செழியன்]

[1974 ஏப்ரல் 19

அமெரிக்கா இருக்கிறது. ரஷியா இருக்கிறது. உலகத்திலே கூட்டாட்சி நடத்துகின்ற பெரிய நாடுகள் இந்த இரண்டும். சிறிய சிறிய நாடுகள் பல இருந்தாலும் உலக வல்லமை பெற்ற நாடுகள் இந்த இரண்டுந்தான்.

யுனைட்டெட் ஸ்டேட்ஸ் ஆப் அமெரிக்கா, யூனியன் ஆப் சோவியத் சோசலிஸ்ட் ரிப்பப்ளிக்—இந்த இரண்டும் மிகப்பெரிய கூட்டாட்சி நாடுகள். கூட்டாட்சி முறையில் அமைந்திருப்பதோடு மட்டுமல்லாமல் உலக வல்லமை வாய்ந்த நாடுகளாகவும் இருக்கின்றன. அந்த நாடுகளின் வலிமை அதனால் குன்றிவிடவில்லை. அதற்கு மாறாக உலகிலேயே வலிமை மிக்க நாடுகளாக விளங்குகின்றன. கூட்டாட்சியை ஏற்றுக்கொண்டிருக்கிற இந்த இரண்டு நாடுகளும் கூட்டாட்சிக் கருத்துக்களுக்கு மதிப்புத் தந்து அரசியல் சட்டத்தை உருவாக்கியிருக்கின்றன.

திரு எ. சுப்பிரமணியம் : மாண்புமிகு அமைச்சரவர்கள் அமெரிக்காவையும், ரஷியாவையும் சுட்டிக்காட்டுகிறார்கள். ரஷியாவில் கான்ஸ்டிட்யூஷனில்தான் அப்படிச் சொல்லியிருக்கிறதே தவிர, நடைமுறையில் எந்தவிதமான அதிகாரங்களும் கொடுக்கப்படவில்லை. அமெரிக்கா ஒரு "பெடரல்" கவர்ன்மெண்டாக இருந்தாலும் "லா அண்டு ஆர்டர்" பிரச்சினை மத்தியில்தான் இருக்கிறது ; பிரித்துக்கொடுக்கப்படவில்லை.

மாண்புமிகு டாக்டர் இரா. நெடுஞ்செழியன் : அங்கே இருக்கின்ற அரசியல் சட்டத்தைப்பற்றி நான் குறிப்பிடுகிறேன். அவர்கள் உரிமையை நிலைநாட்ட அவர்களுக்கு உரிமை இருக்கிறது. ரஷியாவை ரிப்பப்ளிக், குடியரசு என்றுதான் அழைக்கிறார்கள். இங்கே மாநிலம் என்று அழைக்கிறோம். இங்கே தனித்தனியாக மாநிலம் என்ற அமைப்பு இருக்கிறதே தவிர அதற்கான அதிகாரங்கள் இல்லை.

ஆனால், அமெரிக்காவிலும், ரஷியாவிலும் பிரிந்துபோகிற உரிமையையும் பெற்றிருக்கிறார்கள். அரசியல் சட்டத்தை அந்த வகையிலே அமைத்திருக்கிறார்கள். அமெரிக்காவில் தனித் தனி மாநிலங்களாக வைத்து, அவைகளுக்குப் போதுமான அதிகாரங்களையும் கொடுத்திருக்கிறார்கள். அதனால் அது வலுவிழந்துவிடவில்லை. உலக நாடுகளிலே வல்லமை மிக்க ஒரு நாடாகத்தான் விளங்குகிறது. அதைப்போலவே ரஷியாவும் விளங்குகிறது.

நமது நாட்டில், 97 இனங்கள் மத்திய அரசிடம் இருந்தாலும் 65 இனங்கள் மாநில அரசுகளுக்கு இருந்தாலும், பொதுப்பட்டியலில் 47 இனங்கள் இருந்தாலும், பொதுப்பட்டியலில் உள்ள இனங்கள் எல்லாம் மத்திய அரசின் கட்டுப்பாட்டிலேதான் இருக்கின்றன.

அதுமட்டுமல்ல, மாநில இனங்களாக 65 இனங்களை வைத்திருந்தாலும், மத்திய அரசு விரும்பினால் ஒருசில அதிகாரங்களை மட்டுமல்ல, எந்த

**மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

*[டாக்டர் இரா. நெடுஞ்செழியன்]*

*1974 ஏப்ரல் 19]*

நேரத்திலும் எந்த அதிகாரத்தை வேண்டுமானாலும்—எல்லா அதிகாரத்தையுமே கூட அவர்கள் எடுத்துக் கொள்வதற்கு உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது நம்முடைய அரசியல் சட்டத்தில்.

பொதுப்பட்டியலிலே 47 இனங்கள் இருந்தாலும், மத்திய அரசுக்கும் மாநில அரசுக்கும் பொதுவான ஒரு கட்டத்தில், மாநில அரசு ஒரு சட்டத்தை நிறைவேற்றியிருந்தாலும், மத்திய அரசு அதுபற்றி ஒரு சட்டத்தை நிறைவேற்றினால் மத்திய அரசின் சட்டம்தான் நிற்கும்; நம்முடைய சட்டம் நிற்காது. அது மட்டுமல்லாமல் மாநில அரசுக்கு என்று ஒதுக்கப்பட்டிருக்கின்ற 65 இனங்களில் எந்த நேரத்தில் வேண்டுமென்றாலும் எந்த அதிகாரத்தை வேண்டுமென்றாலும் அவர்கள் எடுத்துக் கொள்ளலாம்.

இந்தமாநிலத்தை 6 மாதங்கள், 6 மாதங்கள் என்று சொல்லி காலத்தை நீட்டிக்கொண்டே போய் அவர்களே—மத்திய அரசாங்கமே ஆண்டு கொள்ளலாம். கொடுக்கப்பட்ட அதிகாரங்களையும் எடுத்துக்கொள்ளலாம். பொதுப்பட்டியலில் இருக்கின்ற 47 இனங்களில், அவர்கள் கைதான் ஓங்கும். அவர்கள் முடிவுப்படிதான் நடக்கும். இந்தப் போக்கு ஒற்றையாட்சி அடிப்படையில்தான் இருக்கிறதே தவிர, கூட்டாட்சி முறையில் இல்லை. ஆகவேதான் நாங்கள் கோருகிறோம், "மாநிலங்களில் சுயாட்சி, மத்தியிலே கூட்டாட்சி" என்று. பெடரல் கவர்ன்மென்ட் என்று சொல்லப்படுகிறதே தவிர, அதன் அடிப்படையில் அரசியல் அமைப்புச் சட்டம் அமையவில்லை. அதற்கு உண்மையான உருவத்தைக் கொடுக்கவே, இந்தக் கருத்தை நாங்கள் வலியுறுத்துகிறோம்; அதற்காகத்தான் இந்தத் தீர்மானத்தைக் கொண்டுவந்திருக்கிறோம்.

அதுமட்டுமல்ல; இந்தியாவைப் பொறுத்தவரையில் அரசியலிலே ஒரு ஒருமைப்பாடு ஏற்பட்டதே பிரிட்டிஷ் ஆட்சி வந்தபிறகுதான், அவர்களுடைய முயற்சியால்தான், என்று பண்டிட் ஜவஹர்லால் நேரு அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதற்கு முன்னால் தனித் தனி ஆட்சியாகத்தான் இருந்தது. 1600-வது ஆண்டில் கிழக்கிந்திய கம்பெனி வியாபாரத்தின் பொருட்டு இந்தியாவிற்குள் நுழைந்தது. அவர்களுடைய வியாபாரம் படிப்படியாக வளர்ந்து, பிறகு நிரந்தரமாக இங்கேயே இருக்க முயற்சி செய்தார்கள். அதன் காரணமாக முதலில் சென்னையிலே அவர்கள் பலத்தைப் பெருக்கிக் கொண்டார்கள். அதன் பிறகு பம்பாய், அதன் பிறகு கல்கத்தா. இந்த மூன்று இடங்களையும் கிழக்கிந்திய கம்பெனியார் வசமாக்கிக்கொண்டார்கள். 1600-வது ஆண்டில் இந்த கிழக்கிந்திய கம்பெனி வியாபாரத்தைத் தொடங்கி, மெல்ல மெல்ல பல இடங்களைப் பிடிக்கத் திட்டமிட்டார்கள்.

முதலில் சோப்பு, சீப்பு, கண்ணாடி வியாபாரத்தை ஆரம்பித்து, அதன் பின்னால் துப்பாக்கி வீரர்களையும் வியாபாரிகள் என்ற பெயரில் அழைத்து வந்தார்கள். அவர்களைக் கொண்டு இங்கே பல இடங்களைப் பிடித்துக்

கொண்டார்கள். சென்னையிலே ஒரு கவர்னரை நியமித்தார்கள், பம்பாயில் ஒரு கவர்னரை நியமித்தார்கள்; கல்கத்தாவில் ஒரு கவர்னரை நியமித்தார்கள், அதன் பின்னால் கல்கத்தாவில் இருந்த கவர்னரை கவர்னர்-ஜெனரல் ஆக்கி, அவருடைய அனுமதியைப் பெற்று மற்ற கவர்னர்கள் செயல்படும் முறையை ஏற்படுத்தினார்கள். முதலில் மூன்று இடங்களும் ஒன்றுக்கொன்று தொடர்பு இல்லாமல், தனித் தனியாகத்தான் இருந்தன. ஒவ்வொன்றும் நேரடி கண்காணிப்பிலே தான் இருந்தன. 1773-ம் ஆண்டிலேதான் இப்படிப்பட்ட ஒரு மத்திய அமைப்பு ஏற்படுத்தப்பட்டது.

சென்னையில் இருக்கின்ற கவர்னரும், பம்பாயில் இருக்கின்ற கவர்னரும் கல்கத்தாவில் இருக்கின்ற கவர்னர்-ஜெனரலின் அனுமதியின்படி நடக்க வேண்டுமென்று ஒரு மத்திய அமைப்பை உருவாக்கினார்கள். 1773-ல்தான் இந்த மத்திய அமைப்பு உருவாக்கப்பட்டது. அதன் பிறகு இந்த மாநிலங்களுக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரங்கள் கூட மெல்ல மெல்ல அந்தக் கம்பெனியால் வாங்கப்பட்டது.

கடைசியில் கல்கத்தாவில் இருக்கின்ற கவர்னர்-ஜெனரலிடம் எல்லா அதிகாரங்களும் போய் சேரக்கூடிய நிலைமை ஏற்பட்டது. நிர்வாக வசதிக்காகத்தான் அவர்கள் இந்தியாவில் பல பிரிவுகளை வைத்திருந்தார்களே தவிர, ஆட்சிமுறை ஒற்றையாட்சி முறையிலேதான் நடைபெற்றுக் கொண்டிருந்தது.

திரு எ. சுப்பிரமணியம்: மாண்புமிகு அமைச்சரவர்கள் சொல்லும் போது, ஒன்றைக் குறிப்பிட்டார்கள். அவர்கள், ஆங்கிலேயர்கள் இங்கே வருகின்றபோது இருந்ததைப்போல இந்த நாடு பல பிரிவுகளாக, பல ஸ்டேட்டுகளாக இருந்து, அவர்கள் இங்கே வருவதற்குக் காரணமாக இருந்த "பாக்கெட்டு"களாக மீண்டும் அமைக்கப்பட வேண்டுமென்று விரும்புகிறார்களா?

மாண்புமிகு டாக்டர் இரா. நெடுஞ்செழியன்: வரலாற்றைப்பற்றி சொல்லவேண்டாமென்று அவர்கள் விரும்புகிறார்களா? நான் வரலாற்றைத் தான் சொல்கிறேன். அந்த நிலை இருக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை. 1773-ல் நாடு எப்படி இருந்தது, 1600-ல் நாடு எப்படி இருந்தது? என்கின்ற வரலாற்றைப் பற்றித்தான் நான் சொல்லிக் கொண்டிருக்கிறேன். அதனால் அதேமாதிரியாக இருக்கவேண்டுமென்ற எண்ணம் எனக்கில்லை. இந்தத் தீர்மானத்திலும் அப்படி நாங்கள் சொல்லவில்லை.

இந்தத் தீர்மானத்திலே தெளிவாக நாங்கள் சொல்லியிருக்கிறோம். இந்தியா ஒரு நாடு. வளர்ந்து வருகிற மாற்றங்கள் காரணமாக 1600-ம் ஆண்டில் இந்த நாடு எப்படி இருந்தது, 1773-ம் ஆண்டில் எப்படி

இருந்தது என்பதற்காகச் சொல்கிறேனே அல்லாமல் அந்த நிலைக்கு மீண்டும் போகவேண்டுமென்று நானும் சொல்லவில்லை ; மாண்புமிகு முதலமைச்சரவர்களும் சொல்லவில்லை.

[முற்பகல் 9-30.]

ஆகவே வரலாற்றைச் சுட்டிக் காட்டக் கூடாதா? பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களே பலமுறை சொல்லியிருக்கிறார்கள். தனித் தனியாக இருந்த ஆட்சி முறைகள் துப்பாக்கி முனையில் ஒற்றை ஆட்சி முறைக்கு வந்தது. கவர்னருக்கு அடங்கி நடக்க வேண்டும், கவர்னர்கள் கவர்னர்-ஜெனரலுக்கு அடங்கி நடக்க வேண்டும், அவர் செக்ரடரி ஆப் ஸ்டேட்சுக்கு அடங்கி நடக்கவேண்டும், அவர் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு அடங்கி நடக்க வேண்டும் என்ற நிலைமை உருவாயிற்று. அதையும் எதிர்த்தார்கள்.

எதற்காகச் சொல்கிறேன் என்றால் மாநில சுயாட்சி பற்றிய எண்ணம் இப்போது ஏற்பட்டது அல்ல. நாளுக்கு நாள் அவ்வப்போது இருந்த நிலைமைகளையொட்டியே வளர்ந்து வந்துகொண்டிருக்கிற எண்ணமாகும்.

மத்தியில் அதிகாரங்கள் குவிந்திருக்கின்றன என்பதை அப்போதே பலர் எதிர்த்த காரணத்தினால்தான் 1909-இல் மின்டோ மார்லி சீர் திருத்தம் வந்தது. எல்லா அதிகாரங்களும் மத்தியில் குவிக்கப்படாது, எந்தெந்த அதிகாரங்கள் மாநிலங்களுக்குப் பிரித்து வழங்கப்படலாம் என்பது பற்றி மின்டோ மார்லி சீர்திருத்தம் என்று வந்தது.

அதையும் அரசியல் தலைவர்கள் எதிர்த்த காரணத்தினால் 1916–ஆம் வருடம் செம்ஸ்போர்டு சீர்திருத்தம் வந்தது.

இதுவும் மாநிலங்களுக்கு உண்மையான சுயாட்சியை அளிக்காது என்று காங்கிரஸ் கட்சியின் சார்பிலும், மற்றவர்கள் சார்பிலும் எடுத்துக் காட்டி எதிர்க்கப்பட்டது. மாநிலங்கள் என்பதே பிரிட்டிஷ்காரர்கள் துப்பாக்கி முனையில் எந்த எந்தப் பகுதிகளை முதலில் பிடித்துக்கொண்டார்களோ அவர்கள் பிடித்துக்கொண்டுவந்த அடிப்படையில் அமைந்ததாகும் — ஆகையால் இந்த மாநிலங்கள் எல்லாம் திரும்ப மொழிவழியில் மாற்றி அமைக்கப்படவேண்டும் — அப்படி மாநிலங்கள் அமைக்கப்படுகிறபோதே— மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்களும் வழங்கப்பட வேண்டும் என்பதாக காங்கிரஸ் மகாசபை அப்போதே தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது.

இது ஏதோ முதன் முதலாக டாக்டர் கலைஞர் அவர்களாலோ, திராவிட முன்னேற்றக்கழகத்தினாலோ கொண்டுவரப்பட்டிருக்கக் கூடிய ஒன்றல்ல என்பதை விளக்குவதற்காகவே இந்த வரலாற்று முறைகளைக் காட்ட விரும்புகிறேன்.

### மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[டாக்டர் இரா. நெடுஞ்செழியன்]

[1974 ஏப்ரல் 19

அதற்குப் பிறகுதான் ஒரு படி மேலே, மாநிலங்களுக்கு கொஞ்சம் அதிக அதிகாரங்களைத் தரும் வகையில் சைமன் கமிஷன் அறிக்கை வந்தது. இப்படி படிப்படியாக மத்திய அரசின் அதிகாரங்களைக் குறைத்து மாநில அரசுகளின் அதிகாரங்களை பிரிட்டிஷார் கூட்டிவந்துள்ளார்கள்.

1935-வது ஆண்டு சட்டப்படிகூட கவர்னருக்கு அதிக அதிகாரம் கொடுத்திருக்கிறார்கள். சட்டமன்றத்தில் நிறைவேற்றினாலும் கூட கவர்னர் கையொப்பமிட்டால்தான் நடைமுறைக்கு வரும், கவர்னர் அதனை நிராகரிக்கவும் செய்யலாம், ஆகவே இதையும் ஏற்றுக்கொள்வதற்கு இல்லை என்று சொல்லியிருக்கிறார்கள்.

1935-வது ஆண்டு சட்டப்படி 1937-ல் காங்கிரஸ் மந்திரிசபை வந்திருப்பதைக் காணலாம். அதற்குப் பிறகு உலகப் பெரும்போர் ஏற்பட்டது.

இறுதியாக 1946-ல் பிரிட்டிஷ் மந்திரி சபை வழங்கிய திட்டத்திலே மேலும் மத்திய அரசின் அதிகாரங்களைக் குறைத்து, பாதுகாப்பு, போக்குவரத்து, அயல் நாட்டுறவு ஆகிய மூன்று அதிகாரங்களை மட்டும் மத்திய அரசுக்கு விட்டு — மிச்ச அதிகாரங்கள் உள்ளிட்ட இதர எல்லா அதிகாரங்களையும் மாநிலங்களுக்கு உரிமையாக்கினார்கள்.

1946-லே இங்கிலாந்து அமைச்சரவை தூதுக்குழு மத்தியிலே சமஷ்டி—மாநிலத்திலே சுயாட்சி என்கிற அடிப்படையில்தான் ஒரு திட்டம் வருத்து — பாகிஸ்தான் தன் கோரிக்கையை விட்டுவிட வேண்டும் என்றார்கள். ஜின்னாவும் ஒப்புக் கொண்டார். முதலில் படேல் எதிர்ப்புத் தெரிவித்தார், அண்ணல் காந்தியார் அவர்கள் அதை ஆதரித்து, ஏற்றுக்கொண்ட பிறகு படேலும் ஒப்புக்கொண்டார். முஸ்லிம் லீக் கட்சியும் ஏற்றுக்கொள்ளக்கூடிய சூழ்நிலை வந்தது.

இந்தக் குழுவின் கருத்து பின்னால் மாற்றப்படுமா என்று பண்டித நேரு அவர்களிடம் நிருபர்கள் கேட்டபோது, நேரு, "காலத்திற்கு ஏற்ப மாற்றப்பட்டாலும் படலாம்" என்று கூறியதன் காரணமாகத்தான் ஜின்னாவுக்கு அச்சம் ஏற்பட்டது. அந்தத் திட்டத்தை ஒப்புக்கொள்வதற்கில்லை—எனக்குப் பாகிஸ்தான்தான் வேண்டுமென்று சொன்னார்கள் என்பதைக் காண்கிறோம்.

மத்தியில் கூட்டாட்சி—மாநிலத்தில் சுயாட்சி என்பதாக 1946-ஆம் ஆண்டு இங்கிலாந்து அமைச்சரவை தூதுக்குழு ஒரு திட்டத்தை சமர்ப்பித்த போது கூட காங்கிரஸ் மகாசபை என்ன கருத்துக்களைக் கொண்டிருந்தது என்பதை நாம் தெளிவாகக் காண்கிறோம். மத்தியில் கூட்டாட்சி—மாநிலத்தில் சுயாட்சி என்கிற தத்துவத்தை திராவிட முன்னேற்றக் கழகம் கொண்டது மட்டும்அல்ல. பல்வேறு காலகட்டத்தில்—பல்வேறு அரசியல் கட்சிகளாலேயே உருவாக்கப்பட்ட கருத்தாகும்.

**மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

[டாக்டர் இரா. நெடுஞ்செழியன்]

[1974 ஏப்ரல் 19

காங்கிரஸ் ஸ்தாபனமே 1938-ல் அரிபுராவில் நிறைவேற்றிய தீர்மானத்தில், "சுதந்திரப் பிரதேசங்கள் ஒன்று கலந்த சமஷ்டியே காங்கிரஸ் மகாசபையின் லட்சியம்" என்று கூறியிருக்கிறார்கள். இந்தக் கருத்தை காந்தியடிகளும் விடுதலை பெறுவதற்கு முன்னரேயே பல சந்தர்ப்பங்களில் கூறிவந்திருக்கிறார்கள். "இந்தியா முழுவதற்கும் எந்த விதமான பரிபூரண சுயேச்சை அரசியல் வகுக்கப்படுமோ அதுபோன்ற அரசியலையே மாகாணங்களுக்கும் அளிக்கப்படுவதை நான் வரவேற்பேன். பரிபூரண சுயேச்சைக்கு நான் சொல்கிற இலக்கணப்படி பார்த்தால் இதில் தவறு இல்லை" என்று காந்தியடிகளே கூறிவந்திருக்கிறார்கள்.

அதேபோல 2—4—1972-ல் டில்லியில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டியின் தீர்மானத்திலும் கூட "ஒரு குறிப்பிட்ட பிரதேசத்தில் வாழும் மக்களை அவர்கள் விருப்பத்திற்கு மாறாக இந்திய யூனியனில் இருக்கும்படிக் கட்டாயப்படுத்த காங்கிரஸ் கமிட்டி விரும்பவில்லை. விரும்பாத மாநிலங்களுக்கு இந்திய யூனியனிலிருந்து பிரிந்து வாழவும் உரிமையுண்டு" என்ற தீர்மானத்தையும் நிறைவேற்றியிருக்கிறார்கள்.

அதுமட்டுமல்ல, இந்த உறுதிமொழியை ஒரு அங்கமாகக் கொண்ட அரசியல் தீர்மானத்தை அரசியல் நிர்ணய மன்றத்தில் முன்மொழிந்து பிரதமர் நேரு அவர்கள் பேசும்போது கூட, "நாம் உருவாக்கும் இந்த அரசியல் அமைப்பிலே உறுப்புகள்—மாநிலங்கள்—சுய ஆட்சி பெற்ற பகுதிகளாகத் திகழும், உறுப்புகளிடத்திலேயே எஞ்சிய அதிகாரங்கள் தங்கி நிற்கும். அத்தகைய உறுப்புகளிடத்திலேயே அரசின் முழு அதிகாரமும், நிர்வாகப் பொறுப்பும் பொலிவுற்று விளங்கும். யூனியனிடம் உறுப்புகள் தாமே விரும்பிக் கொடுத்துள்ள அதிகாரங்களையும், அத்தகைய அதிகாரங்களில் தொக்கி நிற்கின்ற—அன்றி அவைகளின் விளைவுகளாக வுள்ள பொறுப்புக்களைத் தவிர ஏனைய அதிகாரங்கள் எல்லாம் உறுப்புகளையே சாரும்.

இந்த அடிப்படை லட்சியங்களை இந்தியாவில் யாரும் மறுக்கவில்லை. யாரும் மறுக்கவும் கூடாது. நாம் அந்த லட்சியங்களை ஏற்றுக்கொள்கிறோம். அந்த லட்சியங்களில் ஊன்றி நிற்கிறோம். லட்சியத் தீர்மானம் வெறும் தீர்மானம் மட்டுமல்ல. அது ஒரு லட்சிய முழக்கம். நமது உறுதியான முடிவு. நாம் எடுத்துக்கொண்ட சபதம். நிறைவேற்ற வேண்டிய பிரதிக்ஞை. நம்முடைய வாழ்க்கையின் சமர்ப்பணம்" என்றெல்லாம் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

அதுமட்டுமல்ல, அப்போதே திரு. ராஜாஜி அவர்கள் "காந்தி—ஜின்னா பேச்சு" என்ற தொகுப்பு நூலுக்கு முன்னுரை எழுதுகிற தன்மையில் சுதந்திர இந்தியாவில் மாநிலங்களுக்கு வழங்கவேண்டிய சுதந்திரம் பற்றி எடுத்துக் கூறியிருக்கிறார்கள்.

மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை
மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம்
திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[டாக்டர் இரா. நெடுஞ்செழியன்] [1974 ஏப்ரல் 19

'நாடு முழுவதும் மத்திய அரசாங்கத்தாரால் நடத்தப்பட முடியாது அரசாட்சியின் வேலைகளையும், அதிகாரங்களையும் இரண்டாகப் பிரித்து ஒரு சில வேலைகளையே மத்திய அரசாங்கத்தின் கையில் கொடுக்க முடியும். மற்ற அரசியல் வேலைகளெல்லாம் மாகாண அரசாங்கத்தின் பூரண ஆதிக்கத்தில் இருந்தே தீரும். மத்திய அரசாங்கத்தின் வேலைகளும் அதிகாரங்களும் வேறு; மாகாண அரசாங்கத்தின் வேலைகளும், அதிகாரங்களும் வேறு. அன்னியர்களின் ஆக்கிரமிப்பைத் தடுத்து நாட்டைப் பாதுகாக்க வேண்டிய இராணுவ ஏற்பாடுகள், வெளிநாட்டு வியாபார நியமங்கள், நாணயச் செலவாணி விஷயங்கள், ரயில் முதலிய போக்குவரத்துச் சாதனங்கள் இவையும், இவை போன்ற வேறு விஷயங்களும் மத்திய அரசாங்கத்தின் கீழ் நடைபெறும். மற்ற விஷயங்கள் அனைத்தையும் பூரண அதிகாரங்களுடன்மாகாணக் குடியரசு சர்க்கார் நடத்தும். மாகாண ஆட்சியின் மேல் மத்திய சர்க்காருக்கு யாதொருவித அப்பீல் பாத்தியமும் கிடையாது. மாகாண சர்க்கார் செய்த காரியங்களையாவது சட்டங்களையாவது மாற்றும் அதிகாரம் மத்திய அரசாங்கத்துக்குக் கிடையாது" என்று அந்த காந்தி-ஜின்னா பேச்சு வெளியீட்டிறகு முன்னுரை வழங்கப்பட்டு ராஜாஜி அவர்களே தெளிவுபட எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அது மட்டுமல்லாமல், அதற்கு முன்னாலே, "டிஸ்கவரி ஆப் இந்தியா" என்ற புத்தகத்தில் பண்டித நேரு அவர்கள் குறிப்பிட்டிருப்பதாவது .—

"It may be desirable to fix a period, say, 10 years after the establishment of the free Indian State, at the end of which the right to secede may be exercised through proper constitutional process, and in accordance with the clearly expressed will of the inhabitants of the area concerned."

இந்தியா விடுதலை பெற்று 10 ஆண்டுகளுக்குப் பிறகு ஒரு பகுதியில் வாழ்கின்ற மக்கள் விரும்பினால், அந்தப் பகுதி தனியாகப் பிரிந்து போவதற்கு விரும்புகின்ற உரிமை வழங்கப்படலாம் என்று பண்டித நேரு அவர்கள் அப்பொழுது குறிப்பிட்டிருக்கிறார்கள்.

நாம் அந்த அளவுக்குக் கூட போகவில்லை. நாம் பிரிந்து போகிற உரிமையோடு கூடிய சுயாட்சி அமைய வேண்டுமென்று கேட்கவில்லை. நாம் தனி ஆட்சி கேட்கவில்லை. தன்னாட்சிதான் கேட்கிறோம். மாநில சுயாட்சி, மத்தியில் கூட்டாட்சி, குறிப்பிட்ட சில அதிகாரங்கள் மத்திய அரசாங்கத்தினிடத்தில் விடப்பட்டு, மத்திய அரசாங்க அதிகாரங்கள் மாநிலங்களுக்கு விடப்படாததன் மூலமாக, 25 ஆண்டு காலமாக பல சிக்கல்கள் தீர்க்கப்பட முடியாமலிருக்கின்றன.

இந்த நாடு வளர்ச்சி பெறுதிருப்பதற்குக் காரணம் இங்கு அறிவுடையவர்கள், ஆற்றலுடையவர்கள், திறமையுடையவர்கள் இல்லை என்பதல்ல. நாம் ஏற்படுத்தியிருக்கிற அரசியல் அமைப்பில் ஏற்பட்டி

## மாநில சுயாட்சி பற்றியும், இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துக்களை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[டாக்டர் இரா. நெடுஞ்செழியன்]

1974 ஏப்ரல் 19]

ருக்கிற சிக்கல்களும், கை விலங்கிட்டு கட்டப்பட்டிருக்கிற சூழ்நிலையும் தான் எந்த ஒரு மாநிலமும் தன்னிச்சையாக நடந்து, அந்த மாநிலத்தின் மக்களுடைய வாழ்வை உயர்த்தவும், அதனுடைய வசதிவாய்ப்புகளைப் பெருக்கவும் இடம் வழங்க முடியாமலிருக்கின்ற காரணத்தினால் தான் மாநில சுயாட்சி வேண்டுமென்பதை நாம் வற்புறுத்தி வருகின்றோம்.

அந்த மாநில சுயாட்சி ஏற்பட வேண்டுமென்று பி.சி. ராய் அவர்கள் வற்புறுத்தி வந்திருக்கிறார்கள். வீரேந்திரப் பட்டீல், மைசூர் முதலமைச்சர் அவர்கள் சுட்டிக்காட்டியிருக்கிறார்கள். ராஜாஜி போன்றவர்களும் குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்தக் கருத்துக்களெல்லாம் முன்னால் ஏற்பட்ட தீர்மானத்தின் அடிப்படையில் இருந்தன.

'ஆனால் திடீரென்று 1947-ல் பாகிஸ்தான் பிரிவினை ஏற்பட்டபொழுது, அந்த பிரிவினையை அடிப்படையாக வைத்துக்கொண்டு, 1947-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் வரையில் மாநில சுயாட்சி, மத்தியில் கூட்டாட்சி' அமைய வேண்டும், என்று அவர்கள் வைத்துக்கொண்டிருந்த கொள்கையை அடியோடு மாற்றிக் கொண்டு, அதற்குப் பிறகு அங்கே மத்தியில் வலுவான ஒரு மத்தியரசு வேண்டும், அதிகாரங்கள் குவிக்கப்பட்ட மத்திய ஆட்சி வேண்டும் என்கிற அளவுக்கு அந்த நிலைமைகளைக் கொண்டு வந்து சேர்த்தார்கள்.

இதனைத் தெளிவுபட எடுத்து, இதற்கு முன்னால் காங்கிரஸ் தலைவர்களின் மூலமாகவும், மற்றவர்களின் மூலமாகவும் என்ன கருத்துக்கள் சொல்லப்பட்டு வந்தனவோ, அந்தக் கருத்துக்களுக்கெல்லாம், மாறுபட்டு,அரசியல் நிர்ணய சட்டம் உருவாகத் தொடங்கிய காலத்திலிருந்த கருத்துக்கு மாறுபட்டு, அதன் நகல் திட்டம் என்று தந்த கருத்துக்கள், அந்தக் கருத்துக்களுக்கு நேர்மாறாக, முஸ்லீம் லீக் சேராததின் காரணமாக, முஸ்லீம் லீக் வந்து சேருகிற காலம் வரை, விவாதத்தைக் கூட ஒத்திப்போட்டு நடந்த முறையில், இந்தியாவும் இரண்டாகப் பிரிய வேண்டுமென்ற நிலை வந்தவுடன், அதற்கு முன்னால் சொல்லப்பட்ட கருத்துக்கள், கொள்கைகள், குறிக்கோள்களை விட்டுவிட்டு,மத்தியஅரசாங்கம் ஒரு ஒற்றை ஆட்சி முறையைக் கொண்டுவந்தார்கள் என்பதை நாம் தெளிவுபடக் காண்கின்றோம். ஆக அந்த ஏற்பாடு என்பது அதே கொள்கை. அதே நிலைமைகள், அதற்கு முன்னால் சொல்லப்பட்ட கொள்கை அடிப்படையிலே மாநில சுயாட்சி வழங்கப்பட்டு, மத்தியில் கூட்டாட்சி வழங்கப்படுகிற அளவுக்கு 1950-ல் நிறைவேற்றப்பட்ட அரசியல் அமைப்புச் சட்டம் நிறைவேறியிருக்குமானால் இந்தியாவில் இவ்வளவு பெரிய சிக்கல்கள், இப்படிப்பட்ட நிலைமைகள் ஏற்பட்டிருக்க வழி இருந்திருக்காது.

அப்போது அந்த மாற்றம் செய்ததன் காரணமாக இப்பொழுது பல்வேறு சிக்கல்கள், பிரச்சினைகள், கொடுமைகளை நாம் அனுபவிக்க வேண்டியிருக்கிறது. இதை நான் மட்டும் சொல்லவில்லை

பெரும் தலைவர்கள் சுயாட்சிக் கருத்துக்களைக் கொண்டிருக்கிறார்கள், ஒரு 15 ஆண்டுகளுக்கு முன்பு மாநில சுயாட்சிக்கு ஆதரவாக தலைவர்கள் சொன்ன கருத்துக்களின் அளவை விட, ஒரு 10 ஆண்டு காலத்தின் அளவை விட, இப்பொழுது பெரியவர்கள் பலர் சொல்லுகின்றார்கள்.

ஆக இந்தியாவினுடைய எதிர்கால வாழ்வில் அக்கறை கொண்டவர்கள் பலரும் இதை வற்புறுத்தி, எல்லா மாநிலங்களுக்கும் எடுத்துச் சொல்லுகின்ற நிலைமையை நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

1970-ம் ஆண்டு மே திங்களில் நடைபெற்ற மத்திய-மாநில உறவு பற்றிய அந்த மாநாட்டில் பேசுகின்ற கிருபாளனி கூட—அவர்கள் நாட்டுப் பிரிவினை எண்ணத்தை அடிப்படையில் கொண்டிருப்பவர் என்று யாரும் கூற முடியாது—அவர்கள் காங்கிரஸ் கட்சியில் சிறந்து விளங்கியவர். எல்லோராலும் மதிக்கப்படுகின்ற பெரும் தலைவர்கள், மூத்த தலைவர்கள், வரிசையில் ஒருவராக இருக்கின்றவர்—அவர்களே குறிப்பிட்டிருக்கிறார்கள்.

'You are also discussing State-Centre relations. That also depends upon the conventions we establish. We in the Constituent Assembly purposely and deliberately made the Centre strong.'

அரசியல் அமைப்பு அவையில் இருந்த நாமெல்லாம் வேண்டுமென்றே மத்திய அரசை வலுவுள்ளதாக ஆக்கினோம்.

But we did not want the State to be weak.

ஆனால் மாநிலங்கள் பலவீனமாக இருக்க வேண்டுமென்று விரும்பவில்லை.

What has happened is that the Centre has retained its strength but it has weakened the States.

என்ன விளைவுகள் ஏற்பட்டதென்றால் மத்திய அரசாங்கம் வலுவைக் காப்பாற்றிக்கொண்டுவிட்டது. வலுவை ஏற்றிக்கொண்டுவிட்டது. ஆனால் மாநிலங்களெல்லாம் பலவீனப்படுத்தப்பட்டு விட்டன.

They have become just like Municipalities.

மாநிலங்களெல்லாம் நகராட்சிகளைப் போன்று ஆகிவிட்டன.

All the expanding sources of Revenue are with the Centre.

விரிவுபடுத்தப்பட்ட நிதி ஆதாரங்களெல்லாம் மத்திய அரசாங்கத்திற்கு கொண்டு செல்லப்பட்டன.

1974 ஏப்ரல் 19]

The states have no expanding revenue and they are being used as pawns.

ஆகவே விரிவுபடுத்தப்பட்ட நிதி ஆதாரங்கள் மாநிலங்களின் அமைப்பில் இல்லை என்று கிருபாளனி அவர்கள் எடுத்துத் தெரிவித்திருக்கிறார்கள். இதை அப்போதுதான் தெரிவித்தாரா என்றால் இல்லை.

சுயராஜ்யத்திற்கு முன்பு இந்தக் கருத்து இருந்தது. நாட்டுப் பிரிவினை ஏற்பட்டதால் தலைவர்கள் அந்தக் கருத்துக்களை மாற்றிக் கொண்டு விட்டார்கள். 1947-க்குப் பிறகு அரசியல் சட்டத்தை மாற்ற 1950-ல் இப்படிப்பட்ட ஒரு சட்டம் கொண்டு வரவேண்டும் என்பதை மாண்புமிகு எதிர்க்கட்சி உறுப்பினர்கள் வாதிடுவார்கள். நான் சொல்ல வேண்டியது 1970-ல் கிருபாளனி சொல்லியிருப்பது, 1957-ல் ராஜாஜி சொன்ன கருத்துக்கள், அவரே கூட இருந்து அத்தகைய நிலைமைகளின் அடிப்படையில் இருந்து 1957-லே சொல்லப்பட்ட கருத்துக்கள் நிறைவேறாமல் கிட்டத்தட்ட 17 ஆண்டுகள் இந்திய அரசின் அமைப்பையெல்லாம் பார்த்த பிறகு, 7 ஆண்டுகளுக்குப் பிறகு நாட்டு மக்களின் பேதாபேதங்களையும், பரஸ்பர விருப்பு வெறுப்புகளையும் நம்பிக்கைக் குறைவையும் யோசித்துப் பார்த்தால் வெகு தூரத்திலுள்ள கேந்திர ராஜதானியிலிருந்து இந்த அகண்ட பாரத நாட்டின் நிர்வாகம் நடத்த இயலாது என்பது வெட்ட வெளிச்சமாகும்.

தில்லிக்கும், சென்னைக்கும், 1,361 மைல். தில்லிக்கும் கல்கத்தாவுக்கும் 956 மைல். தில்லிக்கும் அஸ்ஸாமுக்குமுள்ள இடைவெளி சொல்லத் தேவையில்லை. அதிகாரத்தைப் பிரித்துக் கொடுத்துப் பிரதேச அரசாங்கங்களுக்குச் சுதந்திரம் தாராளமாகக் கொடுத்துத்தான் தீர வேண்டும் என்பது வெள்ளிடை மலை. பிரதேச ராஜ்யங்களின் அதிகாரம் வரவரத் தேய்ந்துபோய் ஏகபோக கேந்திர ஆட்சி ஒரு விதம் (யூனிட்டரி சென்ட்ரல் கவர்ன்மெண்ட்). பிரதேச ஆட்சிகள் பலம் பெற்ற அவைகள் ஒன்று கூடி சமஷ்டி கேந்திர சர்க்காருக்குக் குறிப்பிட்ட சில பொறுப்புகள் தருவது மற்றொரு வகை (பெடரல் யூனியன்).

பெரிய பாண்டம் செய்து அது உடைந்து போன பின் கவலைப்படுவதைக் காட்டிலும் சிறு பாண்டங்களாகவே செய்து முடிப்பது நலம். பிரதேச ராஜ்யங்களின் அதிகாரங்களையெல்லாம் கேந்திர ஆட்சிக்கு உறிஞ்சிக் கொள்ளும் நடவடிக்கைகள் மிக வேகமாக நடைபெற்று வருகின்றன. இது வருங்காலத்தில் நிலைத்து நிற்க முடியாத ஒரு ஏற்பாடாகும்.

எதிர்காலத்தில் நடக்கப் போவதை உணர்ந்து அதற்குத் தகுந்தவாறு இப்பொழுதிலிருந்து கட்டடம் நிர்மாணிப்பது புத்திசாலித்தனம். அதாவது மத்திய ஆட்சியானது பிரதேச ராஜ்யக் கூட்டாட்சியாக இருக்க வேண்டும். சில இன்றியமையாத விஷயங்களில் தான் மத்திய நிர்வாகம்

நடைபெற வேண்டும். அவை ஒழிந்த மற்ற விஷயங்களில் பிரதேச ராஜ்யங்களுக்குப் பூரண சுதந்திரம் கொடுத்து அந்தப் பொறுப்பை வகிக்கும் தகுதியைப் போற்றி வர வேண்டும்.

தற்போது இதற்கு நேர்மாறாக நடவடிக்கைகள் நடைபெற்று வருகின்றன. வருங் காலத்தில் அரசாட்சி எப்படியிருக்கப் போகிறது என்பதை உணர்ந்து திட்டம் போட வேண்டும். எல்லா வருவாயும் செல்வாக்கும் உறிஞ்சி தில்லியில் சேர்த்துக் கொண்டு பிரதேச சர்க்காரை ஜில்லா போர்டைப் போல் ஆக்கி விடுவது நல்ல அரசியல் திட்டமாகாது என்று சொன்னது எப்பொழுது என்றால், பாகிஸ்தான் பிரிந்தவுடன் ஏற்பட்ட நிலைமையின் காரணமாக மாற்றினோம் என்றால் அதற்குப் பிறகு பல்லாண்டு காலம் இந்திய அரசியலமைப்பு நடைமுறையைப் பார்த்த பிறகு மாபெரும் தலைவர்கள் எடுத்துச் சொன்ன கருத்தைத் தான் நான் இங்கே சுட்டிக் காட்டி இருக்கின்றேன்.

மற்றொன்று சொல்லுகிறார்கள், இப்பொழுது மாநிலங்கள் சுயாட்சி பெற்று, மத்தியில் குறிப்பிட்ட அதிகாரங்கள் ஒப்படைக்கப்பட்டால், மத்திய ஆட்சி பலவீனப்பட்டு விடும் என்று சொல்லுகிறார்கள். மத்திய ஆட்சி பலவீனப்பட்டு, பலவீனமாக இருக்கின்ற மாநிலங்களைப் பார்த்து ஆதிக்கம் செலுத்துகின்ற மத்திய ஆட்சி பலமாக இருக்க முடியாது. மாநிலங்கள் எல்லாம் பலமாக இருந்தால்தான் மத்தியும் பலமாக இருக்க முடியும் என்பதை நாம் நன்றாக உணர வேண்டும்.

அப்படிப் பார்த்தால் மாநில சுயாட்சியைப் பொறுத்த வரையில் மாநிலங்கள் பலமாக இருக்க வேண்டும். மத்தியும் பலமாக இருக்க வேண்டும். அது மட்டுமல்லாமல் மாநில சுயாட்சி பெறுவது மூலம் மத்திய ஆட்சி பலவீனப்பட்டு விடும் என்கிறார்கள். ஒரு ஆட்சி பலமுள்ளதாக இருக்க என்னென்ன தேவையோ, அவைகள் மத்திய அரசாங்கத்திடம் இருக்கின்றன என்பதை நாம் குறிப்பிட்டுச் சொல்லுகிறோம். ஒரு நாட்டினுடைய வலுவைக் காட்டுவது பாதுகாப்புப் படை. ஆகாய விமானப்படை, தரைப்படை, கடல் படை, மற்றவைகளெல்லாம் ஒரு நாட்டின்மீது மற்றொரு நாடு படையெடுத்தால் தடுத்து நிறுத்தி, அதன் உரிமையைக் காப்பாற்றி இறையாண்மையைக் காப்பாற்றி, நாட்டின் எல்லையைக் காப்பாற்றுவதால்தான் முழு வலிமை கொண்டதாக ஆகும்.

நாம் அந்தப் பாதுகாப்பு மாநிலத்திற்கு வரவேண்டுமென்று விரும்பவில்லை. மாநில சுயாட்சி கொடுப்பதன் காரணமாக மத்திய அரசின் வலிவு எப்படிக் குறையும்? வலிவுக்குக் காரணமாக இருக்கிற பாதுகாப்புப் படை மத்திய அரசினிடத்திலேதான் இருக்கிறது. மாநில அரசினிடத்திலே வராது; அன்னிய நாடுகளோடு உறவு கொள்கிற முழு அதிகாரங்களும் மத்திய அரசினிடத்திலேதான் இருக்கும், மாநிலங்களுக்கு அந்த அதிகாரம் வேறு பல கூட்டாட்சி நாடுகளிலே கொடுக்கப்

[டாக்டர் இரா. நெடுஞ்செழியன்]

1974 ஏப்ரல் 19]

பட்டிருந்தாலும் நாம் அந்த உரிமையைத் தர வேண்டுமென்று கேட்க வில்லை. வெளிநாட்டு உறவிலே தலையிடுகிற முழு அதிகாரம் மத்திய அரசி னிடத்திலேதான் இருக்கும், மாநிலங்களுக்குக் கேட்க வில்லை.

இப்படி, பாதுகாப்பு அதனிடத்திலே தான் இருக்கிறது, அன்னிய நாடு களுடன் உறவு வைத்துக்கொள்கிற முழு அதிகாரம் அதனிடத்திலேதான் இருக்கிறது, இந்தியாவினுடைய போக்குவரத்து பொறுத்த அதிகாரங் களும் அதனிடத்திலேதான் இருக்கின்றன. ரூபாயின் மதிப்பை நிர்ண யிக்கின்ற, நாணயச் செலாவணியை ஈட்டுகின்ற கொடுக்கின்ற அதிகாரங் களும் அதனிடத்திலேதான் இருக்கிறது. இப்படி வலிவுக்கு என்ன என்ன அதிகாரங்கள் தேவையோ, அந்த அதிகாரங்கள் எல்லாம் மத்திய அரசினிடத்திலேதான் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன என்று சொல்லுகிற போது மத்திய அரசு எப்படி பலவீனப்பட்டுவிடும்?

கல்வியை அவர்களுக்குத் தருவதாலோ, தொழிலைத் தருவதாலோ, சுகாதாரத்தைத் தருவதாலோ அல்லது வேலூரில் இருக்கின்ற ஜலகண்டே சுவரர் கோயிலைப் பராமரிக்கின்ற உரிமையைக் தருவதாலோ அவர் களுக்கு வலிவு ஏற்பட்டு விடுமா?

தனியார் பள்ளி ஆசிரியர்களுக்குப் பாதுகாப்புத் தரவேண்டுமென்ற முறையிலே ஒரு பாதுகாப்புச் சட்டத்தை இந்த மன்றத்திலே நிறைவேற்றி மத்திய அரசாங்கத்தினுடைய அனுமதிக்காக அனுப்பிவைத்திருக்கிறோம். அவர்களுடைய அனுமதி இருந்தால்தான் சட்டம் நிறைவேற்றப்படுகின்ற நிலைமை இருக்கிறது, இன்னும் கையெழுத்து ஆகி வரவில்லை என்ற நிலை தான் இருக்கிறது.

கல்வி, சுகாதாரம், சமுதாய நல வளர்ச்சி, பாதை போடுதல், பொதுப் பணிகள் இவைகள் எல்லாம் மத்திய அரசினிடத்திலே இருப்பதாலே மத்திய அரசுக்கு வலிவு ஏற்பட்டுவிடுமா?

இரண்டு கோடி ரூபாய்க்கு மேற்பட்ட திட்டங்களுக்கு அனுமதி கொடுக் கின்ற உரிமையை அவர்கள்தான் வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

தொல்பொருள் ஆராய்ச்சித் துறை உரிமையையும் அவர்கள்தான் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். நிதி அதிகாரங்கள் அத்தனையையும் அவர்கள்தான் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். நிதியைப் பிரித்துக் கொடுக்கின்ற அத்தனை அதிகாரங்களையும் அவர்கள்தான் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

இவைகளைப் பொறுத்தவரையிலே இருக்கின்ற அதிகாரங்களை மாநிலங் களிடத்திலே கொடுப்பதால் மத்திய அரசு எப்படி வலுவிழந்துவிடும்?

# மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[டாக்டர் இரா. நெடுஞ்செழியன்]

[1974 ஏப்ரல் 19

எல்லையைக் காத்தல், இறையாண்மை பேணுதல் இன்னும் நாட்டைக் காப்பதற்கு என்ன என்ன அதிகாரங்கள் வேண்டுமோ அவையெல்லாம் டெல்லியிலே இருக்கட்டும், இந்தியாவைப் காப்பாற்றுகின்ற, இந்தியாவின் சுதந்திரத்தைக் காப்பாற்றுகின்ற முழுப் பொறுப்பும் மத்திய அரசினிடத்திலே இருக்கட்டும்.

ஆனால் மாநில மக்களை வாழவைக்கிற முழு அதிகாரங்களும் மாநில அரசுகளுக்கு வழங்கப்படவேண்டும். அந்த அடிப்படையிலேதான் கருத்துக்கள் வழங்கப்படுகின்றன. அப்படிப்பட்ட கருத்துக்கள் ஏற்கெனவே வளர்ந்து வருகின்ற நிலைமை இருந்தது. இடையிலே அதற்குத் தடையேற்பட்டதன் காரணமாக மேலும் வளரமுடியாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

இப்பொழுதிருக்கின்ற அரசியல் சட்டத்தினால் ஏற்படுகின்ற இடுக்கண்களை நாம் அனுபவித்து வருகின்றோம். அந்த நிலைமை மாறி ஒரு நல்ல சூழ்நிலை ஏற்படவேண்டுமானால் மீண்டும் அது மாற்றியமைக்கப்பட வேண்டும். காங்கிரஸ் தலைவர்கள், அரசியல் தலைவர்கள் மற்றவர்கள் கொண்டிருந்த கருத்துக்களின் அடிப்படையிலேதான் நாம் மாநில சுயாட்சி இன்றைக்குக் கேட்கிறோம்.

இன்னுமொரு உதாரணத்தைச் சொல்லிவிட்டு நான் முடித்துக்கொள்ளலாம் என நினைக்கிறேன். ஆறுவது நிதிக் கமிஷன் வந்த நேரத்திலே அவர்கள் எவ்வளவு தன்னிச்சையாக நடந்திருக்கிறார்கள் என்பதையும் அதன் காரணமாக மாநிலங்கள் வளர்ச்சிபெற முடியாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதையும் குறிப்பிட விரும்புகிறேன்.

மாநிலங்களை வளரவிட்டுவிட்டு இந்தியாவைப் பாதுகாப்பதுதான் முறை. உத்திரப் பிரதேசத்திற்கும், பீகாருக்கும் ஆறுவது நிதிக் கமிஷனில் அள்ளிக் கொடுத்திருக்கிறது. பொது நிர்வாகத்தை முன்னேற்றுவதற்கு என்று ஒதுக்கப்பட்ட 102 கோடியே 15 இலட்சம் ரூபாயில் 72 கோடியே 24 இலட்சம் ரூபாய் வரையில் உத்திரப் பிரதேசத்திற்கும், பீகாருக்கும் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

தொடக்கக் கல்வி முன்னேற்றத்திற்கு ஒதுக்கியது 292.11 கோடி ரூபாய் என்றால், 123.72 கோடி ரூபாய் உத்திரப் பிரதேசத்திற்கு மட்டும் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தத் துறைகளில் மொத்தம் மானியம் ஒதுக்கப்பட்டது 815·84 கோடி ரூபாய் என்றால் அதிலே 290.01 கோடி ரூபாய் வரையில் உத்திரப்பிரதேசத்திற்கு மட்டும் போயிருக்கிறது, 166·7 கோடி ரூபாய் பீகாருக்குப் போய் இருக்கிறது. தமிழ் நாட்டிற்கு ஒரு காசு கூட வரவில்லை.

இப்படிப்பட்ட நிதிக் தன்மைகளின் அடிப்படையிலே ஒற்றையாட்சித் தன்மையை வைத்துக்கொண்டு பெயரளவிலே யூனியன் என்று சொல்வது

எப்படிப் பொருத்தமாகும்? உண்மையான, நிலையான, மக்களை வாழ வைக்கக்கூடிய, மக்களோடு நெருங்கிப் பழகி அவர்களுடைய வாழ்விலே கவலை வைக்கக்கூடிய, மக்களுடைய பிரச்சினைகளைத் தீர்த்துவைக்கக்கூடிய நிலையிலே இருக்கிற, நேரடியாக நெருங்கிப் பார்த்து பிரச்சினைகளை ஆய்ந்து தீர்ப்பதற்கு வாய்ப்புக் கொண்டிருக்கிற மாநில அரசுகளிடத்திலே அதிகாரங்களைக் கொடுக்க வேண்டும். அந்த அதிகாரங்களை டெல்லியிலே ஒப்படைத்துவிட்டு காத்திருந்து காத்திருந்து செய்வதன் மூலமாகவும் அல்லது மறுக்கப்படச் செய்வதன் மூலமாகவும் மக்களின் வாழ்க்கையே பாதிக்கப்படுகிறது, முன்னேற்றம் தடைபடுகிறது.

ஆகவேதான் மாநிலத்திலே சுயாட்சி, மத்தியிலே கூட்டாட்சி என்ற அடிப்படையிலே மாநிலங்களுக்கு என்ன என்ன அதிகாரங்கள் தரப்பட வேண்டுமென்பதை ஆராய ராஜமன்னர் குழு போடப்பட்டு அவர்கள் அறிக்கை தந்ததற்குப் பின்னாலே அதிலே என்ன என்ன மாற்றங்களைச் செய்யலாம் என்று அரசு ஆய்ந்து அந்த அடிப்படையிலேதான் நாம் வெள்ளை அறிக்கையை வைத்திருக்கிறோம். தீர்மானம் கொண்டுவந்திருக்கிறோம். எந்த எந்த அதிகாரங்கள் அப்படி மாற்றப்படலாம் என்று சொல்லியிருக்கிறோம். அப்படி மாற்றப்பட்டால்தான் புது வாழ்வு ஏற்படும். நல்லாட்சி மலரும்.

உலகத்திலே இருக்கின்ற சின்னஞ்சிறிய நாடுகள் எல்லாம் முன்னேறியிருக்கின்றன. நம்முடைய நாடு உலகத்திலேயே மக்கள் தொகைக் கணக்கிலே இரண்டாவது இடத்தைப் பெற்றிருக்கிறது. ஆனால், வளர்ச்சி வசதியைப்பொறுத்த வரையிலே 114-வது இடத்தைத்தான் பெற்றிருக்கிறது. அதற்குக் காரணம் அரசியலமைப்புத்தான்.

எதிர்காலத்திலே மாநிலங்களும் மத்திய அரசாங்கமும் ஒன்றோடொன்று தழுவி, ஆனால் ஒன்றோடொன்று ஆதிக்கம் செலுத்திக்கொள்ளாமல் முன்னேறுகின்ற வாய்ப்பினை ஏற்படுத்துவதற்கு இந்தத் தீர்மானம் பயன்படக்கூடியதாகும்.

இந்தக் கருத்திற்கு எதிர்ப்பு இருந்தாலும் 10,15 ஆண்டுகளுக்கு முன்னாலே இருந்ததைவிட இப்பொழுது இந்தக் கருத்துக்கு வலிவு ஏற்பட்டுக் கொண்டு வருகிறது, அரசியல் தலைவர்களும் மாநில அரசுகளும், முதலமைச்சர்களும் பல்வேறு அரசியல் கட்சிகளும் ஆக்கம் தருகிறார்கள்.

ஆகவே, மேலும் மேலும் வளரும் என்ற நம்பிக்கை இருக்கிறது.

கூட்டாட்சி விதையை விதைத்த பல தலைவர்கள் உண்டு. இன்றைக்கு நாம் செடியை நட்டிருக்கிறோம். அந்தச் செடி மரமாகி, பூத்துக்காய்த்து, கனிந்து, பழத்தைத் தரும் என்ற நம்பிக்கை உண்டு. அந்த நம்பிக்கையின் அடிப்படையிலே நான் இதை ஆதரித்து விடைபெறுகிறேன் வணக்கம்.

மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை
மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம்
திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[1974 ஏப்ரல் 19

திரு. என். டென்னிஸ் : தலைவர் அவர்களே, நம்முடைய அவையின் முன் இருக்கிற தீர்மானத்திலே எங்கள் கட்சியின் சார்பாக சில கருத்துக்களைக் கூறலாம் என்று நினைக்கிறேன்.

மத்திய மாநில உறவின் அடிப்படையிலே முதல் தடவையாக இப்படிப்பட்ட தீர்மானம் இந்த மன்றத்திலே கொண்டுவரப்பட்டிருக்கிறது. ராஜமன்னார் குழுவின் அறிக்கையின் அடிப்படையிலே இங்கே இந்த அறிக்கை தயாரிக்கப்பட்டு வைக்கப்பட்டிருக்கிறது. ராஜமன்னார் குழு அறிக்கை ஒரு தலைப்பட்சமான அறிக்கையாக இருக்கிறது. மாநிலங்களுக்கு சுயாட்சி வேண்டும், அதிக அதிகாரங்கள் வேண்டும் என்ற நோக்கத்தோடு தயாரிக்கப்பட்டு இருக்கிறது. தேசிய அளவில் தேசிய ஒற்றுமை, ஒருமைப்பாடு வேண்டும், மத்திய அரசு வலிமை மிக்க அரசாக இருக்கவேண்டுமென்ற கருத்தோடு ராஜமன்னார் குழு அறிக்கை தயாரிக்கப்படவில்லை. ஒரு தலைப்பட்சமாக தயாரிக்கப்பட்டிருக்கிறது. இந்த அறிக்கையினால் ஒரு பயனும் இருக்காது, அக்கடமிக் இண்டரஸ்ட் ஆகத்தான் இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆர்டிகிள் 368-ல் அரசியல் சட்டத்தைத் திருத்தவேண்டுமென்றால், அடிப்படையாக சில காரியங்கள் செய்யவேண்டியிருக்கிறது. பார்லிமெண்ட் சம்மதிக்கவேண்டும், சில மாநிலங்கள் சம்மதிக்கவேண்டும். இந்த நிலையில் தேசிய அடிப்படையிலே உள்ள கருத்துக்குத்தான் பார்லிமெண்ட் சம்மதம் வழங்கும், மாநிலங்களுக்கும் சம்மதம் வழங்கும். ராஜமன்னார் குழு அறிக்கை மாநில அளவிலே இருக்கிற அறிக்கையாக இருக்கிறது. தேசிய அளவில் கருத்துக்கள் ஆராயப்படவில்லை.

(முற்பகல் 10-00)

1971-ஆம் ஆண்டில் இந்த அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டது. ஆனால் இந்த இரண்டு மூன்று ஆண்டுகளாக தேசிய அளவிலான கருத்துக்கள் ஆராயப்பட்டதா என்று பார்த்தால் அவ்விதமான முயற்சியில் நமது மாநிலம் முயற்சிக்கவில்லை என்பதை கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அரசியல் சட்டத்தில் திருத்தம் வேண்டுமென்றால் அது தேசிய அளவில் இருக்க வேண்டும். தேசிய அளவில் கருத்துக்களைக்கொண்டதாக இது இருக்க வேண்டும். அப்படி தேசிய அளவில் பார்த்தால் "அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன்" மத்திய சர்க்காரால் நியமிக்கப்பட்டது. அது தேசிய அளவிலான கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறது.

இதே காரியங்களைப்பற்றி அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் ஒரு அறிக்கை சமர்ப்பித்திருக்கிறது. அது தேசிய அளவிலான கருத்து. அந்த அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் அறிக்கைக்கும் இந்த இராஜமன்னார் குழுவின் அறிக்கைக்கும் அடிப்படையில் வித்தியாசம் இருக்கிறது.

இராஜமன்னர் கமிட்டி அறிக்கையில் "கான்ஸ்டிடியூஷனல் அமெண்ட்மெண்ட்" வேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. ஆனால் அட்மினிஸ்ட்ரெட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் அறிக்கையின் அடிப்படையில் பார்த்தால் கான்ஸ்டிடியூஷனல் அமெண்ட்மெண்ட் தேவையில்லை, ஆனால், மாநிலங்களுக்கும் மத்திய சர்க்காருக்கும் இருக்கின்ற வித்தியாசமெல்லாம், காண்ட்ரவர்சி எல்லாம் நிர்வாக சம்பந்தமானது, பொருளாதார சம்பந்தமானது, ஃபைனன்ஷியல் சம்பந்தமானது, ஆகவே, நிர்வாகத்தில் பல மாறுதல்களை, பல அரசியல் பிரிவுகளை மாநிலங்களுக்கு அளித்தால் போதும் என்பதை, அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் அந்த அடிப்படையான கருத்தை வெளியிட்டிருக்கிறது.

திரு. செ. கந்தப்பன் : பாயின்ட் ஆப் ஆர்டர் சார் : நிர்வாகச் சீர்திருத்தக் குழுவின் அறிக்கையைப் பற்றிச் சொல்லும்பொழுது, இதே கருத்தைப் பல உறுப்பினர்கள் குறிப்பிட்டார்கள். நான் இதிலே ஒன்றைத் தெளிவாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நிர்வாக சீர்திருத்தக் குழுபற்றிப் பேசும்பொழுது தவறான தகவல்களை நம்மையறியாமலேயே தந்துகொண்டிருக்கிறோமோ என்று நான் அஞ்சுகின்றேன். மத்திய சர்க்கார், மாநில நிர்வாகச் சீர்கேடுகளைச் சொல்லிவிட்டு, இருக்கின்ற அரசியல் நிர்ணய சட்டத்தின் வரம்பிற்குள் தான் செயல் பட வேண்டும், கட்டாயப்படுத்தி திருத்தும்படி சொல்வதற்கு அதிகாரங்கள் இல்லை. எல்லைக்குள்ளே நாங்கள் சட்டத்தைத் திருத்தச் சொல்லலாம், பரிகாரம் சொல்லலாம் என்று சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் சொல்வது, நோயைப் பார்த்தால் அறுவை சிகிச்சை நடக்க வேண்டுமென்று ஒத்துக்கொண்டு, அந்த அறுவை சிகிச்சை செய்யும் அதிகாரம் இல்லை, ஆகவே, "பில்ஸ்" மட்டும் கொடுக்கிறோம் என்ற கருத்தில் சொல்கிறார்கள். அந்த "பில்ஸ்" இந்த நாட்டிலே கொடுக்கப்படவில்லை.

திரு. ஆர். பொன்னப்ப நாடார் : மிகவும் முக்கியமான பிரச்னையை மாண்புமிகு உறுப்பினர் உயர்திரு. கந்தப்பன் அவர்கள் எழுப்பி இருக்கிறார்கள். அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் ரிப்போர்ட்டை நானும் படித்தேன். அதிலே பல பரிந்துரைகள் இருக்கின்றன. அரசியலமைப்புச் சட்டத்தைத் திருத்த வேண்டுமென்று அவர்கள் சொல்லவில்லை. என்னுடைய கையில் அது இருக்கிறது. நான் பேசுகின்ற நேரத்தில் எனக்குத் தெரிந்த வண்ணம் விளக்க விரும்புகிறேன்.

ஆகவே, அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் ரிப்போர்ட்டிற்கும், இராஜமன்னர் கமிட்டி அறிக்கைக்கும் முரண்பாடு இருக்கிறது என்று உயர்திரு டென்னிஸ் அவர்கள் வாதாடிக்கொண்டிருக்கிறார்கள். அதற்குள்ளே அதிகமாக ஒற்றுமை இருக்கிறது, அறுவை சிகிச்சை தேவை என்ற கருத்துக்களையெல்லாம் பலமாதிரியாக ஒவ்வொருவரும் கூறக்கூடும்.

THIRU S. KANDAPPAN: The Administrative Reforms Commission itself has made it clear in its report that the reference to it is to confine itself within the framework of the existing Constitution. Within that ambit, they spelt out the various problems of various States and how changes could be effected. They have clearly indicated that they could not indicate constitutional amendments since they had to confine themselves within their terms of reference. That is the limited point I am making.

THIRU R. PONNAPPA NADAR: The same thing could be said of Rajamannar Committee's report. They have been given some kind of terms of reference and they had suggested constitutional amendments.

I have read the report of the Administrative Reforms Commission and also the Rajamannar Committee's report, to the best of my judgment. The decisions that have been arrived at by the Rajamannar Committee are not something that are sacrosanct or inviolable. We are bound to indicate our views on the verious points that have been canvassed in that report. Suffice it for me to say that all these aspects would be discussed threadbare when we are discussing the whole issue.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: நான் உறுப்பினர்களைக் கேட்டுக் கொள்கிறேன். இன்னும் 12 உறுப்பினர்கள் பேச வேண்டியிருக்கிறது.

திரு. ஜே. ஜேம்ஸ்: அவர்தான் ஆரம்பித்தார்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: நான் பொதுவாகச் சொல்கிறேன், அந்தந்தக் கருத்துக்களைச் சொல்லும்போழுது அந்தந்தக் கட்சியின் சார்பாகப் பேசும்பொழுது கருத்துக்களைச் சொல்லுங்கள். எனக்குச் சங்கடமான நிலையை உண்டாக்கிவிடாதீர்கள் என்று பொதுவாகச் சொல்கிறேன்.

திரு. என். டென்னிஸ்: அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் ரிப்போர்ட்டுக்கும், இராஜமன்னார் குழு அறிக்கைக்கும் அடிப்படையான வித்தியாசம் என்னவென்றால், இராஜமன்னார் கமிஷன் அறிக்கையில் கான்ஸ்ஸ்ட்டிடியூஷனல் அமெண்ட்மெண்ட் வேண்டுமென்று விரும்புகிறது. ஒரு காரியத்திற்கு அல்ல, பல காரியங்களுக்கு கான்ஸ்ட்டிடியூஷனல் அமெண்ட்மெண்ட் வேண்டுமென்று கூறுகிறது.

ஆனால் அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் ரிப்போர்ட்டில் பொருளாதார நிலையிலும், ஃபைனான்ஸ் நிலையிலும், நிர்வாக நிலையிலும் தான் பல காண்ட்ரவர்சீஸ் மத்திய சர்க்காருக்கும், மாநிலங்களுக்கும் இருக்கின்றன. அதற்கு அரசியல் ஷரத்துக்களைச் சரியாகச் செயல்படுத்தினால் மாநில சர்க்காருக்கும் மத்திய சர்க்காருக்கும் உள்ள உறவை ஏற்படுத்திவிடலாம் என்று சமர்ப்பித்திருக்கிறார்கள். இதுதான் அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் அறிக்கைக்கும், இராஜமன்னார் குழு அறிக்கைக்கும் உள்ள அடிப்படையான வித்தியாசம் என்பதை நான் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் ரிப்போர்ட்டானது தேசியக் கருத்தை வெளியிட்டிருக்கிறது. தேசத்திலுள்ள பலரின் கருத்துக்களை அறிந்து, பல மாநிலங்களின் பிரதிநிதிகளின், பெரியவர்களின் கருத்துக்களை அறிந்து தயாரிக்கப்பட்ட ரிபோர்ட் அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் ரிபோர்ட். அந்த அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் ரிப்போர்ட் பிரகாரமும் மத்திய சர்க்காரில் குவிந்து கிடக்கின்ற அதிகாரங்களெல்லாம் தொடர்ந்து அவ்விதமே குவிந்து கிடக்க வேண்டுமென்று விரும்பவில்லை. அவர்கள் மத்திய சர்க்காரிலுள்ள பொருளாதார நிர்வாக அதிகாரங்கள் மாநில சர்க்கார்களுக்குப் பகிர்ந்து வழங்கப்பட வேண்டுமென்பதாகத்தான் கூறுகிறார்கள். ஆனால் அதில் கான்ஸ்ட்டிடியூஷனல் அமெண்ட்மெண்ட் வேண்டுமென்று கூறவில்லை. அது அவசியம் என்பதாக அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் அறிக்கை கூறவில்லை. மத்திய சர்க்காரிலுள்ள பல அதிகாரங்களை மாநில சர்க்கார்களுக்கு வழங்கினால் மாநிலங்களுக்கும் மத்திய சர்க்காருக்கும் உள்ள உறவு வளரும், நிர்வாகம் விரிவடையும் என்றுதான் அட்மினிஸ்ட்ரேட்டிவ் ரிஃபார்ம்ஸ் கமிஷன் அறிக்கை கருத்து தெரிவிக்கிறது.

நமது அரசியலமைப்புச் சட்டமும் திருத்தும் தன்மை வாய்ந்ததாக இருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இங்கே இராஜமன்னார் குழுவால் கூறப்பட்டிருக்கின்ற அறிக்கைக்கு இசைய அநேக அமெண்ட்மெண்டுகள் ஒரே சமயத்தில் வேண்டுமென்றால் அது நடைமுறையில் சாத்தியமாகுமா என்று பார்த்தால் அது அவசியமான தேவையில்லை என்று தான் நாம் கருத வேண்டும். இன்னும் அரசியல் சட்டத்தை இரண்டு முறையாகத் திருத்த முடியும்.

ஆர்டிகிள் 368-க்கும் "கான்ஸ்டிடுயண்ட் அசெம்பிளி" கூட்டியும் அரசியல் சட்டத்தில் மாறுதல் ஏற்படலாம். 24 ஆண்டுகளுக்குள்ளாக இனி "கான்ஸ்டிடுயண்ட் அசெம்பிளி" கூட்ட வேண்டுமா என்று சிந்திக்க வேண்டும். இந்திய அரசியலமைப்புச் சட்டம் உலகத்திலே பெரிய அரசியல் சட்டம். மூன்றாண்டுகளாக பல நிபுணர்களின் கருத்துக்களை ஆராய்ந்து, லீகல் எக்ஸ்பர்ட்ஸ், கான்ஸ்ட்டிடியூஷனல் எக்ஸ்பர்ட்ஸ் போன்றவர்களின் கருத்துக்களை ஆராய்ந்து அதன் அடிப்படையில் இந்த

அரசியல் சட்டம் இயற்றப்பட்டது. இந்தக் குறுகிய காலத்தில் கரன்ஸ்டிடியண்ட் அசெம்பிளியைத் திரும்பவும் கூட்டி அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டுமா என்பதைப்பற்றிச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இன்னும் 5 நிமிஷங்களில் முடித்து விடுங்கள்.

திரு என். டென்னிஸ்: அரசியலமைப்பு ஒரு யூனிட்டரி சிஸ்டமாக செயல்பட்டுக்கொண்டிருப்பதைப்பற்றிக் கருத்து தெரிவித்திருக்கிறார்கள். சோவியத் இரஷ்யாவில் இருக்கின்ற பிரிந்து போகும் அதிகாரம் நம்முடைய அரசியல் சட்டத்தில் இல்லாமல் இருக்கலாம். சோவியத் இரஷ்யாவில் உள்ள மாநிலங்களுக்கு வேறு அரசியலமைப்புச் சட்டம் இருக்கும் தன்மை நம்முடைய அரசியல் சட்டத்தில் இல்லாமலிருக்கலாம்.

தனிக் கொடியும் நம்முடைய தேசத்தில் மாநிலங்களுக்கு இல்லாமல் இருக்கலாம். அமெரிக்காவில் இருப்பது போல் இரண்டு பிரஜா உரிமைகள், தேசத்திற்கு ஒரு பிரஜா உரிமை, மாநிலத்திற்கு ஒரு பிரஜா உரிமை என்று இல்லாமல் இருக்கலாம். இந்திய நாட்டுக்கு ஒரு பிரஜா உரிமை, தமிழ் நாட்டுக்கு ஒரு பிரஜா உரிமை என்பது போன்ற நிலைமை அங்கு இருக்கிறது. அந்த உரிமை நம்முடைய அரசியல் சட்டத்தில் இல்லாமல் இருக்கலாம். ரெசிட்யுவரி பவர்சும் இல்லாமல் இருக்கலாம்.

எமர்ஜன்சி காலங்களில் மத்திய அரசுக்கு முழு அதிகாரம் இருக்கிறது. அந்த முறையில் பார்க்கும்போது யூனிடரி பயாஸ் இருக்கிறது என்று கூறுகிறார்கள். ஆனால் யூனிடரி சிஸ்டத்திற்கும் பெடரேஷனுக்கும் இருக்கக்கூடிய அடிப்படையான வித்தியாசம் என்ன, தன்மைகள் என்ன என்று பார்த்தால் ஒற்றை ஆட்சி முறையில் மத்திய சர்க்காருக்கும் வட்டார அமைப்புகளுக்கும் உள்ள அதிகார வரம்பு மத்திய அரசால் நிர்ணயிக்கப்படுகிறது. ஆனால், பெடரேஷனில் மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும் இருக்கக் கூடிய அதிகார வரம்பு அரசியல் சட்டத்தால் வரையறுக்கப்படக்கூடிய நிலை இருக்கிறது. இது தான் முக்கியமான வித்தியாசம். இரண்டு அரசுகளும் பெடரேஷனில் சுதந்திரமாகச் செயல்படுகிறது. இரண்டு அரசுகளும் ஒன்றுக்கொன்று சமத்துவம் உள்ளதாகச் செயல்படுகிறது. இந்தியாவில் பெடரேஷன் எவ்விதமாகச் செயல்படுகிறது என்று பார்த்தால் ஆர்டிகிள் 244-ல் Central list, State list and Concurrent list என்று இருக்கிறது. ஏழாவது ஷெட்யூலில் ஒவ்வொரு லிஸ்டைப் பற்றியும் விளக்கமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த வகையில் ஸ்டேட் லிஸ்டில் உள்ள அந்த அதிகாரங்களைச் செயற்படுத்த மாநில அரசுகளுக்கு முழு உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. மத்திய அரசு அதிலே தலையிடுவதில்லை. (மணி அடிக்கப்பட்டது).

மாண்புமிகு பேரவைத் தலைவர் : 15 நிமிஷம் ஆகி விட்டது. இன்னும் இரண்டு நிமிஷத்தில் முடித்து விடுங்கள்.

திரு என். டென்னிஸ் : அந்த அடிப்படையில் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டிருக்கின்றன. இந்திய அரசியல் சட்ட அமைப்பைப் பார்த்தால் இரு தன்மை ஆட்சி முறை இருக்கிறது. இரண்டும் சுதந்திரம் பெற்ற ஆட்சியாக நடந்து கொண்டிருக்கிறது. மாநிலங்களுக்குப் போதுமான அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதிலே மத்திய அரசு தலையிடுவதில்லை.

ஆனால் ஒரு பலமான சென்டர் இருக்க வேண்டியது அவசியம். நம்முடைய மாநிலத்தில் 1967-ஆம் ஆண்டில் இருந்த சர்க்காருக்கு இருந்த அதிகாரத்தைவிட இன்று குறைவாக இருக்கிறதா என்றால் இல்லை. 1967-ல் ரூ. 200 கோடிக்கும் குறைவாக வருமானம் இருந்தது. இன்றைக்கு ரூ. 500 கோடிக்கும் அதிகமாக இருக்கிறது. ஆனால் வளர்ச்சி கூடியிருக்கிறதா என்று பார்த்தால் இல்லை. எமர்ஜன்சி காலத்தில் இவ்விதமான அதிகாரங்கள் எடுக்கப்படுகின்றன. சாதாரண காலத்தில் மத்திய அரசு எவ்விதமான அதிகாரத்தையும் எடுப்பதில்லை. மாநில அரசு அமைப்பில் பிரேக்டவுன் ஏற்படும்போது, பொருளாதார நெருக்கடி ஏற்படும்போது அந்த அதிகாரம் எடுக்கப்படுகிறது. சுதந்திரத்தைக் காப்பாற்ற வேண்டுமென்றால், ஒருமைப்பாட்டைக் காப்பாற்ற வேண்டுமென்றால் வலிமையான மத்திய அரசு இருக்கவேண்டும். இதற்கு மாற்று வழியே இல்லை.

நம்முடைய மாநிலத்தில் இருக்கும் பஞ்சாயத்துக்களுக்கு அதிகாரங்கள் பகிர்ந்து கொடுக்கப்பட்டிருக்கின்றனவா, பஞ்சாயத்து யூனியன்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றனவா, நகராட்சிகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றனவா என்று பார்த்தால் இல்லை. சிறிய காரியங்களுக்கும் சென்னைக்கு விரைந்து வரவேண்டியிருக்கிறது.

மாநில அரசுக்கு அதிகாரங்கள் இருக்கின்றன என்பதற்கு சில எடுத்துக்காட்டுகள் கூற விரும்புகிறேன். ஒரு மாநிலத்தோடு சுதந்திரமாக உடன்பாடு செய்து கொள்ள இன்னொரு மாநிலத்திற்கு அதிகாரம் இருக்கிறது. காவிரி நீர்ப் பங்கீட்டில் ஒரு மாநில அரசின் யோசனையை மற்ற மாநில அரசு ஏற்க மறுத்து விட்டது. மத்திய அரசு அதிலே தலையிட முடியாது.

நாம் இரண்டு மொழிக் கொள்கையைப் பின்பற்றி வருகிறோம். மும்மொழிக் கொள்கையை வேறு மாநிலங்களில் பின்பற்றி வருகிறார்கள்.

இவ்விதமான காரியங்களைச் செயல்படுத்த மாநிலங்களுக்குப் பூரண அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது. மாநில அரசு தனிக் கமிஷன் நியமிக்கும் அதிகாரம் பெற்றிருக்கிறது. திட்டக் கமிஷன், பிற்பட்டோர் நலக் கமிஷன் போன்று அமைக்க அதிகாரம் இருக்கிறது.

மாநில சட்டசபையும் மத்திய பார்லிமெண்டும் கான்ஸ்டிட்யூஷனல் சிருஷ்டிக்கப்பட்டவை. பஞ்சாயத்து யூனியனில் அங்கத்தினர்களாக இருப் பவர்கள் ஸ்டேட் அசெம்பிளியில் அல்லது பார்லிமெண்டில் அங்கத்தினர் களாக இருக்கலாம். ஆனால் ஸ்டேட் அசெம்பிளியில் அங்கத்தினர்களாக இருப்பவர்கள் பார்லிமெண்டில் இருக்க முடியாது. ஏதாவது ஒன்றில் தான் இருக்கலாம். ஏனென்றால் இரண்டும் கான்ஸ்டிட்யூஷனில் கொடுக்கப்பட்ட அதிகாரத்தின் மூலம் அமைக்கப்பட்டவை.

மாண்புமிகு திரு க. இராசாராம் : தலைவர் அவர்களே, மாண்புமிகு உறுப்பினர் அவர்கள் மற்ற மாநிலங்களில் மும்மொழிக் கொள்கை இருப்பதாகச் சொல்லுகிறார்கள். எந்தெந்த மாநிலங்களில் மும் மொழிக் கொள்கை இருக்கிறது என்று அறிந்து கொள்ள விரும்புகிறேன்.

திரு என். டென்னிஸ் : மும்மொழித் திட்டம் இருக்கிறது. தமிழ் நாட்டில் இரண்டு மொழிக் கொள்கை இருக்கிறது. மொழிக் கொள் கையை நிர்ணயிப்பதில் மாநில அரசுக்குப் பரிபூர்ண அதிகாரம் இருக்கிறது ; மத்திய அரசு தலையிட முடியாது, தலையிடவில்லை என்பதைச் சுட்டிக்காட்டுவதற்காகத்தான் அதைக் கூறினேன். கான்ஸ்டிட்யூஷனல் பிரேக்டவுன் ஏற்படும்போதுதான் தலையிடக் கூடிய அதிகாரம் இருக்கிறது.

பொருளாதாரக் காரியத்தில்தான் மாநில அரசுக்கும், மத்திய அரசுக் கும் இடையே வேறுபாடான கருத்துக்கள் நிலைமைகள், ஏற்பட்டுக்கொண் டிருக்கின்றன. கான்ட்ரவர்சி ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. மத்திய அரசு நியமித்த அட்மினிஸ்ரேட்டிவ் ரிபார்ம்ஸ் கமிட்டியில் பல பொருளாதாரப் பொறுப்புக்களையும், வருமானங்களையும் மாநில அரசுகளுக்குக் கொடுக்க வேண்டுமென்று சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறது. திட்டங்களை நிறைவேற்ற, ஜனங்களுக்கு நன்மை செய்ய வரி மூலம், மத்திய அரசின் மானியத்தின் மூலம் மாநில அரசுக்கு நிதி கிடைக்கிறது.

மத்திய அரசு இப்போது சென்ட்ரலி ஸ்பான்சர்டு ஸ்கீம்களை குறைந்த அளவுதான் மாநிலங்களில் எடுத்து நடத்துகிறது. மாநில அரசுகள் தமது இஷ்டம்போல் திட்டங்களைத் தேர்ந்தெடுக்கவும், நிறைவேற்றவும் அதிகாரத்தை மத்திய அரசு கொடுத்திருக்கிறது. நிதி வருவாய்த் துறை யில் மத்திய அரசுக்கு ஏன் அதிக அதிகாரம் இருக்க வேண்டும் ? மத்திய அரசுக்குப் பொறுப்பு அதிகமாக இருக்கிறது. பாதுகாப்பு, வெளிநாட்டுத் தொடர்பு, கம்யூனிகேஷன்ஸ், தொழில் அபிவிருத்தி திட்டங்களில் பொறுப்பு மத்திய அரசுக்கு இருக்கிறது. இவ்விதமான காரியங்களுக்கு மத்திய அரசு நிதியை ஒதுக்கிக் கொண்டு மற்றவற்றைப் பங்கிட்டுக் கொடுக்கக் கூடிய நிலைமை இருக்கிறது.

திரு அ. பெரியசாமி : ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர். இது ஆண்டுக்கு ஆண்டு வருகிற ஐட்டம் அல்ல. மாநிலச் சுயாட்சி பற்றிய தீர்மானம் என்பது இந்த ஒரு பீரியடில்தான் அதைப்பற்றிப் பேசப்

1974 ஏப்ரல் 19] [திரு. கு. பெரியசாமி]

போகிறோம். ஆகவே ஆளும் கட்சிக்காரர்களுக்கும் அதிகப்படியான சான்ஸ் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதற்காக இரண்டு நாட்கள் கூடுதலாக கூட சபையை வைத்துக்கொண்டால் கூட பரவாயில்லை. நாங்கள் எல்லாம் பேச விரும்புகிறோம். எங்களுக்கு சான்ஸ் கொடுக்கவில்லை. ஆகவே எங்களுக்கும் சான்ஸ் கொடுக்க வேண்டும்.

திரு க. மு. இராசகோபால்: எங்களுக்கும் பேச சான்ஸ் வேண்டும்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: மூன்று நாட்கள் விவாதம் என்று வைத்து இப்போது ஐந்து நாட்கள் ஆகிவிட்டன.

திரு க. மு. இராசகோபால்: ஐந்து நாட்கள் ஆகிவிட்டன என்றாலும் எங்களுக்குப் பேச சமயம் கிடைக்கவில்லையே.

திரு கு. பெரியசாமி: எதிர்க் கட்சிக்காரர்களுக்கு அதிக டைம் கொடுத்திருக்கிறீர்கள். எங்களுக்கும் ஒரு ஐந்து நிமிடங்கள் கொடுத்தால் நாங்களும் பேசுகிறோம்.

திரு கோவை செழியன்: பேரவைத் தலைவர் அவர்களே, மாநிலச் சுயாட்சி வேண்டும் என்ற தலைப்பிலே............

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இருபது நிமிடங்களில் முடித்து விடுங்கள்.

திரு கோவை செழியன்: முஸ்லிம் லீகிற்கு அரைமணி நேரம் கொடுத்தீர்கள். திரு கந்தப்பன் அவர்களுக்கு......

மாண்புமிகு பேரவைத் தலைவர்: சரி, அரை மணி நேரத்தில் முடித்து விடுங்கள்.

* திரு கோவை செழியன்: பேரவைத் தலைவர் அவர்களே, மாநில சுயாட்சி வேண்டுமென்ற தலைப்பிலே ராஜமன்னார் கமிட்டியினுடைய பரிந்துரைகளை நிறைவேற்றித் தர வேண்டுமென்ற தீர்மானத்தை அடிப்படையாக வைத்து இந்த இரண்டு மூன்று நாட்களாக நாம் விவாதத்தை நடத்திக் கொண்டு வருகிறோம்.

இந்த விவாதத்திலே கட்சித் தலைவர்களும் பல கட்சி உறுப்பினர்களும் தங்களுடைய கருத்துக்களைச் சொன்னார்கள். அதில் பல பேர் திறையப் புத்தகங்களிலிருந்து எடுத்துக் காட்டுக்களையெல்லாம் எடுத்துச் சொல்லி, சென்டர் ஸ்டேட் ரிலேஷன்ஷிப் எப்படி இருக்க வேண்டும்

என்ற விளக்கங்களை தந்து கொண்டிருந்தார்கள். எந்தெந்த அதிகாரங்கள் மத்திய அரசிடமிருந்து மாநில அரசுக்கு வரவேண்டும் என்று ஒவ்வொன்ருக எடுத்துக்காட்டி இவை இவை எல்லாம் மத்திய அரசிடமிருந்து மாநில அரசுக்கு வர வேண்டும் என்று விளக்கிப் பேசினுர்கள்.

ஆனுல் என்னைப் பொறுத்தவரையில், இந்த விவாதங்கள், விளக்கங்களை எல்லாம் சட்டமன்றத்தில் உட்கார்ந்து விவாதிக்க வேண்டியது அவசியந்தாஞ என்பதுதான் என் கேள்வியாகும். ஏனென்று கேட்டால், மாநில அரசாங்கங்களுக்கு அதிகாரங்கள் தேவை என்பதில் யாரும் மாறுபாடு கொண்டிருக்கமாட்டார்கள். அதிகாரம் தேவை தான். ஆனுல் என்னென்ன அதிகாரங்கள் தேவை என்பதை எல்லாம் அதிகாரம் தேவை என்பதை மத்திய அரசு ஒத்துக்கொண்டதற்குப் பின்னுல் ரௌண்ட் டேபிள் டிஸ்கஷன் அதாவது மேஜை முன்னுல் உட்கார்ந்து கொண்டு விவாதிக்க வேண்டியதை இந்த மன்றத்தில் நாம் உட்கார்ந்து விவாதித்துக் கொண்டிருக்கிறேம்.

உண்மையாகவே இந்தத் தீர்மானம் நிறைவேற்றப்பட வேண்டும் என்ற எண்ணம் ஆளும் கட்சிக்கு இருக்குமேயானுல் என்ன செய்திருக்க வேண்டும்? மாநிலங்களுக்கு அதிகாரம் தேவை. தமிழ் நாட்டுக்கு மட்டுமல்ல இந்தியாவிலிருக்கின்ற எல்லா மாநிலங்களுக்கும் அதிகாரம் தேவை. அதற்காக அவர்களுக்கும் சேர்த்து வக்காலத்து வாங்கிக் கொண்டு இங்கே கொண்டு வரலாம். அப்படி இந்தத் தீர்மானத்தை எதிர்ப்பில்லாமல் ஏகோபித்துக்கூட நிறைவேற்றியிருக்க முடியும். எப்படி? இங்கிருக்கிற கட்சித் தலைவர்களையெல்லாம் அழைத்து வைத்து நாம் இந்த மாதிரி ஒரு தீர்மானம் கொண்டுவருகிறேம், மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் தேவை என்பதை ஒரே வாசகத்தில் போட்டு இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்து அதற்குப் பிறகு மத்திய அரசு என்னென்ன அதிகாங்கள் உங்களுக்குத் தேவை என்று சொல்கிறீர்கள்........

திரு க. மு. இராசகோபால்: கட்சித் தலைவர்களை யெல்லாம் அழைத்து, கலந்து முடிவு எடுக்கலாம் என்று சொல்கிறுர்கள். அவர்களுடைய கட்சித் தலைவர் இந்த மன்றத்திற்கே வரவில்லை. யாரைக் கூப்பிட்டு இந்த முடிவை எடுக்க முடியும்?

திரு கு. பெரியசாமி: தமிழ்நாட்டுக்கு மட்டும் இந்த மாநில சுயாட்சி வேண்டுமென்று கோரவில்லை அனைத்து மாநிலங்களுக்காகவும்தான் கோரு, கிறேம் நாம்.

திரு கோவை செழியன்: கட்சித் தலைவர்களை அழைத்துப் பேச வேண்டும் என்று சொன்னுல் இந்தக் கட்சியில் இருக்கிற உறுப்பினர் யாருமே அங்கு அந்த விவாதத்தில் உட்காரும்போது தலைவராக ஆகிவிடுகிறுர்கள். இடத்தை நேரத்தைப்பொறுத்தது, இவர்தான் வரவேண்டும் என்பது இல்லை. எங்கள் கட்சியைப் பொறுத்த வரையில் நாங்கள் எல்லோருமே

பேசுவதற்குத் தகுதி படைத்திருக்கிறோம். அந்த அளவிற்கு தயாராக தகுதியோடு வந்திருக்கிறோம் என்பதை மாண்புமிகு உறுப்பினர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

ஆகவே, இந்தத் தீர்மானம் நிறைவேற்றப்பட வேண்டும் என்ற எண்ணம் இருக்குமேயானால் ஒரேஒரு வரியில், தீர்மானத்தைப் போட்டிருக்கலாம். மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் தேவை என்று ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்திருப்பார்களேயானால் முழுமனதோடு நாங்கள் அதை ஆதரிக்கத் தயாராயிருக்கிறோம். ஆனால் புதிதாக மாநில சுயாட்சி என்ற இந்த வாசகத்தைப் போட்டு ஒரு தீர்மானத்தைக் கொண்டு வருகிறபோது மாநில சுயாட்சித் தீர்மானம் என்றுவது விட்டிருந்திருக்கலாம். ராஜமன்னார் கமிட்டி என்னென்ன பரிந்துரைகளைச் செய்திருக்கிறது அவைகள் அனைத்தும் தேவை என்பதையும் வேறு போட்டிருக்கிறார்கள். அப்படி வருகிறபோதுதான்இவைகளை எல்லாம் உட்கார்ந்து விவாதிக்க வேண்டிய பிரச்சினைகளை இங்கேநாம் கொண்டுவருவது எந்த விதத்தில் சரியாக இருக்கும் என்று என்றால் புரிந்து கொள்ள முடியவில்லை.

நான் ஒன்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். பொதுவாக அரசியல் கட்சிகளுக்கு கொள்கைகள் வகுத்துத தரக் கூடிய பொறுப்பை உலகத்திலே எந்தக் கட்சியும் நீதிபதிகளிடத்தில் கொடுக்கவில்லை. ஆனால் இங்கே ஒரு பரிதாபகரமான நிலை. நீதிபதிகளையும் மற்றவர்களையும் அழைத்து வந்து எங்கள் கொள்கைகளை வகுத்துத் தாருங்கள் என்று சொல்வது, இது எந்த விதத்திலும் சாலச் சிறந்ததாகாது.

மாநிலங்களுக்கு அதிகாரம் தரலாம், தர வேண்டும் என்று நாம் கேட்டு மத்திய அரசு என்னென்ன அதிகாரங்கள் உங்களுக்கு வேண்டும் என்று சொல்கிறபோது அப்போது வேண்டுமானால் சட்ட நிபுணர்களை அழைத்து வைத்துக் கொண்டு நாம் விவாதித்து ஒரு முடிவிற்கு வர வேண்டுமே தவிர, எடுத்த எடுப்பிலேயே அப்படிப்பட்ட சட்ட நிபுணர்களின் பரிந்துரைகளை வைத்துப் பேசுவது விவேகமாக இருக்காது.

எங்களைப் பொறுத்த வரையில் இந்தத் தீர்மானமே எதற்காகக் கொண்டுவரப்பட்டிருக்கிறது என்று சொன்னால், எங்களுடைய கட்சி சார்பில் பேசிய உறுப்பினர்கள் குறிப்பிட்டது மாதிரி இன்று நாட்டில் நிலவி வருகிற நிலைமையைத் திசை திருப்புவதற்காக முதல்வர் அவர்கள் சாமார்த்தியமாக இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள் என்று தான் நான் சொல்வேன் இந்த ரிப்போர்ட் எப்போது சமர்பிக்கப்பட்டது; எவ்வளவு காலமாகிவிட்டது என்று இந்த மன்றத்தில் பலர் கேட்டார்கள். ராஜமன்னார் கமிட்டி ரிப்போர்ட்டை விவாதிக்கவில்லையே என்று சென்ற ஆண்டும் கேட்டார்கள் இதற்கு முன்னால் இதைப்பற்றிப் பேசவில்லை. ஆனால் இன்றைக்கு திடீர் என்று கொண்டு வருவதற்கு என்ன காரணம் என்றால், நாட்டிலே உருவாகியுள்ள அரசியல் நிலைமையைத் திசை திருப்புவதற்காகத்தான் இந்தத் தீர்மானத்தைக் கொண்டுவந்திருக்கிறார்கள்.

[திரு. கோவை செழியன்] [1974 ஏப்ரல் 1?

என்ன சொல்வார்கள்? இந்தத் தீர்மானத்தை நாங்கள் கொண்டு வந்தோம், அண்ணாவினுடைய கொள்கையை ஏற்றுக் கொள்ளக் கூடிய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகக்காரர்கள் இந்தத் தீர்மானத்தை ஏற்றுக் கொள்ளவில்லை, பாருங்கள் என்று நாட்டு மக்களிடத்தில் காட்டு வதற்காக நம்முடைய முதலமைச்சர் அவர்கள் சாமர்த்தியமாகத்தீர்மானம் கொண்டு வந்திருக்கிறார்கள்.

முதல் அமைச்சர் அவர்களுடைய திறமையை நான் என்றைக்கும் பாராட்டுகிறேன். அவர்கள் சமயம் வருகிறபோது, சூழ்நிலை தனக்கு ஒத்துவராதபோது திசை திருப்பி இப்படி ஏதாவது ஒன்றைச் செய்யும் வல்லமை மிக்க ராஜ தந்திரி.

அவர்கள் ஏற்கெனவே பல நிலமைகளில் அப்படிச் செய்திருக்கிறார்கள். அதில் ஒன்று தான் இது, நாட்டுமக்கள் எல்லாம் கொந்தளித்து எழுகிற இந்த நேரத்தில் எங்கே நாட்டில் புரட்சி வெடித்துவிடுமோ என்ற நிலை வந்ததற்குப பின்னால் இந்தத் தீர்மானத்தைக்கொண்டு வந்து எங்களிடம் அதிகாரம் இல்லை, மத்திய அரசினிடத்தில்தான் எல்லா அதிகாரங்களும் இருக்கின்றன, ஆகவே எங்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை என்று கையைவிரிப்பதற்காக இந்தத்தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

அதிகாரம் இல்லாத காரணத்தால் தான் தமிழ்நாட்டில் இந்த அளவு விலைவாசிகள் ஏறிவிட்டன, தமிழ்நாட்டில் ஆட்சியாளர்களால் கட்டுப்படுத்த முடியாத ஒரு கொந்தளிப்பான நிலை உருவாகி இருக்கிறது என்பதை எடுத்துச்சொல்வதற்குத்தான் இந்தத் தீர்மானத்தை இன்றைக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

நாங்கள் இதை ஆதரிக்கிறோம என்று வைத்துக் கொண்டால், எதிர்க் கட்சிக்காரர்களாக இருக்கிறவர்கள் ஆதரிக்கிறோம் என்று சொன்னால், பாருங்கள், எங்களிடம் அதிகாரம் இல்லை என்பதை அவர்களே ஒத்துக் கொண்டு விட்டார்கள், ஆகவே எங்களால் ஒன்றும் செய்ய முடியாது, உங்கள் போராட்டத்தை மத்திய அரசுக்கு எதிராகக் கிளப்புங்கள் என்று சொல்லித் தப்பித்துக் கொள்ளும் முறையில்தான் இது அமைந்திருக்கிறதே தவிர வேறு அல்ல. உண்மையாக எந்தெந்த அதிகாரங்கள் தேவை, எந்தெந்த அதிகாரங்கள் தேவை இல்லை என்பதைப் பற்றி பின்னால் குறிப்பிடுகிறேன்.

முற்பகல் 10-30.

என்னைப் பொறுத்த வரையில் ஒரு சின்னக் காரியத்தை இங்கே சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இங்கே பேசிய நம்முடைய நாவலர் அவர்கள் விளக்கமாகப் பழைய இண்டியன் ஹிஸ்ட்ரியை எடுத்து ஒவ் வொன்றாகப் படித்தார்கள். மாண்டேகு-செம்ஸ் போர்டு முடிவுகளில் இருந்து சிம்லா ஒப்பந்தம் வரை எல்லாவற்றையும் எடுத்துச் சொன்னார் கள். அதிக அதிகாரம் இல்லாத காரணத்தாலே தான் எதுவும் செய்ய முடியவில்லை என்று சொல்லும் நாவலர் அவர்கள், இருக்கிற அதி காரத்தை வைத்து என்ன செய்தார்கள்?

கல்வித் துறையைச் சீர்திருத்த வேண்டுமென்று சொன்னால், அவர் என்ன சொல்கிறார்? சுக்லா கமிட்டி பரிந்துரை வரட்டும் என்று சொல்கிறார். ஏன் அதை நாம் எதிர் பார்க்க வேண்டும்? சுக்லா கமிட்டி மத்திய அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டது. நம்முடைய தமிழகத்தைப் பொறுத்தவரையிலும் கல்வி முறை எப்படியிருக்க வேண்டுமென்று நாமே நிர்ணயித்திருக்கலாம். ஏன் அதை செய்யக் கூடாது? ஏன் நாம் அந்தக் கமிட்டியின் பரிந்துரையை எதிர்பார்த்துக்கொண்டு இருக்க வேண்டுமென்று கேட்கிறேன்.

மாண்புமிகு டாக்டர் இரா. நெடுஞ்செழியன் : சுக்லா கமிட்டி அறிக்கையை நாம் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதற்குக் காரணம், அதன் மூலம் ஏற்படும் செலவு 2½ கோடி, 3 கோடி ரூபாய் அளவுக்கு வரும். அதை யு.ஜி.சி. தான் தர வேண்டியிருக்கிறது. அந்தக் கமிட்டி சொல்கிற பரிந்துரையை நிறைவேற்ற அவர்கள் பணம் தந்தால் தான் நாம் அதை நடைமுறைக்குக் கொண்டு வர முடியும். அதனால் தான் சுக்லா கமிட்டி ரிப்போர்ட்டை எதிர்பார்க்கிறேன் என்று சொன்னேன்.

திரு. கோவை செழியன் : சுக்லா கமிட்டி பரிந்துரையால் நமக்கு அதிகமாகப பணம் வருகிறது என்று சொன்னால் அதை நாம் ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் இப்போது நாம் வைத்திருக்கும் பணத்தைக் கொண்டு பல மாற்றங்களைக் கல்வித் துறையில் செய்யலாமே, அதை ஏன் செய்யாமல் இருக்கிறீர்கள் என்பது தான் என்னுடைய குற்றச் சாட்டாகும்.

மாநிலங்களுக்கு இருக்கிற அதிகாரத்தை வைத்துக் கொண்டு பல காரியங்களைச் செய்வதற்கு நம்முடைய அரசு தவறிவிட்டது என்பது என்னுடைய வாதம்.

உதாரணத்திற்குச் சொல்கிறேன், நூல் நமக்கு வேண்டுமென்றால் மத்திய அரசாங்கத்தின் அனுமதியைப் பெற்றுத்தான் நாம் பெற வேண்டியிருக்கிறது. நமக்கு அந்த அதிகாரம் இல்லை என்று சொல்கிறோம். ஆனால் அதே நேரத்தில் கேரளாவில் இருக்கும் அச்சுதமேனன் அவர்கள் டி.ஐ.ஆர்.இன்கீழ் ஒரு உத்தரவைப் போட்டு ஆலைகளிலே உற்பத்தியாகும் நூல்களை எல்லாம் மாநிலத்துக்கு வெளியே போகக் கூடாது கோவாபரேடிவ் சொசைட்டிகள் மூலம் விற்பனைக்குத் தந்து விட வேண்டுமென்று ஒரு உத்தரவைப் போட்டார்கள். போட்டுவிட்டு, அவர் கோவைக்கு வந்த போது தென்னிந்திய மில் சொந்தக்காரர்கள் அவருடைய கையையும் காலையும் பிடித்துக் கொண்டு, அதைப் புனர் பரிசீலனை செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

அதேபோல் மாராட்டியத்தில் என்ன நடைபெற்று இருக்கிறது? அங்கே விலைவாசி ஏறிவிட்டது என்று தெரிந்தவுடனே பாதுகாப்புச் சட்டத்தை வைத்துக் கொண்டு நாயக் அவர்கள் விலையைக் குறைக்கும்படி ஒரு உத்தரவைப் போட்டார்கள். அப்படியெல்லாம் நிலைமைகள் இருக்கிற

போது, நீங்கள் இருக்கிற அதிகாரத்தை வைத்துக் கொண்டு என்ன செய்தீர்கள்? அதிக அதிகாரம் வேண்டும் என்பதை ஒப்புக் கொள்கிறேன். எந்தெந்த இடங்களில் நமக்குத் தட்டுப்பாடு வருகிறதோ, அந்தந்த இடங்களில் நமக்கு மத்திய அரசாங்கம்............

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: தலைவரவர்களே, இருக்கின்ற அதிகாரங்களை வைத்துக் கொண்டு என்ன செய்தீர்கள் என்று கேட்கிற வாதம், உள்ளபடியே வரவு-செலவுத் திட்டம் போன்ற விவாதங்களிலே நிகழ்த்தப்பட வேண்டிய வாதம். நம்முடைய திரு. செழியன் வாதத்தை ஏற்றுக்கொண்டு, இருக்கின்ற அதிகாரங்களை நாம் செயல்படுத்தவில்லை என்று வாதத்திற்காக ஒப்புக்கொண்டாலும், இருக்கிற அதிகாரங்களைப் பயன்படுத்துகிற ஒரு ஆட்சி வந்தால், அவர்கள் மேலும் அதிகாரங்கள் வேண்டுமென்று கேட்பார்களா இல்லையா என்பதை விளக்க வேண்டுகிறேன்.

திரு. கோவை செழியன்: போட்ட முடிச்சை அவிழ்க்க முடியாவிட்டால் அதறகாக கத்தரிக்கோல் தேட வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: நான் எப்போதும் கத்தரிக்கோல் தேடுவது இல்லை. அப்படிப்பட்ட கூட்டங்களில் போய் அந்த வேலையைச் செய்பவனும் அல்ல.

திரு. கோவை செழியன்: நான் எழுப்பிய பிரச்சினை வேறு. எங்கோ திசை திருப்புகிறார். கேட்ட கேள்விக்கு நேரடியாக சரியான பதில் வரவில்லை. வேறு எங்கோ திசை திருப்புகிறார்கள். அதிக அதிகாரம் தேவை என்பதை நான் முதலிலேயே சொல்லியிருக்கிறேன்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: திசை திருப்புவதாகச் சொல்லி விட்டு, வேறு இடத்திற்கு, வேறு சப்ஜெக்ட்டுக்குப் போய் விடக் கூடாது. இருக்கிற அதிகாரத்தை வைத்து என்ன செய்தீர்கள் என்று வரவு செலவுத் திட்டம், வேறு சில மானியங்கள் வருகிறபோது, இருக்கிற அதிகாரத்தை வைத்துக் கொண்டு என்ன செய்தீர்கள் என்று கேட்கும் உரிமை திரு. கோவை செழியனுக்கு, எதிர் கட்சியினருக்கு இருக்கிறது. திறமை இருக்கிறது.

ஆனால் நான் கேட்பது, வேறு ஒரு ஆட்சி, இருக்கிற அதிகாரத்தைப் பயன்படுத்தி விட்டு, மேலும் அதிகாரங்கள் இந்த அரசுக்கு, இந்த மன்றத்திற்குத் தேவை, ஸ்டேட் ஆடானமி தேவை என்று கேட்பது சரியா அல்லவா என்பது என் கேள்வி.

திரு. கோவை செழியன் : மறுபடியும் நான் சொல்கிறேன். நம் முடைய மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் சொல்கிறார்கள், இருக்கின்ற அதிகாரத்தை வைத்து என்ன செய்தீர்கள், இன்ன காரியங்களை ஏன் செய்ய முடியவில்லை என்பதைப் பொது விவாதத்தில் பேசவேண்டும், இப்போது பேசக் கூடாது என்று சொல்கிறார்கள். இதிலே தான் பேச வேண்டும். இந்தத் தீர்மானம் ஒரு 'எக்ஸ்டிரா-ஆர்டினரி சிட்சுவேஷன். இது வேறு எந்த மன்றத்திலும் வரவில்லை, நம்முடைய மன்றத்திலே தான் வந்திருக்கிறது. இங்கே தான் கேட்க முடியுமே தவிர, பட்ஜெட் விவாதத்தில் சில பேருக்குப் பேச வாய்ப்புக் கிடைக்காமல் கூடப் போய் விடுகிறது. பேசவேண்டிய நேரம் இருக்கிற அதிகாரத்தை வைத்து, மற்றவர்கள் இன்ன காரியங்களைச் செய்து இருக்கிறார்கள், நீங்கள் ஏன் செய்யவில்லை என்பதை இந்தத் தீர்மானத்திலே கேட்கக் கடமைப் பட்டிருக்கிறேன். அதற்குப் பதில் நீங்கள் நாளைக்குச் சொல்லித் தீர வேண்டும்.

இருக்கிற அதிகாரத்தை ஒழுங்காகப் பயன்படுத்தி இன்னின்ன காரியங் களை எங்களால் செய்ய முடியவில்லை, இன்னின்ன காரியங்களைச் செய் வதற்கு இவையிவை தடையாக இருக்கின்றன என்று அவர்கள் சொல் லட்டும். அதிகாரங்கள் தேவை என்று நான் முதலிலேயே சொன்னேன்.

மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் தேவை என்று ஒரு வரித் தீர் மானம் கொண்டு வந்திருந்தால் மத்திய அரசும் அதை ஏற்றுக் கொண் டிருக்கும், என்ன அதிகாரங்கள் தேவை என்று கேட்டிருக்கும். அதற்குப் பதிலாக நாமே ஒரு லிஸ்டைப் போட்டு வைத்துக் கொண்டு, இன்னின்ன அதிகாரம் தேவை என்று நாமே முடிவு எடுத்து மத்திய அரசுக்குச் சொல்வது எப்படி விவேகம் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அதிக அதிகாரம் தேவை என்று கேட்போம்.

இப்போது கூட உங்கள் கருத்தை மாற்றிக் கொள்ளுங்கள், மாநிலங் களுக்கு அதிக அதிகாரம் தேவை என்று ஒரு வரித் தீர்மானம் கொண்டு வாருங்கள். நாங்கள் முழு மனதோடு ஏற்றுக் கொள்கிறோம். அதற்காக எத்தகைய போராட்டத்திலும் உங்களோடு சேர்ந்து நிற்கத் தயாராக இருக்கிறோம். இலையில் உட்காருவதற்கு முன்பே, சாப்பாட்டைப் பற்றி முடிவு எடுத்துவிட்டு, எனக்குச் சாம்பார் வேண்டும், பாயசம் வேண் டாம், அது வேண்டும், இது வேண்டாம்என்று சொல்வதுபோல், என்ன அதி காரம் தேவை என்று மத்திய அரசாங்கம் கேட்பதற்கு முன்பே ஒரு பட் டியலை இங்கே நாம் போட்டு வைத்து இருக்கிறோம்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : தலைவரவர்களே, இப்போது எல்லாம் இலையிலே உட்காருவதற்கு முன்பே, மெனு கார்டு என்று ஒரு பட்டியல் வைத்து விடுகிறார்கள்.

[1974 ஏப்ரல் 19

திரு. கோவை செழியன் : ஏற்றுக் கொள்கிறேன், இலையில் உட்காருவதற்கு முன்பே மெனு கார்டு கொடுக்கிறார்கள் என்று சொன்னார்கள். இலையில் உட்காருவதற்கு உங்களை அழைக்கவே இல்லையே? அதற்குப் பின்னாலே தான் மெனுவைப் பார்க்க வேண்டும். பந்தியில் உட்கார அழைக்க வில்லை, பந்திக்கு அழைக்காதபோது மெனு எங்கே வருகிறது? ஆகவே நான் இப்போது அதிகாரங்கள் என்ன இருக்கின்றன, என்னென்ன அதிகாரங்கள் தேவை என்பதை டேபிளில் உட்கார்ந்து நாம் விவாதிக்க வேண்டும் என்று சொல்கிறேன்.

நான் இன்னும் சொல்கிறேன், கோலக்நாத் கேஸ் தீர்ப்பளிக்கப்பட்ட பின்பு, ஆர்டிகிள் 24-க்கு பாராளுமன்றத்தில் திருத்தம் வருகிறபோது, ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்து நம்முடைய அனுமதியைப் பெற்று இருக்கிறார்கள். அதிலே எப்படி யென்றால், இனிமேல் "பண்டமெண்டல்-ரைட்ஸ்" பற்றி எந்த விதமான ஒரு முடிவையும் பாராளுமன்றம் செய்து கொள்ளலாம் என்பதாகும். அந்த அதிகாரம் பாராளுமன்றத்திற்கு வருகிறது. அந்த அதிகாரத்தைப் பாராளுமன்றத்தில் பெறுவதற்காக தீர்மானம் நிறைவேற்றியபோது, "சுவராஜ்யா" பத்திரிகையில் எழுதினார்கள்.

'The D.M.K. has missed the bus.

அன்றைக்கு அந்தத் தீர்மானம் பாராளுமன்றத்தில் வந்தபோது தி.மு.க. உறுப்பினர்கள் என்ன செய்தார்கள். மாநிலங்களைக் கேட்டுக் கொண்டு தான் அந்தத் திருத்தம் செய்ய வேண்டுமென்று அன்றைக்கு ஏன் கேட்க வில்லை? அன்றைக்கு பஸ்ஸை விட்டு விட்டு இன்று பஸ்ஸுக்காக ஏங்கிக் காத்துக்கொண்டு இருக்க வேண்டிய நிலைமை இருக்கிறது.

ஆகவேதான், என்ன அதிகாரங்கள் தேவை இல்லை, என்னென்ன அதிகாரங்கள் தேவை என்பதை யெல்லாம் டேபிளில் உட்கார்ந்து கொண்டு முடிவு எடுக்க வேண்டுமென்று சொல்கிறேன். அதற்காக தயவு செய்து தீர்மானத்தை மாற்றிக்கொள்ளுங்கள். நாங்கள் எல்லாம் ஏற்றுக் கொள்கிறோம். காங்கிரஸ் கட்சிக்காரர்கள் ஒப்புக்கொள்வார்களோ என்னவோ தெரிய வில்லை. அவர்களும் ஒப்புக்கொள்ள வேண்டும். ஆக, அதிக அதிகாரங்கள் தேவை என்ற அடிப்படையில் தீர்மானம் வரவேண்டுமென்று சொல்லிக்கொள்கிறேன்.

(மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் தலைமை.)

உலகத்தில் இருக்கும் "பெடரல்-செட்டப்" எப்படி விளங்குகிறது என்பதைப் பற்றி நாவலர் அவர்கள் சொன்னார்கள். பெடரல் செட்டப் எந்த நாட்டில் இருக்கிறது? ஸ்டேட்ஸ்க்கு என்ன அதிகாரம் இருக்கிறது என்று சொன்னார்கள். சோவியத் ரஷ்யா பற்றிக்கூட சொன்னார்கள். சோவியத்

ரஷ்யாவிலே தனிக்குடியரசு இருக்கிறது என்று சொன்னாலும்கூட, சோவியத் அரசாங்கத்தின் பிளானிங் அனைத்தும் மத்திய கூட்டாட்சியின் தலைமையில் செய்கிறார்கள். ஒரே கட்சியின் ஆட்சி. அந்தக் கட்சி என்ன தீர்மானம் போடுகிறதோ அதை எல்லா அரசுகளும் முழுமையாக நிறைவேற்ற வேண்டும். ஆகவேதான், மாநிலங்களுக்கு அதிகாரம் என்று கொடுத்து இருக்கிறார்கள்.

நான், இதைச் சொல்வதற்காக மத்திய அரசு பெடரல் அமைப்பெல்லாம் போய், யூனிடரி கவர்ன்மெண்ட் வர வேண்டும் என்று சொல்லவில்லை. வாதத்திற்காகத்தான் இதைச் சொல்கிறேன். நம்முடைய பண்டிட் ஜவஹர்லால் நேரு அவர்கள்—பேரவைத் துணைத்தலைவர் அவர்களே, உங்களுடைய அனுமதியோடு படிக்கிறேன்—சோவியத் ரஷ்யா என்ற தலைப்பில் அவர் எழுதிய புத்தகத்தில் :

"The supreme authority is the Union Congress"

என்று சொல்லி அதற்குப் பின்னால் விளக்கம் சொல்லும்பொழுது, சுப்ரீம் அதாரிட்டி காங்கிரஸ் தான். கம்யூனிஸ்ட் என்ற ஒரு கட்சி இருக்கிறது, அந்தக் கட்சி அடிப்படையில் காங்கிரஸ் எடுக்கிற முடிவு அங்கே வருகிறது.

அடுத்தாற்போல் அமெரிக்கன் ஸ்டேட்டைப்பற்றிச் சொன்னார்கள். அமெரிக்கன் ஸ்டேட்டில் பெடர்ல்என்ற வாசகம் போடப்பட்டிருக்கிறது. ஆனால் நடைமுறையில் எப்படி நடைபெற்று வருகிறது. மாண்புமிகு சுப்பிரமணியம் அவர்கள் குறிப்பிட்டது மாதிரி தலைமையரசு மாநிலங்கள் மேல் நடவடிக்கை எடுக்கலாம். அங்கே ஒரு மாநிலத்தில் அவர்களுடைய மாநிலத்திற்கு உள்ள அதிகாரத்தை வைத்துக் கொண்டு நீக்ரோக்களை சில பள்ளிகளில் அனுமதிக்கக் கூடாது என்று தீர்மானம் போட்டார்கள். போட்டுவிட்ட பிறகு மத்திய அரசினுடைய உத்தரவை மதிக்காமல் அங்கு இருக்கிற கவர்னர் நடந்துகொண்டார். உடனே அமெரிக்கன் கவர்ன்மெண்ட் ராணுவத்தை அனுப்பியது. ராணுவத்தை அனுப்பி, நீங்கள் எடுத்துத் தீரவேண்டும் என்று சொல்லியது.

அடுத்தாற்போல சுவிட்ஜர்லாண்டைப்பற்றிச் சொன்னார்கள். சுவிட்ஜர்லாண்டில் இருக்கிற மாதிரி நாம் போட்டுக் கொண்டிருக்கிறோம். ஆனால் ஸ்விட்ஜர்லாண்டில் "ரைட் டு ரிகால்" இருக்கிறது. அதாவது மந்திரி ஒருவர் அல்லது சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவர் பின்சரியாக இயங்கவில்லை என்றால் அவரைத் திருப்பி அழைக்க முடியும். அது மட்டுமல்ல, பெரிய திட்டங்கள், தீர்மானங்கள் எல்லாம் மக்களிடம் வோட்டு எடுத்துத்தான் நிறைவேற்றுகிறார்கள். குடிமக்களுடைய வோட்டுப் போட்டுத் தான் பெரிய மாற்றங்களை அங்கே செய்கிறார்கள். ரெப்ரெண்டம் எடுக்கிறார்கள். அதற்கு நீங்கள் தயாரா? அப்படித் தயார் என்றால், முன்வரிசையில் நீங்கள் யாரும் உட்கார்ந்திருக்க முடியாது. "ரைட் டு ரிகால்" நாட்டு மக்களுக்குக்கொடுத்திருந்தால் இன்றைக்கு இந்த ஆட்சி இருக்காது. மற்ற நாடுகளைப்பற்றி நாம் எடுத்துச் சொல்கிறபொழுது சாதக பாதகங்களை நாம் எடுத்துப்பேசவேண்டும்.

மாண்புமிகு திரு. க. இராசாராம்: தலைவர் அவர்களே, "ரைட் டு ரிகால்" பற்றி கோவை செழியன் அவர்கள் சொன்னார்கள். எந்த நாட்டில் "ரைட் டு ரிகால்" என்பதைப் பயன்படுத்தி எந்த உறுப்பினரையாவது பின் வாங்கியிருக்கிறீர்களா என்பதை உதாரணத்தோடு சொல்ல முடியுமா?

திரு கோவை செழியன் : மாண்புமிகு அமைச்சர் அவர்கள் பொலிடிகல் சயன்ஸை நல்ல முறையில் படித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். "கான்ஸ்டிட்யூஷன் ஆஃப் ஸ்விட்ஸர்லாண்ட்"....

மாண்புமிகு திரு. க. இராசாராம் : கான்ஸ்டிட்யூஷன் இருக்கிறது நான் கேட்டது, இந்த "ரைட் டு ரிகால்" என்பதைப் பயன்படுத்தி எந்த உறுப்பினரையாவது எந்த நாட்டிலாவது திரும்பப் பெற்றுக் கொண்டிருக்கிறார்களா?

திரு. கோவை செழியன் : அவரே சொல்லி மாட்டிக் கொண்டிருக்கிறார். ஸ்விட்ஜர்லாண்ட் நாட்டில் இந்த "ரைட் டு ரிகால்" இருக்கிறது. அங்கே இருக்கிற அமைச்சர்கள் தப்புச் செய்யவில்லை. அதனால் "ரைட் டு ரிகால்" என்பதைப் பயன்படுத்தவில்லை. அவர்கள் தப்பு செய்திருந்தால் நிச்சயம் பயன்படுத்தியிருப்பார்கள். அவர்கள் அங்கே நாணயமாக நடந்து கொள்கிறார்கள், யோக்யதையுடன் நடந்து கொள்கிறார்கள். மக்கள் குறை சொல்கிற வகையில் அவர்கள் அங்கே இயங்கவில்லை. எனவே என் திருப்பி அழைக்க வேண்டும்? கத்தி இருக்கிறது என்ற காரணத்தினால் யாரையாவது வெட்டிவிடுவது என்பது முடியுமா? கத்தி கொடுத்திருக்கிறார்கள் பாதுகாப்புக்காக. சுடலாமா?(சிரிப்பு). மன்னிக்கவும். துப்பாக்கி (சிரிப்பு).

இரண்டாவதாக, இந்த மாநில சுயாட்சி என்பது....(குறுக்கீடு) (திரு. செ. கந்தப்பன் எழுந்திருந்தார்) எனக்குக் கொஞ்சம் நேரத்தைக் கூட ஒதுக்க வேண்டும். இல்லாவிட்டால் நான் உட்காரமாட்டேன்.

திரு. செ. கந்தப்பன் : அமெரிக்க நீக்ரோ பிரச்னையைப் பற்றிப் பேசும்பொழுது ஒரு மாநிலத்தில் எடுக்கப்பட்ட முடிவுக்கு எதிராக மத்திய அரசின் ராணுவம் சென்றது என்ற ஒரு தகவலைத் தந்தார்கள். மாநிலத்தில் இருக்கிற சட்டமன்றத்திற்கு எதிராக மத்தியில் இருக்கிற செனட்டோ அல்லது காங்கிரஸோ ராணுவத்தை அனுப்பவில்லை. நீதிமன்றத்தின் தீர்ப்பை அந்த மாநிலம் அமுல் படுத்தவில்லை என்பதற்காக எடுக்கப்பட்ட நடவடிக்கையாகும் அது.

திரு. கோவை செழியன் : நீதிமன்றத்திற்கு அங்கே அவ்வளவு அதிகாரம் இருக்கிறது. இங்கே நம்முடைய உயர் நீதிமன்றத்தில் எடுக்கப்படுகின்ற முடிவுகள் சுப்ரீம் கோர்ட்டுக்குப் போக முடியாது என்ற நிலையை நீங்கள் கொண்டு வந்திருக்கிறீர்கள்.

திரு. செ. கந்தப்பன்: சுப்ரீம் கோர்ட்டுக்குப் பதிலாக ஹைகோர்ட் இருக்கிறது. நீதிமன்றத்திற்கு அதிகாரம் இல்லை என்று நாங்கள் சொல்லவில்லை.

திரு. கோவை செழியன்: ஒரு ஸ்டேட்டில் தன்னுடைய அதிகாரத்தை, தீர்மானத்தை நிறைவேற்ற முடியவில்லை என்ற நிலை வருகிற பொழுது அங்கே இருக்கிற மத்திய அரசு சுப்ரீம் நீதிமன்றத்தில் விண்ணப்பித்து ராணுவத்தை அனுப்புகிறார்கள். அந்த அளவுக்கு அதிகாரம் அங்கே கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. மாநிலத்தின் அதிகாரம் அங்கே கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது.

இங்கே நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? ஹைகோர்டில் இருக்கிற ஜட்ஜ்களையெல்லாம் நாங்கள் தான் போடுவோம், இங்கே இருக்கிற கவர்னர் தேவையில்லை என்று சொல்கிறீர்கள். கொஞ்சம் கற்பனைசெய்து பார்க்க வேண்டும். இங்கே இருக்கிற ஹைகோர்ட் ஜட்ஜ்களை நீங்கள்தான் போடவேண்டும். கவர்னர் தேவையில்லை என்றால், இந்த நாடு என்ன ஆவது ?

இப்பொழுது இருக்கிற அதிகாரத்தை வைத்துக் கொண்டே இந்த நாட்டில் எதிர்க்கட்சியிலிருப்பவர்கள் என்ன கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்? நீங்கள் என்ன கொடுமையைச் செய்து கொண்டிருக்கிறீர்கள்? கோவை எலெக்ஷனில் எங்களுடைய கட்சிக்கு வேலை செய்த ஒருவரை பி-1 ஸ்டேஷனில் ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் பிடித்துக் கொண்டு போய் தி.மு.க.-வுக்கு வேலை செய் என்று உதைத்திருக்கிறார்கள். இருக்கிற அதிகாரத்தை வைத்துக் கொண்டே இப்படிச் செய்கிறீர்கள்.

என்னுடைய தொகுதியிலே ஒரு சர்கிள் இன்ஸ்பெக்டர் இருந்துகொண்டு பண்ணக்கூடாத அக்கிரமங்களையெல்லாம் செய்துகொண்டிருக்கிறார். நான் சொல்வது எதையும் கேட்பதில்லை. இந்த அதிகாரத்தை வைத்துக் கொண்டு இதைச் செய்து கொண்டிருக்கிறார்கள். (சிரிப்பு). இவ்வளவு பெரிய பிரச்சினையைப்பற்றி பேசுகிற பொழுது இதை யெல்லாம் சொல்ல வேண்டிய நிலை வருகிறது. நான் சொல்கிற நியாயத்தைக் கூட அவர் கேட்கமாட்டேன் என்கிறார். வேறு எதைச் சொல்வேன் ?

அரிசனக் குடிசையில் தீ வைத்துவிட்டார்கள். அதைப் போய விசாரியுங்கள் என்று சொன்னால், மேலிடத்திலிருந்து உத்தரவு வரவேண்டும் என்று இன்ஸ்பெக்டர் சொல்கிறார். அவரைக் கூப்பிட்டுக் யாராவதுகேட்டீர்களா ? நானும் ஒரு வாரமாகச் சொல்லிக்கொண்டிருக்கிறேன். அந்த சர்க்கிள் இன்ஸ்பெக்டர் அக்கிரமம் செய்து கொண்டிருக்கிறார். யாராவது அவரைக் கூப்பிட்டு கேட்டீர்களா ? அரிசனக் குடிசைக்குத் தீவைத்துவிட்டீர்கள். உங்களுக்கு இப்பொழுது இருக்கிற அதிகாரத்தையே துஷ்பிரயோகம் செய்து கொண்டிருக்கிறீர்கள்.

* * * *

---

*மாண்புமிகு பேரவைத் தலைவரின் ஆணைக்கிணங்க அகற்றப்பட்டது.

MR. DEPUTY SPEAKER: Reference to the High Court Judge may be avoided.

THIRU RAMA ARANGANNAL: It may be expunged.

MR. DEPUTY SPEAKER: All the references made by the hon. Member about the High Court Judges is expunged.

THIRU R. PONNAPPA NADAR: Sir, may I submit one thing? I am not questioning the ruling that is given. It is only the conduct of the judge that should not be discussed. We are not here discussing about the conduct of a particular judge and I do not think there would be anything inappropriate in what the hon. Member has stated because so far as the judiciary is concerned that is one of the matters recommended by the Rajamannar Committee. So, we would be justified in making our observations just to support our argument.

திரு. கே. டி. கே. தங்கமணி: ஜட்ஜுளைப் பொறுத்த வரையில் அவர்கள் நேர்மையாக இருப்பவர்கள் என்ற நம்பிக்கை நமக்கு வேண்டும் என்றெல்லாம் சொல்கிறோம் அப்படி இருக்கும் பொழுது * * * என்று இருக்கும் நிலையில் அவர்கள் அப்படிப் பேசுவது தவறு என்று சொல்வதில் என்ன தடை இருக்க முடியும்.

He is not referring to the conduct of the judge.

ஜட்ஜ்களாக வந்த பிறகு கண்டிப்பாக "They must be above board" என்று கூறுகிற பொழுது, அவர்கள் இம்மாதிரி செய்கிறார்கள். அப்படிச் செய்வது தடுக்கப்பட வேண்டும் என்று சொல்வதிலே என்ன தடை இருக்க முடியும் ?

MR. DEPUTY SPEAKER: In our rules no distinction is made between the conduct of a judge and the discharge of his duties. Our rules relate to the general conduct of the judge and therefore he should not make any reference to the conduct of the judge here.

THIRU R. PONNAPPA NADAR: Sir, may I bring to the notice of the House the provisions of Article 211 of the Constitution? Article 211 says—

'No discussion shall take place in the Legislature of a State with respect to the conduct of any Judge of the Supreme Court or of a High Court in the discharge of his duties.'

[Thiru R. Ponnappa Nadar.]

So, we can discuss about other matters. Policy matters can be discussed and there is nothing wrong in it. So, if such an interpretation is being given, it would infringe upon the rights of the Members. So far as we are concerned, we are supreme and whatever is said in this House cannot be challenged in the Court also.

மாண்புமிகு* திரு. க. அன்பழகன் : அவர் சொன்ன விளக்கம் பேசப்பட்ட கருத்தை ஒட்டி தரப்பட்ட விளக்கம் அல்ல, பொதுவான கருத்தைத் தான் விதி முறைப்படி திரு. பொன்னப்ப நாடார் சொல்கிறார் கள். ஆனால் இங்கே பேசப்பட்ட வாசகம் நீதிபதி பொறுப்பிலுள்ளவர்கள்.

* * * * * * *

எனவே * * * * என்ற சொற்றொடர் அந்தக் கருத்துக்கு இடம் தருகிறது. சட்டமன்றம் எவ்வளவு சுப்ரீமாக இருந்தாலும், அதற்குச் சமமாக உள்ள இன்னொரு மன்றத்தில் உள்ளவர்களுடைய தகுதியைக் குறைப்படுத்துச் சொல்வதற்கு இந்த அவையிலே இடம் தரக்கூடாது.

THIRU R. PONNAPPA NADAR : Sir, may I once again say that the discharge of his duty is the discharge of his judicial function. If he goes to the Hon. Minister's house for attending a social function, it does not infringe the rules. If he meets friends that is another matter. So far as these matters are concerned, the hon. Member can say that such and such things are happening. Justice should not only be done but it should appear to be done. It is for this purpose that judges are prohibited from meeting politicians and other persons. That is the reason why the Constitution has specifically made a provision that the conduct of the judge in the discharge of his judicial function should not be criticised.

மாண்புமிகு திரு. க. அன்பழகன் : * * * * * * ஆகவே அப்படி நீதிபதிகளைப் பற்றிக் குறிப்பிட்ட வார்த்தைகளை அவைக் குறிப்பிலிருந்து எடுத்துவிட வேண்டும் ; குறிப்பில் இடம் பெறக் கூடாது.

திரு. கே. டி. கே. தங்கமணி : சார், ஏற்கனவே இந்த அவையில் அதுபற்றிய மானியம் வந்தபோது நான் சில கருத்துக்களைச் சொல்லி யிருக்கிறேன். அப்போது சில ஜட்ஜ்களின் நடத்தைப் பற்றியும் குறிப்

---

*மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவரின் ஆணைக்கிணங்க அகற்றப் பட்டது.

பிட்டிருக்கிறேன். பொதுவாக, அவர்களுடைய பணிகளில் ஏற்படுகின்ற சில குறைபாடுகளைப் பற்றி நாம் சொல்கிறோம். அப்படிச் சொல்வதில் தவறு இல்லை. நமக்குத் தெரியும். இங்கே சில ஜட்ஜ்கள் சம்மன் அனுப்பி, வா என்று அழைத்தால் கூட, முடியாது என்று சொல்ல நமக்கு அதிகாரம் இருக்கிறது. டெபுடி ஸ்பீக்கருக்கு சம்மன் அனுப்பி அழைத்த போது, போகக் கூடாது என்று நாம் சொல்லியிருக்கிறோம். அதில் தவறு கிடையாது.

ஆனால், ஜட்ஜ்களுடைய ஜூரிஸ்டிக்ஷனில் உள்ள விஷயங்களைப் பற்றி நாம் ஏதாவது விமர்சனம் செய்வதாக இருந்தால் அது தவறாகும். அப்படி நாம் சொல்லக் கூடாது மற்ற பொதுவான விஷயங்களைச் சொல்லலாம்.

திரு. துரை முருகன் : * * *

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : நண்பர் துரை முருகன் அவர்கள் விளக்கத்திற்குத் தருகின்ற விளக்கமும் விபரீதத்தில் போய், முடிகிறது. ஆகவே, இந்த விவாதத்தில் இதுவரையில் நடந்தவைகளை அவை நடவடிக்கைக் குறிப்பில் இருந்து எடுத்துவிட வேண்டுமென்று துணைத் தலைவரவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : நீதிபதிகள் பற்றி இது வரையில் சொல்லப்பட்ட கருத்துக்களை அவைக் குறிப்பிலிருந்து நீக்க உத்தரவிடுகிறேன். அதற்கு முக்கியமான காரணம், நீதிபதிகளைப் பதவியிலிருந்து நீக்க வேண்டுமென்றால் பார்லிமெண்டிலே தீர்மானம் போட்டு நீக்குவதற்குத் தான் அதிகாரம் இருக்கிறது. அதைப்பற்றிப் பேச நமக்கு அதிகாரம் இல்லை. ஆகவே, அப்படிப்பட்ட விஷயங்கள் நம்முடைய நடவடிக்கைக் குறிப்பில் இடம் பெறக் கூடாது.

திரு. கே. டி. கே. தங்கமணி : சார், ஜுடிஷியல் நிர்வாகம் சரியாக நடைபெறவில்லை என்று சொல்வதற்கு அதிகாரம் உண்டு. ஆனால் அவர்கள் வழங்குகின்ற தீர்ப்புச் சரியா, தவறு என்பதைப் பற்றி விமரிசிப்பதற்கு நமக்கு அதிகாரம் இல்லை. அந்த மானியத்தின் போதும் பல விவரங்களைக் குறிப்பிட்டிருக்கிறேன். இன்றைக்கு ஜட்ஜுகள் இச்சைப்படி பணியாற்ற சில இடையூறுகள் இருக்கின்றன. அந்த முறையில் நான் சொல்லியிருக்கிறேன். அதைத்தான் அவர்கள் வேறு முறையில் சொன்னார்கள். இன்றைக்கு நீதிபதிகள் விருப்பம்போல் பணியாற்ற முடியவில்லை ; அந்த அளவுக்குத் தலையிடுகிறார்கள்.

---

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவரின் ஆணைக்கிணங்க அகற்றப்பட்டது.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : திரு. கே. டி. கே. அவர்கள் நீதிபதிகள் நல்ல முறையில் செயலாற்ற முடியாத படி இடையூறுகள் இருக்கின்றன என்று சொன்னார்கள். அப்படிச் சொல்லலாம். திரு. செழியன் அவர்கள். * * * * *
அப்படிச் சொல்வது சரியல்ல.

திருமதி த. ந. அனந்தநாயகி : * * * *
என்று சொன்னால் அவர்களைப் பற்றி மக்களுக்கு என்ன யோசனை வரும் ?

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : நீதிபதிகளைப் பற்றி இங்கே குறிப்பிட்ட கருத்துக்கள் சரியல்ல என்று சொல்லியாகி விட்டது. அதைப் பற்றித் திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டுமென்றல்ல. தீர்ப்பு சொன்ன பிறகு மீண்டும் அதைப் பற்றிப் பேச வேண்டாம்.

திருமதி த. ந. அனந்தநாயகி : இப்படிச் செய்தால் நாங்கள் எல்லாம் பேச முடியாமல் போய்விடும்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : அரசியல் அமைப்புச் சட்டப்படி நீதிபதிகளைப் பற்றி நாம் பேச முடியாது ; நமக்கு அதிகாரம் இல்லை. அதனால் நாம் ஏன் அவர்களைப் பற்றிப் பேச வேண்டும்.

திருமதி த. ந. அனந்தநாயகி : அவர்கள் இச்சைப்படி வேலை செய்ய முடியவில்லை என்று சொன்னால் அவர்கள் மீது எப்படி நம்பிக்கை இருக்கும் என்று ஏன் கேட்கக் கூடாது ? ஏதாவது வழக்கில் தவறான தீர்ப்பைக் கொடுத்தார்கள் என்று சொல்வது தவறு. அப்படிச் சொல்லாமல் மற்ற விஷயங்களைப் பற்றிப் பேசுவதற்கு உரிமை இருக்கிறது.

THIRU R. PONNAPPA NADAR : May I ask one clarification? Am I to understand whether the speech of Mr. Durai Murugan has been expunged or points of orders that have been raised or points of clarifications that have been raised—all these also have been expunged?

MR. DEPUTY SPEAKER : If the leader of the opposition so desires, we will sit and discuss about retaining certain portions and expunging certain portions. We will reserve our ruling.

Meanwhile, I request the Press not to publish any of the procedings.

---

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவரின் ஆணைக்கிணங்க அகற்றப்பட்டது.

திரு. கோவை செழியன் : துணைத் தலைவரவர்களே, இங்கே அதிகாரம் எப்படி வருகிறது என்று பார்த்தீர்களா ? தங்கள் விருப்பப்படி செய்ய முடிகிறதா ? இல்லையே. முதலமைச்சரவர்கள் நான் .பேசிய வாசகத்தை எடுத்துவிட வேண்டும் என்று சொன்னார்கள். நீங்கள் எடுத்து விட்டீர்கள்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : துணைத் தலைவரவர்களே, நண்பர் செழியன் அவர்கள் பேசும்போது, தாங்களே தலையிட்டு நடவடிக்கை குறிப்பிலிருந்து எடுத்துவிட வேண்டுமென்று சொன்னீர்கள். நான் அப்படிச் சொல்லவில்லை.

திரு. கோவை செழியன் : முதலமைச்சரவர்கள் சொன்னார்கள், அதன் பிறகு தான் நீங்கள் நீக்கியிருக்கிறீர்கள்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : இப்போதே எப்படி அவதூறு கூறுகிறார் என்பதைப் பார்த்தீர்களா ?

திரு. கோவை செழியன் : இப்போது நம்முடைய கண் முன்னாலே நடந்தது. அதையே மறுக்கிறார்கள். நாளை என்.குயரி கமிஷன் வந்தால் எப்படி இருக்கும் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

நான் பேசும்போது தனித்தனியாக எந்த நீதிபதியின் நடவடிக்கை பற்றியும் பேசவில்லை. பொதுவாக ஜட்ஜுகளை நியமிக்கின்ற அதிகாரம் மாநில அரசுக்கு இருக்குமானால், அந்த ஜட்ஜ் போஸ்டை வாங்குவதற்கு முன்னாலே சுற்றுவார்கள். ஜட்ஜ் போஸ்ட் வாங்கிய பின்னால் இப்படி அடிக்கடி...............

மாண்புமிகு திரு. செ. மாதவன் : அந்தக் கருத்தைக் கொஞ்சம் விளக்கினால் நல்லது. மாநில அரசு உயர் நீதிமன்றத்திற்கு நீதிபதிகளை நியமிப்பதால் இப்படிப்பட்ட ஒரு நிலை வரும் என்று சொல்கிறார்கள். அதில் கருத்து வேறுபாடு இல்லை. அதே முறையில் மத்திய அரசு உச்ச நீதிமன்றத்திற்கு நீதிபதிகளை நியமனம் செய்கிறார்டள்.

அது மட்டுமல்ல, இந்த உயர் நீதிமன்றத்திற்கு இறுதியாக நீதிபதிகளை நியமிக்கும் உத்தரவை அவர்கள்தான் போடுகிறார்கள். ஆவே, அந்தக் கருத்து தவறு என்பதை ஏற்றுக்கொள்கிறேன். அப்படியானால் இரண்டுக்கும் பொதுவான ஒரு கருத்தை முடிவாகச் சொல்ல வேண்டும். அது என்ன கருத்து என்பதை எல்லோரும் சேர்ந்து முடிவு செய்யலாம்.

திரு. கோவை செழியன் : அமைச்சரவர்கள் கொஞ்சம் "லேட்டாக" வந்திருக்கிறார்கள். நான் ஆரம்பத்திலேயே எல்லாவற்றையும் தெளிவாகச் சொல்லியிருக்கிறேன். ஒரு புதிய முறை வேண்டும். அரசியல்

சட்டத்தை மாற்ற வேண்டும் என்பதற்குப் பதிலாக புது அரசியல் சட்டத்தைக் கொண்டு வர வேண்டும். இந்த விவரங்களைப் பற்றி பின்னால் தெளிவாகச் சொல்லப் போகிறேன். மாநில அரசாக இருந்தாலும், மத்திய அரசாக இருந்தாலும் நீதிபதிகளைப் போடுகின்ற அதிகாரத்தைக் கையில் வைத்துக்கொண்டு இருக்கும்போது, அவர்களுக்குச் சாதகமாகத் தான் இருப்பார்கள்.

உதாரணமாகச் சொல்கிறேன். துணைத் தலைவர் அவர்களே உங்களைப் பற்றி முதலமைச்சரவர்கள் குறிப்பிடும்போது நன்றி உணர்வோடு நடந்து கொள்வார்கள் என்று சொன்னார்கள். உங்களைத் துணைத்தலைவராகத் தேர்ந்தெடுத்து விட்டு, நன்றி உணர்வோடு நடந்து கொள்வார்கள் என்று சொன்னால் அதற்கு என்ன பொருள் ?

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : நன்றி உணர்வு மிக்கவர் என்று தான் அவர்கள் சொன்னார்கள் ; நன்றி உணர்வோடு நடந்து கொள்வார்கள் என்று அவர்கள் சொல்லவில்லை.

திரு. கோவை செழியன் : அந்த மாதிரி அவர்கள் என் சொல்ல வேண்டும் ?

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : நான் நடக்க வேண்டியவைகளைச் சொல்லவில்லை ; நடந்தவைகளைச் சொன்னேன்.

திரு. கோவை செழியன் : அதற்குப் பரிசு பல இடங்களில் கிடைத்திருக்கிறது. நான் சிலவற்றைப் பேச வேண்டாமென்று நினைத்திருந்தேன். இப்போது அதை யெல்லாம் பேச வைத்துவிட்டார்கள். இப்போது இருக்கின்ற அதிகாரங்களை எந்த அளவுக்கு பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள் என்பதைப் பார்க்க வேண்டும். நான் சிலவற்றைத் தான் குறிப்பிட்டிருக்கிறேன். இங்கே இப்போது என்னென்ன தவறுகள் நடைபெறுகின்றன என்பது எல்லோருக்கும் தெரியும். அதைத் தடுக்க முடியவில்லை. முதலமைச்சர் உத்தரவு போடுகிறார்கள் என்றால் பரவாயில்லை. முதலமைச்சருடைய . . அதாவது செயலாளர் மிரட்டினால் நாங்கள் எப்படித் தாங்கிக் கொள்ள முடியும்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : நீங்கள் 40, 45 நிமிடங்களுக்கு மேல் பேசிவிட்டீர்கள். இன்னும் 5 நிமிடங்களில் முடித்துவிடுங்கள். அதோடு அவையில் இல்லாத அதிகாரிகளைப் பற்றி இங்கே சொல்லக் கூடாது. உங்களுடைய குற்றச்சாட்டுக்கு அவர்கள் இங்கே பதில் சொல்ல முடியாது. ஆகையால் அவர்களைப் பற்றிப் பேச வேண்டாம்.

[முற்பகல் 11-00]

திரு. கோவை செழியன் : அதனால் அதிகாரம் நமக்குத் தேவை என்று சொல்லுகிற நேரத்தில், நம்மிடத்திலே இருக்கின்ற அதிகாரங்களால் பல நேரங்களில் இடைஞ்சல் தருகிறது.

நேற்று ஒரு மாண்புமிகு உறுப்பினர் ஒருவர் சொன்னார், இங்கே இருந்து ஒரு ரோடு போட வேண்டுமென்றால், மத்திய அரசாங்கத்தினுடைய அதிகாரத்தின்கீழிருக்கிறது. ரோட்டிற்குக் கீழ் ஒரு குழாய் கொண்டு போக வேண்டுமானால், டெல்லிக்கு லெட்டர் எழுத வேண்டும் என்று சொல்லுகிறார்கள். முனிசிபாலிட்டியில் இருக்கின்ற ஒருவன் பி. டப்ளியு.டி. ரோட்டை வெட்டி குழாய் போட வேண்டுமென்றால் மெட்ராஸுக்கு எழுதி, 3 மாதமானாலும் கூட பதில் வருவதில்லை. பெரிய நாட்டில் இப்படி நடப்பது இயற்கை. இதைப் பெரிய குற்றமாக எடுத்துச் சொல்லி வாதிடுவது சரியில்லை.

மாநில சுயாட்சி என்பது அண்ணாவின் கொள்கையல்ல. மாநில சுயாட்சி என்பது நம் முதலமைச்சர் அவர்களாலே உருவாக்கப்பட்ட வாசகமே தவிர, பேரறிஞர் அண்ணா அவர்கள் மாநிலத்திற்கு அதிகாரங்கள் தேவை என்று சொன்னாரே தவிர, இதைச் சொல்ல வில்லை. அவர்களுடைய கருத்திலேயே அதிக அதிகாரம் வேண்டும் என்பது இருக்கின்றன. தேர்தல் அறிக்கையிலே அண்ணா அவர்கள் 8-வது பக்கத்தில் உங்களுடைய அனுமதியோடு படிக்கிறேன்—“மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் தரப்பட்டு உண்மையான கூட்டாட்சி முறை மலர, பலமாக வாதிடுவதாக” அவர்கள் எழுதியிருக்கிறார்களே தவிர, மாநில சுயாட்சி என்று சொல்லவில்லை.

இந்த மாநில சுயாட்சி என்ற வாசகமே எனக்கு ரொம்பப் பரிதாபகரமாக இருக்கிறது. பெரிய கட்சி திராவிட முன்னேற்றக் கழகம். ஒரு காலத்திலே கொடி கட்டிப் பறந்த கட்சி. இதைப் போய் ம.பொ.சி யிடம் கடன் வாங்க வேண்டிய அவசியமில்லை.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : மாநில சுயாட்சியை அண்ணா ஒத்துக்கொண்டிருந்தால், அவர்கள் ஒத்துக் கொள்ளத் தயாரா ? இல்லாவிட்டால் ஒத்துக்கொள்ள மாட்டார்களா ?

திரு. கோவை செழியன் : அண்ணா அவர்கள் மாநிலங்களுக்கு அதிகாரங்கள் வேண்டுமென்று சொன்னார்கள். ஏற்றுக் கொள்கிறோம். அட்டானமி என்று ஒரு இடத்தில் இல்லஸ்ட்ரேடட் வீக்லி நிருபர் பேட்டி காணும்போது அட்டானமி என்ற வாசகத்தைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதற்கு முன்னாலேயும், பின்னாலேயும் படித்தால், அவர் சொல்லுகின்ற வாசகம் வேறு, நீங்கள் சொல்லுகின்ற மாநில சுயாட்சி என்பது அந்தப் பிரிவினை போல்தான் தோன்றுகிறது.

*1974 ஏப்ரல் 19]*

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : மாநில சுயாட்சி என்ற வார்த்தையை அண்ணா பயன்படுத்தியிருந்தால், அப்போதாவது ஒப்புக் கொள்வீர்களா ?

திரு. கோவை செழியன் : அட்டானமி என்ற வாசகம் மாநில சுயாட்சி என்று மொழி பெயர்ப்பாகக் கூட இருக்கலாம். அண்ணா அவர்கள் ஒரு இடத்தில் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதற்கு முன்னாலும், பின்னாலும் பல கருத்துக்களைச் சொல்லி அட்டானமி என்று சொன்னார்கள். அது நீங்கள் குறிப்பிடுவதற்கும், அவர் குறிப்பிடுவதற்கும் மாறுபட்டுக் கொண்டிருக்கிறது.

மாண்புமிகு டாக்டர் இரா. நெடுஞ்செழியன் : தலைவர் அவர்களே, அண்ணா அவர்கள் கூட்டாட்சி என்று ஒத்துக் கொண்டு பேசியிருக்கிறார்கள் என்று படித்துக் காட்டினார்கள். கூட்டாட்சி என்றாலே மாநில சுயாட்சி என்றால் தான் கூட்டாட்சி அமைய முடியும் என்ற கருத்தின்படி, முழு செல்ப் அட்டானமி இல்லாமல் கூட்டாட்சி இல்லை. பெடரேஷன் என்றால் மாநில சுயாட்சி வர வேண்டும். அந்தக் கூட்டாட்சி என்பதிலே மாநில சுயாட்சி இருக்கிறது என்பதை மாண்புமிகு உறுப்பினர் அவர்கள் அறிவார்களா ?

திரு. கோவை செழியன் : இந்திய பெடரேஷன் என்பதைக் கான்ஸ்டிடூஷன் ஒத்துக் கொண்டிருக்கிறதே. இந்தியா தட் ஈஸ் பாரத், ஷேல்பி யூனியன் ஆப் ஸ்டேட்ஸ் பெடரேஷன் என்று தானே அர்த்தம். யூனிட்டரி பார்ம் ஆப் கவர்ன் மெண்ட் என்கின்ற................

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : நான் கேட்பது அண்ணா அவர்கள் மாநில சுயாட்சியை ஒத்துக் கொண்டிருந்தால், நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்களா ?

திரு. கோவை செழியன் : எந்த அடிப்படையில் அண்ணா அவர்கள் சொல்லியிருக்கிறார்களோ, அதை ஒப்புக் கொள்கிறோம்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : எந்த அடிப்படையில் என்பதை நான் நாளை விளக்கிச் சொல்லுகிறேன்.

திரு. கோவை செழியன் : அண்ணா அவர்கள் சொன்னது எதையும் இப்பொழுது கொண்டு வரவில்லை. அண்ணா அவர்கள் மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் வேண்டுமென்று சொன்னால், ம. பொ. சி. யிடம் அந்த வார்த்தையைக் கடன் வாங்கினோம்.

அடுத்தபடியாக இன்னொன்று. இதே திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய கொள்கை சட்ட திட்டத்திலே தெளிவாக இருக்கிறது. பேரவைத் துணைத் தலைவர் அவர்களே, உங்களுடைய அனுமதியோடு நான் அதைப் படிக்கின்றேன். "குறிக்கோள் என்னும் தலைப்பில் தமிழகம், ஆந்திரம், கர்நாடகம், கேரளம் ஆகிய நான்கு மொழிவழி மாநிலங்கள் தன்னாட்சி உரிமை பெற்ற திராவிட சமதர்ம கூட்டாட்சிக்காகப் பாடுபடுவது. 1962க்குப் பின்னாலே கூட, சட்ட திட்டத்தில் தமிழகம், ஆந்திரம், கேரளம், கர்நாடகம் ஆகிய நான்கு மொழிவழி மாநிலங்கள் இந்தியப் பேரரசில் இருக்கின்ற அரசியல் அமைப்புச் சட்டத்திற்குள், இயன்ற அளவுக்கு கூடுதலான அதிகாரம் பெற்று திராவிட கூட்டு அமைப்புக்குப் பாடுபடுவது" என்றார்.

இதைச் சொன்னபோது பலபேர் கேட்டார்கள், திராவிடம் என்று சொல்லுகிறீர்களே, தமிழ் நாடு என்று ஏன் சொல்லக் கூடாது என்று அண்ணா அவர்களே சொல்லியிருக்கிறார்கள். திராவிடம் என்பது "பண்டைய தமிழ்நாடு" என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் இன்றைக்கு என்ன?

ஆதித்தனாரை மந்திரி சபையில் சேர்த்துக் கொண்டீர்கள். அவர் ஆரம்பித்த "நாம் தமிழர் கட்சி"யையும் சேர்த்துக் கொண்டிருக்கிறீர்கள். இது எப்படி நியாயமாகும்? இது அண்ணா அவர்கள் கருத்துக்கு மாறாக வேறு பல கருத்துக்களை நாம் தேடிக் கொண்டு வந்திருக்கிறோம். அது தவறு என்பது தான், மாறுபாடான கருத்துக்களை விலக்க வேண்டுமென்பதுதான் எங்களுடைய கருத்தாகும்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : ஆதித்தனாரை கட்சியில் சேர்த்துக் கொண்டது தவறா, மந்திரியாக சேர்த்துக் கொண்டது தவறா? கட்சியில் சேர்த்துக் கொண்டது தவறு என்றால் அந்தத் தவற்றை அண்ணாவே செய்தார்.

திரு. கோவை செழியன் : திசை திருப்புகிறார்கள். பிரஸ் நிருபர்கள் ஏமாந்துவிடக் கூடாது. அண்ணா அவர்கள் ஆதித்தனாரை கட்சியில் சேர்த்துக் கொண்டார். நீங்கள் அவரை அமைச்சரவையில் சேர்த்துக் கொண்டீர்கள். பேரவைத் தலைவர் அவர்களே, அண்ணா அவர்கள் அவர் கட்சியை ஏற்றுக் கொள்ளவில்லை. இதுதான் எங்கள் குற்றச்சாட்டு, மந்திரி சபையில் நீண்ட நாள் இருக்கட்டும். வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனால் அவர் கொள்கையை அண்ணா அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை எனபது நம கருத்து.

ஒரு சின்ன அட்டானமஸ் போர்டு என்று சொல்லுகின்ற ஒரு சின்ன நிர்வாகத்திற்குக் கொஞ்சம் அதிகாரம் கொடுத்தால், அவர்கள் நடக்கின்ற நடப்பு தாங்கிக் கொள்ள முடியவில்லை.

கோயம்பத்தூர் பல்கலைக் கழகத்தில் ஒரு வைஸ் சான்ஸலர் இருக்கிறார். அவர் போடக் கூடிய உத்தரவை நாம் நம்ப முடியாது. பகல் நேரத்தில் யாராவது வீட்டுமுன் குப்பை கூட்டினால் குப்பையில் உள்ள இலையின் சலசலப்புச்சத்தம் கேட்டால் தூக்கம் கெடுகிறது என்று வேலைக்காரனை சஸ்பெண்டு செய்கிறேன் என்று அவர் மனைவி சொல்லுகின்ற அளவுக்கு அதிகாரம். அவ்வளவு அதிகாரம் அவருக்கு இருக்கிற தென்றால் ஒரு பெரிய நாட்டினிடத்தில் இங்கே சுயாட்சி என்ற பெயரில், தன்னிச்சையாக, சர்வாதிகாரமாக நடைமுறைக்குக் கொண்டு வர வேண்டிய பல சட்டங்கள் கொண்டு வரப்படு மானால் நாடு என்ன ஆகுமோ? நான் விளக்கமாக இதைப் பேச தலைவர் அனுமதி இல்லாத காரணத்தினால் ஒன்றைச் சொல்லிக் கொள்கிறேன்.

அரசியல் சட்டத்தில் மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் தேவை என்பதற்காக அரசியல் சட்டம் மாற்றப்பட வேண்டுமென்று சொல்வதை நான் ஏற்றுக் கொள்கிறேன். மாற்றப்பட வேண்டுமென்பது மட்டுமல்ல. இன்னும் சொல்லப் போனால் இந்த அரசியல் சட்டத்தை உருவாக்கியவர்கள் மக்களாலே தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அல்லர். அன்றைக்கு ஏதோ பெரிய மனிதர்கள் சில பேர் இந்தச் சட்டத்தை உருவாக்கினார்கள். அதை டாக்டர் அம்பேத்கார் அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள். இந்த அரசியல் சட்டம் உண்மையான மக்களுடைய ஜனநாயக முறைப்படி ஜனங்களாலே தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளால் உருவாக்கப்பட்டதல்ல. ஆகவே, புதிய அரசியல் சட்டம் உருவாக்கப்பட வேண்டும்.

இதைத் தான் நம்முடைய இந்தியப் பிரதமர் இந்திரா காந்தி அம்மையார் அவர்கள், அதாவது சுப்ரீம் கோர்ட் நீதிபதிகளை நியமிக்கின்றபோது ஏற்பட்ட சர்ச்சையில் குறிப்பிட்டார்கள். அரசியல் சட்டம் என்பது ஒரு வேத நூல் அல்ல. அதை மாற்றலாம். புதிய அரசியல் சட்டம் உருவாக்க வேண்டுமென்று சொன்னால், அந்தப் புதிய அரசியல் சட்டத்தினால் பாட்டாளி மக்களுக்கும், இந்த நாட்டிலிருக்கின்ற வர்க்கத்திற்கும் நல்ல உயர்வு உழைக்கின்ற தருகின்ற வகையில் மாநிலங்களுக்கு அதிகாரம் தருகின்ற வகையில் ஒரு புதிய அரசியல் சட்டத்தை உருவாக்க வேண்டும் என்று நீங்கள் சொன்னால் அதை நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம்.

ஆக, இன்றைக்கு இருக்கின்ற பிரச்னை எல்லாம் மாநில சுயாட்சி என்ற பெயரில் நீங்கள் கொண்டு வந்திருக்கக் கூடிய இந்தத் தீர்மானம் நாட்டு மக்கள் சந்தேகத்தின் அடிப்படையில் இருக்கிறது. நாட்டு மக்கள் உங்களை நம்புவதற்கு மறுக்கிறார்கள். நீங்கள் நாட்டு மக்களாலே தேர்ந்தெடுக்கப்பட்டாலும், நாட்டு மக்களுடைய ஆதரவு போய்விட்ட காரணத்தினாலே, இங்கே நாம் உட்கார்ந்து கொண்டு இந்தத் தீர்மானத்தை போட்டிருக்கிறோம்.

இந்தத் தீர்மானம் நிச்சயமாக நிறைவேறும், உங்களுக்கு பலம் இருக்கிறது. ஆனால் டெல்லியில் இருப்பவர்கள் கேட்பார்கள், நீங்கள் போட்டிருக்கிற இந்தத் தீர்மானத்தை இந்த நாட்டு மக்கள் ஆதரிக்கிறார்களா என்று. உங்களுக்குப் பின்னால் இருக்கின்ற நாட்டு மக்கள் இந்தத் தீர்மானத்திற்கு ஆதரவாக வருவார்களா என்று கேட்டால் நிச்சயமாக இல்லை என்று பதில் சொல்ல முடியும். உங்களுக்குப் பின்னால் நாட்டு மக்கள் இல்லை. நாட்டு மக்கள் உங்களை நம்புவதற்குத் தயாராக இல்லை. ஆகவே இதைத் திசை திருப்புவதற்காக, மத்திய அரசாங்கத்தை மிரட்டுவதற்காக நீங்கள் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறீர்கள் என்று சொலலி விடைபெறுகிறேன். வணக்கம்.

திரு. கு. பெரியசாமி: ஆன் எ பாயின்ட் ஆப் ஆர்டர், நாங்கள் விண்ணப்ப மனுக்கள் கொடுத்தோம். இந்த மாநில சுயாட்சி என்பது பற்றி எப்போதோ வருஷத்திற்கு ஒரு முறை பேசப் போகிறோம்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்: இதை கட்சிக் கொறடாவிடம் சொல்லி முடித்துக் கொள்ளுங்கள்.

THIRU PALANIVEL RAJAN: Mr. Deputy Speaker, Sir, I consider it a privilege to participate in this discussion and support the Resolution moved by the Hon. Chief Minister requesting the Central Government to accept the views of the Government of Tamil Nadu on State Autonomy based on the recommendations of the Rajamannar Committee and proceed immediately to amend the Constitution for the same purpose.

Sir, we are today discussing a subject of national and vital importance and the outcome of it may be the turning point in the Constitutional history of our country. Much has been said about our Constitution. Experts are divided on the point, whether this is a Unitary Constitution or a Federal Constitution. To my mind, all these controversies and discussions about the nature of our Constitution are academic, because in practice this Constitution has become a unitary Constitution many years back.

A Federal Constitution is described as a Constitutional system under which the people of a given territory are subject to the control not of one Government but of a number of Governments each supreme in a sphere of its own.

Among the component units of a Federation, there is generally found a mixed sentiment which colours their attitude towards all constitutional questions and makes its influence felt in the organization of almost every Government institution. There is in them a district of unlimited authority being exercised by the Central Government and an ever present fear that it would encroach on their Independence unless adequate safeguards are provided against such a possibility.

A democratic Constitution envisages a minimum of two-party rule. But for the last 25 years, the Centre and almost all the States in this country have been dominated by one party and the dangers of a one-party rule in a democratic Constitution are too well-known. Now I may quote a very eminent authority, Thiru Asoke Chanda Retired Auditor-General and Chairman of the Third Finance Commission who has observed—

"One-party Government both at the Centre and the States has facilitated and even encouraged Parliament to consider itself as the apex of a legislative and executive pyramid. The Prime Minister and other Ministers have not hesitated to take an indirect and sometimes even a direct hand in settling and deciding issues which are constitutionally the responsibility of the States. The limited sovereignty of the States is thus being surrendered by usage and sufferance and it would be difficult for a State later to reassert or regain its constitutional authority. It may be claimed that the 'advice' tendered by the Union Ministers is in their capacity as members of the Congress High Command and that there has thusbeen no infraction of the sovereignty of the States. This sophistry will hardly delude many. . .'

Sir, there are many people who would say that there is no need to change this Constitution, because we have been functioning for 25 years under this Constitution. But I would submit that if we have survived for 25 years under this Constitution, it is not because of the Constitution but in spite of it.

Sir I would say that we have our existance as a Nation to one great individual, the late lamented Prime Minister, who for 18 years ruled this country as the undisputed leader. Even though

the people would have readily made him a dictator, he was always a democrat at heart. He tried to maintain the best democratic traditions of the Parliamentary Government.

But with his demise, all semblances of democracy seem to have disappeared in this country. We are grateful to his illustrious daughter, the present Prime Minister, for having served the country in many of the crises. We even accept that she is above narrow sectarian and provincial interests and she is an Indian first and last.

But we see to-day some totalitarian and dictatorial trends have crept into the Congress Party which have ruined the very political fabric of our country. Normally, it may not be relevant to discuss the internal matter of a political party but the Party has dominated this country for such a long time that the very fundamental rights of not only the elected Members of the Parliament but also the elected Members of State Legislature are affected. We have seen this dictatorial trend very much in the past few years.

Members of the Parliament belonging to the Congress Party are being imposed as Chief Ministers of States even though they are not elected to the State Assemblies. As a matter of fact, it has now become an accepted practice that even a democratically elected leader of the Congress Legislature Party cannot continue in office if he does not have the good wishes of the High Command.

Now I would refer to the statement made by the ex-Chief Minister of Gujarat, Thiru Chimanbhai Patel, who after resigning as Chief Minister of Gujarat, accused the Centre of being responsible for all the anarchy in the State. He stated that because he had become Chief Minister against the wishes of the High Command, essential foodstuffs were not rushed to the State in time. He also made the accusation that as soon as he resigned, foodstuffs started coming to Gujarat. This is the state of affairs.

As a matter of fact, these Chief Ministers who were imposed on the States completely forget their Constitutional responsibilities and spend all their time surviving in office rather than serving the

people. They took their oath of office for serving the people but they dare not offend their masters at Delhi.

Sir, with your permission I would quote the statement of Thiru Ashok Mehta, Congress (O) Leader. It is stated—

'Mr. Ashok Mehta, who was addressing a press conference was critical of the Centre's attitude towards some States and said in most of the States "the Chief Ministers have been reduced to office-boys" and discipline had broken down. He wanted an end to this practice which he termed as "destruction of political personality of the State". We should have a parallel personality of the Central Government and that of the State Government. . .'

So, my submission is that the question of Centre-State relations has lost all its importance in this country because most of the States are dominated by the Congress Party. Even Chief Ministers are imposed and they are not elected representatives of the Assembly. They forget their obligations. They forget their oath of office. They spend all their time surviving for power.

I am referring to the fact that in Madhya Pradesh, the Chief Minister was a Member of Parliament imposed on the State by the Congress High Command. To-day a very big group of dissident legislators wanted the Chief Minister to be removed from his office. They have been making repeated representations to their leaders and the first and foremost charge against the Chief Minister is that his permanent stay is in New Delhi and that he is temporarily camping in the State Headquarters, and that he is not available for the people of the State.

This is the state of affairs in the Indian States to-dayand there is no question of saying that the Constitution is a Federal Constitution and that the States have got sufficient powers.

As a matter of fact, I may say that in all the States where these leaders have been imposed, they find it very difficult the remain in office and there is permanent and perennial squabbl- and in-fighting in the ruling party leading to gross indicipline in their ranks. This indiscipline has now spread to Bihar where recently certain things have happened . . .

THIRU K. T. K. TANGAMANI: Sir, the hon. Member has been telling us that some of the Chief Ministers have been imposed from above. It conforms to facts but the Constitution provides that once a Chief Minister who is not a Member of the House is imposed on the Legislature, he will have to seek election within six months. Even Chief Ministers have been elected like this . . .

THIRU PALANIVEL RAJAN: I am not saying that Constitution has failed. But I am trying to make out that because they have no faith in popular mandate and rule, they spend all their time for surviving in office, in thinking of how to have majority and how to get it.

This indiscipline in the party, because that party is spread throughout the country, that indiscipline has spread to the people. We have seen what has happened in Gujarat and Bihar. Have we witnessed such incidents at any other time? Have we seen in a legislature at any time the marshal of the House assaulting the Ministrs and Legislators? This is what has happened in the State of Bihar. There, the Chairman of the Legislative Council, who is supposed to have resigned his political membership on becoming Chairman and after assuming that office, is invited to be the leader of the Congress Legislature Party even before he has resigned his Chairmanship of the Legislative Council.

That is why 'Hindu', a most conservative and pro-Congress paper has chosen to describe Mr. Abdul Gaffoor, after he assumed his office, thus . . .

THIRUMATHI T. N. ANANDANAYAKI: I may tell for the information of the hon. Member that even though one who is not a member of the House is chosen as Chief Minister, there is a constitutional provision that he must get himself elected to the Lower House or Upper House within 6 months. These are internal matters of our party as to who is to be chosen as leader.

THIRU PALANIVEL RAJAN: I can understand it but Thiru Tangamani has expressed it more eloquently than the lady

Member. I have made one reservation. I have said earlier in my speech that even though it is a party matter, because that political party has been in power in Centre and States all these 25 years, the indiscipline spreads from Centre to States. What I say is that indiscipline when it spreads to the people may bring disaster to the Nation. It has become the malady and disease of the Nation. That is my argument. The hon. Lady Member may say her views when she gets an opportunity to do so

It has come to such a position. I was referring to Abdul Gaffoor. Such a conservative paper like 'Hindu' has said that Abdul Gaffoor is a garrulous personality which the Bihar Congress Legislature Party has chosen as its leader for political considerations.

The present position seems to be that even a democratically elected leader of a congress legislature party cannot survive if he does not have the blessings of the powers in New Delhi. So much so, the States have become branch units of the Centre, with the head office being at New Delhi and the States becoming branch offices. What the head office says is the dictum and has to be followed by branches, the States. This is the state of affairs in India today.

The political map of India presents a dismal picture. Lawlessness, anarchy, inflation and maladministration have made our country a desert but in this desert there is an oasis, i.e. Tamil Nadu which is a heaven of peace. It would not be an exaggeration if I máy say that we live in a heaven of peace in the midst of turmoil, anarchy and lawlessness.

This demand for State Autonomy has been made by our State Chief Minister, who is one of the most efficient Chief Ministers that India has seen. It cannot be denied that the Chief Minister has got an absolutely undisputed mandate to move this demand. He is a popularly elected leader of the party which has had the biggest electoral victory of its kind in the history of a State in India. But still there are some people who suspect anything because it is spoken from our side.

I am surprised that even Mr. Ponnappa Nadar, whom we all respect for his objective approach, should question our bona fides.

The Hon. Chief Minister has made it clear by his speeches that we have given up this demand for separation long ago. We know how we all gathered together as one man at the time of Chinese aggression.

One factor has not been mentioned. Last year when there was scarcity of food in this country, the Chief Minister has done the best national service possible by sending thousands and thousands of tonnes of rice to the other needy States at the risk of incurring displeasure of our own people. The national interest was paramount in his mind. We could have poured in more stocks in market and seen that the price of rice did not at all rise in our State. But we rallied round and in the national interest went to the help of other States which needed rice badly.

I shall refer to Mr.Ponnappa Nadar's allegation that DMK is a separatist party. I would like to bring to his notice the views of the former Chief Minister of Mysore, Thiru Veerendra Patil. He was the Chief Minister and leader of the Congress Party to which Mr. Ponnappa Nadar belongs.

In November 1970 Thiru Veerendra Patil had declared that the general deterioration in Centre-State relations has come to such an extent that the houses and bhavans of States in New Delhi would assume the character before-long of embassies. If this remark had come from the Chief Minister of Tamil Nadu, this Government would have been dismissed. But a man like Veerandra Patil had said this. So nobody takes offence. Likewise an eminent communist leader like Mr. Nambudripad has said :

" The control of the Central Government over the States has increased through the administrative services and the financial provisions. It is because of the slow but increasing intrusion by the Centre into the powers of the States that the difficulty has arisen. It cannot be said that the Centre is not above mischief. "

Mr. Nambudripad also said that he for instance was both a Malayalee and an Indian or an Indian as well as a Malayalee. It did not matter which came first.

If our Chief Minister has said that he was Tamilian first and Indian second, most of the newspapers would have made much of it. But I had told you what Mr. Nambudripad had said. Because he has said it, no offence was meant.

The most important reference that I would like to make in this aspect is that of our eminent leader Mr. Chakravarthi Rajagopalachari. I am sorry my friend Dr.Hande, is absent from this House now. I would like to pinpoint the remarks made by Rajaji to Dr. Ambedkar, the father of our Indian Constitution. I would like to say what Dr. Ambedkar has to say.

" Mr. Rajagopalachari has not expressed himself fully. I used to go to him when he was head of the State (Governor-General) and I was the Law Minister in charge of drafting the Constitution. I went to see Mr. Rajagopalachari one day for my usual interview before the break of the day. In one such interview Mr.Rajagopalachari referred to Centre-State relations and said that the idea of one federation for the whole of India would not work in spite of the Prime Minister. He said that we should have two federations one for North and another for South and a confederation of North and South with equal representation for both federations. These utterances of Mr. Rajagopalachari came to me as a revelation coming as they did from the seniormost of congressmen."

That is what Dr. Ambedkar had to say. What I say is this. History tells us that what Mr. Rajagopalachari said came true in the case of Pakistan. Dr. Ambedkar feels that Mr. Rajagopalachari's words may become prophetic, regarding his prediction about federation for North and South. But we do not go thus far. We make a distinction.

We say that unity of India will be preserved at all cost but we say that we do not want to be subject to the dictates of masters at

Delhi. We do not want any imposition from Delhi. We want to be masters of subjects assigned to us. It is only to prevent intrusion of the Centre that we are demanding this State autonomy.

It would be well-known that Government as a concept of masters has changed and today Government is regarded as the servant of the people. You cannot have good governments in States without decentralisation of power.

If today we in Tamil Nadu are in a better position than others, it is because this Government has felt its impact on the people and has made its presence felt to the common man in the street. Protected water-supply and electricity had been promised to every village and even this basic amenity is a far-off cry to fello-citizens in other States.

[முற் பகல் 11·30.]

Even though we have not achieved some measure of success, we hope to achieve total success because successive State Governments have taken the issue to the people but the Government of India continue to remain in isolated splendour. It is ruling the Government not by direct participation but by indirect participation. Indeed it may be said that the moon is nearer the people of this earth than the Government of India to its loyal subjects . . .

THIRU K. T. K. TANGAMANI : I would like to know from the hon. Member from Theni, whether he is advocating the case for Federation or Confederation?

THIRU PALANIVEL RAJAN : I am not advocating the case of Federation or Confederation but I am expressing my views on the Report of the Rajamannar Committee.

I may also tell my hon. Friend from Madurai that if justice is not done o the South, his prophetic words may come true but we do not want that to happen.

So, it is absolutely essential that power must be decentralised. I agree that once the power has been decentralised and brought to the State level, local bodies also should enjoy it. But I am not able to understand the amendment of the hon. Member, Dr. Hande, who is well known for raising his voice and pouring abuses on everybody.

In my opinion, the Chair should have withheld consent to move that amendment. He has stated that the State Government should see that the powers are given to the local bodies. It is totally irrelevant to the discussion before the House because we are discussing the amendment of the Constitution which refers to the powers of the States and the Centre. Powers of local bodies are derived from the State Legislature. So, the amendment of the hon. Member is totally irrelevant and it is illegal. He has also stated that the local bodies run by the Opposition Parties should be given more powers. I am really surprised at this statement. How can there be one set of powers for local bodies run by the Opposition Parties and another set of powers for local bodies run by the Ruling Parties? So, his amendment is totally illegal.

Then, the other reason as to why there should be more powers to the States is that crores and crores of rupees are being spent by the Central Government on departments which are exclusively under the State List of the Constitution. This is a huge and wasteful expenditure incurred by the Centre in maintaining departments which are exclusively State subjects under the Constitution.

In this connection, it would be relevant to quote the remarks of Professor Parkinson, the very famous author of Parkinson's Law and a noted British Economist. At the end of his study tour of this country a few years ago, he remarked that he has never seen anywhere in the world such wasteful expenditure by the superfluous and totally unnecessary duplication of Government departments by both the State and the Centre. He even went to the extent of saying that the income-tax levied by the

Centre on the citizens of the country should be collected only by the States and the Centre's share remitted to it. It is in the same spirit that our revered leader Dr. Anna said thus—

'I want the Centre to be strong enough to maintain the sovereignty and integrity of India as it is the fashion to call it. I would put it in another way. It is to safeguard the Independence of the country. I am prepared to say that anybody will accept without any remorse or without any reservation that all these powers needed to make the Centre responsible for the safety of this country ought to be with the Centre. But that does not mean that the Centre in order to safeguard India from Pakistanis or the Chinese or the Baluchis, should think of having a Health Department here. In what way does that strengthen the sovereignty and independence of India? Should they have an Education Department there? In what way does that improve the fighting capacity of the military personnel there?'

These are the burning questions to-day. We want more allocation of revenues to the States. The Centre must keep minimum revenue. That is not possible now because the Centre has got more powers. They must have minimum powers which are required to safeguard the integrity and sovereignty of this country, like external affairs, defence, communications, posts and telegraphs. The other powers can be made available to the States for their development works. For these two compelling reasons, we are asking for State Autonomy and our view on State Autonomy is a very legitimate one.

Our critics would say that our demand for State Autonomy is a first step towards separation. But we will say that this is a right step towards a strong and united India. This proposal is based on the recommendations of a High Power Committee which consisted of very eminent persons who do not require the patronage of this Government. They have occupied the highest position in their fields and they have retired from public life. They have done purely honorary service without any reward.

As regards the points raised in the Report of the Committee, no critic has so far answered. The Report is a classic legal document. It is a comparative study of the Government of India Act of 1935 and the Indian Constitution of 1948. The 1935 Act is a very relevant Act because India as a country existed for the first time under the British Rule. India as a country from Kashmir to Cape Comerin came into existence only under foreign rule and there was no India before.

So it is a comparative study of the provisions of the 1935 Act and the 1948 Act of the Constitution. The powers conferred on the States by the 1935 Act are much more than the powers conferred by the 1948 Act.

Now, Sir, the 1935 Government of India Act was an act of the British Empire when the Indian country was a colony under the Crown. If we could get more powers for States when the country was a colony under a foreign power, why should we not get more powers for the States under all allegedly federal constitution of India? This important point to my mind, no critic of the Rajamannar Committee Report has so far met. I shall be grateful if a senior member like Mr. Ponnappa Nadar, with his rich legal and legislative experience, would meet this point regarding Rajamannar Committee Report, viz., whether States should not get as much power as the one given to Provinces under the 1935 Act.

One other submission I would like to make regarding the role of Governor. I am fully aware of the principle that we should not criticise the Governor. I mean no disrespect for any Governor much less to our Governor.

To-day it cannot be denied that Governorship of States in India is reserved for retired politicians of the Congress Party or retired Central Government servants. It is a very unhappy feature that these Governors, whose salaries and establishments are met out of the consolidated fund of the State, should function only as agents of the Centre in their respective States.

I can cite one single instance where the Governor acted upon instructions, not from Prime Minister or President, but from the President of Conghess High Command. I can cite the instance of Pondicherry. The elections in Pondicherry were over on 26th and the Anna D.M.K. and C.P.I. together claimed majority to form Government. They made an appeal to the Governor to invite them to form office. But a week passed before he gave any decision. But in the meantime all the newspapers in India came out with news of Dr. Shankardayal Sharma, President of the Ruling Congress having said that the Congress will not try to form Government in Pondicherry but will sit in opposition. Only after that statement, did the Leiutenant-Governor invited the ADMK leader to form Government. I presume, Sir, that Governors take their instructions not from the President of India but from the President of the Congress High Command. When such is the case, why should the post of Governor be there?

THIRU R. PONNAPPA NADAR : It is a party matter. The statement made by Dr. Shankardayal Sharma is not to the Leiutenant-Governor but to the Press. It does not mean that it is an instruction to the Governor. I am sorry if an eminent lawyer like Thiru Palanivel Rajan were to put such a construction about the happenings in Pondicherry. He must speak with restraint.

THIRU PALANIVEL RAJAN : I am very grateful to Thiru Ponnappa Nadar , for whom I have so much respect for his views. I am speaking with utmost restraint. I only say that it is purely circumstantial evidence. I am entitled to claim it. I would have appreciated if the Governor had asked the leader of ADMK and CPI to parade their members before him for ascertaining whether they had majority. But that was not done. A week passed. In the meantime, the statement of Congress President came. Immediately after, the Governor invites the ADMK leader to form Government. With all emphasis at my command and with all my respect for the institution of Governor, can I not claim circumstantial evidence and say that this act of Governor coming as it did after the statement of the Congress President would only

amount to his taking instruction from Congress President. It may be true, as Mr. Ponnappa Nadar says, that the statement of the Congress President was not meant to the Governor but to the Press.

My submission is that Governors are expected to uphold the demands of States. Has any one Governor voiced forth the aspirations of the people of his State, grievances of the people of his State, to the Centre and got redress?

We see annual conferences of Governors going on and I have not seen any Governor saying "these are the demands of my State and they should be met". I hope the hon. Member Mr. Tangamani will agree with me that the office of Governor is totally unnecessary and it should be abolished. I am unable to understand so eminent a lawyer like Mr. Tangamani (he is a barrister at law) saying that Governor's posts may be abolished but Constitution need not be amended.

THIRU K. T. K. TANGAMANI: I conceded that certain amendments may be necessary. But the way in which the resolution is given should be noted. It is an omnibus resolution. If we accept the amendments proposed by the Hon. Chief Minister, then we will have to recast the entire Constitution. If you take the position that the entire Constitution should be recast, if you take that stand, I can understand. That is why in an omnibus resolution like this, we are not in a position to suggest amendments.

THIRUMATHI T. N. ANANDANAYAKI: Apart from that, your honour (laughter) I am sorry, Mr. Deputy Speaker. The hon. Member was saying that Governors must represent the wishes of the people if the State and no Governor has so far done like that I may pointout that the Mysore Governor did not sit like a doll but he represented the people's wish and got the thing done.

THIRU PALANIVEL RAJAN: I may tell the hon. Lady Member that she may very carefully note that the Mysore Governor belongs to the Ruling Congress Party. My point was that no Governor, belonging to a party other than Congress, has so far vehemently championed the causes of his State.

[Thiru Palanivel Rajan]



With great respect to the hon. leader of the Communist Party, I may say that he should not choose not to give amendments to the resolution moved by the Hon. Chief Minister. I think a man of the eminence of Mr. Tangamani would be failing in his duty if he does not give amendments to this resolution. Mr. Tangamani , as leader of a party, is entitled to give amendments that the Constitution should be amended because of the following reasons :—

(a) abolition of Governors' posts and

(b) abolition of Planning Commission, etc., etc.

If he were to give such an amendment, I think the Chief Minister will accept it.

If Mr. Tangamani moves an amendment indicating the points on which the Constitution should be amended, we would accept it.

My point is that there are sufficient grounds, bona fide grounds on which the Constitution of India should be amended.

This Hon. House will adjourn today after some speeches are delivered by some Members. We are going to discuss this matter for five days. What is going to come out of it? In my opinion, nothing is going to come out of it. Our masters at Delhi are not going to listen to us from their ivory towers; surviving from one crisis to another and meeting one crisis after another, they have no time to think about meeting out justice.

We make an appeal to the Prime Minister as she is probably the last Prime Minister who is acceptable to all as an Indian, to do justice to her job and to the illustrious family to which she belongs, to see that the Constitution is amended in response to our request. That is the request we are making to her.

I think our Chief Minister has done the greatest service he can do to the State in his career, by bringing in this resolution before this House. He has lit the flame, the torch of State Autonomy today.

By passing this resolution, we have lit the small flame. Even though we shall fail temporarily, ultimately ours shall prevail and our plea for more powers for States will remain. This flame, that has been started by the Hon. Chief Minister, will spread to other States in India and an ultimate solution could be found by giving more powers to the States and making India a sovereign republic wherein the States will have sufficient and equal powers so that we can have an India, which has strong federal Constitution with Centre and States being equal partners. Thank you, Sir. (cheers).

திருமதி த. ந. அனந்தநாயகி : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இன்று ஆளுகின்ற கட்சியின் சார்பாககொண்டு வரப்பட்டிருக்கும் மாநில சுயாட்சித் தீர்மானத்தை எதிர்த்து ஒரு சில கருத்துக்களை என்னுடைய கட்சியின் சார்பாகச் சொல்ல விழைகிறேன்.

இந்திய அரசியல் சட்டத்தின்கீழ் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரங்கள் போதாது, மாநிலங்கள் சுயாட்சியாக இயங்க வேண்டுமென்பதற்காக இந்திய அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டுமென்ற காரணத்திற்காக இராஜமன்னார் குழு ஏற்படுத்தப்பட்டது. எனக்கு முன்னே பேசியவர்கள் எல்லாம், அவர் சிறந்த நிபுணர், பெரிய தேசபக்தர், அனுபவசாலி என்றெல்லாம் சொன்னார்கள். அதை யாரும் இன்று கேள்விக் குறி யாக்கவில்லை.

ஆனால் அவர்கள் என்ன வேலை செய்தார்கள் ? ஒரு கட்சிக்காரர் வக்கீ லிடம் சென்று என் வழக்கு இது, இதை சரியான முறையில் நடத்தித் தரவேண்டுமென்றால் எவ்வளவு திறமையாக கட்சிக்காரருக்கு அந்த வக்கீல் வழக்கை நடத்தித் தருவார்களோ அதேபோல் இந்த அரசு, தான் ஆட்சிக்கு வந்தவுடன், 1967-ல் மாநில சுயாட்சி பற்றிப் பேசினார் கள். 1969-ல் நம் முதல் அமைச்சர் அவர்கள் ஆட்சிக்கு வந்தவுடன், இவர்களிடம் எனக்கு இப்படி ஒரு வழக்கு தயார் செய்து தாருங்கள், மாநில சுயாட்சிக்காக என்னென்ன அரசியல் சட்டத் திருத்தங்கள் தேவையோ அவற்றையெல்லாம் எனக்கு தொகுத்துக் கொடுங்கள் என்று கேட்டார்கள். அவர்கள் நல்ல வழக்கறிஞர், நீதிபதியாக இருந்தவர்கள், நம்மை நம்பி வந்திருப்பவர்களுக்கு நியாயம் செய்யவேண்டும் என்ற காரணத்தால் சிறப்பான முறையில் இதைத் தயாரித்துக் கொடுத்தார் களே தவிர....................

திரு. செ. கந்தப்பன் : அவர்கள் சொல்வது இராஜமன்னார் கமிட்டியின் காண்டக்டை ரிப்ளக்ட் செய்வதாக இருக்கிறது. I am making a point பைனான்ஸ் கமிஷன் நாட்டில் போடப்படுவது, மத்திய அரசால் நிறுவப் படுவது பைனான்ஸ் கமிஷன். அந்த பைனான்ஸ் கமிஷன் தலைவராக இராஜமன்னார் அவர்கள் இருந்தபோது அதில் ப்ளானிங் கமிஷனைக் கண்டித்து எழுதியிருக்கிறார்கள். அவர்கள்......

THIRU K. T. K. TANGAMANI: Sir, any person appointed to the Commission is bound by the terms of reference of the Commission. And that is what the hon. Member is referring just now . . .

THIRUMATHI T. N. ANANDANAYAKI: He is bound by the terms of reference.

அதில் காண்டகட் என்ன இருக்கிறது? இதைத்தான் செய்ய வேண்டுமென்று சொன்னீர்கள். அதைச் செய்து கொடுத்தார்கள்.

திரு. துரை முருகன்: பாயின்ட் ஆப் க்ளாரிபிக்கேஷன். அம்மையார் அவர்கள் சொல்கிறார்கள், நாங்கள் ஆட்சிக்கு வந்தவுடன் ஒருவரைக் கூப்பிட்டு எங்களுக்காக இப்படிச் செய்து தாருங்கள் என்று கேட்டார்கள். அவர்களும் அப்படிச் செய்து கொடுத்தார்கள் என்று சொல்கிறார்கள். இந்திய அரசியல் சட்டத்திற்குத் தலைவராக இருந்த டாக்டர் அம்பேத்கார் அவர்கள்கூட இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டவர் அல்ல. ஒரு வக்கீலாக இருந்தவரைக் கூப்பிட்டு, பரிவு காட்டி அவர்களுக்குத் தலைமைப் பதவி கொடுத்தபோது, நாங்கள் என்றென்றைக்கும் டெல்லி பாதுஷாவாக இருக்க, டெல்லியில் இருந்து ஆட்சி புரிகிற வகையில் சட்டத்தை அமைத்துக் கொடுங்கள் என்று கேட்டபடி அவர்கள் அமைத்துக் கொடுத்தார்கள் என்ற குற்றச்சாட்டை நான் பகிரங்கமாகக் கூறிக்கொள்கிறேன்.

THIRUMATHI T. N. ANANDANAYAKI: We must act within the framework. You have to act within that. அந்த வகையில் இந்த அறிக்கை தயார் செய்யப்பட்டது.

THIRU R. PONNAPPA NADAR: Sir, she may be allowed to proceed. If any member wants to interrupt, she cannot speak. I appeal once again to the good sense of hon. Members to let her continue and have her say. They may get clarifications when she concludes her speech.

திரு. தோப்பூர் திருவேங்கடம்: அம்மையார் அவர்கள் இராஜமன்னார் அவர்களையும், அந்தக் கமிட்டி உறுப்பினர்களையும், தேசியவாதிகள் என்று ஏற்றுக்கொள்கிறார்களா அல்லது பிரிவினைவாதிகள் என்று சொல்ல விரும்புகிறார்களா? என்று அறிய விரும்புகிறேன்.

திருமதி த. ந. அனந்தநாயகி: அவர்கள் தேசியவாதிகளாக இருக்கலாம் அல்ல என்ன வாதிகளாகவாவது இருக்கலாம். அவர்கள் தேசியவாதிகளாக இருந்தார்களா இல்லையா என்பது இப்போது சர்ச்சைக்குரிய பொருள் அல்ல. இந்த அரசாங்கம் எப்படிக் கேட்டதோ அப்படி அவர்கள் வழக்கைத் தயாரித்துக் கொடுத்தார்கள். அவ்வளவுதான். என்ன கேட்டார்கள்? எங்களுக்கு மாநில சுயாட்சி தேவை என்று கேட்டார்கள்.

எனக்கு முன்னால் பேசிய, நேற்று பேசிய திரு. கந்தப்பன் அவர்கள் கூட சொன்னார்கள். நாங்கள் ஆட்சிக்கு வந்தால்கூட இந்த மாநில சுயாட்சி பற்றி பேசுவது உதயாக இருக்கும் என்று ன்னார்கள். நான் கூட அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நீங்களும் ஆளும் கட்சியாக அகில இந்திய அடிப்படையில் வர ஒரு வாய்ப்பிருந்தால் இப்படிப்பட்ட ஒரு சுயாட்சித் தீர்மானம் கொண்டுவருவீர்களா என்று யோசித்துப் பார்க்க வேண்டும்.

நீங்கள் யோசிக்க முடியாது. நீங்கள் பிராந்தியக் கட்சி. டெல்லியில் ஆட்சி பீடத்திற்கு வருவதற்கு ஆசை இல்லாதவர்கள். ஆகவே நீங்கள் அப்படி யோசிக்க முடியாது என்பதை ஒப்புக்கொள்கிறேன்.

இந்த மாநில சுயாட்சி எப்போது எந்த வரலாற்றுக்குப் பின்னால் அதைக் கேட்கிறார்கள் என்பதை மக்கள் மறந்துவிட முடியாது. இதை யார் கேட்கிறார்கள், எந்த நேரத்தில் கேட்கிறார்கள், இவர்களுக்குக் கொடுக்கலாமா என்பதை யோசித்துப் பார்த்துத்தான் ஒரு தீர்மானத்தை ஆதரிக்கலாமே தவிர, ஏதோ மாநில சுயாட்சி என்று கேட்டவுடன் பெரிய புரட்சிக்காரர்கள் நாங்கள், ஆகையால் மத்திய அரசை எதிர்த்துப் போராடுகிறோம், இந்தத் தீக்கனலைப் பரப்ப விட்டிருக்கிறோம், நாட்டில் தீ கொழுந்துவிட்டு எரிகிறது என்றெல்லாம் பேசி விடுவதில் பயன் இடையாது.

உங்களைப் பொறுத்தவரையில் வெள்ளையனே, இந்த நாட்டை விட்டு வெளியேறாதே என்று தீர்மானம் போட்ட தேசபக்தர்கள். வெள்ளையனே வெளியேறாதே, நீங்களே இங்கிருந்து ஆட்சி நடத்த வேண்டும் என்று தீர்மானம் போட்ட தேச பக்தர்கள்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: வெள்ளைக்காரனை வெளியேறக் கூடாது என்று திராவிட முன்னேற்றக் கழகம் எப்போது தீர்மானம் போட்டது? எந்தத் தேதியில்? எந்த மாநாட்டில்?

திருமதி த. ந. அனந்தநாயகி: சுயமரியாதை மாநாட்டில் போடப் பட்டது. அப்போது நீங்கள் எல்லாம் தி. மு. க.—பிறக்கவே இல்லை.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : பிறக்காதவர்களைக் குற்றஞ்சாட்டி என்ன புண்ணியம்? அப்போது நீங்கள் பிறந்தீர்களா என்று எனக்குத் தெரியவில்லை. அப்படியானால் எனக்கு பாட்டி முறை ஆக வேண்டும். அது பரவாயில்லை. ஏதோ அவர்கள் போட்டார்கள் என்றால் ஹியூம் என்ற வெள்ளைக்காரன்தான் காங்கிரஸை ஆரம்பித்தவன். அதை வைத்துக் கொண்டு பேசுவதா? சில உத்தியோகங்கள் இந்தியர்களுக்கு வேண்டும் என்பதற்காக காங்கிரஸ் ஆரம்பிக்கப்பட்டது. அதை வைத்துக்கொண்டு காங்கிரஸ் சரித்திரத்தை ஆராய்வதா?

திருமதி த. ந. அனந்தநாயகி : நீங்கள் அடிக்கடி சொல்வது வழக்கம், நாங்கள் எல்லாம் சுயமரியாதை இயக்கத்திலிருந்து பிறந்தவர்கள் என்று, இன்று திராவிட முன்னேற்றக் கழக ஆட்சியை நடத்துகிறவர்கள்........................

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : சுயமரியாதை இயக்கம் அப்படி ஒரு தீர்மானத்தைப் போடவில்லை.

திருமதி த. ந. அனந்தநாயகி : சுயமரியாதை மாநாட்டில் அப்படி போடப்பட்டது. வேண்டுமானால் அதைக் கொண்டுவந்து காட்டுகிறேன். வெள்ளையனே இந்த நாட்டை விட்டு வெளியேறாதே, நீதான் ஆள வேண்டும் என்று தீர்மானம் போட்டிருக்கிறார்கள். பின்னர் அடைந்தால், திராவிட நாடு இல்லாவிட்டால் சுடுகாடு என்று சொல்லிவந்திருக்கிறார்கள்.

மாண்புமிகு திரு. க. அன்பழகன் : ஒரு தகவலைச் சொல்கிறபோது ஆதாரத்தோடு சொன்னால் நன்றாக இருக்கும். அதைவிட முக்கியமானது. ஹியூம் அவர்கள் தலைவராக இருந்து, இருபது ஆண்டுக்காலம் வரையில், காங்கிரஸ் கட்சி மாநாட்டின் முதல் தீர்மானம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு விஸ்வாசத் தீர்மானம். இருபது ஆண்டுகள் கழித்துத்தான், அதற்குப் பின்னால் கூட சுயராஜ்யம் என்று சொல்லவில்லை. இடையில் அவர்கள் எங்களுக்கு அதிகாரங்களை பரிமாறித் தருவது என்றுதான் கேட்டார்கள். கடைசியில் தான் சுயராஜ்யத் தீர்மானம் வந்தது. எனவே அந்த வரலாற்றை மறந்து விட வேண்டாம்.

திருமதி த. ந. அனந்தநாயகி : அந்த வரலாறு நாடு பூராவும் தெரியும். நீங்கள் சொல்ல வேண்டாம். எங்கள் கட்சி நோக்கத்தில் இருந்து நாங்கள் சொல்கிறோம். உங்கள் கட்சி நோக்கத்திலிருந்து நீங்கள் சொல்கிறீர்கள்.

திரு. சி. வி. எம். அண்ணாமலை : சகோதரி அவர்கள் சுயமரியாதை மாநாட்டில் இங்கு வெள்ளையன் சாஸ்வதமாக இருக்க வேண்டும் என்று

தீர்மானம் போட்டதாகச் சொல்கிறார்கள். இந்த நேரத்தில் நான் மிக்க பணிவன்புடன் தெரிவித்துக்கொள்கிறேன். அப்படி ஒரு மாநாட்டில் அம்மையார் அவர்கள் கூறுவதுபோல் ஒரு தீர்மானம் நிறைவேற்றியிருந்தால், நிறைவேற்றியதாக ஆதாரம் காட்டினால் நான் என் பதவியைத் துறப்பேன் என்பதை நான் இங்கே தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : சவால் ஒன்றும் வேண்டாம்.

திருமதி த. ந. அனந்தநாயகி : க்ளியர் செய்து கொள்ளலாம் நான் கொண்டுவந்து காட்டுகிறேன்.

திரு. கே. டி. கே. தங்கமணி : செங்கற்பட்டில் ஒரு மாநாடு, இரண்டாவது ஈரோட்டில் ஒரு மாநாடு, மூன்றாவதாக விருதுநகரில் ஒரு மாநாடு என்று மூன்று மாநாடுகள்தான் சுயமரியாதை மாநாடுகள் நடந்தன. எந்த மாநாட்டிலும் சமூக சீர்திருத்தத் தீர்மானங்கள்தான் பொதுவாக நிறைவேற்றப்பட்டன.

திருமதி த. ந. அனந்தநாயகி : அந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்து காட்டும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுகிறேன். அதைப் பற்றி நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள் ? Either Justice Party or Swayamariyathai Conference.

இவை இரண்டுக்கும் ஒரு வித்தியாசமும் கிடையாது. ஆக, வெள்ளையனை வெளியேறக் கூடாது என்று சொன்னவர்கள், சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொள்ளாதவர்கள், சுதந்திர தினத்தை துக்க தினமாகக் கொண்டாடியவர்கள், அடைந்தால் திராவிட நாடு, அடையாவிட்டால் சுடுகாடு என்று பிரிவினை பேசியவர்கள் அதற்கான சட்டம், அதாவது பிரிவினை பற்றிப் பேசுவது.......

திரு. கோவை செழியன் : 1947-ல் சுதந்திரம் வந்தபோது சுதந்திர நாள் கொண்டாட வேண்டுமென்று துண்டு அறிக்கை விட்டு பேரறிஞர் அண்ணா அவர்கள் பேசினார்கள். அவர்கள் சுதந்திரத்திற்கு விரோதமாகப் பேசினார்கள் என்று அம்மையார் அவர்கள் சொல்லவேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

திருமதி த. ந. அனந்தநாயகி : அப்போதுதான் உங்களுக்குள் சண்டை வந்தது. அண்ணாவிற்கும் ஐயாவிற்கும் இடையே.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : 1947-ல் துக்க நாள் என்று கொண்டாடச் சொன்னார் பெரியார். அதற்குப் பிறகு 1957-ல் இருந்து 1967 வரையில் அவரோடு உறவாடிக் கொண்டிருந்தது காங்கிரஸ்.

THIRU K. M. SUBRAMANIAM : Sir, a point of clarification. I remember, in 1932 or so, Mr. Srinivasa Ayyangar was sent away from the Congress because he advocated full independence and that was not accepted. Thus, Srinivasa Ayyangar was politically murdered because he wanted full independence for the country.

திருமதி. த. ந. அனந்தநாயகி : கட்சிக்குள்ளே சண்டை வரும். நூறு கருத்துக்கள் வரும், மெஜாரிட்டி சொல்வதைக் கேட்கப் போகிறோம். ஃபுல் ப்ரீடம் என்றிருக்கலாம் அல்லது டொமினியன் ஸ்டேட்டஸ் கேட்டிருக்கலாம். ஆராய்ந்து, மெஜாரிட்டி முடிவிற்கு ஏற்றபடி கொஞ்சம் கொஞ்சமாக, படிப்படியாக வந்து, சுதந்திரப் போராட்டத்தில் உடல், பொருள், ஆவி அத்தனையையும் தத்தம் செய்தவர்கள் நாங்கள். இந்த நாட்டிற்கு சுதந்திரத்தை வாங்கிக் கொடுத்தவர்கள் நாங்கள். அதை யாரும் மறுக்க முடியாது. நீங்களே சரித்திரம் எழுதினாலும் கூட அதை மறந்துவிட முடியாது.

மாநில சுயாட்சி கேட்கிறீர்கள் என்று சொன்னால் அதைக் கேட்கிறவர்கள் பிரிவினையில் வளர்ந்தவர்கள். பிரிவினைபற்றி பேசக் கூடாது என்று சட்டம் வந்ததற்குப் பின்னால் உடனே பிரிவினையைக் கைவிட்டு விட்டு இனிமேல் மக்களிடம் எந்த கோஷத்தை எடுத்துச் சொல்வது என்று யோசித்து மாநில சுயாட்சி என்ற கோஷத்தைக் கையில் வைத்து கொண்டீர்கள்.

(நண்பகல் 12-00)

இதற்கு முன்னால் மதுரையில் நடந்த மாநாட்டில் கூட அடைந்தால் மாநில சுயாட்சி, மறுத்தால் தனி ஆட்சி என்று பேசியவர்கள், உங்கள் பிரிவினை வாதம் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் கூட இருந்திருக்கிறது. (குறுக்கீடு). யாரோ பேசினார்கள், உங்கள் கட்சியில் பேசினார்கள். எம்.ஜி. ஆர். பேசட்டும், இல்லையென்றால் கோவை செழியன் பேசட்டும். உங்கள் திராவிட முன்னேற்றக் கழக மாநாட்டில் என்ன பேசினார்கள் ? " அடைந்தால் மாநில சுயாட்சி, மறுத்தால் தனி ஆட்சி " என்று பேசினீர்கள் (குறுக்கீடு). அப்போது நான் அதற்கு எதிர்ப்பு கூட தெரிவித்தேன். நீங்கள் அப்போது அவரை கட்சியை விட்டு வெளியேற்றவில்லை. ஆகவே, எதற்காகச் சொல்கிறேன் என்றால் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னாலே கூட பிரிவினை பற்றி பேசிக்கொண்டு இருந்தீர்கள் நீங்கள்.

திரு. வி. கிருஷ்ணமூர்த்தி : (நெல்லிக்குப்பம்).

* * * *

---

*மாண்புமிகு பேரவைத் துணைத்தலைவரின் ஆணைக்கிணங்க அகற்றப்பட்டது.

[1974 ஏப்ரல் 19

திரு. பெ. சீனிவாசன் : அதை எக்ஸ்பஞ்ச் செய்யவேண்டும்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : அது இந்த டிபேட்டுக்கு ரெலவென்ட்டாக இல்லாத சப்ஜெக்ட். அதை அவர்களே வித்டிரா செய்து விடுவார்கள். அதை வித்டிரா செய்து கொள்ளுங்கள், ஐயா.

திரு. வி. கிருஷ்ணமூர்த்தி (நெல்லிக்குப்பம்) : மிஸ்டர் டெபுடி ஸ்பீக்கர் சார், நான் ஒன்றும் தவறாகச் சொல்லவில்லை. திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து அவரை வெளியேற்றியதாகச் சொன்னார்கள். அவர் வேறு காரணத்திற்காகச் சென்றார்.

* * * *

மாண்புமிகு போவைத் துணைத் தலைவர் : அது டிபேட்டுக்கு ரிலவென்ட் இல்லை. அதை வித்டிரா செய்யுங்கள்.

திரு. பெ. சீனிவாசன் : டிபேட்டிற்கு ரிலவன்டா இல்லையா என்பது பற்றி அல்ல பிரச்னை. அது ரிலவென்டாக இருந்தால் மட்டும் பேச லாமா ? அதை எக்ஸ்பஞ்ச் செய்ய வேண்டும்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : உறுப்பினர்கள் இந்த அவையில் உள்ள பிரச்னை குறித்து பேச வேண்டும். டிபேட்டுக்கு ரிலவென் டாக இருந்தால் மட்டுமே ஒரு விஷயம் குறித்துப் பேசலாம். அந்த விஷயம் டிபேட்டுக்கு ரிலவென்டாக இல்லை. ஆகவே, அதை வித்டிரா செய்யவேண்டுமென்று சொல்லிக் கொள்கிறேன்.

திரு. வி. கிருஷ்ணமூர்த்தி (நெல்லிச்குப்பம்) : கனம் சீனிவாசன் அவர்கள் உதவிச் சபாநாயகராக இருந்த நேரத்தில் 30 குற்றச்சாட்டுக்களை அவர் அனுமதி யின் பேரில் பேசி இருக்கிறேன். அப்போது அனுமதித்த அவர் இப்போது எப்படி ஆட்சேபணை செய்ய முடியும்.

திரு. பெ. சீனிவாசன் : சார், அவர் என்னைப் பற்றிச் சொல்லி இருக்கிறார். நான் டெபுடி ஸ்பீக்கராக இருந்த போது திரு. வி. கிருஷ்ண மூர்த்தி அவர்களை எந்த சக்தி பேச வேண்டுமென்று ஆட்டிப்படைத்ததோ அந்த சக்தி என்னை சும்மா இருக்கச் செய்தது. இது போதுமா. இன்னும் சொல்லவேண்டுமா ?

திரு. கோவை செழியன் :

* * *

*மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவரின் ஆணைக்கிணங்க அகற்றப் பட்டது.

[1974 ஏப்ரல் 19

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்; அதை ஏன் திருப்பித் திருப்பிச் சொல்கிறீர்கள். அதை விட்டு விடுங்கள். அவரை வித்டிரா செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிறேன். எக்ஸ்பஞ்ச் செய்ய வேண்டிய அவசியம் எதற்கு ?

திரு. வி. கிருஷ்ணமூர்த்தி (நெல்லிக்குப்பம்): தலைவருக்கு எவ்வளவு பாதுகாப்பு கொடுக்கிறீர்கள் என்று இப்போது தெரிகிறது.

திரு. பெ. சீனிவாசன் : உங்களைப் போல் தலைவரைக் காட்டிக் கொடுக்க எங்களுக்குத் தெரியாது.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : * * *

என்று கூறியதை நடவடிக்கைக் குறிப்பிலிருந்து நீக்குகிறேன். இதைப் பத்திரிகைகளும் பிரசுரிக்க வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

திருமதி த. ந. அனந்தநாயகி : இப்படி பிரிவினை கோஷத்தில் வளர்ந்து வந்த நீங்கள், உங்கள் ஆட்சியில் "மாநில சுயாட்சி" என்று ஒரு தீர்மானம் கொண்டு வந்தால் கட்டாயம் அதை அனைவரும் யோசித்துப் பார்க்கவேண்டும். யார் அதைக் கொண்டு வருகிறார்கள், அவர்களுடைய பொலிடிகல் ஹிஸ்டரி எப்படி இருக்கிறது என்பதைச் சிந்தித்துப் பார்த்து நடவடிக்கை எடுக்க முடியும்.

கத்தி கேட்டால் கறி காய் நறுக்கக் கேட்கிறார்களா, கழுத்தை நறுக்கக் கேட்கிறார்களா என்று யோசித்துப் பார்த்துத்தான் கொடுக்க முடியும். ஆயுதம் கேட்பவர்கள் யார், அவர்கள் எப்படி ஆயுதத்தைப் பயன்படுத்துவார்கள் என்பதை சிந்தித்துப் பார்த்துத்தான் கொடுக்க வேண்டும். அந்த ஆயுதம் கேட்பவர்கள் வரலாறு என்ன என்பதையும் பார்க்க வேண்டும்.

இந்த மாநில சுயாட்சி வராததால் தான் உங்களுடைய ஆட்சியில் எல்லா வேலைகளும் ஸ்தம்பித்து இருக்கின்றனவா ? நீங்கள் போட்ட திட்டங்கள் முன்னே போகாமல் முட்டுக்கட்டையாகி நிற்கின்றனவா ? எதற்காக இப்போது இந்த "மாநில சுயாட்சி" தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறீர்கள் ?

தேர்தல் காலத்தில் எக்கச்சக்கமாக வாக்குறுதி கொடுத்தீர்கள். ஒரு ரூபாய்க்கு 3 படி என்றீர்கள். இப்போது 4 ரூபாய் ஒரு படிஅரிசி. ஒரு ரூபாய்க்கு ஒரு படி போடுகிறேன் என்றீர்கள். அந்தத் திட்டம் வெற்றிகரமாக நடக்கவில்லை. விலைவாசி விஷம் போல் ஏறிக்கொண்டே இருக்கிறது. நாங்கள் ஆட்சிக்கு வந்தால் அதைத் தடுப்போம் என்றீர்கள். தடுக்க முடிந்ததா? நீங்கள் கேட்கிற மாநில சுயாட்சியால் மட்டும் எப்படி விலைவாசி உயர்வைத் தடுத்து நிறுத்த முடியும்.?

[திருமதி த. ந. அனந்தநாயகி]

**1974 ஏப்ரல் 19]**

இந்தத் தீர்மானத்தில் என்ன கருத்தை நீங்கள் கூறி இருக்கிறீர்கள் நான்கு விவகாரங்களைப் பற்றிச் சொல்லியிருக்கிறீர்கள். முதலாவதாக லூஸ் பெடரேஷன் அல்லது கான்பெடரேஷன், உள்நாட்டு வெளிநாட்டு விவகாரங்கள், இன்டர்–ஸ்டேட் கம்யூனிகேஷன், டிபன்ஸ் என்று இப்படி பட்டியலைக் கொடுத்து ஒரு கூட்டாட்சி நடத்த வேண்டுமென்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள். அமெரிக்காவின் அடிப்படையில் செய்ய வேண்டு மென்று விரும்புகிறீர்கள். அமெரிக்காவின் நிலைமை வேறு, நம் நிலைமை வேறு. அவைகள், வளர்ந்த மாநிலங்கள் ஒன்றாக இணைந்தன ஆனால் 1947-க்குப் பின்னாலே தான் இந்தியா ஒன்றாக இணைந்து ஒரு நாடாக ஆகியிருக்கிறது. இங்கே வளரும் மாநிலங்கள். மேலும் அங்கே ஒரே மதம், ஒரே இனம், இங்கே பல மதங்கள், பல மொழிகள் பேசும் மக்கள் இருக்கிறார்கள்.

திரு. பெ. சீனிவாசன் : அமெரிக்காவில் கூட அடிமைகளாக இருந்துதான் விடுதலை பெற்றார்கள். விடுதலை பெற்ற பிறகு ஒன்று சேரவில்லை. ஒன்றாக சேர்ந்த பிறகு விடுதலை பெற்றார்கள்.

திருமதி த. ந. அனந்தநாயகி : யூனியன் ஆப் ஸ்டேட்ஸ் என்பதற் காகச் சொன்னேன். இன்று இந்திய நாட்டை எடுத்துக் கொண்டால், இங்கே பல மதங்கள் , பல பழக்க வழக்கங்கள் இருக்கின்றன. இதனால் எத்தனையோ சங்கடங்கள் இருக்கின்றன. எனவே ஒரு பலம் வாய்ந்த மத்திய அரசாங்கம், உறுதி வாய்ந்த மத்திய அரசாங்கம், உரிமை படைத்த மத்திய அரசாங்கம் தேவைப்படுகிறது. இல்லையென்றால் இந்தியா சிக்கிச் சிதறுண்டு போய் எப்படி இந்தியா குறுநில மன்னர்கள் இருந்த நேரத்தில் முன்பு இருந்ததோ அந்த நிலைமைக்குப் போய் விடும். அதை நாடு இன்றுள்ள நிலையில் ஏற்றுக்கொள்ளாது.

நீங்கள் கொடுத்திருக்கும் திருத்தங்கள் என்ன ? இந்தத் திருத் தங்கள் நிறைவேற்றப்பட்டு, மாநில சுயாட்சி வந்தால்தான் அந்தக் காரியங்களைச் செய்யமுடியுமா ? மத்திய அரசாங்கம் மாநில அரசாங் கங்களுக்கு எத்தகைய டைரக்ஷனும் கொடுக்கக்கூடாது என்று சொல்கிறீர்கள். அந்த டைரக்ஷன் எந்த அடிப்படையில் கொடுக்கலாம் என்பதற்கு அரசியல் சட்டத்தில் திட்டவட்டமாகப் போட் டிருக்கிறார்கள். பாராளுமன்றத்தில் ஒரு சட்டம் வந்து அந்தச் சட்டத்தை மாநிலங்கள் அமல் நடத்த வில்லையென்றால் , அதை அமல் நடத்த வேண்டுமென்று சொல்வதற்கு மத்திய அரசாங்கத்திற்கு அதிகாரம் இருக்கிறது.

இப்போது இருக்கும் அதிகாரங்களை சென்டிரல் லிஸ்ட், ஸ்டேட் லிஸ்ட், கன்கரண்ட் லிஸ்ட் என்று மூன்று பிரிவுகளாகப் பிரித்து இருக்கிறார்கள். சென்டிரல் லிஸ்டில் 97 இனங்களும், ஸ்டேட் லிஸ்டில் 65 இனங்களும்,

கன்கரண்ட் லிஸ்டில் 47 இனங்களும் என்று பிரித்து, யூனியன் லிஸ்டில் இருக்கிற 97 இனங்களிலும், கன்கரண்ட் லிஸ்டில் இருக்கிற 47 இனங்களிலும் மத்திய அரசாங்கம் சட்டம் போடலாம். ஸ்டேட் லிஸ்டில் இருக்கிற 65 இனங்களிலும், கன்கரண்ட் லிஸ்ட்டிலே இருக்கிற 47 இனங்களிலும், மாநில அரசுகள் சட்டம் போடலாம் என்று இருக்கிறது.

இங்கே எனக்கு முன்னாலே பேசிய அமைச்சர் அவர்கள் மிகக் கஷ்டப்பட்டு சொல்லிக் கொண்டு வந்தார்கள். இந்த லிஸ்டிலே வராத எஞ்சிய அதிகாரங்களையும் சரியான முறையில் பிரிக்க வேண்டும். இந்த லிஸ்டிலே வராமல் எதுவும் இருக்காது. அப்படியே இருந்தாலும் அது இந்திய அரசியல் சூழ்நிலையில் "இட் ஈஸ் ஆப் நேஷனல் இம்பார்டென்ஸ்" மிக முக்கியத்துவம் வாய்ந்த பிரச்னையாக இருக்கும். அதை மத்திய அரசாங்கம் வைத்திருப்பதில் தவறு என்ன என்று எனக்குப் புரியவில்லை. இருக்கிற அதிகாரத்தை வைத்து ஒழுங்காக நிர்வகிக்க சாமர்த்தியம் இல்லை. எல்லா அதிகாரமும் எங்களுக்கு வேண்டும், நாங்களே ஆட்சி நடத்தப் போகிறோம் என்பதைக் கேட்டால் சிரிப்புத்தான் வருகிறதே தவிர, வேறு ஒன்றும் தோன்றவில்லை.

அடுத்தபடியாக சொல்லியிருக்கிறீர்கள். இண்டர்-ஸ்டேட் கவுன்சில் அமைக்க வேண்டுமென்று. ஆர்டிகிள் 263-லேயே அது இருக்கிறது. பல மாநிலங்களுக்கிடையே பல பிரச்னைகள் எழுந்தால் அதைத்தீர்ப் பதற்காக ஜனாதிபதி அந்தக் கவுன்சில் அமைக்கலாம் என்று இருக் கிறது. ஆகவே, இதற்காக ஒரு திருத்தத் தீர்மானம் தேவையில்லை. இதற்கு கான்ஸ்ட்டிட்யூஷனல் அமெண்ட்மெண்ட் தேவையில்லை அரசியல் சட்டவிதிகளிலே அது இருக்கிறது.

<u>மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :</u> இண்டர்–ஸ்டேட் கவுன்சில் என்று நாங்கள் குறிப்பிட்டிருப்பதில், எவையெவை விவாதிக்கலாம் என்று குறிப்பிட்டிருக்கிறோம். அதுதான் திருத்தத்திற்குரியது. எவை யெவை விவாதிக்கலாம் என்று குறிப்பிடப்படாமல் இருக்கிறது. இன்டர்-ஸ்டேட் கவுன்சில் அமைக்கலாம் என்று அரசியல் சட்டத்தில் இருக்கிறதே தவிர, இது வரையில், அப்படிப்பட்ட கவுன்சில் அமைக்கப்படவில்லை என்பதை மறந்துவிட முடியாது.

<u>திருமதி த. ந. அனந்தநாயகி :</u> அதுதான் அடிக்கடி டெல்லிக்கு காவடி தூக்குகிறீர்களே. கேட்பது தானே ?

<u>மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி ;</u> இப்போதுதான் வழிக்கு வந்தீர் கள் காவடி தூக்கும் பழக்கம் தமிழ் நாட்டுக்கு மட்டுமல்ல, எல்லா மாநிலங்களுக்கும் இருக்கிறது. அந்த பழக்கம் குறைய வேண்டுமென்பதற் காகத்தான் மாநில சுயாட்சி கேட்கிறோம். காவடி தூக்காமல் இருப்பதற்குத் தான் மாநில சுயாட்சி கேட்கிறோம்.

திருமதி த. ந. அனந்தநாயகி. நாங்கள் ஆட்சியில் இருந்தபோது, நீங்கள், காவடி தூக்குகிறேம் என்று சொல்லவில்லையா? நீங்கள் இப்போது காவடி தூக்காமல் இருப்பது தானே.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: நீங்கள் காவடி தூக்கும்போது எதிர்கட்சியில் இருந்த நாங்கள், காவடி தூக்காமல் இருப்பதற்கு அரசியல் சட்டத்தை மாற்றுவதற்கு நாங்கள் உங்களுக்கு ஒத்துழைப்பு தருகிறேம் என்று சொன்னேம். நீங்கள் காவடி தூக்கிக்கொண்டே இருக்கிறேன் என்று சொன்னீர்கள். நாங்கள் ஆட்சிக்கு வந்தபிறகும் காவடி தூக்கிக் கொண்டிருக்கவேண்டுமென்று சொல்கிறீர்களா? காவடி தூக்காமல் இருப்பதற்குத்தான் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறேம்.

திருமதி த. ந. அனந்தநாயகி: எங்களைக் காவடி தூக்காதே என்று சொன்னவர்கள், "நாங்கள் காவடி தூக்க மாட்டோம்" என்று தைரிய மாக நீங்கள் ஏன் சொல்ல வில்லை? அதைவிட வேகமாக நீங்கள் காவடி . . .

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: காவடி தூக்கமாட்டோம் என்ற தீர்மானம்தான் இன்றைக்கு விவாதிக்கப்படுகிறது.

திரு. வி. கிருஷ்ணமூர்த்தி (நெல்லிக்குப்பம்) என்ன காவடி? பால் காவடியா?

திருமதி த. ந. அனந்தநாயகி. பணக் காவடி. நீங்கள் இன்றைக்குக் கேட்டிருக்கிறீர்கள். இண்டர்-ஸ்டேட் கவுன்சிலில் என்ன விஷயங்களை விவாதிக்க வேண்டும், அதை எப்படி கான்ஸ்டிட்யூட் பண்ணவேண்டும் என்றெல்லாம் சொல்லப்பட்டிருக்கிறது. ஜனுதிபதிக்கு இப்பொழுதே முழு அதிகாரம் இருக்கிறது. டெவலப்மெண்ட் கவுன்சில் கூட்டத்திற்கு முதல் அமைச்சர்கள் பலர் டெல்லிக்குச் செல்கிறுர்கள். அவர்கள் எல்லோரும் கலந்து ஆலோசித்து இப்படிப்பட்ட பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு இண்டர்-ஸ்டேட் கவுன்சில் போட வேண்டும் என்று சொன்னுல், மெஜாரிடி முதல் அமைச்சர்கள், அது நியாயம் என்று சொன்னுல், அதை மத்திய அரசு ஏற்கக்கடமைப் பட்டிருக்கிறது. ஜனுதிபதி ஏற்கக் கடமைப்பட்டிருக் கிறுர். அதற்காக அரசியல் சட்டத்தையே திருத்த வேண்டும், அதற் காக ஒரு திருத்தம் கொண்டுவருவதற்குப் போராட வேண்டும் என்று சொல்லக்கூடியது இருக்கிறதே, அது ஏதோ உங்களுக்கு வருகிற தேர்தலுக்கு ஒரு அறிக்கை தேவையில்லையா, அதற்குத்தான் பயன்படும். வேறு எதையும் சொல்ல முடியாது, ஆதலால் மாநில சுயாட்சி என்று சொல்லிக் கொண்டு கொஞ்ச நாட்களுக்குத் தள்ளிப் பார்ப்போம் என்ற நோக்கத்தோடுதான் இந்தத் தீர்மானம் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்று சொல்லலாமே தவிர, இதிலே சத்து இருக்கிறது என்று நாம் எடுத்துக் கொள்ள முடியாது.

[திருமதி தி. ந. அனந்தநாயகி]



அடுத்தபடியாக ஆர்டிகிள் 169 பற்றிச் சொல்லியிருக்கிறீர்கள்.

Art. 169 should be omitted and power should be exclusively in State Legislature.

ஒரு மாநிலத்தில் மேல் சபை இருக்க வேண்டுமா, இருக்கக் கூடாதா என்பது முழுக்க முழுக்க அந்த மாநிலச் சட்டசபை தீர்மானம் போட்டு, பாராளுமன்றத்திற்கு அனுப்புகிறது. மாநில சட்டசபையில் மெஜாரிட்டி உறுப்பினர்கள் இப்படித்தான் எங்கள் தேவை, மேல் சபை வேண்டாம் என்று தீர்மானம் போட்டு பாராளுமன்றத்திற்கு அனுப்பினால், அதை மறுக்க மாட்டார்கள். அதை அப்படி மறுக்க வேண்டுமென்ற எண்ணம் இல்லை. இன்றைக்கு மேற்கு வங்காளத்தில் இப்படிப்பட்ட தீர்மானம் போடப்பட்டு அவர்களுக்கு அனுப்பப்பட்ட பிறகு அது ஒத்துக்கொள்ளப் பட்டிருக்கிறது ; மறுக்கப்படவில்லை. ஏதாவது கஷ்டம் இருக்கிறது, இப்படியெல்லாம் தலையிடுகிறார்கள் என்று எடுத்துச் சொன்னால் அதை நாம் ஏற்றுக் கொள்ளலாம். ஏதோ எங்கள் கட்சி அமைச்சர்களை மாகாணங்களுக்கு அனுப்புகிறார்கள் என்று சொன்னார்கள். அது எங்கள் கட்சி வேலை. உங்களுக்கு அதைப் பற்றி என்ன கவலை ?

You have your headquarters in Delhi and Branch offices in States.

என்று திரு. பழனிவேல் ராஜன் சொன்னார்கள். உங்கள் ஹெட்குவார்டர்ஸ் மெட்ருஸில்தான் இருக்கிறது. நீங்கள் டெல்லிக்குப் போக முடியாது. எங்கள் கட்சி அகில இந்தியக்கட்சி. ஆகவே, தலைமைப் பீடத்தை நாங்கள் டெல்லியில் வைத்திருக்கிறோம். மாகாணங்களில் எங்கள் அரசாங்கம் எப்படி நடத்தப்பட வேண்டும் என்று கட்சி சார்பிலே நிர்ணயிக்கும் பொறுப்பு எங்களுக்கு இருக்கிறது. அப்படி நாங்கள் மாகாணங்களுக்கு முதல் அமைச்சர்களை அனுப்பி வைத்தாலும், அந்த முதல் அமைச்சர்கள் 6 மாதங்களுக்குள் மக்களால் கட்டாயம் தேர்ந்தெடுக்கப்பட்டு உறுப்பினராக வந்தாக வேண்டும். அதற்குமேல் இருக்க முடியாது. அதை வைத்துக் கொண்டு மாநில சுயாட்சி கொடுக்க வேண்டும் என்று எப்படிக் கேட்பது ?

நாங்கள் அகில இந்திய கட்சி, பல மாகாணங்களில் சொல்வாக்குப் பெற்றிருக்கிறோம். மாகாணங்களில் சிறந்த முறையில் கோ-ஆர்டினேஷன் இருக்க வேண்டும், ஒத்துழைப்பு இருக்க வேண்டும், அந்த ஒத்துழைப்பு மூலம் பல கருத்துக்களை எடுத்துச் சொல்ல வேண்டும் என்று கருதுகிறோம். மத்திய அரசு தீவிர கருத்தை வைத்துக் கொண்டு நிலச்சீர்திருத்தச் சட்டம் கொண்டுவர வேண்டும் என்று சொல்கிறபொழுது, மாநில அரசு பிற்பட்ட சக்திகள் கையில் மாட்டிக் கொண்டிருந்தால், "நீங்கள் சொல்வது நாங்கள் செய்யமாட்டோம்" என்று சொன்னால் நிலைமை என்ன ஆவது என்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும். மக்களுக்கு நன்மையான ஒரு சட்டத்தைக் கொண்டுவந்தால் அதை அமல் நடத்துவதற்கு மாநில அரசு தயாராக இருக்க வேண்டும். பாராளுமன்றத்தில் . . .

*1974 ஏப்ரல் 19]*

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி. மாநிலத்தில் ஒரு முன்னேற்ற சர்க்கார் வந்து, முற்போக்கான சமதர்ம திட்டத்தை நிறைவேற்றுகிற சர்க்காராக, இன்னும் தீவிர சர்க்காராக அமைந்து, அதற்கு நேர்மாறாக மத்திய அரசு ஒரு சனாதன சர்க்காராக, பிற்போக்கு சர்க்காராக அமைந்தால் அப்பொழுது நிலைமை என்ன ?

திருமதி த. ந. அனந்தநாயகி. அப்பொழுது பாராளுமன்றத்தில் விவாதித்து, இது சரி, இது சரி அல்ல என்று சொல்லக் கூடிய பிரதி நிதிகள் அங்கே இருக்கிறார்கள். அகில இந்தியாவிலும் பிற்பட்ட சக்தி . . .

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி. பாராளுமன்றத்தில் பெரும் பான்மையான உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுவதுதான் மத்திய சர்க்கார். அப்படிப்பெரும்பான்மையோர் பிற்போக்குவாதிகளாக இருந்து, அவர்கள் தங்களுடைய பிற்போக்குக் கொள்கைகளை முற்போக்குக் கொள்கைகள் கொண்ட மாநிலத்தின் மீது திணித்தால் அப்பொழுது என்ன செய்வது ?

திருமதி த. ந. அனந்தநாயகி. ஜனநாயக முறையிலே பெரும் பான்மையோர் என்ன முடிவு எடுக்கிறார்களோ அதைத்தான் ஏற்றுக் கொள்ள வேண்டும். பெரும்பான்மையோர்கள் பிற்பட்ட சக்தியாக இருந்தால். . . .

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி. அதைத்தான் சொல்கிறேன். பெரும்பான்மையானவர்கள் முடிவுப்படி இந்தத் தீர்மானம் நிறைவேற இருக்கிறது. பெரும்பான்மையானவர்களின் முடிவை அம்மையார் அவர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

திருமதி த. ந. அனந்தநாயகி. உங்கள் அளவிலே உங்கள் கட்சியினுடைய எண்ணிக்கையைக் கொண்டு இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றத் தான் போகிறீர்கள். நான் அதை எதிர்க்கத்தான் போகிறேன். ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கட்டாயம் இல்லை. சட்டசபையில் கொண்டு வரப்பட்டிருக்கிற இந்தத் தீர்மானத்தை நாங்கள் எதிர்க்க முடியும். மெஜாரிட்டி ஓட்டு உங்கள் கையில் இருக்கிறது. ஆகவே, தீர்மானத்தை நீங்கள் உங்கள் எண்ணிக்கையை வைத்து நிறைவேற்றப் போகிறீர்கள் என்பது எனக்குத் தெரியும். பிற்ப்பட்ட தன்மை நாட்டில் மலிந்து, அது மெஜாரிட்டியாக மாறி, அது மத்திய அரசாகவே அமைந்து, அங்கே ஒரு சட்டம் கொண்டு வரப்படுகிறது என்றால், மெஜாரிட்டியினர் சொல்வதைத் தான் ஜனநாயகத்தில் ஏற்க வேண்டும். . .

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி : அதைத்தான் சொல்கிறேன். மாநிலத்தில் பிற்போக்கு சக்தி அரசு ஏற்படலாம் என்று கற்பனை செய்யும் பொழுது, மத்தியிலும் பிற்போக்கு சக்தி அரசு ஏற்படலாம் என்று ஏன் கற்பனை செய்யக் கூடாது ?

திருமதி த. ந. அனந்தநாயகி: மத்தியில் என்றால், எல்லா மாகாணங்களாலும் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் மத்தியில் இருக்கிறார்கள். அவர்களை ஒரே மாகாணம் தேர்ந்தெடுப்பது அல்ல. அவர்கள் பார்த்து எது ரீஸனபிளாக இருக்கிறது, எது ரீஸனபிளாக இல்லை என்று தீர்மானிப்பார்கள். In the interests of the country. This is a necessary evil. ஒரு மாகாணம் செய்துவிட்டால் கை தூக்கிவிட முடியாது. கிட்டத்தட்ட 16 மாகாணங்கள் இருக்கின்றன. செண்டிரலி அட்மினிஸ்டர்டு 10 மாகாணங்கள் இருக்கின்றன. ஆக 24 பகுதிகளும் சேர்ந்து இந்தியாவுக்கு எது நன்மை என்று சீர்தூக்கிப் பார்த்துச்சட்டம் இயற்றுவதற்கு வாய்ப்பு இருக்கிறது.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: மத்தியில் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள்தான் ரொம்ப தகுதியுடையவர்கள், திறமை படைத்தவர்கள், முற்போக்கு வாதிகள் மாநிலங்களில் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் பிற்போக்கு வாதிகளாக இருப்பார்கள் என்பது அம்மையார் அவர்களுடைய அபிப்பிராயமா ?

திருமதி த. ந. அனந்தநாயகி : மத்தியில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் மொத்தத்தில் இந்தியாவின் நிலைமையைப் பார்க்கிறார்கள். மாநிலத்தில் இருப்பவர்கள் இந்தியபவின் நிலைமையை மொத்தத்தில் பார்க்கிறார்களா என்பது கேள்விக் குறியாக இருக்கிறது. சில நேரங்களில் இந்தியாவின் நிலைமையை மொத்தத்தில் பார்த்து, செயல்பட வேண்டியிருக்கிறது. இந்தியா ஒரு பெரிய நாடு. அதில் தமிழ் நாடு ஒரு சிறு துண்டு. மொத்தத்திற்கே இந்தியா தேசத்திற்கே நீங்கள் குத்தகை எடுதது‌க் கொண்டு வந்திருப்பது போலப் பேசுவதில் பயன் கிடையாது. அவ்வப்பொழுது இருக்கிற நிலைமைகளின் அடிப்படையில், மக்களுடைய நன்மையைக் கருதி, குறிப்பிட்ட கொள்கையின் அடிப்படையில் பாராளுமன்றத்தில் ஒரு சட்டம் கொண்டுவந்தால், அந்தச் சட்டத்தை மாநில அரசு அமல் நடத்தவில்லை என்றால் அது தவறு தானே என்று தான் நான் சொல்ல வந்தேன்.

அடுத்தபடியாக ஆர்டிகிள் 154 அண்டு 258.

The Provision giving power to parliament to make laws conferring power on state and State authorities should be omitted.

என்று சொல்லியிருக்கிறீர்கள். என்ன பவர் கொடுக்கப்பட்டிருக்கிறது ? "வித் தி - கன்ஸெண்ட் ஆஃபி தி ஸ்டேட்". எப்பொழுதும் தலையிடுவது

மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை
மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம்
திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[திருமதி த. ந. அனந்தநாயகி]

197' ஏப்ரல் 19]

என்று சொல்லியிருக்கிறீர்கள் என்ன பவர் கொடுக்கப்பட்டிருக்கிறது? "விந்திகன்ஸெண்ட் ஸீஃபிதி ஸ்டேட்" எப்பொழுது தலையிடுவது என்பது இல்லை. மாகாணங்கள் தன்னுடைய அனுமதியைத் தந்தால் தான், இந்த ஆர்டிகிளின்கீழ் வேலை செய்யலாம். மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும் ஒத்துழைப்பு இருக்கும்பொழுது அனுமதி தரும் பொழுது இதைச் செய்ய முடியும். இதனால் எப்படி சுயாட்சி பாதிக்கப்படுகிறது என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

அடுத்தபடியாக வரும்பொழுது ஆர்டிகிள் 249.

This article, which empowers the Parliament to legislate with respect to a matter in the State list shall be omitted.

அதுகூட—கவுன்ஸில் ஆஃப் ஸ்டேட்—ராஜ்ய சபையில் இருக்கக் கூடிய அங்கத்தினர்கள் ஒரு தீர்மானம் மூலமாக இதை நீங்கள் செய்யலாம் என்று மத்திய அரசுக்கு உத்தரவு போட்டால்தான் இதைச் செய்யலாம். அங்கு மக்கள் பிரதிநிதிகள் இருக்கிறார்கள். ராஜ்ய சபையில் இருப்பவர்கள் ஒத்துக் கொள்ள வேண்டும் என்று சொல்லும்பொழுது, அதிலே என்ன சுயாட்சி பாதிக்கப்படுகிறது என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

அடுத்தபடியாக வருவது எமெர்ஜன்ஸி பவர்ஸ். இதைப்பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்றால், அன்னிய நாட்டிலிருந்து யாராவது படை எடுத்தால் தான் நீங்கள் எமெர்ஜன்ஸி பவர்ஸ் வைத்துக் கொள்ள வேண்டும் என்று சொல்கிறீர்கள். ஆனால், ஒரு மாநிலத்தில் "கான்ஸ்டிடியூஷனல் பிரேக் டவுன்" ஏற்பட்டால் என்ன செய்வது? உதாரணத்திற்கு பாண்டிச்சேரியை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு அவல நிலை அங்கே ஏற்பட்டது. எந்தக் கட்சிக்கும் பூரண மெஜாரிடி கிடைக்கவில்லை. மெஜாரிடி இல்லாமல் அரசு நிர்வாகத்தை நடத்த முடியவில்லை என்றால், பிரஸிடெண்ட் தானே தன்னுடைய அதிகாரத்தைச் செலுத்த வேண்டியிருக்கிறது? அவர் அப்படி அதிகாரத்தைச் செலுத்தக் கூடாதா? (குறுக்கீடு) சீப் ஜஸ்டிஸ் அதிகாரத்தைச் செலுத்தலாம் என்றால், அவர் பாவம் உயர் நீதி மன்றத்தில் வழக்கறிஞர்கள் வாதாடுவதைக் கேட்டுக்கொண்டிருக்கிறார். அவர்களைக் கொண்டு அரசாங்கம் நடத்தச் சொன்னால் எப்படி? கவர்னருக்கு அரசாங்க அனுபவம் வேண்டும்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: மைசூர் மகாராஜா தமிழ் நாட்டில் கவர்னராக இருந்தபொழுது அந்தப் பணியை ஆற்றியவர் மைசூர் மகாராஜாவா அல்லது உயர் நீதி மன்ற நீதிபதியா?

திருமதி த. ந. அனந்தநாயகி: ஏதோ அது ஒரு "எக்ஸ்ட்ரார்டினரி ஸிச்சுவேஷன்". கவர்னருக்கு பிரமாணம் எடுத்து வைப்பது சீஃப் ஜஸ்டிஸ். உங்களுக் கெல்லாம் பிரமாணம் எடுத்து வைப்பது கவர்னர். இது வந்து

ஒரு ரூல். அவர் இருந்து ஆட்சியை நடத்த வேண்டும். அதற்குக் கட்டாயமாக ஜனாதிபதி தன்னுடைய அதிகாரத்தைச் செலுத்தத்தான் வேண்டும். அந்தச்சந்தர்ப்பத்தில் மாநிலத்தை ஆளுவதற்கு தன் ஆள் ஒருவரை அனுப்பித்தான் வைக்க வேண்டும் ஜனாதிபதி அவர்கள். இல்லாவிட்டால், யாருக்கும் மெஜாரிடி இல்லை என்றால் என்ன ஆவது? மெஜாரிடி இல்லையென்றால் நிர்வாகம் ஸ்தம்பித்துப் போவதா? அதற்கு அவர் ஒரு ப்ராகிளமேஷன் செய்ய வேண்டும். அது கட்டுப்பாடு இல்லாத அதிகாரம் கிடையாது. பாராளுமன்றம், ராஜ்ய சபை ஆகிய இரண்டு மன்றங்களும் அதை ஒத்துக் கொள்ள வேண்டும். ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள், ப்ராகிளமேஷன் படிப்படியாக குறிப்பிட்ட காலத்திற்கு மேலே போக முடியாது. இப்படிப்பட்ட பாதுகாப்புகள் ஜனநாயக முறையிலே அரசியல் சட்டத்தில் வகுக்கப்பட்டிருக்கின்றன. அதில் என்ன தவறு இருக்கிறது? தேசத்தினுடைய நலன் உங்களுடைய உள்ளத்தில் எங்கேயாவது ஓரளவாவது வைத்திருக்கிறீர்களா என்பது கேள்விக் குறியாக இருக்கிறது. இந்த அதிகாரம் இல்லாவிட்டால் நாடு என்ன ஆகும் என்பதைச்சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

<u>மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி</u>: கவர்னர் வேண்டாம், அந்த விதியை எடுத்துவிட வேண்டும் என்று சொல்கிற இந்திய கம்யூனிஸ்டு கட்சியோடு இந்திரா காங்கிரஸ் உறவாடியதே, அது எந்த விசுவாசத்தில்?

<u>திருமதி த. ந. அனந்தநாயகி</u>: தேர்தல் கூட்டு என்பது ஓர் அளவுக்கு உட்பட்டது தான். அதற்காக எல்லாவற்றையும் தலையில் போட்டுக் கொள்வது என்று யாரும் சொல்வதில்லை. அந்த முறையில் நாங்கள் அதை ஏற்றுக் கொள்கிறோம் என்று சொல்லவில்லை.

for a limited purpose, for a limited duration.

1971-வது ஆண்டில் உங்களோடு கூட கூட்டுச் சேர்ந்தோம். அதனால் நீங்கள் கேட்டதையெல்லாம் ஒத்துக்கொள்ள முடியுமா? அது முடியாது. தேர்தல் கூட்டு என்பது வோட்டுக் கூட்டு.

<u>மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்</u>: 10 நிமிடங்களுக்குள் முடித்துக்கொள்ள வேண்டும். ஏற்கனவே 30 நிமிடங்கள் ஆகி விட்டன.

<u>திருமதி த. ந. அனந்தநாயகி</u>: எவ்வளவு இன்டரப்ஷன். முப்பது இன்டரப்ஷன். அடுத்தபடியாக இருப்பது நிதிக்கமிஷன். ஐந்தாண்டுக்கு ஒருமுறை நிதிக் கமிஷன் போடுகிறார்கள். தென்னாட்டைச் சேர்ந்தவர்களும் அதன் தலைவராக இருந்திருக்கிறார்கள். திரு கே. சந்தானம் அவர்கள் இருந்திருக்கிறார்கள்; பிரம்மானந்த ரெட்டி அவர்கள் இருந்

[திருமதி. தி. ந. அனந்தநாயகி]

1974 ஏப்ரல் 19]

திருக்கிறார்கள். அது வேண்டும், இது வேண்டும் என்று நீங்கள் புதிது புதிதாக எதையெதையோ கேட்கிறீர்கள். அந்த முறையிலேயேதான் நிதிக் கமிஷனும் நிரந்தரமாக இருக்க வேண்டும்; அதிலே இருப்பவர்களை மாற்றக் கூடாது என்று சொல்கிறீர்கள். அது பெரிய விபரீதத்தில் போய் முடிந்துவிடும்.

மாறி மாறி வந்தால்தான் வட நாட்டவரும் இடம் பெறலாம்; தென்னாட்டவரும் இடம் பெறலாம். நல்லவர்களும் வரலாம்; கொஞ்சம் மந்த புத்தியுள்ளவர்களும் வரலாம். ஒருமுறை இருந்தவர்களே தொடர்ந்து இருப்பதானால் நிலைமை எப்படி இருக்கும்? வரக்கூடியவர் நாட்டுப்பற்று, மாநிலப் பற்று, ஊர்ப்பற்று உள்ளவராக இருக்கலாம். அப்படிப்பட்ட ஒருவர் வந்துவிட்டால் நிலைமை இன்னும் மோசமாகிவிடும். வந்தவர் மந்த போக்குடையவராக இருந்தால் நிதிக் கமிஷனே கெட்டு விடும்.

இப்படி நிரந்தர அமைப்பு என்று ஏற்படுத்திவிட்டால், ஒரு முறை வந்தவர்கள் போகும் வரையில் சாக வேண்டியதுதான். அவர்கள் ரிட்டயர் ஆனால் தான் அடுத்து வரக்கூடியவரைப்பற்றி யோசிக்க முடியும். வரக்கூடியவர் அகில இந்திய அடிப்படையில் நல்லது கெட்டதை யோசித்துப் பார்த்து ஒழுங்காக நடந்து கொள்பவராக இருந்தால் அந்தப் பிரச்சனை நமக்கு எழாது.

ஆகவே, ஐந்தாண்டுக்கு ஒரு முறை மாற்றி மாற்றி அமைத்தால் தான் பொருத்தமாக இருக்கும். அப்படி இருந்தால்தான் ஒருமுறை இல்லா விட்டாலும் மறுமுறை வரக்கூடியவர்களுக்காவது தென் மாநிலங்களின் நிலைமை என்ன என்பது புரியக்கூடிய வாய்ப்பு ஏற்படும்.

மாண்புமிகு திரு செ. மாதவன்: நாங்கள் பைனான்ஸ் கமிஷனைப் பற்றித்தான் சொல்கிறோம்; சேர்மன் நிரந்தரமாக இருக்க வேண்டு மென்று சொல்லவில்லை.

திருமதி த. ந. அனந்தநாயகி: கமிஷன் பெர்மனண்ட்டாக இருந் தால் அதன் தலைவரும் பெர்மனண்டாகத்தான் இருப்பார். அப்படி வரக்கூடியவர் நல்ல முறையில் நிலைமையைப் புரிந்து நடந்து கொள்ளாத யராக வந்துவிட்டால் அவர் ரிட்டயர் ஆகிப் போகும் வரையில் அவரை ஒன்றும் செய்ய முடியாமல் போய்விடும். இது ரொம்ப சிக்கலான விஷயம்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: அதையும் சொல்லியிருக்கி றோம். அனைத்து மாநிலக் குழுவைக் கலந்தாலோசித்து க்கொண்டு நிதி ஆணைக் குழுவின் உறுப்பினர்கள் நியமிக்கப்பட வேண்டுமென்று இந்தக்குறிப்புப்புத்தகத்திலே இருக்கிறது. படித்துப் பாருங்கள்.

திருமதி த. ந. அனந்தநாயகி: அப்படி வரக்கூடியவர்கள் மட்டும் ஒழுங்காக நடந்து கொள்வார்கள் என்று எப்படிச் சொல்ல முடியும்? அவர்கள் தப்பு செய்கிறார்கள் என்றால் என்ன செய்வது? அவரவர் கேஸைப்பற்றித்தான் அதிக அக்கறை கொள்வார்கள். ஆகையால் தவறுகள் நடக்கும்போது அதற்கு ஒரு பரிகாரம் வேண்டுமென்றால் அதற்கு இப்போது இருக்கின்ற முறை தான் சரியானது.

இன்கம் டாக்ஸைப் பொறுத்தவரையில் முன்பு 70 சதவிகிதமாக இருந்ததை இப்போது 80 சதவிகிதத்திற்கு உயர்த்தியிருக்கிறார்கள். அது மட்டுமல்ல. நம்முடைய மாநிலத்திலே தர்மபுரி, இராமநாதபுரம் மாவட்டங்களுக்கு பாக்வர்டு ஏரியா என்ற முறையிலே அதிகமான சலுகை தந்திருக்கிறோம். அகில இந்திய அடிப்படையிலும் அப்படித்தான் தந்து கொண்டிருக்கிறார்கள். அதற்கு ஒரு "கைடு லைன்" வைத்திருக்கிறார்கள். எந்தெந்தத் துறைகளிலே ஒரு மாநிலம் முன்னேறி இருக்கிறது, அல்லது பின்னேக்கி இருக்கிறது என்று பார்த்து, கல்வி, சுகாதாரம், சமுதாய நலம் இன்னும் பிற துறைகளில் ஒரு மாநிலம் முன்னேறி இருக்கிறதா இல்லையா என்று பார்த்து அந்த அடிப்படையிலே உதவி செய்கிறார்கள்.

நிதி ஒதுக்கிக் கொடுக்கிறார்கள். அந்த முறையில் ஏதாவது கோளாறு இருக்குமானால் அதை மாற்றி அமைக்க வேண்டுமென்று நீங்கள் சொல்லலாம். இன்றைக்கு நாஷனல் டெவலப்மெண்ட் கவுன்சிலுக்குப்போகிறீர்களே, அங்கே என்ன செய்கிறீர்கள்? அதைப்பற்றி அங்கே உட்கார்ந்து எல்லா முதலமைச்சர்களும் பேசுவதுதானே. இதை இதை மாற்ற வேண்டு மென்று சொல்லுங்கள். அதை விட்டுவிட்டு, ஏதோ அங்கே இருப்பவர்கள் பூச்சாண்டி மாதிரியும், இங்கே இருப்பவர்கள் நடுங்கிக் கொண்டு ஆட்சி செய்வது மாதிரியும் ஏன் சொல்ல வேண்டும்? எதற் கெடுத்தாலும் விலங்கு மாட்டியிருக்கிறார்கள், விலங்கு மாட்டியிருக்கிறார் கள் என்று ஏன் சொல்ல வேண்டும்? ஆட்சி செய்ய முடியாமல் முடக்கிப் போட்டிருக்கிறார்கள்; கைக்கு விலங்கு போட்டிருக்கிறார்கள்; காலுக்கு விலங்கு போட்டிருக்கிறார்கள்; நடமாட முடியாமல் முடக்கிப் போட்டிருக் கிறார்கள் என்று சொல்லி, சிறிய சிறிய விஷயங்களை எல்லாம் எந்த அளவுக்கு பெரிதுபடுத்திக் கொண்டிருக்கிறீர்கள் என்பது எங்களுக்கு நன்றாகத் தெரிகிறது. எங்களால் உங்கள் எண்ணத்தைப் புரிந்து கொள்ள முடிகிறது.

நீங்களே கூட ஒரு பிளானிங் கமிஷனைப் போட்டீர்கள். 1974 முதல் 1984 வரையிலான 10 ஆண்டுகளுக்கு ஒரு திட்டத்தைத் தயாரித்துக் கொடுத்திருக்கிறார்கள். அப்படி உங்களுக்கு ஸ்டேட் லெவலில் ஒரு பிளானிங் கமிஷனை அமைத்துக் கொள்வதற்கு அதிகாரம் இருக்கிறது. அப்படி எல்லாம் இருந்தாலும் ஏதோ இல்லாத ஒன்றைப் புதிதாக வாங்கப் போகிறோம், வாங்கப்போகிறோம் என்று சொல்கிறார்கள். அரசியல் சட்டத்தைத் திருத்தப் போகிறோம் என்று சொல்கிறார்கள். இப்படியே போய்க்கொண்டிருந்தால் இது எங்கே போய் முடியுமோ தெரியவில்லை.

[திருமதி த. ந. அனந்தநாயகி]

1974 ஏப்ரல் 19]

கல்வித் துறையைப்பற்றிச் சொன்னார்கள். இங்கே ஒரு கல்வி அமைச்சர் இருக்கும்போது அங்கே ஒரு கல்வி அமைச்சர் வேண்டுமா என்றெல்லாம் கேட்டார்கள். அங்கே ஏன் இருக்கக் கூடாது? இந்த மாநிலத்திற்கு என்ன முறை இருக்க வேண்டுமென்று நீங்கள் முடிவு செய்கிறீர்கள். அதேமாதிரி ஒவ்வொரு மாநிலத்திலும் இருக்கிறது. ரீசர்ச், ஹையர் ஸ்டடீஸைப் பொறுத்த வரையில் மத்திய அரசு சில விதிமுறைகளை வைத்திருக்கிறது. மற்றபடி ஆரம்பக் கல்வியை நீங்கள் நடத்தக் கூடாது என்று சொல்கிறார்கள்; உங்களிடமிருந்து அதைப் பிடுங்கிக்கொண்டா போய்விட்டார்கள்? இல்லையே. உங்களுடைய எல்லைக்கு அப்பால் செல்லும் போதுதான் மத்திய அரசாங்கத்தின் அனுமதியைப் பெற வேண்டியிருக்கிறது. உங்களுடைய அதிகாரத்திற்குள் இருக்கக்கூடிய விஷயங்களுக்கு அவர்களைக் கேட்க வேண்டியதில்லை.

As the Private Schools Regulation Bill affected minority rights, you send it to the President for assent. Otherwise, there is no need to send it to the President for assent. You can send the other Bills to the Governor for assent.

ஒவ்வொரு மாநிலத்திலும் நடைமுறைகள் வேறுபட்டிருக்கலாம். ஆனால் அகில இந்திய அடிப்படையில் ஒரு சீரான கொள்கையை வகுப்பதில் மத்திய அரசாங்கத்திற்குப் பங்கு இருக்கிறது. அதனால் பார்லிமெண்டின் அனுமதியைப் பெற வேண்டியிருக்கிறது. அதிலே தவறில்லை. நீங்கள் கேட்ட பல திட்டங்களுக்கு அனுமதி தந்திருக்கிறார்கள். அப்படி இருக்கும்போது எப்படி குறை சொல்ல முடியும்?

அதுமட்டுமல்ல; விவசாயத்திலும் அப்படித்தான். உரம் விநியோகம் செய்வதிலும் குறை சொல்லுகிறார்கள். வெளிநாட்டிலிருந்து உரத்தை இறக்குமதி செய்துகொள்ள ஏன் மாநிலங்களுக்கு அதிகாரம் இருக்கக் கூடாது என்று சொல்கிறார்கள். மத்திய அரசாங்கம் இறக்குமதி செய்வதாக இருந்தால்தான், எந்த மாநிலத்திற்கு என்ன உரம் எவ்வளவு தேவை என்ற அடிப்படையில் பகிர்ந்து கொடுக்க முடியும். அவ்வரவர் விருப்பம்போல் இறக்குமதி செய்து கொள்ளலாம் என்று சொல்லிவிட்டால் முதலில் உரம் இறக்குமதியாகும். அப்புறம் கட்சிக்கு உரம் இறக்குமதியாகும். அப்புறம் ஆளே இறக்குமதியாகி விடுவார்கள். அப்புறம் நாடு அவர்கள் கையில் போகக்கூடிய நிலை உண்டாகும்.

இதையெல்லாம் கண்காணித்து, அகில இந்திய அடிப்படையில் எவ்வளவு உரம் தேவைப்படுகிறது என்பதை அறிந்து, இறக்குமதி செய்து உரிய முறையில் பங்கீடு செய்வதற்கு மத்திய அரசால்தான் முடியும். அதற்கு மத்திய அமைச்சர் இல்லாமல் வேறு யார் செய்வது? இங்கே இருக்கிற அமைச்சரா போய் அந்த வேலையைச் செய்வார்? நீங்கள் கேட்பது நியாயமா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும்.

[திருமதி த. ந. அனந்தநாயகி]

[1974 ஏப்ரல் 19

அதுமட்டுமல்ல. தொழில் வளர்ச்சியைப் பற்றிச் சொல்ல வேண்டுமானால், ஒரு கோடி ரூபாய் மூலதனம் வரையில் அந்நியச் செலாவணி தேவையில்லை என்றால், மாகாண அரசாங்கமே லைசென்ஸ் கொடுத்துவிடலாம் என்று இருக்கிறது. நீங்கள் கேட்பதில் எக்கச்சக்கமான சிக்கல் இருந்தால், ஒரு கோடி ரூபாய்க்கு மேற்பட்டிருந்தால் மத்திய அரசாங்கத்தின் அனுமதியைப் பெற வேண்டியிருக்கிறது.

இங்கே இருக்கின்ற தொழில் அமைச்சர் நாங்கள் சொல்பவரைத்தான் மானேஜிங் டைரக்டராகப் போட வேண்டும்; இல்லை என்றால் லைசென்ஸ் தரமாட்டோம் என்கிறார். இவர்களுக்குப் பிடிக்கவில்லை என்றால் ஒரு கோடி ரூபாய்க்கு உட்பட்ட மூலதனமுடைய தொழிலாக இருந்தாலும் லைசென்ஸ் கொடுப்பதில்லை. இதிலே சந்தேகம் இருக்கிறது. நீங்கள் விசாரணை செய்து பாருங்கள் என்று எழுதி அனுப்பி இருக்கிறோம் என்று சொல்லி இழுத்தடிக்கிறார்கள். இந்த அதிகாரத்தை வைத்துக்கொண்டே இவ்வளவு இடையூறு செய்கிறார்கள்.

மாண்புமிகு திரு. செ. மாதவன்: விஷயம் தெரியாமல் பேசுகிறேன் என்று நினைத்துவிடக் கூடாது. தனியார் கம்பெனிகளைப் பொறுத்தவரையில் தனியார் நிறுவனங்களைப் பொறுத்த வரையில் நமக்கும் அவர்களுக்கும் எந்த விதமான சம்பந்தமும் கிடையாது.. நம்முடைய அரசாங்கத்தின் அனுமதியோடு நடைபெறுகின்ற தொழில்களில் நம்முடைய அனுமதி இல்லாமல் டைரக்டர்கள், சேர்மன்களை எப்படிப் போட முடியும்? நாம் முதல் போட்டால் ஜாயின்ட் செக்டாராக தொழிலை நடத்த உத்தரவிடுகிறோம். அது வேண்டாம் என்று சொன்னால் பின்னால் பரிசீலனை செய்யலாம்.

திருமதி த. ந. அனந்தநாயகி: அரசாங்கம் முதல் போட்டாலும் அவர்கள் உரிமையைப் பறிக்கக் கூடாது. ஷேர் போட்டவர்களை நியமிக்க வேண்டும்.

மாண்புமிகு திரு. செ. மாதவன்: இப்போதுதான் சரியாகச் சொன்னார்கள். ஷேர் போட்டவர்களை நியமனம் செய்ய வேண்டும். நாமும் அவர்களும் ஷேர் போட்டவர்கள். அதனால் நம்முடைய அனுமதியோடுதான் ' டைரக்டர்கள், சேர்மன்கள் நியமனம் செய்யப்படுவார்கள்.

திரு. கே. எம். சுப்பிரமணியம்: The Shipping Corporation is managed by an ex-I.G. of Police for the Central Government.

திருமதி த. ந. அனந்தநாயகி: இருக்கலாம். இல்லை என்றா சொல்கிறோம்? மாநிலங்களுக்கு அதிகாரம் கொடுக்காமலா இருக்கிறார்கள்? கொடுத்திருக்கிறார்கள். ஒரு கோடி ரூபாய்க்கு மேற்

படாத மூலதனம் உள்ள தொழிலாக இருந்தால் மத்திய அரசாங்கத்தின் அனுமதி தேவையில்லை. அந்நியச் செலாவணி அதற்குத் தேவைப்பட்டால் மத்திய அரசாங்கத்தைக் கேட்க வேண்டும். இங்கே இருக்கின்ற தொழிலமைச்சர் அதைக் கொடுக்க முடியாது.

ஆகவே, அகில இந்திய அடிப்படையில், எங்கே எப்படி இருக்க வேண்டுமென்று ஒரு பாலிசியை மத்திய அரசாங்கம்தான் கடைப்பிடிக்க முடியும். இங்கே ஒரு சின்ன விஷயத்தைச் சொல்ல விரும்புகிறேன். பீர் தொழிற்சாலை அதிகரித்துவிட்டது ; பீர் தேவைக்கு அதிகமாக உற்பத்தியாகிவிட்டது ; அதனால் இனி யாரும் உற்பத்தி செய்யக்கூடாது ; லைசென்ஸ் கொடுக்கக்கூடாது என்று சொல்வதில் தவறு கிடையாது. இன்னும் லைசென்ஸைக் கொடுத்துக் கொண்டிருந்தால், பிறகு உற்பத்தியானதை கடலிலா கொண்டு போடுவது ? ஆகவே, இந்த மாதிரி நேரத்தில் அதற்கு ஒரு முடிவு கட்டுகின்ற அதிகாரம் நிச்சயமாக மத்திய அரசாங்கத்திடம்தான் இருக்க வேண்டும். அவர்களால்தான் அதைச் செய்ய முடியும்.

மாண்புமிகு திரு. செ. மாதவன் : இப்படிப்பட்ட அதிகாரங்கள்—என்னென்ன அதிகாரங்கள் மத்திய அரசாங்கத்திற்கு வேண்டுமென்று தெளிவாக அறிக்கையிலே சொல்லியிருக்கிறோம். அதைப் படித்துப் பாருங்கள் ; அதன் பிறகு சொல்லுங்கள்.

திருமதி த. ந. அனந்தநாயகி : உங்கள் அறிக்கை எல்லாம், முழுவதையும் நன்றாகப் படித்துப் பார்த்து விட்டேன். படிக்காமல் நான் சொல்லவில்லை. படித்துவிட்டுத்தான் சொல்கிறேன்.

திரு. பெ. சீனிவாசன் : ஏதோ ஒரு தொழிலைப்பற்றிச் சொன்னார்கள். கார் உற்பத்தியைப் பெருக்கினால் நல்லது. கார் வேண்டுமென்று ரெஜிஸ்டர் செய்து, 2 வருஷம், 3 வருஷம் ஆனாலும் கிடைக்காமல் இருக்கிறது. பிரதமர் அவர்களுடைய மகன் உற்பத்தி செய்கின்ற காராக இருந்தால்தான் கிடைக்குமென்ற நிலை இருக்கிறது. அதைப்பற்றி உங்கள் கருத்து என்ன என்பதை அறிய விரும்புகிறேன்.*

பிற்பகல் 12-30

திருமதி த. ந. அனந்தநாயகி : பிரதமர் மகனாக இருந்தால் கார் உற்பத்தி செய்யக் கூடாதா? அப்படி ஏதாவது சட்ட திட்டம் இருக்கிறதா ? பிரதமர் மகன் என்றால் அவர் எந்த தொழிலும் செய்யக் கூடாதா ?

He is qualified for it and so he has been given.

[திருமதி. தி. ந. அனந்தநாயகி]

[1974 ஏப்ரல் 19

ஆக, இன்றைக்கு அதைத் தனியாக எடுத்துக் காட்டி சொல்ல வேண்டியதில்லை. கார் உற்பத்தி செய்யக் கேட்போம், சைக்கிள் உற்பத்தி செய்யக் கேட்போம். இதை யெல்லாம் ஒட்டு மொத்தமாக கவனித்து, நாட்டின் தேவையை கவனித்து விநியோகிக்க வேண்டும்.

திரு. சி. ஆறுமுகம்: பிரதமர் மகன் கார் தொழில் செய்யக் கூடாதா என்று குறிப்பிட்டதை வரவேற்கிறேன். ஆனால் மற்ற கட்சிக் காரர்கள் தொழில் செய்யக் கூடாது, மாவட்ட செயலாளர், வட்டச் செயலாளர் என்று பேசுகிறார்களே இது எந்த அளவில் நியாயம் என்பதைக் கேட்க விரும்புகிறேன்.

திருமதி. த. ந. அனந்தநாயகி: நான் அப்படி மாவட்டம், வட்டம் என்று சொல்லவில்லை.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்: 40 நிமிடங்கள் ஆகிவிட்டன முடித்து விடுங்கள்.

திருமதி த. ந. அனந்தநாயகி: இப்படி நாட்டின் நலனைப் பாதுகாத்துக் கொள்வதற்கு ஒரு பலமான மத்திய அரசு இல்லையென்றால் மாநில அரசாங்கங்கள் தங்களுக்குள் இருக்கக் கூடிய சிக்கல்கள், அட்மினிஸ்டிரேடிவ் அட்ஜெஸ்ட்மெண்ட், இதில் டிலே, அதில் டிலே, இதை நாம் சாதாரணமாக நம்முடைய சாமர்த்தியத்தினால், திறமையினால் தீர்த்துக் கொள்ள வேண்டிய பிரச்சினைகள். இதை ஒரு பெரிய பிரச்சினையாக்கி, கண், மூக்கு வைத்துப் போராட்டங்கள் நடக்கப் போகிறது என்று சொல்வது மக்களை ஏமாற்றச் செய்வதற்கு என்று சொல்லுகிறேன். மின்சாரத்தை எடுத்துக் கொள்ளுங்கள். நாம் உற்பத்தி செய்தாலும், அகில இந்தியாவில் ஒரு நேஷனல் கிரிட் என்று வைத்து, எங்கெங்கே மின்சாரம் உற்பத்தி செய்யப்படுகிறதோ, அவை யெல்லாம் ஒட்டு மொத்தமாக வைத்து, பற்றாக்குறை மாநிலங்களுக்கு விநியோகம் செய்ய வேண்டுமென்று விரும்புகிறோம். சவுத் கிரிட் வேண்டும், தென் மாநிலங்களை இணைத்த சதர்ன் கிரிட் வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம். அதற்கு நான்கு மாநிலங்களையும் ஒருங்கிணைத்து வைத்துப் பேசி, இப்படித் தான் இதைத் தீர்க்க வேண்டும் என்பதற்கு பலம் வாய்ந்த மத்திய அரசு இல்லையென்றால் எப்படி உங்கள் பிரச்னையைத் தீர்த்துக் கொள்ள முடியும்? அதே மாதிரி தான் இண்டர் ஸ்டேட் வாட்டர் டிஸ்ப்யூட்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர்: ஒவ்வொரு சப்ஜெக்ட்டையும் கவர் பண்ணிப் பேசினால் ஒரு நாள் கூட போதாது. 40 நிமிடம் பேசியிருக்கிறீர்கள். ஒரு நிமிடத்தில் முடியுங்கள்.

திருமதி த. ந. அனந்தநாயகி: எனக்கு 5 நிமிடம் கொடுங்கள். இன்றைக்கு இருக்கக் கூடிய நிலைமையில் மத்திய அரசு ஒரு பலமான அரசாங்கமாக இருந்து, எல்லா மாநிலங்களையும் ஒட்டு மொத்தமாகக் கணக்கெடுத்து, ஒழுங்கான முறையில் நிர்வகித்துக் கொண்டு வருகிறார்கள் என்று பார்க்கும்போது, பிரிவினைப் பாதையில் இந்தத் தீர்மானத்தை வைத்திருப்பது மூலமாக நாட்டில் நாசம் விளைவிப்பது தவிர, வேறு ஒன்றும் இதில் இல்லை, இங்கிருக்கக்கூடிய லோக்கல் பாடீஸ், பஞ்சாயத்து யூனியன், கார்ப்பரேஷன், முனிசிபாலிடிக்கு ஒரு வீதியின் பெயரை, ஒரு தெருவின் பெயரை மாற்ற வேண்டுமென்று ஆசைப்பட்டார்கள். அதை அனுமதித்தீர்களா? அது கூடாது என்று மறுத்து விட்டீர்கள். ஒரு வீதியின் பெயரை மாற்றுவதற்குகூட ஒரு நகரசபைக்கு அதிகாரமில்லை என்று சொன்னால் நீங்கள் எந்த நியாயத்தை வைததுக் கொண்டு அதிக அதிகாரம் கேட்கிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லை.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: தலைவர் அவர்களே, சில பெயர்கள் வைக்கப்படும்போது அவர்கள் ஜாதியை இணைத்துப் பெயர் வைக்கப்படக் கூடாது என்ற விதியிருக்கிறது. அவர்கள் அங்கே ஒரு பெயரைக் கேட்டு, ஜாதியை இணைத்ததால், அது தவறு என்று விதி இருக்கிறது என்று அதிகாரிகள் மறுத்தார்கள். உடனே அரசாங்கத்தின் கவனத்திற்கு வந்தது. உடனடியாக அந்தப் பெயருக்கு அனுமதி அளிக்கப்பட்டிருக்கிறது.

திருமதி த. ந. அனந்தநாயகி: போராட்டத்திற்குப் பிறகு அனுமதி அளித்திருக்கிறீர்கள். அதே மாதிரி கிளைவ் ஹாஸ்டல் பற்றி ஒரு தீர்மானம் போட்டால் அதை அனுமதித்திருக்கிறீர்களா? ஏன் அனுமதிக்கக் கூடாது? மாநில சுயாட்சி என்று நீங்கள் கேட்பீர்கள். அவர்களுக்கு சுயாட்சி தேவையில்லையா? ஆகவே நான் சொல்லுவது எல்லாம் இந்த மாநில சுயாட்சி என்ற தீர்மானம் மக்கள் நன்மைக்காகக் கொண்டு வரப்பட்டதல்ல. இவர்கள் மக்களை ஏமாற்ற, இவர்களுடைய திட்டங்கள் ஒழுங்காக நிறைவேற முடியாத காரணத்தினால் இதைச் சொல்லி மக்கள் மத்தியில் தங்கள் கட்சி பிழைப்பு பெறலாம் என்ற நிலையில் கொண்டு வந்திருக்கிறார்கள் என்று ஆணித்தரமாகச் சொல்லி என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

திரு. பெ. சீனிவாசன்: முக்கியமான வைடல் பாயிண்ட். ஹிந்திப் பிரச்னையில் மத்திய அரசாங்கம் தான் முடிவு செய்ய வேண்டுமென்று சொன்னார்கள். இந்தத் தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் 100-க்கு 99 பேர் ஹிந்தியை ஏற்றுக் கொள்ளவில்லை என்று 67-ல் சொன்னோம். 71-தேர்தலில் சொன்னோம். எந்த நேரத்திலும் ஏற்றுக் கொள்ள மாட்டோம். ஆனால் என்ன பார்க்கிறோம். மத்திய பாராளு மன்றமோ, இண்டர் ஸ்டேட் கவுன்சில் வந்தாலும், மெஜாரிட்டி ஹிந்திக்கு ஆதரவு இருக்கும். அப்படி என்றால் ஹிந்தியை ஏற்றுக் கொள்ளாத தமிழர்களுக்கு என்ன வழி?

திருமதி த. ந. அனந்தநாயகி : இங்கே காங்கிரஸ் ஆட்சியில் இருந்த போது, அகில இந்தியாவில் எல்லா மாநிலங்களிலும் ஹிந்தி தான் கட்டாயப் பாடம் என்று சொன்னார்கள். நம்முடைய காங்கிரஸ் அரசாங்கம் நம்முடைய அமைச்சர்கள் அங்கே சென்று கட்டாயப் பாடத்தை ஏற்றுக் கொள்ள முடியாது, விருப்பப் பாடமாக ஏற்கிறோம் என்று சொன்னார்கள். நாங்கள் விருப்பப் பாடமாக வைத்தோம் என்பதை சொல்லிக் கொள்கிறேன்.

மாண்புமிகு பேரவைத் துணைத் தலைவர் : அவர் கேட்டதற்குச் சொல்லுங்கள். வேறு எங்கோ போகிறீர்களே.

திருமதி த. ந. அனந்தநாயகி : ஹிந்தியை கட்டாயப் பாடமாக திணிக்க வேண்டும் என்று அகில இந்தியாவில் எல்லா மாநிலங்களிலும் முடிவு எடுத்தபோது, இங்கே திணிக்கக் கூடாது, வேண்டுமென்றால் விருப்பப் பாடமாக வைத்துக் கொள்வோமே தவிர, கட்டாயப் பாடமாக வைத்துக் கொள்ள மாட்டோம் என்று அன்றைக்கே நாங்கள் சுயாட்சி கேட்டிருக்கிறோம் என்பதைக் கவனிக்க வேண்டும்.

திரு. பெ. சீனிவாசன் : நான் பச்சையப்பன் கல்லூரியில் படித்த போது 1962-ல் அன்றைக்கு மதிப்பிற்குரிய காமராஜ் அவர்கள் முதலமைச்சராக இருந்தார். அவரை நாங்கள் சந்தித்தபோது ஹிந்தியை ஏற்றுக் கொண்டு தான் தீர வேண்டும். கட்டாயம் வரும் என்று சொன்னார்கள். 1965-ல் முதலமைச்சராக இருந்த பக்தவத்சலம் அவர்கள் எங்களைச் சந்திக்க மாட்டேன் என்று மறுத்து விட்டார். யாரோ ஒரு அமைச்சர், திரு. வெங்கட்டராமன் என்று நினைக்கின்றேன், அவர்கூடச் சொன்னார்

The language problem is very confusing but it is inevitable that you must accept Hindi. There is no other go......

நாங்கள் நெருக்கடியான நிலைமையில் இருக்கிறோம். ஒழுங்காக படித்துத் தீருங்கள் என்று சொன்னார். காங்கிரஸ் கட்சி தொடர்ந்து சொல்லி யிருக்கிறது.

திருமதி த. ந. அனந்தநாயகி : சட்டத்தைத் திருத்தி, ஹிந்தியை ஏற்றுக் கொள்கிற வரையில் ஆங்கிலம் இந்தியாவின் ஆட்சி மொழியாக இருக்கும் என்று........

திரு. கோவை செழியன் : நம்முடைய முன்னாள் முதலமைச்சர் அவர்கள் சொன்ன ஒரு பகுதியை எடுத்துச் சொன்னார்கள். மகிழ்ச்சி. அதே நேரத்தில் ஒரு வாரத்திற்கு முன்னால் மத்திய அரசாங்கத்திலிருந்து வருகின்ற உத்திரவுகள் அனைத்தும் ஹிந்தியில் வருகின்றன. அரசாங்க

அதிகாரிகள் ஹிந்தியைப் படித்துத் தீர வேண்டுமென்ற உத்திரவு வந்திருக்கிறது. அதற்கு அம்மையாருடைய கருத்து என்னவென்று அறிய விரும்புகிறேன்.

திருமதி த. ந. அனந்தநாயகி: கட்டாயப்படுத்தக் கூடாது என்பதற்காகத் தான் இனிமேல் ஹிந்தி பிரதியோடு ஆங்கில பிரதியும் அனுப்ப வேண்டும் என்று சொல்லியிருக்கிறோம். அதை எப்படி அமுல்படுத்தி, நடைமுறையில் கொண்டு வருவது என்பதற்கு நமக்கு தைரியம் கிடையாது. வேண்டுமானால் திருப்பி அனுப்புங்கள் "Send me the English Copy" என்று சொல்லுங்கள். ஒன்றும் செய்ய முடியாது.

திரு. பெ. சீனிவாசன்: தைரியம் என்ற வார்த்தையைச் சொல்லி இருக்கிறார்கள். இந்தியாவில் இன்றைக்கு இந்த அரசியல் சட்டத்தில் மாநிலங்களுக்கு குறுகிய அதிகாரங்களை வைத்து நிர்வாகம் நடத்த வேண்டுமானால் ஹிந்தியை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். அம்மையார் இது பற்றிச் சொன்னால் வெளியே காங்கிரஸ் கட்சி என்ன சொல்லிற்று என்று பேசுவதற்குப் பிரயோஜனமாக இருக்கும்.

திரு. எ. ஆர். மாரிமுத்து: நான் குறுக்கிடுவதற்கு மன்னிக்க வேண்டும். ஹிந்தியை அந்தெந்த மாநிலங்கள் விரும்புகின்றபோது ஏற்றுக் கொள்ளலாம். நீங்கள் 100 வருஷம், 1,000 வருஷம் விரும்பா விட்டாலும், ஆங்கிலத்தை வைத்துக் கொள்ளலாம் என்று மத்திய அரசு சொல்லியிருக்கிறது.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: அதைப் படித்தால் மறை முகமாக ஹிந்தி கட்டாயமாக வருகிற சூழ்நிலை இருக்கிறது அல்லவா ?

திரு. பெ. சீனிவாசன்: ஆல் இந்தியா ரேடியோ விவித் பாரதியில் 100-க்கு 90 ஹிந்தியில் ஒலி பரப்புவது, இது ஹிந்தி ஆதிக்கமல்லவா? ஹிந்தியைத் திணிப்பது அல்லவா ?

திரு. எ. ஆர். மாரிமுத்து: ஹிந்தி படம் நடக்கிறது. விரும்பியார் பார்க்க முடியுமோ அவர்கள் பார்க்கட்டும். எல்லோரும் பார்க்க வேண்டும் என்று சொல்ல முடியாது.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: சென்னையில் நடக்கும் சினிமாப் படங்களைப் பற்றி சொன்னார்கள். டெல்லிக்குப் போனால் ஒரு ஆங்கிலப் படத்தைப் பார்க்க வேண்டுமானால் எவ்வளவு முயற்சி செய்தாலும் பார்க்க முடியவில்லை. அந்தச் சூழ்நிலை சென்னைக்கு வருமானால், பிராந்திய மொழிப் படம் செல்வாக்கற்று ஹிந்திப் பட ஆதிக்கம் மறைமுகமாக வரும்.

திரு. கோவை செழியன் : ஹிந்தியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள் யூனியன் பப்ளிக் சர்வீஸ் கமிஷன், ஐ. ஏ. எஸ். பரிட்சைகளை ஹிந்தியில் எழுதலாம். அவர்களுடைய தாய் மொழி ஹிந்தியாக இருப்பதால் நல்ல முறையில் எழுதலாம். மற்றவர்கள் ஆங்கிலத்தில் எழுத வேண்டும். ஹிந்தியில் எழுதுபவர்களுக்கு அதிக மார்க்குகள் கிடைக்கின்றன பதவிகளும் கிடைக்கின்றன. இந்திய யூனியன் பிரஜைகளில் மற்ற மொழி பேசுகின்றவர்கள் இரண்டாம் தர மக்களாக நடத்தப்படுகிறார்கள் என்பதை ஒத்துக் கொள்கிறீர்களா, மறுக்கிறீர்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

திரு. பெ. சீனிவாசன் : 1965-ல் ஏறத்தாழ இரண்டு ஆண்டுகளுக்கு ஹிந்திப் படங்களை, எங்களை வந்து கெஞ்சிக் கூத்தாடியும் கூட அதை நடக்க வொட்டாமல் இந்த மாணவர்கள் செய்தார்கள். திரும்பவும் அந்த நிலைமை வந்தாலும் வரும் என்று சுட்டிக் காட்டுகிற முறையில் ஆல் இந்தியா ரேடியோவில் ஹிந்தி ஆதிக்கம் இருக்கிறது என்று சொல்லுகிறேன்.

திரு. வீ. இராசகோபால் : மாண்புமிகு துணைத் தலைவர் அவர்களே, மாநில சுயாட்சிக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில கருத்துக்களைக் கூற விரும்புகிறேன்.

மாநில சுயாட்சி என்ற கோரிக்கை இன்றைய தினம் வலுவடைந்து வருகிறது. இதற்கு என்ன காரணம் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். மத்தியிலும், மாநிலங்களிலும் ஒரே கட்சி கடந்த 20 ஆண்டுகளாக ஆண்டு கொண்டு வந்தது. 1967-க்குப் பிறகுதான் தமிழகத்தில் திராவிட முன்னேற்றக் கழகமும், மத்தியிலும் மற்ற இடங்களிலும் ஒரு கட்சி ஆட்சி நடைபெற்று வருகிறது. இதுவரையிலும் மாநில சுயாட்சி கிளம்பாததற்குக் காரணம்—இது வரையிலும் மத்தியிலும் சரி, மற்ற எல்லா மாநிலங்களிலும் சரி ஒரே கட்சிதான் ஆண்டு கொண்டு வந்தது என்பதாகும். இப்போது மத்தியில் இருக்கும் கட்சிக்கு மாறுபட்ட கட்சி தமிழகத்தில் இருப்பதனால்தான் மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் இல்லை என்பதை உணர்கிறோம்.

காரணம், அடித்தளத்தில் இருக்கிற மக்களுக்கு நாம் நிறைய நல்ல காரியங்களைச் செய்ய விரும்புகிறோம். இதற்கு மத்தியில் குவிந்து கிடக்கிற அதிகாரங்கள் தடையாக இருக்கக் கூடாது என்றே மாநில சுயாட்சி கேட்கிறோம். இப்படிக் கேட்பது தமிழகத்திற்கு மட்டும் தானா என்றால் இல்லை. இந்தியாவில் உள்ள அனைத்து மாநிலங்களுக்கும் வேண்டும் என்று வாதாடுகிறோம்.

(திரு. துரைமுருகன் தலைமை.)

இன்றைக்கு விலைவாசிப் பிரச்சினை, உணவுப் பிரச்சினை கட்டுக்கடங்காமல் போகிறது. மாநில அரசுதான் நேரிடையாக மக்களோடு தொடர்பு கொண்டதாக இருக்கிறது. மாநில அரசுகளுக்கு அதிக அதிகாரங்கள் இருந்தால் தான் இந்தப் பிரச்சினைகளை எல்லாம் நல்ல முறையில் சமாளிக்க முடியும் என்று நாங்கள் சொல்கிறோம். எதிர்க் கட்சிக்காரர்கள் ஏற்கெனவே நாங்கள் கைவிட்டுவிட்ட திராவிட நாடு கோரிக்கையை நினைத்துக் கொண்டு தான் பேசுகிறோம் என்று சந்தேகப்படுகிறார்கள்.

அண்ணா திராவிட முன்னேற்றக் கழக உப தலைவர் எட்மண்ட் கூட அண்ணா அவர்கள் அடானமி என்று சொன்னார்கள், மாநில சுயாட்சி என்று சொல்லவில்லை என்றார்கள். அடானமி என்கிற ஆங்கிலச் சொல்லுக்குத் தமிழ் மாநில சுயாட்சிதான். எதிர்க்கட்சிக்காரர்கள் உண்மையை மறைத்து பிரிவினையைக் கோருகிறீர்கள் என்று வாதாடி, மாநில சுயாட்சியை ஒழித்துவிட வேண்டும், மறைத்துவிட வேண்டும் என்றால் அது முடியாத காரியம்—ரியாலிடிக்கு ஒத்து வராத காரியம். இதை அழிக்கவும் முடியாது, மறைக்கவும் முடியாது. அரசியல் சட்டத்தை இயற்றிய டாக்டர் அம்பேத்கார் அவர்களே, 'Pakistan or Partition of India' என்ற புத்தகத்தில் 9-வது பக்கத்தில் மாநில சுயாட்சி பற்றி எழுதியிருக்கிறார்கள்.

"The total revenue of British India comes to Rs. 194 crores per annum. Of this sum, the amount raised by the Provincial Governments from Provincial sources comes annually to Rs. 73 crores and that raised by the Central Government from Central sources of revenue comes to Rs. 121 crores. This will show what the Central Government costs the people of India.

When one considers that the Central Government is concerned only with maintaining peace and does not discharge any functions which have relation to the progress of the people, it should cause no surprise if people begin to ask whether it is necessary that they should pay annually such an enormous price to purchase peace. In this connection, it must be borne in mind that the people in the Provinces are literally starving and there is no source left in the Provinces to increase their revenue".

மேலும் அவர் சொல்கிறபோது,

"This financial factor has so far passed without notice. But time may come when, even to the Hindus who are the strongest supporters of a Central Government in India, the financial considerations may make a greater appeal than what purely patriotic considerations do now. So it is possible that some day the Musilims, for communal considerations, and the Hindus, for financial considerations may join hands to abolish the Central Government".

என்று கூறியிருக்கிறார்கள். இன்றையத்தினம் மாநில சுயாட்சி கேட்கிறோம். மனச் சாட்சியுள்ள அரசியல்வாதிகள் அவ்வளவு பேர்களும் மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் வேண்டும் என்றுதான் ஒத்துக் கொள்கிறார்கள். அதே சமயத்தில் படிப்பு இல்லாத, போதுமான கல்வி அறிவு இல்லாத, நம் நாட்டில் இருக்கிற பெரும்பான்மையான மக்களால் அதை உணர முடியவில்லை. இன்னொன்றும் சொல்கிறார்கள் டாக்டர் அம்பேத்கார் அவர்கள்.

If this were to happen, it is better it happens before the foundation of a new Constitution is laid down.

இந்தப் புத்தகம் 1945ஆம் ஆண்டு எழுதப்பட்டது. அதற்குப் பிறகு தான் அம்பேத்கார் அரசியல் சட்டத்தை நிறைவேற்றியிருக்கிறார்கள். அதைப் பாராளுமன்றத்தில் சமர்ப்பித்தபோது—அதன் மீது வாதம் நடைபெற்ற நேரத்தில்—அரசியல் நிர்ணய சபையில் ஒரு அங்கத்தினராக இருந்த சதுல்லா கூறியிருக்கிறார்கள்.

The drafting Committee was not a free agent and was handicapped by various circumstances and that many provisions which went against a sense of democracy had to be incorporated by the Committee because of superior forces that were operating.

அப்போதே டிராப்டிங் கமிட்டியில் இருந்த டாக்டர் அம்பேத்கார் உள்பட அனைவரும் அதைச் சுதந்திரமாக இயற்றவில்லை—கம்பல்ஷன்கீழ்தான் இயற்றப்பட்டது என்று சொன்னபோது டாக்டர் அம்பேத்கார் அவர்கள் அதற்குப் பதில் கூறுகிறபோது

The principles embodied in the Constitution were not the views of the present generation or if this was an overstatement, the views of the members of the House.

என்று சொல்லியிருக்கிறார்கள். இந்த அரசியல் சட்டத்தில் இருக்கிற ஷரத்துக்கள் இப்போதிருக்கிற ஜெனரேஷனது—மக்களது எண்ணங்களைப் பிரதிபலிப்பதாக இல்லை. இதைக் கொஞ்சம் நான் மிகைப்படுத்திக் கூறுவது என்றால் If this was an overstatements 'the view' of the members of the House என்று சொல்லியிருக்கிறார்கள்.

அதுமட்டுமல்ல, இன்னொரு எச்சரிக்கையையும் அம்பேத்கார் விடுத்திருக்கிறார்.

On January, 26, 1950 we will have equality in politics and inequality in social and economic life. We must remove this contradiction at the earliest moment or else those who suffer from inequality will blow up the structure of political democracy which this Assembly has so laboriously built up.

என்று சொல்லியிருக்கிறார்கள். கடைசியாக எச்சரிக்கை விடுத்த நோக்கமே—அரசியல் சட்டம் சரியாகத் திருத்தப்படவில்லை என்றால் ஜனநாயக சக்திகள் அதை உடைத்து எறிந்துவிடும் என்கிறார்கள். அந்த எச்சரிக்கையின் அடிப்படையில்தான் இன்றையதினம் மாநில சுயாட்சி கேட்கிறோம்,

மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் தரப்படவில்லை என்றால் உள்ள படியே நாட்டு மக்களின் அடித்தளத்தில் இருந்து புரட்சி ஏற்படும், ஜனநாயகம் அழியும் என்கிற கருத்தையும் இன்னொரு இடத்தில் டாக்டர் அம்பேத்கார் கூறியிருக்கிறார்கள்.

அதைத்தான் எனக்கு முன்பு பேசிய பழனிவேல் ராஜன் அவர்கள் குறிப்பிட்டார்கள். தென்னிந்தியாவும், வட இந்தியாவும் கலாசாரத்தில் வேறுபட்டவை. தென்னிந்தியாவிற்கு ஒரு பெடரேஷன் —வட இந்தியா விற்கு ஒரு பெடரேஷன் இரண்டும் சேர்ந்த ஒரு பெடரேஷன் அமைப்பு இருந்தாக வேண்டும் என்றார்கள். இப்போதுள்ள அரசியல் சட்டம் 24 ஆண்டுகளுக்கு முன்னர் இயற்றப்பட்டது. மிகவும் பிற்போக்கான சட்டம்.

எனக்கு முன்னால் பேசிய திரு. ஆலடி அருணா அவர்கள் இதை வங்கக் கடலில் வீசியெறிய வேண்டும் என்றார்கள். இதை வங்கக் கடலில் தூக்கி எறியத்தான் வேண்டும். No Conservative type of Constitution is needed மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் தரும் வகையில் ஒரு புதிய அரசியல் சட்டத்தையே உருவாக்க வேண்டுமென்று இந்த நேரத்தில் கேட்டுக்கொள்கிறேன்.

அதைப் போலவே இன்னொன்றையும் கேட்டுக்கொள்கிறேன். நெருக்கடி கால அதிகாரங்கள் என்ற முறையிலே 356, 357 ஆர்டிகிள்களிலே மாநில அரசிலே கான்ஸ்டிட்யூஷன் பிரேக்டவுன் ஆனால், அரசியல் சட்டம் செயல்படாமல் போகுமானால் அங்கே இந்தியாவினுடைய பிரஸி

டெண்ட் மாநில அரசைக் கலைக்க முடியும் என்று இருக்கிறது. மத்தியிலேயும் மாநிலத்திலேயும் ஒரே கட்சி ஆட்சி என்ற நிலைமை இருக்குமானால் தொல்லை ஏற்படாது.

ஆனால் மத்தியிலே ஒரு கட்சியும், மாநிலத்திலே வேறு கட்சியும் ஆட்சியிலிருந்தால் மத்தியிலே இருக்கிறவர்களுக்கு மாநிலத்திலே இருக்கக் கூடியவர்களின் ஆட்சி பிடிக்கவில்லையென்றால் அவர்களைப் போகச் சொல்லக்கூடிய அதிகாரமாக இது இருந்துவிடும், ஆகவே இது ஒரு பயங்கரமான ஆர்டிகிள்.

ராஜமன்னார் குழுவும் மாநிலத்திலே உள்ள ஒரு ஆட்சியை மத்திய ஆட்சி போகச்சொல்லக் கூடியமுறையில் அது ஒரு எஜமானன் போலவும் மாநில அரசு வேலைக்காரன் போலவும் இருக்கக்கூடிய சூழ்நிலை இருக்கிறது என குடுப்பிட்டிருக்கிறது. ஆகவே 356, 357 ஆர்டிகிள்களை நீக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

எதிர்க்கட்சிக்காரர்கள், மாநில சுயாட்சி தேவையில்லை, அதிக அதிகாரங்கள் இப்பொழுதே இருக்கின்றன, அவற்றைப் பயன்படுத்திக்கொள்ளலாம் என்று சொன்னார்கள். மாநில சுயாட்சியை பிரிவினை வாதம் என்று சொல்கிறார்கள்.

ரஷியாவிலே ஒவ்வொரு மாநிலமும் சுயாட்சி பெற்றிருக்கிறது, அது மட்டுமல்ல, பிரிந்து போகக்கூடிய உரிமையையும் பெற்றிருக்கிறது. மாநிலங்களுக்கு அதிகமான அதிகாரங்களைத் தந்தால் இந்தியாவின் ஒற்றுமை குலைந்துவிடும், பலம் குறைந்துவிடும் என்று சொல்லமுடியாது.

இதுவரையில் 32 முறைகள் அரசியல் சட்டம் திருத்தப்பட்டிருக்கிறது. காலப்போக்கிலே மக்கள் தேவையானவற்றைச் செய்துகொள்வதற்கு வசதியாக அது திருத்தப்பட வேண்டும்.

இந்தியாவினுடைய அரசியல் சட்டத்தை ஒரு ரிஜிட் கான்ஸ்டிட்யூஷன் என்று சொல்வார்கள். அப்படிப்பட்ட ரிஜிட் கான்ஸ்டிட்யூஷனையே அடிக்கடி திருத்தியிருக்கிறார்கள். டெல்லிப் பாராளுமன்றத்திலே சில கட்சிகளைத் தவிர அத்தனை கட்சிகளும் சோஷலிசம்தான் பேசிக்கொண்டிருக்கின்றன. அந்தத் திட்டங்கள் நிறைவேற வேண்டுமானால் இதைத் திருத்தியாக வேண்டும்.

அப்படித் திருத்துவதற்குப் பதிலாக ஒரேயடியாக இந்திய மக்களின் எண்ணங்களை நிறைவேற்றுவதற்கு அரசியல் சட்டம் புதிதாக ஏற்படுத்த வேண்டுமென்று சொல்லி, இந்த மாநில சுயாட்சித் தீர்மானத்தை வரவேற்று முடித்துக் கொள்கிறேன்.

*1974 ஏப்ரல் 19]*

திரு. இ. எஸ். தியாகராசன் : பேரவைத் தலைவர் அவர்களே, மாண்பு மிகு டாக்டர் கலைஞர் அவர்கள் இந்த அவையின்முன் கொண்டுவந்திருக் கின்ற மாநில சுயாட்சித் தீர்மானத்தை தமிழரசு கழகத்தின் சார்பாக ஆதரித்து சிலவற்றினைச் சொல்லிவிட விழைகிறேன்.

நான் சார்ந்துள்ள தமிழரசுக் கழகம் இந்தக் கொள்கையைக் கடந்த 28 ஆண்டுக்காலமாகச் சொல்லிவருகிறது என்பதை நான் நினைவு படுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். இதனை முதல்வர் அவர்கள் இந்த அவையின் முன் வைத்திருக்கின்ற அறிக்கையின் வாயிலாகச் சொல்லி யிருக்கிறார்கள். அதற்காக நான் டாக்டர் கலைஞர் அவர்களுக்கு என்னுடைய நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

திராவிட முன்னேற்றக் கழக அரசு, மாநில சுயாட்சிபற்றி ஆராய்ந்து பரிந்துரைகள் வழங்குவதற்காக, ராஜமன்னார் அவர்களுடைய தலைமை யிலே ஒரு குழுவை அமைத்தது உண்மையிலேயே ஒரு துணிகரமான செயலாகும். இதுபோன்ற துணிச்சலான காரியத்தை தமிழகத்தை ஆண்டு கொண்டிருக்கிற டாக்டர் கலைஞர் அவர்களால்தான் செய்ய முடியுமே தவிர, வேறு ஒருவராலும் முடியாது என்பதைத் தெரிவித்துக் கொள்கி றேன். இந்தக் குழுவின் பரிந்துரையிலே அரசியல் சட்டத்திலே பல திருத்தங் கள் செய்யப்படவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

மாநில சுயாட்சிப்பிரச்னையை மொழிவழி தேசிய இனங்களின்—குறிப்பாக தமிழினத்தின் பிரச்னை என்ற கோணத்திலே அணுகியிருக்கிறார்கள். மாநில சுயாட்சி நாட்டிற்கு முக்கியமானது. தமிழரசுக் கழகம், 'மத்தி யிலே சமஷ்டி, மாநிலத்திலே சுயாட்சி' என்கிறது. மத்தியிலே பாதுகாப்பு, போக்குவரத்து, அயல் நாட்டுறவு, சுங்கம் ஆகிய நான்கு அதிகாரங்களை மட்டும் வைத்துக்கொண்டு மற்ற எல்லா அதிகாரங்களையும் அந்த அந்த மாநிலங்களுக்குக் கொண்டுவந்து விட வேண்டும் என்பதுதான் அத னுடைய கருத்தாகும். அந்தத் திட்டத்தின் அடிப்படையை ராஜமன்னார் குழுவிலே தெள்ளத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள். அதை எடுத்து நம்முடைய அரசு அரசியல் சட்டத்தைத் திருத்தவேண்டுமென்று தீர்மானம் கொடுத்திருக்கிறார்கள். ராஜமன்னார் குழு அறிக்கையிலே தமிழக அரசு சில மாறுதல்களைச் செய்திருக்கிறார்கள்.

நம்முடைய சுயாட்சிக் கோரிக்கை மிக நியாயமானது, தமிழக அரசின் நிலையை மத்திய அரசு ஏற்குமானால் நான் மகிழ்ச்சி யடைவேன். ஆனால், அவர்கள் இதை பிரிவினை வாதம் என்று சொல்லி விட்டார்கள். அதனால், ஏற்றுக்கொள்வார்களா என்று ஐயமடைகிறேன். மாநிலத்திலே சுயாட்சி இருந்தால்தான் மத்தியிலே சமஷ்டி அமையும். அப்போதுதான் இந்தியாவிலே ஒருமைப்பாடு ஏற்படும். ஒருமைப்பாடு நிலைக்கவேண்டுமானால், 'மாநிலத்திலே சுயாட்சி, மத்தியிலே சமஷ்டி' இருக்க வேண்டுமென்று அறிக்கை மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறது. இந்திய தேசிய ஒருமைப்பாட்டிலே மிகவும் ஊக்கமாகவும் உறுதி

யாகவும் நம்முடைய முதலமைச்சர் அவர்கள் இருக்கிறார்கள் என்பதை அறிக்கையிலே அவர்கள் தெளிவாகச் சொல்லி யிருக்கிறார்கள். இன்று மட்டுமல்ல, பலமுறைகள் அவர்கள் அதை அறிவித்து இருக்கிறார்கள். அதனை நான் பாராட்டி வரவேற்கிறேன்.

எனது தலைவர் சிலம்புச் செல்வர் திரு. ம.பொ.சி. அவர்கள் மாநில சுயாட்சியிலே டாக்டர் கலைஞர் அவர்கள் வெற்றி பெற்றே தருவார்கள் என்று நம்பிக்கை கொண்டிருக்கிறார்கள். அந்த நம்பிக் கையை அவர்கள் பூர்த்தி செய்துதருவார்கள் என்று நான் நம்பு கிறேன்.

ஓர் போராட்டம் இன்றி மாநில சுயாட்சி கிடைக்குமானால், எங்களுடைய தலைவர் மகிழ்ச்சியடைவார்கள் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகி றேன். ஆனால் கொள்கையளவிலேகூட சுயாட்சி கருத்தை மத்திய அரசு எடுத்துக் கொண்டதாகத் தெரியவில்லை. எப்போது பார்த்தாலும் பிரிவினை வாதம் என்று சொல்லி மாநிலங்களை எப்போதும்போல அடிமைகளாக வைத்திருக்கவேண்டுமென்று கருதி அவர்கள் மறுப்பதாக நான் கருது கிறேன். தமிழக அரசு சுயாட்சிக்காக களம் புகத் தயாராக இருக்கிறது என்ற நம்பிக்கை இருக்கிறது. அந்த நம்பிக்கைக்குப் பாத்திரமான தமிழரசுக் கழகமும் அதற்காகத் தயாராக இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அதற்காகத் ஒரு போர் துவக்கப்படுமானால், மத்திய அரசுக்கு எதிராக நடத்தப்படுமானால் அப்போது தமிழரசுக் கழகம் டாக்டர் கலைஞர் அவர் களுடன் ஒத்துழைத்து அந்தப் போராட்டத்திலே முன்னணியிலே நிற்கும் என்பதைக் கூறிக் கொள்ள ஆசைப்படுகிறேன். ராஜமன்னார் குழு அறிக்கையிலே ஒரு சில அதிகாரங்களைத்தவிர மற்ற அதிகாரங்கள் எல்லாம் மாநில அரசுகளுக்கு இருக்கவேண்டுமென்று தெளிவாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள், அதைப் பாராட்டுகிறேன். மிச்ச அதிகாரங்களை மாநில அரசுகளுக்கு வழங்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சிவில் வழக்குகளைப்பற்றி அந்த அறிக்கையிலே குறிப்பிட்டிருக்கிறார்கள். அப்பீல்களுக்கு மாநில உயர்நீதி மன்றம் தீர்ப்பளிக்கக்கூடிய நிலைமை ஏற்படுத்தப்படவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். நான் அதை வர வேற்கிறேன். அதோடு மாநில முதல்வர்கள் அடங்கிய ஒரு நிரந்தரக் குழு ஒன்றினை பிரதமர் அவர்கள் தலைமையிலே போட வேண்டுமென்றும் மாநில மத்திய அரசுத் தகராறுகள் வந்தால் அந்தக் குழு முடிவு செய்யவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

பொதுவாக இது வரவேற்கத்தக்கதாக இருந்தாலும்கூட மாநிலங் களிலே உள்ள பல முதல்வர்கள் பிரதமருடன் சேர்ந்துவிட்டால் அந்தக் குழு சரியான முறையிலே செயல்படுமா என்ற சந்தேகம் இருக்கிறது.

ஆகவே அதை அமைக்கும்போது நல்ல முறையிலே அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு மாநில சுயாட்சிக் கோரிக்கையை மனப்பூர்வமாக ஆதரிக்கிறேன் என்று கூறி முடிக்கிறேன். வணக்கம்.

[பிற்பகல் 1-00]

*THIRU K. S. KOTHANDARAMIAH : Hon. Mr. Chairman, I thank you very much for giving me an opportunity to express my views on the resolution on State Autonomy, moved by the Hon. Chief Minister. That resolution expresses the opinion of the ruling party and so every member in this House whether he belongs to the ruling party or not has got the right to give his views and I think it is the bounden duty of the Government to hear them. It is up to the people at large and also other State Governments and also the Centre to decide finally what should be done.

Now the resolution refers to two things—" In order to secure the integrity of India with people of different languages, civilisation and culture, to promote economic development and to enable the State Government having close contact with the people to function without restraints and in order to establish a truly federal set up with full State Autonomy, the Central Government do accept the views of the Tamil Nadu Government on State Autonomy and the recommendations of the Rajamannar Committee and proceed to effect immediate changes in the Constitution of India. "

Now, I feel, the above two things are contradicting each other. For, if the State is fully autonomous, then, I think that State which has got complete self-government, full power to rule itself, will not help the Central Government to maintain this integrity. Moreover we have been paying much attention to the expression ' federal '.

I think there is no ideal federal Government in the world. Federal Governments differ from country to country. In America, it is one, in Switzerland, it is another and in the U.S.S.R. it is quite different. Each Constitution is evolved according to the needs and requirements of each country and we cannot get a uniform federal system in the world.

[Thiru K. S. Kothandaramiah]



Moreover, the American Constitution was evolved some two centuries ago. Our Constitution was written only about 20 or 22 years ago. This is a very modern Constitution. We cannot say that the American Constitution is more useful than Indian Constitution . In this connection I have to quote a passage, with your permission, Mr. Chairman, from a book called ' Democratic Constitution of India ' by B.C. Rout. On page 176 of the book, the author says about the federation.

He says : " To brand a Constitution as wholly federal or wholly unitary is to limit the scope of its study. The Constitution of India is federal in form and unitary in spirit. The makers of the Constituent Assembly intended to strike a balance between federalism and unitarianism. The Constitution of India is quasi-federal in character. It is something that suits our requirements. Recent tendency of federalism is in favour of centralisantion. Such tendency is also seen in the federation of America ".

This is the recent tendency. It is also present in America. " As there is world-wide tendency towards a centralised system of Government, the makers of the Constitution could not but take note of this tendency instead of leaving it to the Supreme Court, strengthening Centre by a process of judicial interpretation. " Time after time, in its history we have found the solidarity being broken and India falling at the feet of foreign conquerors. Therefore at a time when all foreign rule has been eliminated the one crying need of the hour is the maintenance of solidarity and unity in this country ".

Now, I will quote another passage from a book—" The proceedings of the Indian Parliamentary Association Symposium " held at New Delhi on the 2nd and 3rd May 1970 on the Role and Position of Governors : At page 102, Acharya J. B. Kripalani during his speech says : ' In my humble opinion it is impossible for any Constitution, however elaborate it may be, to reconcile all the conflicting interests. No constitution in the world can solve all the problems, if people are not politically educated; if people

are not wisely inclined, if people are not receptive to each other's ideas. For instance, England has no written Constitution and its Parliament is all powerful.

It is said that the Parliament of England can do everything, but turn a woman into a man. There is no country where individual freedom prospers so well as in England. This is because they, the British, have preserved old traditions.

The British Constitution gives to the King immense powers. He can dismiss the whole army; he can make the whole nation join the armed forces; he can make all the people of England as Lords. But will he do it? No Kind dare ro these things because conventions are so powerful that he would be a mad person who would venture to do these things, though they are theoretically in the King's power.

Take the Constitution of America. There cannot be a more absurd Constitution than that of America. The President of America is chosen for four years, but his parliament can deny him funds to discharge his duties. They may not sanction anything for him; but will any Parliament do that there? No. So, when we compare the federalism of America with our Constitution which is federal and also unitary, I think our Constitution is far better more useful and also it has been prepared to suit the conditions of our country."

Now, coming to the resolution and the report of Rajamannar Committee, they have not clearly stated the position of local boards when autonomy is given to the States. Already there is great complaint that States are not giving sufficient funds and other facilities to local bodies. Therefore, when you say that the State is not satisfied with the power that is given by the Centre, and when the State wants full autonomy, naturally it must also give sufficient powers, freedom and scope to the local bodies, i.e., the blocks and municipalities. But nothing has been said about that

in this resolution. Therefore, once we say we are not satisfied with the existing powers and the State must have autonomy and if there is no corresponding sharing of powers with the local bodies there will be a lot of trouble and the State cannot function properly.

Then, coming to the linguistic minorities, nothing is said either in the Rajamannar Committee's report or in other reports. What is a State in our country? It is only a miniature country, a replica of the country. What we find in the country at large, we find in the States also. It is not said here what the State is going to do after it gets autonomy about linguistic minorities.

As soon as the States were Carved out a Linguistic Minorities Commission was appointed. It made a number of recommendations. The Parliament had accepted them. But during all these years, i.e., during the last 17 years, no State has implemented the recommendations. Even the Tamil Nadu State has not done so properly.

Every State has been ignoring it. Linguistic minorities are not small in number.

Take Karnataka State, there are 8 lakhs of Tamilians there. They have not adequate school, library or other things to promote their language and culture.

In Tamil Nadu, there are 50 or 60 lakhs of Telugus. The Government has not done anything to safeguard their language or culture. All this is happening when the Centre is strong. Suppose the States get complete autonomy, I am confident the States will ignore the linguistic minorities.

One hon. Member here said, ' we should not allow linguistic minorities here to study their languages; but we should compel them to study Tamil. That was the point that was made by an hon. Member of this House. Supposing, the State gets complete autonomy, what will happen to the minorities? The State will suppress the language, culture and other things of the minorities '.

Moreover, the word 'autonomous' or 'autonomy' clearly denotes that the State must have complete self-government. It is stated that certain subjects like foreign affairs, currency and communications would be enough for the Centre. Even to exercise these powers, the Centre must have control over the States. Recently there was trouble in the Andhra Pradesh and supposing there was no Central Government. What would have happened? One neighbouring Government would have supported one section of the people and another neighbouring Government another section of the people. Ultimately there will be civil war and there will be murders and there will be bloodshed. Therefore, if there is no strong Central Government, I think the States will begin to fight with each other.

Now, let us take our State. Due to geographical reasons, our State is dependent on other States. For instance, take water. We have no rivers at all. We are at the tail-end of the rivers and all the rivers come from the Karnataka State or some other States. Because there is a Centre, they are trying to reconcile the views of the States and the Centre and we are getting water. If the State becomes independent, then the question of 'sons of the soil' and 'sons of the language' will arise. We cannot get a single drop of water from the neighbouring States.

Now we are surplus in food and a lot of surplus rice is going to other States. Smuggling is going on and will increase, if there is no Central Government, how can you control it and other illegal activities? The Police is not sufficient to control them and you require military which will be in the hands of the Central Government. So, the demand of State autonomy is merely a thought and imagination and it is not a practical one.

Also, India was exposed to external danger from the North only previously. Now the danger is coming from the North East, that is from China. Now, the Himalayas is no barrier because atom bombs and ballistic missiles have been discovered.

[Thiru K. S. Kothandaramiah]



Also, during the last 2,000 years Tamil Nadu being in the corner of this Country, has been free from external aggression.

Now, two Super-Powers, America and Russia are sending their fleets in the Indian Ocean and there is a great danger to our State. Supposing there is no Central Government; how can you safeguard our shores? Supposing the war comes; how are you going to protect our people? Therefore, you should not think of having all the powers.

Even now, there is a crisis with regard to electricity. Due to the power cut, food crops have failed and pumpsets are not working. Cars and other vehicles have come almost to a standstill. So, we will have to carefully consider the pros and cons of the matter and see that the freedom of the country is maintained at all costs. We must have some restraint and there must be an understanding between the Centre and the State.

The country is an organic whole and Centre is like stomach and the States are limbs. Without the body the limbs cannot function and so also, without the limbs the body cannot function. So, both the Centre and the States should work together and there should be cordiality between them.

Suppose the D.M.K. comes to power at the Centre in the next election. Will they abolish the Central Governors? No, because they will have to get information from other States. If there is no Governor, the Central Government will have no control over the internal affairs. To maintain internal tranquility, a strong Centre must be there. If there is trouble anywhere in the country, only a strong Centre can act to meet it.

In this connection, I wish to quote what Thiru K. Hanumanthaiya, ex-Chairman of the Administrative Reforms Commission has stated :

"I am not sking for the amendment of the Constitution. It is a well-known fact that in U.K. which has got a democratic structure, the conventions and practices have grown, even though

[Thiru K. S. Kothandaramiah]

they were not incorporated in statutes. If these conventions and practices are left to the sweet will and pleasure of a particular Ministry in the Centre or the States or the Governor, the controversies do arise. These controversies should subside; they should not be allowed to grow. It is with this view that the Administrative Reforms Commission has proposed that the constitutional conventions and practices must be reduced to some form or rules or guidelines—call them by whatever name you like... ''

One State may demand one set of powers and another State may demand some other powers. So, let us not approach the word' federal ' in a literal sense. It means that Centre and State should co-ordinate each other's activities. So, I say that the demand for complete autonomy is not conducive for the good working of the country. State autonomy will lead to the cry of ' sons of the soil ' theory and that is not good for the welfare and growth of the country. With these words I conclude.

THIRU B. VENKATASWAMY : Sir, on behalf of Swatantra Party I want to state the views of our party regarding State ' demanding the right of self-government.

The right of self-government means Government should be run by the people without outside interference. It is said that more powers should be given to the State. At the same time it should be remembered that we should have a strong Centre. In this connection let me say what Rajaji has said in the ' Swarajya ' of April 1, 1972:

" The demand for what has been denominated as State autonomy is a demand for a share in the permit-licence loot which is now the exclusive monopoly of the ruling party at the Centre. If the permit-licence-raj administration is reformed, as the Swatantra Party has been demanding for years and is handed over to an expert autonomous board, which has no interest in any political party, this demand for a share in the loot will automatically disappear. One can understand the support of industrial magnates to this demand for State autonomy, as their interests could then be managed more cheaply and with greater speed."

[Thiru B. Venkataswamy]

We strongly feel that there is no need for constitutional amendments. When Rajaji formed the Swantantra party, what he said was that the individual should have more ' swtantram '. He wanted more powers for the individual.

Regarding constitutional amendment, Rajaji had said that Constitution was not defective but that we had only misled it because of the Centre's pursuing the permit-licence-raj. That has led to internal rivalries and personal ambitions and has affected the whole economy. So, let us remember what Rajaji had said.

One member said that Rajaji's words have become prophetic. But without amending the Constitution, he had done many good things like temple entry, bringing in of prohibition, zamindari abolition, agricultural debt relief, Cultivating Tenants Bill, etc.

Our Constitution is federal in character. The drafting of our Constitution was based on the Constitutions of U.K., U.S.A., Australia and Soviet Union.

But as far as our constitution is concerned, we have several languages and several social groups but having one single oriented system.

The framers of the Constitution felt that unity of nation must be preserved at all costs and so they wanted to have a strong Centre.

Coming to other points, I may say that the Planning Commission has nothing to do with constitution. It acts as super-government now. All Congress Chief Ministers had to act in accordance with the Planning Commission's dictates.

But only Rajaji and Prakasam had the courage to fight this Congress domination in the shape of Planning Commission. They champined the cause of the State. Due to arbitrary and dictatorial attitudes of the ' tuglakhs ' at Delhi, the Finance Commission, a statutory body to be set up under the Constitution, had to function under the guidelines of the Planning Commission.

[Thiru B. Venkataswamy]

I shall cite one instance of how the Planning Commission holds the upper hand.

Thodahalla project had been sanctioned by the Centre and the State recommended it. But the Planning Commission said 'no' and so the project could not be taken up. For all central acts, there are rules and the State has to implement the rules.

For instance take the rules of the Motor Vehicles Act, Industrial Disputes Act, etc. the Central Government has an independent officer for this, individually. But the State Government has got discretionary powers either to fall in line with Centre or maintain its individuality.

[பிற்பகல் 1·30.]

In this Rajamannar Committee Report, drastic changes to the Constitution have been recommended, and the Committee pleads for re-drafting of the Constitution.

<u>மாண்புமிகு பேரவைத் தலைவர்</u>: இன்னும் ½ மணி நேரம் பேரவை நேரத்தை நீட்டித்து, திரு. பி. வெங்கடசாமி அவர்களும், திரு. வகாப் அவர்களும் பேசும் வரையில் அவையை நீட்டித்துக்கொள்ளலாம் என்று நினைக்கிறேன்.

THIRU B. VENKATASWAMY: Coming to other points in this report, there is no reasoning for any of the recommendations. Therefore, the report is not supported by evidence.

The safety valve in a constitution is to protect the citizens and to maintain their fundamental rights as common guardian of law like the Supreme Court and we cannot think of degrading the very Supreme Court. That will be a black-day in our constitution. If it is said that there should not be a Supreme Court, but only the State High Court is the final authority, that will not be proper.

The State cases went to the Supreme Court in the case of the Motor Vehicles Act. Our Government itself went to the Supreme Court. If anything goes wrong, we must have an

[Thiru B. Venkataswamy]

authority like the Supreme Court for doing justice. In the case of the water dispute, we went to the Supreme Court. Therefore, it should be there. We agree that there should be more powers to the States.

This is a matter for mutual discussion by representatives of all the States with representatives of the Central Government at the official levels. We, members of the Swatantra Party will certainly agree for more powers to the State Governments, but at the same time preserving the solid strength of the National Government at the Centre.

We decry the labours of many of the State Chief Ministers to wait at Delhi for instructions from the Prime Minister and the Cabinet Ministers even on minor matters. This is like the various Chairmen of Panchayat Unions waiting at the Madras Secretariat to have Dharshan of our Hon. Ministers.

For instance, there was an occasion in Tiruchirapalli Municipality to change the name of a street in the Municipality and the permission of the State Government had to be sought for.

Even for erecting a cinema hall, at a remote town like Tuticorin the Municipal Commissioner and the Engineers concerned had no power to approve the specifications but the permission had to be obtained from the Town Planning Officer only at Madras.

This would show that we do not have the practical federal system assured in the Constitution but the powers are now distributed here and there. This would only require closer examination of the legislative lists and also the rules and orders farmed by the Central and State Governments.

I would appeal to this Assembly not to be swayed by political considerations but to think of the common man in the country, whether he is from Kashmir or Kanyakumari. We have to establish the supremacy of the citizens and not the supremacy of the Government whether it is the Centre or State. I would only recommend that we must recommend to the Central Government

[Thiru B. Venkataswamy]

to appoint an Expert Committee consisting of senior officials both of the Central and State Governments and experts in the other fields to examine the question of analysing the pitfalls in the working of the federal constitution given to us and to suggest ways and means to set right the mistake committed by the politicians for the past 25 years and more after the British quit the country.

Hon. Members referred to Rajaji and have said he was a prophet. He has given his opinion about North and South. Whenever a man is partial, every other man also will have to be partial. The Central also must feel that it should be liberal. Otherwise, there will be definitely trouble.

For instance, in Andhra, recently there was trouble, though Telengana also is part of Andhra.

In the matter of licensing policy and establishment of industries, we certainly agree with the Government. Why should we stand at the doors of the Centre? Even Mr. Palkiwala has said that about 93 industries have to be in the State sector. The Centre should not come in the way.

Even though Tamil Nadu has vast mineral resources, it did not have the power to exploit it of its own accord. We should restore to the States the legitimate powers envisaged in the Constitution. This is what he has said. But he does not recommend autonomy to the State nor does he advocate any constitutional amendment in this regard.

Even in the Constitution, we have the power to discuss. According to Article 258, which deals with the power of the Union to confer powers on States, we can discuss and under 258-A the States have power to entrust functions to the Centre and the Governor may with the consent of the Government of India entrust conditionally or unconditionally functions to the Government of India.

[Thiru B. Venkataswamy]

Therefore, we have got the power to discuss with the Centre. Rajaji has clearly stated that the provisions are misread, they are not defective, they are only misread by us so that we may have more powers.

I strongly plead on behalf of the Swatantra Party not to change the Constitution, but at the same time, we must have more powers to the State on the basis of my amendment to the resolution. I will read it again and I request the Hon. Chief Minister to consider it and substitute it for the Resolution moved by him. My amendment is :

" For the resolution moved by the Hon. Dr. M. Karunanidhi, Chief Minister, substitute the following :

" This Assembly recommends to the Government of India to appoint immediately a compact committee consisting of constitutional lawyers and experienced administrators to investigate and find out how an eminently Federal Constitution that was given to this country by the Constituent Assembly has been converted in practice into unitary form of Government by the dominant political party which has held the power both at the Centre and most of the States during the last 24 years and suggest steps for resorting the original federal form of Government as contemplated in the Constitution. Further, the Committee be requested to consider in depth all suggestions made by the State Government, political parties, associations and individuals for decentralisation of political and economic power from Central Government to State Governments and from the State Governments to local self-government bodies and suggest suitable methods of achieveing the object of decentralisation of economic and political power without damaging the ability of the Central Government to protect the territorial integrity, unity and solidarity of the country and Indian People ".

Thank you, Sir.

திரு. கே. எ. வகாப் : மாண்புமிகு பேரவைத் தலைவர் அவர்களே, ஒரு புதிய சரித்திரத்திற்கு முன்னுரை எழுதப்படுகிற ஒரு சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இந்தத் தீர்மானத்தை நான் சார்ந்திருக்கிற இந்திய யூனியன் முஸ்லிம், கட்சியின் சார்பிலே எங்களுடைய தலைவர் பெருமதிப்பிற்குரிய காயிதே மில்லத் 25 ஆண்டுகளுக்கு முன்பே சொன்ன மாநில சுயாட்சி என்ற கருத்தினை இன்றைக்கு உருவாக்கி, இந்த மன்றத்தினுடைய அனுமதியைப் பெறுவதற்கு தகுதியும், திறமையும் படைத்த மாண்புமிகு முதல்வர் அவர்கள் கொண்டுவந்திருக்கிற இந்தத் தீர்மானத்தை வரவேற்றுப் பேசுகிறேன்.

சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சி என்று சொல்லுகிற பொழுது, ஆங்கில நாட்டுச் சரித்திரத்திலே சார்டர் ஆஃப் மாக்னு கார்ட்டா என்று சொல்லுவார்கள். இன்றைய ஜனநாயகத்திற்கு அடிப்படையாக விளங்குகின்ற முன் உரிமையைப் பெற்ற ஒரு சாசனமாக அது இருந்தது என்று சொல்வார்கள். அதைப்போன்று எதிர்கால சரித்திரத்தில் மாநில சுயாட்சி மக்களுடைய நல்வாழ்வுக்கு என்று எடுத்துக் கொள்கிறபொழுது, அப்படிப்பட்ட சரித்திரத்திற்கு ஒரு மாக்னு கார்ட்டா இது என்று சொல்லப்படுகிற சாசனமாக இந்தத் தீர்மானம் இருக்கும் என்பதை இந்த நேரத்தில் நான் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அது மட்டுமல்ல, எதிர்ப்புகள் எந்த ஒரு காரியத்திற்கு அதிகமாக இருக்கிறதோ அந்தக் காரியத்தின் வெற்றி நிச்சயம் என்பது சரித்திரம் நமக்குக் காட்டுகிற உண்மை. இந்த நாட்டிற்கு சுதந்திரமே வராது என்றும், ஆங்கில சாம்ராஜ்யத்தில் சூரியனே அஸ்தமிக்காது என்றெல்லாம் சொன்னார்கள். இன்று சுதந்திரத்தை அனுபவித்துக்கொண்டிடிருக்கிறோம்.

சுதந்திரத்திற்குப் பிறகு மொழி வழி மாகாணங்கள் கேட்டோம். மொழி வழி மாகாணமா? அதைப்பற்றிப் பேசவே கூடாது என்று சொன்னார்கள். ஆனால் மொழி வழி மாகாணங்கள் அனுமதிக்கப்பட்டிருக்கின்றன.

அதே நிலையில் தான் மாநில சுயாட்சி என்று கேட்பது நிச்சயம் இப்படிப்பட்ட ஒரு நல்ல எதிர்காலத்தில் அது வெற்றி பெறக்கூடிய ஒரு நல்ல தீர்மானமாகத் தான் அமைந்திருக்கிறது என்பதை நான் இங்கே சுட்டிக்காட்ட ஆசைப்படுகிறேன். அதுவும், குறிப்பாகவும், சிறப்பாகவும் சொல்ல வேண்டுமானால், இந்தத் தீர்மானத்தைக்கொண்டு வருவதற்கு இந்த நாட்டில் இருக்கிற பல முதல் அமைச்சர்கள் உள்ளத்தில் எண்ணம் கொண்டிருந்தாலும்கூட ஆளுகின்ற கட்சி ஒரே கட்சியாக இருப்பதால், கட்சியினுடைய கட்டுப்பாட்டின் காரணமாக அதை அவர்கள் செய்ய முடியாமல் இருக்கிற நேரத்தில், உண்மையை எடுத்துச் சொல்வதற்கு

[கே. எ. வகாப்]

எந்த இடத்திலிருந்தும் தயங்காத நம்முடைய கலைஞர் அவர்கள் இப்படிப் பட்ட ஒரு தீர்மானத்தைக் கொண்டுவந்திருக்கிறார்கள். பூனைக்கு மணி கட்டுவது யார் என்று கேட்பார்கள். அதைவிட இந்தத் தீர்மானத்தைக் கொண்டுவந்ததன் மூலம், புலிக்குக் கடிவாளம் கட்டுவது யார், அதிகாரத்திலுள்ள புலியை ஆட்டிப்படைப்பதற்குக் கடிவாளம் கட்டுவது யார் என்று கேட்டால், மற்றவர்களுக்கு நம்முடைய மாநிலம் முன் வந்திருக்கிறது. இதைப்பற்றி வெளியே எதிர்த்தாலும் உள்ளே இதை வரவேற்கின்ற பல கட்சியினர் இருக்கிறார்கள் என்பது நன்றாகத் தெரியும்.

ஏனென்று கேட்டால் இந்தத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டால் அதனுடைய பலனை அனுபவிப்பவர்கள் அவர்களும் தான் என்று அவர்களுக்கு நன்றாகத் தெரியும். பேரறிஞர் அண்ணா அவர்கள் சுதந்திரம் கிடைத்தது பற்றி ஒரு கருத்தைச் சொன்னார்கள். காய்ச்சல் இருந்த கந்தசாமிக்கு இன்று காய்ச்சல் நின்றுவிட்டது. ஆனால், கந்தசாமிக்கு இருக்கிற உடல் வலி, வயிற்றுவலி, அசதி இன்னும் நீங்கவில்லை என்று சொன்னார்கள். சுதந்திரம் பெற்று 27 ஆண்டுகள் ஆகியும்கூட இன்னும் இருக்கிற வயிற்று வலிக்கும், உடல் வலிக்கும் இன்று டாக்டர் கலைஞர் கொடுக்கின்ற டானிக் இந்த மாநில சுயாட்சி என்பது என்று இந்த நேரத்தில் கூறிக்கொள்வது பொருத்தமாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

அதுமட்டுமல்ல, தன்னுடைய உரையிலே கலைஞர் அவர்கள் ஒரு கருத்தைக் கூறியிருக்கிறார்கள். கைதியாக இருந்து சிறையிலிருந்து வெளி வந்தவன், சுதந்திரமாக வெளியிலே வந்துவிட்ட பிறகுகூட கையிலே இருக்கிற விலங்கினால் கை சுதந்திரமாக இயங்க முடியவில்லை. தன்னுடைய குழந்தையைக் கட்டி அணைக்கப்போகின்ற அவனுடைய கையிலே இருக்கின்ற விலங்கை உடைக்க வேண்டும் என்று சொல்லவில்லை. கலைஞர் அவர்கள், சம்மட்டி கொண்டுதாக்க வேண்டும் என்று சொல்லவில்லை, அதை சாவியால் திறக்க வேண்டுமென்றுதான் சொல்கிறார்.

ஏதோ பிரிவினைக் கண்ணோட்டத்தில் இந்தத் தீர்மானத்தைக் கொண்டுவந்திருக்கிறார்கள் முதல் அமைச்சர் அவர்கள் என்று சொன்னார்கள். அம்மையார் அவர்கள் பேசும்பொழுதுகூடச் சொன்னார்கள். ஏதோ முன்பிருந்த சுயமரியாதை இயக்கத்தின் அடிப்படையில் இந்தத் தீர்மானம் கொண்டுவரப்பட்டிருக்கிறது என்று மதிப்பிற்குரிய திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் பேசும்பொழுது சொன்னார்கள். பிரிவினையை விரும்புகின்ற சில கட்சிகள் என்ற அடிப்படையை அவர்கள் உள்ளத்தில் நிறுத்திக்கொண்டு, தமிழரசுக் கட்சி, முஸ்லிம் லீக் கட்சி என்று சொன்னார்கள். அதைப்போலவே, அவர்கள் கடந்த கால நிகழ்ச்சிகளை வைத்துக்கொண்டு கற்பனையாகப் பேசினார்கள்.

ஈசாப் கதை ஒன்று எனக்கு ஞாபகத்திற்கு வருகிறது. மலை அருவியிலே ஒரு ஓநாயும் ஆடும் நீர் குடிப்பதற்காக நின்றுகொண்டிருந்ததாம்.

ஓநாய் மேல்பகுதியில் நின்று கொண்டிருந்தது. ஆடு கீழ் பகுதியில் நின்றுகொண்டிருந்தது. அந்த நேரத்தில் ஓநாய் ஆட்டைப் பார்த்துக் கேட்டதாம். "நான் குடிக்கின்ற தண்ணீரை நீ என் கலக்குகிறாய்?" என்று கேட்டது. அதற்கு ஆடு "நீ தான் மேல் பகுதியில் குடிக்கிறாய், நான் கீழ் பகுதியில் குடிக்கிறேன், நான் எப்படி கலக்க முடியும்?" என்றது. உடனே ஓநாய் "நீ கலக்காவிட்டால் உன் பாட்டன் கலக்கியிருப்பான்" என்று சொல்லி, அதைத் தாக்கிற்றாம்.

அதே மாதிரி பாகிஸ்தான் பிரிவினையை வைத்துக்கொண்டு, ஜஸ்டிஸ் கட்சியை வைத்துக்கொண்டு, சுயமரியாதை கட்சியை வைத்துக்கொண்டு இது மாதிரி கூறுவது ஏதோ ஒரு காரணத்தை வைத்து இங்கே இருக்கிற உண்மையை மறைப்பதற்கு தான் கூறுகிறார்கள் என்ற அடிப்படையில் பார்க்கவேண்டியிருக்கிறது.

முஸ்லிம் கட்சியைப் பொறுத்தவரையில் நாங்கள் அன்றைக்கே தெளிவுபடுத்தியிருக்கிறோம். மாநில சுயாட்சி என்ற அளவிலே நாங்கள் மனப்பூர்வமாக ஆதரிக்கத் தயாராக இருக்கிறோம். ஆனால், எந்த ரூபத்திலாவது பிரிவினை வந்தாலும், அந்தப் பிரிவினையை எதிர்க்கின்ற முதல் நம்பர் எதிரியாக முஸ்லிம் லீக் கட்சி கட்சி இருக்கும் என்று மறுபடியும் இந்த நேரத்தில் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

இங்கே கூட்டாட்சியினுடைய தத்துவத்தைப்பற்றி ஒற்றை ஆட்சியின் தத்துவத்தைப்பற்றி மிகத் தெளிவாக மாண்புமிகு நாவலர் அவர்கள் விளக்கியிருக்கிறார்கள். ஆகவே, அதைப்பற்றி இந்த நேரத்தில் நான் அதிகமாக விளக்கத் தேவையில்லை. கூட்டாட்சி முறையைப்பற்றி ஃப்ரிமேன் என்பவர் கொண்டிருக்கிற அந்தத் கருத்தைக்கொண்டு கூட்டாட்சி அமைப்பு என்று இதைக் கூறுகிறார்கள்.

வீயர் என்ற இன்னொருவர் கூறியது போல நம்முடைய நாட்டில் இப்பொழுது நடைபெறுவது போலிக் கூட்டாட்சி. போலிக் கூட்டாட்சி என்று கூறியிருக்கிறார்கள். கூட்டாட்சி அல்ல. அமெரிக்க நாட்டில், ஆஸ்திரேலிய நாட்டில் இன்றைக்கு கூட்டாட்சி முறை நடந்துகொண்டிருக்கிறது. ஸ்விட்சர்லண்ட் போன்ற சிறிய நாட்டில் வேறு அமைப்பில் நடந்து கொண்டிருக்கிறது. ரஷ்யா நடப்பைப் பற்றி பெருமதிப்பிற்குரிய கே. டி. கே. தங்கமணி அவர்கள் பேசினார்கள். ரஷ்ய நாட்டில், உக்ரெயின், அவுட்டர் மங்கோலியா ஆகியவைகள் தன் உரிமைபெற்ற குடியரசுகளாக இருக்கின்றன. ஐக்கிய நாட்டுச் சபையில் அவர்களுடைய தனிப் பிரதிநிதிகள் இருக்கிறார்கள். அவர்களுக்கு எல்லாவிதமான அதிகாரமும் இருக்கிறது. ரஷ்ய நாட்டில் அப்படி இருக்கலாம்.

**மாநில சுயாட்சி பற்றியும், இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துக்களை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

[1974 எப்ரல் 19

[திரு. கே.ஏ. வகாப்]

ஆனால், இந்தியாவில், தமிழ் நாட்டில், இந்தியத் துணைக் கண்டத்தில் அப்படி இருக்கக்கூடாது என்றால், அவர்கள் கட்சிக் கண்ணோட்டத்தோடு அதைச் சொல்கிறார்கள் என்று எடுத்துக்கொள்ள வேண்டுமே தவிர, ரஷ்யாவிற்கு ஒரு நீதியும், இந்தியத் துணைக் கண்டத்திற்கு ஒரு நீதியும் இருக்க வேண்டும் என்று அவர்கள் நிச்சயமாக நினைக்கமாட்டார்கள். அந்தக் கருத்தைச் சொல்வதிலே முஸ்லிம் லீக் ரஷ்யாவுக்கு விரோதி, ரஷ்யக் கொள்கைகளை ஆதரிப்பதில்லை என்ற அடிப்படையில் பேசினார்கள்.

ரஷ்ய நாட்டுக்கு முஸ்லிம் லீக் கட்சி விரோதி அல்ல, அதனுடைய கொள்கையிலே விரோதத் தன்மை இல்லை. ஆனால், இருக்கிற உண்மையை எடுத்துக் சொல்கிற நேரத்தில், பெருமதிப்பிற்குரிய கம்யூனிஸ்ட் கட்சிக்காரர்கள் அதைப் புரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் நான் இதைச் சொல்கிறேன். அங்கே இருக்கிற நாட்டுக்கு தனிப் படை இருக்கிறது. அவர்களுக்கு பிரிந்து போகிற உரிமை இருக்கிறது. அவைகளெல்லாம் இங்கே கேட்கப்படவில்லை.

படையை நீங்கள் மத்தியில் வைத்துக்கொள்ளுங்கள், நிதி வசதியை நீங்கள் வைத்துக்கொள்ளுங்கள், வெளி நாட்டு உறவுகளை நீங்கள் வைத்து கொள்ளுங்கள், உள் நாட்டு போக்கு வரத்தை நீங்கள் வைத்துக் கொள்ளுங்கள். இன்னும் இப்படி பொறுத்தமான அதிகாரங்களை நீங்களே வைத்துக்கொள்ளுங்கள், எங்களுக்கு மாநிலங்களுக்கு நாங்கள் சுய்மாக செயல்படுதவற்கு, மற்றவர்களுடைய தலையீடின்றி செயல்படுவதற்கு, யாராக இருந்தாலும், மத்திய அரசாக இருந்தாலும், மாநில அரசாக இருந்தாலும் மத்திய அரசு மாநில அரசில் தலையிடுவதற்கு, ''மாநில அரசு மத்திய அரசில் தலையிடுவதற்கு இல்லாத வகையிலே அதிகாரங்கள் இருக்கவேண்டும்.

குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால், இந்திப் பிரச்னையைப் பற்றி பேசினார்கள். இந்திக்கு என்று தனியாக தமிழகத்திற்கு ஒரு கொள்கை இருக்கிறது. நமக்கெல்லாம் தனியாக உணர்ச்சிகள் இருக்கின்றன. ஆனால் நம்முடைய உணர்ச்சிகளை மத்திய அரசு கட்டுப் படுத்தும் என்றால், அந்த நேரத்திலே நாட்டிலிருப்பவர்கள் குரல் எழுப்புவார்கள் என்று தான் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அப்படிப்பட்ட தன்மைகளை, கருத்துக்களை எந்த நாடும், ஏற்றுக்கொள்ள முடியாது. மத்திய அரசினுடைய அப்படிப்பட்ட சில அதிகாரங்களில் மாநில அரசு தலையிடக்கூடாது என்ற அளவில் சில உறுப்பினர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

ஃபெடரேஷன், கூட்டாட்சி முறை எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும் என்பதை நல்ல முறையில் நாவலர் அவர்கள் விளக்கிக் கூறியிருக்கிறார்கள். அதே நேரத்தில் இன்றையதினம் பணப்பெட்டியின் சாவி மத்திய அரசின் கையில் இருக்கிறது. வீட்டிலே இருக்கிற மருமகள் வந்து பல

1974 ஏப்ரல் 19]

[திரு. கே.ஏ. வகாப்]

ஆண்டுகள் ஆகியும்கூட, வீட்டினுடைய பொறுப்புகளையெல்லாம் ஏற்றுக் கொண்டிருந்தாலும் கூட, பணப்பெட்டி சாவி இன்னும் மருமகள் கையில் கொடுக்கப்பட்டதா என்றால், மாமியார் கையில் தான் சாவி இருக்கிறது. பிச்சைக்காரர்களுக்கு இல்லை என்று சொல்வது கூட மருமகள் சொல்லக்கூடாது, இல்லை என்று சொல்வதுகூட நான் தான் சொல்வேன் என்று சொல்லக்கூடிய கொடுமைக்கார மாமியாரைப் போல நடக்கக் கூடாது என்ற தத்துவத்தில் தான், இந்த மாநில சுயாட்சியின் அடிப்படை தத்துவம் அடங்கியிருக்கிறது.

மற்ற மாநிலங்கள் அரிசி கேட்டால், தமிழக மாநிலம் அரிசி கொடுக்க முன்வந்தால், அரிசியை நம்முடைய மாநிலம் கொடுக்கக் கூடாது, என்னுடைய அனுமதி பெற்றுத்தான் கொடுக்க வேண்டும், நல்லது செய்தாலும் அதற்கு எங்களுடைய அனுமதி பெற்றுத்தான் செய்ய வேண்டும், கொடுக்க வேண்டிய அதிகாரம்கூட எங்களிடம் தான் இருக்க வேண்டும் என்று சொல்கின்ற அளவுக்கு மத்திய அரசாங்கத்தினுடைய தன்மை இருக்கிறது என்றால் என்ன சொல்வது? சாதாரண சிறு விஷயங்களுக்குக்கூட இப்படி மத்திய சர்க்காரை நாம் கெஞ்சிக் கேட்கக் கூடிய நிலைமையில் இருக்கிறோம்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் ஒரு முறை குறிப்பிட்டார். கையேந்தி நிற்கவேண்டிய நிலையில் நாம் இருக்கிறோம், தாழ்ந்த நிலையில் கையை ஏந்திக்கொண்டிருக்கிறோம் என்று சொன்னார். மத்திய அரசு எடுக்கின்ற சில முடிவுகள், அவர்களுடைய பொருளாதார கண்ணோட்டம் சரி இல்லாத காரணத்தினால், நாட்டிலே விலைவாசி ஏற்றம் ஏற்பட்டிருக்கிறது. நாட்டிலே அண்மையில் ஏற்பட்ட விலை ஏற்றம் எப்பொழுது ஏற்பட்டது என்பதைக் கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள். ரயில்வே ஸ்ட்ரைக் ஏற்பட்டதற்குப் பிறகு விலை ஏற்றம் விஷம்போல் ஏறிக்கொண்டிருக்கிறது.

ரயில்வே ஸ்ட்ரைக்குக்கு முன்னால் என்ன ஏற்பட்டது. பணவீக்கம், 10,000 கோடிக்கு அதிகமான நோட்டுகள் அச்சடிக்கப்பட்டன. அதன் காரணமாக நாட்டில் பண வீக்கம் ஏற்பட்டது. கறுப்புப் பணம் வந்தது, விலை ஏற்றம் ஏற்பட்டது. அதற்கான பொறுப்பை யார் ஏற்கவேண்டும், மத்திய அரசாங்கம் தான் ஏற்கவேண்டும் ஆனால் அந்த விலையேற்றத்தின் காரணமாக பாதிக்கப்படுகிறவர்கள் மாநிலத்தில் இருக்கின்ற தொழிலாளர்களும், அரசாங்க அலுவலர்களும்தான். மாநிலத்தில் இருக்கின்ற தொழிலாளர்களுக்கு சம்பளத்தை உயர்த்திக் கொடுக்கும்போது மாநில அரசின் நிதியிலிருந்தே கொடுக்க வேண்டியிருக்கிறது. இதற்கு மத்திய அரசு எந்தக் குற்றத்திற்கு காரணமாக இருக்கிறதோ அதற்குப் பரிகாரமாக, மத்திய அரசே உதவி செய்ய வேண்டும்.

[திரு. கே. ஏ. வகாப்] [1974 ஏப்ரல் 19

ஆட்சிக்கு வருவதற்கு முன்னால் ரூபாய்க்கு படி அரிசி போடுவோம் என்று சொன்னார்கள்; அதைப் போடமுடியவில்லையே என்று அம்மையார் அவர்கள் கேட்டார்கள். அண்ணா அவர்கள் சொன்னார்கள். உண்மை. அந்தக் கொள்கையை நிறைவேற்ற முடியாமல் போனதற்கு மூல காரணமாக இருப்பது நீங்கள்தான். இன்றைக்கு பொருளாதார அடிப் படையில் பார்த்தால், இந்த விலையேற்றத்தின் காரணமாகத்தான் அறிஞர் அண்ணா அவர்களின் கொள்கையை நிறைவேற்ற முடியாத சிக்கல் ஏற்பட்டது என்பதை எல்லோரும் உணர்வார்கள். அடிக்கடி, பல விலையேற்றங்களுக்குக் காரணமாக இருப்பது மத்திய அரசுதான். மத்திய அரசே நிதிப் பொறுப்பை பார்த்துக்கொள்கிறது. அந்த பொறுப்பு மாநில அரசுக்கு அல்ல. நிதிப் பொறுப்பை வகிக்கின்றவர்கள்தான் விலையேற்றத்திற்கு பொறுப்பு ஏற்கவேண்டும்.

நிதிப் பொறுப்பை பொறுத்த வரையில், மத்திய அரசுக்குத்தான் எல்லா பொறுப்புகளும் இருக்க வேண்டுமென்று சொல்வதில் நாங்கள் கருத்து வேறுபடுகின்றவர்கள். ஓரளவுக்காவது மாநில முதலமைச்சர் களுக்கு அதில் பொறுப்பு இருந்தால்தான் சரியாகச் செயல்பட முடியும் அந்த முறை இருந்தால்தான் நிச்சயமாக ஒரு நல்ல கூட்டாட்சியாக இருக்க முடியும். கூட்டாட்சி முறையிலேதான் மக்களுக்குத் தேவையான வளத்தை அளிக்க முடியும்.

அரசியல் சட்டத்தைத் திருத்தலாமா? இதற்காகவா அரசியல் சட்டத் தைத் திருத்த வேண்டுமென்று கேட்கிறார்கள். நேற்று மாண்புமிகு உறுப்பினர் கந்தப்பன் அவர்கள் அழகாகச் சொன்னார்கள். அரசியல் சட்டம் ஒரு "கைபடாத ரோஜா" என்று நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். இப்போது 33 தடவைகள் அரசியல் சட்டத்திலே திருத்தம் செய்தாகி விட்டது, என்பதை நாம் பார்க்கிறோம். அரசியல் சட்டத்தை இயற்றிய அம்பேத்கார் அவர்கள் என்ன சொன்னார்கள் என்பதை மாண்புமிகு முதலமைச்சரவர்கள் தெரிவித்தார்கள். அரசியல் சட்டம் எரிக்கப்பட வேண்டியது என்று அவர்கள் கோபத்தில் சொல்லியிருந்தாலும், ஒரு உண்மையான வாதத்தின் அடிப்படையிலேதான் சொன்னார்கள். அரசி யல் சட்டம் ஏற்படுவதற்கு காரணமாக இருந்த அம்பேத்கார் அவர்கள், தான் பெற்ற குழந்தையைக் கொல்லலாமா, அப்படிச் செய்வது அழகா என்று சொன்னார்கள். அவர்கள் எந்தச் சூழ்நிலையிலே அப்படிச் சொல் லியிருப்பார்கள் என்பதைப் பார்க்க வேண்டும். அது ஒரு சிக்கலான பிரச்சனை. நான் ஒரு அழகான கோவிலைக் கட்டினேன். அதிலே தெய்வத்தை குடி வைக்க வேண்டுமென்று விரும்பினேன். ஆனால் அந்த கோவிலில் பேய்களும், பிசாசுகளும், பூதங்களும் புகுந்துவிட்டன என்று கூறியிருக்கிறார்கள்.

அது மட்டுமல்ல, அரிசன மக்களின் அந்தஸ்தை உயர்த்த வேண்டு மென்று உணர்ந்த ஆசிய ஜோதி ஜவகர்லால் நேரு அவர்கள், அதை ஏற்றுக்கொண்ட பிறகு, அன்றைக்கு ஜனாதிபதியாக இருந்த ராஜேந்திர பிரசாத் கையெழுத்துப்போட மறுத்துவிட்டார்கள். இப்படி அரசியல்

சாசனம் இருக்குமானால், எல்லோரும் சமத்துவம் என்பதற்கு தடை இருக்குமானால், இந்தச் சட்டத்தை சுட்டெரித்துவிடலாம் என்று அவர்கள் மன வேதனையோடு தெரிவித்திருக்கிறார்கள்.

இன்னும் ஒவ்வொரு கட்சித் தலைவர்களும் அதைப்பற்றிச் சொல்லி யிருக்கிறார்கள். பூபேஷ்குப்தா அவர்கள் இந்த அரசியல் சட்டத்தை "இல்லெஜிட்டிமேட் சைல்டு"—முறை தவறி பிறந்த குழந்தை என்று சொல்லியிருக்கிறார்கள். பழைய காங்கிரஸ் தலைவர் அசோக்மேத்தா அவர் கள் மாநில அரசாங்கங்களை இந்த மத்திய அரசாங்கம் ஆபீஸ் பாய்களாக நடத்துகிறது என்று சொல்லியிருக்கிறார்கள். சுதந்திராக் கட்சித் தலைவர் பிலுமோடி அவர்கள் மலட்டுத் தன்மை வாய்ந்ததாக இருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இதையெல்லாம் சொல்லும்போது எல் லோருமே இதிலே ஒரு மாற்றம் வேண்டுமென்று விரும்புகிறார்கள் என் பதை நாம் புரிந்துகொள்ள முடிகிறது. அந்த மாற்றத்தை ஒரு பரந்த நோக்கத்தோடு டாக்டர் கலைஞர் அவர்கள் இந்தத் தீர்மானத்தின் மூலம் கொண்டுவந்திருக்கிறார்கள். மாற்றத்தை எதிர்பார்க்கின்றவர்கள் எல்லாம் இப்படிப்பட்டவர்கள் அதைச் செய்வதா? கருணாநிதி திருத்தம் கொண்டு வருவதா? அதை நாம் ஏற்றுக்கொள்வதா என்ற முறை யிலேதான் எதிர்த்துக்கொண்டிருக்கிறார்கள். இன்றைய தினம் டாக்டர் கலைஞர் அவர்கள் இதைச் செய்யவில்லை என்றாலும், அவர்கள் சொன்ன தைப்போல, வேறொருவர் செய்யத்தான் போகிறார். டாக்டர் கலைஞர் முந்தி விட்டார். இதைப் புரிந்துகொள்ள மறுக்கிறார்கள்.

நேற்று பெரியவர் மணலி அவர்கள் பேசும்போது ஒன்றைக் குறிப் பிட்டார்கள். இதற்காக என்னுடைய உயிரை வேண்டுமானாலும் கொடுப்பேன் என்று சொன்னார்கள். அவர்கள் ஏற்கெனவே பல தியாகங்களைச் செய்தவர்கள். தியாகப் பரம்பரை அவர்களுக்கு உண்டு. தியாகப் பரம்பரையைச் சேர்ந்த உண்மையான ஒரு கம்யூனிஸ்ட் என்று இன்றும் மதிக்கப்படக் கூடியவர் அவர். அப்படிப்பட்ட மணலி அவர்கள் அப்படிச் சொல்கிறார்கள் என்றால் நிச்சயமாக இதன் உண்மைத் தத்துவத்தைப் புரிந்துகொள்ள வேண்டும்.

டாக்டர் கலைஞர் அவர்கள் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந் திருக்கிறார்கள் என்பதற்காக இதை எதிர்க்கிறார்கள் என்றால் உங்களுடைய வீரேந்திரபட்டீல் அவர்களும் இன்னும் வட மாநிலங்களிலே உள்ள பல முதலமைச்சர்களும் இந்தக் கருத்தை எழுப்பி இருக்கிறார்களே, அதற்கு என்ன சொல்கிறீர்கள்?

அண்மையிலே நாங்கள் வட மாநிலங்களுக்குச் சென்றிருந்தபோது அங்கே உள்ள உண்மை நிலையை நாங்கள் கண்டோம். இப்படிப்பட்ட ஒரு மறுமலர்ச்சி அங்கே ஏற்பட்டிருக்கிறது. நாங்கள் சென்ற இட மெல்லாம் மாநில சுயாட்சிப்பற்றிக் கேட்டார்கள். பஞ்சாப், அரியானா அரசியல் தலைவர்கள் எல்லாம் எங்களிடம் கேட்டார்கள். உங்களுடைய முதலமைச்சர் அவர்கள் இதுபற்றி இந்தியா பூராவுமாகச் சேர்ந்து ஒரு

[திரு. கே. ஏ. வகாப்] [1974 ஏப்ரல் 19

மாநாட்டைக் கூட்டுவார்களானால் அந்த மாநாட்டிலே நாங்கள் பங்கு கொள்ளத் தயாராக இருக்கிறோம்; ஆனால் நாங்களாக அதைச் செய்ய முடியாத சூழ்நிலையில் இருக்கிறோம் என்று சொன்னார்கள். ஆகவே, இந்தத் தீர்மானத்தை தேசிய கண்ணோட்டத்துடன் பார்க்க வேண்டுமென்று நான் மிக மிக வலியுறுத்திக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

அது மட்டுமல்ல; இன்று பல பிரச்சனைகளைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அந்தப் பிரச்சனைகளில் முக்கியமாக இன்றையதினம் இந்த நாட்டினுடைய பொருளாதாரம் எப்படி சீர்கெட்டிருக்கிறது என்பதை நம்முடைய மாண்பு மிகு உறுப்பினர் கந்தப்பன் அவர்கள் தெளிவாக விளக்கிச் சொன்னார்கள். அழகான கார் தான்; பார்ப்பதற்கு நன்றாக இருக்கிறது; பெயின்ட் பளபளப்பாக இருக்கிறது; கார் குஷன் மெத் மெத் என்று இருக்கிறது; ஆனால் எஞ்சினில் கோளாறு இருக்கிறது; டிரைவரால் கோளாறைச் சரிப்படுத்த முடியவில்லை என்றால் நல்ல மெக்கானிக் இருக்கிறார்; அவரிடம் கொடுத்துவிடலாம். இந்தக் கருத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அம்மையார் அவர்கள் கட்சியைச் சேர்ந்த சுரேந்திரன் அவர்கள் பேசும்போது உண்மையை ஒப்புக்கொண்டார்கள். நாம் தேசிய சுதந்திரம்தான் அடைந்திருக்கிறோம்; பொருளாதார சுதந்திரம் அடையவில்லை என்று சொன்னார்கள். ஏன் பொருளாதாரத்தில் சுதந்திரம் அடைய முடியவில்லை?

அணுக்குண்டுகளால் சுட்டெரிக்கப்பட்ட சிறிய நாடாகிய ஜப்பான் பொருளாதாரத்தில் 700 மடங்கு உயர்ந்திருக்கிறது என்பதை டாக்டர் நாவலர் அவர்கள் தெரிவித்தார்கள். சின்ன சின்ன நாடுகள் எல்லாம் கூட பொருளாதாரத்தில் மிகவும் வளர்ச்சியடைந்திருக்கின்றன. ஆனால் நாம் வளர்ச்சியடையவில்லை என்றால் இங்கே கோளாறு இருக்கிறது என்று பொருள்; அந்தக் கோளாறு எங்கே இருக்கிறது என்பதை நாம் புரிந்துகொள்ளவில்லை. அதைப் புரிந்துகொண்டு அதற்கு ஏற்றவகையில் செயல்படவில்லை.

அதற்கெல்லாம் ஒரு பரிகாரம் காணுகின்ற வகையில் இந்த மாநில சுயாட்சி என்னும் அருமருந்து இருக்கிறது. இந்த மருந்து சகல வியாதிகளையும் தீர்த்து வைக்கும். இந்த மாநிலத்தைப் பொறுத்தவரையில் இதை ஒரு சர்வரோக நிவாரணி என்று நான் சொல்வேன்; மற்ற மாநிலங்களுக்கு எப்படியோ தெரியாது.

தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் இது ஒரு சர்வரோக நிவாரணியாக இருக்கும். அதனுடைய பலன்களை அனுபவிக்க நீங்களும் பங்கு கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். "உறவுக்கு கை கொடுப்போம் உரிமைக்கு குரல் கொடுப்போம்" என்று கலைஞர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அந்த வகையிலே இந்த மாநில சுயாட்சித் தீர்மானத்தை முஸ்லிம்லீக் கட்சியின் சார்பிலே ஆதரித்து, என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

தமிழ்நாடு சட்டப் பேரவை

---

சனிக்கிழமை, 1974 ஏப்ரல் 20.

---

சென்னை செயின்ட் ஜார்ஜ் கோட்டையிலுள்ள சட்டப்பேரவை மண்டபத்தில் காலை 9 மணி அளவில் மாண்புமிகு பேரவைத்தலைவர் புலவர் கா. கோவிந்தன் அவர்கள் தலைமையில் பேரவை கூடியது.

பக்கங்கள் 635 முதல் 648 வரை } வேறு அலுவல்கள்
பக்கங்கள் 807 முதல் 808 வரை }

## தமிழ்நாடு சட்டப் பேரவை.

சனிக்கிழமை, 1974 ஏப்ரல் 20.

### 5. அரசினர் தனித் தீர்மானம்.

மாநில சுயாட்சி பற்றியும், இராஜமன்னர் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** அடுத்து, அரசினர் தனித் தீர்மானத்தின் மீது விவாதம் தொடரும். இப்பொழுது திரு. ஏ. ஆர். மாரிமுத்து அவர்கள் பேசலாம். தங்களுக்கு எவ்வளவு நேரம் தேவைப்படும் ?

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** ஒன்றரை மணி நேரமாவது வேண்டும். அவ்வளவு நேரம் கொடுக்க முடியாது என்பதை நான் உணர்கிறேன். குறைந்தது ஒரு மணி நேரமாவது கொடுத்தால் நல்லது.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** முக்கால் மணி நேரத்திற்குள் முடித்துவிடுங்கள்.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** ரொம்ப சிரமம்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** இன்றைக்கு நீங்கள் பேசிய பின் திரு. பெருமாள் அவர்கள் பேச வேண்டும். அடுத்து, திரு. எட்மண்ட், பிறகு திரு. ஆர். பொன்னப்ப நாடார், பிறகு மாண்புமிகு முதல் அமைச்சர் அவர்கள் பேசவேண்டும்.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** வேகமாகப் பேசி முடிக்க முயற்சி செய்கிறேன்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** முக்கால் மணி நேரத்தில் முடித்து விடுங்கள்.

* **திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** தலைவர் அவர்களே, அரசினர் தரப்பிலே மாண்புமிகு முதல் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்துள்ள இந்தத் தீர்மானத்தின் மீது எங்கள் கட்சியின் சார்பில் திருத்தத்தின் வாயிலாகக் கொடுத்திருக்கக்கூடிய மாற்றுத் தீர்மானத்தை ஆதரித்து எனது கருத்துக்களைச் சொல்ல முன் வந்துள்ளேன்.

[திரு. எ. ஆர். மாரிமுத்து] [1974 ஏப்ரல் 20

இந்தத் தீர்மானத்தை முன்மொழிகின்றபோதும், அதன்பிறகு இந்த அவையில் நடந்த விவாதங்களின்போதும், இது ஏதோ ஒரு பெரிய வரலாற்று முக்கியத்துவம் பெற்ற ஒரு தீர்மானம், இது சரித்திரத்திலே இடம் பெறக் கூடிய மிக முக்கியமான தீர்மானம் என்றெல்லாம் இங்கே குறிப்பிடப்பட்டது. வரலாற்றிலே எல்லா சம்பவங்களும்தான் இடம் பெறும். அதனுடைய விளைவுகள் நல்லதாக இருந்தாலும் தீமையாக இருந்தாலும் வரலாற்றிலே இடம் பெறும். ஆனால், நான் அஞ்சுவதெல்லாம் தமிழகத்தில் ஆட்சியிலே இருந்த முதலமைச்சரவர்களுடைய முயற்சியினாலே இந்த நாட்டினுடைய ஒருமைப்பாடு சீர்குலைந்து, முன்னேற்றம் சீர்குலைந்து தேசத்திலே ஒரு பெரும், மோசமான நிலை ஏற்பட்டது என்று சரித்திரத்திலே இடம் பெறக் கூடாது என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம்.

இப்படியொரு நிலைமை சரித்திரத்திலே ஏற்பட்டுவிடப் போகின்றது, ஆகவே தயவு செய்து இந்தத் தீர்மானத்தை நீங்கள் கைவிட்டுவிடவேண்டும், இதிலே மேற்கொண்டு முயலுவது சரித்திரத்திலே மாறான இடத்தை, மாசு கற்பிக்கக்கூடிய இடத்தை உங்களுக்கு ஏற்படுத்தும், ஆகவே, இதை விட்டுவிட வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

இப்பொழுது நம் நாட்டில் ஒரு அரசியல் சட்டம் கடந்த 24 ஆண்டுகளாக அமுலில் இருக்கிறது. ஒரு அரசியல் சட்டம் அமுலில் இருக்கின்றது என்றால், அதிலே திருத்தத்தைச் செய்வது ஒன்றும் தவறு என்று இங்கே நாங்கள் கருதவில்லை. பல உறுப்பினர்கள் இங்கே பேசும்போது, அரசியல் சட்டம் திருத்தப் படக் கூடாத ஒன்று அல்ல, பெரிய புனிதமானதொன்றல்ல என்று குறிப்பிட்டார்கள். உண்மை.

அரசியல் சட்டம் 33 தடவைகள் திருத்தப்பட்டிருக்கிறது அது புனிதமான—திருத்தப்படக்கூடாத—ஒன்று என்று இருக்கு மானால், இவ்வளவு திருத்தங்கள் அதிலே வந்திருக்க முடியாது. ஆனால், அந்தத் திருத்தம் எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும் என்று நாம் பார்க்க வேண்டும். அதற்கு 33 திருத்தங்கள் இது வரையில் வந்திருக்கின்றன என்றால், காலப்போக்கில் ஏற்படுகிற

மாறுதலுக்கு ஏற்றவாறு, தேசத்தினுடைய பொருளாதார நிலைமை மற்ற நிலைமைகளை அபிவிருத்தி செய்வதற்காகக் கொண்டு வரப்பட்ட திருத்தங்களாகும்.

ஆனால், இது அனுபவ ரீதியாக, கடந்த 24 ஆண்டுகாலமாக இந்த அரசியல் சட்டம் அமுலில் இருக்கிறதே, இதனால் ஏற்பட்ட இடர்ப்பாடுகள் என்ன, இந்த இடர்ப்பாடுகளை அடிப்படையாக வைத்து, இது வளர்ச்சிக்குக் குந்தகமாக இருக்கும் என்று கருதுவோமானால் அதிலே திருத்தங்களைக் கொண்டுவரலாம். ஆனால், இராஜமன்னர் கமிட்டி அறிக்கையிலே குறிப்பிட்டிருப்பதைப் பார்த்தால், ஏதோ கடந்த கால அனுபவத்தைக் கருத்திலே வைத்து, இதனால் மாநிலங்களுக்கு பெரும் சிரமங்கள், சங்கடங்கள் ஏற்பட்டுவிட்டன என்ற காரணத்தை வைத்து உற்று நோக்கியதாகத் தெரியவில்லை.

ஆகவே, இது அரசியல் சட்டத்தைப் படித்து, அதிலே இருக்கின்ற வரிக்கு வரி, எழுத்துக்கு எழுத்து ஒரு அர்த்தத்தைச் செய்து, அதிலே ஒன்றைக் கற்பனை செய்துகொண்டு, அந்தக் கற்பனையின் அடிப்படையில்தான் இராஜமன்னர் குழுவின் அறிக்கையின் பேரில் அரசு சிபார்சு செய்திருக்கிறது என்று நான் கருதுகிறேன்.

ஒன்றை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆட்சியிலே இருக்கின்ற கட்சி நீண்ட நாட்களாகவே மத்தியிலே இருக்கின்ற ஒரு ஆட்சி என்பது, பூதாகாரமானது, அது மாநிலங்களைச் சாப்பிடக் கூடியது, மாநிலங்களை அழித்து ஒழிக்கக் கூடியது என்ற எண்ணத்திலே வளர்ந்துவந்த ஒரு கட்சியானபடியினாலே அவர்கள் மத்தியிலே உள்ள ஆட்சி ஏதோ மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆட்சிதான் என்ற கருத்தை விட்டுவிட்டு, மத்தியிலே இருக்கின்ற ஆட்சி ஏதோ யாராலோ நியமனம் செய்யப்பட்ட ஒரு ஆட்சி என்று மனத்திலே கொண்டு, அந்தக் கண்ணோட்டத்தில் அரசியல் சட்டத்தை அணுகி இருக்கின்றார்கள்.

[திரு. ஏ. ஆர். மாரிமுத்து] [1974 ஏப்ரல் 20

ஒன்றை நான் கூறிக்கொள்வேன். மத்தியில் இருக்கிற ஆட்சியும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு ஆட்சி, மக்களின் அபிலாஷைகளைப் பிரதிபலிக்கக் கூடிய ஒரு ஆட்சி. மக்களுடைய எண்ணங்களைப் பார்த்து அவர்களுக்கு விரோதமாக இல்லாமல் செயல்பட வேண்டும் என்ற எண்ணம் படைத்த ஆட்சியாகத்தான் இருக்க முடியும்.

இதைக் கூறுகிறபோது மத்தியில் காங்கிரஸ் ஆட்சி கல்லும் காவிரியும், புல்லும் பூமியும் உள்ள அளவிற்கு இருக்கப் போகிறது என்ற எண்ணத்தில் சொல்லவில்லை. நம் நாட்டில் ஜனநாயகம் உயிரோடு இருக்கிற வரையில் மத்தியில் இருக்கிற ஆட்சியாக இருந்தாலும் சரி, அல்லது மாநிலத்தில் இருக்கிற ஆட்சியாக இருந்தாலும் சரி, அவை மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு ஆட்சியாகத்தான் இருக்கமுடியும்.

அன்றாடம் பார்க்கிறோம், அனுபவத்தில் பார்க்கிறோம். அதனால் மத்திய ஆட்சி எல்லாவற்றையும் அடக்கி வைத்துக்கொண்டிருக் கிறது என்று யாரும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். மக்களுடைய மனச்சாட்சி தவறு செய்யவேண்டாம் என்று மனிதனைக் கட்டுப் படுத்துகிறது.

அதேபோல் மத்தியில் இருக்கிற ஆட்சியின் சட்ட வரைவுகள் எப்படியிருந்தாலும் சரி மக்களின் அபிப்பிராயத்திற்கு, அதாவது பொதுமக்களின் கருத்துக்கு எதிராக செயல்படக்கூடாது என்ற கருத்தோடுதான் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆட்சி இருக்க முடியும். ஆகையால் சட்ட வடிவுக்குள்ளே போய் ஒரு காலத்தில் எப்போதாவது தேவை ஏற்பட்டு தேவைப்பட்டதை அமலாக்க வேண்டும் என்று சில ஷரத்துக்கள் அரசியல் சட்டத்தில் இருந்தாலும் அதை அடிக்கடி உபயோகப்படுத்துவது கிடையாது. உபயோகப்படுத்த முடியாது.

ஆகையால் அந்த ஷரத்துக்கள் ஏன் இருக்கின்றன என்று பார்த்து ஒரு பய உணர்வோடு அதை அணுகுவதைப் பார்க்கிறோம். அப்படி அணுகுவதால்தான் இந்தத் தீர்மானம் இங்கே கொண்டுவரப்பட்டிருக்கிறது. ஆகவே, மத்திய அரசு,

1974 ஏப்ரல் 20] [திரு. ஏ. ஆர். மாரிமுத்து]

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு அரசு என்ற கருத்தோடு பார்ப்பீர்களானால் அவர்களும் பொதுமக்களின் கருத்துக்களுக்கு மதிப்புக் கொடுத்து நடக்க வேண்டிய நிலையில் உள்ளவர்கள் தங்களைப் போல் என்று, கருதுவார்களேயானால் இந்தத் தீர்மானம் இங்கு வந்திருக்க வேண்டிய அவசியமே இல்லை. நான் ஒன்று கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். பொதுமக்களின் கருத்துக்கு விரோதமாக எந்த அரசும் செயல்படமுடியாது. மதுவிலக்குச் சட்டத்தை ரத்து செய்தீர்கள். ஒரு ஆண்டுக்குள்ளாக அதை திரும்பவும் அமலாக்கக் காரணம் என்ன ? மக்கள் நமக்கு எதிராக இதை வைத்துக்கொண்டு போய் விட்டார்கள், பப்ளிக் ஒப்பினியன் நமக்கு எதிராகப் போய்விட்டது என்று கருதித்தான் மதுவிலக்குச் சட்டத்தை மறுபடியும் கொண்டு வந்தீர்கள்.

இதேமாதிரி மத்திய அரசும் மக்களுக்கு எதிராகச் செயல்படக் கூடாது என்பதில் கண்ணுங்கருத்துமாக இருப்பார்கள் என்ற கண்ணோட்டத்தில் இதைப் பார்க்கவேண்டும். பிரிவினை பற்றி அதை நாங்கள் கைவிட்டு விட்டோம் என்று நீங்கள் சொல்கிறீர்கள். அதில் நான் அதிகமாக ஈடுபட விரும்பவில்லை.

மாநிலச் சுயாட்சி என்று மதிப்பிற்குரிய திரு. மாறன் அவர்கள் ஒரு புத்தகத்தை எழுதியிருக்கிறார்கள். அதைப்பற்றி பிரமாதமாக இங்கு பேசப்பட்டது. அதில் எழுதியிருப்பதை, ஒன்றை உங்கள் அனுமதியோடு படித்துக் காட்ட விரும்புகிறேன். இது எந்த நோக்கத்தோடு, எந்தக் கருத்து அதில் பிரதிபலிக்கிறது என்பதை தயவுசெய்து இந்த சபையில் உள்ள நீங்கள் கவனிக்கவேண்டும். தங்கள் அனுமதியோடு அதை நான் படிக்கிறேன்.

> "மேலும், பிரிந்துபோகும் உரிமை கிடையவே கிடையாது என்று ஒரு நாட்டின் அரசியல் அமைப்புச் சட்டத்தில் எழுதி வைக்கப்பட்டு விட்டால் மட்டும் பிரிவினை தடுக்கப்பட்டு விடுமா, என்ன ? புரட்சிகள் அய்யருக்காகவும், அமாவாசைக் காவும்—என்--அரசியல் சட்டத்தின் அனுமதிக்காகவும் கூடக் காத்திருப்பதில்லையே."

இது எதைப் பிரதிபலிக்கிறது? அரசியல் சட்டம் இருக்கிறது. நாட்டில் ஒருமைப்பாடு வேண்டும். நாட்டின் ஒரு அங்கமாக நாம் இருக்கிறோம் என்றெல்லாம் நீங்கள் சொல்கிறீர்கள். அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டும், மாறுபாடு செய்யவேண்டும், அதிக அதிகாரங்கள் வேண்டுமென்று கேட்பதற்கு உங்களுக்கு உரிமை உண்டு. அதை நான் தடை செய்யவில்லை. ஆனால் அந்த உரிமை கொடுக்கவில்லை என்றால் பிரிந்து செல்வோம் என்று சொல்வது பிரிவினை எண்ணம் இன்னும் இருக்கிறது என்றுதான் பொருள்.

**மாண்புமிகு திரு. க. அன்பழகன்:** அவர்கள் படித்துக் காட்டிய இடம் எந்தவிதமான மக்களுடைய மன மாறுபாடு வளர்வதற்கான இடம் ஏற்பட்டு விட்டாலும் அந்த மன மாறுபாடு காரணமாக புரட்சி வரும் என்ற கருத்து இங்கே வரக் கூடும் என்ற கருத்து அல்ல. உலகம் எங்கும் அந்தமாதிரி வரலாம். அதற்கு அரசியல் சட்டம் போதுமான அளவிற்கு அதைத் தடுக்க ஆற்றல் பெற்றதாக இல்லை என்ற பொதுக் கருத்து சொல்லப்பட்ட இடமே தவிர அவர்கள் வாதிப்பது மாநிலச் சுயாட்சி தரப்படுமானால் அந்தப் புரட்சி மனப்பான்மைக்கு இந்தியாவில் இடம் இருக்காது என்று கருதி அப்படி இடம் கொடுக்கக்கூடாது என்பதற்காக சொல்லப்பட்டிருக்கிறதே தவிர இடம் கொடுக்க வேண்டும் என்பதற்காக எழுதப்பட்டதல்ல.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து:** எப்படியிருந்தாலும் அதுமாதிரி வார்த்தையைச் சொல்வதை ஆட்சேபிக்கிறோம். மாநிலச் சுயாட்சி வேண்டுமென்று கேளுங்கள். அதல்லாமல் பிரிந்து போவோம் என்றால் எங்கே பிரிந்து போவது? Is it possible.

அடுத்து, நேற்றையதினம் மாண்புமிகு கல்வி அமைச்சர் அவர்கள் இங்கே பேசுகிறபோது நாட்டில் ஏற்படுகிற எல்லாக் குறைபாடுகளுக்கும், பொருளாதார வளர்ச்சி முதற்கொண்டு மற்ற எல்லா வகைகளுக்கும் காரணம் மாநிலச் சுயாட்சி வழங்காததுதான் என்று குறிப்பிட்டார்கள். நாட்டிலே இருக்கிற நிலைமை. இன்று பொருளாதார ஏற்றத்தாழ்வு குறைய வேண்டும்,

1974 ஏப்ரல் 20] [திரு. ஏ. ஆர். மாரிமுத்து]

மாநிலங்களுக்கு மாநிலம் இருக்கிற ஏற்றத்தாழ்வு குறைய வேண்டும், நாட்டில் ஒட்டுமொத்தமாகப் பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டு இந்த நாட்டில் எல்லா மக்களும் வறுமையற்ற நிலை எய்தவேண்டும் என்பதற்காக. இன்றைக்கு சாதாரண மக்கள் உழைக்கக்கூடிய மக்கள் இவர்கள் மத்தியில் ஒரு உணர்வு ஏற்பட்டு இந்த நாட்டில் ஒரு சோஷலிஸ சமுதாயத்தை ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டு அது வளர்ந்துகொண்டிருக்கிறது. அதைத் திசை திருப்புமுகத்தான் அது அல்ல காரணம், மாநிலச் சுயாட்சிதான் காரணம் என்று திசை திருப்புவார்களானால் எந்தப் பாதையை நோக்கி நாம் செல்ல வேண்டுமோ அந்தப் பாதையில் இருந்து திரும்பவேண்டிய நிலைதான் ஏற்படும் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் கூறிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

நாட்டில் பொருளாதார வளர்ச்சி ஏற்படாததற்குக் காரணம், நாட்டில் வறுமை ஒழியாதிருப்பதற்குக் காரணம் மாநிலச் சுயாட்சி கொடுக்காததுதான் காரணம் என்று சொன்னால் அது தவறானதாகும். நாட்டில் பொருளாதார அபிவிருத்திக்கு வேண்டிய திட்டங்கள் போட்டும் நாட்டில் இருக்கிற தீய சக்திகள், நாச சக்திகள், பிற்போக்குச் சக்திகள் தலையிடுவதன் மூலம் அதை முறியடிக்க விரும்புகிறார்கள்.

அதல்லாமல் ப்ளானிங் கமிஷனின் கருத்துபற்றி, அந்த முகப்புரைபற்றிக் கூறும்போது, நாம் போட்ட திட்டம் மறுபரிசீலனை செய்யப்பட்டு புதிய நோக்கோடு நோக்க வேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆக புதிய நோக்கோடு இன்று காரியங்களைச் செய்யவேண்டும் என்று ஆயத்தம் செய்து கொண்டிருக்கிறபோது, மக்களுடைய புரட்சிகரமான தன்மையை, வேகமாக நாம் வளரவேண்டும் என்ற நினைப்பிற்குக் குந்தகமாக இருக்கிறது இந்த மாநிலச் சுயாட்சி கேட்பது. நாம் மாநிலச் சுயாட்சி வேண்டுமென்று கேட்பது பொருளாதார வளர்ச்சிக்காக, வறுமையை ஒழிப்பதற்காக நாம் சென்று கொண்டிருக்கும் பாதையில் இருந்து வேறு பாதைக்கு மக்களை அழைத்துச் சென்று பிற்போக்குச் சக்திகளுக்கு ஊட்டம் கொடுக்கும் நிலைதான் ஏற்படும் என்று நான் கருதுகிறேன்.

[திரு. ஏ. ஆர். மாரிமுத்து] [1974 ஏப்ரல் 20

மாநிலச் சுயாட்சி கிடைத்தது என்று வைத்துக் கொள்வோம். ஆனால் நாங்கள் எல்லாம் எதிர்பார்க்கவில்லை கிடைக்கும் என்று. அதிக அதிகாரங்கள் மாநிலங்களுக்கு வருவதும் மாநிலச் சுயாட்சி என்பதும் வேறு, வேறு என்று நான் கருதுகிறேன். அப்படிக் கிடைத்தால் என்னவாகும்? 'கானலை நீரென்றெண்ணிக் கடுவெளி திரியும் மான்போல், வானுறும் இலவுகாத்த மதியிலாக் கிள்ளையே போல்' என்ற பாடலுக்கு ஒப்ப, தண்ணீர் இருக்கிறது, தண்ணீர் இருக்கிறது என்று கானலைப் பார்த்து ஓடி ஏமாந்த மான் போலவும், இலவு காத்து ஏமாந்த கிளி போலவும் நீங்கள் ஏமாறுவீர்கள். மாநிலச் சுயாட்சி வருவதால் பொருளாதார வளர்ச்சி திடீர் என்று வராது. இப்போது என்னென்ன சங்கடங்கள் இருக்கின்றனவோ அவை அத்தனையும் மாநிலச் சுயாட்சி வந்தாலும் இருக்கும். இலவங்காய் பழுக்கப் போகிறது என்று கிளி பார்த்துக்கொண்டிருக்கும். ஆனால் இலவங்காய் பழுக்கப் போவதில்லை. அதேபோல் மாநிலச் சுயாட்சி வந்தால் பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டு விடும் என்று கருத வேண்டாம்.

நான் ஒட்டு மொத்தமாக ஒன்றைக் கூறிக் கொள்வேன். நாட்டில் எங்கும் வேலையில்லாத் திண்டாட்டம் இருக்கிறது. பொருளாதார வளர்ச்சி ஏற்படவில்லை, வறுமை போகவில்லை. இதை யெல்லாம் கருத்தில் கொண்டு இம்மாதிரியான காரியங்களை அல்லது கருத்துக்களைப் பிரச்சாரம் செய்கிறபோது ஓரளவிற்குத் தாற்காலிகமாக ஆதரவு கிடைத்தாலும் கிடைக்கலாம்.

பாடி என்ற பகுதியில் ஒரு போஸ்டர் ஒட்டப்பட்டது. மலையாளிகளை எல்லாம் வெளியேறு என்று பாடியிலே போஸ்டர்கள் ஒட்டியிருக்கிறார்கள். மகாராஷ்டிரத்திலே சிவசேனை—இங்கே இப்படி என்ற போக்கு வளருமேயானால் நிலைமை என்ன ஆகும் ?

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** சிவசேனை தமிழர்களை விரட்டுகிறதோ என்னவோ—மராட்டியத்தின் மாநில அரசு அங்கே மராட்டி பேசுகின்றவர்களுக்குத்தான் 80 சதவிகிதம் வேலை—15 ஆண்டு காலமாக அங்கே வாழ்கிறவர்களுக்குத்தான் வேலை என்ற ஆர்டரைப் போட்டிருக்கிறார்கள்.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** இது எந்த நிலையை ஏற்படுத்தும்? நாம் பார்க்க வேண்டும்.

**மாண்புமிகு திரு. க. அன்பழகன் :** முதலமைச்சர் சொன்னதில் இருந்து மாண்புமிகு உறுப்பினர் தெரிவிக்க வேண்டிய விளக்கம்—இந்தியா முழுவதும் ஒன்று என்று சொல்கிற அதே கட்சியைச் சேர்ந்தவர்கள்தான் மகாராஷ்டிரத்தில் இருக்கிறபோது ஒற்றுமை வாதத்தைப் பேசுகின்ற அவர்களே இந்த அளவுக்குப் போகிற போது, நம்முடைய வாதத்தினால் எதுவும் கெட்டுவிடாது என்பது தான்.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** நான் முன்பே யார் இதைச் செய்தாலும் அது தவறு என்று சுட்டிக் காட்டியிருக்கிறேன். அது கொள்கைக்கு விரோதமானது.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** மன்னிக்கவும். கொள்கை விரோதம் என்று திரு. மாரிமுத்து சொல்லியிருக்கிறார்கள். மத்திய சர்க்கார் அதை ஏற்றுக் கொண்டிருக்கிறது. பிறகு எந்தக் கொள்கைக்கு விரோதமானது?

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** மத்திய சர்க்கார் அதை ஏற்றுக் கொண்டிருக்கிறதா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. இங்கே பாடியில் மலையாளிகளுக்கு விரோதமான போஸ்டர்கள்—இதற்காக நான்கு படைகளே கிளம்பியிருக்கிறதாம்.

ஒன்றை நான் கூறிக்கொள்வேன். இப்போது நமக்கு சுயாட்சி கிடைத்தது என்று வைத்துக்கொள்வோம். இங்கே பலவிதமான வளர்ச்சிகள் ஏற்பட்டு, அண்டை பல மாநிலங்கள் இந்த அளவுக்கு வளர்ச்சி அடையவில்லை என்று வைத்துக்கொள்வோம். நீங்கள் அடிப்படை உரிமையை மாற்ற வேண்டும் என்று கோரவில்லை. இந்தியாவில் பிறந்தவர்கள் எந்த மாநிலத்தில் வேண்டுமானாலும்—எந்த இடத்தில் வேண்டுமானாலும் போய்க் குடியேறலாம். அது அடிப்படை உரிமை. கற்பனையாகவே நினைக்கலாம். நமது மாநிலம் வளர்ச்சி அடைந்த நிலையில் இருக்கிறபோது பக்கத்து மாநிலத்தவர்கள் இங்கே வந்து குடியேறுவதை எப்படித் தடுக்க முடியும்? (திரு. பெ. சீனிவாசன் குறுக்கீடு) தயவுசெய்து குறுக்கிடாதீர்கள். முடிவில் வேண்டுமானால் விளக்கம் தருகிறேன்.

[திரு. எ. ஆர். மாரிமுத்து] [1974 ஏப்ரல் 20

இன்றைக்குத் தஞ்சை மாவட்டத்தை எடுத்துக்கொண்டால் தமிழகத்தின் நெற்களஞ்சியமாக இருக்கிறது. பஞ்சகாலத்தில், பிழைக்க இராமநாதபுரத்தைச் சேர்ந்தவர்கள் எல்லாம் தஞ்சை மாவட்டத்திற்கு வந்துவிடுகிறார்கள். இதன் காரணமாக தஞ்சை மாவட்ட விவசாயக் கூலிகளுக்கே வேலை கிடைக்காமல் போகிற நிலை இருக்கிறது. அதைத் தடுக்க முடியுமா? அப்படி மாநிலத்திற்கு மாநிலம் ஏற்படுகிறபோது எப்படித் தடுக்க முடியும்?

இந்த அளவுக்கு இல்லாமல் எல்லா மாநிலங்களும் சீராக வளர்ச்சி அடைய வேண்டும்—பொருளாதார நிலையில் சமத்துவம் பெற வேண்டும் என்கிற அடிப்படையில்தான் மத்திய சர்க்கார் ஆங்காங்கு இருக்கக்கூடிய நிலைமைகளை ஆராய்ந்தறிந்து நிதி ஒதுக்கம் செய்கிறது. இதில் நீங்கள் கருத்து மாறுபடலாம். அதற்காக மாநில சுயாட்சி என்கிறீர்களே—அதனாலோ—ராஜமன்னார் குழு அறிக்கையின் பேரில் அரசியல் அமைப்பு திருத்தப்படுவதாலோ பொருளாதார முன்னேற்றம் ஏற்பட வழியில்லை என்றுதான் குறிப்பிட விரும்புகிறேன்.

நீங்கள் ஏழைகளின் நலனை ஒட்டுமொத்தமாகக் கருத்தில் கொண்டு அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டும் என்று சொன்னால் புரிந்து கொள்ள முடியும்.

அரசியல் சட்டத்தில் குறிப்பாக எல்லா மக்களுக்கும் வேலை கொடுக்க வேண்டும் என்ற நெறிமுறைக் கோட்பாடுகள் இருக்கின்றன. ஆனால் அதற்காக ஒருவர் அரசு எனக்கு வேலை கொடுக்க வேண்டும் என்று கோர்ட்டுக்குப் போக முடியாது என்று இருக்கிறது. இந்த 37-வது பிரிவையே விட்டுவிட வேண்டும் என்று சிபார்சு செய்வீர்களானால் புரிந்துகொள்ள முடியும்.

அன்றைக்கு திரு. ஆலடி அருணா பேசியபோது குறிப்பிட்டார்கள். அரசியல் நிர்ணயச் சட்டம் நிலப்பிரபுக்கள்—ஜமீன்தார்கள் ஆகியவர்களைக் கொண்டு உருவாக்கப்பட்டது என்றார்கள். அது அன்றிருந்த நிலை. இன்றைக்கு அந்தச்

சட்டத்தை வைத்துக்கொண்டு—இன்றுள்ள நிலைமையில் என்ன என்ன சேர்க்க வேண்டுமென்று சொல்கிறீர்கள்—இப்படி ஏதாவது திருத்தம் கொடுத்தால் புரிந்துகொள்ள முடியும்.

இன்றைக்கு நாட்டில் நாம் பார்க்கிறோம். வசதி உள்ளவர்களுக்கே மேலும் மேலும் பல வசதிகள் கிடைக்கின்றன. ஒருவர் உத்தியோகத்தில் இருப்பார். தொழிற்சாலை இருக்கும்—விவசாயம் செய்வார்—ஆக ஒரு துறையில் வருமானம் உள்ளவர்களுக்கே பல துறைகளில் இருந்தும் வருமானம் வருகிற நிலையைப் பார்க்கிறோம். இந்த நிலை மாற—வசதி அற்றவர்களுக்கு முன்னுரிமை வழங்கப் படும் என்றால் புரிந்துகொள்ளலாம். டவுன் டிராடனாக கீழே உள்ளவர்களுக்குதான் முதலில் வேலைவாய்ப்பு என்று செய்யுங்கள்—புரிந்துகொள்ள முடியும்.

இன்னும் பெடரல் செக்டாரைப்பற்றிச் சொன்னார்கள். அதை எல்லாம் பேச எனக்கு நேரம் இல்லை.

மிச்ச அதிகாரம் பற்றிச் சொன்னார்கள். அது இன்னது என்றே தெரியாத நிலையில் அதைப்பற்றி சண்டை போடுவானேன். (திரு. வி. கிருஷ்ணமூர்த்தி குறுக்கீடு)

**மாண்புமிகு பேரவைத் தலைவர்:** குறுக்கீடு வேண்டாம். முடிவில் கேட்டால் விளக்கம் தருவதாகச் சொல்லியிருக்கிறார்கள். நடுவில் குறுக்கிட வேண்டாம்.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து:** ரஷ்ய நாட்டைப்பற்றிக் குறிப்பிட்டார்கள். அங்கே இருப்பது ஒரு கட்சி ஆட்சிதான்—கட்சித் தலைவர்களுக்குத்தான் அங்கு மதிப்பு, ராஜமன்னார் குழு அறிக்கையிலேயே, இங்கே மத்தியில் இருக்கிற ஒரு கட்சியே மாநிலங்களில் இருந்து வருகிறபோது சங்கடங்கள் எழவில்லை, மத்தியில் ஒரு கட்சி, மாநிலங்களில் வேறு கட்சி என்கிற நிலை வருகிறபோதுதான் சங்கடங்கள் எழுகின்றன என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆக ரஷ்யாவில் ஒரே கட்சி ஆட்சி இருப்பதனால் அதை நாம் எடுத்துக் கொள்ள முடியாது என்று கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்து ப்ளானிங் கமிஷனைப்பற்றி இதில் குறிப்பிட்டிருக்கிறார்கள். ப்ளானிங் கமிஷனைப்பற்றிச் சொல்லியிருப்பது . . .

The Planning Commission should be placed on an independent footing without being subject to control by the Union Executive or to political influences. To secure this objective, it should be placed on a statutory basis by Parliament enacting a law providing for the establishment of a planning Commission.

The Planning Commission to be established by law should consist of only experts in economic, technical and agricultural matters and specialists in other categories of national activity. No Members of the Government of India should be on it. The law to be made in this behalf should deal with the tenure, term of office, etc., etc.

(முற்பகல் 9-30)

அப்படிப் போய்க் கொண்டிருக்கிறது. தலைவர் அவர்களே, பிளானிங் என்பது அரசியல் கொள்கையை அடிப்படையாக வைத்து செய்யப்பட வேண்டிய ஒன்று. திட்டம் என்பது பல்வேறு முறையில் இருக்கலாம். ஒரு முதலாளித்துவ அமைப்பு முறையில் திட்டம் போடலாம், சோஷலிச அமைப்பு முறையில் திட்டம் போடலாம். இந்த இரண்டிற்கும் இடையிலிருந்து திட்டம் போடலாம்.

கொள்கை ரீதியாக அமுலாக்க வேண்டுமென்று கூறும்போது ஒரு கோர்ட் மாதிரி அந்த பிளானிங் கமிஷனுக்கு ஒரு அதிகாரம் வைத்து, அவர்களே முடிவு செய்யுங்கள் என்று நாம் விட்டு விடுவோமானால், ஆட்சியில் வருகின்ற கட்சி தன்னுடைய கொள்கை ரீதியாக ஒரு திட்டம் போடுவது இயலுமா என்பதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். அதிலே மத்தியில் இருக்கின்ற அமைச்சர்களும், அரசியல் தலைவர்களும் அதில் யாரும் பங்கு கொள்ளக் கூடாது என்று வைத்துவிட்டால் அந்த அதிகாரிகள் சொல்லக் கூடிய திட்டத்தைத்தான் ஒத்துக் கொள்ள வேண்டுமா ? நாம் கொள்கை ரீதியாக, ஒத்திப் போடப்படக்கூடிய அமைப்பு இருக்க வேண்டுமானால் பிளானிங் கமிஷன் எவ்விதம் இருக்க முடியும் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

*1974 ஏப்ரல் 20] [திரு. ஏ. ஆர். மாரிமுத்து]*

பிளானிங் கமிஷனில் இருக்கின்ற உறுப்பினர்களே பல்வேறு கருத்து வேறுபாடுகளை உடையவர்களாக இப்பொழுது இருக்கிறார்கள். ஆகையினால் எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் அவர்கள் கொள்கை சரியான முறையில் அமுலாகும் விதத்தில் திட்டம் போட வேண்டுமானால் அவர்கள் அதில் உறுப்பினராக இருக்க வேண்டும், அதற்கு ஏற்றவர்களை அவ்வப்பொழுது மாற்றி அமைப்பதற்கான ஒரு நிலைமை அந்த பிளானிங் கமிஷனில் மத்திய சர்க்கார் இல்லை என்றால் என்னவாகும் என்பதைச் சிந்திக்க வேண்டும். அப்படி இருக்குமானால் யார் பிளானிங் கமிஷனில் இருப்பார்களோ, அவர்கள் கொள்கையை வகுத்துக் கொடுப்பார்களே தவிர, அரசியல் கட்சிக் கொள்கையை வகுக்க முடியாது. அரசியல் கட்சி தன் கொள்கையை அமுலாக்க முடியாது.

ஆகையினால் ஏன் அது அப்படி இருக்க வேண்டுமென்று இப்படிப் போட்டார்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. எதற்காக என்றால் பிளானிங் கமிஷனில் இருக்கின்ற அரசியல் தலைவர்கள், அந்த அரசியல் தலைவர்களைவிட—நாமும் அரசியல் தலைவர்கள்தான்—நாம் மட்டமானவர்களா என்ற எண்ணத்தில் இதைப் போட வேண்டுமே தவிர வேறு எண்ணத்தில் இது போடப் பட்டது அல்ல என்று இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** இதில் ஆணைக் குழுவின் பணி மாநிலங்கள் உருவாக்கும் திட்டங்கள் குறித்து அறிவுரை வழங்குவதாக இருக்கும் என்று அதில் இருக்கிறது. ஆகவே அங்கு அரசியல் சார்பில்லாதவர்கள், பொருளாதார வல்லுனர்கள், மேதைகள் இருந்து, அவர்கள் ஒவ்வொரு மாநிலத்தின் வளர்ச்சிக்கும் அரசியல் சார்புடைய இந்தக் கொள்கை ரீதியான திட்டங்களை வகுப்பார்களானால் அந்தத் திட்டங்களைப் பற்றி அறிவுரை வழங்க அந்தக் குழு இருக்கலாம் என்பது தான் கருத்து.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** தலைவரவர்களே, அந்தப் பிளானிங் கமிஷன் எந்த அதிகாரமுமில்லாமல் அறிவுரை செய்யக் கூடிய பிளானிங் கமிஷன் ; அங்கே இருக்க வேண்டுமானால், அந்தந்த

மாநிலமும் தனக்கு ஏற்றபடி சில தொழில்களைப்பற்றித் திட்டங்கள் போட்டு வலியுறுத்தப்படும். இதைப்பற்றி பின்னால் சொல்ல ஆசைப்படுகிறேன்.

இன்றைக்குப் பிளானிங் அண்ட் டெவலப்மெண்ட் என்பதை பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதிலே 1951-ம் ஆண்டு தொழில் வளர்ச்சியும், ஒழுங்கு முறைச் சட்டம் என்ற மத்திய சட்டத்தை ரத்து செய்ய வேண்டுமென்று சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது. ராஜமன்னார் கமிட்டி ரிப்போர்ட்டில் ஒரு மூன்று சிபார்சுகள் செய்திருக்கிறார்கள்.

அதிலே இவர்கள், அரசு, எடுத்துக் கொண்டு சிபார்சு செய்திருப்பது மத்திய அரசுக்குப் பாதுகாப்பு சம்பந்தப்பட்ட துறையை மட்டும்தான் வைத்துக் கொள்ளுவதற்கு உரிமை இருக்க வேண்டுமே தவிர பாக்கி எல்லாத் தொழில்களும் மாநிலங்கள் செய்வதற்கு விட்டுவிட வேண்டும் என்று அந்தச் சிபார்சில் கூறப்பட்டிருக்கிறது.

அதோடு கூட அடுத்த இடத்தில் ஆயில் பீல்ட்ஸ், மினரல்ஸ் இவையெல்லாம் ஸ்டேட் சப்ஜெக்டாக அந்தந்த மாநிலங்களுடைய உரிமையாக்கப்பட வேண்டுமென்றும் இதிலே சிபார்சு செய்யப் பட்டிருக்கிறது. இது இரண்டையும் கணக்கில் எடுத்து நாம் விவாதிக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

தேசத்தினுடைய ஒட்டு மொத்த வளர்ச்சி, தேசத்திலே ஏற்பட்டிருக்கின்ற மூலதனம் சரியான முறையில், தேவையான அளவுக்குப் பயன்படுத்த வேண்டுமென்பதுதான் பிளானிங் என்று சொல்லுவது. திட்டங்கள் என்பது யாரோ அமுக்கிப் பிடிப்பதற் கான ஏற்பாடுகள் அல்ல. திட்டம் என்பது நமக்கு இருக்கின்ற மூலதனம், வசதிகளை வைத்து, அதிலே எந்தத் தொழிலை முன்னால் ஆரம்பிக்க வேண்டும், எது பின்னால் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். மக்கள் தேவை என்ன, என்று பார்த்து அந்தத் தேவையை அனுசரித்து திட்டமிடுவதுதான் பிளானிங்.

*1974 ஏப்ரல் 20] [திரு. ஏ. ஆர். மாரிமுத்து]*

அந்தத் திட்டத்தை நாம் ஏற்றுக் கொண்டிருக்கும்போது, அந்தத் திட்டத்திற்கு முரணான காரியத்தைச் செய்யக் கூடியதாக இந்தச் சிபாரிசு இருக்கிறது என்பது என் கருத்து.

தலைவர் அவர்களே, மத்தியில் இருக்கின்ற அரசு தொழில் வளர வேண்டும் என்று தான் விரும்புகிறது. வளர வேண்டாம் என்று விரும்பவில்லை. ஆனால் எப்படி வளர வேண்டும் என்கின்றபோது, அந்தந்தப் பிரதேசங்களுக்கு ஏற்றவாறு அந்தத் தொழிலை அமைக்க வேண்டும் என்று மாநிலங்களைக் கட்டுப்படுத்துகின்றது.

இன்றைக்கு ஒன்றை நான் கூறிக் கொள்வேன். தமிழகத்தில் நூற்பு ஆலைகள் அதிகமாக இருக்கின்றன. நம்முடைய நூற்பு ஆலைகளின் நூல் 75 சதவிகிதம் பிற மாநிலங்களுக்கு விற்றுத்தான் ஆக வேண்டும். நம்முடைய கைத்தறியோ, இங்கே இருக்கக் கூடிய நெசவாலைகளோ 25 சதவிகித நூலைத்தான் உபயோகப்படுத்த முடியும் என்று கருதுகிறேன். நம்முடைய நூல் மார்க்கெட், பிற மாநிலங்கள், குஜராத், பம்பாய் போன்ற மாநிலங்களுக்கு 75 சதவிகிதம் நூல் வழங்குகிறது. இது மத்திய அரசு அந்தந்த மாநிலங்களுக்கு அதிகாரத்தைக் கொடுத்து, உங்கள் இஷ்டப்படி தொழில்களை ஆரம்பித்து விடுங்கள் என்று விட்டு விடுமானால் மகாராஷ்டிரத்தில் இருக்கின்றவர்கள், குஜராத்தில் இருக்கின்ற வர்கள், நூற்பு ஆலைகள் அதிகமாக ஏற்பட வேண்டும், இப்போது 5 கோடி, 10 கோடிக்கு என் தமிழகத்திலிருந்து நூல் வாங்க வேண்டும், நாம் இங்கே நூற்பு ஆலைகளை வைத்து விடுவோம், இங்கேயுள்ள எல்லாப் பேர்களுக்கும் வேலை கொடுக்கலாம் என்ற முடிவு செய்து அந்த நூற்பு ஆலைகள் அமைக்கப்பட்டால், இங்கே என்ன ஆவது ? இந்த நூற்பு ஆலைகளில் முடக்கப்பட்ட பணம், வேலையிலிருக்கும் தொழிலாளிகள், உற்பத்தி செய்யப்பட்ட நூல் இதெல்லாம் விரயமாகும்.

தொழில் வளர்ச்சி வேண்டுமென்றால், எந்தத் தொழிலை எந்தப் பகுதியில் செய்ய வேண்டும் என்ற பாதுகாப்பு வேண்டும். தொழில் பாதுகாப்புகாகக் கூட்டக் காப்பு வரிக் கமிஷன் என்று போடுகிறோம். வெளிநாட்டிலிருந்து ஒரு சாமானை வரவழைத்தால் அதற்கு ட்யூடி போடுகிறார்கள்? ஏன் போடுகிறார்கள் உள்நாட்டில்

அதே சாமான் தயாரிக்கப்பட்டு, விலை கூடுதலாகயிருந்து, வெளி நாட்டிலிருந்து வருகின்ற அதே சாமான் குறைவான விலையாக இருக்குமானால், இந்தத் தொழில் பாதிக்கப்படும். அதற்காக ட்யூடி போட்டு, இதற்கு அதிக விலை வைத்தால், இந்த நாட்டு பொருட் களுக்குக் கிராக்கியிருக்கும் என்ற காரணத்தினால் போடுகிறோம்.

இதை நம் அரசாங்கத்தில் முறையாக வைத்துக் கொண்டு, உலகத்திலுள்ள எல்லா அரசாங்கமும் இதைச் செய்கிறார்கள். ஆனால் இந்த மாதிரி மத்திய அரசு கட்டுப்படுத்தாவிட்டால் வளர்ச்சியடைந்த பகுதியில் இருக்கின்ற தொழில்கள் என்ன வாகும் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

அடுத்து ஆங்காங்கே இருக்கின்ற கனிவளங்கள், ஆயில் போன்றவைகள். அந்தந்த மாநிலத்திற்குச் சொந்தமாகி, அவர்கள் பிடிப்பிற்குள் வருமேயானால் நமக்கு என்ன சங்கடம் இருக்கிறது என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இன்றைக்கு நமக்கு நிலக்கரி கிடையாது. இந்த நிலக்கரி வெளி மாநிலங்களிலிருந்து தான் வரவேண்டும். அந்தந்த மாநிலத்திற்கு அந்த நிலக்கரி சொந்தம் என்று வைத்து விடுவோமானால், அவர்கள் இஷ்டப்படி விலை வைத்து, அவர்கள் இஷ்டத்திற்கு விற்கும் நிலையில், அவர் களிடம் கெஞ்சி வாங்க வேண்டிய நிலை இருக்குமானால் எத்தகைய சங்கடம் மாநிலங்களுக்கு ஏற்படும் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இன்றைக்கு இருக்கின்ற அமைப்புப்படி நான் இங்கிருந்து கூற முடியும். சிங்கரேணியில் இருக்கின்ற நிலக்கரியில் நமக்குப் பங்குண்டு, நான் ஒரு இந்தியன், எனக்கு அதிலே பங்குண்டு. வங்கத்திலே இருக்கின்ற உருக்காலையில் எனக்குப் பங்குண்டு. எனக்குப் பங்கு கிடைக்காவிட்டால் நான் விட மாட்டேன், என்று கேட்பதற்கான உரிமை இன்றைக்கு இருக்கிறது. இதை மாநிலங் களுக்குச் சொந்தமாக்கப்படுமானால் எனக்கு உரிமை என்று கேட்பதற்கு முடியாது. ஐயா கொஞ்சம் கொடுங்கள் என்று கேட்கக்கூடிய துர்ப்பாக்கிய நிலைக்கு இந்தத் தமிழகம் ஆக வேண்டுமா என்று கேட்கிறேன்.

1974 ஏப்ரல் 20] [திரு. ஏ. ஆர். மாரிமுத்து]

இன்றைக்கு நமக்கு எண்ணெய் கிடையாது. ஆராய்ச்சி பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். தமிழகத்தில் எண்ணெ கிடைக்க வில்லை. இன்றைக்குப் பம்பாய் ஹைசீஸ் கடலின் பக்கத்தில் எண்ணெய் இருக்கிறது. அந்த எண்ணெயில் நமக்குப் பங்கு வேண்டுமா, வேண்டாமா? அவர்களுக்குச் சொந்தம் என்று சொன்னால் என்னவாகும்? அரபு நாட்டில் எண்ணெய் அதிகம் உற்பத்தி செய்கிறார்கள். அரபு நாட்டிற்கும், இஸ்ரேல் நாட்டிற்கும் யுத்தம் ஏற்பட்டதின் விளைவாக, எண்ணெய் விலையை ஏற்றியதின் காரணமாக, எவ்வளவு சங்கடங்களை நாம் அனுபவித்திருக்கிறோம். பம்பாய் மாநிலத்தில் உற்பத்தி ஆகக் கூடிய எண்ணெய் அவர் களுக்குத்தான் சொந்தம் என்று ஆகி, பம்பாய் மாநிலத்திலே இருக்கின்றவர்கள் அந்த எண்ணெ விலையை உயர்த்துவார்களானால், இங்கேயிருக்கின்ற நிலை என்னவாகும் என்பதைத் தயவுசெய்து சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இந்த மாதிரி தொழில் உறவை, தொழில் வளர்ச்சியை திட்ட மிட்டு, எல்லா இடங்களுக்கும் பரவலாக வளர்ச்சியயடைவதற்கு மத்திய அரசாங்கத்திற்கு அதிகாரம் இருந்தாலொழிய ஒரு பக்கத்தில் வளர்ச்சி அடைந்து, ஒரு பக்கத்தில் தாழ்ந்து, நாட்டில் தொழில் வளர்ச்சிக்குப் பாதகம் ஏற்படும்.

ஆகையினால் இந்தத் தீர்மானம் நாட்டிற்குத் தீமை பயக்கக் கூடியது என்ற காரணத்தினால் இது ரொம்ப மோசமானது என்பதை இங்கே தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்து, தலைவர் அவர்களே, இந்த மாநில எல்லையை இப்பொழுது மாற்றி அமைக்கப்பட வேண்டும் என்ற ஷரத்தைத் திருத்த வேண்டுமென்று கூறியிருக்கிறார்கள். என்ன அவசியம் என்பது என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

என்ன காரணத்திற்காக இதைக் கேட்கிறார்கள் என்று பார்க்கின்றபோது இந்த மாறன் அவர்களுடைய புத்தகத்தில் படித்தேன். இதை நான் முன்னாலேயே குறிப்பிட்டேன். நீங்களெல்லாம் கற்பனையில் ஒன்றைச் செய்து, கற்பனையில் தயாரித்தது இந்தத் தீர்மானம் என்று. இதை நான் படிக்கிறேன்.

பக்கம் 170. அரசியல் சட்டத்தில் பார்லிமெண்டிற்கு ஒரு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதைப் பற்றி அவர் விமர்சிக்கிறார். மத்திய அரசு தன்னுடைய அதிகாரத்தைப் பயன்படுத்தி நம் தமிழ்நாடு முழுவதும் துண்டு துண்டாகப் போடப்பட்டு, பக்கத்து மாநிலங்களுடன் இணைக்கப்படலாம். அல்லது தமிழ் நாடு இனி ஒரு மாநிலமே அன்று, பாண்டிச்சேரி போல், மத்திய அரசுக் குட்பட்ட பிராந்தியம் என்று ஆக்கப்படலாம். அரசியல் பகைமை காரணமாக இப்படியெல்லாம் நடக்காது என்பது என்ன உறுதி ? எதற்காக நான் இதைக் குறிப்பிடுகிறேன் என்றால் எல்லாம் பய உணர்விலேயே கற்பனையின் பால் வந்த உணர்விலேயே வந்த தீர்மானமாக இது இருக்கிறது. மத்திய அரசு மக்களுடைய சம்மதம் இல்லாமல் மாநில அரசின் சம்மதம் இல்லாமல் அப்படிச் செய்ய முடியாது. அவர்கள் ஏற்கனவேகூட மகாராட்டிரத்தைப் பொறுத்தவரையிலே ஒரு கமிஷனைப் போட்டார்கள், அவர்கள் ஒருவருக்கொருவர் ஒத்துவராமல் இருக்கிறார்கள். மத்திய அரசு தேவையில்லாமல் ஏன் அதைச் செய்யப்போகிறது, வழியிலே போகிற ஓணானைப் பிடித்துத் தொண்டையிலே விட்டுக்கொண்டு குத்துது, குடையுது என்று சொன்னாம், அதுபோல தேவையில்லாமல் ஏன் அவர்கள் செய்யப் போகிறார்கள். அவர்கள் அப்படிச் செய்யமாட்டார்கள். இது நீங்களாகச் செய்து கொள்கிற ஒரு கற்பனைதான்.

மாண்புமிகு திரு. க. அன்பழகன் : மாண்புமிகு உறுப்பினர் சொன்னதைப் போல் மாநில சுயாட்சிப் புத்தகத்தில் அந்தக் கருத்து எந்த இடத்திற்குப் பயன்படுத்தப்பட்டதோ அந்த இடத்திற்குப் பொருத்திக் கொள்ளாமல் வேறு இடத்திலே அவர்கள் பயன்படுத்திக் கொண்டு குத்துது, குடையுது என்று சொல்வதில் பொருள் இல்லை. சரியான பாதுகாப்பு இருக்க வேண்டுமென்ற எண்ணத்திலேதான் சொல்லப்பட்டிருக்கிறதே தவிர, அதை வேறு இடத்திற்குப் பொருத்திக்கொள்ளக் கூடாது.

1974 ஏப்ரல் 20]

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** தேசிய ஒருமைப்பாடு கெடக் கூடாது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பொது மக்கள் கருத்தையறியாமல் அவர்கள் ஏன் அப்படிச் செய்யப் போகிறார்கள் ? அப்படிச் செய்தால் பொதுமக்கள் அவர்களை விடமாட்டார்கள்.

அடுத்தபடியாக சென்ட்ரல் ரிசர்வ் போலீஸ்பற்றி இதிலே சொல்லப்பட்டிருக்கிறது. மத்திய போலீஸ் என்பதை அவர்கள் மாநில அரசுகள் கேட்டால்தான் கொடுப்பார்கள், இல்லை யென்றால் அவர்கள் லா அண்ட் ஆர்டரில் தலையிடுவதில்லை, லா அண்ட் ஆர்டர் என்பது மாநில அரசிற்குச் சொந்தமான நேரடியான பார்வையிலே இருக்கக்கூடியதாகும், ஆகவே அவர்கள் தலையிட மாட்டார்கள். மத்திய அரசினுடைய சொத்து இங்கே இருக்கிறது என்று வைத்துக்கொள்ளுங்கள், ரயில்வே இருக்கிறது, அதற்குப் பாதுகாப்புத் தருவதற்காக, அவற்றிற்குப் பாதுகாப்பு மாநில அரசு கொடுக்கவில்லை யென்றால் அவர்கள் சொத்தை அவர்கள் காப்பாற்றிக் கொள்வதற்கு உரிமை இருக்கிறதா இல்லையா ?

**மாண்புமிகு திரு. செ. மாதவன் :** மத்திய அரசின் சொத்துக் களைப் பாதுகாப்பதற்கு தனிப்படையை வைத்திருக்கிறார்கள். இது சென்ட்ரல் ரிசர்வ் போலீஸ் என்று வைத்து இருக்கிறார்கள்.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** சென்ட்ரல் ரிசர்வ் போலீஸ் என்று வைத்திருந்தாலும்கூட அவரவர்கள் கேட்டால்தான் அனுப்பு கிறார்கள், இல்லையென்றால் அனுப்பமாட்டார்கள். அவர்கள் சொத்துக்களைப் பாதுகாப்பதற்காகத் தனிப்படையை வைத்திருக் கிறார்கள். மாநிலங்களுக்குத் தேவைப்பட்டால் அனுப்பப் போகிறார்கள், இல்லாவிட்டால் அனுப்ப மாட்டார்கள். மத்திய சர்க்காருடைய பிராப்பர்டி சம்பந்தமாக யூனியன் லிஸ்டில் உள்ளதைப்பற்றி இவர்கள் ரொம்பப் பிரமாதமாகச் சொல்லி யிருக்கிறார்கள்.

'Property of the Federal Government and the revenue therefrom, but as regards property situated in a State, subject to legislation by the State',

இது விளக்கமாக இல்லை. என்ன சட்டத்தைப் பண்ணப் போகிறார்கள் என்று தெரியவில்லை. வரி விலக்குக் கூடாது என்று ராஜமன்னர் குழு அறிக்கையிலே சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இதிலே கூடாது என்று சொல்லி

Subject to the legislation by the State.

என்று சொல்லியிருக்கிறார்கள். இது கற்பனை. இது கற்பனை என்று வந்ததால் நானும் கொஞ்சம் கற்பனை செய்து பார்ப்போமே என்று சொல்கிறேன், மாநில சர்க்கார், மத்திய சர்க்காருக்குச் சொந்தமான சொத்தை எங்களுக்குத் தேவையாக இருக்கிறது என்று சொல்லி எடுத்துக் கொள்கிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். அப்போது மாநிலத்திற்கும் மத்திய சர்க்காருக்கும் உறவு என்ன ஆகும் என்பதை நாம் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். . .

**மாண்புமிகு திரு. செ. மாதவன் :** அதிலே அவர்கள் என்ன தவறு சொல்கிறார்கள் என்று புரியவில்லை.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** சொத்துபற்றி ஏன் சட்டம் இயற்ற வேண்டும்?

**மாண்புமிகு திரு. செ. மாதவன் :** மத்திய சர்க்கார் போட்டிருக்கக்கூடிய இன்றைக்கு இருக்கக்கூடிய அரசியலமைப்புச் சட்டத்திலே இருக்கின்ற பிரிவுதான். அதைப் போட்டிருக்கிறோம்.

**திரு. ஏ. அர் மாரிமுத்து :** ராஜமன்னர் குழு அறிக்கையிலே தெளிவாக இருக்கிறது. நான் அவ்வளவு தூரம் சட்டத்தைப் படிக்கவில்லை. கிராமத்திலிருந்து வந்தவன்தான்.

Sea-Bed under territorial water.

என்பதைப் பொறுத்தவரையில் சமுத்திரத்திலே இருக்கிற அளவில் 3 மைல் தூரம் என்று சொல்கிறார்கள், மாநில அரசுக்குச் சொந்தமாக்கப்படவேண்டுமென்று சொல்கிறார்கள். இப்பொழுது யார் உங்களைக் கட்டுப்படுத்துகிறார்கள்? மத்திய அரசு கட்டுப் படுத்த முடியாது. கடலுக்குள் மூன்று மைல் போவதிலே என்ன தடை இருக்கிறது? மறுபடியும் நான் கற்பனையிலே புகவிரும்ப வில்லை.

*1974 ஏப்ரல் 20]* *[திரு. எ. ஆர். மாரிமுத்து]*

ஆட்சிமொழி பற்றி ரொம்பப் பேசப்பட்டது. நான் அதிகமாகச் சொல்ல விரும்பவில்லை. இங்கே சிபாரிசு செய்யப் பட்டிருக்கின்ற ஒன்றைப்பற்றி மட்டும் கூறிக்கொள்ள ஆசைப் படுகிறேன்.

'English should continue as the official language in all the Union Goverment departments including Central Secretariat and for purposes of communication between Centre and States' . . . இந்த மாநிலத்திலே இருக்கின்ற எங்களுக்கு ஆங்கிலம் வேண்டு மென்றுதான் நீங்கள் சொல்லலாமேதவிர யு.பி.-யில் இருக்கிறவர் களிடத்திலே நீங்கள் ஆங்கிலத்திலேதான் கடிதத் தொடர்பு வைத்துக்கொள்ள வேண்டும் என்று சொல்வதற்கு உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது ? ஆங்கிலம்தான் வேண்டும் எங்க ளுக்கு என்று நீங்கள் வாதாடுகிறபோது அவர்களும் அவர் களுடைய மாநிலத்திலே அவர்கள் வேண்டியதை வைத்துக் கொள்ளலாமே தவிர, நீங்களும் ஆங்கிலம்தான் வைத்துக் கொள்ள வேண்டுமென்று நாம் எப்படிச் சொல்ல முடியும் ? நீங்கள் ஆங்கிலத்தை வைத்துக் கொள்ளுங்கள். அங்கே அவர்கள் இந்தியை வைத்துக்கொள்கிறார்கள் என்றால் அது கூடாது எல்லோரும் ஆங்கிலம்தான் வைத்துக்கொள்ள வேண்டும் என்று எப்படிச் சொல்ல முடியும் ? பொதுவாக எல்லா மாநிலங்களுக்கும் குறை பாடுகள் இருக்கின்றன, நிதிவசதிக் குறைபாடுகள் இருக்கின்றன என்பது உண்மை. இந்த மாநிலம் மட்டுமல்ல, எல்லா மாநிலங் களிலேயும் அந்தக் குறைபாடு இருக்கிறது. சுதந்திரம் கிடைத்து மாநிலங்கள் அமைக்கப்பட்ட பிறகு எல்லா மாநிலங்களும் அந்த பைனான்ஸ் கமிஷனுக்குக் கொடுத்த ரிப்போர்ட்டைப் பார்த்தால் எங்களுக்கு நிதி வசதி பற்றாது, வரியைப் பங்கிட்டுக் கொடுக்கின்ற முறை சரியல்ல என்று ஒவ்வொரு மாநிலமும் சொல்லிக்கொண்டுதான் வருகின்றது.

1967-க்குப் பிறகு உங்கள் கட்சி ஆட்சிக்கு வந்ததற்குப் பிறகு தான் நீங்கள் கேட்டீர்கள் என்பதல்ல, அதற்கு முன்னாலேயே இருந்த அரசுகளும் கேட்டுக் கொண்டுதான் வந்திருக்கிறார்கள். நாடு முழுவதும் பற்றாக்குறை இருக்கிறது, மத்திய அரசினிடத்திலே பற்றாக்குறை இருக்கிறது, மாநில அரசு

களிடத்திலே பற்றுக்குறை இருக்கிறது. இம்மாதிரி இருக்கின்ற சிரமங்களுக்காக என்ன செய்யவேண்டும் என்பதைப் பார்க்க வேண்டும்.

இதற்காக நான் ஒரு உதாரணத்தைச் சொல்லலாம் என்று நினைக்கிறேன். எனக்கு ஆஸ்த்மா நோய் உண்டு. எப்படி வருகிறது என்று அடிப்படையிலே கண்டுபிடிக்கப்படவில்லை. சுவாசக் குழாயிலே சளி வந்துவிடுகிறது. அந்தச் சளியைப் போக்குவதற்கு மருந்துகொடுப்பதற்குப் பதிலாக அந்தச் சுவாசக் குழாயை வெட்டியெறிந்துவிடவேண்டுமென்று டாக்டர் கலைஞர் அவர்கள் சிபாரிசு செய்திருக்கிறார்கள். அந்தச் சிபாரிசை நான் கேட்டால் என் உயிர் என்ன ஆகும்? அரசியல் சட்டத்திலே இருக்கின்ற முக்கியமான பகுதிகளை எடுத்துவிடவேண்டுமென்று சொல்வது, மாநில அரசுகளுக்கு இருக்கின்ற சங்கடங்களுக்குப் பரிகாரம் காணுவதற்குப் பதிலாக, அதற்காக லங்க்ஸையே வெளியே எடுத்துப் போடுவது என்பது . . .

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** சில பேர்களுக்கு இரண்டு சுவாசப் பையிலே ஒன்றை எடுத்துவிட்ட பிறகும்கூட ஒன்றை வைத்துக்கொண்டே உயிரோடு வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** நான் பார்த்துத்தான் சொன்னேன், காற்றுக் குழாயைத்தான் நான் சொன்னேனே தவிர சுவாசப் பையைப்பற்றிச் சொல்லவில்லை, காற்றுக் குழாய் என்றுதான் சொல்லியிருக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** பிரிவினை கோருகின்ற தீர்மானமாக இருந்தால் மாண்புமிகு உறுப்பினர் திரு. மாரிமுத்து அவர்கள் சொல்கிற உதாரணம் பொருத்தமாக இருக்கும். ஆனால் பிரிவினைத் தீர்மானம் இங்கே வைக்கப்படவேயில்லை, அப்படியிருக்கும்பொழுது சுவாசக் குழாயை வெட்டிவிடவேண்டுமென்று சொல்வதாகச் சொல்வது சரியல்ல.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** நாட்டை வெட்டுவதைப்பற்றிச் சொல்லவில்லை, அரசியல் சட்டத்திலே இருக்கின்ற சுவாசக் குழாயை வெட்டிவிட வேண்டுமென்று சொல்கிறீர்கள். அப்படிச்

1974 ஏப்ரல் 20] [திரு. ஏ. ஆர். மாரிமுத்து]

செய்தால் மத்திய அரசை பொம்மையாக கைகட்டி உட்கார்ந்து கொண்டிருக்கச் செய்யப்போகிறீர்களா? இவைகளை இப்படிச் செய் என்று சொல்ல அவர்களுக்கு அதிகாரம் இல்லை என்ற அந்த நிலைதான் ஏற்படும். ஆகவே, தலைவரவர்களே, இந்த அரசுக்கு நான் சொல்லிக்கொள்வேன் . . .

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** கொஞ்சம் ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். நோயைப்பற்றி அவர்கள் சொன்னதால் நான் சொல்கிறேன், உதாரணங்களைப் பல காரியங்களுக்குப் பலவிதங் களில் சொல்லலாம். அவர்கள் சுவாசப் பையைப்பற்றிச் சொன்னார்கள். சிலருக்கு இருதயத்திலே நோய் வருகிறது. பெரிய டாக்டர்கள் கண்டுபிடித்து, வேறொரு வால்வை வைத்து, அதற்குள்ளே குடைந்து வைத்து அந்த நோயாளி உயிர் பிழைக்கின்ற அளவிற்கு ஒட்ட வைத்து, இருதயத்தைத் தொடுவது என்ற அளவிற்கு வந்திருக்கிறது.

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து:** இருதயத்தையே தொடக்கூடாது என்ற வகையிலே இருதயத்தையே எடுத்துவிடுவது மாதிரி, இந்த கான்ஸ்டிட்யூஷனிலே சில ஆர்டிகிளை எடுத்துவிடச் சொல்வது இருக்கிறது. ஆர்டிகிள்கள் 256, 357, 358 இவைகளை எடுத்து விட்டால் அந்த கான்ஸ்டிட்யூஷனில் ஒன்றுமேயில்லை என்பது என்னுடைய கருத்து.

**திரு. கோவை செழியன் :** அறுவை சிகிச்சை செய்யலாம் என்பதை ஒத்துக்கொள்கிறீர்களா?

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து :** அறுவை சிகிச்சைகூட நோயாளியின் நிலைமையைப் பார்த்துத்தான் செய்ய வேண்டும். இரத்தக் குறைவு இருந்தால் ஒத்திப் போட்டுத்தான் ஆக வேண்டும்.

திரு. பழனிவேல் ராஜன் அவர்கள் பேசும்பொழுது குறிப் பிட்டார்கள், மாநில சுயாட்சி என்ற பெயரில் மதிப்பிற்குரிய முதலமைச்சர் டாக்டர் கலைஞர் அவர்கள் ஒரு சுடரை இங்கே கொளுத்தி வைத்திருக்கிறார்கள். ஆகவே, அந்தச் சுடர் வெற்றி பெற்று சுயாட்சி வரப்போகிறது என்று குறிப்பிட்டார்கள். நான்

பணிவோடு கூறிக்கொள்வேன், இவர்கள் இந்த நாட்டின் ஒற்றுமையை, பொருளாதார வளர்ச்சியைக் குலைப்பதற்காகத் தீ வைத்திருக்கிறார்கள், நிச்சயமாக இந்தத் தீ அணைக்கப்படும், அதை அணைப்பதற்கு நாட்டிலே உள்ள பாட்டாளி மக்கள், உழவர் பெருங்குடி மக்கள் அத்தனைபேரும் உயிரைக் கொடுப்பதற்கும் தயாராக இருக்கிறார்கள் என்று கூறி என்னுடைய உரையை முடிக்கிறேன்.

**திரு. ஏ. ஆர். பெருமாள் :** பேரவைத் தலைவரவர்களே, இந்த மாமன்றத்தில் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பல தீர்மானங்களை இதுவரையில் நிறைவேற்றியிருந்தாலும்கூட இன்றைக்கு நாம் நிறைவேற்ற இருக்கின்ற மாநில சுயாட்சித் தீர்மானம் தமிழக சட்டமன்ற வரலாற்றிலேயே ஒரு புதிய அத்தியாயத்தை நாம் தொடங்கி வைத்திருக்கிறோம் என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அந்த அத்தியாயத்தைத் தொடங்கி வைத்த பொறுப்பை தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள்.

இந்தத் தீர்மானத்தை இங்கே பிரேரேபித்தபொழுது பல்வேறு கருத்துக் கொண்டவர்கள் பேசினார்கள். எனக்கு முன்னால் பேசிய ஆளும் காங்கிரசைச் சேர்ந்த திரு. மாரிமுத்து அவர்களுக்கு இருக்கின்ற தேச பக்தியிலேயும், தேசிய ஒருமைப்பாட்டைப் பாதுகாப்பதிலேயும், தேசிய பாரம்பரியத்திலேயும் நானும் என்னுடைய கட்சியும், என்னுடைய முன்னோர்களும் குறைந்தவர்கள் அல்ல என்பதைத் தெளிவாகக் கூற விரும்புகிறேன்.

விடுதலைப் போராட்டத்தில் அவர்கள் நீண்ட நாட்கள் ஈடுபட்டிருக்கலாம். நான் குறைந்த நாள் ஈடுபட்டிருக்கலாம். அவர்கள் போலீசாரிடம் அதிக அடிகளை வாங்கியிருக்கலாம், நான் குறைந்தபட்ச அடிகளை வாங்கியிருக்கலாம். அவர்கள் விடுதலைப் போராட்டத்திற்கு அடையாள உடையாகிய கதரை அணிவதை இன்றுவரை மாற்றாமல் இருக்கலாம், நானும் மாற்றவில்லை.

ஆகவே, தேசிய ஒருமைப்பாட்டில், தேச பக்தியில் திரு. மாரிமுத்து அவர்களைக் காட்டிலும் நான் குறைந்தவன் அல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

மாநில சுயாட்சி என்று தீர்மானம் வந்ததால்தான் இவ்வளவு விவகாரங்களும் ஏற்படுகின்றன. மாநில சுயாட்சி என்று சொல்கிறபொழுது இங்கே பேசப்பட்டதெல்லாம், கூடுதல் அதிகாரங்கள் மாநிலங்களுக்கு வேண்டுமென்ற கருத்தை யாருமே மறுக்கவில்லை. இப்பொழுதுள்ள அதிகாரங்கள் மாநிலங்களுக்குப் பற்றாக் குறையாக இருக்கும் என்ற கருத்தையும் யாரும் மறுக்கவில்லை. கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்கள் இந்தத் தீர்மானத்தை எதிர்க்கிறார்கள். ஆனால் சோவியத் இரஷ்யாவிலே பிரிந்து போகின்ற உரிமைகளோடு மாநிலங்கள் இயங்குகின்றன. ஒரு மாநிலத்தின் மெஜாரிட்டி தீர்மானம் சோவியத் யூனியனிலிருந்து பிரிந்து போக வேண்டுமென்று நிறைவேற்றினால் பிரிந்து போகலாம். ஜார்ஜியா, மங்கோலியா போன்ற மாகாணங்கள் பிரிந்து போகும் உரிமையை சோவியத் அரசியல் சட்டம் தந்திருக்கிறது. அவர்கள் பிரிந்து போகும் அளவில் ஏற்பட்டு விடுமோ என்று அங்கே அஞ்சுகிறார்கள்.

ஆனால் இது பிரிந்து போகும் அடிப்படையில் உள்ள தீர்மானமா? அல்லது மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் வேண்டுமென்ற அடிப்படையைக் கொண்டு கொண்டுவரப்பட்ட தீர்மானமா என்பதுதான் இன்றைக்குச் சர்ச்சைக்குரிய விஷயம். பச்சையாக, தெளிவாக, ஆணித்தரமாக, அழுத்தந்திருத்தமாக பலமுறை இந்தத் தீர்மானம் பிரிவினையை அடிப்படையாகக் கொண்டு கொண்டுவரப்பட்ட தீர்மானம் அல்ல என்று தெளிவாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படியிருந்தும்கூட இந்தத் தீர்மானம் பிரிவினைக்காகத்தான் என்று சுற்றி வளைத்துக்கொண்டு வருகிறார்கள். எங்கேயோ மறைமுகமாகப் பிரிவினைவாதம் புகுத்தப்பட்டிருக்கிறது என்று பேசுகிறார்களே தவிர, எந்தயிடத்தில் தீர்மான வாசகத்தில்

பிரிவினை அடிப்படை தூவப்பட்டிருக்கிறது என்பதை எடுத்துச் சொல்வதற்கு மறுக்கிறார்கள் அல்லது எடுத்துச் சொல்வதற்குத் தெரியவில்லை.

நம்முடைய பெருமதிப்பிற்குரிய மாரிமுத்து அவர்கள் பேசினார்கள், சுயாட்சி பிரிவினையில் கொண்டுபோய் விட்டுவிடும் என்று சொன்னார்கள். அந்தப் பிரிவினைத் தீயை பாட்டாளி மக்கள், தொழிலாள மக்கள் அணைப்பார்கள் என்று சொன்னார்கள். அந்தத் தீயில் வெந்து சாம்பலாவதற்கு நாங்கள் தயார் என்று சொன்னார்கள், ஆணித்தரமாக, அழுத்தந்திருத்தமாகச் சொன்னார்கள்.

நான் சொல்கிறேன், சுயாட்சி என்ற வார்த்தையின் மூலமாக இதைப் பிரிவினை என்று எடுத்துக்கொண்டால் 1947 ஆகஸ்ட் 15 க்கு முன்னால் மாநிலங்கள் வளர்ச்சி பெற்ற வரலாற்றை இங்கே இந்தத் தீர்மானத்தை எதிர்ப்பவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். வெள்ளைக்காரர்கள் தங்களது நிர்வாக சௌகரியத்திற்காக மாநிலங்களைப் பிரித்தார்கள். அவர்கள் தங்களுடைய நிர்வாக சௌகரியத்திற்காக, எந்தப் பகுதியிலே விடுதலைப் போராட்டம் எழுகின்றதோ அந்தப் பகுதிக்கு இராணுவத்தை விரைவாக அனுப்பவும், அந்தப் பகுதிகளுக்குத் துருப்புகளை வேகமாக அனுப்புவதற்கும், போராட்டத்தை அடக்கி ஒடுக்கவும் அவர்களுடைய சௌகரியத்திற்காக மாநிலங்களை அமைத்துக் கொண்டார்கள். ஒரு மொழி பேசும் மக்கள் மட்டுமல்ல, பல்வேறு மொழிகளைப் பேசுகின்ற பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த மக்கள் அதில் இணைக்கப்பட்டார்கள்.

அப்படி அமைக்கப்பட்ட மாநிலங்களை, நாம் விடுதலை பெற்ற பிறகு நம்முடைய நிர்வாக சௌகரியத்திற்காக திருத்தி அமைத்தோம். அப்பொழுது இந்தியாவிலே இந்தியாவின் தலை என்று சொல்லப்படுகின்ற காஷ்மீரத்திலே ஒரு தலைவலியே வந்தது.

*1974 ஏப்ரல் 20] [திரு. ஏ. ஆர். பெருமாள்]*

மாநிலங்களைப் பிரிக்கும்பொழுது சுதேச சமஸ்தானங்கள் சுதந்திரமாக இருக்க வேண்டுமானால் இருக்கலாம், இந்திய யூனியனோடு சேர வேண்டுமானால் சேரலாம், பாகிஸ்தானோடு சேர வேண்டுமானால் சேரலாம் என்று வெள்ளைக்காரன் கொடுத்த அந்தத் திட்டத்தின் அடிப்படையில் காஷ்மீரம் தனியாகப் போகக்கூடாது என்று கருதி, இந்தியாவின் தலை என்று சொல்லப் படுகின்ற அந்தக் காஷ்மீரம் நம்முடைய உடலிலேயே இருக்க வேண்டுமென்பதற்காக தனி அரசியல் கொடி அனுமதிக்கப் பட்டது, தனி அரசியல் சட்டத்திற்கும் அங்கீகாரம் தந்தோம். இன்றைக்கு அந்த அங்கீகாரத்தை மறுத்தோம்.

ஆனால் அன்றைக்கு காஷ்மீரம் நம்முடன் சேர்ந்திருக்க வேண்டு மென்ற காரணத்திற்காக காஷ்மீரத்திற்கென்று தனிக் கொடியையே கொடுத்தோம் என்றால், தனி அரசியல் சட்டம் என்று வரும் பொழுது அது தேசீய ஒருமைப்பாட்டிற்கு விரோதம் என்று அன்றைக்கு வாதாடவில்லை. இந்தியாவிலே மாபெரும் தலைவராக விளங்கிய இந்தியப் பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் செய்தார்கள். தேசத்தினுடைய பாதுகாப்பை அடிப்படையாக வைத்து அதை நாம் ஏற்றுக்கொண்டோம்.

அதற்குப் பிறகு சுதந்திரத்திற்குப் பிறகு மொழிவழி மாநிலங்கள் என்ற அடிப்படையில் வரும் பொழுது மக்கள் நலன்கள் என்ற அடிப்படையில் ஏற்கிறோம். அதே அடிப்படையில்தான் மத்திய சர்க்கார் பலம் பொருந்தியதாக இருக்க வேண்டுமென்ற வாதத்தில் நாங்கள் மாறுபடவில்லை. மத்திய சர்க்கார் பலம் பொருந்தியதாகத்தான் இருக்க வேண்டும்.

எதற்காகப் பலம் பொருந்தியதாக இருக்க வேண்டுமென்றால், சீனாக்காரன் படையெடுத்து வந்தால் அவர்களை அடித்து, புறமுதுகு காட்டச் செய்கின்ற அளவிற்கு இருக்கவும், வேற்றுநாட்டான் படையெடுக்கும்பொழுது அவர்களது முதுகெலும்பை ஒடிக்கச் செய்யவும் பலம் பொருந்தியதாக இருக்க வேண்டும்.

ஆனால், நம்முடைய மக்களை தந்திரமாக, சூசகமாக, சாணக்கிய மாக, சாமர்த்தியமாக ஒருபகுதி மக்களை அழித்து, ஒரு பகுதி மக்களை வாழ வைக்கின்ற அளவில் ஒரு பலம் வேண்டுமென்று கேட்பது இந்த நாட்டு மக்களின் நலன்களின் அடிப்படையை வைத்துக் கேட்பதாக ஆகாது.

ஒட்டுமொத்தமாக, பரவலாக கன்னியாகுமரியிலேயிருந்து காஷ்மீரம் வரையில், கல்கத்தாவிலிருந்து பம்பாய் வரையில் பல்வேறு தேசிய இனங்கள், இந்தியாவில் வாழும் பல்வேறு மக்கள் ஒரு சீராக செம்மைப்படுத்தப்பட்டிருக்கிறது ஒரே சீராக வளர்ச்சி அடைந்திருக்கிறது என்று இங்கே வாதாடும் யாரும் எடுத்துக் காட்ட முடியாது.

பல ஐந்தாண்டுத் திட்டங்களை எடுத்துக்கொண்டு பார்ப்போமே யானால், மத்திய சர்க்காரில் நிறைவேற்றும் ஒவ்வொரு தீர்மானத்தையும் எடுத்துக்கொண்டு பார்ப்போமேயானால், மத்திய சர்க்கார் மாநிலங்களுக்கு அளிக்கின்ற ஒவ்வொரு நிதியையும் பார்த்தால் எவ்வளவு பாரபட்சம் இருக்கிறது என்பது தெளிவாக எடுத்துக் காட்டப்படுகிறது.

ஆகவே, மாநிலங்களுக்கு என்று சில அதிகாரங்கள் வேண்டுமென்று இப்படி நான் பேசும்பொழுது என்னுடைய கட்சித் தலைவரின் கருத்துக்கு மாறுபாடாகப் பேசுவதாக யாரும் கருத வேண்டாம். நேதாஜி சுபாஷ் பாபு அவர்கள் எப்படி இருக்க வேண்டுமென்று தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள்.

(முற்பகல் 10-00)

இந்தியாவினுடைய பாதுகாப்பு, இந்தியாவினுடைய ரயில்வே, இந்தியாவினுடைய தபால் இலாகா, இந்தியாவினுடைய நாணயம், இந்தியாவினுடைய வெளிநாட்டுக் கொள்கை இந்த ஐந்தைத் தவிர மற்ற எல்லா அதிகாரங்களும் மாநிலங்களுக்குக் கொடுக்கப் பட்டாக வேண்டுமென்ற கருத்தைத் தெளிவாக சுபாஷ் பாபு அவர்கள் வலியுறுத்திக் கூறி இருக்கிறார்கள். பலம் பொருந்திய மத்திய சர்க்கார் இவைகளுக்காகத்தான் பலம் பொருந்தியதாக

இருக்க வேண்டும். இவைகளை விடுத்து ஒரு பகுதி மக்களை அடக்கி ஒடுக்க ஒரு பலம் தேவையில்லை; ஒரு பகுதி மக்களை மட்டும் வாழ வைக்க ஒரு பலம் தேவையில்லை.

என்னென்ன அதிகாரங்கள் தேவை என்று கேட்பதிலே மாறுபாடு இருக்கலாம்; குறைந்தபட்சம் இந்த அதிகாரங்களைக் கொடுக்கலாம் என்ற கருத்திலே மாறுபாடு இருக்கலாம். அதிகபட்சமாக மத்திய சர்க்காருக்கு இந்த அதிகாரங்கள் இருக்கக் கூடாது என்பதிலே மாறுபாடு இருக்கலாம். இது கேட்பதே தவறு, சுயாட்சி பிரிவினைக்கு அடிப்படை என்று சொன்னால் எவ்வளவு பெரிய மோசடியை அன்று செய்திருக்கிறார்கள் என்று பார்க்க வேண்டும்.

1947-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ம் தேதி சுதந்திர நாள் என்று கொண்டாடினோம். சுதந்திர நாளா அது? குடியேற்ற நாடு அந்தஸ்துதான் அப்போது பெற்றோம். வெள்ளைக்கார மன்னன் கீழ் பிரதம மந்திரி என்ற நிலைதான் இருந்தது. இன்றைக்கு நாம் குடியரசாகியிருக்கிறோம். இன்றும் உலகத்தை ஏமாற்றிக் கொண்டுதான் இருக்கிறோம். இன்றைக்கும் வெள்ளைக்காரன் பிரிட்டிஷ் காமன்வெல்த்தில் இந்தியக் குடியரசு ஒரு அங்கம். 1950-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26-ஆம் தேதி இந்தியா குடியரசாகப் பிரகடனம் செய்யப்பட்டது. அன்றிலிருந்து காமன்வெல்த்தை விட்டு இந்தியா வெளியேற வேண்டுமென்ற கோஷம் இருந்து வருகிறது. நாட்டிலுள்ள முற்போக்கு வாதிகள், இடதுசாரிகள், இன்று வரை அதைச் சொல்லி வருகிறார்கள். நேருவிடம் காமத் அவர்கள் 'காமன்வெல்த்தை விட்டு வெளியேற வேண்டும், அதிலே இருப்பதால் என்ன லாபம்?' என்று கேட்டார்கள். நேரு அவர்கள் 'அதிலே இருப்பதால் நமக்கு என்ன நஷ்டம்?' என்று கேட்டார்கள். நான் லாப நஷ்டக் கணக்கைச் சொல்லவில்லை. வெள்ளைக்காரர்களோடு இன்னும் நமக்கு எதற்கு உறவு? பாதுகாப்பு அடிப்படையில் வைத்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். அப்படியானால் இந்தியாவின் பாதுகாப்புக்கு மத்திய அரசு பலம்

பொருந்தியதாக இருக்க வேண்டுமென்றால், மத்திய அரசின் பாதுகாப்புக்கு காமன்வெல்த் பலம் பொருந்தியதாக இருக்க வேண்டும்.

காமன்வெல்த்தின் வரலாற்றைப் பார்க்க வேண்டும். பல்வேறு நாடுகளில் குடியேறிய வெள்ளைக்காரர்கள் அந்த நாடுகளுக்குச் சுதந்திரம் கொடுத்தவுடன் அவர்களாக அமைத்துக் கொண்டது பிரிட்டிஷ் காமன்வெல்த். பிரிட்டிஷ் என்ற பதத்தை நீக்கிவிட்டு, எம்பரர் என்பதை நீக்கிவிட்டு பிரசிடென்ட் என்று வைத்துக் கொண்டார்கள். இன்றைக்கும் இந்திரா காந்தி அம்மையார் அவர்கள் காமன்வெல்த் கூடும்போது போய்த்தான் ஆக வேண்டும்.

யாரோ ஒருவர் சொன்னதாகத் தகவல், நம்பிக்கையான தகவல். ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர் ஒரு உத்தரவைப் போடுகிறார் என்றால் அந்த உத்தரவை மத்திய சர்க்கார் ரத்து செய்து மறு உத்தரவு போடும் அதிகாரம் கூட மத்திய சர்க்காருக்கு இருக்கிறது என்று சொன்னார்கள். இப்படிப்பட்ட நிலை நாட்டில் இருக்கும் காரணத்தால்தான் மாநிலங்களுக்குக் கூடுதல் அதிகாரம் வேண்டுமென்று கேட்கிற குரல் வருகிறது.

பிரிவினை என்று கேட்காமல் பயத்தினால் மாநில சுயாட்சி என்று கேட்டுக் கொண்டிருப்பதாகச் சொன்னார்கள். அச்சத்தினால் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருப்பதாகச் சொன்னார்கள். பயத்தினாலோ, அச்சத்தினாலோ கொண்டு வரவில்லை. திரு. மாரிமுத்து அவர்கள்தான் அச்சத்தினால் நாடு பிரிந்து விடுமோ என்ற பயத்தினால் பேசுகிறார். இங்கு யாரும் பிரிவினை வாதத்தைப் பேசவில்லை. பிரிவினை வாதத்தை இந்த நாடு அனுமதிக்காது. நாட்டைப் பிரிக்க வேண்டுமென்ற கருத்தை யாரும் பேசவில்லை, யாரும் ஏற்கவும் இல்லை. கேட்கிற அதிகாரங்கள் தேவைதானா, இல்லையா என்று சிந்திக்க வேண்டுமே தவிர, பிரிவினை என்று சொல்லிக் கொண்டிருப்பதில் பயன் இல்லை.

1974 ஏப்ரல் 20] [திரு. ஏ. ஆர். பெருமாள்]

சட்ட மன்றத்தைக் கலைத்து விட்டு தேர்தலில் நில்லுங்கள் என்று சட்ட மன்ற அண்ணா திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர் பேசினார். என்ன தொடர்பு இருக்கிறது? என்ன என்றே புரியவில்லை. திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து யாரேனும் விலகி அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்திற்குப் போகிறார்கள் என்றால் அவர்கள் எல்லாம் சட்ட மன்றத்தைக் கலைக்க வேண்டுமென்று மூன்று மாத காலத்திற்கு அவசரப படுகிறார்கள். சட்ட மன்றத்தைக் கலைத்து தேர்தலை நடத்தி அமைச்சராக வந்துவிட வேண்டுமென்ற அவருடைய அவசரத்தைக் காட்டி இருக்கிறார். கலைஞர் அவர்கள் தீர்மானத்தை எந்த அளவுக்கு ஆதரிக்கிறோம், எந்த அளவுக்கு எதிர்க்கிறோம், ஆதரிப்பதன் அடிப்படை என்ன, எதிர்ப்பதன் அடிப்படை என்ன என்று சொல்லவில்லை. திரு. செழியன் அவர்கள் மாநில சுயாட்சி என்றால் சரியான விளக்கம் தேவை என்றார். அண்ணா என்ன சொன்னார் என்பதைப் பற்றி முதல்வர் அவர்கள் விளக்கம் கூறுவார்கள்.

நீங்கள் மக்கள் சுயாட்சி என்று குரல் எழுப்புகிறீர்களே— மக்கள் சுயாட்சி என்றால் என்ன? மாநில சுயாட்சி என்ற வார்த்தை ம.பொ.சி.யிடம் கடன் வாங்கியது என்று சொல்லு கிறீர்கள். மக்கள் சுயாட்சி என்பது கம்யூனிஸ்டுகளிடம் கடன் வாங்கியது என்று நாங்கள் சொல்லுகிறோம். இப்படிப்பட்ட வாதங்கள் எல்லாம் இதிலே தேவையில்லை.

இந்தச் சட்ட மன்றத்திலே முக்கியமான தீர்மானம் கொண்டு வரப்பட்டிருக்கிறது. டாக்டர் கலைஞர் அவர்களே இன்னும் 25 ஆண்டுக் காலத்திற்கு முதலமைச்சராக இருப்பார்கள் என்ற நோக்கத்தோடு கொண்டுவரப்படவில்லை. திராவிட முன்னேற்றக் கழகமே இன்னும் 25 ஆண்டுக் காலத்திற்கு ஆளப் போகிறது என்ற எண்ணத்தில் அதிகாரங்கள் அதிகம் தேவை என்ற முறையில் இந்தத் தீர்மானம் கொண்டுவரப்படவில்லை.

மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை
மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம்
திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[திரு. எ. ஆர். பெருமாள்] [1974 ஏப்ரல் 20

1976-ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழகம் வெற்றி பெற்று வரப் போகிறதா, இல்லையா என்பது வேறு விஷயம். அவருக்குப் பின்னால் யார் ஆளப் போகிறார்கள் என்பது வேறு விஷயம். நாம் கேட்கிற கோரிக்கை நாமே திரும்ப வந்து உட்கார்ந்து ஆட்சி செய்யப் போகிறோம் என்ற நோக்கத்துடன் கேட்கவில்லை. மாநில சுயாட்சி வந்தால் நம்முடைய மாநிலம் மட்டுமல்லாது இந்தியா முழுவதும் உள்ள மாநிலங்களும் சுதந்திரமாக நல்ல அதிகாரங்களை, தேவையான அதிகாரங்களைப் பெற்று மக்களுடைய குறைகளைத் தீர்க்க முடியும்.

மாநிலங்களில் ஏற்படக்கூடிய வேலையில்லாத் திண்டாட்டத்தை, மற்றைய காரியங்களை, நீர்ப்பாசன அபிவிருத்தி வேலைகளை, சாலை அபிவிருத்தி வேலைகளை, சுகாதார வசதிகளை, மக்களுக்குத் தேவையான பல்வேறு காரியங்களைச் செய்ய போதிய அதிகாரங்கள் இன்றைக்கு இருக்கக்கூடிய அரசியல் சட்ட அடிப்படையில் இல்லை என்ற காரணத்தால் ஒவ்வொரு துறையிலும் துருவித் துருவி ஆராய்ந்து பார்த்தால் அதிகாரப் பற்றுக்குறையோடு மக்களுக்குத் தேர்தல் காலத்தில் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்ற முடியாமல் திண்டாடிக் கொண்டிருக்கிறோம் என்பதைத் தெளிவாக உணர்ந்து, சிந்தித்து இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள். இந்தப் புரட்சிகரமான தீர்மானத்தை அரசியல் நோக்கத்தோடு எதிர்க்கிறார்கள்.

திரு. மாரிமுத்து அவர்கள் வேகமாகப் பேசினார்கள். அந்தத் தீயில் சாம்பலாகத் தயாராக இருக்கிறோம் என்று சொன்னார்கள். நாங்களும் தயாராக இருக்கிறோம். அந்த நெருப்பில் விழுந்து சாம்பலாக நாங்களும் தயாராக இருக்கிறோம். போராட்டம் என்று வரும்போது, தியாகம் என்று வரும்போது அந்தத் தியாகத்தைச் செய்வதற்கு மற்றவர்களை விட நாங்கள் சளைத்தவர்கள் அல்ல.

நாம் இன்று நாட்டுக்குச் சொல்ல வேண்டிய கருத்தை, நாட்டு மக்களுக்குச் சொல்ல வேண்டிய கருத்தைச் சொல்லத் தவறுவோமானால் எதிர்காலத்தில் மாநிலங்களுக்கு மாத்திரமல்ல,

இந்திய மக்களுக்கே பெரிய பாதகத்தைச் செய்தவர்களாவோம். ஒவ்வொரு மாநில முதலமைச்சரும் மனச்சாட்சியைத் தட்டிக் கேட்டால் இதை உணர்ந்து கொள்ள முடியும். தமிழகத்தின் முதலமைச்சர் டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்கள்தான் இது நியாயமா, அநியாயமா, சரியா, தவறு என்று கேட்கிறார். கட்சி சார்பாக அல்லாமல் ஒவ்வொரு மாநில முதல்வரும் இருதயத்தைத் தொட்டுக் கேட்க வேண்டிய கேள்வி.

ஒரு கட்சியின் சார்பாக மற்ற முதலமைச்சர்கள் எல்லாம் இருக்கிற காரணத்தால் அவர்கள் சொல்ல முன்வரவில்லை; திராணி இல்லை. அந்தத் தன்மையை, திராணியை நம்முடைய முதலமைச்சர் அவர்கள் பெற்றிருக்கிறார்கள். இந்தியாவிலேயே மத்திய அரசை ஆளுகின்ற கட்சிக்கு மாற்றாக ஒரு கட்சி இந்தியாவில் ஆளுகிறது என்றால் அது திராவிட முன்னேற்றக் கழகந்தான். அந்த ஒரே கட்சியின் முதலமைச்சர் டாக்டர் கலைஞர் அவர்கள்.

எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய நிகழ்ச்சிகளை மனத்தில் வைத்து, தேர்தல் காலத்தில் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்ற முடியாத காரணங்களை அடிப்படையாக வைத்து, நீண்ட நெடுங்காலமாகச் சிந்தித்து செயல்பட்டு நமக்கு மாத்திரமல்ல—இந்தியாவிலுள்ள பல்வேறு மாநிலங்களுக்கும், எதிர்கால சந்ததியினருக்கும் சேவை செய்ய வேண்டுமென்பதை அடிப்படையாக வைத்து இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

இதுவே போராட்டமாக வருமேயானால் என்ன செய்வது என்று அஞ்சுகிறார்கள். அப்படிப்பட்ட அச்சம் தேவையில்லை. நாம் கேட்பது மத்திய அரசாங்கத்தை ஒரு உயர்ந்த இடத்தில் வைத்து தேசியப் பிரச்சினையை அடிப்படையாக வைத்து, ஒட்டு மொத்தமாக நாட்டு மக்களுக்குச் செய்ய வேண்டிய காரியங்களை அடிப்படையாக வைத்து மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் தேவை என்று கேட்பது எந்த வகையிலும் தேசப் பாதுகாப்புக்கு, தேச ஒற்றுமைக்கு, தேசிய ஒருமைப்பாட்டுக்கு விரோதமானது

அல்ல. திரு. மாரிமுத்து அவர்கள் சொன்னதுபோல் தீயெல்லாம் வராது; தியை அணைக்க வேண்டிய நிலையும் இல்லை; சாம்பலாக வேண்டியதுமில்லை.

அந்தத் தீ எழுமேயானல் நிச்சயமாக அதை அணைக்கக்கூடிய பொறுப்பை. அவர்கள் அணைக்க வேண்டுமென்று எண்ணினாலும் அணைக்க முடியாது, அது மேலும் மேலும் கொழுந்து விட்டெரியும். அந்தத் தீ நாடு முழுவதும் பரவும். அந்தத் தீ திக்கெட்டும் பரவும். அணைக்க முடியாத தீயாக மாறும். அந்தத் தீயில் மாநில சுயாட்சி என்ற பிரச்னை கொழுந்து விட்டெரியும். ஆகவே அதை நீங்கள் மனதில் வைத்துக்கொள்ளுங்கள்.

இன்று கேட்கிற பிரச்சினை, தீ எரிகிற பிரச்சினை அல்ல. இன்று கேட்கிற பிரச்னை புரட்சியை அடிப்படையாக வைத்துக் கேட்கிற பிரச்னை அல்ல. இன்று கேட்கிற பிரச்னை போராட்டத்தை உருவாக்கிற பிரச்னை அல்ல, இன்று கேட்கிற பிரச்னை நாட்டை பிரிக்க வேண்டும் என்ற கருத்தை அடிப்படையாக வைத்து கேட்கப்படுகிற பிரச்னை அல்ல.

நாம் மக்களுக்குக் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்ற போதுமான அதிகாரம் இல்லை—இந்த மாநிலம் மட்டுமல்ல, பல்வேறு மாநிலங்களிலும். இந்தியா முழுவதும் ஒட்டு மொத்தமாக நாட்டு மக்களுக்கு செய்ய வேண்டிய காரியங்களைச் செய்ய மாநிலங்களுக்கு அதிகப்படியான அதிகாரங்கள் வேண்டும் என்ற அடிப்படையில் வைத்து கொண்டுவரப்பட்ட இந்தத் தீர்மானத்தை என் கட்சி சார்பில் முழுக்க முழுக்க ஆதரித்து, இந்தியாவிலுள்ள முதல் அமைச்சர்களிலேயே மிகவும் துணிவு பெற்ற முதல் அமைச்சர், நாட்டுக்காக தன்னையே அர்பணிக்கக் கூடிய முதல் அமைச்சர், எவ்வளவு பெரிய எதிர்ப்புக்கும் அஞ்சாத வைர நெஞ்சம் உடையவர், எந்தத் தீர்மானத்தையும்; எந்தக் கருத்தையும் துணிவுபட எடுத்துச் சொல்லும் வைர நெஞ்சம் படைத்திருக்கிற முதல் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற இந்தத் தீர்மானத்த ஆதரித்து, இதை வைர நெஞ்சோடு கொண்டு வந்திருக்கும் முதல் அமைச்சர் அவர்களையும் பாராட்டி வரவேற்கிறேன், வணக்கம்.

**திரு. எஸ். வடிவேல்:** திரு. பெருமாள் அவர்கள் மாநில சுயாட்சி தீர்மானத்தை இவ்வளவு தூரம் வற்புறுத்தி பேசி கடுமையாகப் பேசியது மாநில சுயாட்சி வந்தா தேவர் நாடு என்று ஒன்று அமைப்பதற்கு இதில் அஸ்திவாரம் இடுகிறாரா என்று அறிய விரும்புகிறேன்.

**திரு. ஏ. ஆர். பெருமாள்:** இதில் தேவர் நாடும் வராது, நாயக்கர் நாடும் வராது. மாநில சுயாட்சி வேண்டுமென்று கேட்பது, நமக்கு அதிகப்படியான அதிகாரங்கள் வேண்டும் என்பதற்காகத்தான். சோவியத் ரஷ்யாவில் ஒரு மாநிலம் பிரிந்து செல்லக்கூடிய உரிமையோடு அங்கே ஐக்கியமாக இருக்கிறது என்பதை அவர்கள் சிந்தித்துப் பார்த்து இந்த உருப்படியான காரியத்தை இந்திய கம்யூனிஸ்ட் கட்சி எதிர்க்க வேண்டாம் என்று தோழமைக் கட்சி என்ற முறையில், எங்களைப் போல் ஒரு இடதுசாரிக் கட்சி என்ற முறையில் வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன்.

**திரு. பெ. சீனிவாசன்:** ஒரு மூன்று மாத காலம் இப்படியெல்லாம் சொல்வார்கள் என்று திரு. பெருமாள் அவர்கள் சொன்னார்கள். ஏ. ஆர். பி. இருக்கிற கட்சி. எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் அவர்கள் அமைச்சர் பதவிக்கு வரமுடியாது. நான் அந்தக் கட்சியில் இருந்திருந்தாலும் அமைச்சர் பதவி கிடைக்க வாய்ப்பிருந்திருக்கும். எதிர்காலத்திலும் அமைச்சர் பதவி கிடைக்கலாம், கிடைக்காமலும் போகலாம். அதற்காக சட்டசபையைக் கலைக்க வேண்டுமென்று சொல்லவில்லை. இப்போது இரண்டு காங்கிரஸ் கட்சிகளும் சேர்ந்து எதிர்க்கிற இந்த நேரத்தில் இதை ஒரு நல்ல சந்தர்ப்பமாக, 71-யை விட திராவிட முன்னேற்றக் கழகம் மக்களைச் சந்திக்க இது ஒரு நல்ல சந்தர்ப்பம் என்றுதான் சொன்னேன். மறு தேர்தல் நடந்தாலும் எனக்கு வெற்றி பெற்று வரமுடியும். ஆனால் ஏ.ஆர்.பி. எந்தத் தொகுதியில் நின்றாலும் டெப்பாஸிட் வாங்க முடியாது. அதுதான் நிலைமை.

**திரு. ஏ. ஆர். பெருமாள்:** நான் டெப்பாஸிட் இழக்கிறேனு இல்லையா என்பதை அப்புறம் பார்க்க வேண்டும். முதலில் சீனிவாசன் பழையபடி விருதுநகரிலிருந்து வரமுடியும் என்று எதிர்பார்க்கிறார்களா? மாநில சுயாட்சி தீர்மானம் வரும்போது சட்ட மன்றத்தைக் கலைக்க வேண்டிய பிரச்னை எழவில்லை. அவர்கள் மந்திரியாக ஆகியிருக்கலாம் என்று சொல்கிறார்கள். ஆகியிருந்தால் நான் சந்தோஷப்பட்டிருப்பேன், ஆனால் ஆக முடியவில்லை. நான் எந்தக் கட்சி வந்தாலும் மந்திரி ஆவேன் என்று சொல்கிறார்கள், நன்றாக ஆகட்டும். சட்டசபையைக் கலைப்பது பற்றி சீனிவாசன் அவர்கள் பேசமாட்டார்கள் என்று நினைத்தேன், அவர்களும் பேசியிருக்கிறார்கள். நான் அமைச்சராக ஆகியிருக்கலாம் என்றார்கள். ஆனால் உங்களுக்கு அமைச்சராக வேண்டும் என்ற ஆசை இல்லை, முற்றும் துறந்த முனிபுங்கவர் அவர் என்று எனக்குத் தெரியும். ஆகவே, மாநில சுயாட்சி சம்பந்தமாகப் பேசுங்கள்.

**திரு. க. உரொ. எட்மண்ட்:** பேரவைத் தலைவர் அவர்களே, ராஜமன்னர் குழுவினுடைய பரிந்துரைகளின் மூலம் நம்முடைய அரசின் சார்பாக மாண்புமிகு முதல் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற இந்தத் தீர்மானத்திற்கு எங்களுடைய கட்சி சார்பில் கொடுக்கப்பட்டிருக்கிற திருத்தத் தீர்மானங்களை வலியுறுத்தி அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் நான் என்னுடைய கருத்துக்களை இங்கே சொல்லலாம் என்று நினைக்கிறேன்.

இந்தப் பிரச்னையைப் பொறுத்தமட்டில் இதற்குண்டான விவாதங்களை, தலைவர் அவர்களே, நீங்கள் இந்த மாதம் நடைபெறுவதற்குண்டான தேதியை அறிவித்தவுடன் நமது மாண்பமிகு முதல் அமைச்சர் அவர்கள் பொதுக் கூட்டங்களில் பேசும்போதும் பத்திரிகை நிருபர்களுக்கு பேட்டி கொடுக்கிற நேரங்களிலும் இதை ஒரு சவாலாக ஏற்று, இந்த விவாதத்தின் மூலம் எடுக்கப்படுகிற முடிவை வைத்துக்கொண்டு அண்ணாவினுடைய உண்மையான தம்பிகள் யார் என்பதை நான் இந்தத் தமிழ் நாட்டு மக்களுக்கு காட்ட இருக்கிறேன். அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தினுடைய முகத்திரையைக்

கிழித்தெறிய இருக்கிறேன் என்றெல்லாம் நமது மாண்புமிகு முதல் அமைச்சர் அவர்கள் தன்னுடைய கருத்துக்களை வெளியில் வழங்கியிருக்கிறார்கள் என்பதை நான் மெத்தப் பணிவுடன் நம்முடைய முதல் அமைச்சர் அவர்களுக்கு தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

அண்ணாவினுடைய தம்பிகள் யார் என்பதை திராவிட முன்னேற்றக் கழகத்தில் உள்ளவர்கள் அல்லது இந்த மன்றத்தில் இருக்கிற 173 திராவிட முன்னேற்றக் கழக சட்ட மன்ற உறுப்பினர்களால் நிர்ணயம் செய்வதற்கு அவர்களுக்கு தகுதி இல்லை என்பதை நான் இந்த நேரத்தில் சுட்டிக்காட்டக் கடமைப்பட்டவனாக இருக்கிறேன். காரணம், அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் ஆரம்பிக்கப்பட்டதற்குப் பின்னால், இன்றைய தினம் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்திற்காக தங்களைப் பணித்துக்கொண்டிருக்கிற இலட்சக்கணக்கான தொண்டர்களால் இந்த இயக்கம் ஆரம்பிக்கப்பட்டதற்குப் பின்னால் நாட்டில் நடைபெற்ற பல்வேறு இடைத் தேர்தல்கள், நகர மன்றத்திற்கான தேர்தல்கள், பஞ்சாயத்துக்களுக்கான இடைத் தேர்தல்கள் இவைகளில் அண்ணா திராவிட முன்னேற்றக் கழக வேட்பாளர்களை அல்லது அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் ஆதரவு கொடுத்த வேட்பாளர்களை வெற்றி பெறச் செய்வதன் மூலம் நாட்டு மக்கள் தங்கள் தீர்ப்பை மிகத் தெளிவாக, விளக்கமாக இன்று ஆளும் கட்சியைச் சார்ந்தவர்களுக்கு எடுத்துக் காட்டியிருக்கிறார்கள்.

அண்ணாவினுடைய வழி நின்று அண்ணாவினுடைய லட்சியங்கள், கொள்கைகள், திட்டங்கள் இவற்றை தமிழ் நாட்டில் தொடர்ந்து செயல்படுத்துவதற்கு அண்ணாவிற்குப் பின்னால் தமிழகத்தில் ஒரு இயக்கம் உண்டு என்றால் அது அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம்தான் என்பதையும், அண்ணாவினுடைய வழியிலே தமிழ் நாட்டு மக்களை நடத்திச் செல்கிற ஓரே தானைத் தலைவர் எங்களுடைய புரட்சித் தலைவர் என்பதையும் இன்றைய தினம் நாட்டு மக்கள் மிகத் தெளிவாக எடுத்துக்காட்டியிருக்கிறார்கள்.

மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை
மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டத்
திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[திரு. க. உரொ. எட்மண்ட்] [1974 ஏப்ரல் 20

நான், இன்றையதினம் அண்ணாவினுடைய தம்பி யார் என்ற கேள்விக்குறியை எழுப்பியிருக்கிற நம் மாண்புமிகு முதல் அமைச்சர் அவர்களிடம் மிகுந்த பணிவன்புடன் சில விளக்கங்களைக் கேட்பதற்கு கடமைப்பட்டவனாக இருக்கிறேன்.

1967-ஆம் ஆண்டு பேரறிஞர் அண்ணா அவர்கள் தமிழ் நாட்டினுடைய ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட நேரத்தில் தேர்தலில் தாங்கள் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுகிற வகையில் அன்றையதினம் தமிழ் நாட்டு மக்களுக்கு படி அரிசி அளந்தார்கள். ஆனால் இன்றையதினம் அவருடைய தம்பி நான்தான், அவருடைய வாரிசே நான்தான் என்று சொல்லிக் கொள்கிற நம்முடைய மாண்புமிகு முதல் அமைச்சர் அவர்கள் அந்த படி அரிசித் திட்டத்தை எங்கே வைத்திருக்கிறார்கள், எங்கே மூடி வைத்திருக்கிறார்கள் என்பதைக் கேட்க நான் கடமைப்பட்டவனாக இருக்கிறேன். படி அரிசித் திட்டத்தை, அண்ணாவால் கொண்டுவரப்பட்ட திட்டத்தை, இன்றையதினம் அதை ஒழித்துக் கட்டுகிற நம்முடைய முதல் அமைச்சர் அவர்கள் அண்ணாவினுடைய தம்பியா என்று கேட்க விரும்புகிறேன்.

மாண்புமிகு பேரவைத் தலைவர்: இந்த விவாதம் அண்ணாவினுடைய தம்பி யார் என்பதைப் பற்றிய விவாதம் அல்ல. இது, மாநில சுயாட்சிப் பற்றியது. அண்ணாவினுடைய தம்பி யார் என்பதைப் பற்றியல்ல விவாதம். ஆகவே அதை டெவலப் செய்துகொண்டு போக வேண்டாம்.

திரு. க. உரொ. எட்மண்ட்: இன்றையதினம் நாட்டு மக்களிடம் அந்தக் கேள்விக் குறியை எழுப்பிக் கொண்டிருக்கிறார்கள். எந்தச் சூழ்நிலையிலும் நான் ஆளும் கட்சியிலிருந்து விலகி எதிர்கட்சியில் இருக்க வேண்டிய நிலை ஏற்பட்டாலும் எதிர்கட்சியில் இருக்கிற நிலையை நான் ஏற்றுக் கொள்வேனே தவிர மதுவிலக்கை நான் ரத்து செய்ய மாட்டேன் என்று அண்ணா அவர்கள் சொன்ன கருத்தை மறந்துவிட்டு இன்றையதினம் தமிழகத்தில் மதுவிலக்கு ரத்து செய்யப்பட்டு; தமிழகத்தில் சாராயக் கடைகளையும் மதுக் கடைகளையும் திறந்து

விட்டு நான்தான் அண்ணாவினுடைய தம்பி என்று அவர்கள் சொல்வார்களேயானால் நாட்டு மக்கள் அதை ஏற்றுக்கொள்வதற்குத் தயாராகயில்லை. அதேபோல் திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பொறுத்தமட்டில், அண்ணா அவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தை ஆரம்பித்த நேரத்தில், தலைவர் பதவி வேண்டுமென்ற நிலை கழகத்தில் ஏற்பட்ட நேரத்தில், அந்தப் பதவியை, நான் தந்தை பெரியார் அவர்களுக்கு வைத்து இருக்கிறேன், அந்தப் பதவியை அவர்கள் ஏற்றுக்கொண்டு, அந்த ஆசனத்தில் அமரும்வரைக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு தலைவர் பதவி கிடையாது, அவைத் தலைவர் என்று ஒருவர் இருப்பார் என்று அண்ணா அவர்கள் சொன்ன கருத்தை மறந்துவிட்டு, தாங்கள் ஆட்சிப் பொறுப்பு ஏற்றவுடனே பொதுச் செயலாளர் தேர்தலில் போட்டி வருகிற நேரத்தில் . . . .

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: படியரிசித் திட்டம் கைவிடப்பட்டது, மதுவிலக்கு ஒத்தி வைக்கப்பட்டது, திராவிட முன்னேற்றக் கழகத்தில் தலைவர் என்ற புதிய பதவி ஏற்பட்டது எல்லாம், நாமெல்லாம் ஒன்றாக இருந்தபோது நடந்த காரியங்களா அல்லது நீங்கள் பிரிந்து போன பின்பு நடந்த காரியங்களா ?

திரு. க. உரொ. எட்மண்ட்: நாமெல்லாம் ஒன்றாக இருந்த போது நடந்த காரியங்கள்தான். ஜனநாயகத்தில் பெரும்பான்மை கருத்தை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலையில் நாம் அன்று அதை ஏற்றுக்கொண்டோம்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: மது விலக்கை ஒத்தி வைக்க வேண்டுமென்று கோவை மாநாட்டில் தீர்மானத்தைக் கொண்டு வந்து, முன்மொழிந்து, ஒரு மணி நேரம் பொதுக் குழு உறுப்பினர்களை அவர்கள் பக்கம் ஈர்த்தவர்களை புரட்சி நடிகர் எம்.ஜி.ஆர். அவர்கள் தான்.

திரு. க. உரொ. எட்மண்ட்: அவர்கள் கட்சிக் கட்டுப்பாட்டை மீறக்கூடாது என்பதற்காக (சிரிப்பு) எதற்கெடுத்தாலும் உங்களுக்குச் சிரிப்பது தான் வழக்கம். நான் ஒன்று சொல்ல

விரும்புகிறேன். நீங்கள் சிரிப்பதில் பயன் இல்லை. உங்களின் கட்சியின் தலைவர், முதலமைச்சராக இருப்பவர், பல ஆண்டுகளுக்கு முன்பு 'மனோகரா' படத்திற்கு வசனம் எழுதியிருக்கிறார்கள். "சிரித்தவர்கள் வாழ்ந்ததும் இல்லை; அழுதவர்கள் கெட்டதுமில்லை, என்று ஜெகம் சொல்லும் சரித்திரம்" என்று நம்முடைய முதலமைச்சர் அவர்கள் எழுதியிருக்கிறார்கள். ஆகவே நீங்கள் சிரிக்காதீர்கள்.

திரு. கு. காமாட்சி: இது ஆனந்த சிரிப்பு, ஆணவச் சிரிப்பு இல்லை.

திரு. க. உரொ. எட்மண்ட்: எம்.ஜி.ஆர். அவர்கள் ஓராண்டு காலம், இரண்டாண்டு காலம் மதுவிலக்கு ஒத்திவைக்கப்படும் என்று சொன்னதால் ஆதரித்துப் பேசினார்கள். அந்தத் தீர்மானத்தை ஆதரித்தபோது அப்படிச் சொன்னார்கள். அன்றுள்ள நிலைமை என்ன? நீங்கள் செயற்குழுவில் முடிவு எடுத்தீர்கள். செயற்குழுவின் முடிவு பொதுக் குழுவிற்கு வருகிறது. கட்சியில் பொறுப்புள்ள பதவியில் இருந்ததால், அதை ஆதரித்துப் பேசி இருக்கிறார்கள். உள்ளுக்குள்ளே அவர்கள் எதிர்த்தார்கள் என்பதை என்னால் நிரூபிக்க முடியும். அந்த மதுவிலக்கை தள்ளி வைக்க பொதுக் குழுவில் தீர்மானம் நிறைவேற்றிய உடனே, மதுவிலக்கை எதிர்த்துப் பிரசாரம் செய்வதற்காக அவர் தலைமையில் ஒரு குழுவை அமைத்தார்கள்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: அவர் தீர்மானத்தை ஆதரித்துப் பேசி, தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றிய பிறகு, 'ஆனந்தவிகடனில்' 'நான் ஏன் பிறந்தேன்' என்று அவர் எழுதிய கட்டுரையில், கலைஞருக்கு இதைத் தவிர வேறு வழியில்லை; அந்தக் காரணத்தால் மதுவிலக்கு ஒத்தி வைக்கப்பட்டு இருக்கிறது என்று அழுத்தம் திருத்தமாக குறிப்பிட்டு இருக்கிறார்கள். பிறகு அவர்கள் தலைமையில் ஒரு பிரசாரக் குழு போடப்பட்டது. அந்தப் பிரசார குழு அமைப்பாளராக இருந்து அதை நடத்த வேண்டியவர் அவரே. அந்தப் பிரசாரக் குழுவை ஒரு முறை கூட்டினார்கள். பிறகு கூடவே இல்லை. அந்தப் பிரசாரம் செய்யவில்லை.

**திரு. க. உரொ. எட்மண்ட்:** அவர் பிரசாரம் செய்தார், செய்யவில்லை என்பது வேறு பிரச்னை. நீங்கள் மதுவிலக்குத் தீர்மானத்தை கொண்டு வந்தீர்கள், வந்த பின்னாலே, அதை எதிர்த்துப் பிரசாரம் செய்ய ஒரு குழுவை அமைத்து, அந்தக் குழுவிற்கு அவர்களையே தலைவராகப் போட்டு இருக்கிறீர்கள் என்றால் அவர் உங்கள் கருத்திலிருந்து மாறுபட்ட கருத்தைக் கொண்டு இருக்கிறார் என்பது தெளிவு. ஏதோ பொதுக் குழுவில் ஆதரித்துப் பேசினார் என்பது நியாயமல்ல என்பதை மாண்புமிகு முதலமைச்சருக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** அடிக்கடி குறுக்கிடுவதற்கு மன்னிக்கவும். அந்தக் குழுவிலே இங்கே அமர்ந்திருக்கிற—இப்போது இருக்கும் திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர்கள் திரு. சி. வி. எம். அண்ணாமலை, நடிகர் டி. வி. நாராயணசாமி ஆகியோர் அந்தக் குழுவில் உறுப்பினராக இருந்தார்கள். அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தினர் மட்டும் வாரிசு இல்லை. திராவிட முன்னேற்றக் கழகத்தில் உள்ளவர்களுக்கும் மதுவிலக்குக் கொள்கையில் பூர்ணமான ஆதரவான கொள்கை உண்டு. ஒத்திவைக்க வேண்டிய சூழ்நிலையை விளக்கவும், மதுவிலக்குப் பிரச்சாரத்தைச் செய்வதற்கும் தான் அந்தக் குழு அமைக்கப்பட்டது.

**திரு. க. உரொ எட்மண்ட்:** நம்முடைய முதலமைச்சர் அவர்கள் கூட இந்த மன்றத்தில் அந்தத் தீர்மானத்தைக் கொண்டு வருகிற நேரத்தில் சொன்னார்கள், இதை இப்போதைக்கு ஒத்தி வைக்கிறோம் என்று சொன்னார்கள். எவ்வளவு நாளைக்கு ஒத்தி வைத்து இருக்கிறீர்கள்? மதுவிலக்கு நாட்டில் இருந்து கொண்டிருக்கிறது. ஒத்திவைப்போம் என்று சொன்னால் ஒரு சில குறிப்பிட்ட நேரத்திற்கு, ஒரு ஆண்டு, இரண்டு ஆண்டுகளுக்கு. நீங்கள் எப்படிப்பட்ட வார்த்தையை உபயோகித்தீர்கள்? தற்காலிகமாக ஒத்தி வைத்திருக்கிறோம் என்றீர்கள். அதில் நம்பிக்கை இல்லாத காரணத்தால் தான் இன்றையதினம் புரட்சித் தலைவர் அதை எதிர்த்துத் தீர வேண்டுமென்ற அடிப்படையில், இன்றைக்கு நாங்கள் எல்லாம் எதிர்த்துக் கொண்டிருக்கிறோம் என்பதை மாத்திரம் சொல்லிக்கொள்கிறேன்.

[திரு. க. உரோ. எட்மண்ட்] [1974 ஏப்ரல் 20

மதுவிலக்கு வேண்டும். நீங்கள் மதுவிலக்கு ரத்து செய்ததை எதிர்க்கிறோம் என்ற அளவில் சொல்லிக்கொண்டு, அண்ணாவின் உண்மையான தம்பிகள் யார் என்பதை இன்றையதினம் நாட்டு மக்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தினர் தான் அண்ணாவின் உண்மையான தம்பிகள்.

இன்றையதினம் இந்த அரசாங்கத் தீர்மானத்தின் மீது பேசுகிற நேரத்தில் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் கொள்கைகளை நான் மிகத் தெளிவாகக் கோடிட்டுக் காட்ட விரும்புகிறேன்.

அண்ணா திராவிட முன்னேற்றக் கழத்தைப் பொறுத்த வரையில், நம்முடைய காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள், குறிப்பாக நம்முடைய மாரிமுத்து அவர்கள் பேசுகிற கருத்தை நாங்கள் நிச்சயமாக ஏற்றுக்கொள்ளவில்லை. எதிர்க்கட்சித் தலைவர் ஆர். பொன்னப்ப நாடார் அவர்கள் பேச இருக்கிற கருத்தை நாங்கள் நிச்சயமாக ஏற்றுக்கொள்ளவில்லை. அண்ணா அவர்கள் மாநிலங்களுக்கு எந்தெந்த அதிகாரங்கள் வேண்டும், மாநிலங்கள் பொருளாதார நிலைமையை பெருக்கிட, மாநிலங்களில் தொழில் வளர்ச்சி பெறுவதற்காக ஒரு மாநில அரசாங்கம் எந்தெந்த அதிகாரங்களைப் பெற வேண்டுமென்று அண்ணா அவர்கள் தான் உயிரோடு இருந்த காலத்தில் எடுத்துச் சொன்னாரோ அத்தனைக் கொள்கைகளையும் முழுமையாக 100-க்கு 100 சதம் கடைபிடிக்கிறவர்களாக அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் இருக்கிறது, நிச்சயமாக ஏற்றுக்கொள்கிறது என்பதை நான் இந்த மன்றத்தில் தெளிவாகக் கூறிக்கொள்ள கடமைப் பட்டவனாக இருக்கிறேன்.

ஆனால் என்னுடைய சந்தேகம் எல்லாம் நம்முடைய முதலமைச்சர் அவர்கள் இதற்கு 'மாநில சுயாட்சி' என்று பெயர் கொடுத்து இருக்கிறார்கள். அவர் பேசும்போது சொன்னார்கள். அன்று பேரவைத் துணைத் தலைவர் கூடச்

சொன்னார்கள். 'அடானமி' என்பது கிரேக்க வார்த்தை. 'அடா' என்றால் 'செல்ப்-ரூல்' 'னமி' என்றால் 'கவர்ன்மென்ட்'. ஆகவே, செல்ப்-கவர்ன்மென்ட் என்று விளக்கம் சொன்னார்கள்.

ஆனால் என்னுடைய சந்தேகம் எல்லாம், 'ஸ்டேட் அடானமி' என்ற வார்த்தைக்கு 'மாநில சுயாட்சி' என்று எங்கே சொல்லியிருக்கிறார்கள் என்று கேட்டால் நான் படித்த அளவில் அறிஞர் அண்ணா அவர்கள் மாநில சுயாட்சி என்கிற வார்த்தையை தன்னுடைய வாழ்நாளில் எங்குமே உபயோகித்து இருப்பதாக எனக்குத் தெரியவில்லை என்பதைத்தான் நான் இந்த மன்றத்தில் கூறிக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

**திரு. எம். ஏ. லத்திப் :** தலைவரவர்களே, அன்றைக்கு 'அடானமி' என்பதற்கு துணைத் தலைவர் கொடுத்த விளக்கம் சரியானது. 'அடானமி' என்றால் 'இன்டிபென்டன்ட் கவர்ன்மென்ட்' என்று உள் அர்த்தம் அந்த வார்த்தைக்கு வரவில்லை.

'Self Government, Independent Government'

என்ற அளவில் அது சொல்லப்பட்டதே தவிர

'Self-propelled Government or Self-sufficient independent State or independent Government'

என்ற அளவில் வராது. அதை மாற்றிக் கூற வேண்டாம் என்று மாண்புமிகு எட்மண்ட் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. கோவை செழியன் :** ஆக்ஸ்போர்டு இங்கிலீஷ் டிக்ஷனரியில் 'அடானமி' என்பதற்கு கிரேக்க வார்த்தை 'அடா' என்றால் மாநில ஆட்சி, 'னமி' என்றால் 'லா' என்ற பொருள் தான்.

**திரு. க. உரொ. எட்மண்ட் :** தலைவரவர்களே, இங்கே லத்தீப் அவர்கள் ஏதோ விளக்கத்தைச் சொல்லியிருக்கிறார்கள். இந்திய யூனியன் முஸ்லீம் லீக் என்ன கருத்து கொண்டிருக்கிறது என்று எனக்கு அக்கறை இல்லை. ஸ்டேட் அடானமி என்கிற வார்த்தைக்கு என்ன விளக்கம் கொடுத்து இருக்கிறார்கள், அவர்களுடைய

உரையில் அதற்கு என்ன விளக்கம் என்று அவர்கள் எடுத்துக் காட்டியிருக்கிறார்கள் என்பதைத்தான் நான் கவலைப்படுகிறேனே தவிர லத்தீப் அவர்கள் கோடிட்டுக் காட்டுவதைப் பற்றி எனக்கு அக்கறை இல்லை.

ஸ்டேட் அடானமி பற்றி நம்முடைய அறிஞர் அண்ணா அவர்கள் இந்தச் சட்ட மன்றத்தில் 1967-ம் ஆண்டு ஜுன் மாதம் 27-ம் தேதி நடைபெற்ற அந்த நிகழ்ச்சியிலே கலந்து கொண்டு பேசும்போது குறிப்பிட்டு இருக்கிறார்கள்.

"திராவிட நாடு வேண்டுமென்று கேட்டதற்குக் காரணமே இங்கே தொழில் வளர்ச்சி ஏற்பட வேண்டும். பிராந்திய சமநிலை ஏற்படுவதற்குப் புதுப் புது தொழில்கள் ஆரம்பிக்கப்பட வேண்டும் என்பது தான்". அதை நாங்கள் விட்டு விடவில்லை.

அடுத்து, மொழி பாதுகாக்கப்பட வேண்டும் என்பதற்காக திராவிட நாடு கேட்டோம். அதை விட்டுவிடவில்லை.

மத்திய சர்க்காரிடம் அதிகாரங்கள் குவியலாக இருக்கக் கூடாது என்பதற்காகக் கேட்டோம், அதை விட்டு விடவில்லை.

மாநில சர்க்கார் பல அதிகாரங்களை பல துறைகளிலும் பெற வேண்டும் என்பதற்காகக் கேட்டோம். அதை நாங்கள் விட்டு விடவில்லை.

பண்பாடு காப்பாற்றப்பட வேண்டும் என்பதற்காகக் கேட்டோம். அதை நாங்கள் விட்டு விடவில்லை.

ஆகவே, திராவிட நாடு நாங்கள் கேட்டதற்கான காரணங்களில் ஒன்றைக்கூட விட்டு விடவில்லை. அதற்குக் காரணம் என்னவென்றால் அவை நியாயமான காரணங்கள், மனமார்ந்து ஏற்றுக் கொண்ட காரணங்கள், "நாங்கள் திராவிட நாட்டை விட்டு விட்டோம்" இன்னும் சொல்கிறார்கள். "திராவிட நாடு கிடைத்தால் என்ன என்ன பெறுவோமோ அவை ஒவ்வொன்றையும் இந்திய யூனியனின் உள்ளே இருந்தே பெறலாம், பெறவேண்டும், பெற முடியும் என்ற நம்பிக்கையிலே தான் இருக்கிறோமே தவிர,

திராவிட நாட்டுக்கான காரணங்கள் ஒன்றையும் நாங்கள் விட்டுவிடவில்லை. . . நாடு பிளவுபடக் கூடாது என்றார்கள், ஒத்துக்கொண்டோம். தனித்திருந்தால் அந்நியத் தலையீடு ஏற்படும் என்றார்கள், உணர்கிறோம். திராவிட நாட்டைப் பெறுகின்ற காரணத்தினால் ஏற்படக்கூடிய நன்மைகளை உள்ளே இருந்தே பெறலாம் என்றார்கள், அதை நம்புகிறோம்" என்று சொல்லியிருக்கிறார்கள்.

(முற்பகல் 10-30)

இது எதைக் காட்டுகிறது? அண்ணா அவர்கள் அன்றைக்கே நினைத்திருந்தால் சட்ட மன்றத்தில் பேசுகின்ற நேரத்தில் சொல்லி யிருக்கலாம். இதற்காகத் தான் நான் மாநில சுயாட்சி கேட்கிறேன் என்று திட்டவட்டமாக ரத்தனச் சுருக்கமாக ஒரு வார்த்தையிலே சொல்லியிருக்கலாம். தி.மு.க. அமைச்சர்கள் உள்பட இந்த மன்றத்தில் இருக்கிற அத்தனை தி.மு.க. உறுப்பினர் களும் எங்களை உட்படுத்தி ஏன் இந்த மன்றத்தில் இருக்கிற 234 உறுப்பினர்கள் தமிழகத்தில் அண்ணாவைப் போன்ற பேரறிஞர் இன்னும் பிறக்கவில்லை, இனிமேல் பிறக்கப் போவதும் இல்லை என்பதை நிச்சயம் ஒப்புக் கொள்வார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

அந்த அடிப்படையில் அவ்வளவு பெரிய அறிஞராக இருந்த அண்ணா, நாட்டு மக்களால் அண்ணா என்று ஒப்புக் கொள்ளப்பட்ட அண்ணா, பல்வேறு நாட்டு அரசியல் தலைவர்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட அண்ணா அவர்கள் அன்றைக்கே ரத்தனச் சுருக்க மாக மாநில சுயாட்சி என்ற வார்த்தையைப் பயன்படுத்தி இருக்கலாம். ஆனால் அவர்கள் எதைச் சொன்னார்கள்.

மாநில சுயாட்சி என்று சொல்லாமல் கூடுதல் அதிகாரத்தைக் கேட்கிறேன் என்று தான் சொன்னார். இந்த நாட்டினுடைய பொருளாதாரத்தைப் பெருக்குவதற்காக, நாட்டினுடைய தொழில் வளத்தைப் பெருக்குவதற்காக நான் கூடுதல் அதிகாரத்தைக் கேட்கிறேன் என்று தான் சொல்லியிருக்கிறாரே தவிர, அண்ணா அவர்கள் எங்கேயாவது மாநில சுயாட்சி என்ற வார்த்தையை உபயோகித்தாரா என்று எங்களால் சுட்டிக் காட்ட

முடியவில்லை. உங்களாலும் சுட்டிக் காட்ட முடியாது என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு. அண்ணா அவர்கள் தான் உயிரோடு இருந்த காலத்தில், கடைசிக் காலத்தில் தம்பிக்கு எழுதிய ஒரு கடிதத்தில், காஞ்சி என்ற பத்திரிகையில் எழுதிய கடிதத்தில் அவர் சொல்லுகிறார். அந்தக் கடிதத்தில் அவர் எழுதும் பொழுது மிகவும் வேதனைப்பட்டுச் சொல்லியிருக்கிறார்.

"ஆகவே தான் மாநிலங்கள் அதிக அளவில் அதிக அதிகாரம் பெறத்தக்க விதத்தில் இந்திய அரசியல் சட்டம் திருத்தி அமைக்கப்பட வேண்டும் என்பது பற்றி வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் எடுத்துக் கூறி வருகின்றேன்"

என்று மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள். கூடுதல் அதிகாரம் பெறவேண்டும் என்று தான் சொல்லியிருக்கிறார்களே ஒழிய, மாநிலங்களுக்குக் கூடுதல் அதிகாரம் வேண்டும் என்று தான் சொல்லியிருக்கிறார்களே ஒழிய, இப்படி ஒரு கடிதத்தை தன்னுடைய தம்பிக்கு உடல் நலம் இல்லாத காலத்தில் கூட இரவு 12 மணிக்கு விழித்தெழுந்து அண்ணா அவர்கள் தன்னுடைய கருத்தைத் தெளிவுபட ரத்தனச் சுருக்கமாகச் சொல்ல வேண்டும் என்ற எண்ணத்தில் சொல்லியிருக்கிறார்கள்.

மாநில சுயாட்சி நான் கேட்கிறேன் என்று அவர் கடிதத்தில் எழுதவில்லை. மாநில சுயாட்சி என்ற வார்த்தைகளுக்குப் பல்வேறு வழிகளில் பொருள் கொடுக்கலாம், டிக்ஷனரியைப் பார்த்தால் வெவ்வேறு அர்த்தம் இருக்கிறது. 'கம்ப்ளீட் இண்டிபெண்டன்ஸ்' என்று சொல்வதற்கு வெவ்வேறு அர்த்தங்களைக் கொடுத்திருக்கிறார்கள். ஆகவே, நாட்டு மக்கள் இதற்கு என்ன பொருள் என்பதிலே ஒரு முடிவுக்கு வராமல் திண்டாடக் கூடாது என்பதற்காகத் தான் அண்ணா அவர்கள் தான் கேட்டது கூடுதலான அதிகாரம் என்பது தான், மாநில சுயாட்சி என்பது அல்ல என்பதை மிகத் தெளிவுபடச் சொல்லியிருக்கிறார்கள்.

மாநில சுயாட்சி என்ற வார்த்தைகளையே உபயோகப்படுத்தாமல் இருந்திருக்கிறார்கள்.

ஆனால், இன்றையதினம் இருக்கிற நம்முடைய முதல் அமைச்சர் அவர்கள் அந்த வார்த்தைகளை உபயோகிக்கின்ற நேரத்தில் தான் எங்களுக்குச் சந்தேகமாக இருக்கிறது. இவர்களைக் கேட்டால் சொல்கிறார்கள், நாங்கள் பிரிந்து போகின்ற உரிமை கேட்கவில்லை என்று சொல்கிறார்கள்.

நம்முடைய கல்வி அமைச்சர் மாண்புமிகு நாவலர் அவர்கள் கூட நேற்றையதினம் சட்டமன்றத்தில் பேசும்பொழுது சொல்லி யிருக்கிறார்கள். மாநில சுயாட்சி என்பதற்குப் பொருள் தனி ஆட்சி அல்ல, தன்னாட்சி என்று சொல்லியிருக்கிறார்கள். அது தான் உண்மையாக இருந்தால் அதை நாங்கள் ஏற்றுக் கொள் வோம். நீங்கள் தனி ஆட்சி கேட்கிறீர்கள். அண்ணா அவர்கள் கேட்கிறார்கள், 'செல்ஃப்டிட்டர்மினேஷன்' என்று ராஜ்ய சபாவில் கேட்கிறார்கள். நீங்கள் கேட்பது தன் ஆட்சி அல்ல, நீங்கள் கேட்பது தனி ஆட்சி என்கின்ற சந்தேகம் எங்களுக்கு இருக்கிறது. அதற்குப் பல சூழ்நிலைகள் தமிழகத்தில் உருவாகி இருக்கின்றன.

எங்கள் கட்சி சார்பிலே பேசிய நம்முடைய சீனிவாசன் அவர்கள் சொல்கிற பொழுது குறிப்பிட்டுச் சொன்னார்கள். மண்டபத்தில் ஒரு நிகழ்ச்சியில் நம்முடைய பிரதமர் அவர்கள் கலந்து கொள்கிறார்கள். அதற்கு முன்தைய தினம் மாண்புமிகு முதல் அமைச்சர் அவர்கள் மதுரையில் பேசிய கூட்டத்தில் என்ன கருத்துக்களைப் பேசினார்கள்? ஒன்றாக இருந்த இந்தியா இரண்டாகப் பிரிந்தது, இரண்டாக இருந்த இந்தியா மூன்றானது, மூன்றாக இருந்த இந்தியா— நான் அதற்கு மேல் சொல்ல மாட்டேன் என்று சொன்னால் நாங்கள் சந்தேகப்படுகிறோம்.

அது மாத்திரம் அல்ல. இன்றைக்கு நாட்டில் எவ்வளவோ பெரிய எழுச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. மொழி வழியிலே கிளர்ச்சிகளை உருவாக்குகிறார்கள். அன்றைக்குக் கூட ஒரு ஒத்திவைப்புத் தீர்மானம் இந்த மன்றத்தில் கொண்டு வந்தேன். வெஸ்டு கோஸ்டு ரயிலில் பிரயாணம் செய்த மலையாள பிரயாணிகள் எப்படித் தாக்கப்பட்டார்கள் என்பது பற்றி நான் சொன்னபொழுது, மாண்புமிகு முதல் அமைச்சர் அவர்கள்

[திரு. க. உரொ. எட்மண்ட்] [1974 ஏப்ரல் 20

ஆணித்தரமாகச் சொன்னார்கள். அப்படி எந்த நிகழ்ச்சியும் நடை பெறவில்லை, அப்படி நிகழ்ச்சி நடந்தால் அதற்கான நடவடிக்கையை நாம் அவசியம் எடுப்போம் என்று சொன்னார்கள்.

ஆனால், அதற்குப் பிறகு என்ன நடந்திருக்கிறது. இன்றைக்கு சென்னையிலே பல்வேறு இடங்களில் சுவரொட்டிகளை ஒட்டியிருக் கிறார்கள். அதிலே இருக்கிற பொருள் எதிலிருந்து எடுக்கப் பட்டிருக்கிறது. நாத்திகம் என்ற பத்திரிகையிலிருந்து எடுக்கப் பட்டிருக்கிறது. நாத்திகம் என்ற பத்திரிகை முழுக்க முழுக்க தி.மு.க. பத்திரிகை. தி.மு.க., அதன் தலைவராக இருக்கும் முதல் அமைச்சருக்குத் தனிப்பட்ட முறையில் நல்ல முறையில் அவர் களுக்கு விளம்பரம் கொடுத்து செய்திகளைப் போடக்கூடிய பத்திரிகை நாத்திகம் என்ற பத்திரிகை. அந்தப் பத்திரிகை யிலுள்ள செய்தியைச் சுவரொட்டியாகப் போட்டிருக்கிறார்கள். உங்களுடைய அனுமதியோடு அதை வாசிக்கிறேன்.

தமிழா ! உணர்வாய் !!

உணவுக் கலகம் நடக்கும் பீகார் மாநிலத்தின் தலைமைச் செயலாளர் யார் தெரியுமா ?

பி. கே. ஜே. மேனன்.

சத்தியா ஸ்டுடியோ, சுதர்சன் டிரேடிங் கம்பெனி போன்றவற்றில் மட்டுமல்ல, திருவனந்தபுரம் போகும் ரயிலில் கூட வேறு மொழிக் காரர்களுக்கு இடம் தராத மலையாளிகள் இன்று இந்தியா பூராவும் தங்கள் ஆதிக்கத்தையே உண்டாக்கிக் கொண்டார்கள். இளிச்சவாய் தமிழா ! உன் தலைநகரத்தில் காணும் இடமெல்லாம் மலையாளிகள். அரசு ஊழியர்க ளெல்லாம் கேரளத்தார். தமிழர் களின் தலைநகரில் தமிழன் ரிக்ஷா ஓட்டுகிறான். பிழைக்க வந்த மலையாளிகள் வள்ளலாகி இருக்கிறார்கள்.

நாளை அவர்கள் தான் தமிழனை ஆளப் போகிறார்களாம். அது தான் தேசிய ஒருமைப்பாடாம்.

உணர்வு பெறு. இன்றேல் நீ மலையாளிகளுக்கு அடிமை யாவாய்.

(நன்றி நாத்திகம்) அச்சடித்தோர்—போளூர் தமிழர் இளைஞர் அணி". இம்மாதிரி சுவரொட்டி ஒட்டியிருக்கிறார்கள். நாத்திகம் பத்திரிகைச் செய்திதான் அதில் கண்டிருக்கிறது. திரு. செ. கந்தப்பன் அவர்கள் மேஜையை தட்டுகிறார். ஆகவே தான் நாங்கள் சந்தேகப்படுகிறோம்.

**திரு. செ. கந்தப்பன் :** தலைவர் அவர்களே, ஒவ்வொரு பிரச்னையையும் ஒவ்வொருவர் எப்படிப் பார்க்கிறார் என்பதைப் பொறுத்திருக்கிறது. என் வீட்டை நான் அழகுபடுத்துவதால் ஊரின் அழகு கெட்டுவிடும் என்கிற வாதத்தை நான் ஒரு போதும் ஏற்றுக் கொள்ளமாட்டேன். ஏற்கனவே பல மொழிக்காரர்களுக்கு ஏற்பட்டுவிட்ட ஒரு உணர்ச்சி தமிழனுக்கும் இப்பொழுதுதாவது ஏற்பட்டதே என்கிற உணர்ச்சி பூர்வமாகத் தான் நான் இந்தக் கருத்தை ஆதரித்துக் கை தட்டினேன். கேரளத்தவர் மீதோ அல்லது எந்த மொழிக்காரர் மீதோ எனக்கு காழ்ப்பு உணர்ச்சி இல்லை. நான் பிறந்த மண்ணுக்கும், நான் பேசுகின்ற மொழியின் மீதும் என்றைக்கும் உணர்வு உள்ளவனாகவே இருப்பது மற்றவர்களை வெறுப்பது ஆகாது.

**திரு. க. உரோ. எட்மண்ட் :** அதற்காக ஒரு புத்தகத்தை கொண்டு வந்திருக்கிறேன். திரு. செ. கந்தப்பன் அவர்கள் சொல்வார்கள் என்று தெரியும். அண்ணா அவர்களின் காலத்துக்குப் பின்னால் தமிழர் உணர்வு என்ற உணர்ச்சி தமிழ் நாட்டில் பரப்பப்பட்டிருக்கிறது. அண்ணா தி.மு.க. ஆரம்பிக்கப்பட்ட பின்னால் தான் இன்றைக்குத் தமிழன், மலையாளி, கன்னடியன், தெலுங்கன் என்ற உணர்வுகள் தமிழ் நாட்டில் பரப்பப்பட்டிருக்கிறது.

ஆனால், அண்ணா அவர்கள் எந்த நோக்கத்தில் இருந்திருக்கிறார்கள் என்பது நம்முடைய திரு. கந்தப்பன் அவர்களுக்குத் தெரியும். ராஜ்ய சபையில் அண்ணா அவர்கள் முதல் முறையாக தன்னுடைய உரையை ஆற்றிய நேரத்தில் என்ன சொல்கிறார்கள். அவர் நான் தமிழன் என்று சொல்லவில்லை. மாறாக என்ன சொல்கிறார்கள் என்று பார்த்தால் . . .

[திரு. க. உரோ. எட்மண்ட்] [1974 ஏப்ரல் 20

'I belong to the Dravidian stock. I am proud to call myself a Dravidian.'

என்று தான் சொல்லியிருக்கிறார்கள் என்பதை நண்பர் கந்தப்பன் அவர்கள் உணர வேண்டும்.

**திரு. செ. கந்தப்பன்:** மொழி பற்றி அல்ல, ஸ்டாக் என்பது இனத்தைப் பற்றியது தான். இனத்தால் திராவிடன், மொழியால் தமிழன் என்று பல முறை அண்ணா அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். நண்பர் எட்மண்ட் அவர்கள் அண்ணா அவர்கள் கூறியதைத் திருத்திக் கூற வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன். தமிழனை என்றைக்கும் மற்றவர்கள் அடக்கி ஆளுவதற்கு அண்ணா எந்தக் காலத்திலும் ஏற்றுக் கொள்ளவில்லை. அண்ணாவின் பெயரை கட்சிக்கு வைத்துக் கொண்டு அந்தப் பெருமகன் பெயருக்குக் களங்கம் உண்டாக்க வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

**திரு. க. உரோ. எட்மண்ட்:** அண்ணா பெயரை வைத்துக் கொண்டு நீங்கள் தான் அவர்களுக்குக் களங்கம் உண்டாக்கிக் கொண்டு வருகிறீர்கள். அண்ணா திராவிடன் என்று சொன்னார் தமிழன் என்ற உணர்வோடு. சட்டம் இயற்றுகின்ற காலத்தில் குறிக்கோள் பற்றி அண்ணா அவர்கள் சொன்னது தமிழகம், ஆந்திரா, கர்நாடகம், கேரளம் ஆகிய மொழிவழியில் தன்னாட்சி முறை திராவிட சமதர்மக் கூட்டாட்சி நிறுவ கடமைப்பட்டிருக்கிறேன் என்பது. அண்ணா குறிக்கோள் திராவிட சமதர்ம கூட்டாட்சி. நீங்கள் தமிழர், மலையாளி என்று சொன்னால், திராவிடக் கூட்டாட்சி அமைக்கப் போகிறீர்களா? உங்களுடைய இந்தத் தீர்மானத்தின்படி கேரளக்காரர்கள் என்ன செய்வார்கள்? கர்நாடகக்காரர்கள் என்ன செய்வார்கள்? ஆந்திராவைச் சேர்ந்தவர்கள் என்ன செய்வார்கள்?

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** தலைவரவர்களே, அவர்கள் தவறான விளக்கத்தைக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். திராவிட கூட்டாட்சியை 1963-ம் ஆண்டிலேயே பொதுக்குழுவைக் கூட்டி, விட்டுவிட்டார்கள்.

[1974 ஏப்ரல் 20]

**திரு. க. உரோ. எட்மண்ட்:** அண்ணா அவர்கள் திராவிட கூட்டாட்சியை விட்டுவிட்டார்கள்; இல்லை என்று சொல்லவில்லை. ஆனால் இன்றைக்கு நீங்கள் தமிழினம், மலையாளி என்ற உணர்வை எழுப்பிக் கொண்டிருக்கிறீர்கள். இப்படி ஒவ்வொரு மாநிலத்திலும் ஏற்பட்டால் நிலைமை என்னவாகும்? மாநில சுயாட்சியின் பேரால் தமிழ் நாட்டுக்குக் கூடுதல் அதிகாரம் வேண்டு மென்று கேட்பதாக நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால் உங்களுடைய போக்கைப் பார்த்தால், நீங்கள் ஆதரவு கொடுக்கிற சக்திகளைப் பார்த்தால், அந்தச் சக்திகள் வளர்ந்து வந்தால் நாளைக்கு நிலைமை என்னவாகும் என்பதை அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் எண்ணிப் பார்க்கிறது.

இங்கே தமிழர்கள் மாத்திரம் இருக்க வேண்டும்; மலையாளிகள் இருக்கக் கூடாது என்று சொன்னால் இன்றைக்கு மற்ற மாநிலங்களிலே இருக்கின்ற தமிழர்களின் நிலை என்ன என்பதை நாங்கள் எண்ணிப் பார்க்கிறோம். இன்றைக்குத் தமிழர்கள் மற்ற மாநிலங்களிலே, அயல் நாடுகளிலே கூட பெரிய பெரிய பொறுப்புக்களில் இருக்கிறார்கள். மலேசியாவிலே சம்பந்தம் என்ற தமிழர் அமைச்சராக இருக்கிறார். மாணிக்கவாசகம் அமைச்சராக இருக்கிறார். சிங்கப்பூரிலே ராஜரத்தினம் அமைச்சராக இருக்கிறார். இலங்கையிலே குமாரசூரியா அமைச்சராக இருக்கிறார்.

தமிழ் நாட்டில் தமிழர்கள் தான் இருக்க வேண்டுமென்று சொன்னால், இதேமாதிரியான உணர்வுகள் மற்ற இடங்களிலும் ஏற்பட்டால், அங்கெல்லாம் இருக்கின்ற தமிழர்களின் நிலை என்ன? அவர்கள் இங்கே துரத்தப்படுவார்கள்.

அதுமட்டுமல்ல. இன்றைக்கு டில்லி தலைநகரிலேயே இருக்கின்ற அதிகாரிகளில் பலர் மலையாளிகளாக இருக்கிறார்கள். இதையெல்லாம் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். பெரிய பெரிய அதிகாரிகள் எல்லாம் மலையாளிகளாக இருக்கிறார்கள். தமிழ் நாட்டிலேயும் பல அதிகாரிகள் மலையாளிகளாக இருக்கிறார்கள். ஒவ்வொரு மாநிலத்திலும் தமிழர்களும் அதிகாரிகளாக இருக்கிறார்கள். தமிழ்நாட்டில் தமிழர்கள்தான் இருக்க வேண்டும் என்று இங்கே சொன்னால், மற்ற மாநிலத்திலே உள்ளவர்கள் எல்லாம் இளித்த வாயர்களாகவா இருப்பார்கள்?

**மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

[திரு. க. உரொ. எட்மண்ட்] [1974 ஏப்ரல் 20

டில்லி தலைமைச் செயலகத்திலே இருக்கின்ற தமிழர்கள் தமிழ்நாட்டுக்கு விரட்டப்படுவார்கள். கேரளத்தில் இருக்கின்ற தமிழர்கள் விரட்டப்படுவார்கள். பம்பாயிலே இருக்கின்ற தமிழர்கள் விரட்டப்படுவார்கள், கர்நாடகத்தில் இருக்கின்ற தமிழர்கள் விரட்டப்படுவார்கள், ஆந்திராவிலே இருக்கின்ற தமிழர்கள் விரட்டப்படுவார்கள். இப்படி எல்லோரும் தமிழ் நாட்டுக்கு விரட்டப்பட்டால்; அவர்கள் அங்கங்கே வாங்கிக் கொண்டிருந்த சம்பளத்திற்குத் தக்க அளவில் இங்கே வேலை கொடுப்பதற்கு இந்த அரசாங்கத்திற்கு வக்கு இருக்கிறதா என்பதைக் கேட்க நான் கடமைப்பட்டிருக்கிறேன்.

மராட்டியத்திலே உள்ளவர்களுக்குத்தான் 80 சதவிகிதம் அங்கே வேலை கொடுக்க வேண்டுமென்று தீர்மானம் போட்டிருப்பதாகச் சொன்னார்கள். நீங்களும் வேண்டுமானால் அப்படிச் செய்துகொள்ளுங்கள். அப்படி ஒரு சட்டத்தைப் போடுங்கள். அதை நாங்கள் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் இப்போது இருக்கின்றவர்களுக்குத் தொல்லை ஏற்படக் கூடாது. இதுதான் எங்களுடைய எண்ணம்.

நீண்டநாட்களாக இங்கே இருக்கிறவர்களை ஓட்டிவிட வேண்டுமென்று எண்ணிக் கொண்டிருக்கிற ஒரு கும்பல் தமிழ்நாட்டிலே இருக்கிறது என்பதை நாங்கள் அறிவோம். அந்தக் கும்பல் மீது இந்த அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது என்பதை நான் கேட்க விரும்புகிறேன். ஆகவேதான் உங்கள் நடவடிக்கையை நாங்கள் சந்தேகப்படுகிறோம். நீங்கள் மாநில சுயாட்சி என்று அண்ணா அவர்கள் சொல்லாத ஒரு வார்த்தையை இன்றைக்கு பயன்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். ஏதோ ஒரு காலத்தில் பிரிந்து போவதற்கு இன்றைக்கு வித்திடுகின்றீர்கள் என்ற சந்தேகம் தான் எங்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. காரணம் உங்களுடைய போக்கு அப்படித்தான் இருக்கிறது.

கூடுதல் அதிகாரம் வேண்டுமென்று கேட்டால் நிச்சயமாக அதற்கு நாங்கள் பூரண ஒத்துழைப்புத் தர தயாராக இருக்கிறோம். அப்படியானால் உங்களுடைய கொள்கையை நாங்கள் ஏற்றுக்கொள்கிறோம். இந்த மாநிலம் கூடுதல் அதிகாரங்களைப் பெற்றாக வேண்டும் என்பதில் எங்களுக்கு கருத்து வேறுபாடு இல்லை.

**மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

1974 ஏப்ரல் 20] [திரு. க. உரொ. எட்மண்ட்]

அண்ணா அவர்களும் அதை வலியுறுத்தி இருக்கிறார்கள். கூடுதல் அதிகாரங்களை மாநிலங்கள் பெற்றாக வேண்டும். ஆனால் அந்த அதிகாரங்களை உங்கள் கையில் கொடுக்கக் கூடாது. உங்கள் கையில் கொடுப்பதை நாங்கள் ஆட்சேபிக்கிறோம். (குறுக்கீடு—பின்னே உங்கள் கையிலா கொடுக்க வேண்டும்?) இன்றைக்கு ஆளும் கட்சியாக இருக்கின்ற திராவிட முன்னேற்றக் கழகத்தின் கையில் அதிகாரங்களை கொடுக்கக் கூடாது என்பதற்கான காரணத்தையும் நான் சொல்ல விரும்புகிறேன்.

கத்திரி இருக்கிறது. அது அழகான கத்திரியாக இருக்கிறது. அதை ஒரு தையல்காரன் கையிலே கொடுத்தால் துணியை அழகாக வெட்டி, அழகான சட்டை தைத்துத் தருவான். ஆனால் அதே கத்திரியை ஜேப்படிக்காரன் கையில் கொடுத்தால், ஜேப் படிக்காரன் கையிலே கத்திரி இருந்தால் அழகான சட்டையிலே இருக்கின்ற பை இருக்காது. அதிலே இருக்கின்ற பணமும் இருக்காது. ஜேப்படிக்காரன் பையை வெட்டிவிடுவான். அதைத் தான் நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். மாநிலங்களுக்கு கூடுதல் அதிகாரம் என்பது ஒரு நல்ல கத்திரி. அதைப் பயன்படுத்துபவர்கள் நல்ல முறையிலே பயன்படுத்த வேண்டும். ஆனால். . .

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி**: மாநிலங்களுக்கு கூடுதல் அதிகாரம் வேண்டும் என்பதை ஒத்துக் கொள்கிறார்கள். அதற்கு நன்றி. எங்கள் கையிலே அதிகாரத்தைக் கொடுக்கக் கூடாது என்று சொல்கிறார்கள். அதை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஏனென்றால் எங்களுடைய ஆட்சி உங்களுக்கு உகந்தது அல்ல. இந்த அதிகாரம் இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு வருகிறது என்று வைத்துக் கொள்வோம். நீங்கள் அல்லது வேறு ஒரு கட்சி ஆட்சிக்கு வந்த பிறகு வருகிறது. அதற்குப் பிறகு 2, 3 ஆண்டு களுக்குப் பிறகு நாங்கள் ஆட்சிக்கு வருகிறோம். அப்போது கொடுத்த அதிகாரங்களை மத்திய அரசு எடுத்துக்கொள்ள வேண்டு மென்று சொல்வீர்களா?

**திரு. க. உரொ. எட்மண்ட்**: அதை முடிவு செய்ய வேண்டியது மக்கள். மக்கள் யாரிடம் கொடுக்க வேண்டுமென்று விரும்பு கிறார்கள் என்பதை ஒரு பொதுத்தேர்தல் நடத்திப் பார்ப்போம்.

[திரு. க. உரோ. எட்மண்ட்.] [1974 ஏப்ரல் 20

அப்படிப் பார்க்க வேண்டுமென்றால் சட்டமன்றத்தைக் கலைத்து விடுவோம் (குறுக்கீடு). இல்லை யென்றால் இப்போது இருக்கின்ற சட்டமன்ற உறுப்பினர்கள் இந்த இரண்டாண்டுகளும் இருக்கட்டும். எங்களுக்கு ஆட்சேபணை இல்லை. மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் இந்தப் பிரச்சனையை ஒரு பிரச்சனையாக வைத்து, தன்னுடைய பதவியை ராஜினமா செய்யட்டும். பின் தமிழ் நாடு முழுவதும் தேர்தலை நடத்துவோம். (குறுக்கீடு). ஏன் உட்கார்ந்து கொண்டே எதையாவது சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள்? ஏதாவது கேட்க வேண்டுமென்றால் எழும்பிக் கேளுங்கள். இந்தப் பிரச்சனையை வைத்து, மாநில சுயாட்சி அல்லது மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் கொடுப்பதைத் திராவிட முன்னேற்றக் கழகத்தின் ஆட்சியில் கொடுக்க வேண்டுமா அல்லது இன்னொரு கட்சி ஆட்சிக்கு வந்த பின்னல் கொடுக்க வேண்டுமா என்று பார்க்க வாக்கெடுப்பு நடத்துவோம். மக்கள் கொடுக்கிற தீர்ப்பை தலைவணங்கி நாங்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறோம்.

---

எங்களுடைய சந்தேகம் எல்லாம், இருக்கின்ற அதிகாரத்தையே நீங்கள் எந்த வகையில் பயன்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள் என்பதைப் பார்க்கும் போதுதான் சந்தேகம் எழுகிறது. படியரிசித் திட்டத்தை ஒழித்துவிட்டீர்கள். மதுவிலக்குத் திட்டத்தை ஒழித்துவிட்டீர்கள். சாராயக் கடைகளைத் திறந்து விட்டீர்கள். இந்தமாதிரியான தவறான வகையிலே இருக்கின்ற அதிகாரங்களைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறீர்கள். மக்களுக்கு நன்மை செய்கின்ற வகையில் நியாயமான ஆட்சியை நடத்த உங்களால் முடியவில்லை. இருக்கின்ற அதிகாரங்களையே தவறான முறைகளிலே பயன்படுத்துகிறீர்கள். (குறுக்கீடு) உங்களுடைய மனச்சாட்சி சொல்லும் நீங்கள் எப்படி நடந்து கொள்கிறீர்கள் என்று. நான் இங்கே ஒருசிலவற்றைத்தான் குறிப்பிட்டேன். இப்படி ஏராளமானவற்றை எடுத்துச் சொல்லலாம். தேர்தல் நேரத்திலே . . .

---

**மாண்புமிகு திரு. செ. மாதவன்:** மாநில சுயாட்சி என்ற வார்த்தையைத் தீர்மானத்திலே போட்டிருக்கிறோம். அதை

ஆட்சேபிக்கிறார்கள். அதோடு அந்த அறிக்கையில் மாநில சுயாட்சி என்றால் என்ன? என்னென்ன அதிகாரங்கள் என்ற பட்டியலையும் கொடுத்திருக்கிறோம். அந்த அதிகாரங்களை கூடுதல் அதிகாரம் என்ற பெயரால் எதிர்க்கிறார்களா? அல்லது நியாயம்தான் என்று ஆதரிக்கிறார்களா?

**திரு. க. உரொ. எட்மண்ட்:** நான் இவ்வளவு நேரமும் அதைத்தான் கேட்கிறேன். மாநிலங்களுக்குக் கூடுதல் அதிகாரம் வேண்டுமென்று கேட்கிறோம். அதை நாங்களும் ஏற்றுக் கொள்கிறோம். ஆனால் மாநில சுயாட்சி என்றால். . .

**மாண்புமிகு திரு. செ. மாதவன்:** இந்தத் தீர்மானத்திலே, அரசியல் அமைப்புச் சட்டத்தை மூன்று பட்டியல்களாக எடுத்து, மாற்றியமைக்க வேண்டுமென்றுதான் இந்தத் தீர்மானத்தின் மூலம் கேட்கப்படுகின்றது. ஆகவே, இந்தத் தீர்மானத்தை அவர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

**திரு. க. உரொ. எட்மண்ட்:** மாநில சுயாட்சி என்று இருப்பதால் எப்படி இருந்தாலும் நாங்கள் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை.

**மாண்புமிகு திரு. செ. மாதவன்:** எதை ஏற்றுக்கொள்கிறீர்கள்? எதை மறுக்கிறீர்கள்?

**திரு. க. உரொ. எட்மண்ட்:** அதைச் சொல்வதற்கு நேரம் இல்லை. சட்டத்துறை அமைச்சரவர்கள் அதைப்பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் சொல்லட்டும். நாங்கள் தனியாக எழுதி அனுப்புவதற்குத் தயாராக இருக்கிறோம். கூடுதல் அதிகாரமாக எதை எதைக் கேட்கிறோம் அல்லது ஏற்றுக் கொள்கிறோம்; ராஜமன்னார் அறிக்கையில் எதை எதை ஏற்றுக் கொள்கிறோம்; எதை எதை ஏற்றுக்கொள்ளவில்லை என்பதை தெளிவாக எழுதி அனுப்புகிறோம். எங்களுடைய கொள்கை என்னவென்றால் அதிகாரங்களை உங்கள் கையில் கொடுக்கக் கூடாது.

[திரு. க. உரொ. எட்மண்ட்] [1974 ஏப்ரல் 20

உங்கள் கையில் அதிகாரத்தைக் கொடுப்பது திருடன் கையில் கொடுக்கின்ற கத்திரிபோல் இருக்கும்; கொலைகாரன் கையில் கொடுக்கின்ற கூரிய வெட்டரிவாள் போல் இருக்கும் என்பதை வலியுறுத்திச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். தேர்தலிலே நீங்கள் எவ்வளவோ காரியங்களைச் செய்திருக்கிறீர்கள். அது மாத்திரமல்ல. நான் அவ்வளவு பெரிய காரியங்களுக்காகப் போக வேண்டாம். இன்றைக்கு அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தை எப்படி அடக்குகிறார்கள், அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத் தொண்டர்கள் மீது எவ்வளவு அடக்குமுறை வீசப்படுகிறது என்பதைப் பற்றியெல்லாம் நான் விவரமாகப் பேசவில்லை.

**திரு. எம். ஏ. லத்தீப்:** உங்கள் கையில் அதிகாரங்கள் கொடுப்பது திருடன் கையில் கத்தரிக்கோல் என்று சொல்லுகிறார்கள். மாநில மக்களால் ஒருமித்த ஜனநாயக முறையிலே தேர்ந்தெடுக்கப்பட்ட சர்க்காரைப் பார்த்துச் சொல்லுவது அத்தகைய முறையில், இந்த மன்றத்தில் சொல்லுவது நல்ல மரபை ஏற்படுத்துமா, இந்த ஆட்சேபகரமான அந்த வார்த்தையை நீங்கள் அனுமதித்துக் கொண்டிருக்கிறீர்களா என்று அறிய விரும்புகிறேன்.

**திரு. க. உரொ. எட்மண்ட்:** தலைவர் அவர்களே, அந்த அளவுக்கு நான் பல்வேறு பிரச்னைகளை, நீங்கள் இருக்கின்ற அதிகாரத்தை என்னென்ன வகையில் தவறான வழியில் பயன்படுத்துகிறீர்கள் என்பதை நான் இந்த நேரத்தில் எடுத்துக் காட்டுவதற்கு நேரமில்லை.

குறிப்பிட்டு சில காரியங்களைச் சொல்லுகிறேன். இங்கே 234 சட்ட மன்ற உறுப்பினர்கள் இருக்கிறார்கள். சட்ட மன்ற உறுப்பினர்கள் என்றால் யார்? ஒரு இலட்சம் வாக்காளர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்ற உறுப்பினர்கள். எங்களை உளவு பார்ப்பதற்கு உங்களுடைய உளவுத் துறை போலீசார் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். நாங்கள் இந்த அரசாங்கத்தை கவிழ்க்கப் போகிறோமா? அல்லது உங்களுக்கு ஏதாவது

1974 ஏப்ரல் 20] [திரு. க. உரொ. எட்மண்ட்]

ஆபத்தை விளைவிக்கப் போகிறோமா? நாங்கள் ஏதாவது பேசிக் கொள்கிறோம் என்றால் ஜனநாயகத்தின் அடிப்படையிலே கட்சியைச் சார்ந்தவர்கள் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்கிறார்கள். என்ன பேசுகிறார்கள் என்பதெல்லாம் கேட்பதற்கு எங்களுக்கு சி.ஐ.டி-கள் போடுகிறார்கள். பொதுக் கூட்டத்தில் பேசுகிறோம் என்றால் எங்களுக்கு சி.ஐ.டி. ஆனால் தி.மு.க-காரர்கள் பேசுகிறார்கள் என்றால் சி.ஐ.டி.-க்கள் போகிறார்களா? நீங்கள் அதிகாரத்தை எப்படி துஷ்பிரயோகம் பண்ணுகிறீர்கள்!

நாங்கள் தொலைபேசியில் பேசுகிறோமென்றால் அதைக் கூட டேப் செய்கிறார்கள். அதைக் கூட ஒட்டுக் கேட்கிறார்கள். ஏன்? எதற்கு? அதிகாரம் உங்கள் கையிலிருக்கிறது என்ற காரணத்தினால், திராவிட முன்னேற்றக் கழகத்தைத் தவிர, எந்த அரசியல் கட்சிக்காரன் என்ன பேசுகிறான் என்பதை அறிவதற்கு நீங்களெல்லாம் ஒட்டுக் கேட்கிறீர்கள். அந்த அளவுக்கு நீங்கள் கேவலமான காரியங்களில் கூட ஈடுபடுவதற்கு இந்த அரசாங்கம் இருக்கின்ற அதிகாரத்தைப் பயன்படுத்துகிறது.

ஆகவேதான் இந்த அதிகாரங்களை உங்கள் கையில் ஒப்படைக்கக் கூடாது என்று நாங்கள் வற்புறுத்திக் கொண்டு வருகிறோம்.

அண்ணா அவர்கள் சொன்னதெல்லாம் அதிகாரங்கள் வேண்டுமென்று கேட்டார்களே அல்லாது அந்த அதிகாரத்தைப் பெறுகின்ற அரசாங்கம் துஷ்பிரயோகம் செய்யும் என்று அண்ணா அவர்கள் ஏதாவது செய்து காட்டியிருக்கிறார்களா? அண்ணா இரண்டு ஆண்டுக் காலம் இந்த அமைச்சரவையில் முதலமைச்ச ராக இருந்திருக்கிறார்கள். நம்முடைய முதலமைச்சர் அவர்கள் இன்றைக்கு எந்த ஆசனத்தில் உட்கார்ந்திருக்கிறாரோ அதே இருக்கையில்தான் நம்முடைய பேரறிஞர் அண்ணா அவர்கள் இரண்டு ஆண்டு காலம் கம்பீரமாக இருந்திருக்கிறார்கள்.

அன்றைக்குக் கூட நாட்டிலே எத்தனை போராட்டங்கள் எதிர்க் கட்சியாக இருந்த காங்கிரஸ் கட்சி நடத்தியிருக்கிறது? இந்த அளவுக்கு அன்றைக்கு அடக்குமுறை ஏவி விடப்பட்டதா என்று எண்ணிப் பார்க்க வேண்டும். ஆனால் இன்றைக்கு நிலைமை என்ன?

மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை
மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம்
திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[திரு. க. உரொ. எட்மண்ட்] [1974 ஏப்ரல் 20

அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் என்றால் உடனே அடக்குமுறைகளை ஏவி விடுகிறார்கள். அந்த அடிப்படையிலே தான் இந்தக் கூடுதலான அதிகாரங்களை நீங்கள் கேட்டால் அவற்றை உங்கள் கையிலே கொடுக்கக் கூடாது என்று அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் சொல்லுகிறது, நீங்கள் வேண்டுமென்றால் மாநில சுயாட்சி கேளுங்கள், கூடுதல் அதிகாரங்கள் கொடுக்கப்பட வேண்டுமா, வேண்டாமா என்கின்ற பிரச்னையை தேர்தல் அறிக்கையில் வைத்து 76-ல் நீங்கள் தேர்தலில் நின்று பாருங்கள். அந்த அதிகாரங்கள் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு கொடுக்கப்பட வேண்டுமென்று மக்கள் தீர்ப்பளித்தால் அந்தத் தீர்ப்பினை நாங்கள் ஏற்றுக் கொள்வதற்கு நிச்சயமாகத் தயாராக இருக்கிறோம் என்பதை இந்த நேரத்தில் நான் உங்களுக்கு தெரிவித்துக் கொள்வதற்குக் கடமைப் பட்டவனாக இருக்கின்றேன்.

இந்த அதிகாரங்களை இன்னும் எந்த வழியில் பயன்படுத்து கிறீர்கள்? தேர்தலில் எதிர்க் கட்சியை ஒடுக்க வேண்டும், சட்ட மன்ற உறுப்பினர்கள் எதிர்க் கட்சியைச் சேர்ந்தவர்கள் என்ன பேசுகிறார்கள் என்று தெரிந்து கொள்ள வேண்டும். இவைகளுக்கு மாத்திரம் பயன்படுத்துகிறீர்களா? பெரிய பெரிய நிலச் சுவான்தார்கள், பஸ் முதலாளிகள், ஆலை அதிபர்கள், இவர்களிடம் இந்த அதிகாரத்தைப் பயன்படுத்தி, தேர்தல் நன்கொடை வாங்கவில்லையா? எத்தனை பேரிடம் வாங்கிக் கொண்டிருக் கிறீர்கள்?

பஸ்களுக்கு பர்மிட் வழங்கும் நேரத்தில், எப்.சி. கொடுக்கின்ற நேரத்தில் பஸ்ஸுக்கு 100, 200 என்று வாங்கிக் கொண்டு எப்.சி. கொடுக்கப்படவில்லையா? அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்யவில்லையா? அதைப் போலவேதான் பர்மிட் கொடுக்கப்பட வேண்டுமானாலும்.

நான் திருநெல்வேலியில் நடந்த சம்பவத்தைப் பற்றிச் சொன்னேன். அங்கே 30 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள நிலத்தை 3 லட்சம் ரூபாய்க்கு வாங்கியிருக்கிறீர்கள். கேட்டால்

*1974 ஏப்ரல் 20] [திரு. க. உரோ. எட்மண்ட்]*

*சொல்லுகிறீர்கள், ரெவின்யூ அதிகாரிகள்தான் அந்த விலையை நிர்ணயம் செய்திருக்கிறார்கள், அரசாங்கம் ஏற்றுக் கொள்கிறது என்று. நாங்கள் சொல்லுகிறோம், அதற்கு அவ்வளவு பெரிய மதிப்புக் கிடையாது. இதை மக்கள் மத்தியில் போய்க் கேளுங்கள். அதற்கு ஒரு விசாரணை நடத்துங்கள் என்று சொன்னால், அந்த விசாரணையை நடத்துவதற்கு இந்த அரசாங்கம் முன் வந்ததா? முன் வரவில்லை. உடனே பத்திரங்களைக் காட்டுகிறார்கள். பக்கத்து நிலம் எவ்வளவு ரூபாய்க்கு விற்றிருக்கிறது பார்த்தீர்களா என்ற காரணங்களைக் காட்டுகிறீர்கள்.*

*நாங்கள் கேட்கின்ற நியாயமான கோரிக்கைகளை ஏற்றுக் கொள்ளுவதற்கு உங்கள் அதிகாரத்தைப் பயன்படுத்துகிறீர்களா என்றால் பயன்படுத்துவதில்லை.*

*ஆகவேதான் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் இதை யெல்லாம் சொல்லுகிறது. நீங்கள் கூடுதல்-அதிகாரங்களைக் கேட்பதை நாங்கள் நிச்சயமாக ஆதரிக்கின்றோம். ஆனால் மாநில சுயாட்சி என்ற வார்த்தையை நீங்கள் உபயோகப்படுத்துவதை நாங்கள் எதிர்க்கிறோம்.*

*அது மாத்திரமல்ல. இந்த அறிக்கையை இன்றைக்கு வைத்திருக்கிறீர்கள். ஓராண்டு காலத்திற்கு இந்தக் குழு பெரிய பரிசீலனை செய்து, ஏதோ அரிய பெரிய கருத்துக்களை நாட்டிற்குத் தருவார்கள் என்று பார்த்தால், இன்றைக்கு எவ்வளவு பணம் விரயமாக்கப்பட்டிருக்கிறது? இது சட்ட மன்ற உறுப்பினர்கள் படிப்பதற்குத் தகுதியுள்ள புத்தகமல்ல. உயர்நிலைப் பள்ளியில் படிக்கின்ற மாணவன் கூட பயன்படுத்த இதில் எந்தவிதமான கருத்துமில்லை. குப்பைக் கூடையில் தூக்கி எறியப்பட வேண்டிய அறிக்கை என்று நான் இந்த நேரத்தில் தெரிவித்துக் கொள்ள கடமைப்பட்டவனாக இருக்கின்றேன்.*

*பெரிய வல்லுனர்களெல்லாம் இந்த அறிக்கையைத் தயாரித்திருக்கிறார்கள் என்று சொல்லலாம். நான் ஒன்றைச் சொல்லுகிறேன். அண்ணா அவர்கள் சொன்னார்கள். அன்றைக்கு கவர்னர் இருக்கக் கூடாது என்று. இந்த அறிக்கையில் சொல்லியிருக்கிறார்கள்*

ஆளுநர் இருக்க வேண்டுமென்று. இதை ஏற்றுக் கொள்கிறீர்களா? இந்த அறிக்கையின் மீதுதான் நீங்கள் இன்றைக்கு விவாதம் நடத்தியிருக்கிறீர்கள். இதிலே இருக்கிறது. ஆளுநர் தேவையில்லை என்று அண்ணா அவர்கள் சொன்னார்கள், . . .

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** அந்த அறிக்கையின் மீது விவாதம் என்று தவறான விளக்கத்தை இந்த அவைக்கும், நாட்டிற்கும் தரக் கூடாது. ராஜமன்னர் குழுவின் அறிக்கையின் மீது தமிழக அரசு எடுத்திருக்கின்ற கருத்துக்களின் மீதுதான் விவாதம்.

**திரு. க. உரொ. எட்மண்ட்:** யாரோ பள்ளிக்கூட மாணவனுக்குக் கொடுக்கப்படக் கூடிய நோட்ஸ் மாதிரியிருக்கிறது. ஏதோ இந்திய அரசியல் சட்டத்தை அவர்கள் அலசி, அதற்கு நோட்ஸ் கொடுத்திருப்பது போல் இருக்கிறதே தவிர, நாட்டிலே இருக்கின்ற மக்களுடைய கருத்தென்ன, ஒவ்வொரு பெரிய பெரிய நிபுணர்கள் கருத்து என்ன என்று இந்த வகையில் செயல் பட்டிருக்கிறதா என்றால் செயல்படவில்லை.

**மாண்புமிகு திரு. செ. மாதவன்:** அண்ணா அவர்கள் சொன்ன கருத்துக்களும் இந்த அறிக்கையில் இருக்கின்றன. இதைக் குப்பைக் கூடையில் போட வேண்டுமென்று சொல்லுவது வேதனையாக இருக்கிறது.

**திரு. க. உரொ. எட்மண்ட்:** அண்ணா அவர்கள் கேட்ட கூடுதலான அதிகாரம் என்பதை ஏற்றுக் கொள்கிறோம். இல்லை என்று சொல்லவில்லை. ஆளுநர் தேவையில்லை என்று எதிர்க் கட்சியிலிருந்தபோது சொன்னார்கள். ஆளுநர் தேவை என்று சொல்லியிருக்கிறார்கள் இந்த அறிக்கையில். அந்த அறிக்கையை அண்ணா திராவிட முன்னேற்ற கழகம் ஏற்றுக் கொள்ள முடியுமா என்றால் நிச்சயமாக ஏற்றுக் கொள்ள முடியாது.

*1974 ஏப்ரல் 20] [திரு. க. உரொ. எட்மண்ட்]*

அந்த அளவுக்கு இந்த அறிக்கையைத் தயாரிப்பதற்கு மூன்று வல்லுனர்கள், அவர்கள் பெரிய பெரிய கருத்துக்களை யெல்லாம் கேட்டு, மாதக் கணக்கில் உட்கார்ந்து, இவ்வளவு பெரிய ஒரு புத்தகமாகக் கொடுத்திருக்கிறார்கள். மக்களுடைய வரிப் பணம் எத்தனை லட்சம் ரூபாய் இதில் விரயம் செய்யப்பட்டிருக்கிறது?

சரி, கருத்துக் கேட்டார்களே, மக்கள் கருத்துக்களை இவர்கள் கேட்க முடிந்ததா? எந்தெந்த மாநிலங்களுக்கு இவர்கள் சென்றார்களோ, அங்கேயுள்ள அமைச்சர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள் இவர்களுடைய கருத்துக்களைக் கேட்டிருக் கிறார்களே ஒழிய, மக்களுடைய கருத்துக்களைக் கேட்டிருக் கிறார்களா என்றால் நிச்சயமாக இல்லை.

கடைசியில் ஒன்றை மாத்திரம் நான் கூறிக்கொண்டு முடித்துக் கொள்ளவிரும்புகிறேன். அண்ணா அவர்கள் உயிரோடு இருந்த நேரத்தில் சொன்னார்கள். மாநிலங்களுக்கு அதிகாரங்கள் வேண்டுமென்றால் நம்முடைய அரசியல் சட்டத்தைத் திருத்துவதால் மாத்திரம் கோரிக்கைகள் நிறைவேறும் என்று அண்ணா அவர்கள் சொன்னார்கள். இது மக்களுடைய பிரதிநிதி களால் தயாரிக்கப்பட்ட அரசியல் சட்டம் அல்ல. இது யாரோ சில தேர்ந்தெடுக்கப்படாதவர்கள் அவர்களால் தயாரிக்கப்பட்ட அரசியல் நிர்ணய சட்டம் என்று அண்ணா அவர்கள் சொல்லி யிருக்கிறார்கள்.

அதற்காக அண்ணா அவர்கள் ஒரு அருமையான யோசனையைச் சொல்லியிருக்கிறார்கள். புதிய அரசியல் நிர்ணய சபை ஒன்றை உருவாக்க வேண்டும். அதை உருவாக்குவதற்கு நீங்கள் தயாரா? அந்தக் கோரிக்கையை உங்களுடைய தீர்மானத்தில் வலியுறுத்திருக்கிறீர்களா என்றால் நிச்சயமாக இல்லை. புதிய அரசியல் நிர்ணயச் சபை ஒன்றைத் தேர்ந்து எடுக்க வேண்டும், அந்த அரசியல் நிர்ணய சபையில்தான் இந்த மாநிலங்களுக்கு அதிகாரங்கள் அளிப்பது குறித்து முடிவு எடுக்கப்பட வேண்டும் என்று அண்ணா அவர்கள் கொள்கையைச் சொல்லியிருக்கிறார்கள். அதற்கு எந்தவிதமான ஒரு தீர்மானத்தையும் நீங்கள் இந்தத் தீர்மானத்தோடு இணைத்துக் கொண்டு வரவில்லை.

[திரு. க. உரொ. எட்மண்ட்] [1974 ஏப்ரல் 20

நான் உங்களைக் கேட்டுக் கொள்வதெல்லாம் அண்ணாவின் கோரிக்கையை—புதிய அரசியல் நிர்ணய சபை தேர்ந்தெடுக்கப் பட வேண்டும்—என்ற அந்தக் கருத்தை நீங்கள் வற்புறுத்து வீர்களானால் அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் நிச்சயமாக உங்களுக்கு ஆதரவு கொடுக்கும் என்பதை மாத்திரம் தெரிவித்துக் கொண்டு, நீங்கள் கேட்கின்ற மாநில சுயாட்சிக் கொள்கையை நாங்கள் எதிர்க்கிறோம்.

நீங்கள் கேட்கின்ற கூடுதல் அதிகாரங்களை நாங்கள் ஏற்றுக் கொண்டாலும் ஒத்துக் கொண்டாலும், மாநிலங்களுக்கு இருக்கின்ற அதிகாரங்கள் போதாது, கூடுதலான அதிகாரங்கள் தேவை, தேவை என்பதை நாங்கள் வலியுறுத்துகின்ற நேரத்தில் அந்த அதிகாரங்கள் இன்றைக்குள்ள அரசாங்கத்திடம் கொடுக்கப்பட்டால், பாதிக்கப்படுகின்றவர்கள் இந்த நாட்டிலே இருக்கின்ற எதிர்க் கட்சியைச் சேர்ந்தவர்கள், இந்த நாட்டில் இருக்கின்ற பொது மக்கள் என்பதை மாத்திரம் மிகத் தெளிவாக கூறிக் கொண்டு தலைவர் அவர்களே கொடுத்த வாய்ப்புக்கு நன்றி கூறி முடித்துக் கொள்கிறேன், வணக்கம்.

(முற்பகல் 11-00)

திரு. திருப்பூர் ஏ. எம். மொய்தீன் : தலைவர் அவர்களே, நான் இங்கு பேசப்போகிறேன் என்பதற்கே நான் வெட்கப்பட்டு உங்கள் முன்பு நிற்கிறேன். காரணம், ஒரு கருத்து இந்தப் பேரவையில் வைக்கப்பட்டால் மக்கள் பிரதிநிதியாகிய நாம் அதைப்பற்றி சாதகமாக அல்லது பாதகமாகப் பேச உரிமை உண்டு. ஆனால், இங்கே நடந்த விவாதம்—என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும்—என்னால், சகிக்க முடியவில்லை என்பதை மாத்திரம் சொல்கிறேன். காரணம் விவாதம் எங்கெங்கோ திசை திருப்பிவிடப்பட்டது. 'மாநில சுயாட்சி கோரப்படுவதை ஒப்புக்கொள்கிறோம். ஆனால். உங்களிடம் கொடுக்க ஒப்புக் கொள்ளமாட்டோம்" என்கிறார்கள். இது சரியான வாதம்தானா? மாநில சுயாட்சியை திராவிட முன்னேற்றக் கழகத்திடமா கொடுக்கும்படி இந்தத் தீர்மானம் கோருகிறது? இந்தத் தமிழ்

நாட்டுக்குக் கொடுக்கும்படி கோருகிறது. அதை எப்படி 'உங்களிடம் கொடுக்க நாங்கள் விரும்பமாட்டோம்' என்று சொல்ல முடியும்?

அரசியல் நிர்ணய சட்டத்தைக் கொளுத்த வேண்டும் என்கிறார்கள். யார் யாரையோ தியாகிகள் என்கிறார்கள். யார் யாரையோ தியாகிகள் அல்ல என்கிறார்கள். அம்மையார் அவர்கள் பேசும்போது தியாகத்தைப் பற்றிப் பேசினார்கள். அதைக் கேட்கும்போது சிரிப்பு வந்தது. என் தலையில் கள் குடத்தை எடுத்து உடைத்தபோது இந்த அம்மையார் பிறந்தே இருப்பார்களா என்பது சந்தேகம். இந்தத் தியாகத்தைப் புரிந்தவர்களை எல்லாம் ஏதோ வகுப்புவாதிகள் என்றும், தேசத்திற்கு விரோதிகள் என்றும் சொல்கிற சூழ்நிலையை வளர்க்கின்ற பிரசாரம் இருக்கிறதே அது சரியல்ல.

இன்னொரு திருமகன் பேசும்போது சொன்னார், நாங்கள் ஒரு சட்டத்தை வலியுறுத்துவோமானால்—நான் அதை விளக்க விரும்பவில்லை—நீங்கள் எங்கே போய்விட வேண்டும் தெரியுமா என்றார்கள். பேச்சைப் பாருங்கள். நாங்கள் எங்கே போய்விட வேண்டும்? அவர் சர்வாதிகாரியாக வந்து எங்களைப் போகச் சொல்லும் காலத்தில் அதைப்பற்றி யோசித்துக்கொள்ளலாம் என்பதைத்தான் அந்தப் பெரிய மனிதருக்குச் சொல்லிக் கொள்வேன். இவைகள் எல்லாம் பேச்சுக்கள் அல்ல. நாம் பேசுகிற பேச்சுக்கள் வெளியில் எத்தகைய விளைவுகளை ஏற்படுத்தும் என்பதைத் தெரிந்து பேசவேண்டும்.

எனது அருமை நண்பர் எட்மண்ட் அவர்கள் ஒரு வால் போஸ்டர் யாரோ இளைஞர்களால் ஒட்டப்பட்டது—அதைப் பற்றிச் சொன்னார்கள். அதற்கும் திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும் என்ன சம்பந்தம்?

**திரு. க. உரோ. எட்மண்ட்:** அந்தச் சுவரொட்டியை யாரோ இளைஞர்கள் ஒட்டினார்கள் என்றாலும், அதன் வாசகம் திராவிட முன்னேற்றக் கழகத்தின் நாளிதழான நாத்திகத்தில் வந்திருக்கிறதே, அதை முஸ்லிம் லீக் கட்சித் தலைவர் உணர்வார்களா?

[1974 ஏப்ரல் 20

**திரு. திருப்பூர் ஏ. எம். மொய்தீன் :** அதைத்தானே சொல்ல வருகிறேன். ஒரு சுவரொட்டி வாசகத்தை ஒரு பத்திரிகை போட்டது என்று இந்தப் பேரவையில் பிரச்சாரம் செய்திருப்பதை—நான் நல்லெண்ணத்தோடு பேசிய பேச்சாகக் கருதவில்லை. கேரளத்துக்காரர்—தமிழர் என்கிற விரோத உணர்ச்சியைத் தூண்டுவதற்கே உங்கள் பிரச்சாரத்தின் மூலம் வித்திடுகிறீர்கள் என்கிறேன்.

**திரு. க. உரோ. எட்மண்ட் :** Sir, he is framing a charge against our party. How can we keep quiet? நாங்கள் அந்த எண்ணத்தைத் தூண்டவில்லை, யார் தூண்டிவிடுகிறார்கள் என்பதை திருப்பூர் மொய்தீன் தெரிந்து கொள்ளாததற்கு நான் வருத்தப்படுகிறேன்.

**திரு. திருப்பூர் ஏ. எம். மொய்தீன் :** எனக்குத் தெரியவில்லை என்பதற்காகக் கவலைப்படவில்லை. நாம் பேசுகிற பேச்சு வெளியே எத்தகைய விபரீத விளைவுகளை ஏற்படுத்தக்கூடும் என்பதை உணர்ந்து பேச வேண்டும் என்பதற்காகச் சொல்கிறேன். மலையாளிக்கு விரோதமாக இங்கே அதிகாரபூர்வமாக என்ன வந்திருக்கிறது என்று நான் கேட்கிறேன். இல்லாத ஒன்றை வேண்டுமென்றே இங்கே பேசி தவறான விளைவுகள் வெளியே ஏற்படவேண்டுமா என்பதுதான் என்னுடைய தாழ்மையான எண்ணம்.

நான் அதிக நேரம் பேசவில்லை. இந்தத் தீர்மானத்தை—அதாவது மாநில சுயாட்சித் தீர்மானத்தை—முஸ்லீம் லீக் சார்பில் நான் மனப்பூர்வமாக வரவேற்கிறேன்—ஆதரிக்கிறேன் என்று கூறி என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

திரு. கோவை செழியன் எழுந்திருந்தார்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** உங்கள் கட்சியின் சார்பில் துணைத் தலைவர் விளக்கம் கேட்டு, அது முடிந்துவிட்டது. அடுத்து திரு. பொன்னப்ப நாடார்.

திரு. கோவைச் செழியன் : பேரவைத் தலைவர் அவர்களே; அவர் ஒரு தவறான கருத்தைச் சொல்கிறார். . . .

மாண்புமிகு பேரவைத் தலைவர் : அதைத்தான் சொன்னேன். திரு. எட்மண்ட் விளக்கம் கேட்டு அதற்குப் பதில் சொல்லியாகி விட்டது.

(திரு. பெ. சீனிவாசன், திரு. கு. காமாட்சி எழுந்திருந்தார்கள்.)

திரு. கோவை செழியன் : என்னைப் பேச அனுமதிக்கப் போகிறீர்களா, இல்லையா ?

மாண்புமிகு பேரவைத் தலைவர் : எந்த விதியின் கீழ் ?

திரு. கோவை செழியன் : பாயின்ட் ஆப் ஆர்டர்.

மாண்புமிகு பேரவைத் தலைவர் : பாயிண்ட் ஆப் ஆர்டர் என்றால் வேறு—விளக்கம் சொல்வது என்றால் வேறு. விளக்கம் சொல்லத் தேவையில்லை என்றேன். உங்கள் பாயிண்ட் ஆப் ஆர்டர் என்ன ?

திரு. கோவை செழியன் : என்னைப் பேசவே அனுமதிக்காத போது எப்படிச் சொல்வது ? (பேசாமல் உட்கார்ந்து விட்டார்)

THIRU R. PONNAPPA NADAR : Mr. Speaker, Sir, I rise to oppose the resolution with all emphasis at my command and while doing so, I support the amendment that has been moved to the main resolution which is being discussed in this august Assembly.

Sir, many learned members participated in this debate and I would also like to offer my remarks as the last speaker so far as the opposition is concerned. Before I dwell at length on the various points that have been raised I would like to answer some of the points which have been raised by the chief speakers of the ruling party.

The main speakers, the opening batsman as it were is Mr. Aladi Aruna and the other main speakers are Mr. S. Kandappan and the Hon. Thiru V. R. Nedunchezhiyan.

Sir, they have been giving a very long picture and they have given very learned arguments and it is my duty to meet some of the arguments that have been advanced by them.

First, I would like to refer to the arguments which have been advanced by my friend Mr. Aladi Aruna. Before I go into that subject, I would emphatically say that this resolution is politically motivated, and that it is lacking good faith and I would even say that it is a political stunt.

While this resolution has been brought forward by the ruling party at this moment is a matter which will have to be considered by hon. Members. I think the image of the ruling party is on the decline. They are on the verge of collapse. It is to rebuild that image they want to raise this bogey of state autonomy.

What is this state autonomy as brought out by the various speakers? Sir, why we suspect the bone fides of this ruling party is because their antecedents are not good. Your demands in your political platforms and your various resolutions passed thereon, makes us come to the conclusion that they smack of separtism and it is more or less a congrontation between the Centre and State That is why I say this is ill-timed and ill-conceived and is sure of defeat and is parent to failure. I get that feeling after I have been just studying the arguments advanced by you all.

So far as Mr. Aladi Aruna is concerned, the speech which he is reported to have made at Kancheepuram conference still reveraberates in my memory. In Kancheepuram conference Mr. Aladi Aruna is reported to have said that if a plebicite or vote is taken, it would be in favour of separation. This was published in your official paper ' Murasoli '. It is also reported that the Chief Minister has contradicted that statement. He is also reported to have said that he will oppose it and his vote would be against that demand.

Of course it is a political stunt. Why all this propaganda? You want separation and that is the reason why all this propaganda is put forward. The political air of the State is contaminated by this bad and pet theory of autonomy.

குறிப்பையே அனுப்பினார்கள். அந்த வரைவுக் குறிப்பில் காங்கிரஸ் கட்சியால் தயாரிக்கப்பட்ட வரைவுக் குறிப்பு என்று குறிப்பிட்டிருந்தார்கள். நான் தமிழக அரசு சார்பாகச் சொன்னேன்—காங்கிரஸ் கட்சியினுடைய வரைவுக் குறிப்பை அங்கே நாங்கள் ஆராயத் தயாராக இல்லை, உங்களுடைய கட்சி உங்களுக்கு வரைவுக் குறிப்பு தந்தது, அதை மத்திய அரசு ஏற்றுக்கொண்டு, மத்திய அரசு பரிந்துரைத்து இருக்குமானால் அதைப்பற்றி விவாதிக்கத் தயாராக இருக்கிறோம் என்று கூறி, அதற்குப் பிறகு மத்திய அரசு பரிந்துரைத்த குறிப்பின்மீது விவாதிக்கப்படுவதற்கு நான் அழைக்கப்பட்டபோது அந்த நேரத்தில் 15 ஸ்டாண்டர்டு ஏக்கரா என்ற உச்சவரம்பு கொண்டு வரவேண்டுமென்பது வரைவுக் குறிப்பில் ஓர் முக்கியமான அம்சம். நான் அங்கே சொன்ன பதில் இது. ஏற்கெனவே எங்கள் தமிழ் நாட்டில் 7, 8 மாதங்களுக்கு முன்பே அமுல்படுத்தப்பட்ட சட்ட மாகும் என்று எடுத்துச் சொல்லுகின்ற அளவுக்கு இருக்கின்ற அதிகாரத்தைப் பயன்படுத்தி எல்லா மாநிலங்களையும் முந்திக் கொண்டு நாம் செய்து முடித்திருக்கிறோம் என்பதாகும்.

குடிசைமாற்று வாரியமானாலும், இன்றைக்கு மற்ற மாநிலங் களிலே இருந்து வந்து பார்த்து பாராட்டுகின்ற அளவுக்கும், கர்னாடக மாநிலத்தில் சட்டப்பேரவையிலே பாராட்டிப் பேசு கின்ற அளவுக்கும் மற்ற மாநில அமைச்சர்கள் இங்கே இருக்கின்ற அமைச்சர்களை, வாரியத் தலைவர்களை அழைத்து, விளக்கங்களை ஏற்றுக்கொண்டு, இந்தியாவுக்கே வழிகாட்டியாக அறிமுகம் செய்யப்படும் குடிசைமாற்று வாரியம் ஆனாலும், அதைப்போல குடிநீர் வடிகால் வாரியம் ஆனாலும், மின்சார வசதி செய்யும் திட்டம் இவைகள்—இந்தியாவிலேயே இன்றைக்கு மூன்றில் ஒரு பங்கு பம்புசெட்டுகள்—இந்தியா முழுவதும் 20 லட்சம் பம்பு செட்டுகள் என்றால், அதிலே மூன்றில் ஒரு பங்கு—6 லட்சம் பம்பு செட்டுகள் இன்றைக்கு தமிழ் நாட்டிலே வழங்கியிருக்கிற ஒரே ஒரு அரசு திராவிட முன்னேற்றக் கழக அரசு என்பதையும், இந்தியாவிலே மற்ற மாநிலங்களுக்கு அறை கூவல் விடுகின்ற அளவுக்கு, இருக்கின்ற அதிகாரத்தை பயன்படுத்திச் செய்த காரியம் என்பதையும், பின் தங்கியோர், தாழ்த்தப்பட்டவர்

களுக்கு 49 சதவிகிதம்—அதற்கு மேல் போக அரசியல் சட்டம் இடம் தராத காரணத்தால்—வேலை வாய்ப்பு, கல்லூரியில் சேருதல் போன்றவைகள் 49 சதவிகிதம் என்ற வரையில் விகிதாசாரத்தை உயர்த்தியிருப்பது என்பதும், இருக்கின்ற அதிகாரங்களைப் பயன் படுத்தியதால்தான்.

இந்தியாவிலே எந்த மாநிலத்திலும் இல்லாத அளவுக்கு, ஏன் உலகத்தில்கூட ஒன்றிரண்டு நாடுகளில்தான் இருக்கமுடியும் என்று கூறுகின்ற அளவுக்கு, ஒரு காலத்திலே தேர்தல் பிரகட ணத்தில் முஜிபுர் ரஹ்மான் வெளியிட்டு, அதை இப்போது ஆட்சிக்கு வந்த பிறகு நிறைவேற்றினார்களோ இல்லையோ எங்களுக்குத் தெரியாது—ஆனால் தமிழ் நாட்டிலே போக்கு வரத்துத் தொழிலாளிகள் இடத்திலே அந்த அருமையான திட்டத்தை நாம் தேர்தல் பிரகடனத்திலே வெளியிடாமலே அந்தத் திட்டத்தை இன்றைக்கு நிறைவேற்றியிருக்கின்றோம்.

தொழிலாளிகளுக்கு நிர்வாகத்தில் பொறுப்பு, முதலீட்டில் பங்கு என்கின்ற உலகத்திலேயே மிகப் பெரிய சாதனையை இங்கே நாம் செய்து காட்டியிருக்கின்றோம்.

தொழிலாளிகள் ஓய்வு ஊதியம் என்கின்ற திட்டம் அரசுத் துறையிலேயுள்ள தொழிலாளிகளுக்கு அளிக்கப்பட வேண்டும் என்கிற அடிப்படையில் 35 ஆயிரம் பேர் பலன் பெறுகின்ற அளவுக்கு இந்தியாவில் வேறு எந்த மாநிலத்திலும் தொழிலாளி களுக்கான ஓய்வு ஊதியம் அறிமுகப்படுத்தப்படாத நேரத்திலே இருக்கின்ற அதிகாரத்தைப் பயன்படுத்தி இந்தக் காரியத்தை நாம் செய்திருக்கின்றோம்.

அரசு அலுவலாளர்களுக்கு குடும்ப நலத் திட்டம் வேறு எந்த மாநிலத்திலும் இல்லை. நம்முடைய மாநிலத்திலேதான்! 10 ரூபாயை ஒருவருடைய ஊதியத்திலே பிடித்துக் கொண்டு இடையிலே திடீரென்று காலமாவாரானால் அவருடைய குடும்பத் தாருக்கு 10 ஆயிரம் ரூபாய் அளிக்கப்பட வேண்டுமென்ற திட்டத்தை அறிமுகப்படுத்தி 4, 5 மாதங்கள் ஆகின்றன. இது வரையில் 30 அலுவலாளருடைய குடும்பத்தார்கள் 10 ஆயிரம் ரூபாய் பெற்றிருக்கிறார்கள் என்றால் இது அந்த அலுவலாளர்

மான வாழ்வைப் பெறமுடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறோம் என்பதனையும், இருந்த அதிகாரங்களை எல்லாம் எப்படி எப்படி மத்திய அரசு அவ்வப்போது பறித்துக்கொண்டிருக்கிறது என்பதையும் வெகு விளக்கமாக இங்கே எடுத்துக் கூறினார்கள்.

இன்றைக்கு நாம் இங்கே நிறைவேற்ற வேண்டுமென்று விரும்பு கின்ற தீர்மானம், நிறைவேற்றப்படும் என்று நான் நம்புகின்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டதும் உடனடியாக நாளைக்கே மத்திய அரசு அதை நடைமுறைக்குக் கொண்டுவந்து, மாநில சுயாட்சி தந்து விடும் என்கிற அந்த அவசரமான நம்பிக்கையோடு இந்தத் தீர்மானத்தை இங்கே கொண்டுவரவில்லை. இந்தியாவிலே தோன்ற இருக்கின்ற ஜனநாயகப் புரட்சியினுடைய தோற்று வாயாக இந்தத் தீர்மானம் நிறைவேற்றப்படுகிற நாளாக இருக்கும் என்ற கருத்தின் அடிப்படையிலேதான் அந்தத் தீர்மானத்தை இங்கே ஆளும் கட்சியின் சார்பாக—இந்தப் பேரவை முன் வைத்திருக்கிறோம்.

அதிகாரங்கள் கூடுதலாக மாநிலங்களுக்கு வேண்டுமென்று கேட்பதால் மத்திய சர்க்காருக்கு குறைவான அதிகாரங்கள் இருக்க வேண்டுமென்ற பொருள் அல்ல. மத்திய சர்க்காருக்கு அதனுடைய வலிவு காக்கப்படுவதற்கான அதிகாரங்கள் அங்கே இருக்க வேண்டு மென்பதும், மாநில சர்க்கார்களுக்கு—அந்த மாநிலங்களின் வளம் பெருக்கப்படுவதற்குத் தேவையான அதிகாரங்கள் இருக்கவேண்டு மென்பதும்தான் மாநில சுயாட்சியினுடைய நோக்கம் என்பதை நான் தொடக்கத்திலேயே எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

இருக்கின்ற அதிகாரங்களை என்ன பயன்படுத்தி சாதித்து விட்டீர்கள் என்ற கேள்விக்குப் பதிலாகத்தான். இன்றைக்கு இந்தியாவில் இருக்கிற பல மாநிலங்களுக்கு உணவு தானியங்களை நாம் வழங்கி அவர்களுடைய பசியை முழுமையாக இல்லாவிட்டா லும், ஓரளவு குறைக்கின்ற அளவுக்கு கடந்த 5, 6 ஆண்டு காலத்தில் பசுமைப்புரட்சியின் மூலமாக உணவுத் துறையிலே தன்னிறைவு பெற்று, மற்ற மாநிலங்களுக்கும் வழங்குகின்ற அந்தப் பெருமை உடைத்ததாகத் தமிழக அரசு விளங்கிவரு கிறது. அது இருக்கின்ற அதிகாரங்களை மாக்சிமம் அதாவது அதிகபட்சம் நாம் பயன்படுத்தியதன் விளைவு என்பதை யாரும்

**மறந்திடக் கூடாது.** இருக்கின்ற அதிகாரத்தைப் பயன்படுத்தி யதன் கூறுதான் பி.யு.சி. வரையில் இலவசக் கல்வி என்கின்ற திட்டத்தை அறிமுகப்படுத்தி, அதனை நடைமுறைக்குக் கொண்டு வந்ததாகும். இருக்கின்ற அதிகாரத்தைப் பயன்படுத்தியதன் விளைவுதான் 103 கல்லூரிகளாக 1967-க்கு முன்பு இருந்ததை இன்றைக்கு 178 கல்லூரிகளாக வளரச் செய்திருப்பது இருக்கின்ற அதிகாரத்தைப் பயன்படுத்தியதன் விளைவுதான்.

இருக்கின்ற அதிகாரத்தைப் பயன்படுத்தியதன் விளைவுதான் குடியிருப்புக்காக ஏழை எளிய மக்களுக்கு வீட்டுமனைப் பட்டாக்கள் 4,50,000-க்கு மேற்பட்டவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருப்பதும், நிலப் பட்டாக்கள் 3,30,000-க்கு மேற்பட்டவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருப்பதும் இருக்கின்ற அதிகாரத்தைப் பயன்படுத்தியதன் விளைவுதான்.

இந்தியாவிலே எங்கும் இல்லாத அளவுக்கு மனுநீதித் திட்டம் என்ற ஒரு திட்டத்தை தமிழ் நாட்டிலே அறிமுகப்படுத்தி, மக்களை நேரடியாகச் சென்று சந்தித்து, மக்களின் குறைகளை அறிந்து, உடனக்குடன் அந்தக் குறைகளைத் தீர்த்து வைக்கும் இந்தத் திட்டம் தமிழ் நாட்டைத் தவிர, திராவிட முன்னேற்றக் கழக அரசைத் தவிர வேறு எந்த அரசிலும் இன்னும் அறிமுகப்படுத்தப் படவில்லை என்பதைப் பெருமையோடு சொல்லிக்கொள்வேன். இருக்கின்ற அதிகாரத்தைப் பயன்படுத்தியதால் வந்த விளைவு தான் இது.

விவசாயத் தொழிலாளர்களுக்குக் குடியிருப்பு மனைகளைச் சொந்தமாக்கும் சட்டம், வேறு எந்த மாநிலத்திலும் இந்த அளவுக்கு முற்போக்கான சட்டம் செய்யப்படவில்லை என்ற நேரத்தில் இங்கே அந்தச் சட்டம் செய்யப்பட்டு ஏறத்தாழ இரண்டு லட்சம் விவசாயத் தொழிலாளர்களுக்குக் குடியிருப்பு மனை சொந்தமாக்கப்பட்டிருக்கிறது என்றால், அது இருக்கின்ற அதிகாரத்தைக் கொண்டு செய்யப்பட்டதுதான்.

நிலச்சீர்திருத்தம் இருக்கின்ற அதிகாரத்தைக் கொண்டு செய்யப் பட்டதுதான. பிரதமர் இந்திரா காந்தி அவர்கள் கூட்டிய முதலமைச்சர்கள் மாநாட்டில் அவர்கள் அந்த மாநாட்டில் எதைப்பற்றி விவாதிக்க வேண்டுமென்பதற்காக ஒரு வரைவுக்

*3974 ஏப்ரல் 20]* *[டாக்டர் மு. கருணாநிதி]*

களின் குடும்ப நலத்திற்கு எவ்வளவு தேவையான திட்டம் என்பதையும், இருக்கின்ற அதிகாரத்தைப் பயன்படுத்தி செய்யப்பட்ட திட்டம் என்பதையும் இந்த மாமன்றம் நன்கு அறியும். இருக்கின்ற அதிகாரத்தைப் பயன்படுத்தித்தான் நம்முடைய சக்திக்கேற்ற அளவுக்கு, நம்முடைய அதிகாரத்திற்கேற்ற அளவுக்குத் தொழில் வளர்ச்சியை இந்த மாநிலத்திலே நாம் செய்து காட்டியிருக்கிறோம்.

இன்னும் செய்ய வேண்டிய சாதனைகளுக்கு அரசியல் சட்டத்தினுடைய குறுக்கீடு என்ன? இந்தக் கேள்வி எழுந்தது. அந்தக் கேள்விக்கு நான் தருகின்ற பதில்தான் இதே விவாதத்தில் பேசும் போது திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் கூடச் சொன்னார்கள். கேரள மாநிலத்தில் தோட்டங்களையெல்லாம் அரசுடமையாக்க வேண்டுமென்ற அவசரச் சட்டத்தை இன்றளவும் மத்திய சர்க்கார் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆகவே ஒரு சமதர்மத் திட்டம் அங்கே முடங்கிப் போய்க் கிடக்கிறது என்ற கருத்துப்பட ஒரு குறிப்பை எடுத்துச் சொன்னார்கள்.

அதைப்போலத்தான் 1969-ம் ஆண்டு கூடலூர் ஜென்மம் எஸ்டேட் ஒழிப்புச் சட்டம் என்கின்ற ஒரு சட்டத்தை நாம் இந்த மாமன்றத்திலே நிறைவேற்றினோம். ஆனால், அந்தச் சட்டத்தை எதிர்த்து நீதி மன்றத்திற்குச் சென்றார்கள். உச்சநீதி மன்றம் அந்தச் சட்டம் செல்லுபடியாகாது என்ற தீர்ப்பை வழங்கியது. இதுபோன்ற புரட்சிகரமான திட்டங்கள் செல்லுபடியாக வேண்டுமேயானால், அது அரசியல் சட்டத்தில் 9-வது அட்டவணையில் சேர்க்கப்பட்டாக வேண்டும். 9-வது அட்டவணையிலே இந்தச் சட்டத்தை சேர்த்து 31-எ பிரிவின்கீழ் பாதுகாப்பு கொடுக்க வேண்டுமென்று 26—2—1972-ல் இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு நான் மத்திய அரசுக்குக் கடிதம் எழுதினேன். பல முறை மத்திய அமைச்சர்களைச் சந்தித்தபோதெல்லாம் இதைப் பற்றி விளக்கமாக எடுத்துச் சொன்னேன்.

24—11—1973-இல் கூட பிரதமர் இந்திரா காந்தி அம்மையார் அவர்களுக்குக் கடிதம் எழுதினேன். இதுவரையில் சாதகமான முடிவு எதுவும் மத்திய சர்க்காரிடமிருந்து நமக்குக் கிடைக்கவில்லை.

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

இது 9-வது அட்டவணையிலே சேர்க்கப்படாத காரணத்தினால் யார் வேண்டுமானாலும் இதுபோன்ற புரட்சிகரமான சட்டங்களை எதிர்த்து உச்சநீதி மன்றத்திற்குச் செல்லலாம் என்கின்ற வழி வகையிருக்கிறது. அதைச் சேர்த்து விடுங்கள் என்று நம்முடைய அரசு விடுத்த கோரிக்கை ஏற்கப்படாததால் ஒரு சமதர்மத் திட்டம் இன்றைக்கு முடங்கிக் கிடக்கிறது என்பதை நான் தெரிவித்துக் கொள்வேன்.

1973-74-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையில் மால்கோ தேசியமயமாக்கப்பட வேண்டுமென்று அறிவித்தோம். அதை அறிவித்தவுடன் பிப்ரவரி மாதம் சட்ட நகலை மத்திய அரசுக்கு அனுப்பி வைத்தோம். அதைப் பெற்றுக் கொண்டதாக 2—3—1973-ல் நமக்குக் கடிதமும் வந்தது. ஆனால், இதுவரையில் அந்தப் பிரச்சினை என்னவாயிற்று? முடியுமா, முடியாதா என்கின்ற எந்தத் திட்டவட்டமான பதிலும் இல்லை. இதுவும் ஒரு சமதர்மத் திட்டம்.

1972-ம் ஆண்டு ஆகஸ்டு 14-ந் தேதி இரவு, விடுதலை நாள் வெள்ளி விழா கொண்டாடப்பட்டபொழுது, இந்த மன்றத்திலேதான் அறிவித்தேன், நான் ஏற்கனவே சொன்னேனே, "தொழிலாளிகளுக்கு நிர்வாகத்திலே பொறுப்பு, முதலீட்டில் பங்கு" என்கின்ற அந்தத் திட்டம். அதற்கான விதிமுறைகளையெல்லாம் வகுத்து, இந்தச் சட்டப் பேரவையிலே அதைப் பற்றி விளக்கங்கள் தந்து, அதுபற்றி போக்குவரத்துத் துறை அமைச்சர் அவர்கள் இங்கே ஒரு மசோதாவைக் கொண்டுவந்து, அதை மாமன்றம் வரவேற்று, இன்றைக்கு அந்தச் சட்டம் ஒரு சிறிய காரியத்திற்காக மத்திய சர்க்காருடைய தயவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. மத்திய அரசின் கம்பெனிச் சட்டம் இதற்காகத் திருத்தப்பட வேண்டும். இந்தச் சட்டத்தை நாம் அங்கே அனுப்பிவைத்தபொழுது பிரதமர் அவர்கள் எனக்கு ஒரு பதிலைக் கூட எழுதினார்கள். அதிலே சொன்னார்கள்—

'The suggestion for the creation of a new class of shares called the 'Employees Dividend Guaranteed Shares' is an

interesting one. I am making the Ministries concerned to examine the question carefully. . . .'

என்று சொல்லி கிட்டத்தட்ட ஒரு வருடத்திற்கு மேலாகிறது. இது நல்ல திட்டம் என்று பாராட்டியிருக்கிறார்கள். ஆனால், அதற்கான அனுமதி இன்னும் கிடைக்கவில்லை.

இப்படிப்பட்ட ஒரு சமதர்மத் திட்டம், தொழிலாளர்களுக்கான திட்டம், பிரதமரின் பாராட்டைப் பெற்றும் கூட, அனுமதிக்காக தவம்கிடந்து கொண்டிருக்கிறது.

ஆகவே அரசியல் சட்டத்தில் நாம் சாதனைகள் செய்ய முடியாமல் எப்படி எப்படிப்பட்ட சங்கடங்கள் இருக்கின்றன என்பதற்கு இதை ஒரு எடுத்துக்காட்டாகச் சொன்னேன். உணவு உற்பத்தியிலே முக்கிய இடத்தை பிடித்துக் கொண்டிருப்பது உரம். அது பற்றி இந்த மாமன்றத்தில் . . .

டாக்டர் எச். வி. ஹாண்டே: இந்த விஷயத்திலே மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் எந்த ஷரத்தை, நிர்மாணச் சட்டத்தில் எந்த முறையில், எப்படித் திருத்தினால் இந்த எம்ப்ளாயீஸ் ஸ்கீமை நடைமுறைக்குக் கொண்டுவர முடியும் என்று ஒரு தெளிவான கருத்தை மத்திய அரசாங்கத்திற்கு அனுப்பினார்களா, அப்படியென்றால் அதன் விவரம் என்ன என்று அறிய விரும்புகிறேன்.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: அதாவது டிவிடெண்ட் எடுக்கப்பட்ட பிறகுதான் தொழிலாளிகளுக்குத் தரப்பட்ட டிவிடெண்டிற்குப் பிறகுதான் வருமான வரி இருக்க வேண்டும். வருமான வரி கொடுத்தால் டிவிடெண்ட் எடுக்க முடியாமல் போகும். அதற்கேற்ப எங்களுக்கு கம்பெனிச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்று கேட்டோம். உரத்தைப் பற்றி இந்த மாமன்றத்திலே நிறையப் பேசப்பட்டிருக்கின்றது.

Dr. H. V. HANDE: Sir, for the last few days we have been discussing. This is the last day and the Chief Minister is replying. After that we won't get the opportunity for months together. I want further clarification. What exactly does the Chief Minister recommend? I want to know from the Chief Minister, what is the specific recommendation amendment, he

recommended? He wanted to put forth a scheme, we all accepted. He must come forward to this House, clearly telling us, what was the article that he wanted to be amended? In what way, he wants it to be amended? What was the amendment that he had recommended? It is his business to tell the House. And then I am asking in a good spirit only, not to simply disturb the Chief Minister. In a good right spirit I am asking. What was his specific recommendation? He says என்னுலே செயலாற்ற முடியாத அளவுக்கு அங்கு செயல்பட்டது—அங்கே நடந்தது .... What is his recommendation? Come on! Let us know it!

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** கம்பெனிச் சட்டத்தை மாற்றியமைக்க வேண்டுமென்று கேட்டோம். எப்படி கடன்கள் மீதுள்ள வட்டியை (நிறுவன வருமான வரி) கார்ப்பரேஷன் டாக்சுக்கு முன்பு அனுமதிக்கிறேமோ அதைப்போலவே தொழிலாளர்களுக்குள்ள சிறப்பு பங்கு மீது லாப விகிதத்தையும் (டிவிடெண்ட்) வருமான வரி அளிப்பதற்கு முன்பாகவே அனுமதிக்கப்பட வேண்டுமென்பது நம்முடைய கோரிக்கை. அதற்கேற்ப கம்பெனிச் சட்டத்தை மாற்றியமையுங்கள் என்று கேட்டோம். அதற்கு ஒரு கடிதம் எழுதினர்கள். ஆலோசிப்பதாகச் சொன்னர்கள். பிறகு எந்தவிதமான பதிலும் இல்லை. பல முறை நாம் நினைவு படுத்திக் கடிதம் எழுதியிருக்கிறேம். நேரிலும் பேசியிருக்கிறேம்.

[திருமதி த. ந. அனந்தநாயகி எழுந்தார்]

**மாண்புமிகு பேரவைத் தலைவர்:** ஒவ்வொரு பாயிண்டும் விவாதத்திற்குரியது. ஒவ்வொரு எடுத்துக்காட்டிற்கும் விளக்கம் கேட்டால் இந்த விவாதம் முடிவுருது.

**திருமதி த. ந. அனந்தநாயகி:** பஸ் கம்பெனியைப் பற்றிக் கேட்டீர்கள், சரி. நாளைக்கு தனி மனிதன் கார்ப்பரேஷனிடமிருந்து அங்கே வந்து போனஸ் கொடுப்பது பற்றி கேட்டால். அதையெல்லாம் பார்த்துத் தான் பதில் அனுப்பவேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** அதையெல்லாம் பார்த்துத் தான் ஒரேயடியாக மாநில சுயாட்சி கேட்டுத் தொலைக்கிறேம்.

**மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

*1974 ஏப்ரல் 20] [டாக்டர் மு. கருணாநிதி]*

*(பிற்பகல் 12-30)*

உணவு உற்பத்தியில் பிரதான தொடர்பு கொண்டது உரம். உர உற்பத்தியை எடுத்துக்கொண்டால்—நாம் இன்றையதினம் அவர்களுடைய தொழிற்சாலைகளுக்குள்ளே நுழைந்து அவர்களிடத்திலுள்ள இருப்புகளைக் கேட்கவும்—விநியோகத்தில் தவறு நடந்தால் உரத்தைப் பறிமுதல் செய்யவும்—நாம் கார்டுகள் கொடுத்த விவசாயிகளுக்கு விநியோகம் செய்யவும் நமக்கு அதிகாரம் தேவை என்றும்—உரத் தொழிற்சாலைகளின் இருப்புகளைச் சோதனையிடுகிற அதிகாரம் நமக்குத் தேவையென்றும் பலமுறை கேட்டிருக்கிறோம். பயன் இல்லை. அதன் விளைவாக எவ்வளவு தவறுகள் தனியார் உர விநியோகத்தில் ஏற்பட்டிருக்கின்றன என்பதையும் இங்கே எடுத்துச் சொல்லியிருக்கிறோம்.

சிறு தானியங்களான—சோளம், கம்பு, கேழ்வரகு (கேப்பை) போன்ற சிறு தானியங்கள் ஒரு மாநிலத்தில் இருந்து இன்னொரு மாநிலத்திற்குச் செல்லக்கூடாது என்று தடை இருந்தது. அந்தத் தடையை மத்திய சர்க்கார் நீக்கிவிட்டார்கள். யாரைக் கேட்டுக் கொண்டு நீக்கினார்கள்? நம் மாநிலத்தைக் கலந்துகொண்டு செய்யப்பட்டதா? இல்லை.

இந்த மாநிலத்தில் இருந்து இன்னொரு மாநிலத்திற்கு சிறு தானியங்களை எடுத்துச் செல்லக்கூடாது என்ற கட்டுப்பாடு இருந்தது, அந்தக் கட்டுப்பாட்டை—நம் மாநிலத்தைக் கலந்து கொள்ளாமலே—நமக்குச் சொல்லாமலே அவர்களே தளர்த்தி விட்டு—எந்த மாநிலத்தில் இருந்து எந்த மாநிலத்திற்கு வேண்டுமானாலும் கம்பு, கேழ்வரகு (கேப்பை) போன்ற சிறு தானியங்களை எடுத்துச் செல்லலாம் என்கின்ற அறிவிப்பை—நம்மைக் கலந்து கொள்ளாமலேயே செய்து விட்டார்கள்.

அதன் காரணமாக இன்றைக்கு அந்தச் சிறு தானியங்களின் விலை 50 சதவிகிதத்திற்கும் மேல் உயர்ந்திருக்கிறது. அப்படித் தளர்த்தியது தவறு என்று எதிர்த்தோம். கடிதம் எழுதினோம். நம் அமைச்சர்கள் நேரில் சென்று தெரிவித்தார்கள்—அதிகாரிகள் டெல்லிக்கு பல்முறை படையெடுத்தார்கள், சரி. கட்டுப்

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

பாட்டைத் தான் தளர்த்திவிட்டீர்கள்—பரவாயில்லை—தயவு செய்து லெவி முறைக்காவது எங்களுக்கு அனுமதி கொடுங்கள் என்று கேட்டோம்—அதையும் மறுத்துவிட்டார்கள்.

இந்தச் சிறு தானியங்களை அடுத்து—நெல், அரிசி போன்ற வற்றுக்குள்ள மாநிலக் கட்டுப்பாட்டைத் தளர்த்துவதற்கு இது அடையாளமாக அமையக்கூடுமோ என்ற அச்சம் நம்மைப் பிடித்து இன்றைக்கு வாட்டிக் கொண்டிருக்கிறது.

இந்தச் சிறு தானியங்களுக்கு இருந்த கட்டுப்பாட்டை, இந்த அரசைக் கலந்துகொள்ளாமல் மத்திய அரசு தளர்த்திவிட்டதன் காரணமாக இன்றைக்கு மாநிலத்தில் பல பகுதிகளில்—பல மாவட்டங்களில் ஏற்பட்டிருக்கிற சிக்கலை, சங்கடங்களை மாண்புமிகு உறுப்பினர்கள் நன்றாக அறிவார்கள் என்று கருது கிறேன்.

எண்ணெய் விலையை ஓரளவுக்காவது கட்டுப்படுத்தலாம் என்று தான் வேர்க்கடலைக்கு லெவி வேண்டுமென்றும், வியாபாரத்திற்கு லைசென்சு தரப்பட வேண்டும் என்றும், அதற்கான அதிகாரம் மாநில அரசுக்கு வேண்டுமென்றும் அனுமதி கேட்டோம். 12—4—1973-இல் இருந்து கேட்டோம். இதுவரை அந்த அனுமதி தரப்படவில்லை.

மண்ணெண்ணெய் இல்லாத சங்கடத்தால் எவ்வளவு பேர் அந்தத் தட்டுப்பாட்டினால் பரிதவித்தார்கள் என்பதை நாம் அறிவோம்—இந்த அதிகாரங்கள் பொது மக்களோடு எவ்வளவு தொடர்பு கொண்டவை—எவ்வளவு தொடர்பு கொண்ட பிரச்னை களில் நாம் இன்றைக்குச் சிக்கித் தவிக்கிறோம் என்பதை முதலில் எடுத்துக்காட்டத் தான் இவைகளையெல்லாம் சொல் கிறேன்.

மத்திய அரசின் அனுமதி இல்லாமலேயே இதுவரை எண்ணெய் கம்பெனிகளில் இருந்து எண்ணெய் டெப்போக்களுக்கு மண் ணெண்ணெயை விநியோகம் செய்ய உத்தரவிடுகிற அதிகாரம் இதுவரையில் மாநிலத்திற்கு இருந்தது. ஆனால், திடீரென்று 1972 இதுவரையில் மாநிலத்திற்கு இருந்தது. எந்தக் கம்பெனியி

லிருந்தும், எந்த ஜில்லாவிலிருக்கிற டெப்போவுக்கும் மண்ணெண்ணெய் அனுப்பலாம் என்று உத்தரவிடுகின்ற அதிகாரம் இதுவரையில் மாநிலத்திற்கு இருந்தது. ஆனால், திடீரென்று 1972 இல் இந்த அதிகாரத்தை மத்திய அரசு எடுத்துக் கொண்டார்கள். அதனால் ஏற்பட்ட கஷ்டம் என்ன ? நம் மாநிலத்தில் எண்ணெய்த் தட்டுப்பாடு எங்கே ஏற்படுகிறது என்று நமக்குத் தெரியும்.

உடனடியாக அந்தக் கம்பெனியோடு மாநில அரசு தொடர்பு கொள்வது சுலபம். திருச்சிக்கு அனுப்புங்கள்—தஞ்சைக்கு அனுப்புங்கள்—கோவைக்கு அனுப்புங்கள் என்று தட்டுப்பாடு இருக்கிற இடத்தை உடனடியாக அறிந்து நடவடிக்கை எடுக்கக் கூடிய தொலைவு இல்லாத இடத்தில் நாம் இருக்கிறோம். ஆனால் மத்திய சர்க்கார் நம்மிடம் இருந்த அந்த அதிகாரத்தைப் பறித்து வைத்துக்கொண்டது.

அந்த அதிகாரத்தை மீண்டும் மாநிலத்திற்கே தாருங்கள் என்று கேட்டோம். 26—4—1973-இல் கடிதம் எழுதினோம். நேரில் கேட்டோம்—தந்திகள் கொடுத்தோம். தந்தி கொடுத்த பிறகு பதில் தந்தி கொடுத்தார்கள். என்ன தெரியுமா ? "எண்ணெய் கம்பெனியில் இருந்து நேரடியாக டெப்போக்களுக்கு எண்ணெய் அனுப்பி வைக்கிற அதிகாரம் உங்களுக்குத் தேவை என்று கேட்கிறீர்களா" என்று ஒரு கேள்வியைத் தந்தியாக ஆக்கினார்கள். "ஆமாம்" என்று பதில் தந்தி கொடுத்தோம். அதற்குப் பிறகு பதிலே கிடையாது.

ஆக, மண்ணெண்ணெய் போன்ற, மக்களுக்கு அத்தியாவசியமாகத் தேவைப்படுகிற பண்டங்களைக் கூட—மக்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிற மாநில சர்க்காரால் விநியோகிப்பதற்கு நம்மிடத்தில் அதிகாரம் இல்லாத காரணத்தினால், இருக்கிற அதிகாரங்களும், பறித்துக்கொள்ளப்படுகிற காரணத்தினால் ஏற்படுகிற சங்கடங்களை விளக்குவதற்காகவேதான் சொன்னேன்.

கரைபோட்ட வேட்டி—வண்ணச் சேலைகள் ஆகியவற்றை நெய்வது கைத்தறிகளுக்கே ஒதுக்கப்பட வேண்டும் என்றும் கைத்தறியாளர்களுக்கு தங்கு தடையின்றி நூல் கிடைக்க வழி செய்ய வேண்டும் என்றும்—இன்றல்ல—1952 ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 3 ஆம் நாள்—டாக்டர் யு. கிருஷ்ணாராவ் அவர்கள்

தொழிலமைச்சராக இருந்த போதே—இந்தப் பேரவையிலே ஒரு தீர்மானம் நிறைவேற்றினார்கள். கிட்டத்தட்ட 20 ஆண்டு காலம் ஓடிவிட்டது. அந்தத் தீர்மானத்தின் கதி என்ன?

டாக்டர் கிருஷ்ண ராவ் தொழில் துறை அமைச்சராக தொழிலாளர் நல அமைச்சராக இருந்த காலத்தில் 1952 ஆம் ஆண்டு நவம்பர்த் திங்களில் கரை போட்ட வேட்டிகள்—வண்ணச் சேலைகள் கைத்தறிக்கே ஒதுக்கப்பட வேண்டுமென்று நிறை வேற்றப்பட்ட தீர்மானம்—20 ஆண்டுக் காலமாகக் கவனிப் பாரற்றுக் கிடக்கிறது. அதைப் பற்றி நாமே பலமுறை இந்த அவையில் பேசியிருக்கிறோம், எடுத்துச் சொல்லியிருக்கிறோம் கவனிக்கப்படவில்லை.

இந்த அரசு கைத்தறியாளர்களது துயரைப் போக்க—பருத்தி நூல், நெட்டிழை பருத்தி நூல்—பட்டு ஆகியவற்றின் விநியோக அதிகாரம், விலையைக் கட்டுப்படுத்துகின்ற அதிகாரம் மாநில அரசுக்கு அளிக்கப்பட வேண்டுமென்று மத்திய சர்க்காரிடத்தில் பலமுறை பேசியிருக்கிறோம். எழுதியிருக்கிறோம். பலன் இல்லை. மாறாக, இருபது லட்சம் கைத்தறியாளர்களின் கண்ணீரைத் தான் நாம் கண்டு வருகிறோம். நமக்கு அதிகாரம் இல்லாத காரணத்தினால் நாம் கேட்கின்ற அதிகாரத்தை 1952 முதலே மத்திய அரசு கொடுக்க மறுத்து வருகிற காரணத்தினால் இந்த அவல நிலைக்கு இந்த மாநிலம்—மாநிலக் கைத்தறியாளர்கள் ஆளாகியிருக்கிறார்கள்.

திரு. கோவை செழியன்: பேரவைத் தலைவர் அவர்களே கேரள மாநிலத்தில் உற்பத்தியாகின்ற நூல்களை எல்லாம் வெளி மாநிலங்களுக்கு மத்திய அரசு அனுப்புகின்ற காரணத்தினால் அந்த மாநில கைத்தறியாளர்களுக்கு நூல் கிடைக்கவில்லை என்ற காரணத்தினால் டி.ஐ.ஆர். சட்டத்தின்கீழ் அதை நிறுத்தி விட்டார்கள். அதேபோல் தேங்காயும்--தேங்காய் எண்ணெய்யும் அந்த மாநிலத்தை விட்டு வெளியே போக கூடாது என்று சட்டம் போட்டார்கள்.

நம் மாநிலத்திலும் மதி அவர்கள் முன்னாள் உணவு அமைச்சராக இருந்தபோது ராஜஸ்தானில் இருந்து பருப்பு வரவில்லை என்றவுடன் இங்கிருந்து வெல்லம் போகக் கூடாது என்று தடை

விதித்தார்கள். அப்படி நீங்கள் உத்தரவு போடுங்கள். மத்திய சர்க்கார் என்ன செய்கிறது என்று பார்ப்போம். பிறகு வேண்டுமானால் நாம் உட்கார்ந்து பேசுவோம்.

**திரு. கே. டி. கே. தங்கமணி**: உர விநியோகம் சம்பந்தமாக ஏற்கெனவே சொன்னார்கள். நான் அந்த நேரம் தலையிடக்கூடாது என்று நினைத்தேன். உர விநியோகத்திலே இன்ஸ்பெக்ஷன் செய்வதற்கு ஏதாவது மறுப்பு மத்திய சர்க்கார் தெரிவித்ததா? அல்லது இன்ஸ்பெக்ஷனுக்காக எத்தனை இன்ஸ்பெக்டர்களைப் போட்டாலும் கூட அதற்கான செலவை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறோம் என்று சொன்னார்களா? இன்ஸ்பெக்ஷன் கோளாறு காரணத்தினால் இந்த விநியோகத்திலே ஏதாவது தவறு ஏற்பட்டதா என்பதை அறிய விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி**: உரத் தொழிற்சாலைகளுக்குள் நுழைந்து அவைகளின் இருப்புகளைக் கணக்கெடுக்க நமக்கு அவர்கள் அதிகாரம் அளிக்கவில்லை. தவறாக விநியோகம் செய்யப்படுமானால், அப்படிப்பட்ட இடத்தில் இருந்து உரத்தைப் பறிமுதல் செய்து, நாம் யாருக்குக் கார்டு வழங்கியிருக்கிறோமோ அவர்களுக்கு விநியோகிக்க நமக்கு உரிமையில்லை. இவைகளைக் கேட்டோம், இன்னும் பதில் இல்லை. மறுத்துவிட்டார்கள்.

கோளாவைப் பற்றிச் சொன்னார் நண்பர் செழியன் அவர்கள். இங்கு நண்பர் திரு. மதியழகன் அவர்கள் நிதி அமைச்சராக இருந்தபோது வெல்லத்தின் மீது போட்ட தடையைப்பற்றிச் சொன்னார்கள். அது நீதி மன்றத்திற்குச் சென்று அந்த உத்தரவு செல்லாததாக ஆகிவிட்டது. மத்திய சர்க்காரோடு நாம் இப்படி அடிக்கடி சச்சரவுகள் எழுப்புவதில் எந்தவிதமான தடையுமில்லை.

ஆனால் தடை செய்யப்பட்ட பத்து நாட்களுக்குள் நீதி மன்றத்திற்குச் சென்று, அந்தத் தடைகளை நீக்க நீதிமன்றத்தின் தீர்ப்பை இன்றைக்கு இருக்கிற அரசியல் சட்டத்தின் அடிப்படையில் யாரும் பெற்றுவிட முடியும். அதற்காகத்தான் இவைகளை மாற்ற வேண்டும்—மாநில சுயாட்சி வேண்டுமென்று கேட்கிறோம்.

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 எப்ரல் 20

இவ்வளவு—இருக்கிற அதிகாரங்களை வைத்துக்கொண்டும் இல்லாத அதிகாரகளுக்காக வாதாடியும்—இந்தச் சூழ்நிலையில் மாநில மக்களுக்கு பல நல்ல காரியங்களை நாம் செய்து வருகிறோம் என்றாலும், நாம் வருந்துகின்ற அளவுக்கு விலைவாசி கட்டுப்படுத்தப்பட முடியாமல் ஏறிக்கொண்டிருக்கின்றது.

இதற்கு யார் காரணம்? நம்முடைய திரு. பொன்னப்ப நாடார் அவர்கள் இங்கே படித்துக் காட்டினார்களே—ஏ.ஆர்.சி. ரிப்போர்ட்டை அதன் 18-ஆம் பக்கத்தில் மிகத் தெளிவாகச் சொல்லியிருக்கிறார்கள்.

'In fact, it is the policies of the Central Government that are responsible for inflation and increases in prices and the cost of living......'

மத்திய சர்க்கார்தான் இதற்குக் காரணம் என்பதை ஏ.ஆர்.சி. ரிப்போர்ட் மிகத் தெளிவாக, விரிவாக எடுத்துக் கூறியிருக்கின்றது.

ஆகவே, மத்திய சர்க்கார் மீது பழிபோடாதே, மத்திய சர்க்காரைக் குறை சொல்லாதே என்று சொல்வது பொருத்தமுடையது அல்ல என்பதற்கான தெளிவான விளக்கத்தை ஏ.ஆர்.சி. அறிக்கையே நமக்குத் தந்திருக்கிறது என்பதை நான் உங்களுக்குச் சுட்டிக் காட்டினேன்.

அதிக அதிகாரம் கேட்பது இங்கே அமர்ந்திருக்கிற அமைச்சர் பெருமக்கள் அந்த அதிகாரத்தை அனுபவிக்க வேண்டும் என்பதற்காகவா? அல்லது திராவிட முன்னேற்றக் கழக ஆட்சி அந்த அதிகாரத்தை அனுபவிக்க வேண்டும் என்பதற்காகவா?

அதிகாரம் எங்களுக்காக அல்ல. மாநிலத்திற்காகக் கேட்கிறோம். அது புரிய வேண்டும் என்பதற்காகத்தான் 'மாநில சுயாட்சி' என்று சொல்கிறோம்.

அது மேலும் தெளிவாகப் புரிய வேண்டும் என்பதற்காகத்தான் இந்தியாவில் இருக்கிற எல்லா மாநிலங்களுக்கும் சுயாட்சி என்கிறோம்.

அது அழுத்தந்திருத்தமாகப் புரியவேண்டும் என்பதற்காகத்தான் மத்தியில் கூட்டாட்சி என்று சொல்கிறோம்.

1974 ஏப்ரல் 20] [டாக்டர் மு. கருணாநிதி]

மத்தியில் கூட்டாட்சி—மாநிலத்தில் சுயாட்சி என்று கூறுகிற நேரத்திலேயே அங்கு பிரிவினைக்கு எள்ளளவும் இடம் இல்லை என்பது மிகத் தெளிவாகத் தெரிகிறது.

ஆனால் இங்கே நம்முடைய மாண்புமிகு காங்கிரஸ் கட்சி உறுப்பினர்கள்—அதன் தலைவர்கள் பேசுகின்ற நேரத்திலும்—வேறு ஓரிருவர் பேசுகின்ற நேரத்திலும்—"உங்கள் வரலாறு அப்படி இருக்கிறதே, ஆகவே உங்களுடைய வரலாற்றுப் பின்னணியைப் பார்த்து நாங்கள் சந்தேகிக்கிறோம்" என்றார்கள். "நீங்கள் ஏற்கெனவே திராவிட நாடு கேட்டவர்கள், பிரிவினை கேட்டவர்கள் —ஆகவே உங்களுடைய வரலாற்றை நாங்கள் பின்னணியாகக் கொண்டு உங்களைச் சந்தேகிக்கிறோம்" என்று சொன்னார்கள்.

அப்படியானால் அந்த வரலாற்றுக்குரியவர்கள் இப்பொழுது யார் யார் எங்கெங்கே இருக்கிறார்கள் என்பதெல்லாம் கூடப் பிரச்சினை. இங்கே அமர்ந்திருக்கின்ற மாண்புமிகு அமைச்சர் திரு. என். வி. நடராசன் அவர்கள் 1937-ம் ஆண்டிலே நடந்த இந்தி எதிர்ப்புப் போராட்டக் காலம் வரையிலும் காங்கிரஸ் கட்சியிலே இருந்து கொடி தூக்கி விடுதலைப் போராட்டத்திலே ஈடுபட்டவர் தான்.

எனக்குப் பின்னாலே அமர்ந்திருக்கின்ற திரு. இராம. அரங்கண்ணல் அவர்கள் காங்கிரஸ் கட்சிப் போராட்டத்திலே—நான் மாணவனாக இருந்த அந்தக் காலத்திலேயே ஈடுபட்டிருந்தார். திருவாரூர் உயர்நிலைப்பள்ளியில் நானும் அவரும் ஒன்றாகப் படித்துக்கொண்டிருந்த நேரத்திலேயே—காங்கிரஸ் இயக்கத்திலே தீவிரமாக இருந்தவர்.

அதைப்போலவே செட்டி நாடு ராஜா அவர்கள் ஜஸ்டிஸ் கட்சியிலே இருந்தவர் காங்கிரஸில் மிகச் செல்வாக்குப் பெற்றிருந்தவர், இப்பொழுதும் அந்தச் செல்வாக்கைப் பெற்றிருக்கிறவர் என்று கருதுகிறேன். ஆகவே திரு. டி. டி. கே. அவர்களையும், ஜஸ்டிஸ் கட்சியின் பிரதான தூண்களில் ஒருவராக இருந்தவர் என்று வர்ணிக்கப்பட்ட திரு. ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்களையும் தான் இந்தியா சுதந்திரம், பெற்றதும் மத்திய

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

அரசாங்கத்திலே நிதியமைச்சர்களாக பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டுமென்று வேண்டி, அவர்களும் ஏற்றுக்கொண்டார்கள். யாரும் மறந்துவிடமுடியாது.

ஜஸ்டிஸ் கட்சியின் பிரதான தூண்களில் ஒருவர் என்று சிறப்பிக்கப்பட்ட டாக்டர் சுப்பராயன் தான் காங்கிரஸ் அமைச்சரவையிலே ஒரு அமைச்சராக ஆனார் என்பதையும் மறந்துவிட முடியாது. ஆகவே . . .

**திரு. கே. டி. கே. தங்கமணி :** டாக்டர் சுப்பராயன் என்றைக்கும் ஜஸ்டிஸ் பார்ட்டியில் இருந்ததில்லை. அவர் முதல் அமைச்சரானபோது அவர் சுயேச்சையாகத்தான் இருந்தார். அவர் எப்போதுமே அதைத் தெளிவுபடுத்திக் கொண்டுதான் வந்திருக்கிறார். நான் ஜஸ்டிஸ் பார்ட்டியைக் குறைத்துச் சொல்வதற்காகச் சொல்லவில்லை. டாக்டர் சுப்பராயனைப் பொறுத்த அளவில் ஜஸ்டிஸ் பார்ட்டியிலே உறுப்பினராகவோ ஜஸ்டிஸ் பார்ட்டி அமைச்சராகவோ இருந்தது இல்லை.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** ஜஸ்டிஸ் கட்சியிலே அவர் உறுப்பினராக இல்லாமலிருந்திருக்கலாம். ஆனால் அன்றைக்கு ஜஸ்டிஸ் கட்சியின் ஆதரவாளராகத்தான் இருந்தார். அவர் அமைச்சராக ஆனார். சரி, பிரிவினை கேட்காத கட்சிகள், பிரிந்து போக வேண்டுமென்று சொல்லாத கட்சிகள் எந்தக் கட்சியாவது இன்றைக்கு இந்தியாவிலே இருக்கிறதா? தமிழ்நாட்டிலே இருக்கிறதா? அல்லது இந்த அவையிலே இருக்கிறதா? இல்லை. நம்முடைய இந்திய கம்யூனிஸ்ட் கட்சி 1941-ஆம் ஆண்டு வரையில் பாகிஸ்தான் பிரிவினைக்கு எதிர்ப்பாக இருந்தது. 1941-ஆம் ஆண்டில் சோவியத் ரஷ்யா போரிலே ஈடுபட்டதும் கம்யூனிஸ்ட் கட்சி தன்னுடைய போக்கை மாற்றிக்கொண்டு, முஸ்லீம் லீக் இந்தியாவின் இரண்டாவது பெரிய வகுப்பைப் பிரதிபலிக்கும் மகத்தான அரசியல் கட்சி என்று பிரகடனப்படுத்தி, பாகிஸ்தான் பிரிவினைக்கு ஆதரவு தந்தது.

1974 எப்ரல் 20] [டாக்டர் மு. கருணாநிதி]

திரு. ஜீ. அதிகாரி என்பவர் 'பாகிஸ்தான் அண்ட் நேஷனல் யூனிட்டி' என்ற ஒரு புத்தகத்தில் கம்யூனிஸ்ட் கட்சியின் கருத்துக்களைத் தெரிவித்திருக்கிறார். 'முஸ்லீம் தேசிய இனம் முழு சுயாட்சி உரிமைகளுடனும் பிரிந்து போகும் உரிமையுடனும் விளங்கவேண்டும்' இவ்வாறு அவர் தெரிவித்திருக்கிறார்.

இந்த பாகிஸ்தான் ஆதரவுக் கொள்கை காரணமாகத்தான் காங்கிரஸ் கட்சியிலிருந்து 1945 ஆம் ஆண்டு கம்யூனிஸ்டுகள் விலக்கப்பட வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது என்பதை மறந்திருக்க இயலாது.

இதைவிட ஒருபடி அதிகமாகச் சென்று திரு பி. சுந்தரய்யா 1946 ஆம் ஆண்டு எழுதிய 'விசால ஆந்திரா' என்ற புத்தகத்திலே கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கைகளைத் தெளிவாக்கியிருக்கிறார்.

'மலையாளிகள், தமிழர்கள், ஆந்திரர்கள் போன்ற தனித்தன்மை படைத்த தேசிய இனங்கள் இயற்கையாகத் தோன்றி வளர்வதற்கு பிரிட்டிஷார் இந்தியாவை ஒன்றுபடுத்தியது தடையாகப் போய்விட்டது' என்று அவர் குறைபட்டுக் கொண்டிருக்கிறார்.

அப்போது ஆந்திரத்திலுள்ள காங்கிரஸ்காரர்கள் மொழி அடிப்படையில் ஆந்திரர்களுக்குத் தனி மாகாணம்—மொழிவாரி மாகாணம் வேண்டும் என்று கேட்டு வந்தார்கள். அப்போது சுந்தரையா எழுதுகின்றார் அந்தப் புத்தகத்தில் . . . "எதற்காக நீங்கள் தனி மாகாணம் மட்டும் கேட்கிறீர்கள்? நீண்ட வரலாறும், தனித்த மொழியும், கலாச்சாரப் பாரம்பரியமும் கொண்ட ஆந்திரா ஏன் தனிநாடாக இருக்கக்கூடாது" என்று கேட்டுவிட்டு, "இத்தகைய கொள்கையை நீங்கள் ஒப்புக்கொண்டால், பலுசிஸ்தான், மேற்கு பஞ்சாப், சிந்து, வங்கத்தின் சில பகுதிகள் ஆகிய இடங்களில் பெரும்பான்மையாக வாழ்கின்ற முஸ்லீம் மக்களுடைய கோரிக்கையை நீங்கள் ஏன் ஒப்புக்கொள்ளக் கூடாது" என்றும் அவர் அந்தப் புத்தகத்தில் கேட்டிருக்கிறார்.

1942, செப்டம்பர் 19 ஆம் தேதி அப்போது ஒன்றாக இருந்த கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய குழு ஒரு தீர்மானம் போட்டது. அந்தத் தீர்மானம் 1943 ஆம் ஆண்டு மே மாதம்

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

கூடிய இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் முதல் காங்கிரஸ் கூட்டத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. என்ன தீர்மானம்? "தொடர்பான பூகோள பிராத்தியத்தைத் தாயகமாகக் கொண்ட, பொதுவான வரலாற்றுப் பூர்வமான பாரம்பரியம், பொது மொழி, கலாச்சாரம், மனப்பூர்வமான ஒருமைப்பாடு, பொதுவான பொருளாதார வாழ்வு, ஆகியன கொண்ட இந்திய மக்களின் ஒவ்வொரு பிரிவும் தனித்தன்மை கொண்ட தேசிய இனமாகும். அத்தகைய தேசிய இனங்கள், சுதந்திரம் பெற்ற இந்திய யூனியன் அல்லது கூட்டாட்சிக்குள் சுயாட்சி பெற்ற மாநிலங்களாக இருப்ப தற்கு உரிமை பெற்றவை. அவை விரும்பினால் பிரிந்துபோகும் உரிமை Right to secede அவர்களுக்கு உண்டு". இவ்வாறு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி தீர்மானம் போட்டது. திராவிட முன்னேற்றக் கழகம் பிரிவினை வேண்டும் என்று தீர்மானம் போட்டது குற்றம் என்றால், அதே குற்றத்தை இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியும் செய்திருக்கிறது. ஆகவே, எங்கள் இருவருக்கும் ஒரே வரலாற்றுப் பின்னணிதான் அமைந்திருக் கின்றது . . .

**திரு. கே. டி. கே. தங்கமணி :** 1943 ஆம் ஆண்டு பம்பாயிலே நடந்த அகில இந்திய மாநாட்டைப்பற்றிச் சொல்கிறார்கள் என்று நினைக்கிறேன். அந்த மாநாட்டினுடைய பின்னணி, நாளைக்குச் சுதந்திரம் வருகிற காலத்திலே ஒவ்வொரு மாநிலமும் மொழி அடிப்படையிலே எப்படி எப்படி அமையவேண்டும், அப்படி மாநிலத்தினுடைய அமைப்பு எப்படி இருக்க வேண்டும் என்பதற்கு மாநிலத்தினுடைய தேசிய இனங்கள் என்றால் என்ன என்று வரையறுத்துத்தான் அங்கு சொல்லப்பட்டிருக்கிறதே யொழிய வேறல்ல.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** நான் இப்போது அது உங்கள் கொள்கை என்று சொல்லவில்லை. கடந்த கால வரலாற்றைப்பற்றித்தான் சொல்கிறேன். நீங்கள் முஸ்லீம் பற்றிச் சொன்னீர்கள், அவர்கள் கடந்த கால வரலாறு பிரிந்து போகின்ற வரலாறு, ஆகவே அவர்கள் இதை ஆதரிப்பார்கள் என்று திரு. கே. டி. கே. தங்கமணி சொன்னார்கள். அதற்காக

ஞாபகப்படுத்துகிறேன். முஸ்லீம்கள் பிரிந்துபோவது நியாயம் தான் என்று கம்யூனிஸ்ட் கட்சி 1941-ல் வாதாடியிருக்கிறது என்பதற்காகச் சொல்கிறேன்.

அதைப்போல திரு. ஜவஹர்லால் நேரு அவர்கள் கூட "டிஸ்கவரி ஆப் இண்டியா" என்ற நூலில்--இதைப்பற்றி நாவலர் அவர்கள் கூட நேற்றைய தினம் குறிப்பிட்டார்கள் என்று கருது கிறேன்—'இந்தியாவிற்கு சுதந்திரம் கிடைத்த பிறகு ஒரு குறிப் பிட்ட காலத்திற்குப் பிறகு, அதாவது சுதந்திர இந்தியா அமைந்த சுமார் பத்தாண்டுகளுக்குப் பிறகு அதன் பகுதிகளுக்கு பிரிந்து போகும் உரிமையை முறைப்படி வழங்கலாம்' என்று டிஸ்கவரி ஆப் இண்டியா என்ற நூலில் எழுதினார்கள். நேரு அவர்கள் தனிப் பட்ட முறையிலே இந்தக் கருத்தைச் சொல்லவில்லை. அகமது நகர் கோட்டைச் சிறைச்சாலையில் இருந்து எழுதினார்கள். அப்போது அவரைச் சுற்றி பல காங்கிரஸ் தலைவர்கள் இருந் தார்கள். அந்தப் புத்தகத்திலே அவர் குறிப்பிடுகிறார்—'இதை எல்லாரும் படித்துப் பார்த்தார்கள். சிறைச்சாலையிலேயிருந்த காங்கிரஸ் தலைவர்கள் அத்தனை பேர்களும் அதனைப் படித்துப் பார்த்தார்கள். ஆகவே, இதைக் காங்கிரஸ் ஒப்புக் கொண்ட தாகவே கருதவேண்டும்' என்று அந்தப் புத்தகத்தைப்பற்றி குறிப்பையும் எழுதியிருக்கிறார்கள்.

ஆகவே முன் வரலாற்றை மட்டும் வைத்து இப்பொழுது சொல்கிற எல்லா விஷயங்களுக்கும் தவறான கருத்துக்களை கற்பிக்கக் கூடாது.

போர், போர் என்று அலைந்த அசோகன் களம் பல கண்டான், அவனுடைய கட்டாரி பட்டு ஆயிரக்கணக்கானவர் பிணமாயினர். அவனுடைய ரத, கஜ, துரக, பதாதி படைகளின் ஆர்வத்தால் —வேகத்தால் சரிந்துபோன சாம்ராஜ்யங்கள் எத்தனையோ! கலிங்கம் வரை சென்றான். கலிங்கத்திலே களம் கண்டான், அங்கே பிணக் குவியல்களைப் பார்த்தான், அதற்குப்பிறகு நான் இனிமேல் போர் புரிய மாட்டேன், நான் இனிமேல் புத்தன் என்ற வுடனே அவனை, 'உன்னுடைய பழைய வரலாறு போர் வரலாறு, ஆகவே ஒப்புக் கொள்ளமாட்டேன், நான் உன்னை ஏற்றுக்கொள்ள மாட்டேன்' என்று அன்றைய இந்தியா சொல்லியிருந்தால் இன்று

மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

இந்தியக் கொடியிலே அசோகச் சக்கரம் பொறிக்கப்பட்டிருக்க முடியாது. இன்றைக்கு அசோகச் சின்னம் நம்முடைய இந்தியாவினுடைய தேசிய சின்னமாக ஆகியிருக்காது. (கரவொலி.)

வழிப்பறிக் கொள்ளையடித்த ரட்சன் வால்மீகியாகி இராமாயணம் எழுதினான், அவனை ஒத்துக்கொண்டீர்கள், எங்களை ஒத்துக்கொள்ளககூடாதா? (கரவொலி) ரட்சன் வால்மீகியானனே, அவனை ஒத்துக்கொண்டீர்களே, எங்களை ஒத்துக் கொள்ளக் கூடாதா? (கரவொலி.)

நண்பர் கோவை செழியன் அவர்கள், நீங்கள் ஆதித்தனாரிடத்திலும், சிலம்புச் செல்வரிடத்திலும் போயும்போயும் இந்தக் கொள்கையை கடன் வாங்கினீர்களே என்று கேட்டார். அவருக்கு வருத்தம், அவர் தமிழ் தேசியக் கட்சி என்று ஒன்று ஆரம்பித்தார். அந்தக் கட்சியின் கொள்கை என்ன? 'மொழி வழித் தேசிய தனனாட்சிகள், சம அந்தஸ்தோடு விரும்பி (விரும்பினால்தான்)— இணைந்த இந்தியக் கூட்டமைப்பில் பிரிந்து போகும் உரிமையோடு கூடிய தமிழ்த் தேசிய தன்னாட்சி காண்பதாகும்.' பிரதான தலைவராக ஈ.வி.கே. சம்பத்தும் அடுத்த தலைவராக கோவை செழியனும் இருந்த தமிழ் தேசியக கட்சியின் கொள்கை இது. நாம் ஆதித்தனாரிடம் கடன் வாங்கினோமா ம.பொ.சி.யிடம் கடன் வாங்கினோமா என்பதை விட செழியன் பெருமைப்பட்டுக் கொள்ளலாம், "பரவாயில்லை நாம் மறந்துவிட்டாலும் அவர்கள் அதை விடாமல் எடுத்துக் கொண்டு நம்மிடத்திலே கடன் வாங்கி இன்றைக்குப் போட்டுக் கொண்டார்கள்" என்று நினைத்துக்கொள்ளலாம். அதிலே ஒரு திருத்தம் "பிரிந்து போகும் உரிமையோடு" என்பதை மட்டும் நாங்கள் எடுத்துவிட்டோம், நண்பர் கோவை செழியன் அவர்கள் மன்னிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

நண்பர் கோவை செழியன் அவர்கள் சொன்னார்கள் "ம.பொ.சி. யிடமிருந்து இந்தக் கொள்கையை வாங்க வேண்டுமா, ஆகவேதான் மாநில சுயாட்சியை ஏற்றுக்கொள்ளவில்லை" என்று சொன்னார். திரு. ம.பொ.சி. அவர்கள் நடத்திய 'மாநில சுயாட்சி' கருத்தரங்

கிற்கு அண்ணா அவர்கள் சென்றார்கள், கண்ணியத்திற்குரிய காயிதே மில்லத் இஸ்மாயில் அவர்களும் சென்றார்கள், என்னுடைய அன்பிற்குரிய கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர் பெரியவர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் இவர்களெல்லாம் அந்த மாநாட்டிற்குச் சென்றார்கள். அந்த மாநாடு 21—7—1968-ல் நடைபெற்றது.

நம்மையெல்லாம் தவிக்கவிட்டு அண்ணா அவர்கள் பிரிவதற்கு 6 திங்களுக்கு முன்பு நடந்த மாநாடு, அந்த மாநாட்டுச் செய்திகள், பேச்சுக்கள் தமிழ்ப் பத்திரிகைகளில் வந்தன, ஆங்கிலப் பத்திரிகை களிலும் வந்தன. முழுப் பேச்சு முரசொலியில் 21—7—1968-ல் வந்தது. நான் அந்தப் பேச்சைப் படிப்பது மற்றவர்களுக்குப் பயன்படுமோ இல்லையோ என்னுடைய அன்பிற்குரிய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக நண்பர்களுக்குப் பயன்படும் என்ற எண்ணத்தோடு சொல்கிறேன்.

திரு. எட்மண்ட் அவர்களைப்போல் எரிச்சல் கக்கும் வார்த்தைகளை வீசுவதற்கு என்னால் முடியாது, பழக்கமும் இல்லை. டாக்டர் ஹாண்டே அவர்கள் சொன்னதைப்போல் சோர்ந்து போய் விட்ட காரணத்தால் அந்த வார்த்தைகள் வராமலிருக் கலாம். ஆனால், அண்ணா அவர்கள் என்ன சொன்னார்கள், என்ன பேசினார்கள் என்பதை மட்டும் படித்துக் காட்ட நான் விரும்புகிறேன்.

சிலம்புச் செல்வர் நடத்திய மாநில சுயாட்சி மாநாட்டில் அண்ணா பேசிய பேச்சைப் படிக்கிறேன்.

"மாநில சுயாட்சி வேண்டும் என்று நாம் கேட்கிறபோது காமராசரும், சுப்பிரமணியமும் 'இப்படிப் பேசுவது மத்திய அரசைக் குலைப்பதாகும்; நாட்டுக்குப் பெருத்த ஆபத்து வரும்' என்று கூறுகின்றனர். இதுபற்றிய எனது விளக்கத்தைக் கூறும் முன்பு அவர்களிடம் பணிவன்போடும், உறுதியோடும் கேட்டுக் கொள்வேன்.

**மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

நாட்டுக்கு ஆபத்து வரும் என்று அறிந்து கூறவும் நாட்டை வலிமையுள்ளதாக ஆக்கும் உரிமையும்—வழி காட்டும் திறமையும் உங்களைத் தவிர வேறு யாருக்கும் இல்லை என்று நினைத்துப் பேசிட முழு உரிமை யாரால் எந்தக் காரணத்தால் எப்போது உங்களுக்கு அளிக்கப்பட்டது?"

அண்ணா பாணியில் கேட்கிறார், "உங்களுக்குத்தான் நாட்டைக் காப்பாற்றும் உரிமை உண்டு என்று யாரால், எந்தக் காரணத்தால், எப்போது அந்தத் தகுதி உங்களுக்கு அளிக்கப்பட்டது?" என்று கேட்கிறார்.

மேலும், "நாட்டைக் காப்பதில் ம.பொ.சி.-க்கு உள்ள உறுதியைவிட காமராசருக்கு உறுதி அதிகம் என்பது எந்த நியாயத்தின்பாற்பட்டது?

குழந்தை தெருவில் சென்றால் கார் வந்து மோதிவிடும்; அதற்கு ஆபத்து வரும் என்று உணர்ந்து அந்தக் குழந்தையைக் காப்பாற்றிட எல்லோருக்கும் உரிமையுண்டு; தேவையுமுண்டு. ஏதோ நாங்கள் பாதை தவறியவர்கள் போலவும்—அவர்கள் தான் காப்பாற்றும் உரிமை படைத்த பாதுகாவலர் போலவும் பேசுவது ஏன்?

காங்கிரஸ் தலைவர்கள் இப்படிப் பேசுவது 15 ஆண்டுகளுக்கு முன் அனுமதிக்கப்பட்ட தவறாக இருக்கலாம். இருபது ஆண்டுகளுக்கு முன் மக்களுக்கு இவையெல்லாம் புரியாத காரணத்தால் சரி என்று கூறி ஏற்றுக் கொண்டிருக்கலாம். ஆனால் விழிப் படைந்த இந்தக் காலத்தில் கூட அப்படிப் பேசுவது—ஆணவத்திற்கு எடுத்துக்காட்டு என்று தான் உலகம் கருதும். காங்கிரஸ்காரர்களைத் தவிர நாட்டின் மீது மற்றவர்களுக்கு அக்கறை இல்லை என்பது பொருளற்றது; பொருத்தமற்றது; ஒதுக்கித் தள்ளப்பட வேண்டிய கருத்து.

பலமான மத்திய அரசு வேண்டும் என்று கூறுகிறார்கள். மத்திய அரசுக்கு பலம் எதற்காக? அந்தப் பலம் யாருக்கு எதிராக? என்பதையும் நாம் சிந்தித்துப் பார்த்திட வேண்டும்.

பலம் என்பது தனிப்பட்ட ஆளுக்கு இருக்கலாம்; தனிப்பட்ட அமைப்புக்கு இருக்கலாம்; மாநிலத் துரைத்தனத்துக்கு இருக்கலாம், மத்திய துரைத்தனத்துக்கு இருக்கலாம். ஆனால் அந்தப் பலம் யாருக்காக—எதற்காகப் பயன்படுத்துவது என்பது பற்றி விளங்கிக் கொள்ளாமலும்—விளக்கிச் சொல்லாமலும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

சீனாவின் ஆக்கிரமிப்புக்கு எதிராக மத்திய அரசுக்கு வலிவு தேவை என்றால் ஒரு துளியும் தயக்கமில்லாமல் அந்த வலிவைச் சேர்த்துத் தரத் தயார். பாகிஸ்தானின் படையெடுப்பை அடக்க மத்திய அரசுக்கு வலிவு தேவை என்றால் நிச்சயம் அந்த வலிவைத் தேடித் தரத் தயார்.

ஆனால் மத்திய அரசின் வலிவு, அசாமிற்கு அச்சத்தைத் தர—தமிழ்நாடு தத்தளிக்க, கேரளத்திற்கு கலக்கம் தருவதற்காகத் தான் என்றால் நமது சுதந்திரச் சிந்தனையைச் சிறுகச் சிறுக அழித்து, சிந்திக்கும் திறனே இல்லாமல் ஆக்குவதற்குத் தான் என்றால், நமது கூட்டுச் சக்தியின் மூலம், நம்மில் ஒவ்வொருவருடைய வலுவையும் கொண்டு அந்த அக்கிரம வலிவைச் சிறுகச் சிறுகக் குறைப்பதுதான் எங்கள் கடமையாக இருக்கும்.

மத்திய அரசு பலமாக இருந்தது குப்த சாம்ராஜ்யத்தில்; மத்திய அரசு பலமாக இருந்தது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில்; ஆனால் இன்று அந்த சாம்ராஜ்யங்கள் எங்கே?

சரிந்த சாம்ராஜ்யங்களுடன்—இப்போது இருக்கிற சாம்ராஜ்யத்தை ஒப்பிடுவதற்கு உள்ளபடியே வருத்தப்படுகிறேன். அந்த சாம்ராஜ்ய வாதிகள்—தமது சாம்ராஜ்யங்களுக்கு அதிகமான வலிவு தேட முயற்சி செய்த ஒவ்வொரு நேரத்திலும் சரிவுதான் ஏற்பட்டது என்பதை சரித்திரமுணர்ந்தவர்கள் அறிவார்கள்.

ஔரங்கசீப் காலத்தில் இருந்த வலிவான மத்திய ஆட்சிக்கு ஒப்பான மத்திய ஆட்சியை சரித்திரத்திலே காண முடியாது. ஆனால் அந்த சாம்ராஜ்யம் என்ன ஆயிற்று என்பதைக் கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

 **மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னர் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

நமக்கிருக்கிற கவலை எல்லாம்—தூக்க முடியாத பாரத்தை மத்திய ஆட்சியினர் விரும்புகிறார்களே என்பதுதான். மத்திய அரசின் வலிவு என்பது மாநிலங்கள் ஒவ்வொன்றின் தனித்தனி வலிவையும் கூட்டியதால் ஏற்பட்ட மொத்த வலிவு தான் என்றால் வாதத்திற்கு ஏற்றது; அரசியலுக்கு நல்லது; காரியத்திற்கும் உகந்தது. ஆனால் மத்திய அரசுதான் எல்லா உரிமைகளையும். பலத்தையும் வைத்திருக்கும்; மாநிலங்கள் தத்தித்தத்தி நடக்கும் அதிகாரம்தான் வைத்திருக்கும் என்றால் அது எதற்கும் பொருத்த முடையதல்ல. மாநில அதிகாரங்களை எல்லாம் எடுத்து, மத்திய அரசு குவித்து வைத்துக் கொள்வதால் மாநிலங்கள் பலகீனமடையும் என்பது மட்டுமல்ல, மத்திய அரசுக்கென்று புதிய வலிமை எதும் ஏற்பட்டுவிடாது.

நாட்டுப் பாதுகாப்புத் தவிர மற்ற அதிகாரங்கள் அனைத்தையும் பற்றிச் சிந்திப்போம். மாநிலங்களுக்குத் தேவையான அதிகாரங்களை மாநிலங்கள் எடுத்துக்கொள்ளட்டும். பின்னர் மாநிலங்கள் விரும்பித் தருகின்ற மீதியுள்ள அதிகாரங்களை மத்திய அரசு எடுத்துக் கொள்ளட்டும்.”

திரு. எட்மண்ட் அவர்கள் கவனிக்க வேண்டும், “பின்னர் மாநிலங்கள் விரும்பித் தருகின்ற மீதியுள்ள அதிகாரங்களை மத்திய அரசு எடுத்துக்கொள்ளட்டும்.

—

தற்போதுள்ள அரசியல் சட்டத்தை ஆராய்ந்து மாநில மத்திய அரசுகளுக்குள்ள அதிகாரப் பங்கீடுகளை மாற்றி அதிக அதிகாரங்களை மாநிலங்களுக்குத் தர வேண்டும். அதற்கான ஒரு குழு அமைத்து ஆராய வேண்டுமென்று நிர்வாகச் சீர்திருத்தக் குழுவிடம் நான் யோசனை தெரிவித்துள்ளேன்.

இன்றைய தினம் மாநில அரசுக்குள்ள வேலை என்ன? மக்களுக்குச் சோறு போடுவது—வேலை வாய்ப்புத் தருவது—தொழில் நீதியை நிலைநாட்டுவது—சுகாதாரத்தைப் பேணுவது—கல்விச் செல்வத்தை வளர்ப்பது போன்ற எண்ணற்ற வேலைகளைச் செய்ய வேண்டியது மாநில அரசு.

ஆனால் மத்திய அரசின் வேலை என்ன? நாடக மேடையில் வரும் இராஜா, மந்திரியை அழைத்து, "மந்திரி! நமது மாநகர் தன்னில் மாதம் மும்மாரி மழை பொழிகிறதா?" என்று கேட்பானாம். அதுபோல் மாதம் ஒரு முறை மாநில மந்திரிகளை மத்திய மந்திரி டில்லியில் கூட்டி, பள்ளிக்கூடங்களில் கல்வி எப்படி இருக்கிறது? காலரா நோய் தடுக்கப்பட்டு விட்டதா? என்று கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். இப்படி தர்பார் பேச்சுப் பேசும் பொறுப்புதான் டில்லிக்கு இருக்கிறதே தவிர வேறு ஒன்றுமில்லை.

மக்களின் சுக துக்கத்தோடு பின்னிப் பிணைந்திருப்பது மாநில அரசு தானே தவிர—மத்திய அரசு அல்ல."

அண்ணா அவர்கள் விளக்குகிறார்கள் :

"மக்கள் மீது அக்கறை இருக்கலாம் மத்திய அரசுக்கு. அது எப்படிப்பட்ட அக்கறை? குடிசைப் பகுதியில் தீ பற்றியதும் மூன்றாவது மாடியிலுள்ள சீமான்—ஏதோ கரும் புகை தெரிகிறதே; தீ விபத்து போலிருக்கிறதே; என்று கூறுவானே அதைப் போன்ற அக்கறைதான் மத்திய அரசின் அக்கறை.

ஆனால் குடிசைப் பகுதியில் தீ பற்றியதும் பதறித் துடிப்பது யார்? அந்தக் குடிசைக்குப் பக்கத்தில் உள்ள குடிசை வாசிதான். அதைப் போல மாநில அரசினர்தான் மக்களின் குறைகளை நேருக்கு நேர் சந்திக்க வேண்டியவர்கள்.

அதிகாரம் தேவைக்கு அதிகமாகக் குவிந்துவிட்டதால் என்ன நடக்கிறது? நான்"

நான் என்றால், அண்ணா அவர்கள் சொல்கிறார்கள் :

"நான் அண்மையில் டில்லி உணவு அமைச்சரோடு தொலைபேசியில் தொடர்பு கொண்டேன்."

"எனக்கு தொலைபேசியில் பேசும் சக்தி அதிகம் இல்லை யாதலால் (அண்ணா சொல்கிறார்) எனது நண்பரை விட்டுப் பேசச் சொன்னேன். உணவு அமைச்சர் ஜெகஜீவன் ராம் (திரு. ஜெகஜீவன் ராம் அப்பொழுது உணவு அமைச்சர்). ஊரில் இல்லாத

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

தால் துணை அமைச்சர் ஷிண்டே என்பவர் பேசினார். கள்ளக்குறிச்சி சர்க்கரை ஆலையில் இருந்து சர்க்கரையை வெளிக் கொணரும் உத்தரவு டில்லியில் இருந்து வாராததால் பெருத்த நஷ்டம் ஏற்படும் என்ற விஷயத்தை அவருக்குக் கூற முயன்றேன். கள்ளக்குறிச்சி என்ற பெயரைப் புரிந்துகொள்ள அவருக்கு 15 நிமிடங்கள் ஆயிற்று. பெயரைப் புரிந்துகொள்ள முடியாத தற்காக அவர் மீது நான் குற்றம் சாட்டவில்லை. சர்க்கரை ஆலை இருப்பது தமிழ்நாட்டில், அதைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் டில்லியில் என்று அதிகாரத்தைப் பிரித்துத் தந்தார்களே அவர்கள் தான் குற்றவாளிகள்.

இப்படி கள்ளக்குறிச்சி சர்க்கரை ஆலையில் இருந்து காட்பாடி சிறு தொழிற்சாலை வரை எல்லாவிதமான சிறு விஷயங்களிலும் அதிகாரத்தை வைத்துக் கொண்டிருப்பதன் விளைவு பெரிய விஷயங்களில் அதிகக் கவனம் செலுத்த முடியாமல் போய் விடும் என்பதால் தான் அதிகாரங்கள் டில்லியில் குவிக்கப்படக் கூடாது என்கிறோம்.

ஆகவே, வலிவான மத்திய அரசுதான் பிரச்சினைகளைத் தீர்க்க முடியும் என்பது தவறு. மாநில சுயாட்சி தர தயக்கம் காட்டுவார் களேயானால் அளவுக்கு மீறிய அதிகாரங்களைத் தாங்கித் தாங்கி பாதுகாப்புப் போன்ற பெரிய விஷயங்களில் கூட சோடை போய் விடுவார்களோ என்பதுதான் என் சந்தேகம்.

மேல் அதிகாரம் அனைத்தும் டில்லியில் இருப்பதை மாற்றிடத் தான் மாநில சுயாட்சித் தத்துவம் பிறந்திருக்கிறது. மாநில சுயாட்சி என்பது தேவையின் அடிப்படையில் எழுந்த அரசியல் கோரிக்கையே தவிர அரசியல் கட்சிக் கோரிக்கை அல்ல."

இது அண்ணா பேசியது. அதே மாநாட்டில் திரு. கல்யாண சுந்தரம் அவர்களும் பேசியிருக்கிறார்கள். "மத்திய அரசை எதிர்த்து மாநில சுயாட்சிக்காக நடக்கும் போராட்டத்தை நாங்கள் ஆதரிக்கிறோம்" என்று அதே மாநாட்டில் திரு. கல்யாண சுந்தரம் அவர்கள் பேசியிருக்கிறார்கள்.

1974 எப்ரல் 20] [டாக்டர் மு. கருணாநிதி]

இது முரசொலியில்தானே வந்தது என்று இங்கே சொல்லா விட்டாலும் நாளைக்குச் சொல்லக்கூடும். அதற்காகத்தான் 'இந்து' பத்திரிகையின் 'ஃபோட்டோஸ்டெட்' காப்பி எடுத்து வந்திருக்கிறேன்.

"C. Ms. want effective State autonomy"
என்ற தலைப்பில் அண்ணா அவர்களும், நம்பூதிரிபாத் அவர்களும் பேசிய பேச்சு அந்தப் பத்திரிகையில் வந்திருக்கிறது.

(பிற்பகல் 1.00)

அதைப் போலவே 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' ஜூலை 21, 1968 இதழில்—

Annadurai wants panel to consider State autonomy
என்று அந்தச் செய்திகள் எல்லாம் அப்போதே பத்திரிகைகளில் வந்திருக்கின்றன.

செழியன் அவர்கள் சொன்னார்கள் 'கருணாநிதி ம.பொ.சி.-யினுடைய அந்தக் கொள்கையை ஏற்றுக் கொள்ளலாமா' என்று. அந்த மாநாட்டில் அண்ணா அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். "இப்படி மத்திய மாநில உறவுகளை ஆராய்ந்து அறிக்கை தர ம.பொ.சி. அவர்களே முயற்சி எடுத்துக் கொண்டு ஒரு குழுவை அமைக்கலாம்."

இன்றையதினம் ம.பொ.சி.யே கேட்டுக் கொண்டிருக்கிறார்.

ம.பொ.சி.-க்குள்ள வசதியில் அது இயலாது என்ற காரணத்தால் ம.பொ.சி.-க்குச் சொன்னால் என்ன, எனக்குச் சொன்னால் என்ன என்பதால் ராஜமன்னார் குழு அமைக்கப் பட்டது. அந்த அறிக்கையின் அடிப்படையில் தமிழக அரசின் கருத்துக்கள் இங்கு ஆராயப்பட, விவாதிக்கப்பட, தீர்மான வடிவில் உங்கள் முன்னால் வைத்திருக்கிறேன்.

DR. H. V. HANDE : Before he begins further arguments, I want to have from the Hon. Chief Minister one clarification. He has mentioned 'மத்தியிலே கூட்டாட்சி' It would be better for the purpose of useful discussion if he were to spell out clearly as to what exactly he means by that expression. The House would like to know the meaning of the expression. Does he want parliamentary election or wants to send some parliamentary members to Centra Government or to inter-State council? He has

not mentioned anything. He can spell out what he menas in five What is in his mind? The House would like to know or six sentences. That would be useful for healthy discussion.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** தனியாக ஹாண்டே அவர்கள் ஒருநாள் வரட்டும். அவர்களிடத்தில் விளக்கமாகப் பேசுகிறேன். வாருங்கள், பேசலாம்.

(டாக்டர் ஹாண்டே குறுக்கீடு)

எல்லா விளக்கங்களும் தரப்பட்டிருக்கின்றன. இங்கே வைக்கப் பட்டிருக்கும் 'மாநில சுயாட்சி பற்றியும் ராஜமன்னார் குழுவின் அறிக்கை பற்றியும் தமிழ் நாடு அரசின் கருத்துரைகள்' என்ற அறிக்கையிலே எல்லா விளக்கங்களும் தரப்பட்டிருக்கின்றன.

**டாக்டர் எச். வி. ஹாண்டே :** பாயின்ட் ஆப் ஆர்டர், சார்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** பாயின்ட் ஆப் ஆர்டர் என்று சொல்லி விளக்கம் கேட்கக் கூடாது.

DR. H. V. HANDE : On a point of Order, Sir. I would like to know whether the Hon. Chief Minister (when he is tightly cornered) can try to escape from explaining what exactly he means by the expression 'மத்தியிலே கூட்டாட்சி' Is it in order for him to escape from explaining that expression to this House? Is it not his duty to give a clear answer to that? என்று கேட்டால், 'நீங்கள் வீட்டுக்கு வாருங்கள்' என்று சொல்வது?

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** ஐந்து நாட்கள் ஏற்கனவே விவாதம் நடந்திருக்கிறது. இதிலே எந்தவிதமான பாயின்ட் ஆப் ஆர்டரும் இல்லை.

(டாக்டர் ஹாண்டே நின்று கொண்டிருந்தார்)

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** தலைவர் அவர்களே,

Tamil Nadu Government views on State autonomy and the Rajamannar Committee Report.

என்ற புத்தகம் அவையில் வைக்கப்பட்டிருக்கிறது.

**டாக்டர் எச். வி. ஹாண்டே :** மத்திய சர்க்கார் எப்படி இருக்க வேண்டும் என்று சொல்லுங்கள். லோக் சபா இருக்க வேண்டுமா, வேண்டாமா ? கிளியராகச் சொல்லுங்கள்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** நீங்கள் உட்காருங்கள்.

*1974 ஏப்ரல் 20]*

**டாக்டர் எச். வி. ஹாண்டே :** லோக் சபா கலைக்கப்பட வேண்டுமென்று சொல்லுகிறீர்களா?

(டாக்டர் ஹாண்டே எழுந்து பேசிக் கொண்டே இருந்தார்—கூச்சல் குழப்பம்)

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** பேரவைத் தலைவர் எழுந்து நிற்கும்போது தாங்கள் எழுந்து நின்று கொண்டு பேசிக் கொண்டே இருப்பது அவையின் நிகழ்ச்சியில் குறுக்கிடுவதாக இருக்கிறது. பேரவைத் தலைவர் எழுந்து நின்றால் உறுப்பினர்கள் உட்கார வேண்டுமென்பது மரபு. பாயின்ட் ஆப் ஆர்டர் என்றால் மன்றத்திலுள்ள நிகழ்ச்சிகள் நடைபெறுவதிலுள்ள முறைகேடுகளைச் சுட்டிக்காட்டுவதாக இருக்க வேண்டும். பாயின்ட் ஆப் ஆர்டர் என்று சொல்லி விளக்கம் பெற எழுந்தால் பேசுகின்றவர்கள் இடம் அளித்தால்தான் குறுக்கிட முடியும்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** தலைவர் அவர்களே, கருத்துக்களைத்தான் இந்த அவையில் எடுத்து வைத்திருக்கிறோம். எங்களால் முடிந்தது கருத்துக்களைத் தருகிற சக்திதான். அதைப் புரிந்து கொள்ளக்கூடிய அறிவையும் தா என்று கேட்டால் அது எங்களால் இயலாத காரியம்.

**டாக்டர் எச். வி. ஹாண்டே :** அந்தக் கருத்து என்ன என்றுதான் விளக்கமாகக் கேட்கிறேன்.

**திரு. குழ. செல்லையா :** பாயின்ட் ஆப் ஆர்டர், சார். முதலமைச்சர் அவர்கள் அறிவு இல்லை என்று சொல்லுகிறாரா?

**திரு. முனு ஆதி :** முதலமைச்சர் அவர்களே 'அறிவு இல்லை' என்று சொன்னால் நாங்கள் என்ன செய்வது?

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** இவ்வளவு பேர் அமர்ந்திருக்கிறார்கள். அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தில் இவ்வளவு பேர் உட்கார்ந்திருக்கிறார்கள். அண்ணா பேசிய பேச்சு முழுவதையும் படித்துக் காட்டினேன். நீங்கள் எல்லாம் அப்படியே அதிலே இணைந்தீர்கள். ஆனால் ஹாண்டே அவர்களால் இணைய முடியவில்லை (ஆரவாரம்).

(டாக்டர் ஹாண்டே எழுந்து நின்றார்—கூச்சல் குழப்பம்)

[1974 ஏப்ரல் 20

**டாக்டர் எச். வி. ஹாண்டே :** நான் அண்ணா அவர்கள் பேசிய பேச்சை முழுவதும் கேட்டேன். நான் கேட்பது புதிது அல்ல. 1968-ம் ஆண்டிலேயே இந்த மன்றத்தில் கேட்டிருக்கிறேன். நம்மைப் பிரித்துப் பார்க்க வேண்டிய அவசியம் முதலமைச்சருக்குத் தேவையில்லை. முதலமைச்சர் அவர்களுக்கு மிக்க மரியாதையோடு சொல்லிக் கொள்கிறேன். அண்ணா அவர்கள் சொன்னதை முழுமையாக ஏற்றுக் கொள்கிறேன். அவர்களைக் கிண்டல் பண்ணுவதற்காகவோ வேறு எதற்காகவோ நான் இதைக் கேட்கவில்லை. உண்மையிலேயே ஒரு விளக்கத்தைப் பெற வேண்டுமென்பதற்காகத்தான் கேட்கிறேன். மாநிலத்திற்கு சுயாட்சி, மத்தியில் கூட்டாட்சி என்றார்கள். அண்ணா பேசியதைப் பற்றி நான் குறை சொல்லவில்லை. இன்றைக்கு முதலமைச்சர் அவர்கள் கூட்டாட்சி என்று சொன்னதற்கு விளக்கம் கேட்க விரும்புகிறேன். அதை ஸ்பெல் அவுட் பண்ணிச் சொல்லட்டும். என்னை ஏன் பிரித்துப் பார்க்க வேண்டும் ?

**திரு. க. உரொ. எட்மண்ட் :** தலைவர் அவர்களே, அண்ணா அவர்களுடைய பேச்சை நம்முடைய முதல்வர் அவர்கள் படிக்கும் போது பொறுமையோடு கேட்டுக் கொண்டிருந்தோம். ஆனால் டாக்டர் ஹாண்டே அவர்கள் பொறுமையாக இல்லை என்றும் இணையமுடியவில்லை என்றும் முதலமைச்சர் அவர்கள் சொன்னார்கள் . . . .

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** அதற்கு டாக்டர் ஹாண்டே அவர்கள் பதில் சொல்லிவிட்டார்களே.

**திரு. க. உரொ. எட்மண்ட் :** ஹாண்டே அவர்கள் இணையவில்லை என்று முதலமைச்சர் அவர்கள் சொன்னார்கள். எந்த ம.பொ.சி. காங்கிரஸ் கட்சியை ஆதரித்துக் கொண்டிருக்கும்போது திராவிட முனனேற்றக் கழகத்தைப் பார்த்து 'இந்திய நாட்டினுடைய ஒருமைப்பாட்டைக் குலைக்க வந்த அநாகரிகக் கும்பல்' என்று

சொன்னார்களோ, அந்த ம.பொ.சி. நடத்திய மாநாட்டைப் பற்றி இப்போது சொல்லுகிறார்களே என்பதுபற்றித்தான் அவர் வருத்தப்பட்டுப் பேசியது.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** தலைவர் அவர்களே, ம.பொ.சி. அவர்கள் நடத்திய மாநாட்டில் கலந்து கொண்டது நான் அல்ல. அண்ணா கலந்து கொண்டு பேசினார். அண்ணா கலந்து கொண்டு பேசிய பேச்சைத்தான் இங்கே படித்துக் காட்டினேன்.

அடுத்து, மாநில அரசுகளுக்கு மத்திய அரசு கட்டளை இடுகிற அதிகாரங்கள் நீக்கப்பட வேண்டும் என்கிறோம். 'இது நியாயமா? இது இருக்கலாமா' என்ற வாதங்களை நம்முடைய நண்பர் சுப்பிரமணியம் அவர்களும், மாரிமுத்து அவர்களும்—நம்முடைய ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் பொன்னப்ப நாடார் அவர்களும் சொன்னார்கள் என்று கருதுகிறேன்—அனந்தநாயகி அம்மையார் அவர்களும் எடுத்துச் சொன்னார்கள்.

மாநில அரசுகள் மத்திய அரசுக்குக் கீழ்ப்படிந்து இருக்க வேண்டுமென்ற எந்தக் கட்டாயமும் கிடையாது. எப்படி மாநில அரசுகள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு அமைகின்றனவோ அதைப்போல்தான் மத்திய அரசும் மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டு அமைகிற அரசு. நாடாளுமன்றம் அவர்களுடைய கையில் இருக்கும் காரணத்தால், டில்லியில் அவர்கள் வீற்றிருக்கும் காரணத்தால் மத்திய அரசு என்பது எஜமானர் நிலைமையிலும், மாநில அரசுகள் என்பது அடிமைகள் நிலைமையிலும் இருந்திடல் வேண்டுமென்று யாரும் தலையில் எழுதி வைக்கவில்லை.

பெரியவர் மணலி அவர்கள் பேசும்போது அதை வெகு அழகாக எடுத்துக் காட்டினார்கள். ஒரு அடிமை மனப்பான்மை யோடு, முதலாளித்துவ மனப்பான்மையோடு மத்திய மாநில உறவுகள் இருத்தலாகாது என்று எடுத்துக் காட்டினார்கள். அந்த அடிப்படையில்தான் கட்டளையிடுகிறவர்கள் என்றால் எஜமானர் களாக ஆகிவிடுகிறார்கள். ஆகவே, அந்தக் கட்டளையைப் பெற்று அதற்குக் கீழ்படிந்து நடக்க வேண்டிய அவசியத்திலே மாநில

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

அரசுகள் இருக்கத் தேவையில்லை. அது ஜனநாயக மரபுக்கு—முறைக்கு ஏற்றதல்ல. மாநில அரசுகள் தவறு செய்தால் மக்கள் தான் அதற்கான தீர்ப்பு அளிக்கவேண்டுமேயல்லாமல், மத்திய அரசு தீர்ப்பளிப்பது என்பது முறையல்ல என்பதற்காகத்தான் அந்த விதி தேவையில்லை என்ற தமிழக அரசினுடைய கருத்துரை இந்த அவையிலே வைக்கப்பட்டிருக்கிறது.

இப்படி மத்திய அரசு கட்டளை பிறப்பித்து மாநில அரசைக் கலைத்து விடுவது, ஏன் அந்தக் கட்டளையை நிறைவேற்றவில்லை என்று 'எஜமான்' இடத்திலிருந்து பேசுவது எல்லாம் கூட்டாட்சி முறைக்கு முரண்பட்டதாகும் என்ற காரணத்தால்தான் அது விலக்கப்பட வேண்டுமென்று குறிப்பிடுகிறோம்.

இதுகுறித்து முன்னாள் மேற்கு வங்கத் தலைமை நீதிபதி முகர்ஜி குறிப்பிட்டு இருக்கிறார். இவைகளெல்லாம், இந்த டைரக்டிவ்ஸ், கட்டளைகள் பிறப்பிக்கின்ற அரசியல் சட்டத்தின் விதிகள் எல்லாம் 1935-ஆம் ஆண்டு சட்டத்தில் அப்போது தேவைப்பட்டவைகள், தற்போதுள்ள சூழ்நிலையில் இவைகளெல்லாம் தேவையில்லை என்று முகர்ஜி குறிப்பிடுகிறார்கள்.

ஐவர் ஜென்னிங்ஸ் பற்றிச் சொன்னார்கள். அவரும் அந்தக் கருத்தை எதிரொலிக்கிறார். மாநிலங்களுக்கு சுயாட்சி வழங்கி விட்டு, அதை பிரிட்டிஷார் காலத்தில் வைஸ்ராய் தனது கட்டுப்பாட்டின் கீழ் வைத்து இருந்தார். ஆகவே, அந்தப் பேரறிவாளர்களின் கருத்து, நம்முடைய அனுபவங்கள், 1935 ஆம் ஆண்டு சட்டத்தை அப்படியே பிரதிபலிக்கின்ற அரசியல் சட்டம்—இவைகளின் காரணமாகக் கட்டளை பிறப்பிக்கும் இந்தத் தன்மை உலகத்தில் எந்த அரசியல் சட்டத்திலும் இல்லை.

இப்படி மாநிலங்களைத் தண்டிக்கும் தன்மை—சர்வாதிகார நாடு என்று சொல்லுகிறார்கள்—சர்வாதிகார நாடு என்று சொன்னால் தங்கமணி அவர்கள் கோபித்துக் கொள்ள மாட்டார்கள் என்று கருதுகிறேன்—சோவியத் ரஷ்யாவை—அந்த ரஷ்யாவிலே கூட இதற்கு ஈடான விதி எதுவும் கிடையாது.

**மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து**

*1974 ஏப்ரல் 20]   [டாக்டர் மு. கருணாநிதி]*

*மத்திய அரசு, மாநிலங்கள் சில சட்டங்களின்படி நடக்கத் தவறிவிட்டால் மத்திய அரசுக்கு என்று ஒதுக்கியிருக்கும் அதிகாரங்களின்படி மாநில அரசு நடக்கத் தவறி, அதை மீறி நடந்தால் அப்படிப்பட்ட காரியங்களை ரத்து செய்யும் அதிகாரங்களைத்தான் ரஷ்யாவில் வைத்து இருக்கிறார்களே அல்லாமல், மாநில அரசை உடனே கலைத்து விடுவது என்கின்ற அதிகாரத்தை சோவியத் ரஷ்யாவும் பெற்று இருக்கவில்லை என்று எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.*

*இன்டர்-ஸ்டேட் கவுன்சில் பற்றிப் பேசப்பட்டது.*

**திரு. கே. டி. கே. தங்கமணி :** *1935-வது வருடச் சட்டத்தில் என்ன அதிகாரங்கள் மாநிலங்களுக்குக் கொடுக்கப்பட்டனவோ, அதேமுறைதான் இங்கே வந்திருக்கிறது என்று சொன்னார்கள். ஆனால் இந்தத் தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய திரு. பழனிவேல் ராஜன் அவர்கள் 1935-ஆம் ஆண்டு சட்டத்திலே இருக்கும் அதிகாரம் கூட மாநிலத்திற்கு இல்லையே என்று சொன்னார்கள். அப்போது கூட நான் ஏற்கனவே தெரிவித்து இருக்கிறேன். 1935-வது வருட சட்டத்தைப் பொறுத்தவரையில் அது மாநிலங்கள் சம்பந்தமான அளவுக்கு அமலுக்கு வந்ததே தவிர அன்றைக்கு மத்தியில் பிரதம மந்திரி என்றோ மந்திரி சபை என்றோ இல்லையே! இப்போது புதிதாக நாடு சுதந்திரம் அடைந்த பின்னால்தான், பிரதம மந்திரியும் மத்திய சர்க்காரும் ஏற்பட்டு, அதன் அடிப்படையிலேயே வந்ததல்லவா மாநிலங்கள் ?*

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** *55 என்றார்கள். 55-அல்ல, 1935 ஆம் ஆண்டுச் சட்டத்தில் இருந்து நல்லவைகள் சிலவற்றை விளக்கி இருக்கலாம். அதை திரு. பழனிவேல் ராஜன் அவர்கள் குறிப்பிட்டு இருக்கக்கூடும். ஆனால் எவையெவை இன்றுள்ள சூழ்நிலைக்கு தேவை இல்லையோ அவர்களை யெல்லாம் அப்படியே வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவைகளில் ஒன்றுதான் இந்தக் கட்டளையிடும் அதிகாரம் என்பதைக் குறிப்பிட்டேனே அல்லாமல் வேறு அல்ல.*

## மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னர் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

இன்டர்-ஸ்டேட் கவுன்சில் பற்றி கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர் திரு. கே. டி. கே. தங்கமணி அவர்கள் பேசினார்கள். இது நாடாளு மன்றத்தின் அதிகாரத்தையே எடுத்து விடுகிறது என்று குறிப்பிட்டார்கள். மாநில அரசுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிற அதிகாரங்களுக்கு சட்ட மன்றம்தான் சுப்ரீமாக இருக்கிறது. அதுபோல மத்திய அரசுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிற அதிகாரங்களுக்கு நாடாளுமன்றம்தான் சுப்ரீமாக இருக்கிறது. இதை யாரும் மறுத்து விடக்கூடாது. மறந்து விடக்கூடாது. இதில் இரண்டுவிதமான கருத்துகளுக்கு எள்ளளவும் இடமில்லை. ஆனால் நான் குறிப்பிட்டு இருக்கிற 'இன்டர்-ஸ்டேட் கவுன்சில்' வேறு; இது 263-வது பிரிவின்படி இப்போது அரசியல் சட்டத்திலே இருக்கிற இன்டர் ஸ்டேட் கவுன்சிலைப் பற்றி நாம் குறிப்பிட்டு இருக்கிறோமா என்றால் இல்லை. அந்த இன்டர்-ஸ்டேட் கவுன்சில் கூடவே இல்லை. அதைப்பற்றிப் பல பேர் முறையிட்டு இருக்கிறார்கள். கூடவே இல்லை. ஆனால் அதே 'இன்டர்-ஸ்டேட்' கவுன்சில் இருக்கலாம் என்ற வாதம் வந்தபோது கூட நம்முடைய ஈ.எம்.எஸ். அவர்கள் அந்த இன்டர் ஸ்டேட் கவுன்சில் இப்போது இருப்பது போல் இருக்கக் கூடாது—அது இருந்தால் மாநிலங்களுடைய உரிமை பறிக்கப்பட்டு விடக்கூடிய சூழ்நிலை ஏற்பட்டுவிடக்கூடும் என்ற மாறுபட்ட கருத்தை ஒரு நேரத்தில் தெரிவித்து இருக்கிறார்கள்.

இப்போது 263 ஆவது பிரிவில் குறிப்பிட்டு இருக்கின்ற இன்டர்-ஸ்டேட் கவுன்சில், இப்போது இருப்பதுபோல் குறிப்பிடப்பட்டு இருக்கிற கவுன்சில் உருவாகுமானால் நம்முடைய டாக்டர் ஹாண்டே அவர்கள் நேற்று எழுப்பிய பிரச்சினை, அந்தச் சந்தேகம் வரக்கூடும். ஆனால் நாம் நம்முடைய அறிக்கையில் குறிப்பிட்டு இருக்கின்ற இன்டர்-ஸ்டேட் கவுன்சில் வேறு மாதிரியானது. எல்லா அதிகாரங்களும் பங்கீடு செய்யப்பட்ட பிறகு நாம் அந்த இன்டர்-ஸ்டேட் கவுன்சில் உருவாக வேண்டுமென்று சொல்கிறோம். அங்கே மத்திய அரசிடம் காப்பட்டிருக்கிற நான்கு அதிகாரங்களில் ஏதாவது ஒரு நடவடிக்கை ஒரு மாநிலத்தையோ அல்லது பல மாநிலங்களையோ

அல்லது மத்திய மாநில உறவுகளையோ பாதிக்குமானால், அவைகள் மட்டுமே நாம் குறிப்பிடுகிற இன்டர்-ஸ்டேட் கவுன்சிலில் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்.

உதாரணத்திற்கு கச்சத்தீவு பிரச்சினையை எடுத்துக் கொள்வோம். அது வெளிநாட்டு விவகாரம் பற்றியது, நாம் இன்று இங்கேயிருக்கும் கருத்துக்களைப்பற்றி முழுக்க முழுக்க மத்திய அரசிடம் கொடுத்து இருக்கிறோம். ஆனாலும், கச்சத்தீவு தமிழ் நாட்டு மக்களின் உணர்ச்சிகளைத் தொடக்கூடியது என்பதை யாரும் மறுத்திடல் இயலாது. இது சம்பந்தமாக மத்திய அரசு அந்தரங்க முடிவு எடுக்க வேண்டியிருக்குமானால், அந்த நேரம் அதன் பலாபலன்களைப் பற்றி நாம் குறிப்பிடுகிற இன்டர்-ஸ்டேட் கவுன்சில் கலந்து ஆலோசிக்கப்பட வேண்டும். அதுதான் நாம் இன்டர்-ஸ்டேட் கவுன்சிலுக்கு சொல்லியிருக்கும் விளக்கமாகும்.

அப்படி இப்போது கலந்து ஆலோசிக்கப்படவில்லை. மாநிலங்கள் கலந்து ஆலோசிக்கப்படவில்லை என்பதற்கு நம்முடைய பழைய காங்கிரஸ் கட்சியின் தலைவர், அகில இந்திய தலைவர் அசோக் மேத்தா அவர்கள்கூட அண்மையில் ஒரு கருத்தைச் சொல்லியிருக்கிறார்கள்.

திராவிட முன்னேற்றக் கழகம் விழுப்புரம் மாநாட்டில் கச்சத்தீவு பற்றி ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. அந்தத் தீர்மானம் பற்றி அச்சுதமேனன் அவர்களைக் கேட்டபோது, அச்சுதமேனன் சொன்னார்கள், பிரதம மந்திரி இலங்கைக்குப் போகும் போதோ அல்லது போய் வந்தபிறகோ முதலமைச்சர் கருணாநிதியை கலந்து பேசியிருந்தால் அவர் பகிரங்கமாக இது பற்றி மாநாட்டில் பேச வேண்டிய நிலைமை ஏற்பட்டு இருக்காது. வெளிநாட்டு விவகாரங்களில்கூட முதலமைச்சர்களைக் கலந்து பேச வேண்டும். இதற்கான 'போரம்' இப்போது இல்லை. அதனால்தான் தமிழ் நாடு முதலமைச்சர் தன்னுடைய முறையையும், தமிழ் நாட்டு மக்களின் உணர்வுகளையும் மாநாட்டில் வெளிப்படுத்தியிருக்கிறார் என்று அச்சுதமேனன் குறிப்பிட்டார்.—மன்னிக்கவும்— இதை அசோக் மேத்தா குறிப்பிட்டார்கள். அச்சுதமேனனுக்கும்

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

அந்தக் கருத்து இருப்பதால் அந்தப் பெயர் பின்னி வந்து விட்டது. அத்தகைய 'பேரம்' தான் நாம் நினைக்கிற இன்டர் ஸ்டேட் கவுன்சில் ஆகும் என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

அதைப்போல் திரு. மாரிமுத்து அவர்கள் சொன்னார்கள். திரு. மாறன் எழுதிய 'மாநில சுயாட்சி' என்ற புத்தகத்தைப் படித்துக் காட்டி, இப்படி நினைத்தால் தமிழ் நாட்டையே துண்டு துண்டாகப் போட்டு பல பேருக்கு கொடுத்து விடலாம் என்று அவர்கள் எழுதியிருக்கிறார்கள். அது அதீத கற்பனை என்று சொன்னார்கள். அந்தக் கற்பனைக்கு எடுத்துக்காட்டு இல்லாமல் இல்லை. கற்பனையாக இருக்கலாம். நடந்தா விடப்போகிறது. அது வேறு விஷயம். ஆனால் இப்போது இருக்கும் அரசியல் சட்டத்தின் மத்தியில் அவர்கள் பெற்று இருக்கும் அதிகாரங் களுக்கு இதுபோன்ற காரியங்களைச் செய்ய முடியும் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு இருந்து இருக்கிறது.

டாக்டர் பி. சி. ராய் அவர்கள் மேற்கு வங்க சட்டசபையில் முதலமைச்சராக வீற்று இருந்த அந்த நேரத்தில் மேற்கு வங்கத்திற்குச் சொந்தமான பெருவாரியை, அவர்களைக் கேட்காமலேயே பாகிஸ்தானுக்குக் கொடுத்து விட பண்டித ஜவஹர்லால் நேரு சம்மதித்து விடுகிறார். நடந்ததா இல்லையா? மேற்கு வங்கத்தில் இருக்கும் பெருபாரியை மேற்கு வங்க முதலமைச்சரை கலந்து ஆலோசிக்காமலேயே பாகிஸ்தானுக்கு கொடுத்து விட நேரு சம்மதம் கொடுக்கிறார். முடிவாகி விடுகிறது. உடனே பி. சி. ராய்க்கு வேறு வழியில்லை. அவர் சுப்ரீம் கோர்ட்டுக்கு போகிறார். பி. சி. ராய் காங்கிரஸ்காரர். மேற்கு வங்க முதலமைச்சர் சுப்ரீம் கோர்ட்டுக்குப் போகிறார். மத்திய அரசை எதிர்த்து முதன் முதலாக வழக்கு தொடுத்தவர் டாக்டர் பி. சி. ராய் என்று அன்று இந்திய பத்திரிகைகளெல்லாம் எழுதின. அத்தகைய புகழ் மிக்க வழக்கு—அந்த வழக்கு—அந்த வழக்கினுடைய தீர்ப்பு என்ன தெரியுமா?

அந்த வழக்கில் அரசியல் அமைப்புச் சட்டத்தைத் திருத்தாமல், பெருபாரியை பாகிஸ்தானுக்கு தானம் செய்து இருக்கக்கூடாது என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்தது. அதற்குப் பிறகாவது,

பி. சி. ராயைக் கூப்பிட்டு மத்திய அரசு வருத்தம் தெரிவித்துக் கொண்டதா? இல்லை. என்ன செய்தார்கள்? அப்படியா சங்கதி! திருத்து அரசியல் சட்டத்தை! என்று நாடாளுமன்றத்தில் தீர்மானத்தைக் கொண்டு வந்து அரசியல் சட்டத்தைத் திருத்தி பெருபாரியை பாகிஸ்தானுக்கு தானம் அளித்தது சரிதான் என்கின்ற அளவுக்கு அரசியல் சட்டத்தை திருத்திக் கொண்டார்களே தவிர, பெருபாரி மேற்கு வங்கத்தின் பகுதி ஆயிற்றே என்ற சிந்தனை அவர்களுக்கு எழவில்லை. அந்த அதிகார ஆணவத்தைத்தான் குறைக்க வேண்டும், அந்த நிலைமையைத்தான் மாற்ற வேண்டுமென்று இன்றைக்கு நாம் கூறுகிறோமே அல்லாமல் வேறு அல்ல.

**திரு. கே. டி. கே. தங்கமணி:** பெருபாரி எப்படி இதற்குச் சரியான உதாரணம் என்று தெரியவில்லை. இந்திய நாட்டின் எல்லையை மாற்ற வேண்டுமானால், அல்லது டெரிடரியை எடுத்து மற்றவர்களுக்குக் கொடுக்க வேண்டுமானால் அதற்கு அரசியல் சட்டத்தை மாற்ற வேண்டுமென்று இருக்கிறது. அந்தக் காரியத்தைச் செய்யாமல் போய்விட்டார்கள் என்பதைத்தான் பி. சி. ராய் அவர்கள் சுட்டிக் காட்டினார்களேயொழிய அது எந்தப்பகுதியிலே இருக்கின்ற இடத்தை எடுத்தார்கள் என்ற பிரச்சினைக்கு அல்ல என்று சொன்னார்கள்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** நீங்கள், இருக்கின்ற அதிகாரங்களுக்கு வக்கிலாக இருக்கிறீர்கள். நான் இருக்க வேண்டிய அதிகாரங்களுக்கு வக்கிலாக இருக்கிறேன். அவ்வளவு தான் வித்தியாசம். நீங்கள் இருக்கிற அதிகாரங்களுக்காக வாதாடுகிறீர்கள். நான் அதை மறுக்கவில்லை. ஆனால் மாற்றப்பட வேண்டிய அதிகாரங்களைப்பற்றி நான் பேசிக்கொண்டிருக்கிறேன்.

**திருமதி த. ந. அனந்தநாயகி:** பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களுடைய அக்கறை கவனம்யாவும் மத்திய அரசுக்கும், நாட்டுக்கும் மொத்தமாக இருந்தது. பி. ஸி. ராய் அவர்கள் ஆஃப்டர் ஆல் எ சீஃப் மினிஸ்டர் எ ஸ்டேட், அவருக்கு ஒரு மாகாணத்தினுடைய இண்டரெஸ்டு தான். ஆனால் ஒரு

நாஷனல் இண்டரெஸ்டில் அந்த டெஸிஷன் வந்திருக்கிறது. பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களுடைய தேச பக்தி குறைவானது. அதை எடுத்துக் கொடுத்துவிட்டார்—நாங்கள் தடுத்து நிறுத்திவிடுவோம் என்று சொன்னால், என்ன அவர்களை விட தேசபக்தி நமக்கு எல்லாம் இருக்கிறதா என்பது கேள்விக் குறியாக இருக்கிறது.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** பி. ஸி. ராய் அவர்கள் சாதாரண ஆள் அல்ல. பி. ஸி. ராய் அவர்கள் நேருவை 'மிஸ்டர் நேரு' என்று அழைக்கக்கூடிய அளவுக்கு வல்லமை பொருந்தியவர் ஆவார். நான் நேரு அவர்களை தாழ்த்திச் சொல்லவில்லை. 'ஆஃப்டர் ஆல் சீஃப் மினிஸ்டர் என்றால் அவ்வளவு சாதாரணமா? கிள்ளுக் கீரையா? சீஃப் மினிஸ்டர் என்றால் . . . (கரவொலி).

**திருமதி த. ந. அனந்தநாயகி:** பாகிஸ்தானத்தோடு இந்தியா ஒரு முடிவுக்கு வரவேண்டியிருந்தது இரண்டு நாடுகளின் நன்மையையும் மனதில் வைத்து ஒரு முடிவுக்கு பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் வந்தார்கள். அப்படி முடிவுக்கு வந்து பெருபாரி கொடுக்கப்பட்டதால் தேசம் பாழாகிவிட வேண்டும். அல்லது பி. ஸி. ராய் அவர்கள் கெட்டுவிட வேண்டும். வங்கம் குறைந்து விடவேண்டும் என்று கொடுத்திருப்பார்?

**திரு. கே. டி. கே. தங்கமணி:** பி. ஸி. ராய் 'மை பாய்' என்று தான் நேரு அவர்களைச் சொல்வார்கள். அவர் வயதில் முதிர்ந்தவர் (கரவொலி).

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** மணி ஓசை இந்தப் பக்கம் கேட்கிறது. அதுவும் தங்க மணி ஓசை கேட்கிறது (கரவொலி).

இலங்கைத் தமிழர்கள் பற்றி ஒப்பந்தம் செய்துகொண்டார்களே, யாரைக் கேட்டார்கள்? கேட்டார்களா? எவ்வளவு பேர்களை இன்றைக்கு நாம் சுமந்து தீரவேண்டிய அவசியத்தில் இருக்கிறோம்? இலங்கைத் தமிழர்கள் இங்கே வருவதிலே நமக்கு

1974 ஏப்ரல் 20] [டாக்டர் மு. கருணாநிதி]

ஆட்சேபணை இல்லை. ஆனால் அவர்களைப் பற்றி ஒரு ஒப்பந்தம் நடைபெறுகிறபொழுது யாரைக் கலந்துகொண்டார்கள்? இந்த மாநிலம் கலந்துகொள்ளப்பட்டதா? ஏதோ போனால் போகிறது? என்று டெல்லிக்கு திரு. ராமையா அவர்கள் போய் தானும் கலந்து கொண்டது போல் பாவனை காட்டப்பட்டதே அல்லாமல், யார் மதித்தார்கள்? இல்லை. இப்பொழுது இலங்கைத் தமிழர்களுடைய பிரச்சினையைப்பற்றி நம்முடைய மாநில அரசோடு ஏதாவது கலந்து கொள்ளப்பட்டதா? கச்சத் தீவுப் பிரச்னையில் இந்த மாநில அரசுடன் ஏதாவது கலந்து கொள்ளப்பட்டதா? எங்கேயாவது விருந்துக்குப் போகிற நேரத்தில் இரண்டு மந்திரிகள் சந்தித்துப் பேசுகிறார்கள். கச்சத்தீவு பற்றி "என்ன சௌக்கியமா?" என்று கேட்பது போலப் பேசுகிறார்களே அதைத் தவிர, இன்றைக்கு கச்சத் தீவு பிரச்னை தமிழ்நாட்டு மக்களுடைய உணர்ச்சிபூர்வமான ஒரு பிரச்னை, கச்சத் தீவு உரிமையை விடக் கூடாது என்பது தமிழ்நாட்டு மக்களுடைய ஆழ்ந்த, மிகக் கொள்கைப் பிடிப்பு நிறைந்த ஒரு கோஷமாக இருக்கிறது. அதைப் பற்றி எத்தனையோ செய்திகள் தினம் தினம் பத்திரிகைகளில் வந்துகொண்டிருக்கின்றன. தமிழ்நாடு அரசுடன் இதுபற்றிக் கலந்து கொள்ளப்பட்டிருக்கிறதா? இல்லை.

திரு. பி. ஸி. ராய் அவர்கள் நம்முடைய நேருதானே—அம்மையார் அவர்களைவிட பி. ஸி. ராய் பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களுக்கு நெருக்கமானவர்—நம்முடைய கே. டி. கே. தங்கமணி அவர்கள் சொன்னது போல அவர் அவ்வளவு நெருங்கிப் பழகுகின்ற தன்மை வாய்ந்தவர். நேரு, பி. ஸி. ராய் அவர்களை மிகுந்த பெருமைக்கு உரியவராக்கி வைத்திருந்தார். அந்த பி. ஸி. ராய் அவர்களே, நேருதானே செய்தார், நமது பிள்ளை தானே, நமது பையன் தானே என்று கருதிக் கொள்ளாமல் 'மாநிலத்தின் உரிமையைக் காப்பாற்றுவதற்கு நான் மத்திய அரசை எதிர்த்து சுப்ரீம் கோர்ட் செல்வேன் என்று போர்ப் பறை கொட்டினார்களே அந்த பி. ஸி. ராய் அவர்கள் காங்கிரஸ் காரராக இருந்தவர்தான். இந்த மாநில உணர்ச்சிக்கு வாரிசாக

 மாநில சுயாட்சி பற்றியும் இராஜமன்னர் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துரைகளை மத்திய அரசு ஏற்று அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது குறித்து

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

இன்றைக்கு தமிழகத்தில், தமிழ் நாட்டில் தி.மு.க. அரசு இருக்கிறது என்பதை நான் இங்கே தெரியப்படுத்திக்கொள் கிறேன் (கரவொலி).

பொதுப் பட்டியலில் உள்ள அதிகாரங்களைப் பற்றி மத்திய அரசு நாடாளுமன்றத்தில் சட்டம் கொண்டுவருவதற்கு முன்பு இண்டர் ஸ்டேட் கவுன்சிலிலேயும் மாநிலங்களையும் கலக்க வேண்டும் என்று நான் கூறியிருப்பதிலும் எந்தத் தவறும் கிடையாது. உதாரணத்திற்குச் சொல்ல வேண்டுமானால், கௌரவ மாஜிஸ்ட்ரேட்களைப்பற்றி நம்மைக் கலந்துகொண்டு சட்டம் கொண்டுவரப்படவில்லை. டாக்டர் ஹாண்டே அவர்கள் கூட அதைப்பற்றிப் பேசினார்கள். மற்றும் சிலரும் அதைப்பற்றி கூறினார்கள், கௌரவ மாஜிஸ்ட்ரேட்களை ரத்து செய்யக்கூடிய பிரச்சினை இந்த அவையிலே எழுப்பப்பட்டது. மாநில அரசு களோடு கலந்து கொண்டிருக்கலாம். இதுபோன்ற பிரச்சினைகள் இண்டர் ஸ்டேட் கவுன்சிலுக்கு வந்திருந்தால் ஒவ்வொரு மாநிலத் தின் சார்பாக கருத்துக்களைச் சொல்லியிருக்க முடியும். அதன் காரணமாக இப்பொழுது எடுத்த முடிவு மாறி இருக்க இயலும். இவைகளையெல்லாம்தான் இண்டர் ஸ்டேட் கவுன்சிலில் ஆராய வேண்டும் என்று சொல்கின்றோமே அல்லாமல் வேறு அல்ல.

**திரு. கோவை செழியன்:** பேரவைத் தலைவர் அவர்களே, மாண்புமிகு முதல் அமைச்சர் அவர்கள் கச்சத் தீவு சம்பந்தமாக மத்திய அரசு எந்தவிதமான முடிவும் எடுக்கவில்லை, தமிழகத்தைக் கலக்கவில்லை என்று சொன்னார்கள், அது வேதனைக்குரிய செய்திதான். ஆனால், அதே நேரத்தில் இலங்கையில் இருக்கிற தமிழர்களைக் கொடுமைப் படுத்தினார்கள் என்ற செய்தியும் வந்து கொண்டிருக்கிற நேரத்தில்—வெளிநாட்டுப் பிரச்சினையைப் பற்றிப் பேசவில்லை. கச்சத் தீவு தமிழகத்திற்குச் சேரவேண்டிய ஒன்று. அதற்காக மத்திய அரசு எந்தவிதமான முயற்சியும் எடுக்கவில்லை.

**மாண்புமிகு பேரவைத் தலைவர்:** புதுக் கருத்துச் சொல் கிறீர்கள்.

**திரு. கோவை செழியன் :** இதற்காக மத்திய அரசை எதிர்த்து நீங்கள் ஏதாவது போராட்டம் நடத்தினீர்களா? 'அந்த நேரத்தில் இலங்கையிலிருந்து வந்த பிரதம மந்திரிக்கு நீங்கள் மாலை போட்டு வரவேற்புத் தந்திருக்கிறீர்கள். முடியாது என்று சொன்னால் மத்திய அரசு கழுத்தை வெட்டிவிடுவார்களா? முடியாது என்று ஏன் சொல்லவில்லை?

**திரு. பெ. சீனிவாசன் :** நான் கூட அதைத்தான் சொல்ல நினைத்தேன். இலங்கை பிரதமர் வந்தார்கள். அந்த பிரதம அமைச்சரை வரவேற்க வேண்டியது நம்முடைய முதல் அமைச்சர் கடமை. ஆனாலும், தமிழர்களுடைய எதிர்ப்பைத் தெரிவிக்கும் வகையில், வரவேற்க முடியாது—தமிழ் நாட்டின் சார்பில் பொது மக்கள் கறுப்புக் கொடி காட்டுவார்கள் என்று ஜாடை காட்டியிருந்தால், அன்றைக்கு திருமதி பண்டாரநாயகா அவர்கள் இங்கே இறங்கியிருக்க முடியாது. பிரதமர் அவர்கள் நம்முடைய புண்பட்ட உள்ளத்தைப் புரிந்துகொண்டிருப்பார்கள். அதைச் செய்திருக்கலாமே?

**திருமதி த. ந. அனந்தநாயகி :** பி. ஸி. ராய் அவர்கள் தன்னுடைய மாநிலத்தைக் காப்பாற்றுவதற்காக சுப்ரீம் கோர்ட்டுக்குச் சென்றதுமாதிரி கச்சத் தீவுப் பிரச்சினை, இலங்கைத் தமிழர் பிரச்சினையில் இந்த அரசு ஏன் நடவடிக்கை எடுத்திருக்கக் கூடாது? அதை சுப்ரீம் கோர்ட்டின் கவனத்திற்குக் கொண்டுபோவதற்கு நீங்கள் என்ன செய்தீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** கச்சத் தீவு பிரச்சினையில் இந்த அரசு நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றால் மாநில சுயாட்சி தேவை. அது கூடப் போதாது.

**திருமதி த. ந. அனந்தநாயகி :** மாநில சுயாட்சி இல்லாமல் டாக்டர் பி. ஸி. ராய் அவர்கள் நடவடிக்கை எடுத்திருக்கிறாரே? அதேமாதிரி நீங்கள் ஏன் நடவடிக்கை எடுக்கக்கூடாது?

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி :** அவர் நடவடிக்கை எடுக்கின்ற உணர்வோடு கேட்டாரே தவிர, நடவடிக்கை வெற்றி பெறவில்லை. அம்மையார் அவர்கள் முழுவதும் கவனிக்காமல் அரைகுறையாகப் பேசுவது நல்லது அல்ல.

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

(மறுபடியும் திருமதி அனந்தநாயகி அவர்கள் எழுந்திருந்தார்).

லாவணி பாடிக்கொண்டே இருக்கக் கூடாது. நீங்கள் பேசும் பொழுது நான் உட்கார்ந்திருந்த மாதிரி, நான் பேசும்பொழுதும் நீங்கள் உட்கார்ந்திருக்க வேண்டும்.

தலைவர் அவர்களே, இலங்கைப் பிரதமருக்கு நான் வரவேற்பு அளித்தது சரியா என்று கேட்டார்கள். ஒரு நாட்டினுடைய பிரதமர் வருகின்ற நேரத்தில் அவர்களுக்கு மரியாதை காட்டுவது என்பது வேறு, அதே நேரத்தில் நமது உரிமைக்குக் குரல் கொடுப்பது என்பது வேறு. அன்றைக்கே இலங்கையில் நடை பெற்ற பிரச்சினையைக் கண்டித்து, சூழ்நிலைகளை, சம்பவங்களைக் கண்டித்து நான் அறிக்கை விடுத்திருக்கிறேன்.

இந்தியாவுக்கு வருகின்ற ஒருவரை வரவேற்பது நம்முடைய பண்பாட்டைப் பொறுத்த விஷயம். வராதே போ என்று சொல்கின்ற உரிமையை நாம் பெற்றிருக்கவுமில்லை. அந்த நாகரீகத்தை நாம் பெற்றிருக்கவும் இல்லை. அதற்காக இலங்கையில் நடைபெற்ற சம்பவத்தை ஆதரித்துவிட்டதாகவும் அர்த்தம் இல்லை. இங்கே சட்ட மன்ற உறுப்பினர்கள் எவ்வளவோ காரசாரமாகப் பேசுகிறோம் நம்முடைய உரிமைகளைப்பற்றி. இங்கிருந்து தாழ்வாரத்திற்குப் போனதும் இங்கே மோதிக் கொண்ட தோழர்களெல்லாம் எப்படி எப்படி சுமுகமாகப் பழகுகிறார்கள் என்பதை நாம் பார்க்காமலா இருக்கிறோம்?

ஆகவே, பண்பாடு வேறு. ஒருவரை ஒருவர் மதிப்பது என்பது வேறு. நம்முடைய உணர்வுகளைக் காட்டவேண்டிய இடத்தில் காட்டுவது என்பது வேறு.

கச்சத் தீவுப் பிரச்சினையில் நாம் டெல்லியோடு போராட வேண்டுமே தவிர, இலங்கையோடு போராட என்ன சக்தி நமக்கு இருக்கிறது? என்ன உரிமை நமக்கு இருக்கிறது? என்ன அதிகாரம் நமக்கு இருக்கிறது? கச்சத் தீவு பற்றி இன்னும் ஒரு முடிவுக்கு வந்து விடவில்லை, இன்னும் நம்மைக் கலக்கவுமில்லை, இன்றைக்கு இதைப்பற்றி இங்கே பேசியிருப்பது நம்மைக் கலந்து பேசுவதற்கு ஒருவேளை அவர்களுடைய மனதில் அந்த எண்ணத்தை உருவாக்கும் என்று கருதுகிறேன்.

1974 ஏப்ரல் 20]  [டாக்டர் மு. கருணாநிதி]

நம்மையும் மீறி கச்சத் தீவு விஷயத்திலே ஒரு முடிவு எடுப்பார்களேயானால், அந்த நேரத்தில் நீங்கள் போராடுவீர்களா என்று என்னைப் பார்த்து அண்ணா தி.மு.க. நண்பர்கள் கேட்பதைவிட, நாம் அனைவரும் சேர்ந்து போராடுவோம், வாருங்கள் என்று விடுக்கின்ற அழைப்பை நான் ஆளும் கட்சி, நீ எதிர்க் கட்சி, நீ அழைத்து நான் வருவதா என்று பிகு காட்டாமல்—அதிகாரத்தை உங்களிடம் கொடுப்பதா என்று நீங்கள் கேட்கிறீர்களே அதைப் போல் கேட்காமல்—நல்ல பிரச்சினைக்கு அழைக்கிறார்களா, வருகிறோம், வரத் தயாராக இருக்கிறோம் என்பதை நான் எடுத்துக் கூறிக்கொள்ள கடமைப்பட்டிருக்கிறேன். (திரு. கோவை செழியன்: நாங்களும் அதற்குத் தயார்.) இதே உணர்வு அங்கும் இருக்கவேண்டும். அதிகாரங்களைக் கொடுங்கள். ஆனால் கருணாநிதிகையிலே கொடுக்காதீர்கள், நாவலரிடம் கொடுக்காதீர்கள், பேராசிரியரிடம் கொடுக்காதீர்கள், மற்றவர்கள் கையில் கொடுக்காதீர்கள் என்று சொல்கிறீர்களே அந்த குறுகிய நோக்கத்திலிருந்து விடுபட்டு 'கூட்டுக்கு வெளியே வா, கிளியே' என்று நான் உங்களைப் பார்த்துக் கேட்கிறேன்.

(பிற்பகல் 1.30)

**திரு. கோவை செழியன் :** தலைவரவர்களே, கிளி கூட்டிலிருந்து பறந்துபோய் 6 மாதம் ஆகிவிட்டது.

**டாக்டர் எச். வி. ஹாண்டே :** சபாநாயகர் அவர்களே, மாண்புமிகு முதலமைச்சரவர்கள் சொல்லக் கூடியதில் வரவேற்கக் கூடிய கருத்து இந்த இன்டர் ஸ்டேட் கவுன்சில் இருப்பது நல்லது. அதில் ஒரு விளக்கத்தைக் கேட்க விரும்புகிறேன். இன்டர் ஸ்டேட் கவுன்சிலில் என்ன என்ன விஷயங்களைப்பற்றிப் பேசுகிறார்கள்? சீப் மினிஸ்டர்ஸ் கான்பிரன்ஸ் நடக்கிறது. என்னென்ன விஷயங்கள் பற்றி அதிலே விவாதிக்கிறார்கள்? இந்த இந்த சப்ஜெட் பற்றித்தான் விவாதிக்க வேண்டுமென்று ஏதாவது வரையறை செய்திருக்கிறார்களா? நம்முடைய ரூல்ஸ் கமிட்டியிலே வைத்திருப்பது போல சீப் மினிஸ்டர்ஸ் கான்பிரன்ஸில் வைத்திருக்கிறார்களா அல்லது வேறுமாதிரி வைத்திருக்கிறார்களா? நாங்கள் உங்களை இடையிடையே மடக்கிக்

[டாக்டர் எச். வி. ஹாண்டே] [1974 ஏப்ரல் 20

கேள்வி கேட்பதுபோல நீங்கள் அங்கே பிரதமரை மடக்கிக் கேள்வி கேட்க வாய்ப்பு இருக்கிறதா? இந்தமாதிரி கச்சாத் தீவுப் பிரச்சினையைப் பொறுத்தவரையில் நாங்கள் உங்களை மடக்கிக் கேட்பதுபோல நீங்கள் பிரதமரை மடக்கிக் கேட்டீர்களா? அதன் விளைவு என்ன என்பதைப் பற்றி அறிந்துகொள்ள விரும்பு கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** கச்சாத் தீவு என்று சொல்கிறார்கள். அது கச்சாத தீவு அல்ல. கச்சத்தீவு. கச்சா என்றால் ரொம்ப சில்லரை என்று ஆகிவிடும் (குறுக்கீடு). நான் பதிவேட்டுக்காகச் சொன்னேன்; வேறல்ல. அவர்கள் திருத்திக் கொள்வதற்காகச் சொன்னேன்.

கச்சத் தீவைப் பொறுத்தவரையில் நானும் தொழிலமைச்சர் அவர்களும் டில்லிக்குப் போயிருந்தபோது நாங்களே பிரதமரைச் சந்தித்துக் கேட்டோம். அவர்கள் அழைத்துப் பேசவில்லை. போகும்போதோ, வரும்போதோ அதைப்பற்றி எங்களிடத்திலே விவாதிக்கவில்லை. டில்லிக்குப் போயிருந்தபோது நானும் தொழிலமைச்சர் மாதவன் அவர்களும் பிரதமரிடத்தில் பேசிக் கொண்டிருந்தபோது இதுபற்றிக் கேட்டோம்; அப்போது எங்களுக்கு விவரமான பதில் எதுவும் சொல்லவில்லை. அந்த அளவோடுதான் இருக்கிறது.

முதலமைச்சர்கள் மாநாட்டில் இது இதுபற்றி விவாதிக்கப்படு மென்று அவர்கள் வரையறை தருகிறார்கள். நாமும் சில நேரங்களில் அனுப்பலாம். ஆனால் கூடுமானவரையில் நிதிப் பிரச்சினைகள், திட்டங்கள் இவைகள் பற்றித்தான் அங்கே பேசப் படுகின்றனவேயல்லாமல் இதுபோன்ற வெளிநாட்டு உறவு விவகாரங்கள் பற்றியெல்லாம் முதலமைச்சர்கள் மாநாட்டில் பேசப்படுவதில்லை.

பாகிஸ்தான் போரின்போது முதலமைச்சர்கள் மாநாடு நடந்து முடிந்தபிறகு, சில முதலமைச்சர்களை அழைத்து, என்னையும் அழைத்திருந்தார்கள், அப்போது நாட்டுப் பாதுகாப்பைப்பற்றி என்னிடம் பேசினார்கள். வேறு எதுவும் பேசவில்லை. அதுவும்

அதிகாரப்பூர்வமான மாநாடாகக் கூட நடைபெற இல்லை. ஆகவே, கச்சத் தீவு போன்ற பிரச்சினைகளை எழுப்புவதற்கு வழியிருக்கிறதா, இதுபோன்ற தேசிய வளர்ச்சிக் கூட்டத்திலே என்பதை இனிமேல்தான் யோசிக்க வேண்டுமென்பதை நான் கூறிக்கொள்கிறேன்.

நிதி ஆணைக்குழு நிரந்தரமாக இருப்பதைப்பற்றிச் சில மறுப்புரைகள் இங்கே கூறப்பட்டிருக்கின்றன. நிதிக் குழு நிரந்தரமாக இருந்தால்தான் நன்மைகள் நிறைய உண்டு என்பதை நாம் ஆராய்ந்த பிறகுதான் அந்த முடிவுக்கு வந்திருக் கிறோம். நண்பர் ஹாண்டே சொன்னார்கள். நிரந்தர நிதி ஆணைக்குழு இருக்க வேண்டுமென்று நாம் சொன்னதை, சிந்தனை இல்லாமல் தீட்டப்பட்ட ஒரு கருத்து—

Without any thought the whole thing has been drafted, it has been drafted in an illfashioned manner— என்று கூடக் கொஞ்சம் வேகமாக சொன்னார்கள். அந்த நிரந்தர நிதி ஆணைக்குழு இருக்கவேண்டுமென்ற கருத்தை ராஜமன்னர் குழு நிறைய எடுத்துக் கூறியிருக்கிறார்கள். இந்த அர்ச்சனைகள் எல்லாம் அவர்களைப் போய்ச் சேரக் கூடாது என்பதற்காக நான் வாங்கிக்கொண்டாலும் பாவாயில்லை.

ராஜமன்னர் 1965-ம் ஆண்டு நிதி ஆணைக்குழுத் தலைவராக இருந்தபோதே இந்தக் கருத்தை அப்போதே வலியுறுத்தி இருக்கிறார்கள். அந்தக் கருத்தைத்தான் இப்போது இவர்கள் சொன்னார்கள். அதை நாம் ஏற்றுக் கொண்டிருக்கிறோம். பல்வேறு பொருளாதார நிபுணர்களும் இந்தக் கருத்தைப் பிரதி பலித்திருக்கிறார்கள். இது ஏதோ புதுமையான ஒரு கருத்து என்று எடுத்துக்கொள்ளத் தேவையில்லை. ஆஸ்திரேலியாவில் இப்படித்தான் "காமன்வெல்த் கிரான்ட்ஸ் கமிஷன்" என்கின்ற இதைப்போன்ற ஒரு நிதிக்குழு நிரந்தரமாக இருக்கிறது.

இப்போது, உதாரணமாக ஹாண்டே அவர்கள் சொன்னார்கள், நீங்கள் நிதிக் குழுவைக் கேட்டுச் சரியாக வாதிடவில்லை; நீங்கள் வாதிடாததால் பணம் வரவில்லை என்று குற்றஞ்சாட்டினார்கள். வாதாடினோமா இல்லையா என்பது வேறு விஷயம். வாதிடவில்லை

என்றே வைத்துக்கொள்வோம் வாதத்திற்காக. நிதிக் குழு ஐந்தாண்டுக்கு ஒருமுறை கூடி, இந்த ஆண்டு நடக்கிற தவற்றை ஹாண்டே அவர்களின் அறிவுரைப்படி அடுத்தாண்டு நிதிக்குழு நிரந்தரமாக இருந்தால்தானே அடுத்தாண்டு வாதாடி, தேவையான பணத்தைப் பெறமுடியும். ஐந்தாண்டுக்கு ஒருமுறை நிதிக் குழு கூடி கலைந்துவிட்டால் பிறகு மறுபடியும் ஐந்தாண்டு காத்திருக்க வேண்டும் வாதிடுவதற்கு. ஆகவேதான் அவ்வப்போது இருக்கிற நிலைமைகளை ஆராய்ந்து நிதிநிலையிலுள்ள தேவைகளுக்கேற்ப நம்முடைய கோரிக்கையை எடுத்துச் சொல்லி பரிசிலிப்பதற்கு ஏற்ற வகையில் நிதி ஆணைக்குழு நிரந்தரமாக இருக்க வேண்டுமென்று நாங்கள் எடுத்துக் காட்டியிருக்கிறோமே அல்லாது வேறல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**டாக்டர் எச். வி. ஹாண்டே:** ஒரே ஒரு விளக்கம் சொல்ல விரும்புகிறேன். நான் நிதி ஆணைக்குழு நிரந்தரமாக இருக்கக் கூடாது என்று சொல்லவில்லை. என்னுடைய நோட்ஸில் கூட குறித்து வைத்திருக்கிறேன். நான் சொன்னது

" In respect of loans and indebtedness of States there should be a Federal Debt Commission. I personally prefer a permanent Finance Commission. I agree with the Chief Minister that we should have a permanent Finance Commission. We have not got the relief even with a Finance Commission ". அதற்காகத்தான் 'தாட்லெஸ்' என்று சொன்னேன். சரியான வகையிலே ஒரு பெர்மனன்ட் பைனான்ஸ் கமிஷன் இருக்க வேண்டாமென்று நான் சொல்லவில்லை. இருக்கின்ற கமிஷனால் நமக்குச் சரியான வகையில் பாதுகாப்புக் கிடைக்கவில்லை. 'லோன்ஸ் அண்டு இன்டெட்டெனெஸ்' என்று கேட்டும் அந்தப் பணத்தை பைனான்ஸ் கமிஷன் தரவில்லையே என்பதைத்தான் சொன்னேன்.

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி:** இப்போது இருக்கிற முறையில் 'பெடரல் டெட் கமிஷன்' தேவைப்படுகிறது. ஆஸ்திரேலியாவில் எப்படி நிரந்தர நிதி ஆணைக்குழு இருக்கிறதோ அதைப் போலவே ஆஸ்திரேலியாவில் 'லோன்ஸ் கவுன்சில்' என்கின்ற ஒரு குழுவும் அங்கே இருக்கிறது. அதைத்தான் 'பெண்டாஸ்டிக்' என்று சொன்னார்கள். பெடரல் டெட் கமிஷன்

தேவையில்லை என்பது அவர்கள் வாதம். ஆனால் நாங்கள் சொல்கிற பெடரல் டெட் கமிஷன் மாநிலங்கள் மத்திய அரசிடம் பட்டிருக்கிற கடன்களுக்கு எல்லாம் ஒரு நிரந்தரமான பரிகாரத்தைக் காணக் கூடியதாக இருக்க வேண்டும்; பிறகு அந்தக் குழு தேசிய வளர்ச்சிப் பணிகளுக்காகத் தன்னை மாற்றிக் கொண்டு செயல்பட வேண்டும். இதுவும் புதுமை அல்ல. ஆஸ்தி ரேலியாவில் 'லோன்ஸ் கவுன்சில்' என்ற பெயரால் 'பெடரல் டெட் கமிஷன்' இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அகில இந்திய சர்வீஸ் வேண்டாமென்று சொல்வது ஏன் என்று கேட்டார்கள். ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். இருப்பது போல அண்ணா அவர்கள் காலத்திலே அகில இந்தியப் பணியாக—அகில இந்திய என்ஜினியர் பணி (ஐ.இ.எஸ்.)—இந்தியன் எஞ்சினீயரிங் சர்வீஸ்—வேண்டும் என்று அவர்களிடத்திலே பொறியியல் துறையினர் எல்லாம் தூது கூட வந்தார்கள். அதைப்போலவே அகில இந்திய மெடிக்கல் சர்வீஸ் வேண்டும் என்று அண்ணா அவர்களிடம் சொன்னார்கள். அதற்கு மத்திய சர்க்கார் தமிழக அரசிடம் அபிப்பிராயம் கேட்டபோது, அண்ணா அவர்கள் முதலமைச்சராக இருந்த காலத்தில் அகில இந்திய எஞ்சினீயரிங் சர்வீஸை ஏற்றுக்கொள்ள மாட்டோம் என்று சொல்லிவிட்டார்கள். அதைப்போலவே அகில இந்திய மெடிக்கல் சர்வீஸையும் ஏற்றுக்கொள்ள மாட்டோம் என்று சொல்லி விட்டார்கள். அண்ணா அவர்களோடு அந்தத் தொல்லை முடியவில்லை. மத்திய அரசு இப்போதும் அடிக்கடி அதைப்பற்றிக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். எஞ்சினீயரிங் சர்வீசையும், மெடிக்கல் சர்வீசையும் ஏற்றுக்கொள்ளுங்கள் என்று நம்மைக் கேட்டு, மத்திய சர்க்கார் வலியுறுத்திக் கொண்டே இருக்கிறார்கள்.

ரயில்வேயைப் பற்றிச் சொன்னார்கள். இன்டர் ஸ்டேட் ரயில் வேக்கள்—மாநிலங்களுக்குள் ரயில்வே என்றால் ஏதோ கல்கத்தா விலிருந்து ஹௌரா மெயில் தினந்தோறும் சென்னைக்கு வரும். இது எப்படி சாத்தியமாகும் என்று ஹாண்டே அவர்கள் தனக்கே உரிய கேலியுடன் அப்போது சொன்னார்கள். கேலி, கண்டனம், ஏசல், இழிமொழி, குப்பைக்கூடை, திருடன், கொலைகாரன்—

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

இப்படிப்பட்ட வார்த்தைகள் எல்லாம் அடிக்கடி அந்தப் பக்கத்தில் இருந்து இப்போது வந்துகொண்டிருக்கின்றன. எதையும் தாங்கும் இதயம் வேண்டுமென்று அண்ணா சொன்ன பொன்மொழியை மனத்திலே வைத்து, அதையெல்லாம் தாங்கிக் கொண்டுதான் இந்தப் பதிலை அளித்துக் கொண்டிருக்கிறேன்.

இது ஒன்றும் ஏதோ மாநில அளவில் ரயில்வே—இன்டர் ஸ்டேட் ரயில்வே மோதிக்கொள்ளும் கருத்து அல்ல. இதெல்லாம் மோதிக்கொள்ளக் கூடிய கருத்துக்கள் என்று கூறப்படுமானால், நான் அவர்களுக்குச் சொல்வேன், பாண்டிச்சேரியும் காரைக்காலும் பிரெஞ்சு காலனியாக இருந்தபோது தினசரி ரயில் போய் வந்துகொண்டுதான் இருந்தது. மாநில சுயாட்சி வந்துவிட்டால் இந்த ரயில் அங்கே போகுமா? அந்த என்ஜின் இங்கே போகுமா? என்றெல்லாம் கேட்க வேண்டியதில்லை.

'ட்ரான்ஸ்—காண்டிடன்ட்டல் ரயில்வே' இருக்கிறது. அது பாரிசிலிருந்து புறப்பட்டு ரஷியாவில் உள்ள விளாடிவாஸ்டாக் வரையில் போய் வருவதாகக் கேள்விப்படுகிறேன். நான் போனதில்லை. நான் பல நாடுகளுக்குப் போயிருக்கிறேன். ஆனால் ரஷியாவுக்கு இன்னும் போகவில்லை. அப்படிப் போவதாகப் படித்து இருக்கிறேன்.

**திரு. கோவை செழியன்**: நம்முடைய தங்கமணி அவர்கள் இருக்கிறார்களே, அவர்களைக் கேட்டால் . . .

**மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி**: மாநிலத்திற்கு மாநிலம் கூட அல்ல; பல நாடுகளைக் கடந்து அந்த ரயில் போய் வருகிறது. ஆகவே இங்கே ரயில்வேயைப் பொறுத்தவரையில் கருத்துக் குழப்பம் ஏற்பட வேண்டியதில்லை.

[டாக்டர் எச். வி. ஹாண்டே எழுந்தார். . . . .]

**மாண்புமிகு பேரவைத் தலைவர்**: குறுக்கிடு இருக்கலாம். ஆனால் எடுத்ததற்கெல்லாம் ஒவ்வொரு முறையும் குறுக்கிடு இருந்தால் நல்லதல்ல.

**டாக்டர் எச். வி. ஹாண்டே**: நான் விளக்கம் பெறுவதற்காகக் கேட்கிறேன். அது திரித்துக் கூறப்பட்டிருக்கிறது. என் வாதத்திலே, ஒரே நாடாக இருக்கிறது. ஒரே நாடாக இருந்த காலத்தில்

அங்கே இண்டர் ஸ்டேட் ரயில்வேஸ் ஒரு கம்பெனியாக இருந்தது. இவர் சொல்லுவது வேறு. வேறு நாடாக இருக்கக்கூடிய அந்த இடத்திலே கூட ஒரே ரயில்வே கம்பெனிதான் இருக்கிறது. இங்கே அந்தக் கஷ்டம் கிடையாது என்று சொல்லுகிறேன். In fact, he is strengthening my argument. My argument is with a number of countries when one train can look after, here we have only different States, why not one train look after.

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: இங்கே கூட பல கம்பெனிகளுடைய பஸ்கள் இருக்கின்றன. இங்கிருந்து மற்ற மாநிலங்களுக்குப் பஸ்கள் போகின்றன. பாண்டிச்சேரிக்குப் போகிறது. ஆந்திராவுக்குப் போகிறது. ஆந்திராவிலிருந்து பஸ் இங்கே வருகிறது. ஏற்கெனவே ரயில்வே கூட டிஸ்டிரிக்ட் போர்டு அளவில் நடத்தப்பட்டிருக்கிறது. இதில் குழப்பமடையக் கூடிய அளவுக்கு பெரிய பிரச்னை இல்லை என்பதை நான் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். தலைவர் அவர்களே, நேரம் அதிகமாகிறது, விரைவில் முடிக்க வேண்டுமென்று தங்கள் அனுமதியோடு மேலே பேசுகின்றேன்.

மத்திய அரசு, மாநில அரசைச் சுரண்டுகிறது என்ற மிக முக்கியமான வாதத்தை நாம் அனைவரும் கூர்ந்து கவனிக்க வேண்டுமென்று உங்களை யெல்லாம் கேட்டுக் கொள்வேன். மத்திய அரசிடம் திரண்ட நிதி ஆதாரங்கள் இருக்கின்றன. கொழுத்த வருமானங்களைக் கொடுக்கக் கூடிய வரி அமைப்புகளெல்லாம் அவர்களுடைய கையிலிருக்கின்றன. நண்பர்கள் ஆலடி அருணு அவர்களும், கந்தப்பன் அவர்களும், கணேசன் அவர்களும், பழனிவேல் ராஜன் அவர்களும் பேசுகின்ற நேரத்தில் அவைகளை யெல்லாம் கோடிட்டுக் காட்டினார்கள். நேற்றைய தினம் நம்முடைய நாவலர் அவர்கள் ஆற்றிய நீண்ட உரையிலும் அதுபற்றிக் குறிப்பிட்டார்கள்.

இதற்கு என்ன காரணமென்றால் 1935-ம் வருட சட்டத்தை அப்படியே பெரும்பாலும் காப்பி அடித்திருக்கின்ற காரணத்தினால் தான் நாம் இந்தச் சங்கடங்களுக்கு ஆளாகியிருக்கிறோம். வேறு சில விஷயங்களிலே சில மாற்றங்களை 1935-ம் ஆண்டு சட்டத்தில்

[டாக்டர் மு. கருணாநிதி] [1974 ஏப்ரல் 20

செய்திருந்தாலும் கூட, நிதி உறவுகளைப் பொறுத்த வரையில் எந்தவிதமான மாற்றமும் செய்யவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

அவர்கள் செய்திருக்கிற ஒரே ஒரு மாற்றம் ஐந்தாண்டுகளுக்கு ஒரு முறை நிதிக் குழு ஏற்படும் என்பதுதான். இதைத் தவிர மத்திய, மாநில நிதி உறவுகளைப் பொறுத்த வரையில், கொச்சையாகச் சொல்ல வேண்டுமானால், ஈயடிச்சான் காப்பி என்று சொல்லுவார்களே அதைத்தான் செய்திருக்கிறார்கள்.

1935 ஆம் ஆண்டு சட்டம் எந்தச் சூழ்நிலையில் ஏற்படுத்தப் பட்டது? அப்பொழுது நடைபெற்றது போலீஸ் ராஜ்யம். ஆகவே, அந்தக் கடமைகளை நிறைவேற்றுவதற்கு நிதி ஆதாரங்கள் வகுக்கப் பட்டன, வரைமுறைப்படுத்தப்பட்டன. ஆனால், இப்பொழுது நடப்பது வெல்பேர் ஸ்டேட். மக்கள் சேமநல சர்க்கார் என்று சொல்கின்றோம். ஆகவே, போலீஸ் ராஜ்யத்திற்கு ஒதுக்கப்பட்ட நிதி மாற்றங்கள் ஒரு வெல்பேர் ஸ்டேட்டுக்குப் பொருந்தும் என்று வாதிப்பது சரியானதல்ல. மத்திய அரசு திரண்ட நிதி ஆதாரங்களை வைத்துக் கொண்டு, மாநிலங்களை ஆட்டிப் படைக்கிறது.

மாநில முதலமைச்சர்கள் பிச்சைப் பாத்திரங்களோடு அடிக்கடி டெல்லிக்குச் செல்ல வேண்டிய நிலையிருக்கிறது என்று நானல்ல, மைசூர் முதலமைச்சராக இருந்த வீரேந்திர பட்டீல் பதவியில் இருந்தபோதே இதைக் குறிப்பிட்டார்.

மத்திய அரசினிடத்தில் இருக்கிற பணம் யாருடைய பணம்? மக்கள் தருகின்ற பணம். மாநில அரசுகளின் வாயிலாகப் போய்ச் சேருகின்ற பணம். அந்தக் கணக்கைக் கொஞ்சம் பார்த்தால் மத்திய அரசுக்கு வருமான வரி, எக்சைஸ் வரி, எஸ்டேட் வரி இப்படிப்பட்ட வரிகளின் மூலமாகப் பணம் வசூலாகிறது.

சிறு சேமிப்பு மூலம் மத்திய அரசுக்குப் பணம் கிடைக்கிறது. அதிலே ஒரு பகுதி மாநில அரசுக்குத் திருப்பித் தரப்படுகிறது. கூட்டுறவு வங்கி உட்பட வங்கிகள் மூலமாகவும், இன்சூரன்ஸ் மூலமாகவும், பிராவிடண்ட் பண்ட் மூலமாகவும் மத்திய அரசு கடன் பெறுகிறது. இந்த இனங்களெல்லாம் சேர்ந்ததுதான் மத்திய அரசின் வருமானம்.

1974 ஏப்ரல் 20] [டாக்டர் மு. கருணாநிதி]

இப்பொழுது மாநில அரசுகளின் வருமானத்தைப் பார்த்தால், தாங்களே வசூலிக்கும் வரி, மாநில அரசுகள் தங்களுடைய கடமையை ஆற்றுவதற்குப் போதவில்லை. அரசியல் சட்டப்படி வருமான வரி, எக்சைஸ் வரி ஆகியவைகளில் மத்திய அரசு மாநில அரசுகளுக்கு ஒரு பங்கு கொடுக்கிறது.

ஆனால், இப்பொழுது நான் சொல்லுகின்ற கணக்குப்படி தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் 1974-75-ல் மாத்திரம் தமிழ் நாட்டிலேயிருந்து மத்திய அரசுக்கு மக்கள் தருகின்ற தொகை 356.75 கோடி ரூபாய். இவற்றில் வரிகளில் பங்குத் தொகையாகத் திருப்பித் தரப்படுகின்ற தொகை 73.75 கோடி ரூபாய். சிறு சேமிப்பின் மூலம் 1974-75-ல் தமிழ் நாட்டில் வசூலாகயிருக்கிற தொகை 14.58 கோடி. அதிலே திரும்பி வருவது 8.75 கோடி. மீதித் தொகையை மத்திய அரசே வைத்துக் கொள்கிறது.

வங்கிகளின் மூலம், இன்சூரன்ஸ் மூலம், பிராவிடண்ட் பண்ட் மூலம் மத்திய அரசு தமிழ் நாட்டிலே கடன் எழுப்பப் போகிற தொகை 24.6 கோடி ரூபாய்.

வருவாய் இனத்தைப் பார்த்தால் 1974-75-ல் திட்டத்திற்கான மானியம் தமிழ் நாட்டிற்குக் கிடைக்கப் போகிற தொகை 29 கோடி ரூபாய்.

திட்டமில்லாத மானியமாக கிடைக்கப் போகிற தொகை 20 கோடி.

நேரடியாக மத்திய அரசு தமிழ் நாட்டில் முதலீடு செய்யப் போவது 111 கோடி.

ஆக, 1974-75-ல் மத்திய அரசு தமிழ் நாட்டிலிருந்து பெறப் போகிற மொத்தத் தொகை 395.43 கோடி. இதிலே நமக்கு வந்தது போக இந்த ஆண்டிற்கு மாத்திரம் தங்கப்போகிற தொகை 153.43 கோடி ரூபாய். அந்த அளவிற்கு தமிழ் நாட்டின் பணம் மத்திய அரசிலே தங்கி விடப்போகிறது. இவ்வாறு அங்கே தங்கப் போகிற தொகை ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் 732½ கோடியாக இருக்கும். அடுத்த 10 ஆண்டுக் காலத்தில் இந்தத்

தொகை 1,748.58 கோடி ரூபாயாக இருக்கும். இந்தப் பணம் தமிழ் நாட்டிலேயிருந்தால்—ஒரு கணம் எண்ணிப் பாருங்கள்—நான் அதற்காக தமிழ் நாடு தனியாக ஆக வேண்டும் என்ற அடிப்படையிலே இந்தக் கேள்வியை எழுப்புவதாக அர்த்தமல்ல, தனி நாடு கேட்பதாக அர்த்தமல்ல. இதை மனத்தில் கொள்ள வேண்டும்.

பாதுகாப்புச் செலவுக்கு மத்திய அரசிடம் பணம் வேண்டாமா? வேண்டும். பாதுகாப்புச் செலவுக்கு எவ்வளவு பணம் தேவையோ அதை மாநில அரசு கணக்கிட்டுத் தரும் என்று டாக்டர் பி. சி. ராய் அப்பொழுதே சொல்லியிருக்கிறார். அதற்குத் தேவையான பணத்தைத் தரலாம். 10 ஆண்டு காலத்தில் மத்திய அரசு சுமார் 1,700 கோடி ரூபாய் தமிழ் நாட்டுப் பணத்தை வைத்துக்கொள்ளப் போகிறது.

அண்மையில் சச்சிதானந்த சின்கா என்ற ஓர் ஆசிரியர் எழுதிய ஒரு புத்தகத்தில் சொல்லுகிறார், மாநிலங்களின் நிலைமையையும் மத்திய நிலைமையையும் ஒப்பிட்டுப் பேசும்போது உள்நாட்டுக் காலனிகளாக இருக்கின்றன. இன்டர்னல் காலனி என்று இந்த மாநிலங்களின் நிலைமைகளை சச்சிதானந்த சின்கா என்பவர் அந்தப் புத்தகத்தில் வருணிக்கிறார்.

ஆகவே, இந்த உள்நாட்டுக் காலனி நிலைமை இருக்கலாமா? 10 ஆண்டுக் காலத்தில் 1,700 கோடி ரூபாயை மத்திய அரசிடம் ஒப்படைத்து விட்டு, மாநில அரசு நம்முடைய வளத்தைப் பெருக்குவதற்கு வாட்டத்தோடு, வருத்தத்தோடு உட்கார்ந்து கொண்டிருக்க வேண்டுமா? இந்த உள்நாட்டுக் காலனி முறை ஒழிக்கப்பட வேண்டாமா?

**திரு. ஏ. ஆர். மாரிமுத்து:** தலைவர் அவர்களே 10 ஆண்டுகளில் தமிழ் நாட்டுப் பணம் 1700 கோடி ரூபாய் மத்திய அரசுக்குச் செல்லுகிறது என்று முதலமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். பாதுகாப்பிற்காக ஆண்டு ஒன்றுக்கு 3,000 கோடி செலவழிப்பதாக அறிகிறேன். அதிலே நம் பங்கு 1,700 கோடியாக இருக்கலாம். இதில் நம் பங்கு என்ன? 10 ஆண்டுகளில் நமக்குக் கிடைக்கக் கூடிய மிச்சம் என்ன?

மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி: அதற்காகத்தான் எல்லா வற்றையும் அங்கே கொடுத்துவிட்டு, மறுபடியும் நாம் எடுத்துக் கொள்வதற்குப் பதிலாக, இந்த இரண்டு வழி போக்குவரத்துக்குப் பதிலாக, கொடுக்கும்போதே எங்களுக்கு எவ்வளவு, உங்களுக்கு எவ்வளவு என்று நாம் கொடுத்து விடலாம். கொடுக்கின்ற அதிகாரத்தை நாம் வைத்திருக்கலாம் என்பதுதான் மாநில சுயாட்சியின் தாத்பர்யம். அங்கே கொடுத்து விட்டு, மறுபடியும் நீ எங்களுக்கு பங்குப் போட்டுக் கொடு என்பதைவிட பின்தங்கிய மாநிலங்கள் என்று கஷ்டப்பட்டாலும் கூட அதையும் கணக்கிலே கொண்டு மத்திய சர்க்காருக்குப் பணம் தேவைப்பட்டால் எவ்வளவு பணம் தேவை என்பதையும் கருத்திலே கொண்டு, இந்த மாநில சுயாட்சி அடிப்படையிலே அளிக்கலாம் என்பது தான் நம் கருத்து என்று நான் இங்கே தெரிவித்துக்கொள்கிறேன்.

விரிவாகச் சொல்ல வேண்டுமானல் மத்திய அரசு இன்றைக்கு ஒரு கண்ணுக்குத் தெரியாத மாய அரசாக இருக்கிறது. அதனுடைய நடவடிக்கையின் விளைவுதான் நம் கண்ணுக்குத் தெரிகிறதே தவிர அதன் வலிமையான கரங்கள்தான் நமக்குத் தெரிகின்றனவே தவிர, மத்திய அரசு என்பது பாமர மனிதன் கண்ணுக்குத் தெரியவில்லை.

மத்திய அரசு எப்பொழுது தெரிகிறது என்ருல் பட்ஜெட் வாரத் தில் பாமர மனிதனுக்குத் தெரிகிறது. அதைத் தவிர மற்ற நேரங் களில் மத்திய அரசு தெரிவதில்லை. பணக்காரர்கள், தொழில் அதிபர் கள், மத்திய அரசின் வருமான வரிக் கொள்கையை நம்பியிருக்கின் றவர்கள் அவர்களெல்லாம் அடிக்கடி டெல்லி செல்லுகிறுர்கள். அவர் களுக்கு மத்திய அரசு தெரிகிறது. பாமர மனிதனுக்கு பட்ஜெட் நேரத்தில்தான் மத்திய அரசு தெரிகிறது. பாமரனுக்கு மத்திய அரசின் பிரதமரைத் தெரியும். பட்ஜெட் வாரத்தில் நிதியமைச் சரைத் தெரியும். அதைத் தவிர மற்றவர்கள் நெருக்கமானவர்கள் அல்ல.

பாமர மனிதனுக்குக் கோபம் வந்தால் ரெயில்வே தெரியும். இதைத் தவிர மத்திய சர்க்காரைப் பற்றி மாநிலத்திலிருக்கிற பாமர மனிதன் அறிந்து கொள்கிற வாய்ப்பை பெற்றிருக்க வில்லை.

ஆகையினால்தான் மத்திய அரசு நெடும் தூரத்திலிருக்கிறது. மக்களுடைய சுக துக்கங்களைப் பற்றி சிந்திக்கின்ற இடத்தைத் தாண்டி வெகு தொலைவில் இருக்கிறது. ஆகவே, மத்திய அரசின் துறைகள் குறைக்கப்பட்டு மக்களோடு தொடர்பு கொண்டிருக்கிற மாநில அரசுக்கு அதிகாரங்கள் மிகைப்படுத்தப்பட்டு வாழ்வுக்குத் தேவையான அதிகாரிகள் அங்கே வைக்கப்பட்டு, வளத்தைப் பெருக்குவதற்கு அதிகாரங்கள் இங்கே வைக்கப்பட்டு, அதிகாரங்கள் கொடு என்று சொல்லுகிறார்கள். அதிக அதிகாரங்கள் தேவை என்று சொல்லுகிறார்கள்.

நாம் கேட்கின்ற மாநில சுயாட்சியிலே என்ன—ஒரே ஒரு சிறிய வேறுபாடு என்னவென்றால் அதிகாரங்கள் கொடுத்தால் திரும்ப எடுத்துக் கொள்கிற உரிமை அவர்களுக்கு உண்டு. மாநில சுயாட்சியிலே அது அல்ல. அதிகாரங்கள் கொடுத்து விட்டால் மறுபடியும் தொட முடியாது, அவர்கள் அந்த அதிகாரங்களை. அதுதான் மாநில சுயாட்சிக் கொள்கை. அதிகாரங்கள் கொடு என்று சொன்னால் கொடுத்து, அதிகாரங்களைத் திரும்ப எடுத்துக் கொள்ள முடியும். ஐந்தாறு உதாரணங்கள் நான் சொன்னேன், கொடுக்கப்பட்ட அதிகாரங்கள் எப்படி எப்படி எடுக்கப்பட்டிருக்கின்றன என்று.

ஆகவேதான் மாநில சுயாட்சிக் கொள்கையில் கொடுக்கப்பட்ட அதிகாரங்கள் எடுத்துக் கொள்ளப்பட முடியாது என்பதுதான் நம்முடைய கருத்து. அந்த அடிப்படையிலேதான் மாநில சுயாட்சியை நாம் கோருகின்றோம்.

இந்தியாவின் ஒற்றுமைக்கு ஊறு தேடவேண்டுமென்பது நம்முடைய நோக்கம் அல்ல. இந்தியாவின் ஒற்றுமையையே இன்றைக்கு நாம் பிரதானமாகக் கருதுகிறோம்.

இந்தியாவின் வலிமையை—இந்தியாவின் பாதுகாப்பை—இந்தியாவின் பலத்தை—இன்றைக்கு திராவிட முன்னேற்றக் கழக அரசு எந்த அளவுக்கு அக்கறையோடு கவனிக்கிறது என்பதற்கு ஒரே ஒரு உதாரணம் சொல்ல வேண்டுமேயானால்—நான் என்னுடைய தீர்மானத்தின் முன்னுரையிலே குறிப்பிட்டிருப்பதைப்

போல்—போர்மேகம் இந்தியாவைச் சூழ்ந்த நேரத்தில்—பங்களா தேஷ் பிரச்னையின்போது இந்தியப் பிரதமரை அழைத்து 6 கோடி ரூபாய் யுத்த நிதிக்காகக் கொடுத்த ஒரே ஒரு மாநிலம் இந்தியாவி லேயே திராவிட முன்னேற்றக் கழகம் ஆளுகிற தமிழ்நாடு தான். தென்னிந்தியாவில் இந்த அளவுக்கு வேறு எந்த மாநிலமும் அதிகம் தரவில்லை. லட்சக் கணக்கில்தான் தந்தார்கள். சில லட்சங்கள் அல்ல—நாம் 6 கோடி ரூபாய் போர் நிதிக்காகத் தந்தோம். நாடு நலம் பெற வேண்டுமென்று போராட்ட வீரர் களுக்கு எந்த அளவுக்கு ஊக்கம் தரவேண்டுமோ அவ்வளவு ஊக்கமும் தந்தோம். ஆகவே, இந்தியாவின் ஒருமைப்பாட்டுக்கு நாம் என்றைக்கும் எதிரிகள் அல்ல—நாம் பிரிவினைவாதிகள் அல்ல. இதை அழுத்தந்திருத்தமாக ஆயிரம் முறை சொல்லி விட்டோம்.

யாருடைய தேசபக்திக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்தாரின் தேசபக்தி எள்ளளவும்—இம்மியளவும் குறைந்தது அல்ல என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆகவே, இன்றையதினம் நிறைவேற்றப்பட இருக்கிற இந்தத் தீர்மானம் சரித்திர பிரசித்திபெற்ற தீர்மானம். திரு. பழனிவேல் ராஜன் சொன்னதைப்போல சுடர்விளக்கை ஏற்றி வைத்திருக்கி றோம். நம்முடைய மணலி அவர்கள் சொன்னதைப் போல இது எந்த ஒரு கட்சிக்கும் உரிய தீர்மானம் அல்ல. தமிழகத்திலே இருக்கிற எல்லாக் கட்சிகளுக்கும்—இந்தியாவில் இருக்கிற எல்லாக் கட்சிகளுக்கும் உரிய தீர்மானம். இதை ஒரே கட்சிக்கு என்று எடுத்துக் கொண்டு, இதை எங்கள் கட்சிக்கு உரியது என்று நாங்கள் வாதிட மாட்டோம். நான் மணலி போன்ற பெரியவர்களுக்கு உத்தரவாதம் அளிக்கிறேன்—இது அனை வருக்கும் பொதுவான தீர்மானம்.

தமிழ்ச் சமுதாயத்தைக் காக்க—இந்தியாவிலுள்ள தேசிய இனங்களைக் காக்க இந்தியாவிலுள்ள மாநிலங்களின் உரிமைகளைக் காக்க இந்தியாவிலே இருக்கிற மாநிலங்கள் சுயமரியாதையோடு வாழ இந்தத் தீர்மானம் மெத்தவும் பயன்படும்.

பொருளாதாரத்திலே வளமும்—சுயமரியாதைத் தன்மையிலே தன்னிகரற்ற நிலையும்—விட்டுக்கொடுத்துப் போகின்ற நேரத்தில், மத்திய சர்க்காருக்கு அடிமைகளாக இருக்கமாட்டோம். உறவுக்குக் கை கொடுப்போம்—அதேநேரத்தில் உரிமைக்குக் குரல் கொடுப்போம் என்கின்ற அளவிலேதான் மத்தியில் கூட்டாட்சி—மாநிலத்தில் சுயாட்சி என்ற முழக்கத்தை—பேரறிஞர் அண்ணா அவர்களின் பெயரால்—நான் இந்த மாமன்றத்தில் முன்மொழிந்த இந்தத் தீர்மானத்தை நீங்கள் எல்லாம் நிறைவேற்றித் தர வேண்டுமென்று உங்கள் அனைவரையும் கேட்டுக்கொண்டு விடை பெறுகிறேன். வணக்கம்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** விவாதம் முடிவுற்றது. தீர்மானத்திற்குக் கொடுத்துள்ள திருத்தங்களை மாண்புமிகு அங்கத்தினர்கள் வலியுறுத்துகிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன். (திரு. எட்மண்ட் எழுந்திருந்தார்.)

திரு. கே. டி. கே. தங்கமணி, திரு. ஏ. ஆர். மாரிமுத்து, திருமதி த. ந. அனந்தநாயகி, திரு. கே, பி. கோபால் ஆகியோர் தங்களுடைய திருத்தங்களை வலியுறுத்தியதால் அவர்கள் முன் மொழிந்த திருத்தங்கள் பேரவையின் முடிவிற்கு விடப்பட்டு தோல்வியுற்றன.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** திரு. பெ. சீனிவாசன் அவர்கள் தன்னுடைய தீர்மானத்தை வலியுறுத்துகிறாரா?

**திரு. க. உரோ. எட்மண்ட் :** பேரவைத் தலைவர் அவர்களே . .

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** வாக்கெடுப்பின்போது எந்த விதமான விளக்கமும் பெற முடியாது.

**திரு. க. உரோ. எட்மண்ட் :** நான் முன்பே எழுந்திருந்தேன். எங்கள் கட்சியின் சார்பில் திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

**மாண்புமிகு பேரவைத் தலைவர் :** திரு. எட்மண்ட் அவர்களுக்கு விதிமுறைகள் தெரியும். வாக்கெடுப்பு ஆரம்பமானவுடன் யாரும் எந்த விளக்கமும் கேட்க முடியாது. திரு. சீனிவாசன் அவர்கள்

தன்னுடைய திருத்தத்தை வற்புறுத்துகிறாரா இல்லையா என்பது தான் பிரச்சினை. விளக்கம் கேட்பதற்கு இது நேரம் இல்லை—நேரமும் கிடையாது.

THIRU G. R. EDUMUND : You are completely taking away my rights. The Speaker should be impartial. But he is partial. **You** should not be partial, Sir.

**மாண்புமிகு பேரவைத் தலைவர்** : உங்கள் கட்சியின் சார்பில் நிறைய விளக்கங்கள் கேட்கப்பட்டிருக்கின்றன. விளக்கமும் அளிக்கப்பட்டிருக்கிறது. வாக்கெடுப்பு ஆரம்பமானவுடன் விளக்கம் கேட்பதற்கு அனுமதிக்க முடியாது.

**திரு. க. உரொ. எட்மண்ட்** : முதலமைச்சர் பேசி முடித்த வுடனேயே நான் எழுந்து நின்றேன்.

**மாண்புமிகு பேரவைத் தலைவர்** : உங்களுக்கே தெரியும். இப்போது விளக்கம் கேட்க அனுமதிக்க முடியாது.

**திரு. க. உரொ. எட்மண்ட்** : விளக்கம் கேட்கக் கூட அவகாசம் தர முடியாது என்கிற காரணத்தினால்—தங்கள் தீர்ப்பை எதிர்த்து நாங்கள் வெளிநடப்புச் செய்கிறோம்.

(அண்ணா திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர்கள் வெளி நடப்புச் செய்தார்கள்.)

மாண்புமிகு உறுப்பினர்கள் திரு. பெ. சௌந்திரபாண்டியன், திரு. பெ. சீனிவாசன், டாக்டர் எச். வி. ஹாண்டே ஆகியோர் தம், தம் இருக்கைகளில் இல்லாததால் அவர்கள் முன்மொழிந்துள்ள திருத்தங்கள் திரும்பப் பெறப்பட்டனவாகக் கருதப்பட்டன.

திரு. பி. வெங்கடசாமி அவர்களுடைய திருத்தம் பேரவையின் முடிவிற்கு விடப்பட்டு தோல்வியுற்றது.

**மாண்புமிகு பேரவைத் தலைவர்** : பேரவை முன்னுள்ள கேள்வி :

"மாநில சுயாட்சி பற்றியும், இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் பற்றியும் தமிழ்நாடு அரசின் கருத்துரைகளையும், இராஜமன்னார் குழுவின் அறிக்கையையும் இப்பேரவை ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு—

"பல்வேறு மொழி, நாகரீகம், பண்பாடு ஆகியவைகளைக் கொண்ட இந்திய நாட்டின் ஒருமைப்பாட்டைப் பேணிக் காக்கவும், பொருளாதார வளர்ச்சியை மேம்படுத்தவும், மக்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட மாநில ஆட்சிகள் தடையின்றிச் செயல்படவும்,

மாநில சுயாட்சி பற்றியும், இராஜமன்னார் குழுவின் பரிந்துரைகள் மீதும் தமிழ்நாடு அரசு அளித்திருக்கும் கருத்துக்களை மத்திய அரசு ஏற்று, மத்தியில் கூட்டாட்சி, மாநிலங்களில் சுயாட்சி கொண்ட உண்மையான கூட்டாட்சி முறையை உருவாக்கும் அடிப்படையில், இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் உடனடியாகத் திருத்தப்பட வேண்டும் என்று இப்பேரவை முடிவு செய்கிறது."

தீர்மானம் பேரவையின் முடிவிற்கு விடப்பட்டு, நிறைவேற்றப் பட்டதாக அறிவிக்கப்பட்டது.

THIRU K. T. K. TANGAMANI: Sir, I want division.

THIRUMATHI T. N. ANANDANAYAKI: Sir, I want division.

(Division bell was rung.)

**திரு. கே. டி. கே. தங்கமணி:** ஆளுங்கட்சியைச் சேர்ந்தவர்கள் தவறு செய்தாலும் நீங்கள் அதைக் கண்டிக்க வேண்டும். அவர்கள் மெஜாரிட்டியாக இருக்கிறார்கள். அண்ணா திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர்கள் வெளிநடப்புச் செய்தார்கள். எதிர்க் கட்சியைச் சேர்ந்த எங்களுக்கு வெளிநடப்புச் செய்ய உரிமை யிருக்கிறது. அப்போது ஆளுங்கட்சித் தரப்பில் இருந்து போங்கள், போங்கள் என்பதும் மற்றும் சத்தம் போடுவதும் சரியல்ல. இதை நீங்கள் கண்டிக்க வேண்டும்.

இன்னொரு முக்கியமான விஷயம், எங்கள் திருத்தங்களைப் படிக்கவில்லை. ஆனால் தீர்மானத்தை மட்டும் முழுவதுமாகப் படித் தீர்கள். ஏன் அப்படி?

**மாண்புமிகு பேரவைத் தலைவர்:** இது ஏற்கனவே நம் அவை யில் பின்பற்றப்பட்டு வருகிற நடைமுறைதான்.

1974 ஏப்ரல் 20] [பேரவைத் தலைவர்]

எண்ணிக் கணிக்கும் வாக்கெடுப்பில் உறுப்பினர்கள் கீழ்க் கண்டவாறு வாக்களித்தனர்.

(பிற்பகல் 2-00)

ஆதரிப்போர்

1. திரு. கே. ஏ. மதியழகன்.
2. திரு. என். கணபதி.
3. திரு. சி. வி. எம். அண்ணாமலை.
4. திரு. கு. ஆண்டி என்கிற குருசாமி.

ஆதரிப்போர்—தொடர்ச்சி.

5. திரு. அ. ஆறுமுகம்.
6. திரு. எஸ். ஆறுமுகம்.
7. திரு. சி. ஆறுமுகம்.
8. திரு. மு. இரத்தின சபாபதி.
9. திரு. க. மு. இராசகோபால்.
10. திரு. ஆலடி அருணா.
11. திரு. வீ. இராசகோபால்.
12. திரு. அ. இராசமாணிக்கம்.
13. திரு. டி. இராசரத்தினம்.
14. திரு. கு. இராசமாணிக்கம்.
15. திரு. ஜே. எஸ். இராசு.
16. திரு. எம். எஸ். இராதாகிருஷ்ணன்.
17. திரு. சி. இராமநாதன்.
18. திரு. ஆர். இராமலிங்கம்.
19. திரு. மு. இராமன்.
20. திரு. வி. கே. இராஜா பிள்ளை.
21. திரு. நோ. இளங்கோவன்.
22. திரு. வி. சா. இளஞ்செழியன்.

ஆதரிப்போர்—தொடர்ச்சி.

23. மாண்புமிகு டாக்டர் மு. கருணாநிதி.
24. மாண்புமிகு டாக்டர் இரா. நெடுஞ்செழியன்.
25. மாண்புமிகு திரு. க. அன்பழகன்.
26. மாண்புமிகு திருமதி சத்தியவாணி முத்து.
27. மாண்புமிகு திரு. ப. உ. சண்முகம்.
28. மாண்புமிகு திரு. செ. மாதவன்.
29. திரு. து. ப. அழகமுத்து.
30. திரு. இராம. அரங்கண்ணல்.
31. திரு. எஸ். முருகையன்.
32. திரு. மு. சண்முகம்.
33. திரு. செ. கந்தப்பன்.
34. திரு. பழனிவேல் ராஜன்.
35. திரு. பு. எட்டியப்பன்.
36. திரு. டி. கணபதி.
37. திரு. எல். கணேசன்.
38. திரு. சி. கணேசன்.
39. திரு. எம். ஆர். கண்ணன்.
40. திரு. கா. மு. கதிரவன்.
41. திரு. கே. பி. கந்தசாமி.
42. திரு. எம். கந்தசாமி.
43. திரு. மா. வெ. கரிவேங்கடம்.
44. திரு. தாழை மு. கருணாநிதி.
45. திரு. சோ. கருணாநாதன்.
46. திரு. ஆ. கருப்பையா.
47. திரு. கு. காமாட்சி.
48. திரு. சொ. காவேரிமணியம்.
49. திரு. வி. முத்து.

1974 ஏப்ரல் 20] [பேரவைத் தலைவர்]

ஆதரிப்போர்—தொடர்ச்சி.

50. திரு. நா. கிருட்டிணன்.
51. திரு. வி. கிருஷ்ணமூர்த்தி.
52. திரு. கே. ஆர். கிருஷ்ணன்.
53. திரு. கே. எஸ். குப்பல் இராமகிருஷ்ணன்
54. திரு. அ. சே. குமாரசாமி.
55. திரு. தே. கேசவலு.
56. திரு. எம். கோபால்.
57. திரு. வி. சி. கோவிந்தசாமி.
58. திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி.
59. திரு. எஸ். சகாதேவன்.
60. திரு. செ. சதாசிவம்.
61. மாண்புமிகு திரு. எஸ். ஜே. சாதிக் பாட்சா.
62. மாண்புமிகு திரு. சி. பா. ஆதித்தனார்.
63. மாண்புமிகு திரு. அன்பில் தர்மலிங்கம்.
64. மாண்புமிகு திரு. க. இராசாராம்.
65. மாண்புமிகு திரு. ஓ. பி. இராமன்.
66. மாண்புமிகு திரு. ச. இராமச்சந்திரன்.
67. மாண்புமிகு திரு. மு. கண்ணப்பன்.
68. திரு. எம். செல்வராஜ்.
69. திரு. இரா. மாணிக்கவாசகம்.
70. திரு. க. சுப்பு.
71. திரு. மா. பா. சாரதி.
72. திரு. சித. சிதம்பரம்.
73. திரு. அ. ப. சண்முக சுந்தரம்.
74. திரு. பெரி சண்முகம்.
75. திரு. எம். எஸ். கே. சத்தியேந்திரன்.

ஆதரிப்போர்—தொடர்ச்சி.

76. திருமதி ஏ. கோ. பத்மாவதி.
77. திருமதி வி. ப. பழனியம்மாள்.
78. திரு. சு. துரைசாமி.
79. திரு. தொ. க. சிறைமீட்டான்.
80. திரு. தொ. ப. சீனிவாசன்.
81. திரு. மு. சின்னசாமி.
82. டாக்டர் ச. அ. சின்னராசு.
83. திரு. எஸ். கே. சுப்பிரமணியம்.
84. திரு. மா. சுப்பிரமணியன்.
85. திரு. ச. சுப்பையா.
86. திரு. வி. சுப்பிரமணியம்.
87. திரு. எம். சுருளிவேல்.
88. திரு. கோ. செபமாலை.
89. திரு. கி. ஜெயராமன்.
90. திரு. வீ. செல்லதுரை.
91. திரு. த. சோனையா.
92. திரு. ந. சோமசுந்தரம்.
93. திரு. மூ. மாரிமுத்து.
94. திரு. என். தர்மலிங்கம்.
95. திரு. டி. சி. திம்மராய கவுண்டர்.
96. திரு. அ. தியாகராசன்.
97. திரு. கு. திருப்பதி.
98. திரு. எ. க. துரைசாமி.
99. திரு. வெ. ந. முத்தமிழ்ச் செல்வன்.
100. திரு. மணலி சி. கந்தசாமி.
101. திரு. இ. எஸ். தியாகராசன்.
102. திரு. கே. வி. சுப்பையா.

ஆதரிப்போர்—தொடர்ச்சி.

103. திரு. கா. வேழவேந்தன்.
104. திரு. துரைமுருகன்.
105. திரு. என். மாணிக்கம்.
106. திரு. அ. தேவேந்திரன்.
107. திரு. ஏ. ஆர். சுப்பையா
108. திரு. எஸ். நடராசன்.
109. திரு. ஏ. சி. நரசிம்மன்.
110. திரு. எஸ். நல்லசாமி.
111. திரு. க. நாகராசன்.
112. திரு. பா. நாகலிங்கம்.
113. திரு. என். நாச்சிமுத்து.
114. திரு. ஏ. எம். டி. நாச்சியப்பன்.
115. திரு. மா. வெ. நாராயணசாமி.
116. திரு. பொ. பத்மநாபன்.
117. திரு. ஆ. பரந்தாமன்.
118. திரு. பரமசிவம்.
119. திரு. நா. பழனிசாமி.
120. திரு. ந. நாச்சியப்பன்.
121. திரு. டி. ஓ. பெரியசாமி.
122. புலவர் சி. பழனிச்சாமி.
123. டாக்டர் ச. மு. பழனியப்பன்.
124. திரு. க. பழனிவேலன்.
125. திரு. கே. எம். சுப்பிரமணியம்.
126. திரு. எஸ். காதர் பாஷா என்கிற வெள்ளைச்சாமி.
127. திரு. மு. பழனிசாமி.
128. திரு. வி. பழனிவேலு.
129. திரு. எம். பன்னீர் செல்வம்.

ஆதரிப்போர்—தொடர்ச்சி.

130. திரு. கு. பாலகிருஷ்ணன்.
131. திரு. வை. பாலசுந்தரம்.
132. திரு. எஸ். பெருமாள்.
133. திரு. பி. பொன் சொக்கலிங்கம்.
134. திரு. தி. பொன்னுமலை.
135. திரு. பி. எஸ். மணியன்.
136. திரு. வீ. மலைக்கண்ணன்.
137. திரு. திருப்பூர் ஏ. எம். மொய்தீன்.
138 திரு. கே. ஏ. வகாப்.
139. திரு. எம். ஏ. லத்தீப்.
140. திரு. எஸ். அழகுத் தேவர்.
141. திரு. வா. மை. அப்துல் ஜப்பார்.
142. திரு. மு. முத்தையா.
143. திரு. எஸ். முகம்மது காதர் முகைதீன்.
144. திரு. என். இராஜாங்கம்.
145. திரு. பு. செ. முத்துச்செல்வன்.
146. திரு. ந. முத்துவேல்.
147. திரு. ரா. ரா. முனுசாமி.
148. திரு. கி. ரங்கநாதன்.
149. திரு. இ. இராமசாமி.
150. திரு. ஜி. இராமசாமி.
151. திரு. வ. க. இராமராசன்.
152. திரு. செ. ராமலிங்கம்.
153. திரு. ஏ. எம். இராஜா.
154. திரு. ஜி. ராஜாராம்.
155. திரு. என். எஸ். பலராமன்.
156. திரு. எஸ். கே. வடிவேல்.
157. திரு. நா. வீராசாமி.

ஆதரிப்போர்—தொடர்ச்சி.

158. திரு. மு. வேதாசலம்.
159. திரு. சி. மன்னியப்பன்.
160. திரு. அ. வெள்ளத்துரை.
161. திரு. கு. பெரியசாமி.

எதிர்ப்போர்.

1. திரு. கே. டி. கே. தங்கமணி.
2. திரு. சோ. அழகர்சாமி.
3. திரு. எஸ். வடிவேல்.
4. திரு. என். கே. பழனிசாமி.
5. திரு. கே. எஸ். கோதண்டராமையா.
6. திரு. ஆர். பொன்னப்ப நாடார்.
7. திரு. ஏ. ஆர். மாரிமுத்து.
8. திரு. பி. வெங்கடசாமி.
9. திரு. ஜே. ஜேம்ஸ்.
10. திரு. கே. கே. முத்தையா.
11. திரு. கு. ஆ. பொம்மன்.
12. திருமதி த. ந. அனந்தநாயகி.
13. திரு. ஏ. சுப்பிரமணியம்.
14. திரு. டி. எஸ். ஏ. சிவப்பிரகாசம்.
15. திரு. ச. சங்குமுத்து தேவர்.
16. திரு. ஏ. சுவாமிதாஸ்.
17. திரு. எம். சத்தியமூர்த்தி.
18. திரு. எம். சுரேந்திரன்.
19. திரு. ஒ. என். சுந்தரம்.
20. திரு. கே. என். குமாரசாமி.
21. திரு. என். டென்னிஸ்.
22. திரு. நா. காசிராமன்.
23 திரு. ஆண்டி அம்பலம்.

நடுநிலை வகிப்போர்

இல்லை.

ஆதரிப்போர்—161.

எதிர்ப்போர்—23.

நடுநிலை வகிப்போர்—இல்லை.

**மாண்புமிகு பேரவைத் தலைவர்** : தீர்மானத்தை ஆதரிப்பவர்கள் அதிகம். ஆகவே தீர்மானம் நிறைவேறியது. (ஆரவாரம்).

(1) அரசினர் தீர்மானங்கள்—தொடர்ச்சி.

(ஆ) **தேதி குறிப்பிடாமல் பேரவையை ஒத்திவைப்பது குறித்து.**

**மாண்புமிகு டாக்டர் இரா. நெடுஞ்செழியன்** : மாண்புமிகு பேரவைத் தலைவர் அவர்களே,

"அலுவல் ஆய்வுக் குழுவில் தீர்மானித்த பேரவையின் அலுவல்கள் இன்றோடு முடிவடைவதால், பேரவையை நாள் குறிப்பிடாமல் ஒத்தி வைக்கலாம்" என்னும் தீர்மானத்தை முன்மொழிகின்றேன்.

தீர்மானம் பேரவையின் முடிவிற்கு விடப்பட்டு, ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது.

**மாண்புமிகு பேரவைத் தலைவர்** : பேரவையின் இன்றைய நிகழ்ச்சிகள் இத்துடன் முடிவுற்று, பேரவை காலவரையறை யின்றி ஒத்திவைக்கப்படுகிறது. வணக்கம்.

பின்னர் பேரவை பிற்பகல் 2-11 மணியளவில் தேதி குறிப்பிடப்படாமல் ஒத்திவைக்கப்பட்டது.

